

சிவமயம்.

சிவகணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பா.

நேரிசைவெண்பா

திருச்சிற்றம்பலம்.

இன்றவருமோநாளைகேவருமோவல்லதுமற
றென்றுவருமோவறியேனெங்கோவே – துன்றுமல
வெம்மாயையற்றுவெளிக்குள்வெளிகடந்து
சும்மாவிருக்குஞ் சுகம்.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

அனாதிமல முத்த சித்தருவாய் விளங்குஞ் சிவபெருமானது திருவருட்காரியமாய்த் தோன்றி நின்று தொழிற்பட்டநிலத் திருநாமம் வகித்த விந்நிலவுலகத்தில், ஐந்திணைப் பொருளு மமைந்தியல்வளமை, நந்தா நிலவுகு நாவலந்தீவில, விஞ்ஞானகலா, பிரளயாகலர், சகலரென்னு மூவகையான்மாக்களுள்ளும், சிவானந்தப் பெருவாழ்வா யமைந்த சத்தியோ முத்தியடைய விழைகுநர், அவ்வாழ்வைப் பெறுங்காரணமாக வந்து பிறந்தற்கிடனாய பரதகண்டத்தில்,

"சைவசமயமேசமயம்" "வைதிகசைவமழகிது" எனப் போந்த சுவானுபூதிச்செல்வரின திருவாக்கினபடி, எவ்வெச்சமயங்களினுஞ் சிறந்த சற்சமயமிச்சைவசமயமே யெனத்தெளிந்து, அச்சைவசமய பரமாசார்ய மூர்த்திகளாயவதரித்தருளிய திருஞானசம்பந்த மூர்த்திகள் முதலிய நால்வருந் திருவாய்மலர்ந்தருளிய, தேவாரந் திருவாசக முதலிய தமிழ் வேதங்களினிடத்தும், அத்தமிழ்வேத பிரதிபாத்தியனாகிய சிவபெருமானிடத்தும, அச்சிவசின்னங்களாக விளங்கும், விபூதிருத்ராட்சபஞ்சாட்சரங்களினிடத்தும, நீங்காத வுள்ளன்புடைய சிவனடியார்களை, "சிவனடியவரைச் சிவனெனச்சேர்தலு"மென்ற திருவாக்கின்படி, அச்சிவபெருமானாகவே மதித்தொழுகுதலும், அத்தகைய சிவனடியார்களது திருவாக்கை, அச்சிவபெருமானது திருவாக்கினின்று மெழுந்த வேதசிவாகமங்களோ டொப்பக்கொள்ளுதலும், சைவசமய சம்பிரதாய சிவானுபவச் செல்வர்களின் கடமை யென்பது சத்தியமாதலின்;

சோறுடைத் சோறுடைத்தென்ற நம்பெருமூதாட்டியின் திருவாக்கின்படி போக மோட்சப் பிரதாயகமாய் விளங்குஞ் சோழவளநாட்டில், பரமசிவம் சகஸ்திர கலாம்ச பூரணராய் வீற்றிருந்து பஞ்சகிருத்தியத் திருநடனஞ் செய்தருளுந் திருத்தில்லைவனத்துக் கணித்தாய, திருமருதூரில் ஆமாத்தியரென்னுஞ் சிர்கருணீகமரபில இவ்வுலகினர் தவமெனத் திருவவதாரஞ்செய்து இராமலிங்கபிள்ளையென்னும் பிள்ளைத்திருநாமம் பெற்று, திருச்சிற்றம்பலமுடையார் திருவருளால் இலக்கண விலக்கியப் பாண்டித்தியமும, ஞானசாஸ்திர விற்பனமுமுடையராய் விளங்கி, ஸ்ரீநடராஜ வள்ளலாரைத் தனக் கானமார்த்தமாகக்கொண்டு, ஸ்ரீவிபூதி ருத்ராட்சமுதலிய சிவசின்னங்களைத்தரித்து, ஸ்ரீபஞ்சாட்சரத்தியானபரராய் தமிழ்வேதங்களாயமைந்த தேவாரம் திருவாசகம் முதலியவற்றி லநுசந்திதப் பயிற்சி முதிர்ச்சியாலும், சிவானுக்கிரக விசேடத்தாலும் ஒன்பதாமாண்டில், சிவகுமாரராகிய இளையபிள்ளையாரைச் செந்தமிழ்ப்பாவாற் றோத்திரிப்பாராயினர். பின்னர், எல்லாமுடையான் என்னையுடையா னென்னுஞ் சிவஞானமுதிர்ச்சிபெருக, அதனால் தனது நிரமலசித்த சமுத்தமாயெழுந்த சுவானுபூதித் திருவாக்கனைத்தையும்; அவ்வவ் வமையங்களில் சாலிகிதகோசங்களாக்கி வந்தனர். அவ்வாறொழுகுநாளில், திருவருண்முன்னின்றிழுக்க அதனால், திருவொற்றியூரிலெழுந்தருளிய எழுத்தறியும் பெருமானுல் முத்தியின முடிவைக்காணபான், நித்தமும நினைந்து போற்றும் பத்தியாற் சென்று,கடனமடை திறந்தாலனன செந்தமிழ்ப்பதிகங்களோதித் துதித்தும், மற்றும் பற்பல திவ்யக்ஷேத்திரங்களிலும் திருக்கோயில்கொண்டு விளங்கும் எம்பெரு

மானையர்காங்குச் சென்று தரிசித்துச் செந்தமிழ்ப் பாசுரங்களோதியும் வந்தனர். அங்ஙனம் திருவாய்மலர்ந்தருளிய வள்ளலாரது அருமைத்திருவாக்கினின்று மெழுந்த திருப்பாசுரங்களின் சொற்சுவை பொருட்சுவைகளும் சுவானுபூதியும், உள்ளுள்ளே தோன்ற, அவரதன்பர்களும், மாணாக்கர்களுமாயுள்ளோ ரனைவரும், வள்ளலார் ஓதாதுணர்ந்த பரிசிதுவாமென வியந்து, அவற்றைத் தினமும் பாராயணஞ்செய்து வந்ததுமன்றி, சமரசவேத சன்மார்க்கசங்கமென்னும் பெயரையுடையவோர் ஞான சபையைத்தாபித்து அவ்வள்ளலாரையே முத்தமிழ்வல்லஞானாசாரியராகக்கொண்டு, அவராலருளிய திருப்பாசுரங்களையேயன்றி, இகபரசாதனமாயுள்ள கருவிநூல் ஞான நூல்களையும் ஓதியுமுணர்ந்தும் வந்தனர். அத்தகையோர்க்கும் பிறர்க்கும் வள்ளலா ரருளிய வருமைத் திருமுறைக ளொருங்கேகிடைப்ப தரிதாயின. இவ்வருமைப்பா டனைத்து நீக்கிப் பக்திமான்கள் யாவருக்கும், நமதருட்பெருஞ்செல்வரது சுவானுபூதித் திருவாக்காகிய திருவருட்பாத்திருமுறைகள் முற்றுங் கிடைக்குமாறு, அச்சிட்டு வெளிப்படுத்தவேண்டுமென, உத்தரஞானசிதம்பரம், சத்தியஞானசபை தேவஸ்தான தர்மஸ்தான [illegible] யின்படி முன்னரே யச்சிட்டதாக [illegible] மேலே காட்டிய ஆறுதிருமுறைகளோடு, நித்தியவிதியென்னும் [illegible] யலும், சில நாமாவளிகளும், மற்றும் அநேக பதிகங்களும், பற்பலவிடங்களினின்றும் வரவழைத்துச் சேர்த்தும், அவரது திவ்யமங்கள குணானுபவமாகிய அற்புத சரித்திரத்தோடும் பிழையின்றிச் சுத்தபாடமாக வுயர்ந்தகடிதத்திற் பதிப்பித்திருக்கின்றனன். அப்புத்தகத்தைச் சுத்தபாடமாகப் பதிப்பிப்பதற்கு அடியேனெடுத்துக்கொண்ட முயற்சியும் சிரமமுமனந்தம். விடாமுயற்சியோடு அச்சிற் பதிப்பித்ததுமன்றி, திருவருட்பிரகாசவள்ளலார் திருவுருவப்படமும் சேர்க்கப்பட்டிருக்கிறது. யான் இவ்வாறச்சிட்டதெல்லாம் பொருளாசை கருதியன்று. யாவருக்கும் சுத்தப்பிரதியாகக் கிடைக்குமாறு முயன்றபடியேயாம். இதனுண்மையை, அப்புத்தகத்தைப்பார்க்கு மொவ்வொருவருக்கும், அதனருமையும் அதற்கேற்படுத்திய விலையினதெளிமையுமே விளக்கும். இச்சென்னையின்கண் எழுத்துவாசனை யினதென்றறியாத சில பாலியச்சிறுவர்கள், பொருளாசையென்னும் பேய்பிடித்தாட்ட வதன் வயமாய் நின்று, முன்னரச்சிட்டு வெளிப்படுத்தியதாக, மேல்கண்ட பிரதியிலுள்ளதைமட்டும், பெரும்பிழையாகவும் தாறுமாறாகவும் அச்சடிக்கி, ஒன்றுக்குமுதவாத (புரூப்ஷீட்) என்னும் மட்டக்கடிதத்திற் பதிப்பித்திருக்கின்றனர். அப்பதிப்பின் பிழைகளையும் குறைவு நிறைவுகளையும் யான் வெளிப்படுத்தியிருக்கும், சூளையார் பதித்த, திருவருட்பாவிற் செறி பிழை விளக்கமென்னும் சிறு புத்தகத்தாலறியலாம். அதைக்கண்ணுறு மொவ்வொருவரும், அப்புத்தகம் இனாமாகக் கிடைப்பதாயிருந்தாலும், அதைக் கைநீட்டிவாங்கவே கருதார்களென்பது எனது கொள்கை. ஏனெனில்,

பெரியோர் வாக்கானெழுந்த திருப்பாசுரங்களைப் பிழைபடப் படிப்பவர்களுடைய கழுத்தில் எமதூதர்கள் தமது பாசக்கயிற்றைக்கட்டித் தாறுமாறாகவிழுத்து வருத்துவரென்னும் பிரமாணத்தைக் கருதியேயாம். இவையனைத்து முணர்ந்த நண்பர்க ளனைவரும், சிவானுபூதிச் செல்வராய் விளங்கும் அருட்பெருஞ்சித்தரோதியவித் திருவருட்பாச் சுத்தப்பிரதியை அன்புடன் கைக்கொண்டு பிரதிதினமும் பாராயணஞ்செய்து திருச்சிற்றம்பலமுடையார் திருவருள்பெற்றுய்வார்களாக. சுபம்.

துர்முகி வருஷம்<br>வைகாசி மீ உகூ.

இங்ஙனம்:

 பி. இராமசாமிமுதலியார்.

உ

சிவமயம்.

குருவே துணை.

திருச்சிற்றம்பலம்.

---

# திருவருட்பிரகாசவள்ளலாரென்னும் சிதம்பரம் இராமலிங்கபிள்ளையவர்கள் சரித்திரச்சுருக்கம்.

---

வெண்பா.

சீராரும் வாய்மைத் திருவருட்பிரகாசவள்ளற்
பேராரும் ராமலிங்கப் பிள்ளைப்பே—ரோராரும்
மெய்ப்பசும்பால் வெண்ணெயுளே மேவுறுநெய் யின்பவாதங்
கைப்புறுச் சொற்சரிதங் காண்.

சீர்தருபொன்னித் திருநாடதனிற் பேர்தருபுலியூர்ப் பதிக்கணித்தாய நீள்புகழ் மருதூர்ப்பதியில் ஓர் சிவயோகியார் திருவருளால் திருவவதாரஞ் செய்து ஐம்பத்தொரு வருடம் திருவுருக்கொண்டிருந்து சற்குருகடாட்சம் பெற்று, "திருவருட்பா" என்னுந் தோத்திரப்பா இயற்றியருளி, இவ்வுலகில் சிதம்பரம் இராமலிங்க பிள்ளை யென்னும் பிள்ளைத்திருநாமமுடையராய், சைவவைதீக சமயாசாரியராகிய ஆளுடையபிள்ளையா ரருள்பெற்றோங்கும் சுத்தசிவசன்மார்க்க தீக்ஷாபிதானுநுசந்தான நெறியே திருவருட்பிரகாச வள்ளலாரெனப் பெயர்பெற்று, முத்தமிழ்வல்ல ஞானாசாரியர், சுத்தசன்மார்க்கப் போதகாசாரியர், சமரசவேத சன்மார்க்கசங்கத் தாபனாசாரியர், திருவருட்பெருஞ்சித்தர், கருணீகதலதிலகர், ஓதாதுணர்ந்தார் என்னுங் காரணப்பெயர்களு முடையராய்ச் சுத்தசிவ நித்தியானந்த சமரசானுபவ வதீதநிலை கூடின ஓர் ஞானாசாரியரின் திவ்விய மங்களகரமான சரித்திரம் பல நல்லாரவாய்க் கேட்டவண்ணமும், ஸ்ரீ பிள்ளையவர்கள் மருகரும், மாணாக்கருமான, பொன்னேரி சுந்தரம்பிள்ளையவர்கள் தந்த சரித்திரச்சுருக்கமும் திருவருட்பிரகாச வள்ளலார் திருவருட்டுணையு முடன்கொண்டு "நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க, நல்லார்சொற் கேட்பதுவுநன்றே—நல்லார், குணங்களுரைப்பதுவு நன்றே யவரோ, டிணங்கி யிருப்பதுவு நன்று." என முதாட்டியுரைத்த மூதுரைப்படியே பிள்ளையவர்கள் சரித்திரம் எமக்கெட்டியவரையில் ஒருவாறு தெரிந்தவண்ணம் வரையலாயிற்று. அது வருமாறு.

## இப்பரதகண்டத்தியல்பு.

தொன்றுதொட்டசீருஞ் சிறப்புஞ் சிறந்து விளங்கு மிந்நாவலந்தீவில், மண்ணுசை, பெண்ணுசை, பொன்னுசை முதலாய அநித்தியப் பொருள்கள் பலவகையாகி மாயாமயமான நவநவமாய புல்வகை யின்பங்கள் நிறைந்துள்ளனவாகி, உலகியலுக் கொத்தவாறு வைதீக லௌகீக முதலாய கருமங்கட்கேற்ப வனுபவித்தற்கிடமாய போகபூமியும், இலட்சுமிகாந்தனும், நாமகளை நாவிலவைத்த நான்முகனும், இன்னும் பல விண்ணவரும் பலபிறவி யெடுத்தெடுத்திளைத்து முத்திபெறுதற்கிடமாகி மறையரும் இடாக்கடல் நீந்தி முத்தியின்பக்கரை யடையவேண்டினராகி உதித்து, நித்தனை நித்தலும் நினைத்துப்பத்திசெய்து, சித்திபெறுதற்கிடமாகிப் பலதொல்லாசிரியர் வந்திருந்து பரவபர ஞானத்திற்குரிய பல ஞானசாத்திரங்களை வரைந்து, யுத்திக்குப்பொருந்தத் தாரக்கிக லட்சணத்துடன் தாக்கித்து, ஞானவான்களென மற்றையகண்டத்தவரால் மதிப்புற்றிருந்த ஞானபூமியானதுமாகிப் பரந்த பூமிப்பரப்பையுடையபெரும் புகழுமுள்ளது இப்பரதகண்டம்.

இத்தகைய சிறப்பினைவாய்ந்த விக்கண்டத்திற் சுத்த சாக்ஷாத்கார நிட்டிச யாநந்தபரிபூரண, சாவலலபவள்ளலாராய, ஓர் தனிமுதற்பழம்பதி திருவருட் சந்நிதானத்தில், அண்டசராசரமனைத்தையுமாக்கும் வேதியன் சிருட்டித்த பண்டுதொட்டு வந்த தொல்லாசிரியர்பல்லோருங் கேட்போரை ஆநந்தமுறச்செய்யு மினிமைவாய்ந்த செந்தமிழை இயலிசைநாடகமென முப்பாலாச்வகுத்து அவற்றிற்கு அங்கமெனனும் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென ஐவகை இலக்கணவரம்பா மெல்லையை வைத்து, அவ்வரம்புகடவாது இகபரசாதனத்துக்குரிய வேதசிவாகமாதி புராணவிதிகாசமெனப் பெயரிய காப்பியங்கள் பலவாக, அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்குவகை புருஷார்த்தங்கட்கும், தாரக்கீகமுதலிய யுக்திகட்கும் பொருந்த, அநுபோகத்தோடு வரைந்துவைத்த பொருள்கள் பலவித சாஸ்திரங்களாக அளவுபடாது விரிந்து கிடக்கின்றன. அங்ஙனமாய வற்றை ஓதியுணர்ந்து பிறர்க்குரைத்து மறைந்தார் பலரோராகவின், சின்னாள பலபிணி சிற்றறிவுஞ் சிறு தொழிலு முடையோமாகிய நாமோதியுணர்ந்து உய்யுநெறி காண வல்லே மல்லோம்.

இங்ஙனமாய சீருஞ்சிறப்பும்வாய்ந்த இவ்வாரியவர்த்தத்தில நவமணிகளை அலையால் நிதங்கொழித்துக் கரையொதுக்கும் ஒலிகின்ற பெருங்கடலாதியாயுள்ள நீரைத் தினமும் ஆவிரூபமாக்க கிரகித்த மேகங்கள் விண்டுவின் நிறம்போற் கறுத்து மின்னி, முழக்கத்துடன் மலைத்தலையினும் மற்றும் பிறவிடத்தினும் மழையைப் பொழியுங் காலத்தும், பனியின் முதிர்ச்சியால் புனலாய தங்ஙனமே யுறைந்திறுகிப் பனிக்கட்டிகளாகிப் பின் இளவேனிற்காலத் துருகிவருவதும், முதுவேனிற்காலத்துற்றுநீர் சுரந்து வருவதுமாகி என்ஞான்றும் கடல்படுபொருளும் கான்படுபொருளும் மலைபடுபொருளும் நாடுபடுபொருளுமாகிய வனைத்தையும் தினமுமிருகரையிலொதுக்கும் வளமிக்கூரும் ஜீவநதியாம பொன்னிநதிபாயும் சோணாட்டில், பத்தி ஞானவைராக்கிய முதிர்ச்சியால் மலமாயையாதி அவங்கழியத் தவமோங்கு முத்தர் பல்லோர் வசித்தற்கிடமாய, சோலைகளில் மேகங்கள் தவழும் வளமிக்கு ஆகாயமளாவி வளர்ந்தோங்கும் நிலவளம் நீர்வளம் உத்தமக் குடிவளம் பொருந்தியதும், விட

வரவும் அடிபுலியும் நிதத்லும் பத்திசெய்து முத்தியின்பஞ் சித்திக்கப் பெற்றதுமாகிய தில்லைவனத்தின்கண், நதியையும் மதியையுஞ் செஞ்சடைமுடிக்கணியாக்கி, தாழைமுட்போலும் தந்தவரிசையின் கடையில் விடத்தையுடைய அரவக்குழுவினைக் குளிர்மதி கண்டு பயந்தேங்க, தெய்வப்பிறையிருந்த நெற்றியையுடைய தேவியுருவங்கண்ட வரவமானது மயிலெனக் கலங்க, செஞ்சடைக்கற்றையைச் சுடர்ந்தீக்கொழுந்தென்று தலைமாலைகள் நடுக்குற்றுத் தாய புகலிடமேதெனத் தயங்க, அசனிரக் கூட்டங்களைப் பூரணசந்திரக்குழாமென அரவத்திரள்கள் பக்கங்களில் நெருங்கிப் பற்றுவான் வாய்திறவாநிற்க, அங்ஙனமாய அப்பகையைத் தீர்த்தாண்டு அவைகளைத் தம்மேற்கொண்டு, வேதன் மால் முதலாயினோரைச் சர்வசங்காரகாலத்திற் பொடித்து அவர்களுயவான நீத்தலு மப்பூதியைத் திருமேனிக்கணியாக்கி, அவ்விமயமலை பயந்த பவளமலைப் பசுங்கொடியாம் அம்பிகையைப் பாகத்தணியாக வைத்த சிவபெருமான் ஆனந்தத்தாண்டவம் புரியும் திருச்சிற்றம்பலமாய்த் தேவர்களாற் பொற்சபை யெனக்கொண்ட ஆகாயதலம் அனாதியாயுள்ளதாம்.

## திருவருட்பிரகாசர் தந்தையார்

## இராமையபிள்ளை சரிதம்.

அங்ஙனமாய சிறப்பினைவாய்ந்த வப்புலியூரெல்லைக்கு அணித்தாய மருதூரென்னுந் திவ்வியக்ஷேத்திரத்தில் வசிப்பவரும், குருலிங்கசங்கமபத்தியிற் சிறந்தவரும், கல்வி கேள்விகளில் வல்லுநரும் கருணீகர்குல திலகரும், சிவத்தொண்டும், சிவத்தியானமும் கனவிலும் மறவாத தூயசித்தமுடையவரும், பலவகை யறங்களையும் வளர்ப்பவரும், சிராமயனை மறவாதவருமாய இராமையபிள்ளை யென்பார் ஒருவருளரானார்.

அவர்க்கு மனைவியராயிருந்து ஒருவர்பின் னொருவராக ஐவரிறந்தனர். பின்னர் பொன்னேரி யென்னுங் கிராமத்திலிருந்து, கற்பில் அருந்ததியையும் பொறுமையில் பூமிதேவியையும், அறத்திற் கச்சியேகம்பமுடையார் மகிழுங் காமாட்சியம்மையையு மொப்பாளாய் "தெய்வந்தொழா அள்கொழுநற்றொழுதெழுவாள், பெய்யெனப்பெய்யுமழை" "தற்காத்துத்தற்கொண்டாற்பேணித்தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள்பெண்" எனத் தெய்வப்புலமைத் தொல்லாசிரியர் திருவள்ளுவனார் திருவாய்மலர்ந்த திருக்குறளுக் கிலக்காகித், திருவருளு சின்னம்மை தன்னைவிட்டு நீங்காத தவத்தினையு முடையாளான சின்னம்மை யென்னும் பெண்மணியாள் ஆறாந் தாரமாகி யமைய, அவ்வம்மையை இல்வாழ்க்கைத் துணையாகக்கொண்டு "இல்வாழ் வானென்பானியல்புடையமூவர்க்கு, நல்லாற்றினின்றதுணை" "துறந்தார்க்குந் துவ்வாதவர்க்குமிறந்தார்க்கு, மில்வாழ்வானென்பான்றுணை" என்னுந் திருக்குறட் கொப்பப் பல்வகை யறங்களையும், "தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்கலுனென்றாங், கைம்புலத்தாறோம்பறலை" என்னுந் திருக்குறளையுங் கடைப்பிடித்து உடலுயிர்போன்று இருவருமொத்துப் பிரியாவன்பினராய நல்லறமாய வில்லறவழியிலே தமது வாணாட்களைக் கழிப்பாராயினார்.

அங்ஙனமாக, அம்மருதூரிலும் அதற்கயற்புறத்து முன்னார்க்குக் கல்வி பயிற்றுவதுங் கிராமக்கணக்கு வரைவது முதலாய உத்தமவழியே யூதியங்கள் கொண்டு இல்லறம் நடைபெறவும், அவமாயதெல்லாந் தாமே கழியக் கைவிட்டுத் தவமாயதெல்லாந் தமைவந் தடையக் கைக்கொண்டு இல்வாழ்வுற்று வாழ்ந்துவரு மந்நல்லாரிருவரும், தினமும் சிற்றம்பலமுடையானைப் போற்றி "பெறுமவற்றுள் யாமறிவதில்லையறிவறிந்த, மக்கட்பேறல்லபிற" "எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப், பண்புடைமக்கட்பெறின்" என்பதற்கு மிணங்கச் சற்புத்திரனைத் தருவீரென் வேண்டுவாராயினர்.

இங்ஙனம் நிகழ, வேண்டினார் வேண்டினவாறே யருள்புரியு மடியார்க்கெளியராய திருச்சிற்றம்பலமுடையார் கிருபாநோக்கத்தால், பொய் என்னும் பொதிமலிந்து எங்கணுஞ் செறிந்து பதிந்து பொய்யுகமாகிக் கழியுங் கடையுகமான இக்கலியுகத்தின் முதற் பாதத்தில், திருவண்ணாமலை மூலக்காடு நிராமயனை மறவாத இராமையபிள்ளை மனைவி பொன்னேரிச் சின்னம்மை யென்னும் பெண்மணியார், சபாபதிபிள்ளை, பரசுராமபிள்ளை, என்னும் ஆண்மக்களிருவரையும், சுந்தரம்மாள், உண்ணாமுலையம்மாளென்னும் பெண்மக்களிருவரையு மீன்றருளாகி மருதூரென்னும் க்ஷேத்திரத்தில் இந்நான்கு மக்களையுடையராய்ப் பத்தாவுடன்கூடி வாழ்ந்து வருவாராயினர்.

## சின்னம்மையார் சிவயோகியர்க் கமுதிட்டது.

அங்ஙனமாக நாட்கழிக்கு மந்நல்லார் வதிந்துறையுமனையைநாடி, உச்சிப்போதில் திருமேனி முழுதுந் திருநீறணிந்து, புலியுரி யோகதண்டம் யோகப்பட்டிகை மேற்கொண்டு, சிரத்துங் கண்டத்துஞ் சிவனருட் கண்மணி யணிந்து, தண்டு கமண்டல கரத்தராய், ஸ்ரீபஞ்சாட்சரங் கருத்திற் கொண்ட வயோதிக சிவயோகியா ரொருவ ரெழுந்தருளி வந்து நின்று, நற்றவத்தினையுடையாராய சின்னம்மையாரை நோக்கி, யான் மிகவும் பசியினால் இளைப்புற்றவனாயிருக்கின்றேன், என் பசிதணியப் புசித்தற்குணவு தருதியோ? என வினவா நிற்புழி, அவ்வடியவரைத்தரிசித்த சின்னம்மையார், வயோதிக சிவயோகியாரின் திருவருட் பார்வையையும், தேகப்பொலிவையுங்கண் டஞ்சி எல்லாம்வல்ல சிவபெருமான், நம்மைச் சோதிப்பான் இவண் இத்திருவுருக்கொண்டு எழுந்தருளினரெனவுணர்ந்து, இச்சிவத்தை யானிங்கு தரிசிக்க என்னதவஞ்செய்தேனோ! அன்றி என்பத்தா தினமு நியமமாகப் புரிந்து வரும் நற்றவமே இவ்வுருக்கொண் டெழுந்தருளிற்றோ! அவரிங்ஙனமிவரைக் காணப்பெற்றாரில்லையே, இச்சிவத்தைத் தரிசிக்கப்பெற்ற வின்றே யன்றோ நற்சுபதினம், இன்றோ டெம்பழவினையும் பிறவித்துயரும் விட்டொழிந்து சுத்தமுடையானோம், யாம் பெறும்பேறு இச்சிவத்தைக் காணப்பெறும் பேறுமென நாவாரத் துதித்துப் பணிவாகத் தாங்க ளிங்கெழுந்தருள யாங்களென்ன தவஞ் செய்தோமோவென, அவ்வடியவ ரடியிற் பணிந்து இவண் எழுந்தருள்கவெனத் தூய வாசனமொன்றிட் டதின்மேலெழுந்தருளச் செய்து, அவரது திருப்பாதத்தைத் தூய நன்னீரால் திருமஞ்சனமாட்டி அந்நீரைத் தாமுட்கொண்டு, அடியேனை யாட்கொள்ளவந்த சிவமே யெனப் பத்தியுடன் பத்திரபுட்பங்களால்

அவர் திருப்பாதத்தை யருச்சித்து வழிபட்டுப் பணிந்து, பச்சைப்புல் நிறைந்த பூமி போலும் பெரியதோர் தலைவாழையிலையிட்டு, அதில் வெள்ளிமால்வரையெனப் பானிறவன்னம்வைத்து. அதன்மேற் பொற்சிகரமாம் பருப்பிட்டு, புத்துருக்கு நெய்யுந் தேனுங் கலந்த வருவித்தாரையை யதன்மேற் பெருகப்பெய்து, பக்கத்தே யறுசுவை பொருந்திய பொரிக்கறியாஞ் சிறுகுன்றுகளை வைத்துத் தூபதீபாராதனை யுஞ்செய்து அடிபரவி அடிகளே! ஆட்கொள்ள வெழுந்தருளிய சிவமே! அமுது கொள்கவென வருவிருந்துபசரித்துத் துணிபித்து, அன்புடன் பத்திசெய்து நிற்ப, அம் முதியார் அறுசுவையுண்டியுட்கொண்டு, உற்ற வெம்பசிதணிந்து உளமகிழ்ந்து, பண்டு திருவாலவாயுடையார்க்கு அப்பதியில் வாழ்ந்த கௌரியென்னும் பெண்மணி யார் தாஞ்சமைத்திட்ட இன்னமுதாம் விருந்தொக்கவிருக்கின்றது, ஆதலின் என் னால் நினைக்குந் தரத்தக்கது இத்திருநீறேயாம், இதனை நீயுட்கொள்வாயாக, என் போலு மோராண்மகவை யதிசீக்கிரத்திற் பெற்றுக்கொள்ளக்கடவாயென வாழ்த்தித் திருக்கரத்தாலிடலும், அம்மையாரும், அவர்திருபாதகமலங்களையும் தொட்டுப்பணி ந்துகண்ணொற்றித் தாழ்மையுடனதனைத் தன்னிருகரத்தேந்தி யுட்கொண்டு தன் தேகம் பூரித்துப் பரவசமுற்றாளாய், அவருண்ணுமுற்பிடி சேஷத்தையுங்கொண்டு புண்ணியவதியாராகிஆங்கொருபுடை யொதுங்கிநிற்ப, சிவயோகியார் மறைந்திடலும் தன்பத்தாவரலும் அவர்க்குச் சிவயோகியார் வரவையும் தாமவர்க்கு நடந்துகொ ண்ட முறைமையு முணர்த்தி இருவரும் மகிழ்வுற்றிருந்தனர். பின் அவ்வம்மையார் அந்நாள்தொட்டு முதிதினைக் கருவில் வைத்த செல்வச் செங்கரும்புபோல வயிறு வாய்க்கப் பெற்றுத் தசதிங்களும் பூர்த்தியாயது.

## திருவருட்பிரகாசர் திருவவதாரம்.

இங்ஙனம் கருணீகர்குலதிலகவதியாராய சின்னம்மையார் பூரணகர்ப்பவதி யாராகி—கலி. ௪௯௨௫-ல் நிகழும் சுபானுஞு தட்சணாயனம் வருஷருது புரட்டாசிமீ ௨௰௧ பூர்வபட்சம் துதியை ஆதிவாரம் உதயாதி இருபத்தொன்பதேமுக் கால் நாழிகைக்கு மீனலக்கினம் சித்திரை நட்சத்திரம் ௪-ங்கால் துலாவிராசி கூடிய சுபதினத்தில் [இங்கிலீஷ் 1823ளு அக்டோபர்மீ 5உ] பொய்யுகப் பொலிவாகிய அஞ்ஞான விருளகற்றும் வண்ணம் மெய்ம்மையெல்லா மோருருவாகித் திரண்டுவந் தாலன்ன ஞானசூரியனாய், "மகன்றந்தைக்காற்றுமுதவியிவன்றந்தை, யென்னோ ற்றான் கொல்லெனுஞ்சொல்" எனனும் குறளை நிலைநிறுத்த மோராண்மகவைக் குருநாதர் கட்டளையிட்டவண்ண மீன்றனர்.

## பிள்ளையவர்கள் பிள்ளைப்பருவம்.

இம்மகனார் திருவவதாரஞ்செய்த வஞ்ஞான்று பலநல்விழாக்கண்டு, வேதி யர்க்கு வேண்டுவன நல்கி, ஞாதியர்க்கு நல்விருந்திட்டு, குருகடாட்சத்தா லவதரித்த அப்புத்திரர்க்கு இராமலிங்க மென்னும் பிள்ளைத்திருநாமஞ் சூட்டிப் பெற்றோரும் மற்றோரும் மிக்க வருமைபாராட்டி வளர்ப்பாராயினார். அங்ஙனமாக நாட்களேற வேற அவ்வப்பருவத்தே செய்யவேண்டுஞ் சடங்குகளைக் குறைவின்றிச் செய்தும் இடையிடையே யணிவிக்கவேண்டும் அணிமணிப் பணிகளை யணிவித்தும் வந்த னர். அற்றை ஞான்று அவர் பிதாவாகிய இராமையபிள்ளை சிவாநந்தவாழ்வுறலும்,

மூத்த சகோதரர் சபாபதிபிள்ளையவர்கள் தன் பிதாவுக்குச் சமாதிக்கிரியையாகச் செய்யவேண்டுங் கருமங்களைக் குறைவின்றிச் செய்து முடித்துப் பின் ஆறுமாதத்தில் சென்னையம்பதிக்குத் தங்குடும்பத்துடன் வந்து சேர்ந்தனர். இங்கு அஞ்ஞான்று பிரபலவித்வானாயிருந்த காஞ்சிபுரம் சபாபதிமுதலியாரை இச்சபாபதிபிள்ளை தமக்குப் போதகாசிரியராகக்கொண்டு கல்வி பயின்று பின் ஆண்டுள்ள வித்தியாபாடசாலையி லுபாத்தியாயராயிருந்து வருமூதியத்தைக்கொண்டு தன் தாயார் தம்பி தங்கையாதியரைக் காப்பாற்றி வந்தார். இங்ஙனம் தமையன் போஷணையில் வளர்ந்துவரும் பிள்ளையவர்கள் மூவாண்டு தொட்டுத் தமது சிறுவயதுக் கொத்த சிறுவருடன் கூடிப் பிள்ளைப்பருவத்துக் கேற்றவாறு ஆடுவதும் பாடுவதும் அவர் விளையாட்டே யாக அம்பலத்தாராட்டுவிக்கும் அருள்விளையாட்டில் தமது சிறுவிளையாட்டைச் செலுத்தித் தினமும் சிறப்பாய சிறுதேருருட்டல் முதலாய சிறுவிளையாடல்கள் பலவாகக் காண்பா ரதிசயிக்கத்தக்கதாக விளையாடுவாராயினர்.

அங்ஙனமாக வைந்தாமாண்டு வரலும், சின்னம்மையென்னும் அன்னாரின் வேண்டுகோளின்படி தமையனார் சபாபதிபிள்ளையவர்கள் இராமலிங்கபிள்ளையார் சிறியார்க்குக் கல்வியறிவுறுத்துவான் ஓதுவிக்குந் திறத்திற் சிறந்த சகலகலைவல்லாராம் வேதியரொருவரைக்கொண்டு வித்தியாரம்பஞ்செய்து பின் தாமே தமது தம்பியாருக்கு வித்தியாகுருவாகிச் செந்தமிழைச் செவியறிவுறுத்துவாரானார். "ஐந்திலறியாதாம்பதிலுந்தெரியாது" என்னும் பழமொழிக் கிணங்கப் பிள்ளையவர்கள் தாம் கல்விகற்பதில் மிக்க விருப்பினராகி ஓதுவாராயினர்.

## பிள்ளையவர்கள் தேவோபாசனை தொடங்கியது.

பின் பருவமேறக் குருகடாட்சம் கூடுதலாற் பூர்வ வாசனையான பக்குவம் நேரலும், ஏழாண்டில் பிள்ளையவர்கட்குத் தன்னை யறியுமறிவு தலைப்பட்டுக் குருலிங்க சங்கம பத்தியிற் பற்றுண்டாகித் தனையுடையார் தனித்தலைமையை யுடையீரா என்னுந் தலைஞான முதித்து நிலைக்கவும், பத்திசெய்தா லன்றித் திருவருளின் சித்தியும், அவற்றிற்குரிய முத்தியும், வாயக்காதென்னுஞ் சத்தியவுணர்வு, உள்ளத்துள்ளே யுதித்தலும், தேவோபாசனை வழிநிற்றல் அடக்கம், அன்பு, அறிவு, அவாவறுத்தல், இரக்கம், இன்சொல், ஈகை, ஒழுக்கம், சாந்தம், தவம், நடுநிலை, பத்தி, வாய்மை முதலியனவாய ஞானத்திற்குரிய சற்குணங்கள் யாவும் சற்குருவாகக்குள்ளவாறு தம்முள்ளத்திற் பதிந்து வளரத் தாமும் வளர்வாராயினர்.

அற்றாகத் தன் தமையனார் சபாபதிபிள்ளையவர்கள்பால் கல்விபயின்றது சிறிதுகாலம், அதுவுந் தமது சிறுவயதுக்கேற்காப் பெருநூலாயிற்று. இங்ஙனமாகப் பிள்ளையவர்கள் தமது சகோதரர்பாற் கல்வி பயிலுங் காலத்தே, தாம் குருபுத்திரராதலின் ஓதாதுணரும் ஞானம் பெருகவுண்டாகவும், கற்கு நூல்களை ஒருமுறைகாண எல்லாம் மறப்பின்றிக் கருத்திற் பதிந்தவரானதன்றியும் தமக்குக் குரு உள்ளத்திற் பதிந்தறிவிக்கக் கல்லாதுறபொருளுங் கற்றவராகிச் சகல கலைஞானங்களையும் ஒருமுறை சந்தேகமறத் தாமே யோதியுணர்ந்து வளர்ந்துவரும்பருவத்தில், தன் தமையனார்க்குச் சென்னையில் வித்தியா குருவாயிருந்த மகாவித்வான் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் சொற்படி, சிவாலயசிவபூசைச் சிவாசாரியர்பால் தமையனார் சபாபதி

பிள்ளை சிவதீட்சைபெற்றுச் சைவபுராணப் பிரசங்கச் சன்மார்க்க வழியில் நிற்க, தாமும் அவ்வழியே சிவதீட்சைபெற்றுப பின்னும் ஆளுடையபிள்ளையா ரருள்வழி யான சுத்தசிவசன்மார்க்க தீக்ஷாபிதாவனுசந்தான அகமுக குருதீட்சைபெற்றுத் திருவெண்ணீற்றுப்பை, திருமந்திரச்சிறுபுத்தகம், உருத்திராட்சசெபமாலை இம்மூன்றுங் கைக்கொண்டு சிவசின்னங்களை யுடையவராகி, சுப்பிரமணியக்கடவுளை யுபாசித்துவந்தார்.

அப்பிள்ளைப்பருவத்தே திருவருளால் ஞானமுதிர்ச்சிகொண்டு ஓதிவருதலையும், "பெரியாரைத் துணைக்கொள" என்னு முதுமொழிக்கிணங்க, முதியோரைக் கண்டால் அவரடிபணிந்து மிக்கவாஞ்சையுடன் வேதாந்தம் சித்தாந்த மென்னும் பதிஞான மார்க்கத்திற்குரிய பலநூற்பொருள்களை வினவியும், அவற்றிற்குப் பொருத்தமுறும் சமாதானங்களை விவரித்துக்காட்டிக் கேட்பாரதிசயிக்கத்தக்கதாகச் சம்பாஷித்தும் வருதலை யுடையராயினா.

## ஓதாதுணர்தல்.

இங்ஙனமாக வாண்கேளற இளையபிள்ளையாரைத் தமக்குப் போதகாசிரியராமாறுகொண்டு அவருபாசனவிரதம் பூண்ட பிள்ளையவர்கள், இலக்கணமுடைய விலக்கியமாய காப்பிய புராண இதிகாச சமயநூல்களாதி சகல கலைஞானங்களையும ஓதியுணர்ந்து சேவற்கொடியோன் திருவருளபெற்றுப் பதிபசுபாச நூற்களில வல்லவராயினா.

பின் ஒன்பதாமாண்டில் கந்தர்சஷ்டியுபாசனகாலத்தில் உபவாசமிருந்து சாந்தியாதீதகலானுபவத்தைவிளக்கும திருத்தணிகாசலபதி தோத்திரமாக,

ஆறுமுகப்பெருங்கருணைக்கடலே தெய்வ யானைமகிழருட்குன்றேயரசே மூக்கட், பேறுமுகப்பெருஞ்சுடர்க்குட்சுடரேசெவ்வேல் பிடித்தருளும்பெருந்தகையே பிரமஞானம், வீறுமுகப்பெருங்குணத்தோரிதயத்தோங்கும் விளக்கமேயானந்தவெள்ளமேமுன், றேறுமுகப்பெரியவருட்குருவாயென்னைச் சிறுகாலையுட்கொண்டதேவதேவே.

பன்னிருகண்மலர்மலர்ந்தகடலேஞானப் பரஞ்சுடரேயாறுமுகம்படைத்த கோவே, யென்னிருகண்மணியேயெந்தாயேயென்னை யீன்றோனேயென்னரசேயென்றனவாழ்வே, மின்னிருவர்புடைவிளங்கமயின்மீதேறி விரும்புமடியார்காணமேவுந் தேவே, சென்னியினின்னடிமலர்வைத்தென்னைமுன்னே சிறுகாலையாட்கொண்ட தேவதேவே.

எனத் தணிகைப்பதிகமோதிச் சிந்தனைசெய்தலும் அக்காலத்தில் திருத்தணிகைப்பதியாரும்சின்முத்திரையைக்காட்டியருள்செய்யத் திருவருள்பெற்றுப் பின்னும் பரவோராய்,

வெண்பா.

தாதாதா தாதாதா தாக்குறைக்கென் செய்குதும்யா
மோதா தவமே யுழனெஞ்சே—மீதாத்
ததிதி யெனமயிலிற் றுனுடி நானுந
திதிதி தருந்தணிகைத தே.

எனத் தோத்திரப்பாமாலையாக அனேக அற்புதமாகிய பாடல்களைப் பாடியருளினர். அக்காலத்தப்பாடல்களைக் கண்டார் கேட்டார் யாவரும் மிகவியந்து அருமைபாராட்டித் தெய்வச்செயலாற் பாடிய பா வீதாமெனக்கொண்டு அதனை யோதுவாராயினர்.

அஞ்ஞான்று தொட்டுச் சேவ்வேள் சிந்தனையுடையாராகி விளங்கும் பிள்ளையவர்கட்குப் பதினாறுண்டாயது.

## திருவொற்றியூர்ச்சிறப்பு.

பண்டைக்காலந்தொட்டுப் பலசானறோவதிந்திலங்கப்பெற்ற தொண்டமண்டலத்தின் வடகீழ்த்திசையில், பாலாற்றின் வடபால் குணகடலின் கரைமேல் என்றுமுள்ளதாய் நீர்வளம் நிலவளத்திற் சிறந்து மேகங்கள் தவழுஞ் சோலைகளெங்கணும் நிறைந்து, எல்லா வளப்பங்களு மென்றுமுள்ளதாய், வேதன் மால் முதலாயினர் நியமமாகத் தினமுந்தெரிசித்து வேண்டுவன வேண்டிச் சித்திக்கப்பெற்றதூஉம், சமயாசாரியர் மூவருமவந்து தரிசித்துப் பதிகமோதப் பெற்றதூஉம், ஆரூர் நம்பியவர்கள் திருக்கைலைமலையில் சிவபெருமானு ரருளப்பெற்றவராதலால் சங்கிலியம்மையாரெனனும் பெண்மணியாரைக் கண்டு விரும்பிக் கடவுள்முன்னிலையில் சத்தியஞ்செய்து மணந்ததூஉமாய பழம்பதியாந் திருவொற்றியூரெனனும் சிவக்ஷேத்திரமொன்றுளது.

அததொன்னகரில் உலகெலாம் பரவும சிவபெருமானெழுந்தருளியிருக்கப் பெற்ற ஆலயத்தின் எப்பக்கத்துமுள்ள சோலை சூழ்ந்த வாவிகளில் வேதியர்கள் தினமும நியமமாக வந்து தங்கள ஜெபதபங்களை முடித்துக்கொண்டு இருக்கு, யசசு, சாமமுதலிய வேதங்களைப் பாராயணஞ்செய்து வருவார்கள். அக்காலத்தங்கு வசிக்கப்பெற்ற பஞ்சவர்ணக் கிளிகளும, நாகணவாய்ப் புட்களும் அவவேதங்களைக் கற்றுக்கொண்டு அவ்வயற்றின் சுரங்களின் வழுக்களின்றித் தாமுமங்ஙனேயோதிக் கேட்பார் திசயிக்கத்தக்கசாயச செவவிதில விளக்கி வருவனவென்றால், அப்பதியின் நலத்தையும பெருமையையும விரிப்பதாரம. அப்பழம்பதியி னெப்பக்கங்களினும் வேதியர் செய்யும வேள்விப் புகையானது ஆகாயமெங்கணும நிறைவதனாலும மேகங்கள் அங்குள்ள சோலைகளெங்கணுந் தங்கி நிற்றலினாலும அப்பதியெங்கணும் பகலவன் பிரகாசந் தோன்றாது மழுங்குந் தன்மையுமுடையதாம்.

## பிள்ளையவர்கள் ஒற்றித்தியாகரைத் தெரிசித்தல்.

இங்ஙனமாகிய சிறப்பினை வாய்ந்த வததொன்னகர்க்குத் தென்பாகத்தில் எக்காட்டு வளப்பங்களும், எந்நகரத்து வளப்பங்களும் நிரம்புதற்கிடமாய் "தொண்

டநன்றுடு சான்றோருடைத்து" எனனும் முதுமொழிக்கிணங்க, சற்பத்திசற்சங்க மகலாத சன்மார்க்கமுடைய குடிகணிரம்பிய நகரச்சிறப்புடையதாய, தேவாலயங் கணிறைந்துள்ளதாய் விளங்கும் சென்னையம்பதியில் வசித்துவந்த பிள்ளையவர்கள், திருவொற்றியூரின் தொன்மைச் சிறப்பைப் பலமுநிவோர் வாய்க்கேட்டு மகிழ்வோடு தினமும் நியமமாக வப்பதிக்குப் பத்தியுடன் சென்று ஆங்கெழுந்தருளியிருக்கும் எழுத்தறியும்பெருமானும் தியாகப்பெருமானை அன்புடன் தொழுதுருகி,

கோச்சகக்கலிப்பா.

சிந்தை மயங்கித் தியங்குகின்ற நாயேனை
முந்தை வினைதொலைத்துன் மொய்கழற்கா ளாக்காதே
நிந்தையுறு நோயா ணிகழவைத்த னீதியதோ
எந்தைநீ யொற்றி யெழுத்தறியும் பெருமானே.

நினையுடையாய் நீயன்றி நேடிலெனக்கு மில்லாதாய்
மனையுடையார் மக்களெனும் வாழ்க்கையிடைப் பட்டவமே
இனையுடையா னென்றிங் கெனையாளவ் துன்கடனே
எனையுடையா யொற்றி யெழுத்தறியும் பெருமானே.

என்று போற்றுவாராயினர்.

இவ்வண்ணமாகப்பிள்ளையவர்கள் பிறப்பெனுங்கடல்கடந்து, முத்தியின் முடிவிற்சேர்வான் ஒற்றியூருடையாரதம்மை நித்தலும் நியமமாகப் பத்தியுஞ் செய்வாராகி, உற்றவெம்பவத்தைப் போக்கும் நாதனை நாந்தெழுத்தை நாவினாலோதி, நாளும் நற்றுணையதுவாகக்கொண்டு போற்றிகள் புகலவாராகி, எந்தையே! உம்முடையுறைவிடத்தைத் தினமும் அன்பாபால் ஒற்றிவைப்பதை நியமமாகக்கொண்டு, ஐயநீ ரம்பலமாய் நின்றீராக, எனனுள்ளத்தை யுமக்கேற்ற அம்பலமாகக்கொண்டு, உம திருப்பிடமா மூனை யெம்பால் ஒற்றி வைப்பீரென்று தினமும் வேண்டுவாராயினர்.

## பிள்ளையவர்கள் சற்குரு தரிசனம் பெற்றது.

இவ்வண்ணமாக ஒற்றிப்பதிக்கும் சென்னைப்பதிக்கும் போக்குவரவு நிகழ்த்தி "மனத்தகத்தழுக்கறுத்தமவுனயோகஞானிகள, வனத்தகத்திருக்கினும் மனத்தகத் தழுக்கறா" போன்றிராது உலகவாபாசமாகிய மண், பெண், பொன் என்னும் ஆசையின் வேரற விட்டொழித்து "மனம்" என்னும் பெரிய மதம்பிடித்த யானையைத் தனவசப்படுத்தி "உன்பற்றொழியவொருபற்றுமில்லை யுடையவனே" எனத் தூயசித்தத்துடன் தினமு மிருகண்ணுமூற்றெடுத்துப் பெருகநியெனப்பெருக "பேரானந்தமுற்றவர்க்கேகண்ணீர்கம்பலையுண்டாகு" மென்பதற்கிணங்க, கண்ணீருங் கம்பலையுமாக நின்று தினமும் போற்றிசெய்து வரும் பிள்ளையார், முற்பிறப்பில் முயன்றுவந்த தவக்குறையோடு இப்பிறப்பில் முயன்று செய்யும் பத்தியுங் கலந்து முற்றியதால், அற்றைஞான்று ஒற்றியூருடையார் பத்திவலையிற் படுபவராதலின், சித்தமகிழ்ந்து பத்தியிற் பழுத்தவரும் பத்தர்க்குற்ற பத்திஞான வைராக்கியத்தையும், அவருக்குற்ற ஊரும் பெயரும் உருவமும் உலகறிய வெளிப்படுத்துவான், தமக்கென ஒருரும் பே

யரும் உருவமு மொன்றுமில்லாது சமயாதீதமுற்று நிற்கும் தனிமுதற்பழம்பதியார் தமது திருவருளா லவதரித்துத் திகழும் பிள்ளையவர்களின் உபாசனாமூர்த்தத்திற்கு ரிய வுருவிற் றிகழ்ந்திலங்குவதாய, நதிமதி இரண்டுஞ் செஞ்சடையில்மறைய, நெற் றிக்கண்ணை முற்றுமறைத்து, கறைமிடறும மான்மழுவுங் கரந்துறைய, சிவஞான போத முத்திரைதாங்குப் போதிக்குஞ் சிவஞானபோதந் திகழுங் கரத்தராய், மேனிமு ழுதுந் திருவெண்ணீற்றொளி பிரகாசிக்க நான்குவேதங்களும நான்குமாணாக்கராகிப் பல வினாக்களை வினவாநிற்ப, யோகியா நால்வ ரிருபால யோகத்திருப்ப, ஊரும் பெ யரும் உருவமுங்கொண்டு ஞானாசாரியராய், மானைக்காட்டி மானைப் பிடிப்பார்போ ன்று திருவிழாக்காலத்தில் தரிசிப்பான்வரும் சிவநேசபிள்ளையவர்களுக்குத் தெரிசனந் தந்தருளுந் திருவுளத்தராயமர்ந்திருந்தார்.

இங்ஙனம் நிகழ்த்தித் திருவிளையாட்டயரு மொற்றித்தியாகர் திருநாள் தரி சனஞ்செய்வான் பிள்ளையவர்கள் தமக்குற்ற தனதோழருடன் அத்திருப்பதியிற் சென்று, திருக்குளத்தில் நீராடி நித்தியாநுட்டான பூஜாவிதியை நியமமாகமுடித்து த் தூயசித்தராய தோழர்கள் சூழச் சிவத்தியானத்துடன் சிவாலயப் பிரவேசமாகிச் சிவதரிசனஞ்செய்து வருங்கால், தம்மோடுற்ற தோழர்கள் தங்கள் தவக்குறைவால் குரு தரிசனைக்கு அபக்குவராகி, அஞ்ஞானத்தால் மறைப்புண்டு திகைத்துப் பிள் ளையவர்களை விட்டு விலகி யொருபுறமொதுங்கிப், பின் னவரைக்காணாது தேடித் திகைப்புண்டு சஞ்சலசித்தராகித்தம் விசாரத்தில தாமிருந்து தமதிருப்பிடஞ் செல் வாராயினார்.

அப்போது பிள்ளையவர்களின் பூர்வபுண்ணியம் உருவாயுடனிருந்து கூட் டிப்போய் குரு சந்நிதானத்தில் விட்டு, எல்லாவுலகுந்தொழுந் தெய்வ மிங்கு நின் பொருட்டுக் குருவுருவாகி எழுந்தருளிற்று பணிந்துகொள்ளுக எனவும், அன்பா குருதரிசனமுற்று, தன்னையுடையார் திருவருட் கடைக்கண்ணோக்கத்தால் தரிசித்து, அடியற்ற பனைபோ லவரடியிற் பணிந்து அட்டாங்க நமஸ்காரம் செய்து எழுந்து நின்று, தாயைக்காணாது சிலபோது மறைந்திருந்த சேய் எதிர்நின்ற தாயைக் கண்டா லென்ன, உடல் புளகாங்கிதராய்த் தமது திருக்கரத்தினைச் சிரமேலேறக் குவித்துப் பன்முறை வலம்வந்து எதிர்நின்று நாத்தழுதழுக்கச் சொற்றடுமாறத் தேகம் சிலிர்சிலிர்ப்ப இருகண்ணும் நீரூற்றெடுத்துச் சொரிய,

கண்டவனக் குருநாதன் கடைக்கணிக்கப் பெற்றதனாற் கடத்திற் சற்றே
திண்டகுதே றிடச்சிறிது தெளிநீர்போற் றெளிந்தறிவு சிறிது தோன்றத்
தண்டமெனக் கீழ்விழுந்து வணங்கியெதிர் நின்றுகரந் தலைமேற் கூப்பிப்
பண்டுறுமன் பொடுவிழிக ணீர்சொரிய வியந்துதுதி பண்ணு வானால்.

கருணைநெடுங் கடலென்கோ கல்லாலி னடியமர்ந்த கடவு ளென்கோ
வருணகிரிக் கருள்புரிந்த வாறுமுகக் குருவென்கோ வமுத மென்கோ
மருணலிய வரும்பிறவி மருந்தென்கோ வடியென்கண் மணியென்கோ மெய்த்
தெருணிறைந்த சிவகுருவே நின்றனையீண் டெவ்வாறு சிந்திக் கேனே.

என அழலிடைப்பட்ட மெழுகெனவுருகி, இன்றிங்கென்னை யாட்கொள் வானெழுந்த கருணைக்கடலாங்கொல்லோ ! இக்கோலம் அடியார்க்கருட் குருவாயமர்

ந்திருக்கும் அத்தனையல்லவோ !! அன்றி, என்னைவிட்டு நீங்காது, வாட்டியாட்டும் மும்மலத்தையும், உலகப்பற்றையும் விட்டு நீக்கித் தடுத்தாட்கொள்ளவல்ல ஞானாசிரியராமல்லவோ !!! கல்வியில்லேன், மந்த புத்தியுள்ளேன், இனிக்கடைத்தேறும் வகையறியாத சடையனுமனேன், ஆதலின், அருட்குருவே ! இவ்வுலகவாபாசக்கடலில் மூழ்கிக் கரைதெரியாது அலமந்துழன்று தடுமாறுகின்றேன், ஐய !! தேவரீர் திருச்சந்நிதானத்தில் ஏழையேனாகிய நாயேன் என் குறையினை இன்னபடியென்றெடுத்தியம்புமாற்றலில்லேன். எங்குருநாத !!! தேவரீரிணையடியன்றி இவ்வேழைக்குப் புகலிடமொன்றில்லை, தேவரீர் பெருமை இன்னவாறென்றுணர்ந்து செய்வினையறியாச் சிறுநாயேன். என்செய்வேன், தங்களை எனனென்று புகழ்வேன், அருட்கடலே ! அடியேனைத் தேவரீர் தமது திருவுள்ளத்திற்கொண்டு இனிக்கடைத்தேறத் திருவருள்புரிவீர் எந்தாய் எந்தாய் எனக்குறையிரந்து விண்ணப்பித்துநின்றார்.

இங்ஙனமாகப் போற்றிசெய்து எதிர்நிற்பாரை, அடியார் குடியைக்கெடுக்கத் துசங்கட்டியேநிற்கும் அருட்குருவும், கடைக்கணித்தடிமைகொண்டு ஞானதீட்சை செய்து, பாசக்கடல்கடப்பித்துச் சிவஞானம்போதித்துப் பத்திமார்க்கத்தில் நிலைத்திருக்கவைத்துத் தினந்தினமும் நியமமாகப் பரமனைப் பத்திசெய்து பாடுவாயாக, அவ்வாறருச்சனை பாட்டேயாகும், ஆதலின் இது உனக்குற்ற நியமமாகக் கொள், மைந்த! நீயொன்றுக்கு மஞ்சேல் என அபயாஸ்தந்தந்தருளிக் கடவுள் மறைந்தருளினார். அங்ஙனஞ் சற்குருகடாட்சம் பெற்று நின்ற பிள்ளையார் குருநாதரைச் சிந்திப்பாராகிச் செல்வாராயினார்.

## பிள்ளையவர்கள் அருட்பாப் பாடத்தொடங்கியது.

பின்பு, அருள்நோக்கம்பெற்றுப் பிரமானந்தமுற்று, திருவருட்பிரகாசவள்ளலாராயிந் திகழ்வாராய பிள்ளையார், அன்றுதொட்டு அத்தனை மறவாத சித்தத்தினராய்த் திருவருளை வியந்து வியந்து தினமும் பத்தியுடன் ஒற்றிநகர்சென்று, தியாகரைத் தரிசித்துப் பாடுவதும் ஆடுவதும் உடையராய ஆனந்தக்கண்ணீர் சோரத் தேம்பித் தன்னையாட்கொண்ட வள்ளலாரைச் சிந்தித்து வரும் நாளில், ஓர்நாள் தியாகப்பெருமான் சந்நிதிச்சேவை செய்து மண்டபத்தில் சிவசிந்தனையுடனிருந்துழி பசிப்பிணிவாட்ட விளைந்துச் சிவாநந்த நித்திரைசெய்தனர். கடவுள் கோயிற்குருக்கள்போலுருக்கொண்டுவந்துநின்று, பிள்ளையவர்களின் துயிலகற்றிச் சிவப்பிரசாதந்தந்தருள, அதனை வாங்கியுண்டு இளைப்பாறிநின்று "நம்பசிகண்டநதோ தரியாது, நன்றிரவிற் சோறளித்த நற்றாய்காண்—ஒன்றுமருட் செம்மையிலாச் சிறிய தேவர்கள்பாற் சேர்க்காது, நம்மை வளர்க்கின்ற நற்றாய்காண்—சும்மையென, மூளும் பெருங்குற்ற முன்னின்மேன்மேற்செயினும்—நாளும்பொறுத்தருளு நற்றாய்காண்—மூளுகின்ற, வன்னெறியிற் சென்றாலும் வாவென்றழைத்தெமை, நன்னெறியிற் சேர்க்கின்ற நற்றாய்காண்—செந்நெறியின், நங்கேடர் முன்னை நமைத்தேடிப் பின்புதனை, நாங்கேட்கச் செய்கின்ற நற்றாய்கா—ணாந்தோறுங், காலமறிந்தே கனிவோடு நல்லருட்பால், ஞாலமிசை யளிக்கு நற்றாய்காண்" என நெஞ்சறிவுறுத்தலில் அகக்குறிப்புரைத்துப் பின் அப்பதியில் வாசஞ்செய்தருளிய கற்றுணர்ந்த பேறுடைத் திருஞானசம்பந்தப்பிள்ளை யெனனும் சாதகரோடும், ஒற்றியப்பர் சந்நிதியில் ஆனந்தக்கண்ணீரொழுகத் திருவாசகம் பாடியமரும் சிவபூசை மறவாத வைசியகுலவருண்மூர்த்தியோடு

கலந்து வார்த்தையாடி, ஞானமார்க்கத்திற்குரிய ஆன்மவிசாரஞ்செய்து வருவாராகி அங்ஙனம் அன்புமேலீட்டாற் பாடிய,

வெண்பா

மானமுடிமே லுங்கமல வான்முடிமே லுந்தேவர்
கோன்முடிமே லும்போயக் குலாவுமே—வான்முடிநீ
ரூர்ந்துவலஞ் செய்தொழுகு மொற்றியூர்த் தியாகனார்
சார்ந்துவலஞ் செய்கால்க டாம்.

நினைப்பித்தா நித்தா நிமலா வெனநீ
நினைப்பித்தா லேழை நினைப்பே—னினைப்பின்
மறப்பித்தா லியானு மறப்பே னெவையும்
பிறப்பித்தா யென்னாலென் பேசு.

ஐய! நின்னைப் பித்தனே, நித்தனே, நின்மலமாயிருப்போனேயென நீ எனக்கு நினைப்பூட்டினாலன்றி ஏழையேன் நின்னை நினைந்து பாடுமாற்றறிவில்லேன்; அந் நினைப்பூட்டுதலின்றி உன் திருவுள்ளத்திற்கொள்ளாது என்னை மறப்பித்தாயாயின் இது முதலாய என் விவகார மனைத்தையும் மறந்து பேச்சுமூச்சற்றுக் கிடப்பேனாக, எந்தையே! இவ்வாறாய விவகாரங்களை என்பால் நீ நிகழ்த்துதலில், என்னால் நினக்கு நேரும் இலாபமென்னை நிகழ்த்துதி, அத்த! "அப்பாலுஞ் சித்த மறியேனெனக்கமை, யப்பாநின் றுள்ளறி யார்கண்டா—யிப்பாரிற், சாதியுரு வாக்குந் தளையவிழ்த்து தன்மயமாஞ், சோதியுரு வாக்குந்துணை." என இன்னனவாய பல பாக்களைத் தோத்திரமாகப்பாடி, அன்பருடன்கூடி ஒற்றிப்பதியிலும் சென்னையிலுமாக வதிந்து தம் வாணாளைச் சற்குருகடாட்சவாணையின்வழிச் செலுத்திச் செல்வாராயினார் இங்ஙனமாய பிள்ளையவர்கள்பால் இச்சென்னையில் வதிந்த கிரியாயோகசாதகராய யணைட்டார் ஆறுமுகவையர் என்பாரொருவர் விநாயகபுராண முழுமையு மோதியுணர்ந்து சந்தேக விபரீதந்தீர்ந்து பின் குருதோத்திரமாகப் பாடிய,

விருத்தம்

மருவுமன் பீரிடத்துடையான்கனகசபாபதித்துணையாயமகிழ்விற்கொண்ட
பிரமம்விழுங்கியமனத்தான்சாதுக்களசெயுங்கனத்தான்பிறைத்தாங்கத்தான்
சரிதமெனபாலெனக்கிட்டராமலிங்கனெனுந்தகையைத்தமையனாதை
குரவனென்பாங்குறைவுறிற்சத்துவத்திலினமவன்குணத்தைக்கூறிக்கொள்வாம்

என்றுரைக்கப் பெறுவாராயினர்.

## திருவருட்பிரகாசர் திருமணம்

குருநாதன் கட்டளையால் கருவாயுருவாகிப் பிள்ளையாய் வந்தவராதலால், பிள்ளையவர்கள் தமதிளமைப்பருவந்தொட்டு, பூர்வ புண்ணிய நிகழ்ச்சிச் சம்பந்தமுற்று, தம்முணின்று நிறைந்தெழுந்த சத்தியஞானவுணர்ச்சியின் தற்போதம்

முதிர்ச்சியால், தூயசிவஞானம் வாய்க்கப்பெற்றாராய், உலகபோகவிடயங்களாய மா
யவாழ்க்கையின் ஆசாபாசவலையிலகப்படாது இவ்வுலகவாழ்வெல்லாம் அநித்தியமெ
னக்கழித்துத்தள்ளி, தன்னையுடையானாட்டுப்பற்றுண்டாகி, சற்குருதரிசனமுற்றுத்
தன்னையறியுந் தலைஞானமவாய்ப்பச் சிவானந்தவாழ்வுற்றுத் திகழ்வாராய்நிற்கின்ற
வள்ளலாரை, உலகப்பாச சம்பந்தத்தால் வந்த தாயார் சின்னம்மையாரும், தமைய
னார் சபாபதிபிள்ளை, பரசுராமபிள்ளையும், தமக்கையாரும் பிள்ளையவர்கட்கு வது
வைசெய்து வைப்பது தமது கடமையாகக்கொண்டு அவரைப் பலகாலும் நிர்ப்பந்
தித்து வேண்டுவாராயினர்

ஒருவருக்கு நேர்வழிகொண்டு செல்வானைக் கள்வர் நடுவழியிற் கலந்து வழி
மறித்துப் படுகுழிப்படுத்துவார்போன்று, மோட்சமெனனும் வழிச்செல்லும் பிள்ளை
யவர்களைக் குரங்குத்துணிசிக்குடும்பக்குழாங்கள் தடுத்துத் திருமணஞ்செய்விக்க முய
ல்பவரைக் கண்டனைத்ததாவது. நீவிர்கள் எல்லீரு மெனனிலும் முதியோரேயாயினும்
எம்மை இதுவிஷயமாக நிர்ப்பந்திப்பது தகுதியன்றென்றுரைத்து துடன்படாதவ
ராயினர்.

இவர் தமையனார் சபாபதிபிள்ளை பலவுலகஞாயங்களெடுத்தோதி ஞாலத்
தவர்க்கு நல்வழிகாட்டத் திருத்தேவாரத் தமிழ்மறைதந்த திருஞானசம்பந்தர், தாம்
மூவாண்டில ஞானம்பிகையின் ஞானப்பாலுண்டு சிவஞானமூர்த்தியாய் விளங்கியும்,
தந்தை சிவபாதவிருதயர் வேண்டுகோளின்பொருட்டுத் திருமணக்கோலங்கொண்டு
நின்றாற்போல தமது தமயனார் சொல்லை மறுக்கவறியாராகி அங்ஙனமியற்றிக் காண
வீராகவெனச் சம்மதித்தார். அதனைக்கடைப்பிடித்து உறுதியாகவே உறவினர்
அவரது தமக்கைப்புத்திரியைத் திருமணஞ்செய்வித்தார்கள். பின் அதுவிஷயத்தில்
எவ்வகைப்பற்றுஞ் சிறிதுமின்றிச் சிவத்தியான சித்தமுடையராய்ச் சதானந்த சகச
நிஷ்டைசாதன முடையராயினர்.

## பிள்ளையவர்கள் போதகாசிரியராயது.

இங்ஙனம் நிகழுழி வள்ளலாரை முதற்றமிழ்வல்லஞானாசிரியராகக்கொண்ட
அறிஞர்கள் இலக்கணவிலக்கியங்களிலும், திருவாசகமுதலிய ஞானநூல்களிலும் எத்
தகைய சந்தேகநீங்கக் கேட்கினும் அங்ஙனமே அதுநீங்கப் போதித்து வருவதுமன்றி,
இச்சென்னையில் நரசிங்கபுரம் வீராசாமிமுதலியார், சென்னைக்கேசவ உபாத்தியாயர்,
இன்னும் சில வித்வமூர்த்திகட்கு இலக்கணச்சங்கையறப்பாடங்களோதித் தம்மை
யடுத்துப் பாடங்கேட்கத்துணிந்த, தொழுவூர் - வேலாயுதமுதலியாருக்கும், தமது
நல்லம்மான் புதல்வரான பொன்னேரி - சுந்தரம்பிள்ளைக்கும் இலக்கண விலக்கிய
வேதாந்த சித்தாந்த நூற்பொருள்களைப் போதிக்குங் குருதவமுடையருமாகி, திரு
வொற்றியூர்க் கடவுளைத் தெரிசிப்பதுமன்றி அருட்பாக்கள் பாடுவதும், அன்பர்கட்கு
ஞானார்த்தங்களைப் போதித்து அவர்களை நல்வழியிலிருத்துவாருமாயினர்

இங்ஙனம், போதகாசிரியராயமருநாளில் தமதன்பர்கள் வேண்டுகோளி
ன்படி, ஒழிவிலொடுக்கவெண்பா "வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன்"
என்பதற்கு ஞான விருத்தியுரை வரைந்தும், "தொண்ட மண்டலமென்பதற்கு" அச்

ப்பொருளிலக்கண விருத்தியுரைவரைந்தும், பின் "மனுமுறைகண்டவாசகம்" வரைந்தும், ஓரறிவாக கடவுளை ஒருபோதும் மறவாது பத்திசெய்து, தன்னையடுத்த அறிஞர்களுக்குப் பத்திநெறியின் பக்குவ நிலையையும் முத்திநெறியின் பக்குவ நிலையையும் போதித்துக் குருசிந்தனைவழியே அமர்ந்தும், அந்நிலையினின்று நீங்காத சுத்தவாசனையோடு புறவாசனைக் கலப்புச் சிறிதுமின்றி யமருநாளில், தம்மையீன்ற சின்னம்மை சிவநெறியடையக்கண்டு அவர்க்கு மோட்சதீப கயிங்கரியங்களைச் சிவதீட்சை நெறிப்படியேசெய்து முடித்து வீற்றிருந்தனர். அத்தருணம் அந்நிலைமையறியாது அவரிடமொருவரடுத்து ஐயா! எனபோலிகள் துன்பமகன்றுலகவின்பந் துய்க்கும்படி பொருளைக் குறித்து இச்சென்னையில் தமதன்பிற் கியைந்த செல்வருக்குத் திருமுகம் எழுதித்தந்தால் யாங்கள் வறுமைதீர்ந்து வாழக்கூடுமென்றபோது, அவரை நோக்கிப் புன்னகை செய்தருளி,

கட்டளைக்கலித்துறை.

வெட்டாலுங்களையலெனபாரைநானசிரிததெனைவெட்டிப்
போட்டாலுமவேறிடங்கேளேனெனனுணைப்புறமவிடுத்துக
கேட்டாலுமெனனையுடையானிடஞ்சென்றுகேட்பனெனறே
நீட்டாலுமவாயுரைபபாட்டாலுஞ்சொலவிநிறுத்துவனே.

என்று குருமுகமாயிருந்தோதித் தந்நிலை தவறாது வாழுநாளில்,

வெண்பா.

மாலெங்கே வேதனுயர் வாழ்வெங்கே யிந்திரனசெங்
கோலெங்கே வானோர்குடியெங்கே—கோலஞ்சே
ரண்டமெங்கே யவ்வவ் வுருமபொருளெங் கேனின்று
கண்டமங்கே நீலமுறுங்கால

விருத்தம்

வில்வத்தொடும்பொறகொன்றையணிவேணிப்பெருமானெறறிங்காச்
செல்வப்பெருமானசிவபெருமான்றியாகப்பெருமானறிருவழகைக்
கல்வைப்புடையமனங்களிக்கக்கணகள்களிக்கக்கண்டுநின்றே
னிலவைப்புடையேனமமாநானெனனவெதவந்தானெசெயதேனோ

என்றிங்ஙனமாகத் தன்னையுடையாராகிய திருவொற்றித்தியாகரை ஒருபோதும் மறவாதவராய்த் தனது மனக்கோயிலிலிருத்தி நாடோறும் நியமமாக வப்பெருமானுக்குப் பாமாலை புனைந்து சாத்தும் விரதங்கொண்டு திருவருணோக்கத்துடன் பிரமாநந்தமுற்றுச் சிவஞானச் செல்வராய்த் திருவருளை வியந்து பாடியாடிப் பரவுவாராயினர்.

இங்ஙனம் பாடிய பாக்களைச் சென்னைக்குவந்து தமது திருக்கரத்தால் திருவேட்டிலெழுதித் தொகுத்துப் பின்னும் ஆநந்தமேலீட்டால் ஆநந்தக் கண்ணீரொழு[illegible] வாகி, அந்நிலை வழியே யமர்ந்து

தற்போதம் நீங்கிச சமரச சகஜவநுபவாநந்த குருதவ நிலைமையை யடைந்து, பிற கு உலகப் பிரிவையுடையார் போலும் வெளிமுகமாகி யுண்முக வாநந்தக்களிப்பு மா றாதவராகி எழுந்தருளியிருந்தார்.

இங்ஙனமமருநாளில் சென்னையில் வதிந்திருந்தபொருட்செல்வமிக்குடையா ரொருவர், தம்பால பிள்ளையவர்களின் கிருபாநோக்கம பூரணமாயுண்டெனனுந் துணிவாலும் தாம அவர்க்கடிமை பூண்டமையாலும, தமது புத்திரியின் திருமணக் காட்சிக்கு எழுந்தருளவேணடுமென்று வேண்டியும், அம்மணமுகந திருமபாது அருணமுகமாயிருந்து அவரைக் குறித்து அவர் மனம நோகாதபடி கருணையால்,

கட்டளைக்கலித்துறை.

சோறில்லைமேல்வெள்ளைசசொக்காவில்லைநல்லசோமனில்லை
பூறில்லைகையிறபணமில்லைதேசப்பருமனில்லை
வீடில்லையாதொருவீறுப்புமில்லைவிவாகமது
நாடிலலைநீநெஞ்சமேயெந்தவாறினிநண்ணுவையே.

என ஓர் திருமுகம வரைந்து விடுத்துச் சென்னையில் அமருநாளில், தமதி ளைய சகோதரர் பரசுராமபிள்ளை பிணியால் பீடிக்கப்பட்டிருக்குங் குறிப்புணர்ந்து அவருக்குச் சிதம்பரதரிசனஞ் செயவிப்பானறுணிந்து பிரயாணப்பட்டுத் தமதருகே யிருந்த, மதுரைச சிதம்பரசுவாமிகள், ஞானயோக நெறியிற பயின்றுவந்த வீராசாமி நாயகர், சுந்தரமபிள்ளை இவர்களோடும, திருமயிலை ஐந்தாநாள ரிஷபாரூடதரிசனஞ் செயது, அச்சிறுபாக்கம அமர்ந்து, புதுவைக்குச சென்று, அங்ஙனமிருந்த சித்தாந்த நூலிற பழகிய வைசியகுல தருமலிங்கசெட்டியார் முதலிய அறிஞர்கள் வினவிய வினவிற்குத தக்க விடைதந்து திரபதிசெயது சிதமபரஞ்சென்றனர். அங்கு வசி க்கும் நாளில் நியமமாகச் சிற்சபைமூர்த்தியைப் பிள்ளையவர்கள் தரிசித்து,

வெண்பா.

கண்டவங்குப் போகமனங காலெழாக கைதலைமேற்
கொண்டவர்க்கு மெய்யசைவு கொள்ளாது—பண்டுதவத்
திணணியோர் போறறுஞ் சிதம்பரர் சிந்தைபடுங
கணணியோர் நினைசிவந்த கால.

என்று குருநமசிவாய மூர்த்திகள் கூறிய பரவசமடைந்ததுபோலும் தாமடைந்து, திருவணுக்கன் திருவாயிலைவிட்டு நீங்காது ஆநந்தபரவசமாகி ஆநந்தக்கண்ணீர் துளும்ப "எனக்கெனச்செயல்" என்னுந் தாயுமானவர் திருப்பாடலின் வழிநின்று, இனி "ஆரிருந்தென ஞாபோயென் ஓராமுதா நினனருளின—சீரிருந்தா லுயவேன் சிவமே பராபரமே" என்னுந் திருப்பாடலுமோதிப் புறப்பற்றில்லாதவராகி, புண்ய சிவாநந்தவநுபவநிட்டை மாறா நிலையையுடையவராகி வாழ்ந்து மகிழ்ந்து தெளிந்து, அடுத்தவர்கள் சிலருடன் ஸ்தலயாத்திரையாகச் சீகாழி திருவாரூர் திருச்செங்காட்டங்குடி திருப்புகலூர் முதலிய தலங்களுக் கெழுந்தருளி, ஆங்காங்கமர்ந்திருக்கும் சிவபெருமானமீது பலபல பாக்களைப் பாடியாடிப் பரவசமடைந்து, ஆங்குநின்றும்

தக்ஷிணபினாகினிதீர மென்னும் பெண்ணையாற்றின் திருவூறல் உற்சவத்தைத் தரிசி
க்கும் எண்ணமுடையவராய் அங்குவந்து சேர்ந்தனர். அப்போது பிள்ளையவர்கள்
வரவைச் சில நண்பர்கள் எதிர்கண்டு உபசரித்திருந்தனர். ஆங்கு திருப்பாதிரிப்பு
லியூரில் வசிக்கும் பிரமசமாஜத்தலைவரில் ஒருவர் பிள்ளையவர்களைச் சந்திக்கக் கட
வுளுபாசனை விஷயமாக இருவர்க்கும் சம்பாஷணை நடந்தது. அவர் பிரமமானது
ரூபமற்றதென்றும்; அர்ச்சாரூபமாய் ஆராதிக்கப்படாதென்றும், வேதத்தில் பிரமத்
தை மானசீகமாகவே ஆராதிக்கும்படி கட்டளையிடுகிறதென்றும், மற்று மனேக விட
யங்களையுங் கூறினர். அதனைச் செவியுற்ற பிள்ளையவர்கள் ஷெ பிரமசமாஜத்த
லைவரை நோக்கி, வேதத்தில் பிரமத்தை விராட் புருடனாகக் கூறுமிடத்தில் ரூபமு
ள்ளதென்றும், அர்ச்சை என்பதை வேதம் பிம்பமென்றே கூறுமென்றும், ஒருவஸ்
துவை நோக்காமல் மானசீகமாய் ஆராதிப்பது எவர்க்கும் எலாதென்றும், எங்கும் வி
யாபகமாகவுள்ள பிரமம் பிம்பத்தினையும் அதிஷ்டித்திருக்கிறபடியால் பிரமத்தினைப்
பிம்பத்தின்வழி யுபாசிப்பதற்குக் கூடுமென்றும், இன்னும் பல பிரபல நியாயங்களை
யெடுத்துக்கூறி மறுத்துரையாடிப் போக்கினர். அங்கிருந்து பின்னுஞ் சிதம்பரத்திற்
கெழுந்தருளி, ஆநந்தத்தாண்டவ தரிசனஞ்செய்து, தமது பிறப்பிடமாகிய மருதூரை
யடுத்த கருங்குழிக்கு வந்து, சிவநெறியடைந்த தமதிளைய சகோதரர் பரசுராமப்பிள்
ளைக்குச் சமாதிக்கிரியை முதலியன முடித்துச் சின்னாளங்கமர்ந்து சிவத்தியான சமாதி
வழியே நின்று, தண்ணீரால் விளக்கெரித்து அருள்வழிநின்று அமருநாளில், சென்
னையி லமரும் நண்பருட் சிலர்,

வெண்பா.

பொன்னம்பலமே லாகாயம் போவார்க்குப் பூமியுளா
ரென்னவே நாதாந்த மெய்தினரை—யென்னருகே
வாவென்றல் பாற்கடலில் வாழரியை மண்டூகங்
கூவுந் தகைமையதொக்கும்.

என்னும் ஒழுவிலொடுக்க நூலுடையார் கூறிய பாடலுக் கிணங்க, தாமிருக்
குமிடம்வந்து சென்னையம்பதிக் கெழுந்தருளும்படிவேண்ட, அது கேட்ட பிள்ளை
யவர்கள் "மெய்விளக்கே விளக்கல்லால் வேறுவிளக் கில்லை யென்றார் மேலோர்"
என்னும் பாடலை வரைந்து விடுத்து அகமுகவழியே தாம்பெற்ற அருணிலையுடை
மையை வெளியாக்கினர். அங்ஙனமிருந்து கூடலூர், மஞ்சக்குப்பமுதலிய தலங்கள்
தோறுஞ் சென்று ஆங்காங்கு வாசஞ்செய்து, தாமிருக்கும் ஸ்தானத்திற்கு முக்கியஸ்
தானமாகிய கருங்குழியென்னும் பதிக்குவந்து அமருநாளில், தேவிபட்டணம் கணக்
கிலவதானி என்னுமொருவர் தனக்குற்ற கலவிச்செருக்குடைமையால் சிதம்பரத்தி
லிருந்தபடி எழுதியனுப்பிய செய்யுளொன்றுக்குக் கருங்குழியிலிருந்தபடியே, திருவரு
ளால் அவர் மனம் பொருந்துங் கருத்துரையொன்று வரைந்து விட்டனர். அதைக்கண்ட
அவதானியார் உடனே கருங்குழி எல்லைக்குவந்து அவரடிபணிந்து அடிமையாகி,
எட்டுத்தினமாங்கிருந்து விடைபெற்றுப்போனபிறகு, சதுர்வேததாற்பரிய முணர்ந்து
கரைகண்ட பிராமணச் சந்நியாசமூர்த்தியொருவர் அக்கருங்குழிக்குவந்து அநுபவ
வேதார்த்தங்களை வினவ, அவருக்குத்தக்க விடைதந்து திருப்திசெய்துவிட்டு அமர்ந்
திருந்தார்.

நீரிலேநீருற்றநிறையிலேநிறையுற்றநிலையிலேநுண்மைதனிலே
நிகழ்விலேநிகழ்வுறநிகழ்விலேநிழலிலேநெகிழிலேதண்மைதனிலே
ஊரிலேயநீரினுப்பிலேயுப்பிலுறுமொண்சுவையிலேதிரையிலே
யுற்றநீாகீழிலேமேலிலேநடுவிலேயுற்றியலுறுத்துமொளியே
காரிலேயொருகோடிபொழியினுநதுணைபெறாககருணைமழைபொழிமேகமே
கனகசபைநடுநினறகடவுளேசிறசபைககண்ணோங்குமொருதெய்வமே
ஆரிலேபலமளிததாரிலேவளாகின்றசுகசொருபமானதருவே
சுததசிவசனமாககநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே.

என இங்ஙனந் திருவருளை வியந்து பிள்ளையவர்கள்பாடிய திருப்பாடல்களைக் கண்டாருங் கேட்டாரும ஆநநத பரவசமுறறுத திருவருளைப் பலவாறு புகழ்ந்து இஃது சொறசுவை பொருட்சுவை அலஙகாரம முதலியவமைதியுடன் இருப்பதன்றியும் காதுக்கினிமையையும் மனதிறகினபத்தையும் பரசிவபததியையும் தருதலால், இது திருவருளின் பிரேரக சம்பநததாலேயே பிள்ளையவர்கள் திருவாககினின்றும் உதயமாயது எனறு மனதிற றிடஙகொணடு, அப்பாவினைத் தஙகடஙகள ஆனமார்த்த பூஜாசமயஙகளிலும் மற்ற வமயஙகளிலும் நியமமுடன கேட்டுஞ் சிநதிததுந் தெளிநதும அதன்வழி நின்றும அனுபவிப்பாராயினா. இப் பெருஙகாரணததினால் கறறவாகளுககும மறறவாகளுக்கும் பிள்ளையவர்களிடத்துப் பெரிது மன்புணடாயிற்று.

## திருவருட்பா வெளியாயது.

இப்பால் அதனை அறிஞா பலரும் ஒதியுணரும்படி பிள்ளையவர்களிடத்தன்புள்ள இறுககம்-இரததினமுதலியாரும், செல்வராயமுதலியாரும, ஒட்டல்-வேலு முதலியாரும், திருமயிலை சி-சோமசுந்தரசெட்டியாரும் ஒருஙகுசோந்துவேண்டியவேண்டுகோளின்படி, தொழுவூா வேலாயுத முதலியார் அத் தோததிரப்பாக்களை ஐந்து திருமுறையாக வகுதது "திருவருட்பா" வென்னுந திருநாமஞ்சூட்டி வெளியிட்டனா. பிறகு "ஆறவது திருமுறை ஆரியனூர் தம்மருளானே" எனறு திருவருட்பா வரலாற்றிற் கூறிய பின்னா திருவருட்பிரகாசவள்ளலார் திருவாக்கினின்றும் வெளியான பாடலகளை யன்பாகள் வேணடுகோளினபடியே, திரிசிரபுரம - மகாவிதவான்-ஸ்ரீ-மீனாட்சிசுந்தரமபிள்ளையவாகள் மாணாக்கராய-சோடசாவதானம்-தி. சுசுப்பராய செட்டியாரவாகள "திருவருட்பா" ஆறுவது திருமுறையெனப் பெயாதந்து அச்சிட்டு வெளியிட்டனா.

இங்ஙனம் முதனாறகுதிருமுறைகளை வெளியிட்டபோது, அக்காலத்தில் சென்னையில் வந்திருந்த யாழ்ப்பாணம் ஆறுமுகநாவலர் அருட்பா வென்பது கடவுளருளைப் பெற்றுப் பாடிய பாவென்றும், அவரருளைப் பெறப் பாடிய பாவெனறும் இரண்டுவகையாமென்றும், அவ்விரணடு வகையிலும் சேராதவிப்பாட்டு மருட்பாட்டே யாமென்றும், திருவருட்பா வெனறழைததற்குரியது மூவரோதிய தமிழே யாமென்றும், மற்றையவாகாவெனறும் கூறியதைச் செவிமடுதத ஒருவர் திருவருட்பா தூஷணபரிகாரம் எனப் பெயரிட்ட சிறுபுத்தகம் வெளியிட்டனா. அதனைக கண்ட யாழ்ப்பாணம் ஆறுமுகநாவலா யுள்ளிட்டார் போலியருட்பாமறுப்பு என்னுமொரு சிறுபுததகம் வெளியிட்டனர். அதனைக்கண்ட தொழுவூர் வேலாயுதமுதலியார்

ருளிட்டார் சேர்ந்து குதர்ககாரணயநாசமகாபரசுவென்னும் போலியருட்பாமறுப் பின் கண்டனத்தை வரைந்து வெளியிட்டனர்.

இங்ஙனம் வாதபுத்தகங்கள் மலிந்து வழக்கு மேலிட்டகாலத்து, பிள்ளையவர்கள் கூறியதாவது, அருளைப் பகுக்கும் ஆன்மா என்றதனால் ஆன்மசேட்டை ஆன்மாக்களுக்கு அநாதியேயுள்ளது. ஆதலின் இவ்வளவும் பொய்த்துற விளங்குவதன்றி வேறில்லையென்றும், தமையுணர்ந்தோர்பாட்டெல்லாம் அருட்பாட்டே என்றும், மற்றையர் பாட்டெல்லாம் மருட்பாட்டே என்றும், இவ்வுண்மையறியாதார் மூவரோதிய தமிழே அருட்பாவெனக் கூறித்திரிவார் என்றும், அங்ஙனங் கூறுவதற்கு ஆன்றோர்கள் பெயரிட்டு வழங்கிவரும் நூற்பிரமாணங்களுள்ளதோ என்றும், நம்பியாண்டார் நம்பி எழுமுறையாக வகுத்தவர் அருட்பாவென்று பெயரிட்டது உண்டோ என்றும், காசிதுண்டி விநாயகர் அருட்பாவென இருக்கினும் அது வண்டுணுமலர்போலுமான சிறு அற்புதங்கொண்டு வழங்கும் பெயரன்றி வேறுண்டோ? என்றும், சமயாசாரிகள் அருளிச்செய்தனவற்றைத் திருநெறித்தமிழ் திருக்கடைக் காப்பு தேவாரம் திருப்பாட்டு தமிழ்வேதம் திருவாசகம் என்றே அழைத்துப் பூசித்தல் வேண்டுமென்றும், ஒன்பது நாயன்மார் அருளிச்செய்தனவற்றைத் திருவிசைப்பா திருப்பல்லாண்டு என்றே அழைத்துப் பூசித்தல் வேண்டுமென்றும், அருண்மொழித்தேவர் அருளியதைப் பெரியபுராணம் திருத்தொண்டர்புராணம் என்றே அழைத்து ஓதல்வேண்டுமென்றும், இங்ஙனங் கூறுவதற்கு அளவற்ற மேற்கோளுளவென்றும் தமது மாணாக்கர்களுக்கு எடுத்துக்காட்டி அவ்வழக்குவழியிற் றூங்தோயாது அருள்வழியிலிருந்தனர், இங்ஙனமமருநாளில், கூடலூர் - தெய்வநாயகம்பிள்ளை யென்பவர் பலமுறையும் வருந்தி வேண்டிய வேண்டுகோட்கிணங்கி அருண்மொழித்தேவரென்னுஞ் சேக்கிழாருக்குக் கடவுளேடுத்துரைத்த ஆதிமொழியாகும், "உலகெலா" மெனுந் திருவாக்கினுக்கு விருத்தியுரை வரைந்துகொடுத்தனர் அன்றியும், "தும்ப கோஷமென்னும்" இயலற்றூலைப் பதினொன்பது படலமாகக் கூறத் திருவுளங்கொண்டு, துந்தரிசனைப்படலம் முயற்சிப்படலமெனனு மிருபடலம் பூர்த்திசெய்து மற்றைப்படலங்கட்குப் பெயர்மாத்திரம் வகுத்துக்காட்டிவைத்தருளினர். இஃதவர் திருவருட் சம்மதம்போலும்.

இங்ஙனம் நிகழுங்காலத்தில் சென்னைக்குத் தென்புறத்திலுள்ளதாயும் உமையம்மை மயிலுருக்கொண்டு சிவபெருமானை அர்ச்சித்ததாயும், திருஞானசம்பந்தசுவாமிகள் எலும்பைப் பெண்ணாக்கிய அற்புதம் விளைந்ததாயும், வாயிலாரநாயனாரென்னும் அடியவர் கருவிகரணாதிகளையொடுக்கி அகமுகத்தே சிவதரிசனஞ் செய்து அமர்ந்ததாயும், தெய்வத்தமிழ்த் திருவள்ளுவர் திருவவதாரம் செய்தமாந்திருந்ததாயும் விளங்கும் திருமயிலையெனனும் திவ்யக்ஷேத்திரத்தில் தமது மூத்தசகோதரர் சபாபதிபிள்ளை யென்பவர் சிவநெறியடைந்தனர். இச்செய்தியைப் பிறருணர்த்தற்கு முன்னமே பிள்ளையவர்கள் திருவருளால் தாமேயுணர்ந்து அவ் விஷயத்தில் நுழையாது தம்மனுபூதிநிலையிலேயே யிருந்தனர்.

## ஆலயப்பிரதிஷ்டைசெய்ய அஸ்திவாரமிட்டது.

அப்பால் அதிதீவர பக்குவநிலையாற் றிருவருள் அறிவிக்க அறிந்த வநுபூதி நிலையுடைய மஹாநுபாவராகிய பிள்ளையவர்கள், சிதம்பரம் நான்கு கோபுரமு

மொருங்கே தோன்று மெல்லையாகிய, வடலூர் அல்லது பார்வதிபுரம் என்று வழங்கும் பதியில் தமது சுரு-வது வயதாகிய பிரபவஞு வைகாசிமீ கக-உ குருவாரத்தன்று சனமார்க்கவிளக்கம முதற்பிரிவான சீவகாருண்யவொழுக்கத்தை நூன்முகமாக விளக்கிச், சிதம்பரதீட்சித ரொருவரைக்கொண்டு பூசைசெயவித்தச சத்தியதருமசாலை,' சத்தியஞானசபை, சமரசவேதபாடசாலை, சன்மார்க்கசங்கத திருக்கோயில, நிருத்தசித்திவிநாயகராலயம முதலியவைகளை அமைத்தருளவேண்டி அப்பார்வதிபுரத்தில் தருமசாலையெனும பெயரிட்டு ஓரிடம் வகுத்து, அச்சாலையில் தாமெழுந்தருளியிருந்து, சாதிசமயகொள்கை தவறாதபடி பதினாயிரம்பேர்கட்கு மூன்றுதினம் அன்னமிட்டுத் திருப்திசெயதனர்.

இங்ஙனம நிகழ்ந்த பிறகு, பிரமோதூத வருடத்தில் வடலூர் அல்லது பார்வதிபுரம் என்னும எல்லையை யடுத்த கருங்குழியருகில மேட்டுக்குப்பமெனுஞ் சிறறூரில் சித்திவளாகத திருமாளிகையில சிவத்தியானத்துட னெழுந்தருளி யிருக்கையில சிவஞானயோக முதிர்ச்சியாற றோன்றிய சோதிவடிவான அருட்பெருஞ்சோதியைத் தரிசித்து அவ்வற்புதவருணிலையு முடையராய "அருட்பெருஞ்சோதி"யெனனுமகவுலொன்று வரைந்துவைத்தனர்.

இங்ஙனமாய நிலையினையடைந்தெழுந்தருளியிருக்கும பிள்ளையவர்களைக் கண்டு தரிசிக்கும எண்ணமுடைய பலகுழாங்கள அங்கு நெருங்கின அவர்களைநோக்கிப் பிள்ளையவர்கள் எலலாம வலல எங்குமான சாவசாட்சுணைய நவவடிவிறந்த சோதியாகி எச்சமயங்கட்கும் துணையாகித் தூரமாகிப் பொதுவாகிச சிறபபாகித தத்துவாதீதமாகி விளங்கும் முதற்கடவுளைக் காண விருப்புடையீராயின், நீவிர இதுதருணந தொடங்கிப் புலை கொலை கள் காமம் பொய்யாதிய நீத்துச் சீவகாருண்யம் உற்று ஈசுர பத்திமானகளாய் வாழும வாழ்க்கையே வாழ்க்கையாயக கடைப்பிடித்து வாழ்மினென்று கூறிப் பிறகு,

### விருத்தம்.

மருவாணைப்பெண்ணாக்கியொருகணத்திற்கணவிழித்துவயங்குமப்பெண்
ணுருவாணையுருவாக்கியிறந்தவரையெழுப்புகினறவுறுவனேனுங
கருவாணையுறவிங்காதயிருடமபைக்கடிந்துணணுங்கருத்தனேலெங்
குருவாணையெமதுசிவக்கொழுந்தாணைஞானியெனக்கூறொணாதே.

என்னும் பாடலை எடுத்தோதி நீவிர ஙனனடை தவறாது இருப்பீராயின நமக்குப் பாசவயிராக்கியம பிரமக்கியானம இரண்டும் உதயமாகுந திணமை, நமபெருமான் றிருவருளெந்நாட் கூடும் அந்நாட் கூடுமென றுரைத்தருளினர்.

பின்பு அக்குழாங்கட்குப போதிக்குந்தோறும் "கொல்லாவிரதங் குவலயமெல்லாம் ஓங்க - வெல்லார்க்குஞ் சொல்லுவதென னிச்சைபராபரமே" என்னுந தாயுமானவர் திருவாக்கை நிலைநிறுத்தும் எண்ணமுடையவராய்ப், புலாலுணணுவது தகாதசெய்கையென்றும், புலாலுண்போன் இலலத்திற் புசிப்போன் புலையனே ஆவானெனறும், கொலைசெய்வோன் வீட்டிற் புசித்தவன கொலைஞனே ஆவானென்றும் இன்னுமனேக அருள்வாக்கியங்களைச் சீவகாருணயம் விளங்கும்படி பலமுறை

யும் வற்புறுத்திக் கூறியும; புலைத்தொழிலாற் சீவிப்பார்கட்கும் பிழைக்கும் வேறு நெறிகாட்டிக் கருணைவளாக்குந்தாயாகி, அம்மேட்டுக்குப்பத்தெல்லை விட்டு நீங்காது சதாநிஷ்டாபரணமுடையராய நித்யாநந்த சுகியாகி நின்மல தேகியாகி நித்திரையாதி களொழிந்து நின்மலவடிவாகி, சன்மார்க்க ஞானப்பொருள் ஒன்றாக விளங்குந் தன்மை புனமார்க்க நெறியிலுங் காணாது, ஞான சபைக்குட் காணுந் திண்மையி னுண்மையாவது, அவ்வரிய ஞானமே சபையாகவும், அம்மெய்ஞ்ஞான உள்ளொளி யே தெய்வமாகி அவ்வொளியினசைவே நடனமாகி விளங்கலால் நடராஜமணி யெனவும், அவ்வசைவு நீங்கினவிடமே ஆநந்தாதீதம், அதுவே சிதம்பரமென வுட் கொண்ட வநுபவாதீத மூர்த்தியாதலின், அவ்வநுபவத்தை வெளிமுகமாக்கும் பொ ருட்டு எச்சமயத்தவர்களும் வந்திறைஞ்சா நிற்கும் நிலையுடையது உத்தரஞான சிதம் பரமெனத் துணிந்தவராகி, வெளிமுகமான அடிமைகட்குத் தெரிவிக்கத் திருவுளங் கொண்டவராயினர்.

## ஞானசபையொன்று பிரதிஷ்டைசெய்தது.

வள்ளலார் மேற்குறித்த வடலூர் அல்லது பார்வதிபுரத்தில் நாற்பதுகாணி யளவுள்ள விடத்திற்கு உத்தரஞான சிதம்பரமெனத் திருவருளால் திருநாமஞ்சூட்டி அந்தச் சாலைவெளியில் பிரசோற்பத்தி௵ ஆனி௴ தொடங்கித் தைமாசத்துக்குள் ளாக அட்டகோணமாகத் தாமரைபுட்பம்போன்ற திவ்ய ஆகிருதியில் ஓர் சபையைக் கட்டுதற்குத் தற்சூழ்ந்து வாழ்பவர்களை நோக்கிக் கூறியதாவது, எல்லாம்வல்ல கடவுளால் முடிவுபெறும். அந்நாள் நம்பெருமான் எல்லாம்வல்ல சித்தனாகி இறந் தவர்களை யெல்லாம் எழுப்பித்தர வல்லவனாகிப் புலைகொலை செய்பவர்களையெல்லாந் தணடிப்பவனாகிப் பின்னுங் கருணைசெய்பவனாகி விளங்குங் காலம் சமீபமாகும். "ஏதுமறியாச் சிறிய பயல்களினுஞ் சிறியேனிப் பெரியவார்த்தைதனக் கியானுரேன் னிறைவ, னேதுகநீ யென்றபடி யோதுகின்றேன் மனனே யுள்ளபடி சத்தியமீ' துணர்ந்திடுக" என்று கூறக்கேட்ட மக்கள் குருபாதம் வணங்கிக் கூறியதாவது, இச்சபையை அடிமைகள் ஒருவாறு முடிக்கும்படி கட்டளையாகவேண்டுமென்று பலமுறையும் வருந்திக்கேட்க, முற்றும் முடிவுபெறுவதருமையே ஆயினும் முடித் துப்பாருங்கள் என்று கட்டளைசெய்து, தாம் அச்சபைமுகம் பாராமலே அம்மேட்டுக் குப்பத்தில் நடுநிலையான குருமுக நிலை தவறாமலே நிஷ்டாநுபூதியுடையராயிருந்து கொண்டு சகஜாநுபவ சமரசநிலையிலேயெழுந்தருளி, அப்போதைக்கப்போது தமக் குள் ஞானசிங்காதனத்து ஞானசபையமையும் அகமுகாநுபவ வருணிலையமைதிக்குத் தக்கபடியிருந்து அருமை மொழிகளை அருளிச்செய்துகொண்டு முடிந்த முடிவில் விளங்கும் ஷடாந்த சமரச சுத்தசன்மார்க்க ஞானசபைவிளக்கத்தை அடுத்தவர்கள் பலரும், பொன் பல்லாயிரங்கொண்டு அமைத்த வெளிமுகச் சபைக்கு அப்பெய ரிட்டு வழங்கச்செய்து, அச்சபைக்கு ஏழு திரையிட்டு ஞானபூமியேழும் மறைத்த எழுவகையான ஞான ஏக சிற்சத்திவிளக்க வேறுபாட்டுண்மையை விளக்கினர். அங்ஙனம் அது கிரியை முடிந்த ஞானமாதலின் ஞானபூசையே முக்யமென்பது விளங்க, கற்பூரசோதி நியாயாநுபவத்திற் கிணக்கமான கற்பூரமொன்றே ஆராதிக் கும்படி வைத்து, அம்மன்றத்துள் அடிநிலை, ஆதாரவெளி, நடுநிலை, இதயாம்பர வெளி, முடிநிலைச்சிற்சபாரகசியாங்கிதவெளி, உபயாம்பரமென்னும் செம்பொன் னம்பலம் ஆக ஏழும், சகளோபகள நிஷ்கள ஆராதன ஸ்தானங்களும், அவரது விஞ்

ஷை வேறு.

ஒழியாமயலகொணடுழல்வேனவமே
யழியாவகையேயருளவாயருளவாய்
மொழியாமறையினமுதலேநுதலேய்
விழியாயவிழியாயவினைதூளபடவே (௪௨)

ஆசிரியத்தாழிசை.

உலகெலாநிறைநதோஙகுபேரருளுருவமாகியெவவுயிருமுநதிட
விலகுவானொளியாமணிமனறிடையெனறுநினறே
யலகிலானநதநாடகஞ்செயுமமபொறசேவடிககபயமெனனையுந
திலகநீவிழைவாயநடராசசிகாமணியே. (௪௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருததம.

எனனிருகண்காணுமதுபெருநதவமெப்புவநதில்யாதானசெயவா
முனனிருவாகாணுமலலைநதனராலினுஙகாணமுயலாநினறா
நனனிருபர்தொழுதேததுமமபலததேயோரிடததோாநாளாதிததா
பனனிருவரொளிமாற்றுமபரவொளியைப்பாாததுயாநதீாபணபினீரோ. (௪௪)

சேணுடாமுநிவருயர்திசைமுகன்மாலுருத்திரனததிரளோாசறறுங
காணுததகாடசியைநானகணடேனசிறறமபலததினகணணேபனனு
ளாணுகபபிறநதடியேனருநதவமெனபுரிநதேனோவறிகிலேனமுன்
பேணுதபிறப்பெலலாமபிறபபலவிபபிறப்பேயெனபிறப்பாமநதோ (௪௫)

எழுசீாககழிநெடிலடியாசிரியவிருத்தம.

இருளறவோங்கும்பொதுவிலேநடஞ்செயெங்குருநாதனெம்பெருமா
னருளெனும்வடிவங்காட்டியொண்முகததேயழகுறும்புனனகைகாட்டித்
தெருளுறவருமைததிருககையாறறடவிததிருமணிவாய்மலாநதருகிற்
பொருளுறவிருநதோாவாககளிததெனனுடபுகுந்தனன்புதுமையீதநதோ. (௪௬)

ஷை வேறு.

பொன்னென்கோமணியென்கோபுனிதவொளிததிரளெனகோபொற்பினோங்கு
மின்னெனகோவிளககென்கோவிரிசுடர்ககோசுடரொனகோவினையனேன்யா
னென்னெனகோவென்னெனகோவெமபெருமான்றிருமேனியிருநதவணணை
முன்னென்கோதறுதவததாற்கண்டுகளிததிடப்பெறறேன்முககணமூாத்தி (௪௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

வஞ்சகாகெல்லாமுதலாயறககடையாய்மறதொழிலேவலிகருமபாவி
நெஞசகததுன்மார்ககனைமாபாதகனைககொடியேனைநீசனேனை
யஞ்சலெனககருணைபுரிநதாண்டுகொண்டவருட்கடலையமுதைததெய்வக்
கஞசமலரவனெடுமாற்கரும்பொருளைப்பொதுவினில்யானகணடுய்நதேனே. (௪௮)

கட்டளைககலித்துறை.

நாதாபொன்னம்பலத்தேயறிவாநநதநாடகஞ்செய்
பாதாதுரும்பினுமபறறுதவென்னைப்பணிகொண்டெல்லா
மோதாதுணரவுணர்ததியுள்ளேநின்றளவுசொன்ன
நீதாநினைமறநதெனனினைககேனிநதநீணிலத்தே. (௪௯)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

கநதநாண்மலர்கழலிணையுளததுறககருதுகின்றவர்க்கெல்லாம்
பந்தநாணவலையவிழ்ததருள்சிதம்பரைபரம்பரையுடனுடு
மநதநாணமகிழ்வடைபவருளர்சிலரவரெவரெனிலிங்கே
யிநதநாண்முறைதிறம்பலராயுயிாகசிதஞ்செயுமவரனறே. (ரு०)

திருச்சிற்றம்பலம்.

# அறநிலைவிளக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

மருவாணைபபெண்ணுககியொருகணததிற்கண்விழிததுவயஙகுமப்பெண்
ணுருவாணையுருவாககியிறந்தவரையெழுப்புகின்றவுறுவனேனுங
கருவாணையுறவிரஙகாதுயிருடம்பைககடிந்துண்ணுஙகருததனேலெங்
குருவாணையெமதுசிவகசொழுந்தாணைஞானியெனககூறெறுணுதே. (க)

திருச்சிற்றம்பலம்.

# அருணிலைவிளக்கம்.

அறுசீாக்கழிநெடிலடியாசிரியவிருததம.

திருச்சிற்றம்பலம்.

மெய்விளககேவிளககல்லால்வேறுவிளக்கிலலையென்றார்மேலோாநானும்
பொய்விளககேவிளககெனவுட்பொங்கிவழிகினறேனோர்புதுமையன்றே
செய்விளககும்புகழுடையசென்னநகர்நண்பர்களேசெப்பககேளீா
நெய்விளககேபோனறொருதணணீர்விளக்குமெரிநததுசநநிதியின்முனனே. (க)

திருச்சிற்றமபலம.

# திருமருந்தருணிலை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருததம.

திருச்சிற்றம்பலம்.

பனகவணைத்திருநெடுமாலயன்போற்றப்புலவரொலாம்பரவவோங்குங்
கனகமணியம்பலததேபெரியமருந்தொன்றிருகககண்டேன்கண்டே
னனகநடநததுசசிதாநந்தவடிவதுபோருள்வாயநூள்ள
தெனகுமமர்ந்திருப்பதெல்லாம்வல்லதுபேர்நடராசனென்பதம்மா (க)

இப்பதிகத்துள் - கலித்துறைகளும விரவிநிற்கவும, விருததமெனககுறியிட்டா ளப்பட்டமைக்கீண்டு விதியெழுதப்புகின் மிகப்பெருகுமாதலின விடுக்கப்பட்டது. சைவம்பன்னிரண்டு திருமுறைகளுள்-ஆளுடையவரசாகிய-அப்பர்சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருமுறையில் "குலம்பலம்பாவரும்" என்றற்றொடககத்திலக்கியங்களாற் கண்டுகொள்க.

திருநெடுமாலயன்றேடத் தரியநடுவொளித்ததென்றதெளிந்தோர்சொல்லு
மொருகருணைமருந்து திருவம்பலத்தேயிருந்திடக்கண்டுவந்தேனந்தோ
வருவுருவங்கடந்தது பேரானந்தவடிவது நல்லருள்வாய்ந்துள்ள
திருமையுநன்களிப்பதெல்லாம்வல்லது போநடராசனென்பதம்மா.. (௦)

திருச்சிற்றம்பலம்

# திருவருள்விலாசம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

**திருச்சிற்றம்பலம்.**

ஆண்டவனீயாகிலுனக்கடியனுநானுகி லருளுடையாயினறிரவி லருளிறையாய வந்து, நீண்டவனேமுதலியருந்தீண்டரிதாமபொருளினனிலைகாட்டியடிமுடியினெறி முழுதுங்காட்டி, வீண்டவனேகாலையினீவிழித்தவுடனெழுந்துவிதிமுடிந்துபுரிதி யிதுவிளங்குமெனப்புகலவாய, தாண்டவனேயருட்பொதுவிற்றனிமுதலேகருணைந் தடங்கடலேநெடுந்தகையேசங்கரனேசிவனே (க)

திருநெறிமெய்ந்தமிழ்மறையாந்திருக்கடைக்காப்பதனுற்றிருவுளங்காட்டியநாளி றநெறிநிலனிச்சிறியேன, பெருநெறியென்னுளத்திருந்துகாட்டியநாளறிந்தேன பிழைபடாதெய்வமறையிதுவெனபபின்புணர்ந்தே, னொருநெறியிலெனதுகரத்து வந்தளித்தநாளிலுணராதவுளவையெல்லாமொருங்குணர்ந்துதெளிந்தேன, றொருணெறி நர்சருளுமறைச்சிலம்பணிந்தபதத்தாள்சிவகாமவல்லிமகிழ்திருநடத்தெள்ளமுதே (உ)

திருச்சிற்றம்பலம.

# சிவசிதம்பரசங்கீர்த்தனம்.

கட்டளைக்கலிப்பா.

**திருச்சிற்றம்பலம்.**

உலகமுஞ்சராசரமுநின்றுநின்றுலவுகின்றபேருலகமென்பதுன
கலகமின்றியெங்கணுநிறைந்தசிற்சகனமவிளங்குசிற்சகனமென்பது
மிலகவொன்றிரண்டெனலகன்றதோரிணையிலின்பமாமிதயமென்பதுந
திலகமென்றநங்குருசிதம்பரஞ்சிவசிதம்பரஞ்சிவசிதம்பரம் (க)

வரமுறுஞ்சுதந்தரசுகந்தருமனமடங்குசிற்சகந்நடந்தரு
முரமுறும்பதம்பெறவழங்குபேரொளிநடந்தரும்வெளிவிடந்தரும
பரமுறுங்குணங்குறிகடந்தசிற்பரமமாகியேபரவுமாமறைச
சிரமுறும்பரம்பரசிதம்பரஞ்சிவசிதம்பரஞ்சிவசிதம்பரம. (௨)

நித்தியம்பராபரநிராதரநிர்க்குணஞ்சதாநிலயநிட்களஞ்
சத்தியங்கநாகநமிகுந்ததோர்தற்பரஞ்சிவஞ்சமரசத்துவம்
வித்தியஞ்சுகோதயநிகேதநமவிமலமெனறுநால்வேதமுந்தொழுஞ
சித்தியங்குசிற்கநசிதம்பரஞ்சிவசிதம்பரஞ்சிவசிதம்பரம். (௩)

அருளளித்ததுமெய்யன்பர்தம்மையுள்ளங்கைநெல்லிபோலாக்குகின்றதும்
பொருளளித்ததுஞானமறையினந்தமேபுகலுகின்றதோர்புகலளிப்பதும்
வெருளளித்திடாவிமலஞானவான்வெளியிலேவெளிவிரவிநிற்பதாந்
தெருளளிப்பதும்மிருள்கெடுப்பதுஞ்சிவசிதம்பரஞ்சிவசிதம்பரம் (௯)

பெத்தமுஞ்சதாமுத்தியும்பெரும்பேதமாயதோர்போதவாதமுஞ்
சுத்தமுந்தெருவித்தமுந்தருஞ்சொரூபவின்பமேதூயகுமவாழ்க்கையு
நித்தமுந்தெரிந்துற்றயோகாந்தநிமலமாகிமெய்ந்நிறைவுகொண்டசிற
சித்தமுஞ்செலாப்பரமராசியஞ்சிவசிதம்பரஞ்சிவசிதம்பரம். (௰)

திருச்சிற்றம்பலம்

# அம்மைதிருப்பதிகம்.

கோயில்.

இரட்டைக்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உலகினுயிர்வகையுவகையுறவினியவருளமுதமுதவுமானந்தசிவையே
யுவமைசொலவரியவொருபெரியசிவநெறிதனையுணர்த்துபேரின்பநிதியே
யிலகுபரவபரநிலையிசையுமவரவாபருவமியலுறவுளங்கொள்பவையே
யிருமைநெறியொருமையுறவருமைபெறுபெருமைதனையீந்தெனையளித்தவறிவே
கலகமுறுசகசமலவிருளகலவெளியானகாட்சியேகருணைநிறைவே
கடகரடவிமலகயமுகவமுதுமறுமுகக்கனவமுதுமுதவுகடலே
யலகில்வளநிறையுமொருதில்லையம்பதிமேவுமணவாளமகிழுமணியே
யகிலாண்டமுஞ்சராசரமுமீன்றருள்பரசிவானந்தவல்லியுமையே (க)

கற்பவையெலாங்கற்றுணர்பவையெலாமனக்கரிசறவுணர்ந்துகேட்குங்
காண்பவையெலாங்கண்டுசெய்பவையெலாஞ்செய்துகருநெறியகன்றபெரியோர்
பொற்பவையெலாஞ்சென்றுபுகல்பவையெலாங்கொண்டுபுரிபவையெலாம்புரிந்து
புகழவையெலாம்புகழ்ந்துறுமவையெலாமுறுமபோதவையெலாமருளுவாய
நிற்பவையெலாநிற்பவசைபவையெலாமசையநிறைவவையெலாஞ்செயநிலையென
நினைபவையெலாநெகிழநெறியவையெலாமோங்குநித்தியானந்தவடிவே
யற்புடையவடியர்புகழ்தில்லையம்பதிமருவுமணவாளமகிழுமணியே
யகிலாண்டமுஞ்சராசரமுமீன்றருள்பரசிவானந்தவல்லியுமையே (உ)

இககணமிருந்தவிம்மெய்யென்றபொய்க்கூடாயினிவருகணப்போதிலே
யிடியாதிருக்குமோவிடியுமோவென்செய்கோமெனசெயகோமிடியுமெனிலயாந
தெக்கணாடக்கவருமக்கணம்பொல்லாததீக்கணமிருப்பதெனறே
சிந்தைநைந்தயராதவண்ணநல்லருடந்ததிகழ்பரமசிவசத்தியே
யெக்கணமுமேத்துமொருமுக்கணிபரம்பரையிமாசலகுமாரிவிமலை
யிறைவிபைரவியமலையெனமறைகளேத்திடவிருந்தருடருந்தேவியே
யக்கணுதலெம்பிரான்றில்லையம்பதிமருவுமணவாளமகிழுமணியே
யகிலாண்டமுஞ்சராசரமுமீன்றருள்பரசிவானந்தவல்லியுமையே. (௩)

பொய்யாதமொழியுமயல்செய்யாதசெயலுமவீண்போகாதநாளும்விடயம்
புரியாதமன்முமுட்பிரியாதசாந்தமும்புந்திதளராதநிலையு
மெய்யாதவாழ்வும்வேறெண்ணுதநிறைவுநினையென்றுமறவாதநெறியு
மிறவாததகவுமேற்பிறவாதகதியுமிவ்வேழையேற்கருளசெய்கண்டாய
கொய்யாதகுவியாதகுமையாதுமணமவீசுகோமளதெய்வமலரோ
கோவாதமுத்தமேகுறையாதமதியமேகோடாதமணிவிளக்கே
யையயாநநங்கொண்டதில்லையமபதிமருவுமண்ணலார்மகிழுமணியே
யகிலாண்டமுஞ்சராசரமுமீன்றருள்பரசிவானந்தவல்லியுமையே (௪)

ப்வமானவெழுகடல்கடந்துமேற்கதியானபதிநிலையணைந்துவாழப்
பகலானசகலமுடனிரவானகேவலபபகையுநதடாதபடியோர
தவமானகலனினருணமீகாமனலலதுதமியேனடத்தவருமோ
தானுநடக்குமோவென்செய்கேனின்றிருச்சரணமேசரணமருளவா
யுவமானமறறபரசிவமானசுத்தவெளியுறவானமுத்தருறவே
யுருவானவருவானவொருவானஞானமேயுயிரானவொளியினுணாவே
யமானந்கியருடில்லையமபதிமருவுமணணலாமகிழுமணியே
யகிலாண்டமுஞ்சராசரமுமீன்றருளபரசிவானநதவல்லியுமையே (௫)

சூரிட்டநடையிலென்போரிட்டமனதைநான்சொல்லிட்டமுடனணைத்துத
துன்றிட்டமோநமெனுநன்றிட்டவமுதுண்டுசும்மாவிருத்தியென்றுற
காரிட்டிதற்குமுன்யாரிட்டசாபமோகண்டிலேனம்மம்மவோர
கணமேனுநில்லாதுபொல்லாதுபுவியிறகறஙகெனச்சுழல்கின்றதே
தாரிட்டநீயருட்சீரிட்டிடாயெனிறருழ்பிறவிதனணிலதுதான
றன்னைவீழ்த்துவதன்றியென்னையும்வீழத்துமிததமியனேனென்செய்குவே
னுறிட்டசடையாளாதில்லையமபதிமருவுமண்ணலார்மகிழுமணியே
யகிலாண்டமுஞ்சராசரமுமீனறருள்பரசிவானநதவலலியுமையே. (௬)

மாயையெனுமிரவிலென்மனையகத்தேவிடயவாதனையெனுங்கள்வாதாம
வநதுமனவடிமையையெழுப்பியவனைத்தமதுவசமாகவுளவுகண்டு
மேயமதியெனுமொருவிளக்கினையவித்தெனதுமெய்யாங்கலசசாளிகையெலாம
வேறறவுடைத்துள்ளபொருளெலாஙகொளளைகொளமிகநடுக்குறறுநினையே
நேயமுறவோவாதுகூவுகினறேனசறறுநின்செவிக்கேறவிலையோ
நீதியிலையோதருமநெறியுமிலையோவருளினிறைவுமிலையோவெனசெய்கே
னுபமறைமுடிநின்றதில்லையம்பதிமருவுமண்ணலார்மகிழுமணியே
யகிலாண்டமுஞசராசரமுமீனறருள்பரசிவானநதவல்லியுமையே. (௭)

வெவவினைக்கிடானகாயமிதுமாயமெனவேதமுதலாகமமெலா
மிகுபறையறைநதுமிதுவெயினமஞ்சணிறமெனும்விவேகாசொறகேட்டறிந்துங
கவவைபெறுகடலுலகில்வைரமலையொத்தவர்கணத்திடையிறததல்பலகாற்
கணணுறககண்டுமிபபுலையுடலினமாநமோர்கடுவளவுமவிடுவதறியே
னெவ்வமுறுசிறியனேனேழைமதியென்னமதியின்னமதியென்றுணாகிலே
னிநதமதிகொண்டுநானெந்தவகையழியாதவின்பநிலைகண்டுமகிழ்வே
னவவியமகற்றியருடில்லையம்பதிமருவுமண்ணலார்மகிழுமணியே
யகிலாண்டமுஞசராசரமுமீன்றருள்பரசிவானந்தவல்லியுமையே (௮)

ஒளிமருவுமுனது திருவருளனுததுணையேனுமுற்றிடிற்சிறு துரும்பு
முலகமபடைததனமுதனமுததொழிலியற்றுமெனவுயாமறைகளோரநநதந்
தெளிவுறமுழக்கவதுகேட்டுநினதிருவடித தியானமில்லாமலவமே
சிறுதெயவநெறிசெல்லுமாநிடபபேய்கள்பாற்சேராமையெறகருளுவாய
களிமருவுமிமயவரையரையனமகளெனவருஙகருணை தருகலபமயிலே
கருதுமடியவரிதயகமலமலாமிசையருடகலைகிளரவளரனனமே
யளிநறைகொளிதழிவனை தில்லையமபதிமருவுமண்ணலாமகிழுமணியே
யகிலாண்டமுஞசராசரமுமீன்றருள்பரசிவானநதவல்லியுமையே. (௯)

நீறணிநதொளிரககமணிதரிததுயர்சைவநெறிநின்றுனக்குரியவோா
நிமலமுறுமைநதெழுததுணணிலையுறகொணடுநினனடிப்பூசைசெயது
வீறணிநதென்றுமொருதனமைபெறுசிவஞானவிததகர்பரம்பரவுமோா
மெயசசெலவவாழ்ககையில்விருப்பமுடையேனிதுவிளைநதருளவேணடுமமுதே
பேறணிநதயனமாலுமிநதிரனுமறிவரியபெருமையையணிநதவமுதே
பிரசமலாமகளகலைசொனமகளவிசயமகணமுதறபெணகள்சிாமேவுமணியே
யாறணிநதிடுசடையாதில்லையமபதிமருவுமணணலாமகிழுமணியே
யகிலாணடமுஞசராசரமுமீனறருளபரசிவானநதவலலியுமையே (௰)

திருசசிறறமபலம.

## கலைமகளார் திருப்பதிகம்.

அறுசீாககழிநெடிலடியாசிரியவிருததம.

திருச்சிற்றம்பலம்.

தவளமலர்ககமலமிசைவீற்றிருககுமமனையைசசாநதமபூத்த
குவளைமலாககணணளைப்பெணணளுமபெணணமுதைககோதிலாத
பவளவிதழ்ப்பசுஙகொடியைநானமுகனாநாவோஙகுமபாவைதனனைக
கவளமதமயககொமபின்முலைபாளைககலைமாதைககருதுவோமே (௧)

சஙகமவளாநதிடவளாநததமிழ்ககொடியைசசரசசுவதிதனனையனபா
நுங்கமுறககலைபயிற்றியுணாவளிககுஙகலைஞாநதோகைதனனைத
திஙகளுதற்றிருவையருட்குருவைமலரோஙகியபெணடெயவநதனனைத
தஙகமலைமுலைபாளைககலைபாளைததொழுதுபுகழசாறறுகிறபாம (௨)

கலைபயினறவுளததினிககுஙகரும்பினைமுககனியையருட்கடலையோஙகு
நிலைபயின்றமுனிவாருநதொழுதேததநான்முகனாநீணடநாவிற்
றலைபயின்றமலறபயின்றுமூவுலகுஙகாககினறதாயைவாகைச
சிலைபயின்றநுதலாளைககலைவாணியம்மையைநாஞசிநதிப்போமே (௩)

திருசசிறறமபலம

# ஆநந்தக்களிப்பு.

திருச்சிற்றம்பலம்.

நல்லமருநதிமமருநது - சுக - நலகுமவைததியநாதமருநது - நல்ல.

அருளவடிவானமருநது - நமமுள் - அறபுதமாகவமாநதமருநது
இருளறவோஙகுமருநது - அனபாக - கினபுருவாகவிருநதமருநது நலல. (க)

சஞசலநீககுமருநது - எங்கு - தானேதானாகிநதழைககுமருநது
அஞசலெனறருளுமருநது - சசசி - தாநநதமாகவமாநதமருநது. நலல (உ)

விததகமானமருநது - சதுா - வேதமுடிவிலவிளஙகுமருநது
தததுவாதீதமருநது - எனனைத - தானாககிககொணடதயாளமருநது நலல (௩)

பிறப்பையொழிககுமருநது - யார்ககுமபேசப்படாதபெரியமருநது
இறப்பைததவிாககுமருநது-என்னு-ளெனறுமதுரிததினிககுமருநது. நல்ல. (௪)

நானதுவாகுமருநது - பர - ஞாநவெளியினடிககுமருநது
மோநவடிவாமருநது - சிவன் - முததருளததேமுடிககுமருநது. நலல (௫)

புததமுதாகுமருந்து - பார்தத - போதேபிணிகளைப்போககுமருந்து
பததரருநதுமருநது - அறு - பாநமுநதானுமபரமமருநது நலல (௬)

மாலயனதேடுமருநது - முனன - மாககணடனாககாககவநதமருநது
காலனைசசாயததமருநது தேவா - காணுஙகனவினுஙகாணுமருநது நலல (எ)

தறபரயோகமருநது - உப - சாநதருளததிடைசசாநதமருநது
சிறபரயோகமருநது - உயா - தேவரெலலாநதொழுநதெயவமருநது. நல்ல (அ)

அம்பலததாடுமருநது - பர - மாநநதவெளளததழுததுமருநது
எமபலமாகுமருநது - வேளுந - தொனனுநதலததிலிருககுமருநது. நல்ல (கூ)

சேதப்படாதமருநது - உணடாற - றெனபோலினிககுநதெவிட்டாமருநது
பேதப்படாதமருநது - மலைப - பெணணிடஙகொண்டபெரியமருநது. நல்ல (க0)

ஆககுமரிதாமருநது - தானே - யாதியநாதியுமானமருநது
சோககுமபுநிதமருநது - தனனைத - தேடுவோாதஙகளைநாடுமருநது. நலல (கக)

புண்ணியாககானமருநது - பரி - பூரணமாகபபொருநதுமருநது
எணணியவின்பமருநது - எம - தெண்ணமெலலாமுடிததிட்டமருநது. நல்ல. (கஉ)

பாலவணணமாகுமருநது - அதிற - பசசைநிறமுமபடாநதமருநது
நாலவண்ணநாடுமருநது - உளளே - நோககினரோகளைநோககுமருநது. நலல. (க௩)

பாககபபசிபோமருநது - தன்னைப் - பாராதவர்களைசசேராமருநது
கூாககததெரிநதமருநது - அநு-கூலமருநதென்றுகொணடமருநது. நல்ல. (க௪)

கோதிலாதோஙகுமருநது - அனபர் - கொள்ளைகொண்டுண்ணககுலாவுமருந்து
மாதொருபாகமருநது - என்னை - வாழவிததவெணகணமணியாமருந்து. நல்ல (கரு)

ஏகவுருவாமருந்து - மிக்க - வேழைகளுக்குமிரஙகுமருநது
சோகந்தவிாககுமருநது - பரஞ் - சோதியெனனபாதுதிககுமருநது நல்ல. (க௬)

கோமளங்கூடுமருந்து - நலங் - கொடுக்கத்துசங்கட்டிக்கொண்டமருந்து
நாமளவாதமருந்து - நம்மை - நாமறியும்படிநண்ணுமருந்து. நல்ல. (௧௭)

செல்வந்தழைக்குமருந்து - என்றுந் - தீராவினையெலாந்தீர்த்தமருந்து
நல்வந்தனைகொண்மருந்து - பர - நாதாந்தவீட்டினுணண்ணுமருந்து. நல்ல. (௧௮)

வாய்பிடியாதமருந்து - மத - வாதமும்பித்தமுமாய்க்குமருந்து
நோய்பொடியாக்குமருந்து-அன்பா-நோக்கியநோக்கினுணோக்குமருந்து நல்ல. (௧௯)

பெண்ணாசைதீர்க்குமருந்து - பொருட் - பேராசையெல்லாம்பிளக்குமருந்து
மண்ணாசைதீர்க்குமருந்து - எல்லாம் - வல்லமருந்தென்றுவாழ்த்துமருந்து.நல்ல.(௨௦)

என்றுங்கெடாதமருந்து - வரு - மெல்லாப்பிணிக்குமிதுவேமருந்து
துன்றுஞ்சிவோகமருந்து - நம்மைச் - சூழ்ந்திருமைக்குந்துணையாமருந்து.நல்ல. (௨௧)

கண்ணொளிகாட்டுமருந்து - அம்மை - கண்டுகலந்துகளிக்குமருந்து
விண்ணொளியாகுமருந்து - பர - வீடுதருங்கங்கைவேணிமருந்து. நல்ல. (௨௨)

காயாம்பூவண்ணமருந்து - ஒரு - கஞ்சமலர்மிசைக்காணுமருந்து
தாயாங்கருணைமருந்து - சிற் - சதாசிவமானமெய்ஞ்ஞானமருந்து. நல்ல. (௨௩)

அளவைக்கடந்தமருந்து - யார்க்கும் - அருமையருமையருமைமருந்து
உளவிற்கிடைக்குமருந்து - ஒன்றும் - ஒப்புயர்வில்லாதுயர்ந்தமருந்து. நல்ல. (௨௪)

தன்மயமாகுமருந்து - சிவ - சாதனநெஞ்சிற்றழைக்குமருந்து
சின்மயசோதிமருந்து - அட்ட - சித்தியுமுத்தியுஞ்சேர்க்குமருந்து. நல்ல. (௨௫)

மறந்தாலொளிக்குமருந்து - தன்னை - மறவாதவருள்வழங்குமருந்து
இறந்தாலெழுப்புமருந்து - எனக் - கென்றுந்துணையாயிருக்குமருந்து நல்ல. (௨௬)

கருமபிணிக்குமருந்து - கடுங் - கண்டகாகளெல்லாங்கசக்குமருந்து
இரும்பைக்குழைக்குமருந்து - பே - ரின்பவெள்ளத்தேயிழுக்குமருந்து. நல்ல. (௨௭)

அணிமணிகண்டமருந்து - அரு - ளானந்தசுத்தவகண்டமருந்து
பிணிதவிர்ப்பமருந்து - யார்க்கும் - பேசாமருந்தென்றுபேசுமருந்து. நல்ல. (௨௮)

மூவாக்கரியமருந்து - செல்வ - முத்துக்குமாரனையீன்றமருந்து
நாவிற்கினியமருந்து - தைய - னாயகிகண்டெழுவுமருந்து. (௨௯)

நல்லமருந்திம்மருந்து - சுக - நல்கும்வைத்தியநாதமருந்து நல்ல.

திருச்சிற்றம்பலம்

# பாங்கியர்க்கறிவுறுத்தல்.

கண்ணிகள்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலத்திலாடுகின்றார்பாங்கிமாரே - அவர்
ஆட்டங்கண்டுநாட்டங்கொண்டேன்பாங்கிமாரே (௧)

ஆடுகின்றசேவடிமேற்பாங்கிமாரே - மிக
ஆசைகொண்டுவாடுகின்றேன்பாங்கிமாரே (௨)

இன்பவடிவாய்ச்சபையிற்பாங்கிமாரே - நட
மிட்டவர்மேலிட்டம்வைத்தேன்பாங்கிமாரே (௩)

ஈங்வுடற்கிச்சைவையேன்பாங்கிமாரே - நட
நேசர்தமையெய்தும்வண்ணம்பாங்கிமாரே (௪)

உத்தமர்பொன்னம்பலத்தேபாங்கிமாரே - யின்ப
வுருவாகியோங்குகின்றார்பாங்கிமாரே. (௫)

ஊனவுலகைக்கருதேன்பாங்கிமாரே - மன்றில்
உத்தமருக்குறவாவேன்பாங்கிமாரே. (௬)

கற்பனையெல்லாங்கடந்தார்பாங்கிமாரே - யென்றன்
கற்பனைக்குட்படுவாரோபாங்கிமாரே. (௭)

கண்டிலார்நான்படும்பாடுபாங்கிமாரே - மூன்று
கண்ணுடையானென்பாராயோபாங்கிமாரே. (௮)

கன்மனமெல்லாங்களைப்பார்பாங்கிமாரே - மனங்
களையாரென்னளவிலேபாங்கிமாரே. (௯)

கள்ளமொன்றுமறியேனான்பாங்கிமாரே - என்னைக்
கைவிடவுந்துணிவாரோபாங்கிமாரே. (௧௦)

கற்பழித்துக்கலந்தாரோபாங்கிமாரே - இன்று
கைநழுவவிடுவாரோபாங்கிமாரே. (௧௧)

கண்டவரெல்லாம்பழிக்கப்பாங்கிமாரே - என்றன்
கன்னியழித்தேயொளித்தார்பாங்கிமாரே. (௧௨)

காமனைக்கண்ணாலெரித்தார்பாங்கிமாரே - என்றன்
காதலைக்கண்டறிவாரோபாங்கிமாரே. (௧௩)

காவலையெல்லாங்கடந்துபாங்கிமாரே - என்னைக்
கைகலந்தகள்ளரவர்பாங்கிமாரே. (௧௪)

காணவிழைந்தேனவரைப்பாங்கிமாரே - கொண்டு
காட்டுவாரையறிந்திலேன்பாங்கிமாரே. (௧௫)

கிட்டவரவேண்டுமென்றார்பாங்கிமாரே - நான்
கிட்டுமுன்னேனெட்டநின்றார்பாங்கிமாரே. (கசா)

கிந்நரங்கேளென்றிசைத்தார்பாங்கிமாரே - நான்
கேட்பதன்முன்சேட்படுத்தார்பாங்கிமாரே. (கஎ)

கிள்ளையைத்தூதாவிடுத்தேன்பாங்கிமாரே - அது
கேட்டுவரக்காணேனேயோபாங்கிமாரே (கஅ)

கீதவகைபாடினார்பாங்கிமாரே - அது
கேட்டுமதிமயங்கினேன்பாங்கிமாரே (ககூ)

கீழ்மைகுறியாமலென்னைப்பாங்கிமாரே மணக்
கேண்மைகுறித்தாரேயன்றுபாங்கிமாரே (உ0)

கீடமனையேனையும்பாங்கிமாரே - அடிக்
கேயடிமைகொண்டாரன்றுபாங்கிமாரே (உக)

குற்றமெல்லாங்குணமாகப்பாங்கிமாரே - கொள்ளுங்
கொற்றவனென்கொழுநர்காண்பாங்கிமாரே. (உஉ)

குற்றமொன்றுஞ்செய்தறியேன்பாங்கிமாரே - என்னைக்
கொண்டுகுலம்பேசுவாரோபாங்கிமாரே (உங)

குஞ்சிதப்பொற்பாதங்கண்டாற்பாங்கிமாரே - உள்ள
குறையெல்லாந்தீருங்கண்டீர்பாங்கிமாரே (உச)

கூற்றுதைத்தபாதங்கண்டீர்பாங்கிமாரே - நங்கள்
குடிக்கெல்லாங்குலதெய்வம்பாங்கிமாரே (உரு)

கூறரியபதங்கண்டுபாங்கிமாரே - களி
கொண்டுநிற்கவிழைந்தேனென்பாங்கிமாரே (உசா)

கூடல்விழைந்தேனவரைப்பாங்கிமாரே - அது
கூடும்வண்ணங்கூட்டிடுவீர்பாங்கிமாரே (உஎ)

திருச்சிற்றம்பலம்.

## வெண்ணிலா.

திருச்சிற்றம்பலம்.

தன்னையறிந்தின்பமுற வெண்ணிலாவே - ஒரு
தந்திரநீசொல்லவேண்டும் வெண்ணிலாவே. (க)

நாதமுடிமேலிருந்த வெண்ணிலாவே - அங்கே
நானும்வரவேண்டுகின்றேன் வெண்ணிலாவே. (உ)

சச்சிதானந்தக்கடலில் வெண்ணிலாவே - நானுந்
தாழ்ந்துவிழவேண்டுகின்றேன் வெண்ணிலாவே. (ங)

இராபபகலில்லாவிடததேவெண்ணிலாவே - நானும
இருக்கவெண்ணிவாடுகினறேனவெண்ணிலாவே. (௪)

தேசுநிறமாய்நிறைநதவெணணிலாவே - நானுஞ
சிவமயமதாயவிழைநதேனவெணணிலாவே. (௫)

போதநடுவூடிருநதவெணணிலாவே - மலப்
போதமறவேணடுகினறேனவெண்ணிலாவே. (௬)

ஆருமறியாமலிஙகேவெணணிலாவே - அரு
ளாளாவருவாரோசொலலாயவெணணிலாவே (௭)

அநதரஙகசேவைசெயயவெணணிலாவே - யெஙக
ளையாவருவாரோசொல்லாயவெணணிலாவே (௮)

வேதமுடிமேலிருநதவெணணிலாவே - மல
வேதையுளவேதுசொலலாயவெணணிலாவே (௯)

குண்டலிபபால்நின்றிலஙகுமவெண்ணிலாவே - அநத
குணடலிப்பால்வேண்டுகினறேன்வெண்ணிலாவே (௧௦)

ஆதியநதமெனறுரைத்தாவெண்ணிலாவே - அநத
ஆதியநதமாவதெனனவெண்ணிலாவே. (௧௧)

விததிலாமலேவிளைநதவெண்ணிலாவே - நீதான
விளைநதவணணமேதுசொலலாயவெண்ணிலாவே (௧௨)

முப்பொருளுமொன்றதெனபாாவெண்ணிலாவே - அநத
மூனறுமொனறாயமுடிநததென்னவெணணிலாவே (௧௩)

நானதுவாயநிறகுமவண்ணம்வெணணிலாவே - ஒரு
ஞானநெறிசொல்லுகணடாய்வெண்ணிலாவே. (௧௪)

ஞானமயமாயவிளஙகுமவெணணிலாவே - எனனை
நானறியச்சொல்லுகணடாயவெண்ணிலாவே. (௧௫)

வாசிவாசியெனறுரைததாவெணணிலாவே - அநத
வாசியென்னபபேசுகணடாயவெணணிலாவே. (௧௬)

ஐநதலைப்பாமபாடுகினறாவெணணிலாவே - அவா
அமபலததினின்றதெனனவெணணிலாவே. (௧௭)

ஒரெழுததிலைநதுணடெனபாாவெண்ணிலாவே - அது
ஊமையெழுததாவதெனனவெணணிலாவே (௧௮)

அம்பலததிலாடுகின்றாவெண்ணிலாவே - அவா
ஆடுகின்றவண்ணமெனனவெணணிலாவே (௧௯)

அநதாததிலாடுகின்றாவெணணிலாவே - அவா
ஆடும்வகையெப்படியோவெண்ணிலாவே. (௨௦)

அணுவிலணுவாயிருந்தார்வெண்ணிலாவே - எங்கு
மாகிநின் றவண்ணமெனனவெண்ணிலாவே. (உக)

அண்டபகிரண்டமெல்லாமவெண்ணிலாவே - ஐயர்
ஆட்டமெனறுசொல்வதென்னவெணணிலாவே. (உஉ)

அமபாதநிலாநின்றார்வெண்ணிலாவே - என்னை
ஆட்டுகின்றாரிம்பரதநேவெண்ணிலாவே. (உ௩)

திருச்சிற்றமபலம்.

# நடேசர்கொம்மி.

பலலவி.

கொம்மியடிப்பெண்கள் - கொம்மியடி
இருகொங்கைகுலுஙகவே கொம்மியடி.

அனுபல்லவி.

நம்மையாளும்பொனனமபலவாணனை
நாடிககொம்மியடியுஙகடி - பதம் - பாடிககொம்மியடியுஙகடி.

சரணஙகள்.

காமமகற்றியதூயனடி - சிவ - காமசவுந்தரிநேயனடி
மாமறையோதுசெவவாயனடி - மணி - மன்றெனுஞானவாகாயனடி. (க)

ஆநந்தத்தாண்டவராஜனடி - நமை - யாட்கொண்டருளியநேஜனடி
வானநதமாமலைமங்கைமகிழ் - வடி - வாளனடிமணவாளனடி. (உ)

கல்லைக்கனிவிக்குஞ்சுததனடி - முடி - கஙகைககருளியகாததனடி.
தில்லைசசிதமபரசிததனடி - தேவ - சிஙகமடியுயர்தஙகமடி. (௩)

பெண்ணொருபாலவைத்தமததனடி - சிறு - பிள்ளைககறிகொண்டபிததனடி
நண்ணிநமககருளததனடி - மிக - நல்லனடியெல்லாமவல்லனடி. (௪)

அம்பலததாடல்செயையனடி - யன்ப - ரன்புக்கெளிதருமெய்யனடி
தும்பைமுடிககணிதூயனடி - சுயஞ் சோதியடிபரஞ்சோதியடி. (௫)

திருச்சிற்றமபலம்.

# சிலதாஸம்வாதம்.

கண்ணிகள்.

திருச்சிற்றம்பலம்.

தண்மதியொண்முகப்பெணமணியே யுனனைததானகொணடநாயகராரோடி
யண்மையிற்பொனனணியமபலததாடல் செயயரமுதரழகரடி. (க)

செஙகயற்கண்மடமஙகைநல்லா யுன்றன்செஙகைபிடிததவராரோடி
யங்கயலாரனறுபொன்னம்பலத தெஙகளாநந்ததாண்டவராஜனடி. (உ)

கனறசுவைமொழிமினனிடையா யுன்னைககநியழிததவராரோடி
யுன்னறகரியபொன்னம்பலத்தாடல் செயுததமராநநதசிததரடி. (௩)

தீமையிலாதபெண்மாமயிலே யுன்னைசசோநதுகலநதவராரோடி
தாமமுடிககணிநதமபலததே யின்பததாணடவஞசெய்யுஞசதுரரடி. (௪)

அன்னநடைப்பெண்களாரமுதே யுனனையன்பிற்புணாநதவராரோடி
துனனலுடையினரமபலத்தே நினறதுாயதிருநடராயரடி. (௫)

காரளகப்பெணசிகாமணியே யுனறன்கறைபயழிததவராரோடி
பேரளவைககடநதமபலததே நினறபிததாபராநநதநிததரடி. (௬)

திருசசிறறம்பலம.

---

கீததனை - இராகம் - தோடி - ஆதிதாளம்.

பலலவி.

தெண்டனிட்டே னென்று சொல்லடி - சுவாமிக்கு நீன்
தெண்டனிட்டே னென்று சொல்லடி.

அனுபலலவி.

தண்டலைவிளஙகுநதில்லைததலததிற்பொன்னமபலததே
கண்டவாமயஙகவேடங்கட்டியாடுகின்றவர்க்கு தெண்ட. (க)

சரணங்கள்.

கற்பூரவாசம்வீசுமபொறபாந்திருமுகத்தே
கனிநதபுனனகையாடககருணைககூடைக்கணடை
அறபார்பொன்னம்பலததேயாநந்ததாண்டவ
மாடிகமகொண்டேயெனனையாட்டஙகணடாருககு தெண்ட. (உ)

இழிநதாலுநம்மையிங்கேயேற்றுவாரொன்றடைந்தால்
ஏற்றுவாாபோலேபினனுமிழியவைப்பாருககுப்
பழந்தாநழுவிமெலலப்பாலில்விழுநதெனனப்
பசப்பிப்பசப்பியன்பர்பண்டம்பறிபபவாக்கு. தெண்ட. (௩)

சுட்ட திருநீறுபூசிதசொநதோமென்றுவொகருத
தோனறுதலைமாலையணிதோளவிளங்கவருவார்ககுப்
பிட்டுககாசைபட்டுமாறன் பிரம்படிபட்டவாகருப
பிள்ளைககறிககாசைகொண்டகள்ளததவவேடருககு (சண்ட. (௪)

வாழ்நதாரைமேனமேலுமவாழச்செயபவருககு
மாசுபறிததவாகையிறகாசுபறிககினறவாகருத
தாழ்நதாரையடிககடிதாழககாணபவருககுத
தாஙுகிநாஙுகிததனியேநினறவருககு. தெணட. (௫)

ஆதியநதநமெவில்லாவாநநதநாடருககு
அண்டருயிாகாததமணிகணடசகிகணடருககுச
சோதிமயமாயவிளஙகுநதூயவடிவாளருககுத
தொணடர்குடிகெடுககவேதுஙஙகட்டிககொணடவாகரு தெணட. (௬)

பாட்டுககாசைபபட்டுமுனனமபரவைதனவாயிலிறபோயப்
பண்புறாததுததூதனெனறேபட்டஙகட்டிக்கொணடவாகரு
வீட்டுககாசைபபடுவொரைவீட்டைவிட்டெதுரததியே
வேட்டாண்டியாயுலகிலோட்டாண்டியாகருவாககு. தெண்ட (௭)

தாய்வயிறறிற்பிறவாதுதானேமுளைததவர்ககுச
சாதிகுலமறியாதுதாண்டவஞ்செயகின்றவாககு
எயதொழிலருளுமெனபிராணநாயகாககு
ஏமாநதவரையெல்லாமேமாததுமீசருககு. தெணட (௮)

திருசசிறறம்பலம.

கீாததனை - இ-ம் - காம்போதி - ஆதிதாளம்

பலலவி

இன்னந்தயவுவரவிலையா - உனகெகனமீதி
லென்னவாமஞ்சொலையா.

சரணங்கள்

அன்னம்பாலிககுந்தில்லைப்பொனனமபலததிலாடும
அரசேயரசேயரசேயென்றலறவும் இன்னந (௧)

சினனஞ்சிறுவயதிலென்னையடிமைகொண்ட
சிவமேசிவமேசிவமேயெனறலறவும் இனனந (௨)

முனனம்பிழைபொறுத்தாயினனமபொறுதுவிட்டான்
முறையோமுறையோமுறையோவெனறலறவும். இனனந (௩)

தனனையறியாவென்னையின்னலுறசசெயதாயே
தருமோதருமோதருமோவென்றலறவும் இனனந (௪)

பண்டுமெகிழ்நதெனையாட்கொண்டுகருணைசெயத
பரமேபரமேபரமேயென்றலறவும் இனனந (௫)

கொண்டுகுலம்பேசுவாருணடோவுலகிலெங்கள்
குருவேகுருவேகுருவேயென்றலறவும இனனந. (௬)

திருச்சிற்றம்பலம்

# விண்ணப்பம்

## விருத்தரம்.

கண்ணிகள்.

திருச்சிற்றம்பலம்.

ஆகமமுமாரணமுமரும்பொருளென்றுருகுந்தா
வேகவுருவாகிநின்றாரிவரார்சொல்தோழி (௧)

மாகநதிமுடிக்கணிந்துமணிமன்றுளநவரத
நாகமணிமிளிரநடநவில்வார்காண்பெண்ணே. (௨)

திருச்சிற்றம்பலம்

## நற்றாய்கவன்றது.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

திருவருட்புநிதைமகிழநின்றோனே தில்லைமன்றழகனேயெனப்பாண்
மருவருட்கடலேமாணிக்கமலையேமதிச்சடைவள்ளலேயென்பா
ளிருவருக்கரியவொருவனேயெனக்கிங்கியார்துணைநின்னலாதென்பாள்
வெருவியுட்குழைவாள்விழிகணீர்துளிப்பாள்வெய்துயிர்ப்பாளென்றனமின்னே.

ஓடுவாடில்லைத்திருச்சிற்றம்பலமென்றுருகுவாளுணர்விலளாகித்
தேடுவாடிகைப்பாடியங்குவாளையோதெய்வமேதெய்வமேயெனபாள்
பாடுவாள்பதைப்பாள்பதறுவாளென்னைபெண்பாவிகாணபாவிகாணென்பாள்
வாடுவாண்மயங்கிவருந்துவாளிருந்துவல்வினையேன்பெற்றமகளே (௨)

உலகெலாந்தழைப்பப்பொதுவினிலோங்குமொருதனித்தெய்வமென்கின்றா
ளிலகுபேரின்பவாரியென்கின்றாளென்னுயிர்க்கிறைவனென்கின்றா
ளலகிலாக்கருணையமுதனென்கின்றாளன்பர்கட்கன்பனென்கின்றா
டிலகவாணுதலாளிவ்வணம்புலம்பித்தியக்கமுற்றழுங்குகின்றாளே (௩)

திருவெலாமளிக்குந்தெய்வமென்கின்றாடிருச்சிற்றம்பலவனென்கின்றா
ளுருவெலாமுடையவொருவனென்கின்றாளுச்சிமேற்கரங்குவிக்கின்றாள்
கருவெலாங்கடந்தாங்கவன்றிருமேனிகாண்பதென்னாள்கொலென்கின்றாண்
மருவெலாமயங்குமலர்க்குழன்முடியாள்வருந்துகின்றாளென்றன்மகளே. (௪)

மின்னிணைச்சடிலவிடங்கனென்கின்றாள்விடைக்கொடிவிமலனென்கின்றாள்
பொன்னிணையலாத்தாட்புநிதனென்கின்றாள்பொதுவிலேநடிப்பனென்கின்றா
ளென்னிணைவிழிகளவன்றிருவழகையென்றுகொல்காண்பதென்கின்றா
ளன்னிணைமுலைகள்விம்முறவிடைபோற்றுவள்கின்றாள்பசியபொற்றொடியே. (௫)

கருங்களிற்றுரிபோர்த்தம்பலத்தாடுங்கருணையெங்கடவுளென்கின்றாள்
பெருங்களிதுளும்பவடவாந்தோங்குமபித்தரிற்பித்தனென்கின்றா
ளொருங்களிமிழற்றுங்குழலினானபோலுறுவரோவவனையென்கின்றா
டருங்களியுண்டாள்போலகின்றுணுந்தவிர்கின்றாளென்னருந்தவமே. (௬)

மன்றிடைநடிக்குமணாளனையல்லான்மதிப்பனோபிறரையென்கின்றாள்
வன்றுயர்நீக்குமவன்றிருவடியைமறப்பனோகனவுமென்கின்றா
ளொன்றுமிலலவனென்றுரைக்கினுமெல்லாமுடையவனாகுமென்கின்றாள்
பொனறுதல்பிறழ்தலினியுறேனென்றேபொற்றொடிபொஙகுகினறாளே. (எ)

திருத்தகுதில்லைத்திருச்சிற்றம்பலத்தேதெய்வமொன்றுண்டெமககென்பாள்
பெருத்தகுஙகுமப்பொற்கலசவாண்முலையாபேசுகபலபலவென்பாண்
மருத்தகுகுழலாண்மனமொழியுடலமற்றவுமவன்கழற்கென்பாள
குருத்தகுவளைக்கண்ணீர்கொழிப்பாள்குதுகுலிப்பாளபசுஙகொடியே. (அ)

அம்பலத்தாடுமழகனைக்காணத்தருந்தவம்பொருந்துமோவென்பாள்
கமபமுற்றிடுவாள்கண்கணீருகுப்பாள்கைகுவிப்பாளுளஙகனிவாள்
வம்பணிமுலைகளிரணடுநோககிடுவாள்வள்ளலைப்பரிகிலேனெனபா
ளும்பரன்றவஞ்செயதிடுமினேனெனபாளுயஙகுவாண்மயங்குவாளுணர்வே. (கூ)

திருச்சிற்றம்பலம்.

---

# சல்லாபலகரி.

கலிச்சந்தவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

சுந்தரநீறணிசுந்தரநடநத்தொழில்வல்லார்
வந்தனரிஙகேவந்தநமென்றேனமாதேநீ
மந்தணமிதுகேளநதனமிலநம்வாழ்வெல்லா
மநதரமெனறொன்னடியம்மாவவர்சூதே. (க)

நம்பலமாமெனநன்மனைபுக்காநடராஜ
ரொம்பலமீவீரொம்பெருமாநீரோயெனறேன்
வம்பலமடவாயெம்முடையின்பவாழ்வெல்லா
மம்பலமென்றொன்னடியம்மாவவாசூதே. (உ)

திருச்சிற்றம்பலம்.

---

# வேட்கைக்கொத்து

## தலைமகள் பாங்கியொடு கூறல்.

எண்சீர்க்கழிநெடிலடிச் சந்தவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

விண்படைததபுகழ்ததில்லையம்பலததானெவர்ககுமமேலானனபருளமேவுநட
ராஜன், பணபடைததவெனையறியாவிளம்பருவநதனிலேபரிநதுவநதுமாலையிட்டான்
பாரததறியான்மீட்டும், பெண்படைததபெண்களெலாமவமதிததேவலறபேசுகின்றா
ர்கூசுகினறேன்பிச்சியெனலானேன், கண்படைததுஙகுழியிலவிழககணககுமுணடோ
வவன்றனைககணககறிந்தும்விடுவேனோகண்டாயென்றோழி. (க)

சித்தமணியம்பலத்தானென்பிராணநாதன்சிவபெருமானெம்பெருமான்செல்வநடராஜன், வாய்த்தவென்னையறியாதவிளம்பருவந்தனிலேமகிழ்ந்துவந்துமாலையிட்டார் மறித்துமுகம்பாரா, ராய்த்தகலைகற்றுணர்ந்தவணங்கனையார்தமக்குளாசெய்தபோதனையோவானாலுமிதுகேள், காயத்தமரமவளையாத்தகணக்குமுண்டோவவன்றன்கணக்கறிந்தும்விடுவேனோகண்டாயென்றோழி. (௨)

என்னுயிரிற்கலந்துகலந்தினிக்கின்றபெருமானென்னிறைவன்பொதுவினடமியற்றுநடராஜன், றனையறியாப்பருவத்தென்னைமணம்புரிந்தானறனையறிந்தபருவத்தேயென்னையறியவிரும்பான, பின்னையனறிமுன்னுமொருபிழைபுரிந்தேனில்லைபெண்பரிதாபங்காணல்பெருந்தகைக்குமழகோ, கன்னலென்றுறைக்கின்றகணக்குமுண்டோவவன்றன்கணக்கறிந்தும்விடுவேனோகண்டாயென்றோழி. (௩)

தெருளமுத்தத்தனியோகர்சிந்தையிலுஞானச்செல்வரறிவிடத்துநடஞ்செய்யுநடராஜ, னருளமுதமளிப்பனெனநேயன்றுமணம்புணர்ந்தானளித்தறியானனுத்துணையுமநுபவித்துமறியேன், மருளுடையானல்லனொருவஞ்சகனுமல்லன்மனமிரக்கமிகவுடையான்வல்வினையேனளவி, லிருளுடையார்போலிருக்குமியல்பெனையவன்றன்னியல்பறிந்தும்விடுவேனோவினித்தானென்றோழி. (௪)

சின்மயமாம்பொதுவினிலேதன்மயமாய்நின்றுதிருநடஞ்செய்பெருங்கருணைச்செல்வநடராஜ, னென்மயநானறியாதவிளம்பருவந்தனிலேயென்னைமணமபுரிந்தனனீதெல்லாருமறிவா, ரினமயமில்லாதவர்போலின்றுமணந்தருளானிறையளவும்பிழைபுரிந்தேனில்லையவனிதயங், கன்மயமோவன்றுசுவைக்கனிமயமேயென்னுங்கணக்கறிந்தும்விடுவேனோகண்டாயென்றோழி. (௫)

எண்குணத்தானெல்லார்க்குமிறைவனெல்லாம்வல்லானெனனகத்தும்புறத்துமுளானினபநடராஜன், பெண்குணத்தையறியாதவிளம்பருவந்தனிலேபிச்சேறறிமணமபுரிந்தான்பெரிதுகளித்திருந்தேன், வண்குணத்தாலநுபவநானறியுமின்றபொழுதில்வந்தறியானின்பமொன்றுநந்தறியானவனும, வெண்குணத்தானல்லன்மிகுநல்லனெனப்பலகால்விழித்தறிந்துமவிடுவேனோவிளம்பாயென்றோழி. (௬)

பெரியாதபுகழுடையான்பொதுவினடம்புரிவானபுண்ணியபானண்ணியநற்புந்திநடராஜன், கொய்யாதவரும்பனையவிளம்பருவந்தனிலேகுறித்துமணம்புரிந்தனனென்மறித்தும்வரக்காணேன, செய்யாதசெய்கையொன்றுஞ்செய்தறியேனசிறிதுந்திருவுளமேயறியுமறறெனனொருவுளத்தின்செயல்க, ணையாதவென்றனுயிர்நாதனருட்பெருமைநானறிந்துமவிடுவேனோநவிலாயென்றோழி. (௭)

கண்ணனையானென்னுயிர்க்கலந்துநின்றகணவன்கணக்கறிவான்பிணக்கறியான்கருணைநடராஜன், றண்ணனையாமிளம்பருவந்தன்னிலென்னைத்தனித்துத்தானேவந்தருள்புரிந்துதனிமாலைபுனைந்தான், பெண்ணனையார்கண்டபடிபேசவுநானகூசாப்பெருமையொடுமிருந்தேனெனனருமையெலாமறிந்தா, னுண்ணனையாவகைவரவுதாழ்த்தனனின்றவன்றன்னுளமறிந்துமவிடுவேனோவுரையாயென்றோழி. (௮)

ஊனமறந்தவுயிரகத்தேயொளிநிறைந்தவொருவனுலகமெலாமுடையவனென்னுடையநடராஜன், பானமறந்தசிறியவிளம்பருவமதின்மாலைப்பரிந்தணிந்தானறிந்தனிப்பருவமிதிற்பரியான், றான்மறந்தானெனினுமிங்குநானமறக்கமாட்டேன்றுவற்றேறியவத்திழியச்சமமதமும்வருமோ, கோன்மறந்தகுடியேபோன்மிடியேனவன்றன்குணமறிந்தும்விடுவேனோகூறாயென்றோழி. (௯)

தனித்தபரநாதமுடித்தலத்தின்மிசைத்தலத்தேதலைவரெலாம்வணங்கநின்றதலைவனடராஜ, னினித்தசுகமறிந்துகொளாவிளம்பருவந்தனிலேயென்புருவநடுவிருந்தான்பினபுகண்டேனில்லை, யனித்தமிலாவிச்சரிதம்யாரக்குரைப்பேனந்தோவவனறிவானுனறிவேனயலறிவாருளரோ, துனித்தநிலைவிடுத்தொருகாற்சுத்தநிலையதனிற்சுகங்கண்டும்விடுவேனோசொல்லாயெனறோழி. (௪௦)

திருச்சிற்றம்பலம்.

---

## முன்னமுடிபு.

---

எணசீரககழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

வெறுத்துரைத்தேன்பிழைகளெலாம்பொருத்தருளல்வேண்டும்விளங்கறிவுக்கறிவாகிமெய்ப்பொதுவினடிப்போய, கறுத்துரைத்தாதமக்குமருள்கனிந்துரைக்குமபெரியகருணைநெடுங்கடலேமுக்கணுறுங்கரும்பே, மறுத்துரைப்பதெவனருணீவழங்குகினுமன்றிமறுத்திடினுமுனனையலான்மறறொருசார்பறியேன், செறுத்துரைத்தவுரைகளெலாந்திருவருளேயெனறுசிந்திப்பதல்லாமற்செய்வகையொன்றிலனே. (௧)

மிகுத்துரைத்தேன்பிழைகளெலாஞ்சகித்தருளல்வேண்டுமெய்யறிவின்புருவாகிவியன்பொதுவினடிப்போய, தொகுத்துரைத்தமறைகளும்பினவிரித்துரைத்துங்காணுத்துரியநடுவேயிருந்தபெரியபரம்பொருளே, பகுத்துரைத்தபயனுரைகோர்பொருளாகிவிளங்கும்பரஞ்சுடரோபரம்பரனேபசுபதியேயடியேன், வகுத்துரைப்பதெவனருணீவழங்குகினுமனறிமறுத்திடினுமுன்னையலானமற்றொருசாரபிலனே. (௨)

முன்னவனேசிறியேனுனசிறிதுமறியாதேமுனிந்துரைத்தபிழைபொறுத்துக்கனிந்தருளல்வேண்டு, மென்னவனேயென்றுணையேயென்னுறவேயெனனையீன்றவனேயென்றாயேயென்குருவேயெனது,மனனவனேயென்னுடையவாழ்முதலேயென்கண்மாமணியேமணிமிடற்றோமாணிக்கமலையே, யன்னவனேயமபலத்துளாடுகின்றவமுதேயாறணிந்தசடையாயான்வேறுதுணையிலனே. (௩)

திருச்சிற்றம்பலம்.

---

## இரண்டாவது திருமுறை.

முற்றிற்று.

உ

சிவமயம்

சிவகணபதி துணை

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பா.

# மூன்றாவது திருமுறை.



திருவொற்றியூர்.

## திருவுலாப்பேறு.

தலைவி பாங்கியொடு கிளத்தல்.



*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

**திருச்சிற்றம்பலம்.**

*சீரார்வளஞ்சேரொற்றிநகர்த்தியாகப்பெருமான்பவனிதனை*
*யூராருடன்சென்றெனதுநெஞ்சமுவகையோங்கப்பார்த்தனன்காண்*
*வாரார்முலைகண்மலைகளெனவளர்ந்தவளைகடளர்ந்தனவா*
*லேராகுழலாயென்னடிநானிச்சைமயமாய்நின்றதுவே.* (௧)

*சீர்த்தேன்பொழிலாரொற்றிநகர்த்தியாகப்பெருமான்பவனிவரப்*
*பார்த்தேன்கண்களிமைத்திலகாண்பைம்பொன்வளைகளமைத்திலகாண்*
*டார்த்தேன்குழலுஞ்சரிந்தனகாண்டானையிடையிற்பிரிந்தனகா*
*ணீர்த்தேன்குழலாயென்னடிநானிச்சைமயமாய்நின்றதுவே.* (௨)

*சீதப்புனல்சூழ்வயலொற்றித்தியாகப்பெருமான்றிருமாட*
*வீதிப்பவனிவரக்கண்டேன்மென்பூந்துகில்வீழ்ந்ததுகாணேன்*
*போதிற்றெனவுமுணர்ந்திலேன்பொன்னனார்பின்போதுகிலே*
*னீதற்புதமேயென்னடிநானிச்சைமயமாய்நின்றதுவே.* (௩)

*தென்னார்சோலைத்திருவொற்றித்தியாகப்பெருமான்பவனிவரப்*
*பொன்னார்வீதிதனிற்பார்த்தேன்புளகம்போர்த்தேன்மயல்பூத்தேன்*
*மின்னார்பலர்க்குமுன்னாகமேவியவன்றனெழில்வேட்டு*
*வென்னாரணங்கேயென்னடிநானிச்சைமயமாய்நின்றதுவே.* (௪)

சிலகுணத்தோர்புகழொற்றித் தியாகப்பெருமானபவனியிராக
காலததடைந்துகண்டேனென்கண்களிரண்டோவாயிரமோ
ஞாலத்தவர்களலர்தூற்றநற்றாசிடையினழுவிவிழ
வேலக்குழலாயென்னடிநாணிசசைமயமாய்நினறதுவே. (௬)

சேயையருளுநதிருவொற்றித் தியாகப்பெருமான்வீதிதனிற்
றாயபவனிவரககணடேன்சூழ்ந்தமகளிாதமைககாணேன்
ருயைமறந்தேனனறியுமென் றனையுமறந்தேன் றனிபபட்டே
யேயென்றேழியென்னடிநாணிச்சைமயமாய்நினறதுவே. (௭)

திங்களுலவும்பொழிலொற்றித தியாகப்பெருமான்றிருவீதி
யங்கண்களிக்கபபவனிவந்தானதுபோய்க்கண்டேனருயலொலாந
தங்கள்குலத்துககடாதென்றூர்தம்மைவிடுததேன் றனியாகி
யெஙகணனையாயென்னடிநாணிச்சைமயமாய்நின்றதுவே. (௮)

தேசாாமணிசூழொற்றிநகாததியாகப்பெருமானபவனிவரக்
கூசாதோடிக்கண்டாையிற்கூறையிழநதேனகைவளைகள
வீசாநின்றேன்றுயலொலாமவீட்டுககடங்காப்பெண்ணெனவே
யேசாநிற்கவென்னடிநாணிச்சைமயமாய்நின்றதுவே. (௯)

தேடார்க்கரியாளுெற்றிநகாததியாகப்பெருமான்பவனிவாத
தோடார்பணைததோட்பெணகளொடுஞ்சூழ்நதுமகிழநதுகண்டதன்றி
வாடாககாதல்கொண்டறியேன்வளையுநதுகிலுஞ்சோாநதுட
னேடாாகோதையென்னடிநாணிசசைமயமாயநினறதுவே. (௧0)

திருமாற்கரியாளுெற்றிநகாததியாகப்பெருமானபவனிவரப்
பெருமான்மனமுநானுமுன்னும்பினனுஞ்சென்றுகண்டேமால்
பெருமாநின்றேன்றுயலொலாம்போவென்றீாககப்போதுகிலே
னிருண்மாணகுழலாயென்னடிநாணிச்சைமயமாயநின்றதுவே. (௧௧)

திருச்சிற்றயபலம்

## திருவொற்றியூர்.

# நாரையுங்கிளியுநாட்டுறுதூது.

### தலைவிபறவைமேலவைத்துப்பையுளெய்தல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

கண்ணனெடுமாலுமண்ணிடந்துங்காணக்கிடையாக்கழலுடையா
நண்ணுமொற்றிநகரார்க்குநாராய்சென்றுநவிற்றீரோ
வண்ணமுமதுபவனிகண்டவன்றுமுதலாயின்றளவு
முண்ணுமுணவோடுறக்கமுநீத்துற்றாளென்றிவ்வொருமொழியே. (௧)

மன்னுங்கருணைவழிவிழியார்மதுரமொழியாரொற்றிநகர்த்
துன்னுமவர்தந்திருமுன்போய்ச்சுகங்காணின்றுசொல்லீரோ
பின்னுந்தேவர்திருமுடிமேல்விளங்குஞ்சடையைக்கண்டவுடன்
பின்னுஞ்சடையையவிழ்த்தொன்றும்பேசாளும்மைப்பிரிந்தென்றே. (௨)

வடிக்குந்தமிழ்த்திருந்தேனென்னவசனம்புகல்வாரொற்றிதனி
லடிக்குந்தியாகர்திருமுன்போய்நாராய்நின்றுநவிற்றீரோ
பிடிக்குங்கிடையாநடையுடையபெண்களெல்லாம்பிச்சியென
நொடிக்கும்படிக்குமிகுங்காமநோயால்வருந்திநோவதுவே. (௩)

மாயமொழியார்க்கறிவரியார்வண்மையுடையார்மறைமணக்குந்
தூயமொழியாரொற்றியிற்போய்ச்சுகங்காணின்றுசொல்லீரோ
நேயமொழியாள்பந்தாடாணில்லாள்வாசநீராடா
ளேயமொழியாள்பாலனமுமேலாளும்மையெண்ணியென்றே. (௪)

ஒல்லார்புரமூன்றெரிசெய்தாரொற்றியமர்ந்தாரல்லார்க்கு
நல்லாரல்லாரவர்முன்போய்நாராய்நின்றுநவிற்றுதியே
யல்லார்குழலாள்கண்ணீராமாற்றிலலைந்தாளணங்கனையாள்
பல்லார்சூழ்ந்துபழிதூற்றப்படுத்தாள்விடுத்தாள்பாயலென்றே. (௫)

மூவாநிலையார்பொற்சிலையாரொற்றிநகராருண்மைசொலுந்
தூவாய்மொழியாரவர்முன்போய்ச்சுகங்காணின்றுசொல்லீரோ
பூவார்முடியாள்பூமுடியாள்போவாள்வருவாள்பொருந்துகிலா
ளாவாவென்னப்பாணமகளிரொடுமொட்டாடேட்டாளனமென்றே. (௬)

வட்டமதிபோலழகொழுகும்வதனவிடங்கரொற்றிதனி
னட்டநவில்வாரவர்முன்போய்நாராய்நின்றுநவிற்றீரோ
கட்டவிழ்ந்தகுழன்முடியாள்கடுகிவிழுந்தகலைபுனையாண்
முட்டவிலங்குமுலையிணையுமூடாண்மதனைமுனிந்தென்றே. (௭)

வேலைவிடத்தைமிடற்றணிந்தவெண்ணீற்றழகர்விண்ணவருஞ்
சோலைமருவுமொற்றியிற்போய்ச்சுகங்காளவர்முன்சொல்லீரோ
மாலைமனந்தாள்கற்பகப்பூமாலைதரினும்வாங்குகிலாள்
காலையறியாள்பகலறியாள்கங்குலறியாள்கனிந்தென்றே. (௮)

மாண்காதலளிக்குமொற்றியினாவானமகளிர்மங்கலப்பொன
ஞாண்காதலளித்தாரவர்முன்போயநாராயநின்றுநவிற்றுதியோ
பூணகாதலளியாள்புலம்பிநின்றாள்புரண்டாளயன்மாலாதியராஞ்
சேண்காதலளிபபோரதேற்றுகினுந்தேருண்மனதுதிறனென்றே. (௯)

தேசுபூத்தவடிவழகர்திருவாமொற்றிததேவாபுலித
தூசுபூத்தகீளுடையாரசுகங்காளவாமுனசொல்லீரோ
மாசுபூத்தமணிபோலவருந்தாநின்றணமங்கையர்வா
யேசுபூத்தவலர்க்கொடிமாயினோததாளும்மையெணணியென்றே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவொற்றியூர்.

## இரங்கன்மாலை.

தலைவியிரங்கல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

நன்றுபுரிவார்திருவொற்றிநாதரெனதுநாயகனா
மன்றுளமர்வாரமாலவிடைமேலவருவாரவரைமாலையிட்ட
வன்றுமுதலாயின்றளவுமநதோசற்றுமணைநதறியேன்
குன்றுநிகர்பூண்முலையாயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௧)

தகைசேரொற்றித்தலததமாநதாதரியாபுரங்கடழலாகக
நகைசேர்நதவரைமாலையிட்டநாளேமுதலிந்நாளளவும்
பகைசோமதன்பூச்சூட்டலனறிப்பதப்பூசசூடப்பார்த்தறியேன்
குகைசேரிருட்பூங்குழலாயென்குறையையெவாககுககூறுவனே (௨)

தோடார்குழையாரொற்றியினாதூயாக்கலதுசுகமருள
நாடாரவாககுமாலையிட்டநாளேமுதலிந்நாளளவுஞ
சூடாமலர்போலிருநததல்லாற்சுகமோரணுவுநதுயத்தறியேன
கோடாவொல்குங்கொடியேயெனகுறையையெவாககுககூறுவனே. (௩)

அண்டரொவாக்குமறிவொண்ணாரணியாரொற்றியார்நீல
கண்டரயாககுமாலையிட்டகடனேயன்றிமற்றவரால
பணடமறியேனபலனறியேன்பரிவோடணையப்பார்ததறியேன்
கொண்டன்மணக்குங்கோதாயெனகுறையையெவாககுககூறுவனே. (௪)

பாடல்கமழும்பதமுடையார்பணைசேரொற்றிப்பதியுடையா
வாடலெனவேமாலையிட்டமாண்பேயன்றிமற்றவரா
லாடலளிசூழ்குழலாயுனதுணையொன்றுமறியனடி
கூடல்பெறவேவருநதுகினறேனகுறையையெவர்க்குககூறுவனே. ( )

துடிசேர்கரத்தாரொற்றியில்வாழ்சோதிவெண்ணீறழகரவர்
கடிசேர்ந்தென்னைமாலையிட்டகடனேயன்றிமற்றவரால்
பிடிசேர்நடைநேர்பெண்களைப்போற்பின்னையாதும்பெற்றறியேன்
கொடிநேரிடையாயென்னடியென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௬)

ஒற்றிநகர்வாழுத்தமனுருயர்மால்விடையாருடையார்தாம்
பற்றியென்னைமாலையிட்டபரிசேயன்றிப்பகைதெரிந்து
வெற்றிமதனன்வீறடங்கமேவியணைந்தாரல்லரடி
குற்றமணுவுஞ்செய்தறியேன்குறையையெவர்க்குக்கூறுவனே (௭)

வானும்புவியும்புகழொற்றிவாணர்மலர்க்கைமழுவினொடு
மானுமுடையாரென்றனக்குமாலையிட்டதொன்றல்லா
னானுமவருங்கூடியொருநாளுங்கலந்ததிலையடி
கோணுந்தியவேற்கண்ணாயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௮)

தெறித்தமணிகளலைசிறக்குந்திருவாரொற்றித்தேவரெனை
வறித்திங்கெளியேனவருந்தாமல்மாலையிட்டநாளலது
மறித்துமொருநாளவர்தென்னைமருவியணையநானறியேன்
குறித்திங்குழன்றேன்மாதேயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௯)

மின்னேரொடுக்கும்வேணியினார்விமலரொற்றிவாணரெனைத்
தென்னேரொடுக்கமாலையிட்டுச்சென்றாரின்புசேர்ந்தறியா
ரென்னேரொடுந்தபெண்களெலாமேசிநகைக்கவிட்டுழந்தேன்
கொன்னேரொடுத்தகண்ணாயென்குறையையெவர்க்குக்கூறுவனே (௧௦)

உடுக்குமதளாரொற்றியினாருலகம்புகழுமுத்தமனார்
தொடுத்திங்கெனக்குமாலையிட்டசுகமேயன்றியென்னுடனே
படுத்துமறியாரெனக்குரியபரிவிற்பொருளோரெள்ளளவுங்
கொடுத்துமறியார்மாதேயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௧௧)

உழையொன்றணிகைத்தலமுடையாரொற்றியுடையாரெனக்கு
மழையொன்றலர்பூமாலையிட்டார்மறித்துமணந்தாரல்லரடி
பிழையொன்றறியேன்பெண்களெலாம்பேசிநகைக்கப்பெற்றேன்காண்
குழையொன்றியகண்மாதேயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௧௨)

படர்பொழில்சூழொற்றியினாரென்கண்ணனையாரென்றலைவா
பீடாமாலையிட்டன்றிப்பின்னோர்சுகமும்பெற்றறியேன்
வாடாச்சாதற்பெண்களெலாம்வலத்துப்பேசநின்றனடி
கோடாக்கொங்கைமாதேயென்குறையையெவர்க்குக்கூறுவனே (௧௩)

கரு[illegible]றியாரொற்றியினார்கண்மூன்றுடையார்கனவினிலும்
பெருக[illegible]யாரென்றனக்குமாலையிட்டதொன்றல்லா
மருக[illegible]மருவியிருக்கநானறியேன்
கொஞ்சமதிநேர்நுதலாயென்குறையையெவர்க்குக்கூறுவனே (௧௪)

ஆலமிருந்தகளத்தழகரணிசேரொற்றியாலயத்தார்
சாலவெனக்குமாலையிட்டதன்மையொன்றேயல்லாது
சாலநிரம்பவவாபுயத்தைக்கட்டியணைத்திலலையடி
கோலமதிவாண்முகத்தாயென்குறையையெவர்க்குக்கூறுவனே (௫)

நெய்த்தபணைசூழொற்றியினார்நிருத்தம்பயில்வார்மாலயனு
மெய்த்தறிகரியாரமாலையிட்டாரெனக்கெனறாக்குமபெருமையல்லா
லுய்தற்கடியேனமனையின்கண்ணொருநாளேனுமுற்றறியா
கொய்தற்கரிதாங்கொடியேயென்குறையையெவர்க்குக்கூறுவனே (௬)

பேசக்குமரியார்மால்பிரமன்போகிமுதலாம்புங்கவாகள்
யார்க்குமரியாரெனக்கெளியராகியெனைமாலையிட்டா
ரீகக்கும்புகுதாமூலமத்தையின்னுந்தவிர்த்தாரலலரடி
கூசக்குநெடுவேற்கண்ணாயென்குறையையெவர்க்குக்கூறுவனே (௭)

இறையாரொற்றியூரினிடையிருந்தாரினியாரெனக்கணவா
மறையாரெனக்குமாலையிட்டாரமருவாரெனைவஞ்சனையோ
பொறையாரிரக்கமிகவுடையாரபொயயொனறுமாயாரபொய்யலடி
குறையாமதிவாண்முகத்தாயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௮)

உடுப்பார்கரித்தோலொற்றியெனுமூராரெனையுடையவனார்
மடுப்பாரினபமாலையிட்டார்மருவாரெனதுபிழையுளாதுக்
கெடுப்பாரிலலையெனசொலினுங்கேளாரெனதுகேள்வரவா
கொடுப்பாரெனறேமாதேயென்குறையையெவர்க்குக்கூறுவனே (௯)

எருதில்வருவாரொற்றியுளாரென்றுயகனெனக்கினியா
வருதியெனவேமாலையிட்டாரவந்தாரலொனறுமவாய்திறவா
கருதியவாதங்கடடளையைக்கடந்துநடநதேனலலவடி
குருகுண்கரத்தாயெனனடியென்குறையையெவர்க்குக்கூறுவனே (௧௦)

மாவென்றுரித்தாரமாலையிட்டமணாளரென்றேவந்தடைந்தால
வாவென்றுரையாரபோவென்றாமௌனஞ்சாதித்திருந்தனாகா
ணவென்றலறிக்கண்ணீாவிட்டழுதாற்றுயரமாறுமடி
கோவென்றிருவேறகொண்டாயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௧௧)

நாட்டும்புகழார்திருவொற்றிநகாவாழ்சிவஞானன்மையெலாங்
காட்டும்படிக்குமாலையிட்டகணவரெனவேர்காசளவிற
கேட்டுமறியேனறந்தறியாரகேட்டாலெனனவிளையுமடி
கோட்டுமணிப்பூண்முலையாயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௧௨)

வெற்பைவளைத்தார்திருவொற்றிமேவியமர்ந்தாரவரெனது
கற்பையழித்தார்மாலையிட்டுக்கணவரானாரென்பதல்லாற்
சிறபமணிமேடையிலெனைசேர்ந்தாரென்பதில்லையடி
கொறறவைபயரவினிடையாயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (௧௩)

என்னைக்கொடுத்துங்கிடைப்பரியாரெழிலாரொற்றிநாதர்தமைச
சின்னவயதின்மாலையிட்டுச்சென்றாலென்னதிறனல்லா
லின்னுமருவவந்திலர்காண்யாதோவவர்தம்மெண்ணமது
கொன்னுண்வடிவேற்கண்ணாயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (உச)

கரும்பினினியார்கண்ணுதலார்கடிசேரொற்றிக்காவலனா
ரிரும்பின்மனத்தேனைமாலையிட்டாரிட்டவன்றலது
திரும்பியொருகால்வந்தென்னைச்சேர்ந்துமகிழ்ந்ததிலையடி
குரும்பையனையமுலையாயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (உரு)

நீதுதவிப்பார்திருவொற்றித்தியாகரழியாத்திறத்தரவா
மாதுமகிழ்தியென்றென்னைமாலையிட்டார்மாலையிட்ட
போதுகண்டதிருமுகத்தைப்போற்றிமறித்துங்கண்டறியேன்
கோதுகண்டேன்மாதேயென்குறையையெவர்க்குக்கூறுவனே. (உசு)

வென்றிக்கொடிமேல்விடையுயர்த்தார்மேலாரொற்றியூரொன்பாற்
சென்றிகுளிர்பூமாலையிட்டார்சேர்ந்தாரல்லாயானவரை
யன்றிப்பிறரைநாடினனோவம்மாவொன்றுமறியனடி
குன்றிறுயாகொண்டழுமெனதுகுறையையெவர்க்குக்கூறுவனே. (உஎ)

தோளாமணிநோவடிவழகர்சோலைசூழ்ந்தவொற்றியினார்
மாளாநிலையொன்றனக்குமாலையிட்டாமருவிலர்காண
கேளாயமாதேயென்னிடையேகெடுதியிருந்ததெனினுமதைக்
கோளாருறைப்பாரொன்னடியென்குறையையெவர்க்குக்கூறுவனே. (உஅ)

வாடாதிருந்தேன்மழைபொழியுமலர்க்காவனஞ்சூழொற்றியினா
ரோடாரணிபூமாலையெனக்கிட்டாரவர்க்குமாலையிட்டேன்
றேடாதிருந்தேனல்லடியானறேடியருகிற்சேர்ந்துமெனைக்
கூடாதிருந்தாரொன்னடியென்குறையையெவர்க்குக்கூறுவனே. (உகூ)

நலத்திறசிறந்தவொற்றிநகர்நண்ணுமென்றுநாயகனா
வலத்திறசிறந்தாமாலையிட்டுமறித்துமருவாவாராரோ
னிலத்திறசிறந்தவுறவினர்கணிந்தித்தையோவென்றேந்தமது
குலத்திறசேரானொன்னடியென்குறையையெவர்க்குக்கூறுவனே (கூ0)

ஏர்ந்தேனெளிசூழொற்றியுளானென்கண்மணியானென்கணவா
வார்ந்தேன்சடையாமாலையிட்டுமேவாழாதலைந்துமனமெலிந்து
சோர்ந்தேன்பழைத்துத்துயர்க்கடலைச்சூழ்ந்தேனினனுந்துடிக்கின்றேன்
கூர்ந்தேன்குழலாயென்னடியென்குறையையெவர்க்குக்கூறுவனே. (கூக)

திருச்சிற்றம்பலம்.

திருவொற்றியூர்.

## திருவுலாவியப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

வெள்ளச்சடையார்விடையார்செவ்வேலார்நூலார்மேலார்த
முள்ளத்துறைவார்நிறைவார்நல்லொற்றித்தியாகப்பெருமானார்
வள்ளற்குணத்தார்திருப்பவனிவந்தாரென்றாரம்மொழியை
விள்ளற்குள்ளேமனமென்னைவிட்டங்கவர்முன்சென்றதுவே. (௧)

அந்தாரணியுஞ்செஞ்சடையாரடையார்புரமூன்றவையனலி
னுந்தாநின்றவெண்ணகையாரொற்றித்தியாகர்பவனியிங்கு
வந்தாரென்றாரந்தோநான்மகிழ்ந்துகாணவருமுன்னம்
மந்தாகினிபோன்மனமென்னைவஞ்சித்தவர்முன்சென்றதுவே (௨)

பொன்னேர்சடையார்கீளுடையார்பூவைதனையோர்புடையுடையா
தென்னேர்பொழில்சூழொற்றியூர்த்திகழுந்தியாகர்திருப்பவனி
யின்னேவந்தாரென்றார்நானெழுந்தேனங்கெழுவதற்கு
முன்னேமனமென்றனைவிடுத்துமுந்தியவர்முன்சென்றதுவே. (௩)

காணவினியாரொன்னிரண்டுகண்களனையாகடல்விடத்தை
யூணினுகந்தாருயர்ந்தார்நல்லொற்றித்தியாகப்பெருமானா
மாணவீதிவருகின்றாரென்றார்காணவருமுன்னு
னாணவென்னைவிட்டென்மனந்தானயந்தங்கவர்முன்சென்றதுவே. (௪)

செழுந்தெண்கடற்றெள்ளமுதனையார்தியாகரெனுமோர்திருப்பெயரார்
கொழுந்தண்பொழில்சூழொற்றியினார்கோலப்பவனியென்றார்நா
னெழுந்திங்கவிழ்ந்தகலைபுனைந்தங்கேகுமுன்னரென்னைவிடுத்தே
யழுந்துநெஞ்சம்விழுந்துகூத்தாடியவர்முன்சென்றதுவே. (௫)

சாலமாலுமேலுமிடந்தாலுமறியாத்தழலுருவார்
சேலும்புனலுஞ்சூழொற்றித்திகழுந்தியாகப்பெருமானார்
பாலுந்தேனுங்கலந்ததெனப்பவனிவந்தாரென்றனர்யான்
மேலுங்கேட்குமுன்னமனம்விட்டங்கவர்முன்சென்றதுவே. (௬)

பின்றாழ்சடையார்தியாகரெனப்பேசுமருமைப்பெருமானார்
மன்றாநடத்தாரொற்றிதனில்வந்தார்பவனியென்றார்நா
னன்றாந்துகிலைத்திருத்துமுன்னநலஞ்சேர்கொன்றைநளிர்ப்பூவின்
மென்றாவாங்கமனமென்னைவிட்டங்கவர்முன்சென்றதுவே. (௭)

கண்ணார்நுதலார்மணிகண்டர்கனகவரையாங்கனசிலையார்
பெண்ணார்பாகர்தியாகரெனப்பேசுமருமைப்பெருமானார்
தண்ணார்பொழில்சூழொற்றிதனிற்சார்ந்தார்பவனியென்றனர்நா
னண்ணாமுன்னமென்மனந்தானாடியவர்முன்சென்றதுவே. (௮)

ஏமப்புறங்காட்டெரியாடுமெழிலார் தில்லையினிதமர்வார்
சேமப்புலவர்தொழுமொற்றித் திகழுந்தியாகப்பெருமானுர்
வாமப்பாவையொடும்பவனிவந்தாரொன்றுரதுகாண்பான்
காமப்பறவைபோலென்மனங்கடுகியவர்முன்சென்றதுவே. (௯)

சூலப்படையார்பூதங்கள்சுற்றும்படையார்துதிப்பவர்தஞ்
சீலப்பதியார்திருவொற்றித்திகழுந்தியாகப்பெருமானர்
நீலக்களத்தார்திருப்பவனிநேர்ந்தாரொன்றுரதுகாண்பான்
சாலப்பசித்தார்போனமனந்தானருவியவர்முன்சென்றதுவே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

திருவொற்றியூர்.

# சல்லாபவியன்மொழி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

காதுநடந்தகண்மடவாள்கடிமாமனைக்குக்கால்வருந்தத்
தூதுநடந்தபெரியவர்சிறசுகத்தாரொற்றித்தொன்னகரார்
வாதுநடந்தான்செய்கின்றோர்மாதுநடந்துவாவென்றூர்
போதுநடந்ததென்றேனெப்போதுநடந்ததென்றூரே (௧)

கச்சையிடுவார்படவரவைக்கண்மூன்றுடையார்வாமத்திற்
பச்சையிடுவாரொற்றியுள்ளார்பரிந்தென்மனையிற்பலிக்குற்று
ரிச்சையிடுவாருண்டியென்றூருணடேனென்றேனெனக்கின்று
பிச்சையிடுவீரென்றூர்நான்பிச்சையடிவேனென்றேனே. (௨)

கருதற்கரியார்கரியார்முன்காணக்கிடையார்கழலடியார்
மருதத்துறைவார்திருவொற்றிவாணரினறென்மனைக்குற்றூர்
தருதற்கென்பாலின்றுவந்தீரொன்றேனதுநீதானென்றூர்
வருதற்குரியீர்வாருமெனறேன்வந்தேனென்றுமறைந்தாரே. (௩)

கல்லைவளைக்கும்பெருமானூர்கழிசூழொற்றிக்கடிநகரா
ரொல்லைவளைக்குந்தில்லையுள்ளாரொன்றன்மனைக்குப்பலிக்குற்று
ரலலைவளைக்குங்குழலன்னமனையினுதவாவிடிலோப
மிலலைவளைக்குமென்றூர்நானில்லைவளைக்குமென்றேனே. (௪)

வெற்றியிருந்தமழுப்படையார்விடையார்மேருவில்லுடையார்
பெற்றியிருந்தமனத்தார்தமுட்பிறங்குந்தியாகப்பெருமானூர்
சுற்றியிருந்தபெண்களெல்லாஞ்சொல்லிநகைக்கவருகணைந்தா
ரொற்றியிருமென்றூர்தேனுமொற்றியிருந்தேனென்றூரே. (௫)

விண்டங்கமராதுயாதவிர்க்கும்வேற்கைமகனைவிரும்பிநின்றோர்
வண்டங்கிசைக்குமபொழிலொற்றிவதிவாரொன்றன்மனையடைந்தார்
தண்டங்கழற்குநிகரானீர்தண்டங்கழற்கென்றேன்மொழியாற்
கண்டங்கறுத்தாயென்றூர்நீர்கண்டங்கறுத்தீரென்றேனே. (௬)

விற்கண்டாதநுதன்மடவாள்வேட்டநடனவித்தகனூர்
சொற்கண்டாதபுகழொற்றித்தூயரின்றென்மனைபுகுந்தார்
நிற்கண்டார்கண்மயலடைவரென்றார்நீர்தாநிகழ்த்தியசொற்
கற்கண்டாமென்றுரைத்தேனுன்கற்கண்டாமென்றுரைத்தாரே. (௭)

விடையார்கொடிமேலுயர்த்தருளும்வேதகீதப்பெருமானா
ருடையாரொற்றியூரமர்ந்தாருவந்தென்மனையிலின்றடைந்தா
ரிடையாவையமென்றார்நானிடைதானையமென்றேனாற்
கடையாரளியாவென்றார்கட்கடையாரளியாவென்றேனே. (௮)

நாடொன்றியசீர்த்திருவொற்றிநகரத்தமர்ந்தநாயகனா
ரீடொன்றில்லாவென்மனையுற்றிருந்தார்பூவுண்டெழில்கொண்ட
மாடொன்றெங்கேயென்றேனுன்மனத்திலென்றார்மகிழ்ந்தமாவெண்
காடொன்றுடையீரென்றேன்செங்காடொன்றுடையேனென்றாரே. (௯)

சொல்லாலியன்றதொடைபுனைவார்தூயாரொற்றித்தொன்னகரா
ரல்லாலியன்றமனத்தார்பாலணுகாரென்றன்மனைபுகுந்தார்
வல்லாலியன்றமுலையென்றார்வல்லாரீரென்றேனுன்சொற்
கல்லாலியன்றதென்றார்முன்கல்லாலியன்றதென்றேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவொற்றியூர்.

# இன்பக்கிளவி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவளத்தாரம்பலத்தார்திருவேட்களத்தார்செவ்வணத்தா
கல்லைவளைத்தாரென்றன்மனக்கல்லைக்குழைத்தார்கங்கணத்தா
லெல்லைவளைத்தார்தியாகர்தமையெழிலாரொற்றியெனுநகரி
லொல்லைவளைத்துக்கண்டேனென்றுமுரையாதிருந்தாரே. (௧)

இருந்தார்திருவாரூரகத்திலெண்ணுகொடியாரிதயத்திற்
பொருந்தார்கொன்றைப்பொலன்பூந்தார்புனைந்தார்தம்மைப்புகழ்ந்தார்கண்
விருந்தார்திருந்தார்புரமுன்றீவிளைத்தாரொற்றிநகர்விளைத்தா
தருந்தார்காமமருந்தாரித்தரணியிடத்தேதருவாரே. (௨)

தருவார்தருவார்செல்வமுதற்றருவாரொற்றித்தலமமர்வார்
மருவார்தமதுமனமருவார்மருவார்கொன்றைமலர்புனைவார்
திருவார்புயனுமலரோனுந்தேடுந்தியாகப்பெருமானார்
வருவார்வருவாரெனநின்றுவழிபார்த்திருந்தேன்வந்திலரே. (௩)

வந்தாரல்லர்மாதேநீவருந்தேலென்னுமார்பிலங்குந்
தந்தாரல்லறவிர்ந்தோங்கத்தந்தாரல்லர்தமையுடையார்
சந்தார்சோலைவளரொற்றித்தலத்தார்தியாகப்பெருமானார்
பந்தார்முலையார்க்கவர்கொடுக்கும்பரிசேதொன்றும்பார்த்திலமே. (௪)

இலமேசெறித்தார் தாயரினியென்செய்குவதென்றிருந்தேற்கு
நலமேதருவார்போலவந்தென் னலமேகொண்டெழுவினர்கா
ணுலமேயனைய திருத்தோளாரொற்றித்தியாகப்பெருமானார்
வலமேவலமேனலமவலமாதேயினியென்கழுத்துவதே. (௫)

வழுத்தார்புரத்தையெரித்தார்நல்வலத்தார்நடனமலரடியார
செழுத்தாமாபா திருவொற்றித்திகழுந்தியாகப்பெருமானார்
கழுத்தாவிடத்தாதமத்தழகைக்கண்டுகனிந்துபெருங்காமம்
பழுத்தாதம்மைக்கலந்திடநற்பதத்தாரொன்றும்பார்த்திலரே (௬)

பாராதிருந்தாரதமதுமுகம்பாராதுவருந்தும்பாவைதனைச
சேராதிருந்தா திருவொற்றித்திகழுந்தியாகப்பெருமானா
வாராதிருந்தாரினனுமிவள்வருத்தங்கேட்டுமாலத்தனைத
தாராதிருந்தாசலமகளைத்தாழ்ந்தச்சடையிற்றரித்தாரே. (௭)

சடையிற்றரித்தாரொருத்திதனைத்தழுவிமகிழ்மற்றொருபெண்ணைப்
புடையிற்றரித்தாரமகளேநீபோனலெங்கேதரிப்பாரோ
கடையிற்றரித்தவிடமதனைக்களத்திற்றரித்தார்கரித்தோலை
யிடையிற்றரித்தாரொற்றியூரிருந்தாரிருந்தாரொன்னுளத்தே. (௮)

உளத்தேயிருந்தார்திருவொற்றியூரிலிருந்தாருவர்விடத்தைக
களத்தேவதிந்தாரவரொன்றன்கண்ணனுள்வதிந்தாகடலமுதா
மிளத்தேமொழியாயாதலினலிமையேனிமைத்தலியல்பன்றே
வளத்தேமனத்தும்புகுகினறாவருந்தேன்சற்றும்வருந்தேனே. (௯)

வருந்தேன்மகளீரனையொவவார்வளஞ்சேரொற்றிமன்னவனார்
தருந்தேனமுதமுணவென்றுஞ்சலியவாழ்விற்றருக்கிமகிழ்ந்
திருந்தேனமனுளரெனைப்பிரியாரொன்றும்புணர்ச்சிக்கேதுவிதா
மருந்தேனைமையற்பெருநோயைமறந்தேனவரைமறந்திலனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# இன்பப்புகழ்ச்சி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாடொனறுடையாருணவின்றிமண்ணுண்டதுகாண்மலரோன்ற
லோடொனறுடையாரொற்றிவைத்தாருணர்மகிழ்வோவெந்தாலங
காடொனறுடையார்கண்டமட்டுநெகறுத்தார்பூதகணத்தோடு
மீடொன்றுடையார்மகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே (௧)

பித்தரெனும்போபிறங்கநின்றார்பேயோடாடிப்பவுரிகொண்டார்
பத்தர்தமக்குப்பணிசெய்வாரபணியேபணியாப்பரிவுற்றார
சித்தா திருவாழொற்றியினார்தியாகரொன்றன்கலைகவர்ந்த
வெத்தரன்றேமகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே. (௨)

கடுத்தாழ்களத்தார்கரித்தோலார்கண்ணான்மதனைக்கரிசெய்தா
ருடுத்தார்முன்னோர்மண்ணோட்டையொளித்தேதொண்டனொடுமெவழக்குத்
தொடுத்தார்பாம்பும்புலியுமெச்சித்துதிக்கவொருகாலம்பலத்தி
லெடுத்தாரன்றோமகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே. (௩)

உரப்பார்மிசையிற்பூச்சூடவொட்டார்சடைமேலொருபெண்ணைக்
கரப்பார்மலர்தூவியமதனைக்கண்ணாற்சுட்டார்கல்லெறிந்தோன்
வரப்பார்மிசைக்கண்வாழ்ந்திருக்கவைத்தார்பலிக்குமனைதொறும்போ
யிரப்பாரன்றோமகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே. (௪)

கருதுமவரைவெளிக்கிழுப்பார்காணாதெல்லாங்காட்டிநிற்பார்
மருதிலுறைவாரொற்றிதனிலவதிவார்புரத்தைமலைவில்லாற்
பொருதுமுடிப்பார்போனகைப்பார்பூவுண்டுறங்கும்புதுவெள்ளை
யெருதில்வருவார்மகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே. (௫)

ஆக்கமில்லார்வறுமையிலாரருவமில்லாருருவமிலா
தூக்கமில்லாரசுகமில்லார்துன்பமில்லார்தோன்றுமல
வீக்கமில்லார்குமெபமதுவிருத்தியாகவேண்டுமெனு
மேக்கமில்லார்மகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே. (௬)

ஊருமில்லாரொற்றிவைத்தாருறவொன்றில்லார்பகையில்லார்
பேருமில்லாரெவ்விடத்தும்பிறவார்சிறவார்பேச்சில்லார்
நேருமில்லார்தாயதந்தைநேயர்தம்மோடுடன்பிறந்தோர்
யாருமில்லார்மகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே. (௭)

தங்குமருப்பார்கண்மணியைத்தரிப்பாரொன்பின்றார்புனைவார்
துங்குமருட்கார்முகிலனையார்சொல்லுநமதுசொற்கேட்டே
யிங்குமிருப்பாரங்கிருப்பாரெல்லாமியல்பிற்றாமுணர்ந்தே
யெங்குமிருப்பார்மகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே (௮)

துத்திப்படத்தார்சடைத்தலையார்தொலையாப்பலிதேர்தொன்மையினா
முத்திக்குடையார்மண்ணெடுப்பார்மொத்துண்டுழல்வார்மொய்கழற்காம்
புத்திக்குரியபத்தர்கடம்பொருளையுடலையாவையுமே
யெத்திப்பறிப்பார்மகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே. (௯)

மாறித்திரிவார்மனமடையார்வணங்குமடியார்மனந்தோறும்
வீறித்திரிவார்வெறுவெளியின்மேவாநிற்பார்விறகுவிலை
கூறித்திரிவார்குதிரையின்மேற்கொள்வார்பசுவிற்கோல்வளையோ
டேறித்திரிவார்மகளேநீயேதுக்கவரைவிழைந்தனையே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## திருவொற்றியூர்.

# திருவுலாத்திறம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தேனார்கமலத்தடஞ்சூழுந்திருவாழொற்றித்தியாகரவர்
வானாரமரர்முனிவர்தொழமண்ணோர்வணங்கவரும்பவனி
தானார்வங்கொண்டகமலர்ந்துதாழ்ந்துசூழ்ந்துகண்டலது
கானாரலங்கற்பெண்ணேநான்கண்களுறக்கங்கொள்ளேனே. (௧)

திருமால்வணங்குமொற்றிநகர்செழிக்குஞ்செல்வத்தியாகரவர்
கருமாலகற்றுந்தொண்டர்குழாங்கண்டுகளிக்கவரும்பவனி
மருமாண்புடையமனமகிழ்ந்துமலர்க்கைகூப்பிக்கண்டலது
பெருமானவடிக்கட்பெண்ணேநான்பெற்றுளோமெம்பேசேனே. (௨)

சேலார்தடஞ்சூழொற்றிநகர்சேருஞ்செல்வத்தியாகரவ
ராலார்களமேல்விளங்குமுகமழகுத்தும்பவரும்பவனி
நாலாரணஞ்சூழ்வீதியிடைநாடிப்புகுந்துகண்டலது
பாலாகுதலைப்பெண்ணேநான்பாயிற்படுக்கைபொருந்தேனே (௩)

செல்வந்துறழும்பொழிலொற்றித்தெய்வத்தலங்கொடியாகரவர்
வில்வந்திகழுஞ்செஞ்சடைமினவிழுங்கிவிளங்கவரும்பவனி
சொல்வந்தோங்கக்கண்டுநின்றுதொழுதுதுதித்தபின்னலது
வல்வந்தளகப்பெண்ணேநானவிழ்ந்தகுழலுமுடியேனே. (௪)

சேவார்கொடியாரொற்றிநகர்திகழுஞ்செல்வத்தியாகரவர்
பூவார்கொன்றைப்புயங்கண்மனம்புணரப்புணரவரும்பவனி
யோவாக்களிப்போடகங்குளிரவுடலங்குளிரக்கண்டலது
பாவார்குதலைப்பெண்ணேநான்பரிந்துநீரும்பருகேனே. (௫)

சிற்றம்பலத்தாரொற்றிநகர்திகழுஞ்செல்வத்தியாகரவ
ருற்றங்குவந்தோர்வினைகளெலாமோடநாடிவரும்பவனி
சுற்றுங்கண்களகளிகூரத்தொழுதுகண்டபின்னலது
முற்றுங்கனிவாய்ப்பெண்ணேநான்முடிக்கோமலருமுடியேனே. (௬)

சிந்தைக்கினியாரொற்றிநகர்திகழுஞ்செல்வத்தியாகரவர்
சந்தத்தடந்தோள்கண்டவர்கடம்மைவிழுங்கவரும்பவனி
முந்தப்புகுந்துபுளகமுடனமுடிக்குளிரக்கண்டலது
கந்தக்குழலவாய்ப்பெண்ணேநான்கண்ணீரொழியக்காணேனே. (௭)

தென்னஞ்சோலைவளரொற்றியூர்வாழ்செல்வத்தியாகரவர்
பின்னுஞ்சடைமேற்பிறைவிளங்கிப்பிறங்காநிற்கவரும்பவனி
மன்னுங்கரங்கடலைக்குவித்துவணங்கிவாழ்த்திக்கண்டலது
துன்னுந்துவர்வாய்ப்பெண்ணேநானசோறெள்ளளவுமுண்ணேனே. (௮)

சிந்தாகுலந்தீர்த்தருளொற்றியூர்வாழ்செல்வத்தியாகரவர்
வந்தார்கண்டாரவாமனத்தைவாங்கிப்போகவரும்பவனி
நந்தாமகிழ்வுத்தலைசிறப்பநாடியோடிக்கண்டலது
பந்தாரமலர்க்கைப்பெண்ணேநானபாடலாடல்பயிலேனே. (௯)

செக்கர்ச்சடையாரொற்றிநகர்ச்சேருஞ்செல்வத்தியாகரவர்
மிக்கற்புதவாண்முகத்தினகைவிளங்கவிரும்பிவரும்பவனி
மக்கட்பிறவியெடுத்தபயனவசிக்கவணங்கிக்கண்டலது
நக்கற்கியைந்தபெண்ணேநான்ஞாலத்தெவையுநயவேனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருவொற்றியூர்.

## வியப்புமொழி.

நற்றாய்நயத்தல.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

மாதர்மணியேமகளேநீவாய்த்தத்தவந்தானயாதறியேன
வேதரனந்தர்மாலனந்தாமேவிவணங்கக்காணபரியார்
நாதர்நடனநாயகனாநல்லோருளத்துணணணுகின்றோ
கோதறியாத்தியாகர்தமைக்கூடியுடலங்குளிர்ந்தனையே. (௧)

திருவிற்றோன்றுமகளேநீசெய்தத்தவந்தானயாரறிவார்
மருவிற்றோன்றுங்கொன்றையந்தார்மார்பரொற்றிமாநகரார
கருவிற்றோன்றுமெங்களுயிர்க்கனிந்தகருணையினாற
குருவிற்றோன்றுந்தியாகர்தமைக்கூடியுடலங்குளிர்ந்தனையே (௨)

என்னாருயிர்போன்மகளேநீயெனனதவந்தானியற்றினையோ
பொன்னார்புயனுமலரோனும்போற்றிவணங்கும்பொற்பத்தர்
தென்னாரொற்றித்திருநகரர்தியாகரெனுமோர்திருப்பெயரர
கொன்னார்சூலப்படையவரைக்கூடியுடலங்குளிர்ந்தனையே (௩)

சேலங்கர்க்கண்மகளேநீசெய்தத்தவந்தானசெப்பரிதான்
மாலையயனைவானவரைவருத்தும்படிக்குமதித்தெழுந்த
வேலைவிடத்தைமிடற்றணிந்தார்வீட்டுநெறியாமரசியற்செங்
கோலையளித்தாரவர்தம்மைக்கூடியுடலங்குளிர்ந்தனையே. (௪)

தேனார்குதலைமகளேநீசெய்தத்தவந்தானெத்தவமோ
மானார்கரத்தார்மழவிடைமேல்வருவார்மருவார்கொன்றையினார
பானார்நீற்றர்பசுபதியார்பவளவண்ணர்பல்சடைமேற்
கோனேர்பிறையாரவர்தம்மைக்கூடியுடலங்குளிர்ந்தனையே. (௫)

வில்லார்நுதலாய்மகளேநீமேலைநாட்செய்தவமெதுவோ
கல்லாருள்ளங்கலவாதார்காமனெரியக்கண்விழித்தார்
வில்லார்விசயற்கருள்புரிந்தார்விளங்குமொற்றிமேவிநின்றார்
கொல்லார்நெறியாரவர்தம்மைக்கூடியுடலங்குளிர்ந்தனையே. (௬)

ஒன்றாகியிரண்டாகியொன்றிரண்டினடுவேயுற்றவநுபவமயமாயொளிரடிகள்வருந்த, வன்றாநடந்திரவில்யானுறையுமிடத்தேயடைந்துகதவந்திறப்பித்தனைபொடேனையழைத்து, நன்றாரவெனதுகரத்தொன்றருளியிங்கேநண்ணிநீயெண்ணியவாநடத்துகவென்றுரைத்தா, யின்றாவந்ததனையுணர்த்திலேனின்னருளையென்புகல்வேனமணிமன்றிலிலங்கியசற்குருவே. (௪௬)

எங்கும்விளங்குவதாகியின்பமயமாகியென்றுணர்வாகுணாவுதருமிணையடிகள்வருந்த, பொங்குமிரவிடைநடந்துநானுறையுமிடத்தேபோந்துமணிக்கதவுதனைக்காப்பவிழ்க்கப்புரிந்து, தங்குமடியேனையழைத்தங்கையிலொன்றளித்தேதயவினொடுவாழ்கவெனத்தனித்திருவாயமலர்ந்தா, யிங்குநினதருட்பெருமையெனனுரைப்பேன்பொதுவில்நடம்புரிகின்றவெனனுடைநாயகனே. (௪௭)

சித்தெவையும்வியத்தியுறுஞ்சுத்தசிவசித்தாய்ச்சித்தமகிற்றித்திகழுந்திருவடிகளவருந்த, மத்தவிரவிடைநடந்துவந்தருளியடியேன்வாழுமனைத்தெருக்கதவுதிறப்பித்தங்கடைந்து, வத்தகவினெனையழைத்தென்னங்கையிலொன்றளித்தாயனையினுமனபுடையாய்நின்னருளென்னெனபேன், முத்தாகுமுக்காணமன்றில்நடம்புரியுமுக்கணுடையானந்தசெக்கர்மணிமலையே. (௪௮)

சகலமொடுகேவலமுந்தாக்காதவிடத்தேதற்பரமாய்விளங்குகின்றதாண்மலர்கள்வருந்த, பகலொழியநடுவிரவினடந்தருளியடியேன்பரியுமிடத்தடைந்துமணிக்கதவுதிறப்பித்துப், புகலுறுகவருகவெனவழைத்தெனதுகரத்தேபொருந்தவொன்றுகொடுத்தனைநின்பொன்னருளென்னென்பே, னுகலொழியப்பெருந்தவர்களுற்றுமகிழ்ந்தேத்தவுயர்பொதுவில்நடமுடையபரம்பொருளே. (௪௯)

உள்ளுருகுந்தருணத்தேயொளிகாட்டிவிளங்குமுயர்மலர்ச்சேவடிவருந்தவுவந்துநடந்தருளிக், கள்ளமனத்தேனிருக்குமிடந்தேடியடைந்துகதவுதிறப்பித்தருளிக்களித்தெனையங்கழைத்து, நள்ளுலகிலுனக்கிதுநாநலகினேம்மகிழ்ந்துநாளுமுயிர்க்கிதம்புரிந்துநடத்தியெனவுரைத்தாய, தெள்ளுமமுதாயனபாசித்தமெலாமினிக்குஞ்செழுங்கனியேமணிமன்றிற்றிருநடநாயகனே (௫௰)

தன்னுருவங்காட்டாதமலவிரவுவிடியுந்தருணத்தேயுதயஞ்செய்தாண்மலர்கள்வருந்தப், பொன்னுருவத்திருமேனிகொண்டுநடந்தடியேன்பொருந்துமிடந்தடைந்துகதவந்திறக்கப்புரிந்து, தன்னுருவம்போன்றதொன்றங்கெனையழைத்தென்கரத்தேதந்தருளிமகிழ்ந்திங்கேதங்குகவென்றுரைத்தா, யென்னுருவமெனக்குணர்த்தியருளியநின்பெருமையெனனுரைப்பேனமணிமன்றிலினடத்தரசே. (௫௧)

அண்டவகைபிண்டவகையனைத்துமுதித்தொங்குமணிமலர்ச்சேவடிவருந்தமடையநடந்தருளிக், கண்டவருங்காணுதற்கேவிரவுதனில்யான்கருதுமிடத்தடைந்துகதவந்திறக்கப்புரிந்து, தொண்டனெனவெனையுமழைத்தென்கையிலொன்றளித்தாயதுரையேநின்னருட்பெருமைத்தொன்மையையென்னென்பே, னுண்டவர்களுளுந்தோறுமுவட்டாதவமுதேயுயர்பொதுவின்நடமுடையபரம்பொருளே. (௫௨)

அறிவுடையாருள்ளகப்போதலருகின்ற தருணத்தருண்மணந்தேனுகியுற்றவடியிணைகள்வருந்தப், பிறிவுடையேனிருக்குமிடந்தேடிநடந்தடைந்துபெருங்கதவந்திறப்பித்துப்பேயனெனையழைத்துச், செறிவுடையாயிதுவாங்கென்றுதவுநான்மறைபத்திரும்பவுமென்கைதனிலேசேரவளித்தனையே, பொறிவறியேனளவினிலுன்கருணையையென்னெனபேனபொற்பொதுவினடமபுரியும்பூரணவான்பொருளே. (௫௩)

விடையமொன்றுங்காணுதவெளிநடுவே யொளியாயவிளங்குகின்றசேவடிகண்மிகவருநதநடநது, கடையனையுங்குறிககொண்டுகெருதுமிடத்தடைந்துகதவுதிறப்பிததெனதுகையிலொனறுகொடுகக, விடையினதுநானமறுப்பமறுககேலென்மகனேயெனறுபினனுஙகொடுததாயநினனினனருளெனனெனம்ப,னுடையபரம்பொருளேயெனனுயிாதுணையேபொதுவிலுய்யும்வகையருணடனஞ்செயயுமொளிமணியே.

நான்றனிககுநதருணததேதோனறுகின்றதுணையாயநான்றனியாவிடத்தெனக்குததோனறுததுணையா, யேனறருளுந்திருவடிகளவருநதநடநதருளியானுறையுமிடததடைந்துகதவுதிறபபித்து, வான்றவெனையழைததெனதுகையிலொனறுகொடுததாய்ககறிவிலியேனசெயயுமவகையறியேனின்சருணை, யீனறவட்குமிலலையெனநனகறிநதேனபொதுவிலினபநடமபுரிகினறவெனனுயிர்நாயகனே. (௫௫)

அருள்விளங்குமுள்ளகததேயதுவதுவாயவிளங்குமணிமலர்ச்சேவடிவருத்தமடையநடநதருளிப், பொருளவிளங்காநடுவிரவினுனுறையுமிடததேபோநதுதெருககாப்பவிழ்ககப்புரிநதெனையஙகழைததது, தெருளவிளஙகுமொருபொருளனசெங்கைதனிலளிததாயசிவபெருமானபெருஙகருணைததிறததினையெனனெனபேன, மருள்விளஙகியுணாசசியுறததிருமணிமனறிடததேமனனுயிருககினபருளவயங்குநடத்தரசே.

பருவமுறறதருணததே சாககரையுநதேனும்பாலுநெய்யுமளிநத நறும்பழரசமும்போல, மருவுமுளமுயிருணாவோடெல்லாநதிததிககவயஙகுமடியிணைகண்மிகவருந்தநடநதருளி, தெருவடைநதுநானிருககுமனைககாப்புததிறககச்செயதருளிபபொருளொனறெனசெஙகைதனிலளிததாய, திருமணிமன்றிடைநடிக்கும்பெருமானின்கருணைததிறததினையிசசிறியேனனசெப்புதலெஙஙனமே. (௫௭)

எனனறிவையுணடருளியென்னுடனேகூடியென்னின்பமெனககருளியென்னையுந்தானுககித, தனனறிவாயவிளஙகுகினறபொனனடிகளவருநததனிநடநதுதெருககதவநதாடிறபபிததருளி, முனனறிவிலெனையழைததென்கையிலொன்றுகொடுததமுனனவநினனினனருளையெனனெனயானமொழிவேன், மன்னறிவுககறிவாமபொன்னமபலததேயினபவடிவாகிநடிககின்றமாகருணைமலையே. (௫௮)

பரயோகவநுபவததேயகம்புறந்தோன்றுதபரஞ்சோதியாகுமிணைப்பாதமலர்வருநத,வரயோகாவியப்பவடியேனிருககுமிடததேவநதுதெருககதவுதனைககாப்பவிழ்ககப்புரிநது, திரயோகாககரிதினைவாஙகுகவெனறெனதுசெஙகைதனிலளிததாயநின்றிருவருளென்னெனபே, னுரயோகருளமபோலவிளஙகுமணிமன்றிலுயிாககின்பந்தரநடனமுடையபரமபொருளே. (௫௯)

சொனனிறைநத பொருளுமதனிலககியமுமாகித துரியநடுவிருந்தவடித்துணைவருநதநடநது, கொனனிறைநதவிரவினிடையெழுநதருளிககதவஙகொளுஙகாப்பையவிழ்விததுககொடியேனையழைதது, வெனனிறைந்தவொருபொருளனகையிலளிததருளியெனமகனேவாழ்கவெனவெழிறறிருவாய்மலாநதாய, தன்னிறைந்தநின்கருணைத்தன்மையையென்புகலவேனறனிமனறிலாநநததாண்டவஞ்செய்யரசே. (௬௦)

முததியொனறுவியததியொன்றுகாண்மினென்றாகமததின்முடிகண்முடித்துணைக்கின்றவடிகணமிகவருநதப, பததியொன்றுமில்லாதகடைப்புலையேன்பொருட்டாப்படிறறுளததேனிருககுமிடந்தனைததேடிநடநது, சிததியொன்றுதிருமேனிகாட்டிமனைககதவந்திறப்பிததஙகெனையழைததெனசெங்கையிலேமகிழ்ந்து, சததியொன்றுகொடுத்தாய்நின்றணணருளென்னென்பேன்றனிமன்றுளாநந்தத்தாண்டவஞ்செய்யரசே. (௬௧)

எனக்குநன்மைதீமையென்பதிரண்டுமொத்தவிடத்தேயிரண்டுமொத்ததுத்தோன்றுகின்றவெழிற்பதங்கள்வருந்தத், தனக்குநல்லவண்ணமொன்றுதாங்கிநடந்தருளித் தனித்திரவிற்கடைப்புலையேன்றங்குமிடத்தடைந்து, கனக்குமனைத்தெருக்கதவுகாப்பவிழ்க்கப்புரிந்துகளிப்பொடெனையழைத்தென்றுகையிலொன்றுகொடுத்து,வுனக்கினியவண்ணமிதென்றுரைத்தருளிச்சென்றாயுடையவநின்னருட்பெருமையுரைக்கமுடியாதே. (௬௨)

இம்மையினோடம்மையினுமெய்துகின்றவின்பமெனைத்தொன்றுமவேண்டாதவியற்கைவருந்தருண,மெம்மையினுநிறைசொருபசுத்தசுகாரம்பமியற்சொருபசுத்தசுகவநுபவமென்றிரண்டாயச், செம்மையிலேவிளங்குகின்றதிருவடிகள்வருந்தச்சிறியேன்பாலடைந்தென்றுசெங்கையிலொன்றளித்தா, யும்மையிலேயான்செய்தவமியாதெனவுமறியேனுயர்பொதுவிலின்பநடமுடையபரம்பொருளே. (௬௩)

அன்பளிப்பதொன்றுபின்னரின்பளிப்பதொன்றென்றறிஞரெலாமதிக்கின்றவடிமலர்கள்வருந்த, வென்பளித்தவுடல்கடொறுமுயிர்க்குயிராயிருக்குமெய்ப்பெருமானடந்தருளிக்கதவுதிறப்பித்துத், துன்பளிக்குநெஞ்சத்தென்றனைக்கூவியழைத்துத்தூயவிளநகைமுகத்தேதுளும்பவெனைநோக்கி, முன்பளித்ததென்றென்றுகையிலொன்றையளித்தாய்முன்னவநின்னருட்பெருமைமுன்னவறியேனே (௬௪)

மோகவிருட்கடல்கடத்தும்புணையொன்றுநிறைந்தமோனசுகமளிப்பிக்குந்துணையொன்றென்றுரைக்கும், யோகமலாத்திருவடிகள்வருந்தநடந்தருளியுணர்விலியேன்பொருட்டாகவிருட்டிரவிலடைந்து,போகமனைப்பெருங்கதவந்திறப்பித்துட்புகுந்துபுலையேனையழைத்தொன்றுபொருந்தவென்கைகொடுத்தாய,நாகமணிப்பணிமிளிரவம்பலத்தேநடஞ்செய்நாயகநின்பெருங்கருணைநவிற்றமுடியாதே (௬௫)

காணுகின்றகண்களுக்குக்காட்டுகின்றவொளியாய்க்காட்டுகின்றவொளிதனக்குக்காட்டுவிக்குமொளியாய்ப், பூணுகின்றதிருவடிகள்வருந்தநடந்தடியேன்பொருந்துமிடத்தடைந்துகதவந்திறக்கப்புரிந்து, கோணுகின்றமனத்தாலேநாணுவதேனமகனேகுறைவறவாழ்கெனமகிழ்ந்துகொடுத்தனையொன்றெனக்கு, மாணுகின்றநின்னருளின்பெருமையையென்னென்பேன்மணிமன்றிலானந்தமாநடஞ்செய்யரசே (௬௬)

ஆறாறுதத்துவத்தின்சொருபமுதலனைத்துமறிவிக்குமொன்றவற்றினப்பாலேயிருந்த, வீறுபதற்சொருபமுதலனைத்துமறிவில்விளக்குவிக்குமொன்றென்றுவிளைவறிந்தோர்விளம்பும், பேறுயர்திருவடிகள்வருந்தநடந்திரவிற்பேயடியேனிருக்குமிடத்தடைந்தென்னையழைத்துச்,சோறுயர்பொருளொன்றென்கரத்தளித்தாய்பொதுவிற்சோதிநின்றருட்பெருமையோதிமுடியாதே (௬௭)

கருவிகளோடமமுடனேகலந்துள[illegible]யியக்கிக்காட்டுமொன்றாகக்கருவிகரணங்களனைத்து, மொருவியப்பாற்படுத்திநமையொருதனியாக்குவதொன்றுபயமென்பெரியசொலுமபயபதம்வருந்தத், துருவிப்படியேனிருக்குமிடத்திரவிலடைந்துதுணிந்தென்றன்கையிலொன்றுசோதியுறக்கொடுத்து, வெருவியிடேலின்றுமுதன்மிகமகிழ்கவென்றாய்வித்தகநின்றிருவருளைவியக்கமுடியாதே. (௬௮)

ஆதியிலேகலப்பொழியவாணவமசுத்தியளித்தாங்கதுவதுவாக்குமவதொன்றுமதுவதுவாயாக்குஞ், சோதியிலேதானாகிச்சூழவதொன்றுமென்று[illegible]சூழ்ச்சியறிந்தோர்புகலுந்துணையடிகள்வருந்த, வீதியிலேநடந்தடியேனிருக்குமிடந்தேடிவிரும்பியடைந்தெனைக்கூவிவிளைவொன்றுகொடுத்தாய, பாதியிலே[illegible]யானருண்பசுபதிநின்கருணைப்பண்பையறிந்தேனொழியாநண்பையடைந்தேனே. (௬௯)

இருட்டாயமலச்சிறையிலிருக்குநமையெல்லாமெடுப்பதொன்றுமின்பநிலைகொடுப்பதொன்றுமெனவே, பொருட்டாயார்போற்றுகின்றபொன்னடிகள்வருந்தப்பொறையிரவிலியானிருக்குமிடந்தேடிப்புகுந்து, மருட்டாயதிருந்தேனைக்கூவிவரவழைத்துவண்ணமொன்றென்கைதனிலேமகிழ்ந்தளித்தாய்நின்ற, னருட்டாயப்பெருமைதனையென்னுரைப்பேன்பொதுவிலானந்தத்திருநடஞ்செய்தருளுகின்றவரசே. (௭௰)

உன்மணியினுள்ளகத்தேயொளிருவதொன்றாகியுற்றவதனைவெளிப்புறத்தேயோங்குவதொன்றாகிச், சின்மயமாய்விளங்குகின்றதிருவடிகள்வருந்தச்சிறுநாயேன்பொருட்டாகத்தெருவினடந்தருளிப், பொன்மயமாந்திருமேனிவிளங்கவென்பாலடைந்துபொருளொன்றென்கைதனிலேபொருந்தவளித்தனையே, நின்மலனேநின்னருளையென்புகல்வேன்பொதுவினிறைந்தவின்பவடிவாகிநிருத்தமிடும்பதியே. (௭௧)

ஐவர்களுக்கைந்தொழிலுமளித்திடவொன்றன்றுமத்தொழிற்காரணம்புரிந்துகளித்திடவொன்றன்று, தெய்வநெறியென்றறிஞர்புகழ்ந்துபுகழ்ந்தேத்துந்திருவடிகண்மிகவருந்தத்தெருவினிடைநடந்து, கைவரயானிருக்குமனைக்கதவுதிறப்பித்துக்களித்தெனையங்கழைத்தென்றன்கையிலொன்றுகொடுத்தாய், சைவமணிமன்றிடத்தேதனிநடம்புரியுந்தற்பரநின்னருட்பெருமைசாற்றமுடியாதே (௭௨)

அருளுதிக்குந்தருணத்தேயமுதவடிவாகியானந்தமயமாகியமர்ந்ததிருவடிக, ளிருளுதிக்குமிரவினிடைவருந்தநடந்தருளியானிருக்குமனைக்கதவந்திறப்பித்தங்கடைந்து, மருளுதிக்குமனத்தேனைவரவழைத்துநோக்கிமகிழ்ந்தெனதுகரத்தொன்றுவழங்கியசற்குருவே, தெருளுதிக்குமணிமன்றிற்றிருநடஞ்செய்யரசேசிவபெருமானின்கருணைத்திறத்தைவியக்கேனே (௭௩)

நான்கண்டபோதுசுயஞ்சோதிமயமாகிநான்பிடித்தபோதுமதிசளிந்தவண்ணமாகித், தேன்கொண்டபாலெனநானசிந்திக்குந்தோறுந்தித்திப்பதாகியென்றன்சென்னிமிசைமகிழ்ந்து, தான்கொண்டுவைத்தவந்நாளில்லெனென்றனுடம்புந்தகவுயிருங்குளிர்வித்ததாண்மலர்கள்வருந்த, வான்கொண்டுநடந்திங்குவந்தெனக்குமளித்தாய்மன்றிடத்தரசேநின்மாகருணைவியப்பே (௭௪)

யோகாந்தமிசையிருப்பதொன்றுகலாந்தத்தேயுவந்திருப்பதொன்றெனமெய்யுணர்வுடையோருணர்வா, லேகாந்தத்திருந்துணருமிணையடிகள்வருந்தவென்பொருட்டாயானிருக்குமிடந்தேடிநடந்து, வாகாந்தச்சணிக்கதவந்திறப்பித்தங்கென்னைவரவழைத்தென்கைதனிலேமகிழ்ந்தொன்றுகொடுத்தாய், மோகாந்தகாரமறுத்தவரேத்தப்பொதுவின்முயங்கிநடம்புரிகின்றமுக்கணுடையரசே. (௭௫)

மகமதிக்குமறையுமறையானமதிக்குமயனுமகிழ்ந்தயனுன்மதிக்குநெடுமாலுநெடுமாலான், மிகமதிக்குமுருத்திரனுமுருத்திரனன்மதிக்குமேலவனுமவன்மதிக்கவிளங்குசதாசிவனுந், தகமதிக்குந்தோறுமவரவருளத்தினமேலுந்தலைமேலுமறைந்துறையுந்தாண்மலர்கள்வருந்த, வகமதிக்கநடந்தென்பாலடைந்தொன்றுகொடுத்தாயம்பலத்திலாடுகின்றாயருட்பெருமைவியப்பே (௭௬)

இருவினையொப்பாகிமலபரிபாகம்பொருந்தவெத்தருணமத்தருணத்தியன்ஞானவொளியா, முருவினையுற்றுள்ளகத்தும்பிரணவமேவடிவாயுற்றுவெளிப்புறத்துமெழுந்துணர்த்தியுரைத்தருளுந், திருவடிகண்மிகவருந்தநடந்தெளியேன்பொருட்டாத்தெருக்கதவந்திறப்பித்துச்சிறியேனையழைத்துக், குருவடிவங்காட்டியொன்றுகொடுத்தாயென்கரத்தேகுணக்குன்றேநின்னருட்கென்குற்றமெலாங்குணமே. (௭௭)

தம்மடியாரவருந்திலதுசகியாதக்கணத்தேசார்ந்துவருத்தங்களெல்லாந்தயவினொடு தவிர்த்தே, யெம்மடியானென்றுகொளுமிணையடிகள்வருந்தவிரவினிடைநடந்தெளியேனிருக்குமிடத்தடைந்து, கம்மடியாக்கதவுபெருங்காப்பவிழப்புரிந்துகடையேனையழைத்தென்றுகையிலொன்றுகொடுத்து, நம்மடியானென்றெனையுந்திருவுளத்தேயடைத்தாய்நடம்புரியுநாயகநின்றன்கருணைவியப்பே. (எஅ)

உம்பருக்குங்கிடைப்பரிதாமணிமன்றிற் பூத்தவுருவடிவங்கடந்தாடுந்திருவடிகளிடத்தே, செம்பருக்கைக்கல்லுறுத்தத்தெருவினடந்திரவிற்றெருக்கத்தவந்திறப்பித்துச்சிறியேனையழைத்து, வம்பருக்குப்பெறலரிதாமொருபொருளென்கரத்தேமகிழ்ந்தளித்துத்துயர்தீர்ந்துவாழ்கவெனவுரைத்தா, யிம்பருக்கோவும்பருக்குமிதுவியப்பாமெங்களிறைவநின்றருட்பெருமையிசைப்பதெவனணிந்தே. (எகூ)

உருவமொருநான்காகியருவமுமவ்வளவா யுருவருவொன்றாகியிவையொன்பானுங்கடந்து, திருவமுடியாப்பரமதுரியநடுவிருந்தசொருபவநுபவமயமாந்துணையடிகள்வருந்த, தெருவமிசைநடந்துசிறுசெம்பரற்கலலுறுத்தச்சிறியேன்பாலடைந்தெனதுசெங்கையிலொன்றளித்தாய, மருவவினியாயமன்றினடம்புரிவாயகருணைக்கடலேநின்பெருமைவழுத்தமுடியாதே. (அ0)

பக்குவத்தாலுயர்வாழைப்பழங்கனிந்தாற்போலும்பரங்கருணையாற்கனிந்தபத்தர்சித்தந்தனிலே, பொக்கமிலப்பழத்தினிலேதெள்ளமுதங்கலந்தாற்போற்கலந்துதித்திக்குமழகுபொன்னடிகள்வருந்த, மிக்கவிருளிரவினிடைநடந்தெளியேனிருக்குமவ்வினம்மனையிலடைந்துகதவந்திறக்கப்புரிந்தே, வொக்கவெனையழைத்தொன்றுகொடுத்திங்கேயிருவென்றுரைத்தனையெம்பெருமானினனுயர்கருணைவியப்பே. (அக)

உளவறிந்தோர்தமக்கெல்லாமுபநிடதப்பொருளாயுளவறியார்க்கிகபரமுமுறுவிக்குமபொருளா, யளவறிந்தவறிவாலேயறிந்திடநின்றுமெய்ம்மலர்களவருந்தியிடநடந்திரவிலடைந்து, களவறிந்தேனறனைக்கூவிக்கதவுதிறப்பித்துக்கையிலொன்றுகொடுத்தாய்நின்கருணையையென்னெனபேன், விளவெறிந்தோனயன்முதலோர்பணிந்தேத்தப்பொதுவில்விளங்குநடம்புரிகின்றதுளங்கொளிமாமணியே (அஉ)

எவ்வுலகுமெவ்வுயிருமெச்செயலுந்தோன்றியியங்குமிடமாகியெல்லா முயங்குமிடமாகித், தெவ்வுலகுநணுபலருஞ்சமனுக்கக்கண்டசித்தாகடஞ்சித்தத்தேதிந்திக்கும்பதங்க, ளிவ்வுலகிலவருந்தநடந்தெனபொருட்டாலிரவிலெழிற்கதவந்திறப்பித்தங்கென்கையிலொன்றளித்தா, யவ்வுலகமுதலுலகமனைத்தூமகிழ்ந்தேத்தவம்பலத்தேநடம்புரியுஞ்செம்பவளக்குன்றே. (அங)

மாணிகொடுமோகினியுமாமாயையுடனே வைந்துவமுமொன்றினொன்றுவதிந்தசையவசைத்தே, யூணிகொடுமுயிருணர்வுங்கலந்துகலப்புறுமாறுவித்துப்பின்கருமவொப்புவருந்தருணத், தேனினொடுகலந்தவமுதெனருசிக்கவிருந்ததிருவடிகள்வருந்தநடந்தடியேன்பாலடைந்து, வானினொடுவிளங்குபொருளொன்றெனக்குமளித்தாய்மன்றினடத்தரசேநினமாகருணைவியப்பே. (அச)

பசுபாசபந்தமறும்பாங்குதனைக்காட்டிப்பரமாகியுள்ளிருந்துபற்றறவும்புரிந்தேயசமாகமானசிவானந்தவநுபவமுமடைவித்தவவநுபவந்தாமாகியசேவடிகள்வசமீதுவருந்தியிடநடந்தடியேனிருக்குமனையயடைந்தணிக்கதவந்திறப்பித்துநின்று, விசுவாசமுறவெனையங்கழைத்தொன்றுகொடுத்தாய்விடையவநின்னருட்பெருமையெனபுகல்வேன்வியந்தே. (அரு)

ஆதியுமாயந்தமுமாய்நடுவாகியாதியந்தநடுவில்லாதமந்தணவானபொருளாய்ச், சோதியுமாய்ச்சோதியெலாந்தோன்றுபரமாகித்துரியமுமாயவிளங்குகின்றதுணையடிக ள்வருந்த, பாதியிரவிடைநடந்துநானிருக்குமிடத்தேபடர்ந்துதெருக்கதவங்காப்பவி ழ்த்திடவும்புரிந்து, வோதியிலங்கெனையழைத்தென்கரத்தொன்றுகொடுத்தாயுடையவ னின்னருட்பெருமையெனனுரைப்பேனுவந்தே. (அசு)

பாடுகின்றமறைகளெலாமொருபுறஞ்சூழ்ந்தாடப்பத்தரொடுமுத்தரெலாம்பார்த்தா டப்பொதுவி, லாடுகின்றதிருவடிகளருந்தநடந்தடியேனடையுமிடத்தடைந்திரவிற் காப்பவிழ்க்கப்புரிந்து, நாடுகின்றசிறியேனையழைத்தருளிநேசகிந்கைமுகஞ்செய்தெ னகரத்தேநலகினையொன்றீதனல், வாடுகின்றவாட்டமெலாந்தவிர்ந்துமகிழ்கின்றேன் மன்னவநின்பொன்னருளையென்னென்வாழ்த்துவனே. (அஎ)

எம்மதத்திலெவரெவாக்குமியைந்தவநுபவமாயெல்லாமாயல்லவுமாயிருந்தபடியிரு ந்தே, யம்மதப்பொன்னம்பலத்திலானந்தநடஞ்செயரும்பெருஞ்சேவடியிணைகளசைந் துமிகவருந்த, விம்மதத்திலென்பொருட்டாயிரவினடந்தருளியெழிற்கதவந்திறப்பி த்தங்கெனையழைத்தென்கரத்தே, சம்மதத்தாலொன்றளித்ததயவினையெனபுகல்வே ன்றமமையறிந்தவரறிவின்முன்னுமொளிமணியே. (அஅ)

பூதவெளிகரணவெளிபகுதிவெளிமாயாபோகவெளிமாமாயாயோகவெளிபுகலும் வேதவெளியபரவிந்துவெளியபரநாதவெளியேகவெளிபரமவெளிஞானவெளிமா நாதவெளிசுத்தவெறுவெளி வெட்டவெளியாந்விலகின்ற வெளிகளெலாநடிக்குமடிவ ருந்த, வேதவெளியேனபொருட்டாநடந்தெனபாலடைந்தேயெனகையிலொன்றளித் தனைநின்னிரக்மெவாக்குளதே. (அகூ)

வானதுவாயப்பசுமலமபோய்த்தனித்துநிற்குந்தருணமவயங்குபரானந்தசுகமவளை ந்துகொளளுந்தருணந், தானதுவாயதுதானுயசசகசமுறுந்தருணந்தடையறவநுபவ மாந்தனமையடிவருந்த, மானதுவாயநடந்தெளியேனிருக்குமிடத்தடைந்துமணிக்க தவந்திறப்பித்துமகிழ்ந்தெனையங்கழைத்து, வானதொருபொருளளித்தாயநினனரு ளென்னென்பேனமபலத்தேநடமபுரியுமெமபெருஞ்சோதியனே. (கூ0)

புன்றலையென்றலையெனநானறியாமலொருநாள்பொருந்தியபோதினிற்சிவந்து பொருந்தியபொன்னடிக, ளின்றலைவினமிகச்சிவந்துவருந்தநடந்தெளியேனிருக்கு மிடத்தடைந்துகதவந்திறக்கப்புரிந்து, மன்றலினங்கெனையழைத்தெனகையிலொன றுகொடுத்தாயமன்னவநின்பெருங்கருணைவண்மையையென்னென்பேன,பொன்றலி லாசசித்தாமுத்தாபோற்றமணிமன்றிறபுயங்கநடம்புரிகின்றவயங்கொளிமாமணியே.

சஞ்சமுறுமுயிர்க்குணாவாயின்பமுமாய்நிறைந்ததமபெருமைதாமறியாததன் மையவாயொருநாள், வஞ்சகனேனபுன்றலையிலவைத்திடவுஞ்சிவந்துவருந்தியசேவ டியிணையும்வருந்தநடந்தருளி, யெஞ்சலிலாவிரவினிடையானிருக்குமிடஞ்சேர்ந்தெ ழிற்கதவந்திறப்பித்தங்கெனையழைத்தொன்றளித்தாய், விஞ்சுபரானந்தநடம்வியன் பொதுவிற்புரியுமேலவநினனருட்பெருமைவிளம்பலெவன்வியந்தே. (கூஉ)

எழுத்தினொடுபதமாகிமந்திரமாய்ப் புவநமெல்லாமாய்த்தத்துவமாயியம் புகலை யாகி, வழுத்துமிவைக்குளளாகிப்புறமாகிநடத்துமவழியாகிநடத்துவிக்குமன்னிறை யுமாகி, யழுத்துறுமிங்கிவையெலலாமல்லனவாயப்பாலாகியதற்கப்பாலுமானபதம்வ ருந்த, விழைந்துநடந்திரவிலெனபாலடைந்தொன்றுகொடுத்தாயெம்பெருமானின் பெருமையெனனுரைப்பேன்வியந்தே. (கூ௩)

மாவின்மணப்போர்விடைமேனந்திவிடைமேலும் வயங்கியன்பர்குறைதவிர்த்து வாழ்வளிப்பதன்றிப், பூவின்மணம்போலுயிர்க்குயிராகிநிறைந்து போகமளித்தருள்கின்றபொன்னடிகள்வருந்தத், தாவிநடந்திரவின்மனைக்கதவுதிறப்பித்தே தயவுடனெங்கெனையழைத்துத்தக்கதொன்றுகொடுத்தாய், நாவின்மணந்துறப்புலவர்வியந்தேத்தும் பொதுவினடம்புரிநாயகநின்றன்கருணையிதுவே. (கூச)

மணப்போதுவீற்றிருந்தான்மாலவன்மற்றவருமனவழுக்காறுறச்சிறியேன்வருந்தியநாளந்தோ, கணப்போதுந்தரியாமற்கருணையடிவருந்தக்கங்குலிலேநடந்தென்னைக்கருதியொன்றுகொடுத்தா, யுணப்போதுபோக்கின்னமுன்னனுளவறியாமையினுளவறிந்தேனிந்நாளென்னுள்ளமகிழ்வுற்றேன், றணப்போதுமறைகளெலாந்தனித்தனி நின்றேத்தத்தனிமன்றிலானந்தத்தாண்டவஞ்செய்யரசே. (கூரு)

நடுங்கமலக்கண்குறுகிநெடுங்கமலக்கண்விளங்குநல்லதிருவடிவருந்தவல்லிரவி னடந்து, தொடங்கதவந்திறப்பித்துத்துணிந்தென்னையங்கழைத்துத்துயரமெலாம்விடுக விதுதொடுகவெனக்கொடுத்தாய், கொடுங்குணத்தேனளவினிலென்குற்றமெலாங்குணமாகக்கொண்டகுணக்குன்றேநின்குறிப்பினையென்புகலே, னிடுங்கடுகவென்றுணர்த்தியேற்றுகின்றவறிவோரோத்தமணிப்பொதுவிலருட்கூத்துடையபொருளே. (கூசா)

வெய்யபவக்கோடையிலேமிகவிளைத்துமெலிந்தமெய்யடியார்தமக்கெல்லாம்விரும்புகுளிர்ச்சோலைத், துய்யநிழலாயமுதாய்மெலிவனைத்துந்தவிர்க்குந்துணையடிகண்மிக வருந்தத்துணிந்துநடந்தடியே, னுய்யநடுவிரவினில்யானிருக்குமிடத்தடைந்தேயுன் கதவந்திறப்பித்தங்குவந்தழைத்தொன்றளித்தாய், வையகமும்வானகமும்வாழமணிப்பொதுவின்மாநடஞ்செய்யரசேநின்வண்மையையெவ்வாக்குளதே. (கூஎ)

சிறியவனேன்சிறுமையெலாந்திருவுளங்கொள்ளாதென்சென்னிமிசையமர்ந்தருளுந்திருவடிகள்வருந்தச், செறியிரவினடந்தணைந்துநானிருக்குமிடத்தேதெருக்கதவந்திறப்பித்துச்சிறப்பினெனையழைத்துப், பிறிவிலதிங்கிதுதனைநீபெறுகவெனப்பரிந்துபேசியொன்றுகொடுத்தாய்நின்பெருமையையென்னென்பேன், பொறியினறவோர்துதிக்கப்பொதுவினடம்புரியும்பொருளேநின்னருளேமெய்ப்பொருளெனத்தேர்ந்தனனே.

அடிநாளிலடியேனையறிவுகுறிக்கொள்ளாதாட்கொண்டென்சென்னிமிசையமர்ந்தபதம்வருந்தப், படிநாளினடந்திரவிலடைந்தருளித்தெருவிற்படாகதவந்திறப்பித்துப்பரிந்தெனையங்கழைத்துப், பிடிநாளுமகிழ்ந்துனதுமனங்கொண்டபடியேபோறஞ்செய்துறுகவெனப்பேசியொன்றுகொடுத்தாய் பொடிநாளுமணிந்துமணிப்பொதுவினடம்புரியும்பொருளேநின்னருளேமெய்ப்பொருளெனத்தேர்ந்தனனே. (கூகூ)

உலகியலோடருளியலுமொருங்கறியச்சிறியேனுணர்விலிருந்துணர்த்தியென்றுயிர்க்குயிராயவிளங்கித், திலகமெனத்திகழ்ந்தெனதுசென்னிமிசையமர்ந்ததிருவடிகள்வருந்தநடைசெய்தருளியடியே, னிலகுமனைக்கதவிரவிற்றிறப்பித்தங்கெனையினிதழைத்தொன்றளித்துமகிழ்ந்தினனுநெடுங்காலம், 'புலவாதொழுகவென்றுரையபொதுவினடம்புரியும்பொருளேநின்னருளேமெய்ப்பொருளெனத்தேர்ந்தனனே. (க00)

திருச்சிற்றம்பலம்.

---

அருட்பிரகாசமாலை

முற்றிற்று.

உ

சிவமயம.

சிவகணபதிதுணை.

திருச்சிற்றமபலம்.

# பிரசாதமாலை.

எணசீாககழிநெடிலடியாசிரியவிருததம.

திருச்சிற்றம்பலம்.

திருவுருககொண்டெழுநதருளிசசிறியேனமுனனடைநது திருநீறறுப்பையவிழ்ததுசசெஞ்சுடாபபூவளிககத, தருவுருககொண்டெதிாவணஙகிவாஙகியநான்மீட்டுந்தயாநிதியேதிருநீறுநதருகவெனககேட்ப, மருவுருககொண்டனறளிததாநதிருநீறின்றுனககுமகிழநதளிததாமிவையெனறுவாயமலாநதுநினருய, குருவுருககொண்டம்பலததேயருணடநமபுரியுஙகுருமணியேயெனனைமுனனுட்கொணடகுணககுனறே. (க)

எனவடிவநதனழைப்பவொருபொனவடிவநதரிததேயென்முனடைந்தெனைநோககியிளநகைசெயதருளித, தனவடிவததிருநீறறுததனிபபையவிழ்தெதனககுததசுசுடாப்பூவளிககவுநானருனவாஙகிககளிதது, மினவடிவப்பெருநதகையேதிருநீறுநதருதல்வேணடுமெனமுனனரதுவிருமபியளிததனநா, முன்வடிவிறகாணடியெனவுரைததருளிநினருயொளிநடஞசெயயமபலததேவெளிநடஞசெயயரசே. (உ)

அழகுநிறைநதிலகவொருதிருமேனிதரிததேயடியேனமுனனெழுநதருளியருணைகொணடடியாா, கழகநடுவெனையிருததியவாககெலலாநீறுகளிததருளியெனனளவிறகருணைமுகமலாநது,குழகியறசெஞசுடாப்பூவைப்பொககணத்திலெடுததுக்கொடுததருளிநினறனைநினகுறிப்பறியேனகுருவே, மழகளிறறினுரிவிளஙகமணிப்பொதுவிறசோதிமயவடிவோடினபநடமவாயநதியற்றுமபதியே (ங)

விலைகடநதமணியெனவோாதிருமேனிதரிததுவினையேனமுனனெழுநதருளிமெயயடியாவிருமபக், கலைகடநதபொருட்கெலலாங்கரைகடநதுநாதககதிகடநதபெருங்கருணைககடைககணமலாநதருளி, யலைகடநதகடனமலாநதமணசசெழும்பூவடியேனஙகைதனிலளிததனைநினனருடகுறிப்பேதறியேன, மலைகடநதநெடுநதோளிலிதழியசைநதாடமனறினடமபுரிகினறவள்ளலருட்குருவே (ச)

உலர்நதமரந்தழைக்குமொருதிருவுருவநதாஙகியுணாவிலியேன்முன்னருவந்துறுகருணைதுளுமப, மலாநதமுகங்காட்டிநினறுதிருநீறறுப்பையைமலர்க்கரத்தாலவிழ்த்தஙகுவதிநதவாகட்கெல்லா, மலர்நததிருநீறளிததுப்பினனொன்றன்கரத்திலருணமணபபூவளித்தனைநின்னருட்குறிப்பேதறியேன், கலந்தவரைக்கலந்துமணிக்கநகமன்றினடஞசெயகருணைநெடுஙகடலேயென் கண்ணமர்நதவொளியே.

பிழையலதொன் றறியாதசிறியேன் முன்புரிந்தபெருந்தவமோதிருவருளின்பெருமையிதோவறியேன், மழையெனநின் றிலகுதிருமணிமிடற்றிற்படிகவடந்திகழ்நடந்துருவடிவதுகொண்டடைந்து, விழைவினொடென்னெதிரநின்று திருநீற்றுக்கோயில்விரித்தருளியருண்மணப்பூவிளக்கமொன் றுகொடுத்தாய், குழையசையச்சடையசையக்குலவுபொன்னம்பலத்தேகூத்தியற்றியென்னைமுன்னாட்கொண்டசிவக்கொழுந்தே

முத்தேவராழ்க்காற்றின் மூழ்கியிடத்தனித்தமுழுமணிபோன்றொருவடிவென் முன்கொடுவந்தருளி, யத்தேவர்தமக்குமிகவரியவெனுமணப்பூவென்கரத்தேகொடுத்தனைநின்னெண்ணமீதென் றறியேன், சித்தேயென்பவருமொருசத்தேயென்பவருந்தேறியபின்னென்றுகத்தெரிந்துகொள்ளும்பொதுவி, லத்தேவாவழுத்தவின்பவுருவாகிநடஞ்செயாரமுதேயென் னுயிருக்கானபெருந்துணையே. (௭)

தெள்ளமுதமனையவொருதிருவுருவந்தாங்கிச்சிறியேன் முன்னெழுந்தருளிச்செழுமணப்பூவளித்தா, யுள்ளமுதமாகியநின்றிருக்குறிப்பேதுணரேனுடையவனேயுடையவனேயுலகுணராவொளியே, கள்ளமிலாவறிவாகியவ்வறிவுக்கறிவாயக்கலந்துநின்றபெருங்கருணைக்கடலேயென்கண்ணே, கொள்ளுதொறுங்கரணமெலாங்கரைந்துகனிந்தினிக்குங்கொழுங்கனியேகோற்றேனேபொதுவிளங்குங்குருவே. (௮)

கண்விருப்பங்கொளக்கரணங்கனிந்துகனிந்துருகக்கருணைவடிவெடுத்தருளிக்கடையேன் முன்கலந்து, மண்விருப்பங்கொளுமணப்பூமகிழ்ந்தெனக்குக்கொடுத்துவாழ்கவெனநின் றனைநின்மனக்குறிப்பேதறியேன், பெண்விருப்பந்தவிர்க்குமொருசிவகாமவல்லிப்பெண்விருப்பம்பெறவிருவாபெரியருளங்களிப்பப், பண்விருப்பந்தருமறைகள்பலபலநின்றேத்தப்பரமசிதம்பரநடனம்பயின்றபசுபதியே. (௯)

உன்னுதற்குமுணர்வதற்குமுவட்டாதவடிவமொன்றெடுத்துமெய்யன்பருவக்கவெழுந்தருளி, முன்னுதற்கோரணுத்துணையுந்தரமில்லாச்சிறியேன் முகநோக்கிச்செழுமணப்பூமுகமலர்ந்துகொடுத்தாய், துன்னுதற்கிங்கரிதாநின்றிருவுள்ளக்குறிப்பைத்துணிந்தறியேனென்னினுமோர்துணிவினுவக்கின்றேன், பொன்னுதற்குத்திலகமெனுஞ்சிவகாமவல்லிப்பூவையொருபுறங்களிப்பப்பொதுநடஞ்செயபொருளே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

பிரசாதமாலை

முற்றிற்று.

உ

சிவமயம

சிவகணபதிதுணை

திருச்சிற்றம்பலம்.



# ஆநந்தமாலை.

எணசீாககழிநெடிலடியாசிரியவிருத்தம.

**திருச்சிற்றம்பலம்.**

திருவருடுந்திருவடிப்பொற்சிலம்பசையநடநதெனசிநதையிலேபுகுந்துநின்பாற் சேர்ந்துகலநதிருநதா, டெருமரலற்றுயாந்தமறைசசிரததமர்ந்தபுநிதைசிவகாமவல்லி பெருநதேவியுளஙகளிப்பப், பொருவருமெய்யன்புடையாரிருவருஙகண்டுவநதுபோ ற்றமணிபபொதுவினடமபுரிகினறதுரையே, பருவரலற்றடிசசிறியேன்பெருவரமபெ றறுனையேபாடுகின்றேன்பெரியவருட்பருவமடைநதனனே. (க)

சண்பைமறைககொழுநதுமகிழ்தரவமுதஙகொடுததாடயவுடையாளெனையுடை யாள்சாவசததியுடையாள, செண்பகப்பொன்மேனியினுள்செய்யமலாப்பததாள்சிவ காமவல்லிபெருநதேவியுளஙகளிபபப், பணயகாபொனனம்பலததேயாநநதநடஞ்செ யபரமபரநினறிருவருளைபபாடுகின்றேனமகிழ்நது, வெண்பகாகுற்றங்களெலாஙகுண மாககொளளுமெநதுரையெனறெணணுகினறவெணணமதனாலே. (உ)

அருளுடையநாயகியென்னமமையடியார்மேலன்புடையாளமுதனையாளற்புதப் பெண்ணரசி,தெருளுடையசிநதையிலேதிததிககுமபதத்தாள்சிவகாமவல்லிபெருந்தே வியுளஙகளிப்ப,மருளுடையமாயையெலாநதேயமணிமன்றின்மாநடஞ்செயதுரையே நின்மனனருளினறிறததை, யிருளுடையமனசசிறியேனபாடுகினறேன்பருவமெய்தி னனென்றறிஞரொலாமெணணிமதிததிடவே. (௩)

மாசுடையேன்பிழையனைத்தும்பொறுததுவரமளிததாண்மஙகையர்களுயகினான் மறையணிந்தபததா, டேசுடையாளாநநததெள்ளமுதவடிவாள்சிவகாமவல்லிபெரு நதேவியுளஙகளிப்பக,காசுடையபவககோட்டைகொருநிழலாம்பொதுவிற்காநடஞ்செ ய்துரையேநின்கருணையையேகருதி, யாசுடையேன்பாடுகின்றேன்றுயரமெலாந்தவிர் நதேனனபாபெறுமின்பநிலையநுபவிக்கினறேனே. (௪)

பொய்யாதவரமெனக்குப்புரிந்தபரம்பரைவான்பூதமுதற்கருவியெலாம்பூட்டுவிக குந்திறததாள், செயயாளுஙகலையவளுமுருத்திரையும்வணஙகுஞ்சிவகாமவல்லிபெருந் தேவியுளங்களிப்பக், கையாதவின்பநடங்கநகமணிப்பொதுவிறகளித்தியற்றுந்துரை யேநின்கருணையைநான்கருதி, நையாதவண்ணமெலாம்பாடுகின்றேன்பருவநண்ணிய புண்ணியரெல்லாநயநதுமகிழ்நதிடவே. (௫)

அறங்கனிந்தவருட்கொடியெனனமமையமுதளித்தாளகிலாணடவல்விசிவாநந
திசௌந்தரிசீத, திறங்கலந்தநாதமணிச்சிலம்பணிந்தபதத்தாள்சிவகாமவல்லிபெரு
ந்தேவியுளங்களிப்ப, மறங்கனிந்தாாமயககமெலாநதெளியமணிப்பொதுவினமாநடஞ
செயதுரையேநினவணமைததனையடியேன், புறங்கவியப்பாடுகினறேனகஙகவியப்பா
டும்புணணியமொல்லாமிவனேர்புதியனெனக்கொளவே. (௬)

உள்ளமுதமூறறுவிக்குமுத்தமியென்னம்மையோங்காரபீடமிசைப்பாஙசாகவி
ருந்தா, டெள்ளமுதவடிவுடையாள்செலவநல்குமபதததாளசிவகாமவல்லிபெருநதேவி
யுளங்களிபபக, களளமறுததருளவிளககும்வளளனமணிபபொதுவிறகானிறுததிககா
லெடுததுககளிததாடுநதுரையே, யெளளலறபபாடுகினறேனினனருளையருளாலிப்பா
ட்டிறபிழைகுறிததலெஙஙனமிங்ஙனமே. (௭)

பாரூததபசுஙகொடிபொற்பரிவையாகளரசிபரமபரைசிற்பரைபராபரைநிமலையா
தி, சீர்பூததெயவமறைசசிலமபணிநதபதததாளசிவகாமவல்லிபெருநதேவியுளஙகளி
ப்ப, வோபூததமணிமன்றிலினபநடமபுரியுமெனனருமைததுரையேநினனினனருளை
நினைநது, காாபூததகனமழைபோறகணகளினீாசொரிநதுகனிநதுமிகபபாடுகினறக
ளிபபையடைநதனனே. (௮)

பூரணிசிற்போதைசிவபோகிசிவயோகிபூவையாகஞயகியைம்பூதமுநதாஞ
டோரணியுநெடுவீதிததிலலைநகருடையாளசிவகாமவல்லிபெருநதேவியுளஙகளிப்ப
வோணியுமணிமனறிலினபவடிவாகியினபநடமபுரிகினறவெமமுடையதுரையே
தாரணியிலுனைப்பாடுநதரததையடைநதனனெனறனமையெலாநனமையெனசசம்ம
திததவாறே. (௯)

தன்ஞெளியிலுலகமெலாநதாஙகுகினறவிமலைதற்பரையமபரைமாசிதம்பரைசி
ற்சததி, சின்னவயதினிலெனனையாளநினககிசைததாளசிவகாமவல்லிபெருந்தேவியு
ளங்களிப்ப, மன்னியபொனமணிப்பொதுவிலினபநடமபுரிநதுவயஙகுகினறதுரை
யேநின்மாகருணைததிறததை,யுனனியுவநதுணாநதுருகிபபாடுகினறேனெஙகளுடை
யானேநின்னருளினடையாளமிதுவே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

ஆநநதமாலை

முறறிறறு.

உ

சிவமயம்

சிவகணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# பத்திமாலை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

அருளுடையாயடியேனுன்னருளருமையறியேனறியாதேமறுத்தபிழையத்தனையும் பொறுத்து, மருளுடையென்றனையழைத்துத்திரும்பவுமென்கரத்தேமகிழ்ந்தளித்த பெருங்கருணைவண்ணமென்றன்மனமுந், தெருளுடையகண்களுமவிட்டகலாதேயினுந்தெரிகின்றதாயினுமென்சிந்தையுருகிலதே, யிருளுடையசிலையுமித்தற்குருகலரித்தலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௧)

அன்புடையாயடியேனுன்னருளருமையறியேனறியாதேமறுத்தபிழையத்தனையும்பொறுத்து, வன்புடையேனென்றனையழைத்துத்திரும்பவுமென்கரத்தேவலிந்தளித்தபெருங்கருணைவண்ணமென்றன்மனமும், மின்புடையகண்களும்விட்டகலாதேயினுமவிளங்குகின்றதாயினுமென்வெய்யமனமுருகா, வென்புடையவுடலுமித்தற்குருகலரித்தலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே (௨)

ஆளுடையாயசிறியேனுன்னருளருமையறியேனறியாதேமறுத்தபிழையத்தனையும் பொறுத்து, வாளுடையேனென்றனையழைத்துத்திரும்பவுமென்கரத்தேவலிந்தளித்தபெருங்கருணைவண்ணமென்றன்மனமு, நீளுடையகண்களுமவிட்டகலாதேயினுநிகழ்கின்றதாயினுமென்னெஞ்சமுருகிலதே, யேளுடையமலையுமித்தற்குருகலரித்தலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௩)

ஆரமுதேயடியேனுன்னருளருமையறியேனறியாதேமறுத்தபிழையத்தனையும்பொறுத்து, வாரமுறவென்னையழைத்துத்திரும்பவுமென்கரத்தேமகிழ்ந்தளித்தபெருங்கருணைவண்ணமென்றன்மனமுஞ், சீருடையகண்களுமவிட்டகலாதேயினுந்தெரிகின்றதாயினுமென்சிந்தையுருகிலதே, யீரமிலாமரமுமித்தற்குருகலரித்தலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே (௪)

அற்புதநின்னருளருமையறியேனுன்சிறிதுமறியாதேமறுத்தபிழையாயிரமும்பொறுத்து, வற்புறவேயென்றனையழைத்துத்திரும்பவுமென்கரத்தேவலிந்தளித்தபெருங்கருணைவண்ணமென்றன்மனமுங், கற்புடையகண்களும்விட்டகலாதேயினுங்காண்கின்றதெனினுமென்கனமனமோவுருகா, விற்புடையவிரும்புமித்தற்குருகலரித்தலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௫)

ஆண்டவநின்னருளருமையறியாதேதிரிந்தேனன்றிரவின்மறுத்தபிழையத்தனையும்பொறுத்து, வேண்டியெனையருகழைத்துத்திரும்பவுமென்கரத்தேமிகவளித்தவருள்வண்ணமவினையுடையேனமனமுங், காண்டகையகண்களும்விட்டகலாதேயினனுங்காண்கின்றதாயினுமென்கருத்துருக்கக்காணே, னீண்டருகாக்கரமிதற்குருகலரிதலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௬)

அரசேநின்றிருவருளினருமையொன்றுமறியேனறியாதேமறுத்தபிழையத்தனையும்பொறுத்து, விரவுமன்பிலெனையழைத்துவலியவுமென்கரத்தேவியந்தளித்தபெருங்கருணைவிளக்கமென்றன்மனமு, முரவுமலர்க்கண்களும்விட்டகலாதேயின்னுமொளிர்கின்றதாயினுமென்னுள்ளமுருகிலதே, யிரவுநிறத்தவருமிதற்குருகலரிதலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௭)

ஐயாநின்னருட்பெருமையருமையொன்றுமறியேனறியாதேமறுத்தபிழையத்தனையும்பொறுத்து, மெய்யாவன்றெனையழைத்துவலியவுமென்கரத்தேவியந்தளித்தபெருங்கருணைவிளக்கமென்றனமனமுங், கையாதுகண்களுமவிட்டகலாதேயின்னுங்காண்கின்றதாயினுமென்கருத்துருகக்காணே, னெய்யாவனபரலுமிதற்குருகலரிதலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௮)

அப்பாநின்றிருவருட்பேரமுதருமையறியேனன்றிரவின்மறுத்தபிழையத்தனையும்பொறுத்து,விப்பாரிலெனையழைத்துவலியவுமென்கரத்தேயினிதளித்தபெருங்கருணையின்பமென்றனமனமுந், துப்பாயகண்களுமவிட்டகலாதேயினனுந்தோன்றுகின்றதாயினுமித்துட்டநெஞ்சமுருகா, வெப்பாவிநெஞ்சுமிதற்குருகலரிதலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௯)

அம்மாநின்னருட்சத்தியருமையொன்றுமறியேனன்றிரவின்மறுத்தபிழையத்தனையும்பொறுத்து, வெம்மாயையகற்றியெனையருகழைத்தென்கரத்தேமிகவளித்தபெருங்கருணைவிளக்கமென்றன்மனமும், மைம்மாழைவிழிகளுமவிட்டகலாதேயினனுமவதிகின்றதாயினுமென்வஞ்சநெஞ்சமுருகா, வெம்மாயநெஞ்சுமிதற்குருகலரிதலவேயினித்தநடம்புரிந்துமன்றிற்றனித்தசிவக்கொழுந்தே. (௰)

திருச்சிற்றம்பலம்.

பத்திமாலை

முற்றிற்று.

உ

சிவமயம்.

சிவகணபதிதுணை

திருச்சிற்றம்பலம்.

# சௌந்தரமாலை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சேலோடுமிணைந்தவிழிச்செல்விபெருந்தேவிசிவகாமவல்லியொடுசிவபோகவடிவாய், மேலோடுகீழ்நடுவுங்கடந்தோங்குவெளியில்விளங்கியநின்றிருவுருவையுளங்கொளும்போதெல்லாம், பாலோடுபழம்பிழிந்துதேன்கலந்துபாகும்பசுநெய்யுங்கூட்டியுண்டபடியிருப்பதென்றான, மாலோடுகாண்கின்றகண்களுக்கங்கிருந்தவண்ணமிந்தவண்ணமெனவெண்ணவுமொண்ணாதே (௧)

இன்பருளும்பெருந்தாயென்னிதயத்தேயிருந்தாளிறைவியொடுமம்பலத்தேயிலங்கியநின்வடிவை, வன்புறுகன்மனக்கொடியேனினைக்குமிடத்தெல்லாமனங்கரைந்து சுகமயமாய்வயங்குமெனிலந்தோ, வன்புடையார்நின்றனைக்கண்டுகொண்டகாலமாங்கவர்கட்கிருந்தவண்ணமீங்கெவர்கள்புகல்வார், துன்புறுதலில்லாதசுத்தநிலையுடையார்தொழுகின்றதோறுமகிழ்ந்தெழுகின்றதுணையே. (௨)

சிவயோகசந்திதருந்தேவியுலகுடையாள்சிவகாமவல்லியொடுஞ்செம்பொன்மணிப்பொதுவில், நவயோகவுருமுடிக்கண்விளங்கியநின்வடிவைநாய்க்கடையேனினைத்தநாளெனக்கேமனமும், பவயோகவிந்தியமுமின்பமயமானபடியென்றான்மெய்யறிவிற்பழுத்தபெருங்குணத்தர், தவயோகர்கண்டவிடத்தவர்க்கிருந்தவண்ணந்தன்னையிந்தவண்ணமெனவென்னையுரைப்பதுவே. (௩)

சித்தியெலாமளித்தசிவசத்தியெனையுடையாள்சிவகாமவல்லியொடுசிவஞானப்பொதுவின், முத்தியெலாந்தரவிளங்குமுன்னவநின்வடிவைமூடமனச்சிறியேனுடைவரும்பொழுது, புத்தியெலாமொன்றாகிப்புத்தமுதமுண்டாற்போலுமிருப்பதுவத்தற்குமேலுமிருப்பதுவேற், பத்தியெலாமுடையவர்கள்காணுமிடத்திருக்கும்படிதானெப்படியோவிப்படியென்பதரிதே. (௪)

தெய்வமெலாம்வணங்குகின்றதேவியெனையளித்தாள்சிவகாமவல்லியொடுதிருமலையம்பலத்தே, சைவமெலாந்தரவிளங்குநின்வடிவைக்கொடியேன்றானினைத்தபோதெனையேநானினைத்ததிலையே, ஐவகையிந்தியங்கடந்தார்கண்டவிடத்திருந்தவநுபவத்தின்வண்ணமதையார்புகலவல்லா, ருய்வகையந்நாளுணர்த்ததனறியுமிந்நாளிலுந்திரவில்வந்துணர்வுரந்தசிவகுருவே. (௫)

தேன்மொழிப்பெண்ணரசியருட்செல்வமெனக்களித்தாள்சிவகாமவல்லியொடு
செம்பொன்மணிப்பொதுவில், வான்மொழியநின்றிலங்குநின்வடிவைச்சிறியேன்மன
ங்கொண்டகாலத்தேவாய்த்தசவநுபவத்தை, நான்மொழியமுடியாதேலன்பாகண்டகா
லநண்ணியமெய்வண்ணமதையெண்ணியெவர்புகல்வார், நூன்மொழிக்கும்பொருட்கு
மிகநுண்ணியதாய்ஞானநோக்குடையார்நோக்கினிலேநோக்கியமெய்ப்பொருளே (௬)

சிற்றிடையெம்பெருமாட்டிதேவர்தொழும்பத்தாள்சிவகாமவல்லியொடுசிறந்த
மணிப்பொதுவில், 'உற்றிடைநின்றிலங்குகின்றநின்வடிவைக்கொடியேனுன்னுந்தோ
றுமுளமிளகித்தளதளவென்றுருகி, மற்றிடையிலவலியாமலாடுகின்றதென்றால்வழிய
டியாவிழிகளினின்மகிழ்ந்துகண்டகாலம், பற்றிடையாதாங்கவர்கட்கிருந்தவண்ணந்
தனையார்பகர்வாரோபகர்வாரேற்பகவனிகாவாரோ (௭)

ஆரமுதமனையவளென்னம்மையபிராமியானந்தவல்லியொடம்பலத்தேவிளங்கும்,
பேரமுதமயமாமுன்றிருவடியைக்குறித்துப்பேசுகின்றபோதுமணம் வீசுகின்றதென
ன்றே, சீரமுதமாகியெல்லாந்தித்திப்பதனபோசிறிதுமிலாக்கடைப்புலையேனறிந்து
ககிங்கென்று, ஊரமுதப்பேரன்பர்பேசுமிடத்தவர்பாலுற்றவண்ணமிற்றெனவுன
ன்முடியாதே. (௮)

பொற்பதத்தாளென்னைவிற்பொன்றுசைப்பவித்தாளபூரணியானந்தசிவபோகவல்லி
யோடு, சொற்பதமுங்கடந்தமன்றிலவிளங்கியநின்வடிவைத்தூய்மையிலேனுன்னுண
னுந்தோறுமனமிளகிச், சிற்பதத்திற்பரஞானமயமாகுமென்றால்தெளிவுடையார்காண
கின்றதிறத்திலவாக்கிருக்கு, நற்பதமெத்தன்மையதோவுரைப்பரிதுமிகவுநாதமுடித
னிற்புரியுஞானநடத்தரசே (௯)

என்பிழையாவையும்பொறுத்தாளென்னைமுன்னேயளித்தாளிறைவிசிவகாமவ
ல்லியென்னம்மையுடனே, யின்பவடிவாயபொதுவிலிலங்கியநின்வண்ணமிற்றென
நானினைத்திடுங்காலெற்றெனவுமொழிவே, னன்புருவாயதுவதுவாயளிந்தபழமாகிய
ப்பழச்சாறாகியதனருஞ்சுவையுமாகி, யென்புருகமனஞானமயமாகுமென்றாலெற்றே
மெய்யன்புடையாரியைந்துகண்டவிடத்தே. (௧௦)

கரும்பனையாளென்னிரண்டுகண்களிலேயிருந்தாள்கற்பகப்பொன்வல்லிசிவகாம
வல்லியுடனே, விரும்புமணிப்பொதுவினிலேவிளங்கியநின்வடிவைவினையுடையேனி
னைக்கின்றவேளையிலென்புகலவே, னிரும்பனையமனநெகிழ்ந்துநெகிழ்ந்துருகியொரு
பேரின்பமயமாகுமெனிலன்பாகண்டகால, மரும்பிமலர்ந்திட்டசிவானந்தவநுபவத்தை
யாரறிவாரீயறிவாயம்பலத்தெம்மரசே (௧௧)

காமசத்தியுடன்களிக்குங்காலையிலேயடியேன்கண்ஞானசத்தியையுங்கலந்துகொ
ளப்புரிந்தாள், வாமசத்திசிவகாமவல்லியொடம்பொதுவில்வயங்கியநின்றிருவடியை
மனங்கொளும்போதெல்லா, மாமசத்தனென்றுமெனக்கேயானந்தவெள்ளமதுததும்பிப
பொங்கிவழிந்தாடுமெனிலந்தோ, வேமசத்தரெனுமறிஞர்கண்டவிடத்திருந்தவினபவ
நுபவப்பெருமையார்புகல்வாரோ. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

சௌந்தரமாலை

முற்றிற்று.

உ

சிவமயம்.

சிவகணபதிதுணை

திருச்சிற்றமபலம்.

# அதிசயமாலை.



எணசீாககழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

அக்கோவீ ததிசயமீ ததிசயமென் புகலவேனயன் முதலோர்நெடுங்காலமயன் முதனீ ததிருநது, மிககோலமிடவுமவாககருளாமலிருளான் மிகமருண்மெதியிலியாய்வினை விரியவிரிதது, விககோலததுடனிருந்தேனை பறியேன்சிறியேனெனைக்கருதியென னிடததேயெழுநதருளியெனையுந, தககோனென்றுலகிசைப்பததன்வணமொன்றளி ததானறனிததசிவகாமவல்லிககினிததநடத்தவனே. (க)

அசசோவீ ததிசயமீ ததிசயமெனபுகலவேனரிமுதலோர்நெடுங்காலம்புரிமுதனீ ததிருநது, நசசோலமிடவுமவாககருளாமன்மருளாளுள்கழிததுககோள்கொழிக்குந டைநாயிற்கடையே, னெச்சோடமிழிவினுககொனறிலலேனுனபொலலேனெனைக கருதியானிருககுமிடததிலெழுநதருளித, தசசோதிவணப்பொருளொன்றெனக்களி ததுககளிததான றனிததசிவகாமவலலிககினிததநடத்தவனே. (உ)

அததோவீ ததிசயமீ ததிசயமென் புகல்வேனந்தணரொல்லாருமறைமந்தணமேபுக ன்று, வொததோலமிடவுமவாககொருசிறிதுமருளாளுதியனையேனவிதியறியேனு ருஙகேனவன்குரஙகே, னித்தோடமிகவுடையேன்கடைநாயக்குஙகடையேனெனைக கருதியானிருககுமிடநதேடிநடநது, சததோடமுறவெனககுஞ்சித்தியொன்றுகொடு ததான் றனிததசிவகாமவல்லிககினிததநடததவனே. (௩)

அநதோவீ ததிசயமீ ததிசயமெனபுகலவேனறிவுடையாரைம்புலனுஞ்செறிவுடை யாராகி, வநதோலமிடவுமவர்க்கருளாமன்மருளானமனஞ்சென்றவழியெல்லாந்தின ஞ்சென்றமதியே,னெந்தோவென் றுலகியம்பவிழிவழியேயுழல்வேனெனைக்கருதியெ ளியேனுனிருககுமிடததடைநது, சநதோடமுறவெனககுநதன்வணமொன்றளிததா ன்றனிததசிவகாமவலலிககினிததநடததவனே. (௪)

அப்பாவீ ததிசயமீ ததிசயமென் புகல்வேனருந்தவர்கள்விரும்பிமிகவருந்தியுளமுய ன்று, விப்பாரிலிருநதிடவுமவாக்கருளான்மருளாலிவ்வுலகநடைவிழைந்துவெவ்வினை யேபுரிநது, வெப்பாலுமிழிநதுமனததிச்சைபுரிகினறேனெனைக்கருதியானிருக்குமிட நதேடியடைநது, தபபாதவொளிவண்ணநதநதென்னையளிததான் றனிததசிவகாம வல்லிககினிததநடததவனே. (௫)

அம்மாவீ ததிசயமீ ததிசயமென் புகல்வேனன்பரொலாமுயன் றுமுயன் றின்பஙடை வான்வருநதி, யெம்மானெனறேததிடவுமவாககருளான்மருளாலிதுநன்மையிதுதீமை யென்றுநினையாமே, மைமமாலிறகளிசிறந்துவல்வினையேபுரியும்வஞ்சகனேன் றனைக் கருதிவநதுமகிழ்நதெனககுந, தம்மானமுறவியந்துசம்மானமளிததான் றனித்தசிவகா மவல்லிககினிததநடததவனே. (௬)

ஆவாவீ ததிசயமீ ததிசயமென்புகல்வேனடியரெலாநினைந்துநினைந்தவிழ்ந்தகநெக்குருகி, யோவாமலரற்றிடவுமவர்க்கருளானமாயையுலகவிடயாநதமுவந்துவந்துமுயன்று, தீவாயநரகினிடைவிழககடவேனெனைததானசிவாயநமவெனப்புகலுநதெளிவுடையனாககிச், சாவாதவரங்கொடுத்துத்தனககடிமைபணிததான்றனிததசிவகாமவல்லிக்கினித்தநடத்தவனே. (௭)

அண்ணாவீ ததிசயமீ ததிசயமென்புகல்வேனறஙகளைந்தநாவினர்களகங்களைந்துகளைந்து, கண்ணாரநீர்பெருககிவருந்தவுமஙகருளான்கடைநாயிறகடையேனமெயககதியையொருசிறிது, மெண்ணாதகொடும்பாவிபபுலைமனததுச்சிறியேனெனைககருதிவலியவுநானிருககுமிடததடைநது, நண்ணாவெண்மதியமுதமுணவொனறுகொடுத்தானறனித்தசிவகாமவல்லிககினிநதநடததவனே. (௮)

ஐயாவீ ததிசயமீ ததிசயமென்புகல்வேனருமையறிந்தருள்விரும்பியுரிமைபலவியற்றிப், பொயயாதநிலைநின்றபுண்ணியாகளிருககப்புலைமனததுச்சிறியேனோபுல்லுநிகரில்லேன், செயயாதசிறுதொழிலேசெயதுழலுஙகடையேனசெருககுடையேனெனைததனதுதிருவுளததிலடைததே, யையாதியநதநடக்காட்டியொன்றுகொடுததான்றனிததசிவகாமவல்லிககினித்தநடததவனே. (௯)

அன்னேவீ ததிசயமீ ததிசயமென்புகல்வேனருளருமையறிநதவர்களருளமுதமவிரும்பி, யெனனேவிஙகருளாமையெனறுகவனறிருப்பயாதுமொருநனறியிலேன்தீதுநெறிநடப்பேன, முனனேபின்னும்மறியாமூடமனப்புலையேனமுழுககொடியேனெனைககருதிமுனனமொழுநதருளி, தனனேடுமிணைந்தவண்ணமொனறெனககுககொடுததானறனிததசிவகாமவலலிககினிததநடததவனே. (௧௦)

ஐயோவீ ததிசயமீ ததிசயமென்புகல்வேனருவினைகளணுகாமலறநெறியேநடநது, மெய்யோதுமறிஞரெலாமவிரும்பியிருநதிடவும வெயயவினைககடல்குளிததுவிழற்கிறைத்துக்களித்துப், பொய்யோதிப்புலைபெருககிநிலைசுருக்கியுழலும்புலைமனதேனெனைககருதிப்புகுந்தருளிக்கருணைச, சையோகமுறவெனககும்வலிநதொனறுகொடுததான்றனிததசிவகாமவல்லிககினிததநடததவனே. (௧௧)

எற்றேயீ ததிசயமீ ததிசயமென்னிசைப்பேனிச்சையெலாம்விடுததுவநததிடததுமலையிடதது, முறறேமெய்த்தவம்புரிவாருனனிவிழிததிருபபவுலகவிடயஙகளையேவிலகவிடமாட்டேன், கற்றேதுமறியகிலேனகடையரினுஙகடையேன்கருணையிலாக்கன்மனத்துககள்வனெனைககருதிச், சற்றேயுமன்றுமிகப்பெரிதெனககிஙகளிததான்றனிததசிவகாமவல்லிககினிததநடததவனே. (௧௨)

என்னேயீ ததிசயமீ ததிசயமென்னிசைப்பேனிரவுபகலறியாமலிருநதவிடததிருநது, முன்னேமெயததவம்புரிநதாரின்னேயுமிருப்பமூடர்களிறறலைநினறவேடமனககொடியேன, பொனனேயமிகப்புரிந்தபுலைககடையேனிழிநதபுழுவினுமிங்கிழிநதிழிநதுபுகுநதவெனைககருதித, தனனேயமுறவெனககுமொனறளிததுககளிததான்றனித்தசிவகாமவல்லிககினிததநடததவனே. (௧௩)

ஓகோவீ ததிசயமீ ததிசயமென்னுரைப்பேனுள்ளபடியுள்ளவொன்றையுள்ளமுறவிரும்பிப், பாகோமுப்பழரசமோவெனருசிக்கப்பாடிப்பத்திசெயவாரிருககவுமோர்பததியுமில்லாதே, கோகோவென்றலகுரைப்பத்திரிகின்றகொடியேனகுற்றமனறிகுணமறியாப்பெததனெனைக்கருதித, தாகோதரங்குளிர்ந்ததன்மையொன்றுகொடுததான்றனிததசிவகாமவல்லிககினிததநடத்தவனே. (௧௪)

திருச்சிற்றம்பலம்.

அதிசயமாலை

முற்றிற்று.

உ

சிவமயம

சிவகணபதிதுணை.

திருச்சிற்றமபலம.

# அபராதமன்னிப்புமாலை.

எணசீர்ககழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

செய்வகைநன்கறியாதேதிருவருளோடூடிசசிலபுகன்றேனறிவறியாச்சிறியரினுஞ்சிறியேன், பொயவகையேனபுகனறபிழைபொறுததருளல்வேண்டும்புண்ணியனே மதியணிநதபுரிசடையாய்விடையாய, மெயவகையோர்விழித்திருப்பவிரும்பியெனையனறேமிகவலிநதாட்கொணடருளிவினைதவிர்ததவிமலா, சைவவகையகடவுளருமந்தணருமபரவவாநநததிருநடஞ்செயயமபலததெமமரசே. (க)

நிலைநாடியறியாதேநினனருளோடூடிநீர்மையலபுகன்றேனன்னெறியொழுகாக்கடையேன, புலைநாயேன்புகனறபிழைபொறுததருளலவேணடுமபூதகணஞ்சூழநடம்புரிகினறபுநிதா, கலைநாடுமதியணிநதகநபவளச்சடையாய்கருததறியாககாலையிலேகருணையளிததவனே, தலைஞாநமுநிவாகடநதலைமீதுவிளங்குந்தாளுடையாயாளுடையசற்குருவெனனரசே. (உ)

கலைக்கடைநன்கறியாதேகநவருளோடூடிககரிசுபுகனறேன்கவலைக்கடற்புணையென்றுணரேன, புலைக்கடையேன்புகன்றபிழைபொறுத்தருளல்வேண்டும்போற்றிசிவபோற்றிசிவபோறறிசிவபோறறி, தலைககடைவாயனறிரவிற்றுணைமலரோன்றமர்த்திததனிப்பொருளென்கையிலளித்ததயவுடையபெருமான, கொலைககடையார்க்கெய்தரியகுணமலையேபொதுவிற்கூத்தாடிககொணடுலகைக்காததாளுநகுருவே. (௩)

நின்புகழ்நன்கறியாதேநின்னருளோடூடிநெறியலவேபுகன்றேனன்னிலைவிரும்பிநில்லேன, புனபுலையேனபுகனறபிழைபொறுததருளலவேண்டும்பூரணசிற்சிவனே மெய்ப்பொருளருளும்புநிதா, வென்புடையநாளிரவிலெழுந்தருளியளித்தவென்குருவேயென்னிருகணணிலஙகியநன்மணியே, யன்புடையாரின்படையுமழகியவம்பலததேயாததாளுமப்பனுமாயககூததாடுமபதியே. (௪)

துலைக்கொடிநன்கறியாதேதுணையருளோடூடித்துரிசுபுகன்றேன்கருணைப்பரிசுபுகன்றறியேன், புலைக்கொடியேன்புகன்றபிழைபொறுததருளல்வேண்டும்பொங்குதிரைக்கஙகைமதிதங்கியசெஞ்சடையாய, மலைககொடியெனனம்மையருண்மாதுசிவகாமவல்லிமறைவல்லிதுதிசொல்லிநின்றுகாணக், கலைக்கொடிநனகுணாமுநிவர்கண்டுபுகழ்ந்தேததக்கநசசபைதனினடிககுங்காரணசற்குருவே. (௫)

பழுத்தலைநன் குணராதே பதியருளோ டிப்பழுது புகன்றேன கருணைப்பாங்கறி யாப்படிறேன், புழுத்தலையேன் புகன்றபிழைபொறுத்தருளல்வேண்டுமெபுண்ணியா தம்முள்ளகத்தே நண்ணியமெய்ப்பொருளே, கழுத்தலைநஞ்சணிந்தருளுங்கருணைநெடுங் கடலேகானமலையொன்றலைமீ துதானமலர்வளித்தாய், விழுத்தலைவாபோற்றமணிமன றிடம்புரியுமெய்மமையறிவின புருவாயவிளங்கியசற்குருவே. (௬)

கையடைநன் கறியாதேகநவருளோடிககாசுபுகன்றேனகருணைத்தேசறியாகக டையேன, பொய்யடியேன்புகனறபிழைபொறுத்தருளலவேண்டுமெபுத்தமுதேசுத்தசு கபூரணசிறசிவமே, ஐயடிகளகாடவர்கோனகமகிழநதுபோற்றுமமபலத்தேயருண்ட ஞ்செயசெம்பவளமலையே, மெய்யடியருள்ளகத்தில்விளங்குகினறவிளககேவேதமுடி மீதிருந்தமேதகுசற்குருவே. (௭)

திறப்படநன் குணராதே திருவருளோடிததீமைபுகன்றேன்கருணைத் திறஞ்சிறி துந்தெளியேன, புறப்படிறேன்புகனறபிழைபொறுத்தருளலவேண்டுமெபூதமுதலுறுதவ ளைப்புணருவித்தபுநிதா, வுறபபடுமெய்யுணாவுடையாருளளகததேவிளங்குமுணமை யறிவானநதவுருவுடையகுருவே, சிறப்படைமாதவாபோற்றசெமபொனமணிப்பொ துவிற்றிருத்தொழிலநதியற்றுவிக்குந்திருநடநாயகனே. (௮)

தோந்துணாந்துதெளியாதே திருவருளோடிசசிலபுகனறேன றிருககருணைத் தி றஞ்சிறிதுநதெரியேன, போந்தகனேனபுகனறபிழைபொறுத்தருளலவேண்டுமெபோ தாந்தமிசைவிளங்குநாதாந்தவிளககே, யூநதபணககஙகணமேமுதறபணிகளொளிர வுயாபொதுவினடிககினறசெயலுடையபெருமான், சாநதவனையெவ்வகையுநதாஙகி யளிக்கினறதயவுடையபெருநதலைமைததனிமுதலெநதாயே. (௯)

ஓல்லும்வகையறியாதேயுன்னருளோடியூறுபுகனறேன் றுயரமாறுமவகையுணரே ன், புல்லியனேன்புகன்றபிழைபொறுத்தருளலவேண்டும்பூதியணிநதொளிாகினற பொன்மேனிப்பெருமான், சொலலியலுமபொருளியலுஙகடநதபரநாததுரியவெளி பபொருளானபெரியநிலைப்பதியே, ஞலவியனறசிவகாமவலலிகணடுமகிழவிரியுமறை யேததநடம்புரியுமருளிறையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## அபராதமன்னிப்புமாலை

முறையீறு.

---

# ஆளுடையபிள்ளையாரருண்மாலை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

* உலகியலுணர்வோரணுத்துணையேனுமுற்றிலாச்சிறியவோர்பருவத
திலகியவெனககுளளிருநதருணெறியிலேற்றவுநதரமிலாமையிஞன
விலகுறுஙகாலததடிக்கடியேறவிடுத துப்பினவிலகுருவணணம்
அலகிலாவுணாசசியளிததனைவுன்றனருட்கடற்பெருமையெனபுகல்வேன்
திலகநறகாழிஞானசமபநததெள்ளமுதாஞசிவகுருவே. (க)

உயிரநுபவமுற்றிடிலதனிடத்தேயோஙகருளநுபவமுறுமச்
செயிரினல்லநுபவததிலேசுததசிவவநுபவமுறுமென்றுய
பயிலுமூவாண்டிறசிவைதருஞானப்பானமகிழ்நதுண்டுமெய்நெறியாம்
பயிாதழைநதுறவைசதருளியஞானபநதனெனறோஙகுசற்குருவே. (உ)

தததுவநிலைகடனித்தனியேறித்தனிபபரநாதமாநதலததே
யொதததன்மயமாநின்னைநீயின்றியுறறிடலுயிரநுபவமென்
றிதநுணைவெளியினென்னையெனனிடததேயிருநதவாறளித்தனையன்றோ
சிதநறகாழிஞானசம்பநதசசெல்வமேயெனநுசறகுருவே. (ங)

தனிப்பரநாதவெளியினமேனினதுதனமயநதனமயமாககிப்
பனிப்பிலாதெனறுமுள்ளதாய்விளஙகிப்பரம்பாததுடபுறமாகி
யினிபபுறவொன்றுமியம்புறுவியலபாயிருநததேயருளநுபவமென
றெனககருளபுரிநதாய்ஞானசம்பநதனெனனுமெனசற்குருமணியே (ச)

உளளதாயவிளங்குமொருபெருவெளிமேலுள்ளதாயமுற்றுமுள்ளதுவாய
நளளதாயெனதாயநானதாயததனதாயநவிறறருநதானதாயின்ன
விளளொணுவப்பாலப்படிககப்பாலவெறுவெளிசிவவநுபவமென்
றுளளுறவளிததஞானசம்பந்தவுததமசுததசறகுருவே (ரு)

பொததியமூலமலப்பிணிதவிாகும்பொருளருளநுபவமதற்குப்
பததியமுயிரினநுபவமிதனைப்பறறறப்பறறுதியிதுவே
சததியமெனவெனறனககருளபுரிநததனிப்பெருஙகருணையெனபுகல்வேன
முததியற்சிவிகையிவர்நதருணெறியினமுதலாசியற்றியதுரையே. (சு)

அடியெனலெதுவோமுடியெனலெதுவோவருடசிவமதற்கெனப்பலகாற்
படியுறவருநதியிருந்தவென்வருததமபாாததருளாலெழுநதருளி
மிடியறவெனைததான்கடைககணிததுனகருள்விளங்குவவடிமுடியென்றாய்
வடிவிலாககருணைவாரியேமூன்றுவயதினிலருள்பெறறமணியே. (எ)

செவ்வகையொருகாற்பமெதியளவேசெறிபொறிமனமதன்முடிவி
லெவ்வகைநிலையுந்தோற்றுநீநினக்குளெண்ணியபடிபெலாமெயது
மிவ்வகையொனறேவருத்தமில்வகையென்றெனக்கருள்புரிநதசற்குருவே
தெவவகையமணவிருளறவெழுநததீபமேசம்பநததேவே. (அ)

---

* திருவருட்பிரகாசவள்ளலாா தமது திருககரததாலெழுதிய மூலப்பிரதியில் இததிருச்செய்யுள ஐநதடியாகவே யிருததலினுலஙஙனமே பதிப்பிக்கப்பட்டது.

முன்புறநிலையும்பின்புறநிலையுமுன்னிநின்றுளமயக்குறுங்கா
லன்புறநிலையாற்றிருநெறித்தமிழ்கொண்டையநீத்தருளியவரசே
யென்புபெண்ணுருவோடின்னுயிரதுகொண்டெழுந்திடப்புரிந்துலகெல்லா
மின்புறப்புரிந்தமறைத்தனிக்கொழுந்தேயென்னுயிர்க்குயிரெனுங்குருவே. (௯)

வருபகற்கற்பம்பலமுயன்றாலும்வரலருந்திறனெலாமெனக்கே
யொருபகற்பொழுதிலுறவளித்தனைநின்னுறுபெருங்கருணையென்னுரைப்பேன்
பெருமணநல்லூர்த்திருமணங்காணப்பெற்றவர்தமையெலாஞான
வுருவடைந்தோங்கக்கருணைசெய்தளித்தவுயர்தனிக்கவுணியமணியே. (௧௦)

வேறு.

சீரார்சண்பைக்கவுணியர்தந்தெய்வமரபிற்றிகழ்விளக்கேதெவிட்டாதுளத்திறறி
த்திக்குந்தேனேயழியாச்செல்வமே, காராமிடற்றுப்பவளமலைக்கண்ணின்முளைத்தக
ற்பகமேகரும்பேகனியேயென்னிரண்டுகண்ணேகண்ணிற்கருமணியே, யோரார்பரு
வமூன்றிலுமையினியமுலைப்பாலெடுத்தூட்டுமின்பக்குதலைமொழிக்குருந்தேயென்னு
ருயிருக்கொருதுணையே, பேரார்ஞானசம்பந்தப்பெருமானேநின்றிருப்புகழைப்பேசுகி
ன்றோர்மேன்மேலும்பெருஞ்செல்வத்திறம்பிறங்குவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ஆளுடைய அரசு அருண்மாலை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்தகுசீர்திலகையருட்டலத்திலோங்குஞ்சிவக்கொழுந்தினருட்பெருமைத்திற
த்தால்வாய்மை,யுருத்தகுமெய்யுணர்ச்சிவடிவாகிச்சைவவொளிவிளங்கநாவரசென்றொ
ருபேர்பெற்றுப், பொருத்தமுறவுழவாரப்படைகைக்கொண்டபுண்ணியனேநண்ணிய
சீர்ப்புநிதனேயென், கருத்தமர்ந்தகலைமதியேகருணைஞானக்கடலேநின்கழல்கருதக்க
ருதுவாயே. (௧)

வாய்மையிலாச்சமணர்பலகாற்செய்தவஞ்சமெலாந்திருவருட்பேர்வலத்தானீந்
தித, தூய்மைபெறுஞ்சிவநெறியேவிளங்கவோங்குஞ்சோதிமணிவிளக்கேயென்று
ணையேயெம்மைச், சேய்மைவிடாதணிமையிடத்தாளவந்தசெல்வமேயெல்லையிலாச்சி
றப்புவாய்ந்த, ளாய்மையுறுபெருந்தகையேயமுதேசைவவணியேசொல்லரசெனும்
பேரமைந்ததேவே. (௨)

தேவரெலாந்தொழுந்தலைமைத்தேவர்பாதத்திருமலரைமுடிக்கணிந்துதிகழ்ந்துநின்ற
நாவரசேநான்முகனும்விரும்புஞானநாயகனேநல்லவர்க்குநண்பனேயெம
பாவமெலாமகற்றியருட்பான்மைநல்கும்பண்புடையபெருமானேபணிந்துநின்பான்
மேவவிருப்புறுமடியர்க்கன்புசெய்யவேண்டினேனவ்வகைநீவிதித்திடாயே. (௩)

விதிவிலக்கீதென்றறியுமவிளைவொன்றில்லாவினையனேனெனினுமென்னைவிரும்பியென்னுண், மதிவிளக்கையேற்றியருண்மனையினஞானவாழ்வடையச்செயல்வேண்டும்வள்ளலேநற், பதிமலர்த்தாணிழலடைந்ததவத்தோர்க்கெல்லாம்பதியேசொல்லரசெனும்பேர்படைத்ததேவே, கதிதருகற்பகமேமுக்கனியேஞானக்கடலேயென்கருத்தேயென்கண்ணுளானே. (௫)

கண்ணுளேவிளங்குகின்றமணியேசைவக்கனியேநாவரசேசெங்கரும்பேவேதப், பண்ணுளேவிளைந்தவருட்பயனேயுண்மைப்பதியோங்குநிதியேநின்பாதமன்றி, விண்ணுளேயடைகின்றபோகமொன்றுமவிரும்பேனென்றனையாளவேண்டுங்கண்டா, யொண்ணுளேயொன்பதுவாயவைத்தாயென்றவுத்தமனேசித்தமகிழ்ந்துதவுவோனே.

ஓங்காரத்தனிமொழியின்பயனைச்சற்றுமோர்கிலேன்சிறியேனிவ்வுலகவாழ்வி, லாங்காரப்பெருமதமால்யானைபோலவகம்பாவமயனாகியலைகின்றேனுன், பாங்காயமெய்யடியார்தமைச்சற்றும்பரிந்திலேனருளடையும்பரிசொன்றுண்டோ, தீங்காயசெயலனைத்துமுடையேனென்னசெய்வேன்சொல்லரசேயென்செய்குவேனே. (௬)

செய்வகையொன்றறியாதசிறியேனிந்தச்சிற்றுலகவாழ்க்கையிடைச்சிக்கியந்தோ, பொய்வகையேபுரிகின்றேன்புண்ணியாநின்பொன்னடியைப்போற்றிலேன்புனிதனேநா, னுய்வகையெவ்வகையாதுசெய்வேனீயேயுறுதுணையென்றிருக்கின்றேனுணர்விலேனை, மெய்வகையிற்செலுத்தநினைத்திடுதியோசொல்வேந்தேயென்னுயிர்த்துணையாயவிளங்குங்கோவே. (௭)

விளங்குமணிவிளக்கெனநால்வேதத்துச்சிமேவியமெய்ப்பொருளையுள்ளேவிரும்பிவைத்துக், களங்கறுமெய்யன்பரெல்லாங்களிப்பவன்றோகற்றுணையாற்கடல்கடந்துகரையிற்போந்து, துளங்குபெருஞ்சிவநெறியைச்சார்ந்தஞானத்துணையேநந்துணையேநற்சுகமேயென்றும், வளங்கொழுமாகமநெறியைவளர்க்கவந்தவள்ளலேநின்னருளைவழங்குவாயே. (௮)

அருள்வழங்குந்திலகவதியம்மையார்பின்னவதரித்தமணியேசொல்லரசேஞானத், தெருள்வழங்குஞ்சிவநெறியைவிளக்கவந்தசெழுஞ்சுடர்மாமணிவிளக்கேசிறியனேனை, யிருள்வழங்குமுலகியனின்றெடுத்துஞானவின்னருடந்தாண்டருள்வாயின்றேலந்தோ, மருள்வழங்கும்பவநெறியிற்சுழல்வேனுய்யுமவகையறியேனின்னருட்குமரபன்றீதே.

தேர்ந்தவுளத்திடைமிகவுந்தித்தித்தூறுஞ்செழுந்தேனேசொல்லரசாந்தேவேமெய்ம்மை, சார்ந்துதிசழப்பூதியடிகட்கின்பந்தந்தபெருந்தகையேயெந்தையேயுட், கூர்ந்தமதிநிறைவேயென்குருவேயெங்கள்குலதெய்வமேசைவக்கொழுந்தேதுன்பந், தீர்ந்தபெருநெறித்துணையேயொப்பிலாதசெல்வமேயப்பனெனத்திகழ்கின்றோனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# ஆளுடைய நம்பிகளருண்மாலை.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

மதியணிசெஞ்சடைக்கனியைமன்றணடம்புரிமருந்தைத்
துதியணிசெஞ்சுவைப்பொருளிற்சொன்மாலைதொடுத்தருளி
விதியணிமாமறைநெறியுமெய்ந்நிலையாகமநெறியும்
வதியணிந்துவிளங்கவைத்தவன்றொண்டப்பெருந்தகையே. (௧)

நீற்றிலிட்டநிலையாப்புன்னெறியுடையார்தமைக்கூடிச்
சேற்றிலிட்டகம்பமெனத்தியங்குற்றேன்றனையாளா
யேற்றிலிட்டதிருவடியையெண்ணியரும்பொன்னையெலா
மாற்றிலிட்டுக்குளத்தெடுத்தவருட்டலைமைப்பெருந்தகையே. (௨)

இலைக்குளநீரழைத்ததனில்விடங்கருறவழைத்தன்வாய்த்
தலைக்குதலைமதலையுயிர்தழைப்பவழைத்தருளியநின்
கலைக்குமடங்கலையின்முதற்கலைக்குமுறக்கணக்குயர்பொன்
மலைக்குமணுநிலைக்குமுருவன்றொண்டப்பெருந்தகையே. (௩)

வேதமுதற்கலைகளெலாம்வீழ்ந்துவிழைந்தந்தமுறை
யோதவவைக்கணுத்துணையுமுணர்வரிதாமெம்பெருமான்
பாதமலர்நின்றிருப்பணிமுடிமேற்படப்புரிந்த
மாதவம்யாதுணர்த்தருளாய்வன்றொண்டப்பெருந்தகையே (௪)

ஏழிசையாயிசைப்பயனாயின்னமுதாயென்னுடைய
தோழனுமாயென்றுமுன்னீசொன்னபெருஞ்சொற்பொருளை
யாழநினைத்திடிலடியேனருங்கரணங்கரைந்துகரைந்
தாழியின்புறவதுகாணுயர்கருணைப்பெருந்தகையே. (௫)

வான்காணவிந்திரனுமாலயனுமாதவருந்
தான்காணவிறையருளாற்றனித்தவளயானையின்மேற்
கோன்காணவெழுந்தருளிக்குலவியநின்கோலமதை
நான்காணப்பெற்றிலனேநாவலூர்ப்பெருந்தகையே. (௬)

தேன்படிக்குமமுதாமுன்றிருப்பாட்டைத்தினந்தோறு
நான்படிக்கும்போதென்னைநானறியேனொன்றோ
வூன்படிக்குமுளம்படிக்குமுயிர்படிக்குமுயிர்க்குயிருந்
தான்படிக்குமநுபவங்காண்டனிக்கருணைப்பெருந்தகையே. (௭)

இன்பாட்டுத்தொழிற்பொதுவிலியற்றுகின்றவெம்பெருமா
னுன்பாட்டுக்குவப்புறல்போலூர்பாட்டுக்குவந்திலனொன்
றென்பாட்டுக்கிசைப்பினுமென்னிடும்பாட்டுக்கரணமெலா
மன்பாட்டுக்கிசைவதுகாணருட்பாட்டுப்பெருந்தகையே. (௮)

பரம்பரமாந் துரியமெனும்பதத்திருந்தபரம்பொருளை
யுறம்பெறத்தோழமைகொண்டவுனபெருமைதனைமதித்து
வரம்பெறநற்றெய்வமெலாம்வந்திக்குமென்றாலென
றரம்பெறவெனபுகலவேனுன் றனித்தலைமைபபெருந்தகையே. (௯)

பேரூரும்பரவைமனப்பிணக்கறவெம்பெருமானை
யூரூரும்பலபுகலவோரிரவிற்றூதனெனத்
தேரூருந் திருவாரூர்த்தெருவுதொறுநடப்பித்தா
யாரூரநின்பெருமையயன் மாலுமளப்பரிதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆளுடையவடிகளருண்மாலை.

தரவுக்கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

தேசகத்திலினிக்கின் றதெள்ளமுதேமாணிக்க
வாசகனேயானந்தவடிவானமாதவனே
மாசகன்றநீதிருவாய்மலர்ந்ததமிழ்மாமறையி
னாசகன்றவநுபவநானநுபவிக்கவருளுதியே. (௧)

கருவெளிக்குட்புறனுகிக்கரணமெலாங்கடந்துநின்ற
பெருவெளிக்குநெடுங்காலம்பித்தாகித்திரிகின்றோர்
குருவெளிக்கேநின்றுழலக்கோதறநீகலந்ததனி
யுருவெளிக்கேமறைபுகழுமுயர்வாதவூரமணியே. (௨)

மன்புருவநடுமுதலாமனம்புதைத்துநெடுங்கால
மென்புருவாயத்தவஞ்செய்வாரெல்லாருமேமாக்க
வன்புருவம்பெறறதன் பின்னருளுருவமடைந்துபின்ன
ரின்புருவமாயினைநீயெழில்வாதவூரிறையே. (௩)

உருவண்டப்பெருமறையென் றுலகமெலாம்புகழ்கின்ற
திருவண்டப்பகுதியெனுந்திருவகவல்வாய்மலர்ந்த
குருவெனறெபபெருந்தீவருங்கூறுகின்றகோவேநீ
யிருவென்றத்தனியகவலெண்ணமெனக்கியம்புதியே. (௪)

தேடுகின்றவானந்தச்சிற்சபையிற்சின்மயமா
யாடுகின்றசேவடிக்கீழாடுகின்றவாரமுதே
நாடுகின்றவாதவூர்நாயகனேநாயடியேன்
வாடுகின்றவாட்டமெலாம்வந்தொருகான்மாற்றுதியே. (௫)

சேமமிகுந்திருவாதவூர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியேநீயுரைத்தவாசகத்தையெண்ணுதொறும்
காமமிகுகாதலன் றன் கலவிதனைக்கருதுகின்ற
வேமமுறுகற்புடையாளின் பினுமின்பெய்துவதே. (௬)

வான்கலந்தமாணிக்கவாசகநின்வாசகத்தை
நான்கலந்துபாடுங்கானற்கருப்பஞ்சாற்றினிலே
தேன்கலந்துபால்கலந்துசெழுங்கனித்தீஞ்சுவைகலந்தென
னூன்கலந்துவுயிர்கலந்துவுவட்டாமலினிப்பதுவே. (எ)

வருமொழிசெய்மாணிக்கவாசகநின்வாசகத்தி
லொருமொழியேயென்னையுமென்னுடையனையுமொன்றுவித்தத
தருமொழியாமென்னிலினிச்சாதகமேன்சஞ்சலமேன்
குருமொழியைவிரும்பியயல்கூடுவதேனகூறுதியே (அ)

பெண்சுமந்தபாகப்பெருமானொருமாமே
லெண்சுமந்தசேவகன்போலெய்தியதும்வைகைநதி
மண்சுமந்துநின்றதுமோர்மாறன்பிரம்படியாற்
புண்சுமந்துகொண்டதுநின்பொருட்டன்றோபுண்ணியனே. (கூ)

வாட்டமிலாமாணிக்கவாசகநின்வாசகத்தைக
கேட்டபொழுதங்கிருந்தகீழ்ப்பறவைச்சாதிகளும்
வேட்டமுறும்பொல்லாவிலங்குகளுமெய்ஞ்ஞான
நாட்டமுறுமென்னிலிங்குநானடைதல்வியப்பன்றே. (க௦)

திருச்சிற்றம்பலம்.

---

## நான்காவது திருமுறை

முற்றிற்று.

---



சிவமயம்.

சிவகணபதிதுணை

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பா.

ஐந்தாவதுதிருமுறை.

## சித்திவிநாயகர்பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

திருமாலறியாசசேவடியாலென்
கருமாலறுக்குங்கணபதிசரணம்.

ஐங்கரனடிமலரிங்குறநினைதினின
பொங்குறுதுயராறுமமங்கலின்மனனே.

வெண்பா.

அஞ்சுமுகததான்மகனமாலஞ்சுமுகததானருள்வான்
அஞ்சுமுகத்தானஞ்சணிகரததான்—அஞ்சுமுக
வஞ்சனையான்காணுவகைவதைததானேரனையோ
டஞ்சனையான்கணகளவை. (௧)

வாதாகாவண்ணமணியேயெம்வல்லபைதன்
ஞாதாகாவண்ணநலங்கொள்வான—போதார்
வனங்காத்துநீரளிததவள்ளலேயன்பா
வினங்காததருளாயெனை. (௨)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உலகெலாந்தழைப்பவருண்மதவருவியொழுகுமாமுகமுமைங்கரமு
மிலகுசெம்மேனிக்காட்சியுமிரண்டோடிரண்டெனவோங்குதிண்டோளுக்
திலகவாணுதலார்சித்திபுத்திகளைச்சேர்த்தணைத்திடுமிருமருங்கும்
விலகுறுதெளியேன்விழைந்தனன்சித்திவிநாயகவிக்கினேச்சுரனே. (௩)

உள்ளமுமுயிருமுணர்ச்சியுமுடம்புமுறுபொருள்யாவுநின் றனகதே
கள்ளமுங்கரிசுநினைந் திடா துதவிக்கழலிணைநினைந் துநின கருணை
வெள்ளமுண்டிரவுபகலறியாதவீட்டினிலிருந்துநின் றேடும்
விள்ளலில்லாமற்கலப்பனோசித் திவிநாயகவிக்கினேச்சுரனே. (௪)

நாதமுங்கடந்துநிறைந்துநின்மயமேநானெனவறிந்துநான்றுனும
பேதமுங்கடந்தமௌனராச்சியத்தைப்பேதையேன்பிடிப்பதெந்நாளோ
வேதமுஞ்சமயவாதமும்விடுத்தோரிதையமுமேழையேன்சிரமும
வேதமுநதாங்கும்பாதனேசித்திவிநாயகவிக்கினேச்சுரனே. (௫)

சச்சிதானந்தவடிவநம்வடிவந்தகுமதிட்டானமற்றிரண்டும்
பொய்ச்சிதாபாசக்கற்பனையிவற்றைப்போக்கியாங்கவ்வடிவாகி
யச்சிதாகாரபோதமுமதன்மேலானந்தபோதமும்விடுத்தல்
மெய்சசிதாம்வீடெனறுணைத்தனைசித்திவிநாயகவிக்கினேசசுரனே. (௬)

ஒனறலவிரண்டுமலவிரண்டொன்றேருவலவருவலவுவட்ட
நன்றலநன்றல்லாதலவிந்துநாதமுமலவிவையனைத்தும்
பொன்றலென்றறிந்துட்புறத்தினுமகண்டபூரணமாஞ்சிவமொனறே
வென்றலென்றறிநீயென்றனைசித்திவிநாயகவிக்கினேசசுரனே. (௭)

சத்தசத்தியன்மற்றறிந்துமெய்ப்போததத்துவநிலைபெறவிழைவோா
சித்தமுற்றகலாதொளித்தநின்கமலச்சேவடிதொழவெனக்கருள்வாய்
சுத்தசற்குணதெள்ளமுதெழுகடலேசுகபரிபூரணப்பொருளே
வித்தகமுக்கணத்தனேசித்திவிநாயகவிக்கினேச்சுரனே. (௮)

மருளுறுமனமுங்கொடியவெங்குணமுமதித்தறியாததுன்மதியு
மிருளுறுநிலையுநீங்கிநின்னடியையெந்நாளடைகுவனெளியே
னருளுறுமொளியாயவவெளிகளுள்ளேயமர்ந்தசிற்பரவொளிநிறைவே
வெருளுறுசமயத்தறியொணுச்சித்திவிநாயகவிக்கினேச்சுரனே. (௯)

கேவலசகலவாதனையதனுற்கீழ்ப்படுமெவக்கடனமூழ்கி
யோவறமயங்கியுழலுமிச்சிறியேனுனனருளடையுநாளுளதோ
பாவலருளத்திற்பரவியநிறைவேபரமசிறசுகபரம்பரனே
மேவுறுமடியார்க்கருளியசித்திவிநாயகவிக்கினேச்சுரனே. (௧௰)

கானநீர்விழைந்தமானெனவுலகக்கட்டினைநட்டுழன்றலையு
மீனவஞ்சகநெஞ்சகப்புலையேனையென்றுகொண்டருளுநாளுளதோ
வூனமொன்றில்லாவுத்தமருளத்தேயோங்குசீர்ப்பிரணவவொளியே
வேனவில்கரத்தோர்க்கினியவாசித்திவிநாயகவிக்கினேச்சுரனே. (௧௧)

பெரும்பொருட்கிடனும்பிரணவவடிவிற்பிறங்கியவொருதனிப்பேறே
யரும்பொருளாகிமறைமுடிக்கண்ணேயமர்ந்தபேரானந்தநிறைவே
தரும்பரபோகசித்தியுஞ்சுத்ததருமமுமுத்தியுஞ்சார்ந்து
விரும்பினோர்க்களிக்கும்வள்ளலேசித்திவிநாயகவிக்கினேச்சுரனே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

# வல்லைகணேசர்பிரசாதமாலை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

திருநெடுமாலன்றுலிடைநினதுசேவடித்துணைமலர்ததுகளான்
பெருநெடுமேனிதளிர்படப்பாம்பின்பேருருவகன்றமைமறவேன்
கருநெடுங்கடலைக்கடற்றுநற்றுணையேகண்கண்மூன்றுடையசெங்கரும்பே
வருநெடுமருப்பொன்றிலகுவாரணமேவலலைபக்கணேசமாமணியே. (௧)

நளினமாமலர்வாழ்நான்முகத்தொருவனண்ணிநின்றுணையடிவழுத்திக
களிநலனுடனிவ்வுலகெலாம்படைக்கக்கடைக்கணித்ததையுளமறவே
னளிநலனுறுபேரானந்தக்கடலேயருமருந்தேயருளமுதே
வளிநிறையுலகுக்கொருபெருந்துணையேவல்லைபககணேசமாமணியே. (௨)

சீருருத்திரமூர்த்திகட்குமுத்தொழிலுஞ்செய்தருளிறைமைதந்தருளிற்
பேருருத்திரங்கொண்டிடச்செயுநினதுபெருமையைநாடொறுமறவேன்
ஆருருதிடினுமஞ்சுதலசெய்யாவாண்மையெற்கருளியவரசே
வாருருதிடுபூண்மணிமுககொங்கைவல்லைபககணேசமாமணியே. (௩)

விண்ணவர்புகழுமெய்கண்டநாதன்வித்தகக்கபிலனுதியர்ககே
கண்ணருள்செயுநின்பெருமையையடியேன்கனவிலுநனவிலுமறவேன்
றண்ணருட்கடலேயருட்சிவபோகசாரமேசராசரநிறைவே
வணணமாமேனிப்பரசிவகளிறேவல்லைபக்கணேசமாமணியே. (௪)

நாரையூர்நம்பியமுதுகொண்டேட்டநற்றிருவாய்மலர்ந்தருளிச்
சீரைமேவுறச்செயதளிததிடுநினதுதிருவருணாடொறுமறவேன்
றேரையூராவாழ்வுந்திரமலவெனுநற்றிடமெனக்கருளியவாழ்வே
வாரையூர்முலையாண்மங்கைநாயகியெம்வல்லைபக்கணேசமாமணியே. (௫)

கும்பமாமுனியின்கரகநீர்க்கவிழ்த்துகுளிர்மலர்நந்தனங்காத்துச்
செம்பொனுடிறைவற்கருளியநினதுதிருவருட்பெருமையைமறவேன்
நம்பனுக்கினியவருண்மகப்பேறேநற்குணத்தோர்பெருவாழ்வே
வம்பறுமலர்ததார்மழைமுகிற்கூந்தல்வல்லைபக்கணேசமாமணியே. (௬)

அயன்றவத்தின்றசித்திபுத்திகளாமம்மையரிருவரைமணந்தே
இயன்றவண்டங்கள்வாழ்வுறச்செயுநின்னெழின்மணக்கோலத்தைமறவேன்
பயன்றருங்கருணைக்கற்பகத்தருவேபரசிவத்தெழும்பரம்பரமே
வயன்றருநிமலநித்தியப்பொருளேவல்லைபக்கணேசமாமணியே. (௭)

முன்னருந்தவத்தோன்முற்கலன்முதலாமுனிவர்களினிதுவீடடைய
வின்னருள்புரியுநின்னருட்பெருமையிரவினும்பகலினுமறவே
னென்னரும்பொருளேயென்னுயிர்க்குயிரேயென்னரசேயெனதுறவே
மன்னருநெறியின்மன்னியவறிவேவல்லைபக்கணேசமாமணியே. (௮)

துதிபெருங்காசிநகரிடத்தனந்தநாதுயநல்லுருவுகொண்டாங்கண்
விதிபெறுமனைதொறுமவிருந்தினனாய்மேவியகருணையைமறவேன்
நதிபெருஞ்சடிலப்பவளநற்குன்றேநான்மறைநாடருநலமே
மதிபெறுமுளத்திறப திபெருஞ்சிவமேவல்லபைக்கணேசமாமணியே. (௯)

தடக்கைமாமுகமுமுக்கணும்பவளச்சடிலமுஞ்சதுர்ப்புயங்களுங்கை
யிடக்கையங்குசமும்பாசமும்பதமுமிறைப்பொழுதேனுமயான்மறவேன்
விடக்களமுடையவித்தகப்பெருமான்மிகமகிழ்ந்திடவருள்பேறே
மடக்கொடிநங்கைமங்கைநாயகியெம்வல்லபைக்கணேசமாமணியே. (௰)

பெருவயலாறுமுகனகமலர்ந்துன்பெருமைகள்பேசிடத்தினமுந்
திருவளர்மேன்மைத்திறமுறச்சூழுந்திருவருட்பெருமையைமறவேன்
மருவளர்தெய்வகற்பகமலரோமனமொழிகடந்தவான்பொருளே
வருமலைவல்லிக்கொருமுதற்பேறேவல்லபைக்கணேசமாமணியே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# கணேசத்திருவருண்மாலை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருவுங்கல்வியுஞ்சீருஞ்சிறப்புமுன திருவடிப்புகழ்ப்பாடுநிறமுநல்
லுருவுஞ்சீலமுமூக்கமுநதாழ்வுறுவுணர்வுந்தநதெனதுள்ளத்தமாநதவா
குருவுநதெய்வமுமாகியன்பாளாதங்குறைதவிர்க்குங்குணப்பெருங்குன்றமே
வெருவுஞ்சிநதைவிலக்கஜானனம்விளங்குஞ்சித்திவிநாயகவள்ளலே. (௧)

சீதநாண்மலர்ச்செல்வனுமாமலர்ச்செல்விமார்பகச்செல்வனுங்காணகிலாப்
பாதநாடொறும்பற்றறப்பற்றுவோர்பாதநாடப்பரிந்தருள்பாலிப்பாய்
நாதநாடியவந்தத்திலோங்குமெய்ஞ்ஞானநாடகநாயகநானெனும்
வேதநாடியமெய்ப்பொருளேயருள்விளங்குஞ்சித்திவிநாயகவள்ளலே. (௨)

என்னைவேண்டியெனக்கருள்செய்தியேலின்னனீங்குநல்லின்பமுமோங்குநின்
றன்னைவேண்டிச்சரண்புகுந்தேனென்னைத்தாங்கிக்கொள்ளுஞ்சரண்பிறிதில்லைகா
ணன்னைவேண்டியழுமகப்போல்கினறேனறிகிலேனின்றிருவுளமையனே
மின்னைவேண்டியசெஞ்சடையாளனேவிளங்குஞ்சித்திவிநாயகவள்ளலே. (௩)

நீண்டமாலரவாகிக்கிடந்துநின்னேயத்தால்கவிநீங்கியவாறுகேட்
டாண்டவாநின்னடைக்கலமாயினேனடியனேன்பிழையாயிரமும்பொறுத்
தீண்டவாவின்படிகொடுத்தென்னைநீயேன்றுகொள்வதற்கெண்ணுதியாவரும்
வேண்டுவாழ்வுதரும்பெருந்தெய்வமேவிளங்குஞ்சித்திவிநாயகவள்ளலே. (௪)

தஞ்சமென்றுனைச்சார்ந்தனனெனைநீதானுமிந்தசசெகததவர்போலவே
வஞ்சமெண்ணியிருந்திடிலெனசெயவேனவஞ்சமற்றமனததுறையண்ணலே
பஞ்சபாதகந்தீர்த்தனையெனறுநினபாதபஙகயம்பற்றினனபாவியேன
விஞ்சநல்லருள்வேணடித்தருதியோவிளஙகுஞ்சித்திவிநாயகவள்ளலே. (௫)

கள்ளநெஞ்சகனுயினுமையநான்கள்ளமின்றிககழறுகின்றேனென
துள்ளநின்றிருவுள்ளமறியுமேயோதுகினறதென்போதுகழித்திடேல்
வள்ளமாமலர்ப்பாதபபெரும்புகழ்வாழ்த்திநாத்தழும்பேறவழஙகுவாய்
வெள்ளவேணிப்பெருந்தகையேயருளவிளங்குஞ்சித்திவிநாயகவள்ளலே. (௬)

மணணிலாசைமயககறவேண்டியமாதவர்க்குமதிப்பரியாயுனை
எண்ணிலாச்சிறியேனையுமுன்னின்றேயேனறுகொணடெனையின்றுவிடுத்தியோ
வுண்ணிலாவியநின்றிருவுள்ளமுமாசையோவெர்ப்புங்கொளவொண்ணுமோ
வெண்ணிலாமுடிப்புண்ணியமூர்த்தியேவிளஙகுஞ்சித்திவிநாயகவள்ளலே. (எ)

ஆணிலேயன்றியாருயிாப்பெண்ணிலேயலியிலேயிவ்வடியனைப்போலவே
காணிலேனொருபாவியையிப்பெருங்கள்ளநெஞ்சககடையனையாளையா
வேணிலேயிடரெய்தவிடுத்தியேலெனசெய்கேனினியிவ்வுலகத்திலே
வீணிலேயுழைப்பேனருளையனேவிளங்குஞ்சித்திவிநாயகவள்ளலே. (அ)

வாளிலேவிழிமங்கையாகொங்கையாமலையிலேமுகமாயத்திலேயவர்
தோளிலேயிடைச்சூழலிலேயுந்திச்சுழியிலேநிதஞ்சுற்றுமென்னெஞ்சநின்
றாளிலேநின்றனிததபுகழிலேதங்கும்வண்ணநதரவுளஞ்செய்தியோ
வேளிலேயழகானசெவ்வேளினமுனவிளஙகுஞ்சித்திவிநாயகவளளலே. (௯)

நாவினுலுனைநாடொறும்பாவோர்நாவோர்தமைநண்ணிப்புகழவு
மோவிலாதுனைப்பாடவுந்துன்பெலாமோடவும்மகிழ்வோஙகவுஞ்செய்குவாய
காவிநேர்கலத்தான்மகிழ்மைந்தகரக்கடவுளேநற்கருங்குழியென்னுமூா
மேவியன்பர்க்கருள்கணநாதனேவிளங்குஞ்சித்திவிநாயகவள்ளலே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# தனித்திருமாலை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

திங்களங்கொழுந்துவேய்ந்தசெஞ்சடைக்கொழுந்தேபோற்றி
மங்கைவல்லபைக்குவாய்த்தமணிணநின்மலர்த்தாள்போற்றி
ஐங்கரநால்வாய்முக்கண்ணருட்சிவகளிறேபோற்றி
கங்கையாய்மகிழுஞ்செல்வக்கணேசநின்கழல்கள்போற்றி. (௧)

கலிவண்ணத்துறை.

உலகம்பரவும்பொருளென்கோவென்னுறவென்கோ
கலகம்பெறுமைம்புலன்வென்றயருங்கதியென்கோ
திலகம்பெறுநெய்யெனநின்றிலகுஞ்சிவமென்கோ
இலகைங்கரவம்பரநின்றனையென்னென்கேனே. (௨)

அடியாருள்ளந் திதித்தூறுமமுதென்கோ
கடியார்கொன்றைச்செஞ்சடையானைகன்றென்கோ
பொடியார்மேனிப்புண்ணியர்புகழுமபொருளென்கோ
அடிகேள்சித்திவிநாயகவெனவெனன்றறைகேனே. (௩)

கலித்துறை.

கமலமலரயனயனன்முதலமரரிதயமுறுகரிசகலவருள்செய்பசுபதியாம்
நிமலநிறைமதியினொளிரநிரதிசயபரமசுகநிலையையருள்புரியுமதிபதியாம்
விமலபிரணவவடிவவிகடதடகடகரடவிபுலகயமுகசுகுணபதியாம்
அமலபரசிவவொளியினுதயசயவிசயசயவபயவெனுமெமதுகணபதியே. (௪)

கட்டளைக்கலித்துறை.

அம்பொன்றுசெஞ்சடையப்பனைபோற்றன்னடியர்தந்துக
கம்பொனறும்வண்ணங்கருணைசெய்தாளுங்கருதுமினோ
வம்பொனறுபூங்குழல்வல்லபையோடுவயங்கியவெண்
கொம்பொனறுகொண்டெமையாட்கொண்டருளியகுஞ்சரமே. (௫)

கலிவிருததம்.

அற்புதக் கணபதி யமல போற்றியே
தற்பர சண்முக சாமி போற்றியே
சிற்பர சிவமகா தேவ போற்றியே
பொற்பமர் கௌரிநிற் போற்றி போற்றியே. (௬)

அருளுறுங் கயமுகத் தண்ணல் பாதமும்
பொருளுறு சண்முகப் புனிதன் றாள்களும்
தெருளுறு சிவபிரான் செம்பொற் கஞ்சமும்
மருளற நாடொறும் வணங்கி வாழ்த்துவாம். (௭)

வண்ணக்கலிவிருத்தம்.

துதிபெறு கணபதி யிணையடி மலரும்
பதிதரு சரவணபவன்மல ரடியுங்
கதிதரு பரசிவ னியலணி கழலும்
மதியுற மனனிடை மருவுது மிகவே. (௮)

வண்ணவெண்சீர்விருத்தம்.

கலைநிறை கணபதி சரணஞ் சரணங்
கஜமுக குணபதி சரணஞ் சரணம்
தலைவனி னிணையடி சரணஞ் சரணம்
சரவண பவகுக சரணஞ் சரணம்
சிலைமலை யுடையவ சரணஞ் சரணம்
சிவசிவ சிவசிவ சரணஞ் சரணம்
உலைவறு மொருபரை சரணஞ் சரணம்
உமைசிவை யம்பிகை சரணஞ் சரணம். (௯)

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தணிகைப்பதிகம்.

## பிரார்த்தனைமாலை.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

சீர்கொண்ட தெய்வ வதனங்க ளாறுந் திகழ்கடப்பந்
தார்கொண்ட பன்னிரு தோள்களுந் தாமரைத் தாள்களுமோர்
கூர்கொண்ட வேலு மயிலுநற் கோழிக் கொடியுமருட்
கார்கொண்ட வண்மைத் தணிகா சலமுமென் *கண்ணுற்றதே

கண்மூன் றுறுசெங் கரும்பின்முத் தேபத்தர் கண்டிடுவோன்
மண்மூன் றுலகும் வழுத்து மபவள மணிக்குன்றமே
திண்மூன் றுநான்கு புயங்கொண் டொளிர்வச் சிரமணியே
வண்மூன் றலாமலை வாழ்மயி லேறிய மாணிக்கமே. (௨)

மாணிக்க ஞான மருந்தேயென் கண்ணினுண் மாமணியே
யாணிப்பொன் னேயென தாருயி ரேதணி காசலனே
தாணிற் கிலேனினைத் தாழாத வஞ்சர் தமதிடம்போய்ப்
பேணித் திரிந்தனனந் தோவென்செய் வனிப்பேதையனே. (௩)

அன்னேயெனைத் தந்தவப்பா வெனவேங்கி யலறுகின்றே
னென்னேயிவ் வேழைக் கிரங்காது நீட்டித் திருத்தலெந்தாய
பொன்னே சுகுணப் பொருப்பே தணிகைப் பொருப்பமர்ந்த
மன்னே கலபமயின் மேலழகிய மாமணியே. (௪)

மணியே திணைப்புன வல்லியை வேண்டி வளர்மறைவான்
கணியே யெனநின்ற கண்ணே யென்னுள்ளக் களிநறவே
பணியே னெனினுமென் னைவலிந் தாண்டுன் பதந்தரவே
நணியே தணிகைக்கு வாவென வோர்மொழி நல்குவையே. (௫)

---

* கண்ணுற்றதென்பது ஒருமைபன்மை மயக்கம்.

நல்காதவீனாதம்பாற்சென்றிரந்துநவைப்படுதன்
மல்காதவண்ணமருள்செய்கண்டாய்மயில்வாகனனே
பல்காதனீக்கியநல்லோர்க்கருளும்பரஞ்சுடரே
யல்காதவண்மைத்தணிகாசலத்திலமர்ந்தவனே. (௬)

அமராவதியிறைக்காருயிரீந்தவருட்குன்றமே
சமராபுரிக்கரசேதணிகாசலத்தற்பரனே
குமராபரமகுருவேகுகாவெனக்கூவிநிற்பே
னெமராஜனவந்திடுங்காலையனேயெனையேன்றுகொள்ளே. (௭)

கொள்ளுண்டவஞ்சர்தங்கூட்டுண்டுவாழ்க்கையிற்குட்டுண்டுமேற
றுள்ளுண்டநோயினிற்குண்டுமங்கையர்தோய்வெனுமோர
கள்ளுண்டநாய்களுன்கருணையுண்டோநற்கடலமுதத
தெள்ளுண்டதேவர்புகழ்தணிகாசலசிற்பரனே. (௮)

சிற்பகனமேவுமித்தேகத்தையோம்பித்திருவனையார்
* தற்பகமேவிழைந்தாழ்ந்தேன்றணிகைதனிலமர்ந்த
கற்பகமேநின்கழல்கருதேனிக்கடைப்படுமென்
பொற்பகமேவியநின்னருளென்னென்றுபோற்றுவதே. (௯)

போற்றேனெனினும்பொறுத்திடல்வேண்டும்புவிநடையாஞ்
சேற்றேவிழுந்துதியங்குகின்றேனைச்சிறிதுமினி
யாற்றேனெனதரசேயமுதேயெனருட்செல்வமே
மேற்றேன்பெருகுபொழிற்றணிகாசலவேலவனே. (௧௦)

வேல்கொண்டகையும்விறல்கொண்டதோளும்விளங்குமயின்
மேல்கொண்டவீறுமலர்முகமாறும்விரைக்கமலக்
கால்கொண்டவீரக்கழலுங்கண்டாலன்றிக்காமனெய்யுங்
கோல்கொண்டவன்மையறுமோதணிகைக்குருபரனே. (௧௧)

குருவேயயனரியாதியர்போற்றக்குறைதவிர்ப்பான்
வருவேல்பிடித்துமகிழ்வள்ளலேகுணமாமலையே
தருவேதணிகைத்தயாநிதியேதுன்பச்சாகரமாங்
கருவேரறுத்திக்கடையனைக்காக்கக்கடனுனக்கே. (௧௨)

உனக்கேவிழைவுகொண்டோலமிட்டோங்கியுலறுகின்றே
னெனக்கேயருளித்தமியேன்பிழையுளத்தெண்ணியிடேல்
புனக்கேழ்மணிவல்லியைப்புணர்ந்தாண்டருள்புண்ணியனே
மனக்கேதமாற்றுந்தணிகாசலத்தமர்வானவனே. (௧௩)

வானோர்குடிகளைவாழ்வித்ததெய்வமணிச்சுடரே
நானோவொளியனென்றுன்பறுத்தாளெனநண்ணிநின்றே
னேனோநின்னெஞ்சமிரங்காதவண்ணமிருங்கணிப்பூந்
தேனோடருவிபயிலுந்தணிகைச்சிவகுருவே. (௧௪)

---

* தன் - என்பது அசைநிலை.

கையாத துன்பக்கடன் மூழ்கி நெஞ்சங்கலங்கியென் ற
னையாநின பொன்னடிக்கோலமிட்டேனென னையாண்டுகொளாய்
மையாரதடங்கண் மலைமகளகண்டுமகிழ்செல்வமே
செய்யாதணிகைமலையரசேயயிற்செஙகையனே. (கரு)

செங்கையங்காந்தளனையமின்ஞாதந்திறதத்துழன்றே
வெங்கயமுணடவிளவாயினேன் விறலவேலினையோ
ரஙகையிலேந்தியவையாகுறவரரிதிறபெற்ற
மஙகைமகிழுந்தணிகேசனேயருளவந்தெனக்கே. (கசு)

கேளாதுபோலிருக்கின் றனையேழையிக்கீழ்நடையில்
வாளாவிடாகொணடலறிடுமோலத்தைமாமருந்தே
தோளாமணிச்சுடரோதணிகாசலததூயப்பொருளே
நாளாயினெனசெய்குவேனிறப்பாயநவைவருமே. (கஎ)

நவையேதருவஞ்சநெஞ்சகமாயவுநானுன்னன்ப
ரவையேயணுகவுமானந்தவாரியிலாடிடவுஞ்
சுவையேயமுதன்னநின்றிருநாமந்துதிக்கவுமா
மிவையேயெனெணணந்தணிகாசலததுளிருப்பவனே. (கஅ)

இருபபாயமாயமனததால்வருந்தியிளைத்துநின்றேன்
பொருப்பாயகனமப்புதுவாழ்விலாழ்ந்ததுபோதுமின்றே
கருப்பாழ்செயுமுன்கழலடிக்கேயிக்கடையவனைத்
திருப்பாயெனிலென்செயக்கேணறணிகாசலததெள்ளமுதே. (கசு)

தெள்ளகததேதோஙகியசெஞ்சுடரோசிவதேசிகனே
கள்ளகததேமலர்க்காவாரதணிகையென்கண்மணியே
யெள்ளகததேயுழன்றென்னினறலைத்தெழுந்திங்குமங்குந்
துள்ளகததேன்சிரஞ்சேருஙகொலோநின்றுணையடியே. (உ0)

அடியேனெனச்சொல்வதல்லானின்றுளடைந்தாளைகண்டே
துடியேனருணகிரிபாடுநினனருடோய்புகழைப்
படியேன்பதைததருகேன்பணியேன்மனப்பந்தமெலாங்
கடியேனறணிகையைக்காணேனென்செய்வெனெங்காதலனே. (உக)

தலனேயடியாதணிமனமாம்புகழ்சார்தணிகா
சலனேயயனரியாதியர்வாழ்ந்திடததாங்கயில்வேல்
வலனேநின்பொன்னருள்வாரியின்மூழ்கமனோலயம்வாய்ந்
திலனேல்சனனமரணமெனனுங்கடற்கென்செய்வனே. (உஉ)

என்செயகையென்செய்கையெந்தாய்நின்பொன்னடிக்கேயலக்கல்
வன்செய்கைநீங்கமகிழ்ந்தணியேன்றுதிவாயுளைக்க
மென்செய்கைகூப்பவிழிநீர்துளித்திடமெய்சிலிர்க்கத்
தன்செய்கையென்பதற்றேதணிகாசலஞ்சார்ந்திலனே. (உந)

சாருந்தணிகையிற்சாரதோய்நின் றூமணத்தாட்டுணையைச
சேருந்தொழும்பர்திருப்பதமன்றியிச்சிற்றடியே
னூருந்தனமுமுறவும்புகழுமொண்மடவார்
வாருந்தணிமுலைப்போகமும்வேண்டிலனமண்விண்ணிலே. (௨௪)

மண்ணீரனல்வளிவானுகிநின்றருள்வத்துவென்றே
தெண்ணீர்மையாற்புகழ்மாலயனேமுதற்றேவர்கடங
கண்ணீர்தொடைத்தருள்கற்பகமேயுனைக்கண்டுகொண்டேன
றண்ணீர்பொழிற்கண்மதிவந்துலாவுந்தணிகையிலே (௨௫)

தணியாததுன்பத்தடங்கடனீங்கநின்றன்மலர்த்தாட்
பணியாதபாவிகட்குமுண்டோபசுபாசமறறோர்க
கணியாகநின்றவருட்செல்வமேதணிகாசலனே
யணியாதவன்முதலாமட்டமூர்த்தமடைந்தவனே. (௨௬)

அடையாதவஞ்சகர்பாற்சென்றிரந்திங்கலைந்தலைந்தே
கடையானநாய்க்குனகருணையுண்டோதணிகைக்குணின்றே
யுடையாதநன்னெஞ்சர்க்குண்மையைக்காண்பிக்குமுத்தமனே
படையாததேவர்சிறைமீட்டளித்தருள்பண்ணவனே. (௨௭)

பண்ணவனேநின்பதமலரேத்தும்பயனுடையோர்
கண்ணவனேதணிகாசலனேயயிற்கையவனே
விண்ணவரேத்தியமேலவனேமயன்மேவுமனம்
புண்ணவனேனையுஞ்சேர்ந்தாயெனையுன்றனபொன்னருளே (௨௮)

பொன்னார்புயத்தனும்பூவுடையோனும்புகழ்மணியே
யென்னுவியின்றுணையேதணிகாசலத்தேயமர்ந்த
மன்னுநின்பொன்னடிவாழ்த்தாதுவீணில்வருந்துறுவே
னின்னுவியற்றுமியமனவந்தாலவற்கென்சொல்வனே. (௨௯)

சொல்லாமலர்புனையன்பகத்தோர்க்கருள்சொல்லுமெல்லாம
வல்லாயென்றேத்தவறிந்தேனினியென்றன்வல்வினைக
ளெல்லாம்விடைகொண்டிரியுமெனமேவியமலசினமுஞ்
*செல்லாதுகாணையனேதணிகாசலச்சீரரசே. (௩௰)

திருச்சிற்றம்பலம்.

# எண்ணப்பத்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அணிகொள்வேலுடையண்ணலேநின்றிருவடிகளையன்போடு
பணிகிலேனகமுருகிநின்றாடிலேன்பாடிலேன்மனமாயைத்
தணிகிலேன்றிருத்தணிகையைநினைகிலேன்சாமிநின்வழிபோகத்
துணிகிலேனிருந்தென்செய்தேன்பாவியேன்றுன்பமுமெஞ்சேனே. (௧)

சேல்பிடித்தவன்றந்தையாதியர்தொழுந்தெய்வமேசிவப்பேறே
மால்பிடித்தவரறியொணாத்தணிகைமாமலையமர்ந்திடுவாழ்வே
வேல்பிடித்தருள்வள்ளலேயான்சதுர்வேதமுங்காணாநின்
கால்பிடிக்கவுங்கருணைநீசெய்யவுங்கண்டுகண்களிப்பேனோ. (௨)

களித்துநின்றிருக்கழலிணையேழையேன்காண்பனோவலத்தனைப்
யொளித்துவன்றுயருழப்பனோவினைதென்றுணர்ந்திலேனருட்போதந்
தெளித்துநின்றிடுந்தேசிகவடிவமேதேவர்கள்பணிதேவே
தளிர்த்ததண்பொழிற்றணிகையில்வளர்சிவதாருவேமயிலோனே (௩)

மயிலின்மீதுவந்தருடருநின்றிருவரவினுக்கெதிர்பார்க்குஞ்
செயலினேன்கருத்தெவ்வணமுடியுமோதெரிகிலேனென்செய்கே
னயிலின்மாமுதறடிந்திடுமையனேயாறுமாமுகத்தேவே
கயிலைநேர்திருத்தணிகையம்பதிதனிற்கந்தனென்றிருப்போனே (௪)

இருப்புநெஞ்சகக்கொடியனேன்பிழைதனையெண்ணுறேலினிவஞ்சக
கருப்புகாவணங்காத்தருளையனேகருணையங்கடலேயென
விருப்புளூறிநின்றோங்கியவமுதமேவேலுடையெம்மானே
தருப்புகாவினன்விலகுறுந்தணிகைவாழ்சாந்தசற்குணக்குன்றே. (௫)

குன்றுநேர்பிணித்துயரினாலவருந்திநின்குரைகழல்கருதாத
துன்றுவஞ்சகக்கள்ளனேனெஞ்சகத்துயரறுத்தருள்செய்வா
னின்றுமாமயின்மீதினிலேறியிவ்வேழைமுன்வருவாயேல்
நன்றுநன்றதற்கெனச்சொல்வார்தணிகைவாழ்நாதநின்னடியாரே (௬)

யாரையுந்துணைகொண்டிலேனின்னடியிணைதுணையல்லானின்
பேரையுன்னிவாழ்ந்திடும்படிசெய்வையோபேதுறச்செய்வாயோ
பாரையும்முயிரப்பரப்பையும்படைத்தருள்பகவனேயுலகேத்துஞ்
சீரையுற்றிடுந்தணிகையங்கடவுணின்றிருவுளமறியேனே. (௭)

உளங்கொள்வஞ்சகநெஞ்சர்தமிடமிடருழந்தகமுலைவுற்றேன்
வளங்கொணின்பதமலர்களைநாடோறும்வாழ்த்திலேனென்செய்கேன்
குளங்கொள்கண்ணனுங்கண்ணனும்பிரமனுங்குறிக்கரும்பெருவாழ்வே
தளங்கொள்பொய்கைசூழ்தணிகையம்பதியில்வாழ்தனிப்பெரும்புகழ்த்தேவே. (௮)

தேவநாயகனாகியேயென்மனச்சிலைதனிலமர்ந்தோனே
மூவர்நாயகனெனமறைவாழ்த்திடுமுத்தியின்வித்தேயிங்
கேவராயினுநின்றிருத்தணிகைசென்றிறைஞ்சிடினவரோயென்
பாவநாசஞ்செய்தென்றனையாட்கொளும்பரஞ்சுடர்க்கண்டாயே. (௯)

கண்டனேகவானவர்தொழுநின்றிருக்கழலிணைதனக்காசை
கொண்டனேகமாய்த்தெண்டனிட்டானந்தக்கூத்தினையுகந்தாடித்
தொண்டனேனுநின்னடியரிற்செறிவனோதுயருழந்தலைவேனோ
வண்டனேதிருத்தணிகைவாழண்ணலேயணிகொள்வேற்கரத்தோனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# செழுஞ்சுடர்மாலை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஊணேயுடையேபொருளேயென்றுருகிமனந்தடுமாறி
வீணேதுயரத்தழுந்துகின்றேனவேறோர்துணைநின்னடியன்றிக்
காணேனமுதேபெருங்கருணைக்கடலேகனியேகரும்பேநற்
சேணோர்தணிகைமலைமருந்தேதேனேஞானச்செழுஞ்சுடரே. (௧)

பாருமவிசும்புமறியவெனைப்பயந்ததாயுந்தந்தையுநீ
யோரும்போதிங்கெனிலெளியேனோயாத்துயருற்றிடனன்றே
யாருங்காணவுனைவாதுகிழுப்பேனறியேனசெய்கேன்
சேருந்தணிகைமலைமருந்தேதேனேஞானச்செழுஞ்சுடரே. (௨)

கஞ்சன்றுதிக்கும்பொருளேயென்கண்ணேநினைக்கருதாத
வஞ்சர்கொடியமுகம்பார்க்கமாட்டேனினியென்வருத்தமறத்
தஞ்சமெனவந்தருளாயேலாற்றேன்கண்டாயடியேனே
செஞ்சந்தனஞ்சேர்தணிகைமலைத்தேனேஞானச்செழுஞ்சுடரே. (௩)

மின்னேருலகநடையதனின்மேவுந்துயருக்காளாகிக்
கன்னேர்மனத்தேனினைமறந்தேன்கண்டேன்கண்டாய்கற்பகமே
பொன்னேகடவுண்மாமணியேபோதப்பொருளேபூரணமே
தென்னேர்தணிகைமலையரசேதேவேஞானச்செழுஞ்சுடரே. (௪)

வளைத்தேவருத்தும்பெருந்துயரால்வாடிச்சவலைமகவாகி
யிளைத்தேன்றேற்றுந்துணைகாணேனென்செய்துய்கேனெந்தாயே
விளைத்தேனொழுகுமலர்த்தருவேவிண்ணேவிழிக்குவிருந்தேசீர்
திளைத்தோர்பரவுந்திருத்தணிகைத்தேவேஞானச்செழுஞ்சுடரே. (௫)

அடுத்தேவருத்துந்துயர்க்கடலிலறியாதந்தோவிழுந்திட்டே
னெடுத்தேவிடுவாரெமைக்காணேனெந்தாயெளியேனென்செய்கேன்
கடுத்தேர்கண்டத்தெம்மான்றன்கண்ணேதருயக்கடலேயென்
செடிதீர்தணிகைமலைப்பொருளேதேனேஞானச்செழுஞ்சுடரே. (௬)

உண்டாற்குறையுமெனப்பசிக்குமுலுத்தர்தமுகத்தையெதிர்
கண்டாலடங்கியொதுங்காதுகடைகாத்திரந்துகழிக்கின்றேன்
கொண்டாரடியர்நின்னருளையானேயொருவன்குறைபட்டேன்
நீண்டாரணிவேற்றணிகைமலைத்தேவேஞானச்செழுஞ்சுடரே. (௭)

வேட்டேனினதுதிருவருளைவினையேனினியித்துயர்பொறுக்க
மாட்டேன்மணியேயன்னேயென்மன்னேவாழ்க்கைமாட்டெனை
நாட்டேனயன்மாலெதிர்வரினுநயக்கேனெனக்குநல்காயோ
சேட்டேனலரும்பொழிற்றணிகைத்தேவேஞானச்செழுஞ்சுடரே. (௮)

கல்லாநாயேனெனினுமெனைக்காக்குந்தாய்நீயென்றுலக
மெல்லாமறியுமாதலினாலெந்தாயருளாதிருத்தியெனிற்
பொல்லாப்பழிவந்தடையுமுனக்கரசேயினியான்புகல்வதென்னே
செல்லாபொழில்சூழ்திருத்தணிகைத்தேவேஞானச்செழுஞ்சுடரே. (௯)

அன்னேயப்பாவெனநினருட்கார்வங்கூர்ந்திங்கலைகின்றே
னென்னேசற்றுமிரங்கிலைநீயென்னெஞ்சோநின்னன்னெஞ்ச
மன்னேயொளிகொண்மாணிக்கமணியேகுணப்பொன்மலையேநற்
றென்னோபொழில்சூழ்திருத்தணிகைத்தேவேஞானச்செழுஞ்சுடரே. (௧௦)

நடையேய்துயரான்மெலிந்துநினைநாடாதுழலுநானாயிற்
கடையேனெனினுங்காத்தலென்றன்கண்ணேநினதுகடனன்றோ
தடையேன்வருவாய்வந்துனருட்டருவாயிதுவேசமயங்காண்
செடிதீர்த்தருளுந்திருத்தணிகைத்தேவேஞானச்செழுஞ்சுடரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# குறையிரந்தபத்து.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சீர்பூத்தவருட்கடலேகரும்பேதேனேசெம்பாகேயெனதுகுலதெய்வமேநற், கூர்பூத்தவேன்மலர்க்கையரசேசாந்தகுணக்குன்றேதணிகைமலைக்கோவேஞானப், பேர்பூத்தநின்புகழைக்கருதியேழைபிழைக்கவருள்செய்வாயோபிழையைநோக்கிப், பார்பூத்தபவத்திலுறவிடினென்செய்கேன்பாவியேனந்தோவன்பயந்தீரேனே. (௧)

தீராததுயர்க்கடலிலழுந்திநாளுந்தியங்கியழுதேங்குமிந்தச்சேய்க்குநீகண், பாராதசெயலென்னேயெந்தாயெந்தாய்பாவியெனவிட்டனையோபன்னாளாக, வேராயவருட்டருவாயென்றேயேமாந்திருந்தேனேயென்செய்கேன்யாருமில்லேன, சீராருந்தணிகைவரையமுதேயாதிதெய்வமேநினக்கருத்தைத்தெளிந்திலேனே. (௨)

தெளிக்குமறைப்பொருளேயென்னன்பேயென்றன்செல்வமேதிருத்தணிகைத்தேவேயன்பர், களிக்குமறைக்கருத்தேமெய்ஞ்ஞானநீதிக்கடவுளேநின்னருளைக்காணேனின்னும், சுளிக்குமிடித்துயரும்யமன்கயிறுமீனத்தொடர்புமலத்தடர்புமனச்சோர்வுமந்தோ, வளிக்குமெனையென்செயுமோவறியேனின்றனடித்துணையேயுறுதுணைமற்றன்றியுண்டோ. (௩)

உண்டாயவுலகுயிர்கடம்மைக்காக்கவொளித்திருந்தவ்வுயிர்வினைகளொருங்கேகாணுங், கண்டாயேயிவ்வேழைகலங்குந்தன்மைகாணாயோபன்னிரண்டுகண்கள்கொண்டோய், தண்டாதநின்னருட்குத்தகுமோவிட்டாற்றருமமோதணிகைவரைத்தலத்தின்வாழ்வே, விண்டாதிதேவர்தொழுமுதலேமுத்திவித்தேசொற்பதங்கடந்தவேற்கையானே. (௪)

கையாதவன்புடையாரங்கைமேவுங்கனியேயென்னுயிரேயென்கண்ணேயென்று
ம், பொய்யாதபூரணமேதணிகைஞானப்பொருளேநின்பொன்னருளிப்போதியான்பெ
ற்றா, லுய்யாதகுறையுண்டோதுயர்சொல்லாமலோடுமேயமன்பாசமோய்ந்துபோமெ
ன், னையாநினடியரொடுவாழ்குவேனிங்காருனையல்லாலெனக்கின்றருள்செய்வாயே.

வாயகத்துமுன்னதருளென்றேயந்தோநாளும்வழிபார்த்திங்கிளைக்கின்றேன்வருத்துமம
பொல்லா, நோய்க்குமுறுதுயர்க்குமிலக்கானேன்மாழ்கிநொந்தேனின்னருள்காணே
னுவலும்பாசத், தேயக்குமவன்வரிலவனுக்கியாதுசொல்வேனென்செய்கேன்றுணைய
றியாவேழையேனே, தூயக்குமரகுருவேதென்றணிகைமேவுஞ்சோதியேயிரங்காயோ
தொழும்பாளர்க்கே. (௬)

ஆளாயோதுயரலைக்காவீழ்ந்துமாழ்கியையையாவோவெனுமுறையையந்தோசற்றுங்,
கேளாயோவென்செய்கேனெந்தாயன்பாகிளைத்துமுன்னதருளெனக்குக்கிடையாதாகி, ஞா
ளாயோர்நடுவன்வரிலெனசெய்வானோநாயினேனெனசொல்வேனுனுவேனோ, தோ
ளாவோர்மணியேதென்றணிகைமேவுஞ்சுடரேயென்னறிவேசிற்சுகங்கொள்வாழ்வே.

வாழ்வேநற்பொருளேநன்மருந்தேஞானவாரிதியேதணிகைமலைவள்ளலேயான்,
பாழ்வேலையெனுங்கொடியதுயருண்மாழ்கிப்பதைத்தையாமுறையோநின்பதத்துக்கெ
ன்றே, தாழ்வேனீதறிந்திலையோநாயேனமட்டுந்தயவிலையோநானபாவிதானோபார்க்கு,
ளாழ்வேனென்றயல்விட்டாநீதியேயோவச்சோவிங்கெனசெய்கேனண்ணலண்ணல்

அண்ணலேநின்னடியையன்றிவேறோராதரவிங்கறியேனெஞ்சழிந்துதுன்பாற,
புண்ணேனென்றன்னையின்னுமஞ்சாபாற்போயப்புலந்துமுகவாட்டமுடன்புலம்பிநி
ற்கப், பண்ணேதேயாவனிவனபாவிகளுள்ளும்படுபாவியென்றென்னைப்பரிந்துதள்ள,
வெண்ணேதேயானமிகவுமேழைகண்டாயிசைக்கரியதணிகையில்வீற்றிருக்குங்கோவே.

கோவேநற்றணிகைவரையமர்ந்தஞானகுலமணியேகுகனேசற்குருவேயார்க்குந்,
தேவேயெனவிண்ணப்பமொன்றுகேண்மோ சிந்தைதனினினைக்கவருள்செய்வாயநா
ளும்,பூவேயுமயன்றிருமால்புலனவாமுற்றும்போற்றுமெழிற்புரந்தரனெப்புவியுமோங்கச்
சேவேறும்பெருமானிங்கிவர்கள்வாழ்த்தல்செய்துவக்குநின்னிரண்டுதிருத்தாட்சீரே.

திருச்சிற்றம்பலம்.

---

## ஜீவசாட்சிமாலை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பண்ணேறுமொழியடியர்பரவிவாழ்த்தும்பாதமலரழகினையிப்பாவிபார்க்கிற்
கண்ணேறுபடுமென்றோகனவிலேனுங்காட்டெனாற்காட்டிலாய்கருணையீதோ
விண்ணேறுமரிமுதலோர்க்கரியஞானவிளக்கேயென்கண்ணேமெய்வீட்டின்வித்தே
தண்ணேறுபொழிற்றணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௧)

பண்டுமென துவந்த குணஞ்சிறிதுமில்லாப்பாவியேன் றனையாண்டாய்பரிவாலின்று, கொண்டுகுலம்பேசுதல்போலெளியேன் குற்றங்குறித்துவிடிலென்செய்கேன் கொடியனேனைக், கண்டுதிருத்தொண்டாக்கைசெய்வாரொத்தாயகைவிடேலுன் றுணை காண்முக்காலும், தண்டுளவன புகழ்தணிகைமணியேஜீவசாக்ஷியாய நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௨)

புன்புலையவஞ்சகர்பாற்சென் றுவீணேபுகழ்ந்துமனமயர்ந்துறுகண்பொருந்திப் பொய்யாம், வன்புலையவயிறேமபிப்பிறவிநோயகுமருந்தாயநினனடியைமறநதேனந்தோ, வினபுலையவுயிர்கொளவானவரிலென்பாலவ்வியமனுககிஙகெனசொலகேனென்செயகேனே, தன்புகழ்காணருநதணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைநதருளுஞ்சகசவாழ்வே. (௩)

பெருங்களபமுலைமடவாரென் னும்பொல்லாப்பேய்ககோட்பட்டாடுகின் றபித்தனேனுக, கிரும்புலவாககரிய திருவருளீவாயேலென்சொல்வாரடியரதறகெநதாயெநதாய், கரும்பினிழிநதொழுகுமருட்சுவையேமுககட்கனிகனிநதேனேயென்சண்ணேஞானந், தரும்புனிதர்புகழ்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைநதருளுஞ்சகசவாழ்வே (௪)

கல்லளவாநெஞ்சமெனவஞ்சமாதர்கண்மாயமெனுங்கயிற்றாற்கட்டுவித்துச், சொல்லளவாததுனபமெனுஙகடலில்வீழ்ததச்சோர்கினறேனந்தோநறறுணையொன றிலலேன், மல்லளவாய்பபவமாயக்குமருநதாமுன் றனமலாப்பாதப்புணைதந்சாலமயங்கேனெந்தாய, * சலலமுலாததருநதணிகைமணியேஜீவசாக்ஷியாயநிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௫)

அன்னைமுதலாம்பந்தத்தழுங்கிநாளுமலைந்துவயிறேம்பிமனமயர்ந்துநாயேன், முன்னைவினையாற்படும்பாடெல்லாஞ்சொலலிமுடியேன்செயபிழைசருதிமுனிவேலையா, பொனனைநிகரருட்குனறேயொன்றேமுககட்பூமணமேநறவேநறபுலவர்போற்றுந், தனனைநிகாதருந்தணிகைமணியேஜீவசாக்ஷியாயநிறைந்தருளுஞ்சகசவாழவே

பன்னரும்வன் றுயரானெஞ்சழிநதுநாளும்பதைத்துருகிநின்னருட்பால்பருசக்கிட்டா, துன்னருமபொய்வாழ்க்கையெனுங்கானததிநதவூர்ந்கைககப்பாவியழலுணாநிலாயோ, வெனனருளமையப்பாவென்னையாவென் றனின்னுயிர்க்குத்தலைவாவிஙசெவர்கருநதேவா, தனனியறசீர்வளாதணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைநதருளுஞ்சகசவாழ்வே. (௭)

கோவேநினபதநதுதியாவஞ்சநெஞ்சக்கொடியோர்பான்மனவருததஙகொண்டாழ்கின்றேன், சாவேனுமல்லனினபொன்னருளைககாணேன் றமியேனையுய்யும்வண்ணநதருவதென்றோ, சேவேறுஞ்சிவபெருமானரிதினீனறசெலவமேயருணஞானதேனேயனபர், தாவேதந்தெறுந்தணிகைமணியேஜீவசாக்ஷியாயநிறைநதருளுஞ்சகசவாழ்வே. (௮)

ஓயாதுவருமிடியான்வஞ்சாபாற்சென் றுளங்கலங்கிநாணியிரந்துழன்றெந்நாளும், மாயாததுயரடைந்துவருந்திதெய்வமருந்தாயநின்னடியைமறந்திட்டேனே, தாயாகிததந்தையாய்த்தமராய்ஞானசற்குருவாய்ததேவாகிததழைத்தவொன்றே, சாயாதபுகழ்ததணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௯)

* சல்லம் - எ-து பன்றிகோடு.

மின்ஞறுநிடைமடவாரல்குலாயவெங்குழியில்வீழ்ந்தாழ்ந்துமெலிநதேனல்லா, லெந்நாளுமுநடீனப்போற்றியறியேனென்னேயேழைமதிகொண்டேனிஙகென்செய்கேனே, யநுபன்ஞறுயென்னப்பாவென்றரற்றுமன்பர்க்காரமுதேயருட்கடலேயமராகோவே, தன்ஞறுர்வத்தமர்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௧௦)

வன்சொலிஞரிடையடைந்துமாழ்குமிந்தமாபாவியேன்குறையைவகுத்துநாளு, மென்சொலினுமிரஙகாமலந்தோவாளாவிருக்கின்றுயென்னேநினனிரக்கமெந்தா, யின்சொலடியவாமகிழுமின்பமேயுள்ளிருளகற்றுஞ்செஞ்சுடரோயெவாகருஙகோவே, தன்சொல்வளர்தருந்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைநதருளுஞ்சகசவாழ்வே (௧௧)

மீளாதவன்றுயர்கொண்டுனர்தமமான்மெலிந்துநினையமைதசலறிவிமமாநின்றேன், கேளாதகேள்வியெலாங்கேட்பிப்பாயநீகேட்கிலேயோவென்னளவிற்கேளவியினறே, மாளாததொண்டரகவிருளைநீககுமதியேசிற்சுகஞானமழைபெய்விண்ணே,தாளாளர்புகழ்தணிகைமணியேஜீவசாக்ஷியாயநிறைநதருளுஞ்சகசவாழ்வே. (௧௨)

மண்ணிஞனமஙகையராற்பொருளாலந்தோவருநதிமனமயாஙகிமிகவாடிநின்றேன், புணணியாநினனருளையினனுங்காணேனபொறுத்துமுடியேனறுயரம்புகல்வதென்னே, யெண்ணிஞலளப்பரியபெரியமோனவின்பமேயனபாதமதிதயத்தோங்குந், தண்ணிஞற்பொழிற்றணிகைமணியேஜீவசாக்ஷியாயநிறைந்தருளுஞ்சகசவாழ்வே.

வஞ்சகராங்கானினிடையடைநதேநெஞசம்வருநதியுறுகண்வெயிலான்மாழாந்தந்தோ, தஞசமென்பாரினறியொருபாவிநானேதனிததருணீததாகமுறறேனறயைசெய்வாயோ, செஞ்சொனமறைமுடிவிளகசேயுண்மைஞானததேறலேமுததொழிலசெய்தேவாதேவே, சஞ்சலநீததருடணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைநதருளுஞ்சகசவாழ்வே. (௧௪)

வாழாதவண்ணமெனைக்கெடுக்கும்பொல்லாவஞசக் நெஞ்சாலுலகினமாழாந்தந்தோ,பாழாமைடந்தையர்பாற்சிந்தைவைககுமபாவியேன்முகமபாரசகப்படுவதேயோ, யேழாயவனபவத்தைநீககுஞானவின்பமேயென்னரசேயிறையேசற்றுந், தாழாதபுகழ்த்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௧௫)

உளந்தளரவிழிசுருககும்வஞ்சர்பாறசென்றுததமநின்னடியைமறநதோயாவெய்யி, விளந்தளிரபோனவிநதிரந்திங்குழலுமிந்தவேழைமுகம்பாரதிரங்காயெனனேயென்னே, வளந்தருசற்குணமலையேமுககட்சோதிமணியினிருநதொளிரொளியேமயிலூர்மன்னே, தளந்தரும்பூம்பொழிற்றணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைநதருளுஞ் சகசவாழ்வே. (௧௬)

கல்லாதவஞ்சகர்பாற்சென்றுவீஞள்கழிதது நிற்குங்கடையனிவன்கருணையில்லாப், பொல்லாதபாவியெனவெண்ணியென்னைப்புறம்போககிலையாயான்புரிவனெனனே, யெல்லாஞ்செயவல்லவனேதேவர்யார்க்குமிறைவனேமயிலேறுமெம்பிரானே,சலலாபவனததணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௧௭)

கனேயநெஞ்சகர்மாட்டணுகியையோகளாந்துருகியெந்தாய்நின்கருணைகாணு, தென்னேயென்றேங்கியழும் பாவியேனுக்கிருக்கவிடமிலேயோ நின்னிதயங்கல்லோ, பொனனேயென்னுயிர்க்குயிராய்ப்பொருந்துஞானபூரணமேபுண்ணியமேபுனிதவைப்பே, தன்னேரிறென்றணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே.

பாவவினைகோரிடமாமடவார் தங்கள்பாழ்ங்குழிக்கண்வீழமனம்பற்றியந்தோ, மாவலவினையுடன்மெலிந்திங்குழலகின்றேனின் மலரடியைப்போற்றேனென்மதிதானென்னே, தேவர்தொழும்பொருளேயென்குலத்துகெல்லாந்தெய்வமேயடியருளஞ்செழிக்குந்தேனே, தாவகன்றோபுகழ்த்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௧௯)

கன்னியர்தம்மார்பிடங்கொண்டலைகும்புனசீழ்க்கட்டிகளைக்கருதிமனங்கலங்கிவீணே, யன்னியனுயலைகின்றேனையகற்றியடிமைகொள்ளலாகாதோவருட்பொற்குன்றே, சென்னிமிசைக்கங்கைவைத்தோனரிதிற்பெற்றசெல்வமேயென்புருகுந்தேனேயெங்குரு, தன்னியல்கொண்டுறுந்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே (௨௦)

உள்ளமனக்குரங்காட்டித்திரியுமென்றனுளவறிந்தோவையாநீயுனைப்போற்றார், கள்ளமனக்குரங்குகளையாட்டவைத்தாயகடையனேன் பொறுத்துமுடிகில்லேன்கண்டாய், தெள்ளமுதப்பெருங்கடலேதேனேஞானத்தெளிவேயென்றெய்வமேதேவர்கோவே, தள்ளரியபுகழ்த்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே.

வந்தாள்வாயையாவோவஞ்சாதம்பாலவருந்துகின்றேனென்றலறுமாறறங்கேட்டு, மெந்தாய்நீயிரங்காமலிருக்கின்றாயாலென்மனம்போனின்மனமுமிருந்ததேயோ, கந்தாவென்றுரைப்பவர்தங்கருத்துள்ளூறுங்கனிரசமேகரும்பேகற்கண்டேநற்சீர்த், தந்தாளுந்திருத்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௨௨)

ஊராதியிகழ்மாயக்கயிற்றாற்கட்டுண்டோயாந்தலறிமனங்குழைந்திங்குழலுகின்றேன், பாராதியண்டமெலாங்கண்டதிறகாண்போயபாவியேன்முகவாட்டம்பார்த்திலாயோ, சீராதிபகவனருட்செல்வமேயென்சிந்தைமலர்ந்திடவூறுந்தேனேயின்பஞ், சாராதிமலைத்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே (௨௩)

வாவென்பாரின்றியுன்தன்பொன்னைவஞ்சகனென்றேமறுத்துவன்கணுநீ, போவென்பாரிலெங்குபோவேனந்தோபொய்யனேன்றுணையின்றிப்புலம்புவேனே, கோவென்பார்கருடருமகுன்றேயொன்றேகுணங்குறியற்றிடவருளுங் குருவேவாழ்க்கைத், தாவென்பார்புகழ்த்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே (௨௪)

மாயைநெறியாமுலகவாழ்க்கைதன்னில்வருந்திநினையழைந்தலறிமாழ்கின்றேன், றாயையறியாதுவருஞ்சூலுண்டோவெனசாமிநீயறியாயோதகையில்லாயோ, பேயைநிகர்பாவியெனநினைந்துவிட்டாற் பேதையேனென்செய்கேன் பெருஞ்சீர்க்குன்றே, சாயைகடற்செறிதணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே.

மின்னைநிகர்ந்தழிவாழ்க்கைத்துயரானெஞ்சமெலிந்துநினதருள்பருகவேட்டுநின்றே, னென்னையிவன்பெரும்பாவியென்றேதள்ளிலென்செய்கேன்றான்பெறுஞ்சேயிடற்றுங்குற்ற, மன்னைபொறுத்திடனீயியல்லவோவென்னையாவேநீபொறுக்கலாகாதோதான், றன்னைநிகர்தருந்தணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௨௬)

முந்தைவினையானினதுவழியிற்செல்லாமூடனேனை நினையனபர்முனிந்துபெற்ற, தந்தைவழிநில்லாதபாவியெனறேதள்ளிவிடிற்றலைசாயததுதயங்குவேனே, யெந்தைநினதருள்சற்றேயளித்தால்வேறேரெண்ணமிலேனேகாந்ததிருந்துவாழ்வேன, சந்தனவான்பொழிற்றணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே.

பன்னகநொந்துறுவஞ்சவுலகினினறுபரதவித்துன்னருட்கெதிர்போய்ப்பார்க்கின்றேனின், பொன்னருளைப்புணாந்துமனமகிழ்ந்துவாழப்புண்ணியனேனாயேற்குப்பொருத்தமின்றே, பின்னையொருதுணையறியேனறணியேவிட்டாற்பெருமநினககழகேயோபேதையாமென், றன்னையளிததருடணிகைமணியேஜீவசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௨௮)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆற்றாமை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

விண்ணுறுதுவாழ்வேந்தனுதியர்வேண்டியேமகவும்விட்டெனெஞ்சகக்
கண்ணுறுநீகலந்துநிற்பதைகள்ளனாயினேனகண்டுகொண்டிலே
னெண்ணுறுதுயர்க்கடலுண்மூழ்கியேயியங்கிமாழ்குவேனயாதுசெய்குவேன்
றண்ணுறுப்பொழிற்குலவும்போரிவாழ்சாமியேதிருத்தணிகைநாதனே. (௧)

வாட்கணேழையர்மயலிறபட்டகமயங்கிமாலயன்வழுத்துநின்றிருத்
தாட்கணேயமற்றுலகவாழ்க்கையிற்சஞ்சரித்துழல்வஞ்சனேனிட
மாட்கணேசுழலநதகன்வரின்அஞ்சுவேனலாலயாதுசெய்குவே
னாட்கணேர்மலாப்பொழில்கொள்போரிவாழ்நாயகாதிருத்தணிகைநாதனே. (௨)

எண்ணில்புன்றொழிலெய்திவையவோவியல்பின்வாழ்க்கையிலியங்கிமாழ்கியே
கண்ணினுண்மணியாயநின்றனைக்கருதிடாதுழல்கபடனேற்கரு
ணண்ணிவந்திவனேழையாமெனநலகியாணடிடனியாயமேசொலாய
தண்ணிரும்பொழிற்சூழும்போரிவாழ்சாமியேதிருத்தணிகைநாதனே. (௩)

கூவியேழையர்குறைகடீரவாட்கொள்ளும்வள்ளலேகுறுகும்வாழ்க்கையிற்
பாவியேன்படும்பாடனைத்தையும்பார்த்திருந்துநீபரிந்துவந்திலாய்
சேவியேனெனிற்றள்ளனீதியோதிருவருட்கொருசிந்துவல்லையோ
தாவியோவனைப்பயில்செய்போரிவாழ்சாமியேதிருத்தணிகைநாதனே. (௪)

சந்தநோர்நடைதன்னிலேங்குவேன்சாமிநின்றிருத்தாளுக்கன்பிலே
னெந்தைநீமகிழ்ந்தென்னையாள்கையேயென்னையென்பர்களென்சொல்வார்களோ
நிந்தையேற்பினுங்கருணைசெய்திடனித்தநின்னருணீதியாகுமா
றந்ததாயெனவந்துசீர்தருந்தலைவனேதிருத்தணிகைநாதனே. (௫)

செல்லும்வாழ்க்கையிற்றியங்கிவிட்டுநின்செய்யதாட்டுதிசெய்திடாதுழல்
கல்லுமவெந்நிடக்கண்டுமிண்டுசெய்யகள்ளநெஞ்சினேன்கவலைதீர்ப்பையே
சொல்லுமின்பவானசோதியேயருட்டோற்றமேசுகசொரூபவள்ளலே
சல்லியங்கெடவருள்செய்போரிவாழ்சாமியேதிருத்தணிகைநாதனே. (௬)

ஏதுசெய்குவனேனுமென்றனையீன்றநீபொறுத்திடுதலல்லதை
யீதுசெய்தவனென்றிவ்வேழையையெந்தவண்ணநீயெண்ணநீக்குவாய்
வாதுசெய்வனிப்போதுவள்ளலேவறியனேனைமதித்துநின்றிடே
ரூதுசெய்மலர்ப்பொழில்கொள்போரிவாழ்சாமியேதிருத்தணிகைநாதனே. (௭)

பேயுமஞ்சுறும்பேதையார்களைப்பேணுமிப்பெரும்பேயனேற்கொரு
தாயுமப்பனுந்தமருநட்புமாயதண்ணருட்கடறந்தவள்ளலே
நீயுநானுமோர்பாலுநீருமாய்நிற்கவேண்டினேனீதியாகுமோ
சாயும்வன்பவந்தனைநீக்கிடுஞ்சாமியேதிருத்தணிகைநாதனே. (௮)

பொய்யர்தம்மனம்புகுதலின்றெனப்புனிதநூலெலாம்புகல்வதாதலா
லையநின்றிருவருட்கிரப்பவிங்கஞ்சிநின்றனிவவிஞ்சுவஞ்சனேன்
மெய்யருள்ளுளேவிளங்குஞ்சோதியேவித்திலாசவானவிளைந்தவின்பமே
தையலாரிருவோருமேவுதோட்சாமியேதிருத்தணிகைநாதனே. (௯)

மாலின்வாழ்க்கையின்மயங்கிநின்பதமறந்துழன்றிடும்வஞ்சநெஞ்சினேன்
பாவிநீயெனநின்னடிக்கணேபற்றிவாழ்ந்திடப்பண்ணுவாய்கொலோ
சேலின்வாட்கணார்தீயமாயையிற்றியங்கிநின்றிடச்செய்குவாய்கொலோ
சாலநின்னுளந்தானெவ்வண்ணமோசாற்றிடாய்திருத்தணிகைநாதனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# இரந்தவிண்ணப்பம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

நாளையேகியேவணங்குதுமெனத்தினநாளையேகழிக்கின்றாய்
மூளைநெஞ்சமேயெனையோவென்னையோவுயர்திருத்தணிகேசனை
ருளையுன்னியேவாழ்ந்திலமுயிருடற்றணந்திடற்றனையிந்த
வேளையென்றறிவுற்றிலமென்செய்வோமவிளைப்பருமவிடையோமே. (௧)

விடையவாழ்க்கையைவிரும்பினனின்றிருவிரைமலர்ப்பதம்போற்றேன்
கடையநாயினேனெவ்வணநின்றிருக்கருணைபெற்றுய்வேனே
விடையிலேறியசிவபரஞ்சுடருளேவிளங்கியவொளிக்குன்றே
தடையிலாதபேரானந்தவெள்ளமேதணிகையெம்பெருமானே. (௨)

பெருமைவேண்டியபேதையிற்பேதையேன்பெருந்துயருழக்கின்றே
னொருமையீயுநின்றிருப்பதமிறைஞ்சிலேனுய்வதெப்படியேயோ
வருமையாந்தவத்தம்மையுமப்பனுமளித்திடும்பெருவாழ்வே
தருமவள்ளலேகுணப்பெருங்குன்றமேதணிகைமாமலையானே. (௩)

மலையும்வேற்கணார்மையலிலழுந்தியேவள்ளனின்பதம்போற்றா
தலையுமிப்பெருங்குறையினையயகோயாவரோடுரைசெய்கே
னிலைகொளானந்தநிருத்தனுக்கொருபொருணிகழ்த்தியபெருவாழ்வே
தலைமைமேவியசற்குருநாதனேதணிகையம்பதியானே. (௪)

பதியுமப்பனுமன்னையுங்குருவுநற்பயன்றருபொருளாய
கதியுநின்றிருக்கழலடியல்லதுகண்டிலனெளியேனே
விதியுமாலுநின்றேத்திடுந்தெய்வமேவிண்ணவர்பெருமானே
வதியுஞ்சின்மயவடிவமேதணிகைமாமலையமாந்திடுவாழ்வே. (௫)

வாழுநின்றிருத்தொண்டர்கடிருப்பதம்வழுத்திடாதுலகத்தே
தாழும்வஞ்சர்பாற்றாழுமென்றனைமையென்றனைமைவன்பிறப்பாய
வேழமென்னதேயாகியதையனேயெவரெனைப்பொருகின்றோ
றூழுநீக்குறுந்தணிகையெம்மண்ணலேயுயாதிருவருட்டேனே. (௬)

தேனுந்தெள்ளியவமுதமுங்கைக்குநின்றிருவருட்டேனுண்டே
யானுநீயுமாய்க்கலந்துறவாடுநாளெந்தநாளறியேனே
வானும்பூமியும்வழுத்திடுந்தணிகைமாமலையமர்ந்திடுதேவே
கோனுந்தற்பரகுருவுமாயவிளங்கியகுமாரசற்குணக்குன்றே. (௭)

குன்றுபொய்யுடல்வாழ்வினைமெய்யெனக்குறித்திவணலைகின்றே
னின்றுநின்றிருவருளடைந்துய்வனோவில்லையிவ்வுலகத்தே
யென்றுமிப்படிபிறந்திறந்துழல்வனோயாதுமிங்கறிகிலலே
னன்றுநின்றிருச்சித்தமென்பாக்கியநற்றணிகையிற்றேவே. (௮)

தேவருந்தவமுனிவருஞ்சித்தருஞ்சிவனரியயனாகு
மூவரும்பணிமுதல்வநின்னடியிலென்முடியுறவைப்பாயே
லேவருமெனக்கெதிரிலைமுத்திவீடென்னுடையதுகண்டாய
தாவரும்பொழிற்றணிகையங்கடவுளேசரவணபவகோவே. (௯)

வேலையென்றதோட்பாவையர்படுகுழிவிழுந்தலைந்திடுமிந்த
நாயையெப்படியாட்கொளலாயினுநாதநின்செயலன்றே
தாயையப்பனைத்தமரினைவிட்டுனைச்சார்ந்தவர்க்கருள்கின்றோய்
மாயைநீக்கிநல்லருள்புரிதணிகையவந்தருளிந்நாளே. (௰)

திருச்சிற்றம்பலம்.

# கருணைமாலை.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

சங்கபாணியைச்சதுமுகத்தனைச்
செங்கணாயிரத்தேவநாதனை
மங்கலம்பெறவைத்தவள்ளலே
தங்கருட்டிருத்தணிகையையனே. (௧)

ஐயனேநினையன்றியெங்கணும்
பொய்யனேற்கொருபுகலிலாமையால்
வெய்யனேனைவெறுத்துவிட்டிடேல்
மெய்யனேதிருத்தணிகைவேலனே. (௨)

வேலன்மாதவன்வேதனேத்திடும்
மேலனமாமயின்மேலனன்பருட்
சாலநின்றவன்றணிகைநாயகன
வாலநற்பதவைப்பெனெஞ்சமே. (௩)

நெஞ்சமேயிஃதென்னைநின்மதி
வஞ்சவாழ்வினின்மயங்குகின்றனை
தஞ்சமென்றருட்டணிகைசார்தியேற்
கஞ்சமாமலர்க்கழல்கிடைக்குமே. (௪)

கிடைக்குண்மாழ்கியேகிலஞ்செயந்தகன்
படைக்குட்பட்டிடும்பான்மையெய்திடேன்
றடைக்குட்பட்டிடாதணிகையான்பதத்
தடைக்கலம்புகுந்தருள்செழிப்பனே. (௫)

செழிக்குஞ்சீர்த்திருத்தணிகைத்தேவநின்
கொழிக்குநல்லருள்கொள்ளைகொள்ளவே
தழிக்கொண்டனபரைச்சார்ந்திலேனிவண்
பழிக்குள்ளாகுமென்பான்மையென்னையோ. (௬)

என்னையென்னையீதென்றன்மாதவ
முன்னைநன்னெறிமுயன்றிலேனைநின்
பொன்னையன்னதாள்போற்றவைத்தனை
யன்னையென்னுநற்றணிகையண்ணலே. (௭)

அண்ணிலேனினையையநின்னடி
யெண்ணிலேனிதற்கியாதுசெய்குவேன்
புண்ணினேன்பிழைபொறுத்துக்கோடியா
றண்ணினீள்பொழிற்றணிகையப்பனே. (௮)

அப்பனென்னுடையன்னைதேசிகன்
செப்பனென்குலத்தெய்வமானவன்
றப்பனென்னுயிர்த்துணைவனயாதுமோர்
தப்பிலன்பாசோதணிகைவள்ளலே. (௯

வள்ளலுன்னடிவணங்கிப்போற்றவென்
னுள்ளமென்வசத்துற்றதில்லையா
லெள்ளலையவோவேழையெனசெய்கேன்
றள்ளரும்பொழிற்றணிகைவெற்பனே. (௧௦)

வெற்பனேதிருத்தணிகைவேலனே
பொற்பனேதிருப்போரிநாதனே
கற்பமேற்பலகாலஞ்செல்லுமா
லற்பனேனறுயர்க்களவுசாற்றவே. (௧௧)

சாறுசோதிருத்தணிகையெந்தைநின்
ஆறுமாமுகத்தழகைமொண்டுகொண்
டேறில்கண்களாலுண்ணவெண்ணினே
னீறிலென்னுடையெண்ணமுற்றுமோ. (௧௨)

முற்றுமோமனமுன்னிநின்பதம்
பற்றுமோவினைப்பகுதியென்பவை
வற்றுமோசுகவாழ்வுவாய்க்குமோ
சற்றுமோர்கிலேன்றணிகையத்தனே. (௧௩)

அத்தனேதணிகாசலத்தருள்
வித்தனேமயின்மேற்கொள்வேலனே
பித்தனேன்பெரும்பிழைபொறுத்திடிற
சுத்தவன்பர்கள்சொல்வரோதமே. (௧௪)

ஏதிலாளெனவெண்ணிக்கைவிடி
னீதியோவெனைநிலைக்கவைத்தவா
சாதிவானபொழிற்றணிகைநாதனே
யீதிநின்னருளென்னும்பிச்சையே. (௧௫)

பிச்சையேற்றவன்பிள்ளைநீயெனி
லிச்சையேற்றவர்க்கியாதுசெய்குவாய
பச்சைமாமயிற்பரமநாதனே.
கச்சிநாதணிகைக்கடம்பனே. (௧௬)

கடப்பமாமலர்க்கண்ணிமார்பனே
தடப்பெரும்பொழிற்றணிகைத்தேவனே
யிடப்படாச்சிறியேனையன்பர்க
டொடப்படாதெனிற்சொல்வதென்கொலோ. (௧௭)

என்சொல்கேனிதையெண்ணிலற்புதம்
வன்சொலேன்பிழைமதித்திடாதுவந்
தின்சொலாலிவணிருத்தியெனறனன்
றனசொலசெப்பருநதணிகைதேவனே. (௧௮)

தேவநேசனேசிறக்குமீசனே
பாவநாசனேபரமதேசனே
சாவகாசனேதணிகைவாசனே
கோவபாசனேகுறிகொளென்னையே. (௧௯)

குறிகொளன்பரைக்கூடுறுதவிவ
வெறிகொளுயிரைவேணடியையநீ
முறிக்கொள்வாயகொலோமுனிகொள்வாய்கொலோ
நெறிகொள்வோர்புகழ்தணிகைநித்தனே. (௨0)

தணிகைமேவியசாமியேநினை
யெணிகைவிட்டிடேலெனறுதோத்திர
மணிகைநின்னடிககயாநதுநின்றவீண்
கணிகைபோலெனைககலக்கிற்றுளளமே. (௨௧)

உள்ளநெக்குவிட்டுருகுமனபர்தந
நளளகததினினடிகருஞ்சோதியே
தள்ளருந்திறற்றணிகையானநத
வெளளமேமனம்விள்ளசசெயவையே. (௨௨)

செய்வதன்றவன்சிறியனேனறனை
வைவரனபாகவென்னின்மநதனே
னுயவதெவவணமுறைசெயத்தனே
சைவநாதனேதணிகைமன்னனே. (௨௩)

மன்னுநினனருள்வாயப்பதின்றியே
யின்னுமிதநுயரேய்ககிலென்செய்கேன்
பொனனினம்புயனபோற்றுமபாதனே
தன்னினின்றிடுந்தணிகைமேலனே. (௨௪)

மேலவானவாவேண்டுநின்றிருக
காலயென்சிரங்களிக்கவைப்பையோ
சாலயோங்கியதணிகைவெற்பனே
வேலயேநதுகைவிமலநாதனே. (௨௫)

வேதமாமுடிவிளங்குநின்றிருப்
பாதமேதிடாப்பாவியேன்றனக்
கீதலின்றுபோவென்னிலென்செய்கேன்
சாதல்போக்குநற்றணிகைநேயனே. (௨௬)

நேயநின் புடைநின் றிடாதவென்
மாயநெஞ்சினுள்வந் திருப்பையோ
பேயனேன்பெரும்பிழைபொறுத்திடத்
தாயநின்கடன் றணிகைவாணனே. (௨௭)

வாணுதற்பெருமாட்டிமாரொடு
காணுதற்குனைக்காதல்கொண்டனன்
யேணுதறகெனதெண்ணமுற்றுமோ
மாணுதற்புகழ்த்தணிகைவண்ணனே. (௨௮)

வண்ணனேயருள்வழங்குமபன்னிரு
கண்ணனேயயிற்கரஙகொளையனே
தண்ணனோதிருத்தணிகைவேலனே
திண்ணமீதருள்செயயுஙகாலமே. (௨௯)

கால்குறித்தவென்கருத்துமுற்றியே
சால்வளததிருததணிகைசாரவெனை
மால்பகைப்பிணிமாறியோடவே
மேல்குறிப்பனுல்வெற்றிச்சங்கமே. (௩0)

திருச்சிற்றம்பலம்.

---

## மருண்மாலைவிண்ணப்பம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சொல்லும்பொருளுமாய்நிறைந்தசுகமேயன்பர்துதிதுணையே
புல்லும்புகழ்சேர்தணிகைப்பொருப்பின்மருந்தேபூரணமே
யல்லும்பகலுநின்னாமமதோதிநினைந்துன்னாளாகேன்
கல்லும்பொருவாவன்மனததாற்கலங்காநின்றேன்கடையேனே. (௧)

கடையேன்வஞ்சநெஞ்சகத்தாற்கலுழ்கின்றேனின்றிருக்கருணை
யடையேனவமேதிரிகின்றேனந்தோசிறிதுமறிவில்லேன்
விடையேறீசன்புயம்படுமுன்விரைத்தாட்கமலம்பெறவேனோ
கொடையேயருளைத்தருமுகிலேகோவேதணிகைக்குலமணியே. (௨)

மணியேயடியேன்கண்மணியேமருந்தேயன்பர்மகிழ்ந்தணியு
மணியேதணிகையரசேதெள்ளமுதேயென்றனாருயிரே
பிணியேய்துயரால்வருந்திமனப்பேயாலலைந்துபிறழ்கின்றேன்
றணியேன்றருகநின்னருளைத்தருதலிலையேற்றாழ்வேனே. (௩)

தாழ்வேன்வஞ்சநெஞ்சகர்பாற்சாரேன்றனக்குன்னருடந்தால்
வாழ்வேனிலையேலென்செய்கேன்வருத்தம்பொறுக்கமாட்டேனே
யேழ்வேதனையுங்கடந்தவர்தமின்பப்பெருக்கேயென்னுயிரோ
போழ்வேறகரங்கொள்புண்ணியனேபுகழ்சேர்தணிகைப்பொருப்பரசே. (௪)

அரைசேயடியர்க்கருள்குகனேயண்ணாதணிகையையாவே
விரைசேர்கதம்பமலாப்புயனேவேலாயுதக்கைமேலோனே
புரைசேர்மனததால்வருந்தியுன்றன்பூம்பொற்பதத்தைப்புகழ்கில்லேன்
றரைசோவாழ்விற்றயங்குகின்றேனந்தோநின்றுதனியேனே. (௫)

தனியேதுயரில்வருந்திமனஞ்சாம்பிவாழ்க்கைத்தளைப்பட்டிங்
கினியேதுறுமோவென்செய்கேனென்றேநினைறேற்கிரங்காயோ
கனியேபாகேகரும்பேயெனகண்ணேதணிகைக்கற்பகமே
துனியேயபிறவித்தளையகற்றுந்துணையேசோதிச்சுகக்குன்றே. (௬)

குன்றேமகிழ்ந்தகுணக்குன்றேகோவேதணிகைக்குருபரனே
நன்றேதெய்வநாயகமேநவிலற்கரியநல்லுறவே
யென்றேவருவாயருடருவாயென்றேபுலம்பியேங்குற்றே
னின்றேகாணப்பெறிலெந்தாயிறவேன்பிறவேனிருப்பேனே. (௭)

இருப்பேன்றுயர்வாழ்வினிலெனினுமெந்தாய்நினதுபதங்காணும்
விருப்பேனயனமான்முதலோரைவேண்டேனருளவேணடாயோ
திருப்பேரொளியேயருட்கடலேதெள்ளாரமுதேதிருத்தணிகைப்
பொருப்பேமகிழ்ந்தபுண்ணியமேபுனிதஞானபோதகமே. (௮)

போதாநந்தவருட்கனியேபுகலற்கரியபொருளேயென்
னூதாதணிகைமலையரசேநல்லோர்புகழுநாயகனே
யோதாதவமேவருநதுயரானுழன்றேபிணியினுலைகின்றே
னேதாமுனதின்னருளீயாதிருந்தாலந்தோவெளியேற்கே. (௯)

எளியேனினதுதிருவருளுக்கெதிரோகுற்றேயிரங்குகின்ற
களியேனைநீகைவிட்டாற்கருணைக்கியல்போகற்பகமே
யளியேதணிகையருட்சுடரேயடியருறவேயருண்ஞானத்
துளியேயமையுமெனக்கெந்தாய்வாவென்றொருசொற்சொல்லாயே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# பொறுக்காப்பத்து.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மெய்யருளகத்தின்விளங்குநின்பதமாம்விரைமலர்த்துணைதமைவிரும்பாப்
பொய்யர்தம்மிடத்திவ்வடியனேன்புகுதல்பொறுக்கிலன்பொறுக்கிலன்கண்டா
யையருமிடப்பாலம்மையுமொருங்கேயளித்திடுந்தெள்ளியவமுதே
தையலாமயக்கற்றவர்க்கருள்பொருளேதணிகைவாழ்சரவணபவனே. (௧)

நன்மையவெல்லாமளித்திடுமுனதுநளினமாமலரடிவழுத்தாப்
புன்மையரிடத்திவ்வடியனேன்புகுதல்பொறுக்கிலன்பொறுக்கிலன்கண்டாய
சின்மயப்பொருணின்றொண்டனாயேன்சோர்ந்திடத்திருவருள்புரியாய
தன்மயக்கற்றோர்க்கருடரும்பொருளேதணிகைவாழ்சரவணபவனே. (௨)

மருளிலாதவர்கள்வழுத்துநின்னடியைமனமுறநினைந்தகத்தன்பாம்
பொருளிலாதவர்பாலேழையேன்புகுதல்பொறுக்கிலன்பொறுக்கிலன்கண்டா
யருளெலாந்திரண்டவானந்தவுருவேயன்பர்பாலிருந்திடவருளாய்
தரளவான்மழைபெய்திடுந்திருப்பொழில்சூழ்தணிகைவாழ்சரவணபவனே. (௩)

நிலையுறுநின்னதுமலரடிக்கன்புநிகழ்ந்திடநாடொறுநினையாப்
புலையர்தம்மிடமிப்புன்மையேன்புகுதல்பொறுக்கிலன்பொறுக்கிலன்கண்டாய
மலையரசளித்தமரகதக்கொம்பர்வருந்தியீன்றெடுத்தமாமணியே
தலையரசளிக்கவிந்திரன்புகழுந்தணிகைவாழ்சரவணபவனே. (௪)

வலவிருட்பவந்தீர்த்தருந்தெனுநினதுமலரடிமனமுறவழுத்தாப்
புல்லர்தம்மிடமிப்பொய்யனேன்புகுதல்பொறுக்கிலன்பொறுக்கிலன்கண்டா
யொல்லையின்னெனைமீட்டுன்னடியவர்பாலுற்றுவாழ்ந்திடச்செயினுய்வேன்
சல்லமற்றவர்கட்கருடரும்பொருளேதணிகைவாழ்சரவணபவனே. (௫)

கற்பிலாரெனினுநினைந்திடிலருணின்கருணையங்கழலடிக்கன்பாம்
பொற்பிலாதவர்பாலேழையேன்புகுதல்பொறுக்கிலன்பொறுக்கிலன்கண்டாய்
யற்பிலேனெனினுமென்பிழைபொறுத்துன்னடியர்பாற்சேர்த்திடிலுய்வேன்
றற்பராபரமேசற்குணமலையேதணிகைவாழ்சரவணபவனே. (௬)

பத்திகொண்டருட்பரவியவொளியாம்பரஞ்சுடர்நின்னடிபணியும்
புத்திகொள்ளலர்பாலெளியனேன்புகுதல்பொறுக்கிலன்பொறுக்கிலன்கண்டாய்
நித்தியவடியார்தம்முடன்கூட்டிநினைந்திடிலுய்குவனரசே
சத்திசெங்கரத்திற்றரித்திடுமமுதேதணிகைவாழ்சரவணபவனே. (௭)

நீற்றணிவிளங்குமவர்க்கருள்புரியுநின்னடிக்கமலங்கணினைந்தே
போற்றிடாதவர்பாற்பொய்யனேன்புகுதல்பொறுக்கிலன்பொறுக்கிலன்கண்டா
யாற்றல்கொணின்பொன்னடியருக்கடியனாச்செயிலுய்குவனமுதே
சாற்றிடும்பெருமைக்களவிலாதோங்குந்தணிகைவாழ்சரவணபவனே. (௮)

பரிந்திடு மனத்தோர்க்கருள்செயுநின் றுபாத்தாமரைகளுக்கன்பு
புரிந்திடாதவர்பாலெளியனேன் புகுதலபொறுக்கிலனபொறுக்கிலன்கண்டாய்
தெரிந்திமென்பரிடமுறிலுய்வேன் றிருவுளமறிகிலன்றேனே
சரிந்திடுங்கருத்தோர்க்கரியநற்புகழ்கொடணிகைவாழ்சரவணபவனே. (௯)

எண்ணுறுமவர்கட்கருளுநின்னடியையேத்திடாதழிதருஞ்செல்வப்
புண்ணுறுமவர்பாலெளியனேன் புகுதல்பொறுக்கிலனபொறுக்கிலன்கண்டாய்
கண்ணுறுமணியாநின்னடியவர்பாற்கலந்திடிலுய்குவன்கருமபே
தண்ணுறுங்கருணைத்தனிப்பெருங்கடலேதணிகைவாழ்சரவணபவனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# வேட்கைவிண்ணப்பம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

மன்னேயென்றனுயிர்க்குயிரேமணியேதணிகைமலைமருந்தே
யன்னேயென்னையாட்கொண்டவரசேதணிகையையாவே
பொன்னேஞானப்பொங்கொளியேபுனிதவருளேபூரணமே
யென்னேயெளியேனறயருழத்தலெண்ணியிரங்காதிருப்பதுவே. (௧)

இரங்காநின்றிங்கலைதருமிவ்வெளியேன்கனவினிடத்தேனு
மரங்காவரவினடித்தோனுமயனுங்காண்டற்கரிதாய
வுரங்காமுறுமாமயின்மேனின்னுருவந்தரிசித்துவப்படையும்
வரங்காதலித்தேன்றணிகைமலைவாழ்வேயினறுவருவாயோ. (௨)

வருவாயென்றுநாடோறும்வழிபார்த்திரங்கிமனந்தளர்ந்தேன்
கருவாயபவனென்றெனைத்தள்ளக்கருதுவாயோவன்றியரு
ளுருவாயவந்துதருவாயோதணிகாசலத்துளுற்றமாநத்
தொருவாவுன்றனறிருவுளத்தையுணரேனென்செயதுயகேனே. (௩)

உய்யும்பொருட்டுன்றிருப்புகழையுரையேனந்தோவுரைக்கடங்காப்
பொய்யுங்களவுமழுக்காறும்பொருளாககொண்டேன்புலையேனை
யெய்யும்படிவந்தடர்ந்தியமனிழுத்துப்பறிக்கிலென்னேயான்
செய்யும்வகையொன்றறியேனேதெனபாற்றணிகைச்செஞ்சுடரே. (௪)

செஞ்சொற்சுவையேமெய்ஞ்ஞானச்செல்வப்பெருக்கேதெள்ளமுதே
விஞ்சைப்புலவர்புகழ்தணிகைவிளக்கேதுளக்கில்வேலோனே
வெஞ்சொற்புகலும்வஞ்சகர்பான்மேவிநின்றுன்மலர்மறந்தே
பஞ்சிற்றமியேன்படும்பாட்டைப்பார்த்துமருட்கண்பார்த்திலையே. (௫)

பார்க்கின்றிலையேபன்னிருகண்படைத்துமெளியேன்பாடனைத்துந்
தீர்க்கின்றிலையேயென்னையான்செய்வேன்சிறியேன்சீமானே
போர்க்குன்றுருசூர்புயக்குன்றும்பொடிசெய்வேற்கைப்புண்ணியனே
சீர்க்குன்றெனுநல்வளத்தணிகைத்தேவேமயிலூர்சேவகனே. (௬)

சேவற்கொடிகொள்குணக்குன்றேசிந்தாமணியேயாவர்கட்குங்
காவற்பதியேதணிகைவளர்கரும்பேகனியேகற்பகமே
மூவர்க்கிறையேவேயீன்றமுத்தனளித்தமுதேநற்
றேவாக்கருணின்சேவடிக்கேவிழைந்தேன்யாதுந்தெரியேனே. (௭)

தெரியேனுனதுதிருப்புகழைத்தேவேயுன்றன்சேவடிக்கே
பரியேன்பணியேன்கூத்தாடேன்பாடேன்புகழைப்பரவசமாய்த்
தரியேன்றணிகைதனைக்காணேன்சாகேனேகேன்கும்பிக்கே
யுரியேனந்தோவேதுகொண்டிங்குய்கேன்யாதுசெய்கேனே. (௮)

செய்வதுனதுதிருவடிக்காந்திறனேசிந்தைநின்பாலே
வைவதுன்னைநினையாதவஞ்சகரையேவழுத்திநித
முய்வதுனதுதிருநாமமொன்றைப்பிடித்தேமற்றொன்று
லெய்வதறியேன்றிருத்தணிகையெந்தாயெந்தாயெளியேனே. (௯)

எளியேனினதுசேவடியாமின்பநறவையெண்ணியெண்ணி
யளியேனெஞ்சஞ்சற்றேனுமன்பொன்றில்லேனதுசிறிது
மொளியேனெந்தாயென்னுள்ளத்தொளித்தேயவையுமுணர்கின்றாய்
வளியேமுதலாயநின்றருளுமணியேதணிகைவாழ்மனனே. (௧௦)

திருச்சிற்றம்பலம.

---

# ஆறெழுத்துண்மை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

பெருமைநிதியேமால்விடைகொள்பெம்மான்வருந்திப்பெறும்பேறே
யருமைமணியேதணிகைமலையமுதேயுன்றனாறெழுத்தை
யொருமைமனத்தினுச்சரித்திங்குயர்ந்ததிருவெண்ணீறிட்டா
லிருமைவளனுமெய்துமிடரொன்பதொன்றுமெய்தாதே. (௧)

எய்தற்கரியவருட்சுடரேயெல்லாம்வல்லவிறையோனே
செய்தற்கரியவளத்தணிகைத்தேவேயுன்றனாறெழுத்தை
யுய்தற்பொருட்டிங்குச்சரித்தேயுயர்ந்ததிருவெண்ணீறிட்டால்
வைதற்கில்லாப்புகழ்ச்சிவரும்வன்கணென்றும்வாராதே. (௨)

வாராவிருந்தவடியவர்தமனத்திலொளிருமாமணியே
யாராவமுதேதணிகைமலையரசேயுன்றனறெழுத்தை
யோராமனத்தினுச்சரிததிங்குயர்ந்ததிருவெண்ணீறிட்டா
லேரார்செல்வப்பெருக்கிகவாவிம்மையொன்றுமிகந்திடுமே. (௩)

இகவாவடியர்மனத்தூறுமின்பச்சுவையேயெம்மானே
யகவாமயிலூர்திருத்தணிகையரசேயுன்றனறெழுத்தை
யுகவாமனததினுச்சரிததிங்குயர்ந்ததிருவெண்ணீறிட்டாற்
சுகவாழ்வின்பமதுதுன்னுந்துன்பமொன்றுந்துனனுதே. (௪)

துன்னுமறையின்முடிவிலொளிர்தூயவிளக்கேசுகப்பெருக்கே
யன்னையனையாய்தணிகைமலையண்ணலுன்றனறெழுத்தை
யுன்னிமனத்தினுச்சரித்திங்குயர்ந்ததிருவெண்ணீறிட்டாற்
சென்னியணியாயடிசேருந்தீமையொன்றுஞ்சேராதே. (௫)

சேருமுக்கட்கனிகனிந்ததேனேஞானச்செழுமணியே
யாரும்புகழுந்தணிகையெமதன்பேயுன்றனறெழுத்தை
யோருமனததினுச்சரித்திஙகுயர்ந்ததிருவெண்ணீறிட்டாற்
பாரும்விசும்பும்பதஞ்சாரும்பழுதகனனொன்றுஞ்சாராதே. (௬)

சார்ந்தவடியார்க்கருளளிகருந் தருமக்கடலேதற்பரமே
வார்ந்தபொழில்சூழ்திருத்தணிகைமணியேயுன்றனறெழுதனதை
யோர்நதுமனத்தினுச்சரித திங்குயர்ந்ததிருவெண்ணீறிட்டா
லார்ந்தஞானமுறுமழியாவலக்கணொன்றுமழிந்திடுமே. (௭)

அழியாப்பொருளேயென்னுயிரேயயில்செங்கரங்கொளையாவே
கழியாப்புகழ்சேர்தணிகையமாகந்தாவுன்றனறெழுதனதை
யொழியாமனத தினுச்சரிததிஙகுயர்ந்ததிருவெண்ணீறிட்டாற
பழியாவின்பமதுபதியும்பணிமையொன்றுமபதியாதே. (௮)

பதியேயெங்குநிறைந்தருளும்பரமசுகமேபரஞ்சுடரே
கதியேயளிகருந்தணிகையமர்கடம்பாவுன்றனறெழுத்தை
யுதியோமனத்தினுச்சரிததிங்குயர்ந்ததிருவெண்ணீறிட்டாற்
றுதியோர்நினதுபதந்தோனறுந்துன்பமொன்றுந்தோன்றாதே. (௯)

தோன்றுஞானச்சின்மயமேதூயசுகமேசயஞ்சுடரே
யான்றோர்புகழுந்தணிகைமலையரசேயுன்றனறெழுத்தை
யூன்றுமனததினுச்சரித்திங்குயர்ந்ததிருவெண்ணீறிட்டா
லீன்றுணிகருமருளடையுமிடிக்கணொன்றுமடையாதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# போக்குரையீடு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கற்கிலேனுனதருட்பெயராங்குககந்தவென்பவைநாளு
நிற்கிலேனுனதாகமநெறிதனினீசனேனுய்வேனோ
சொற்கிலேசமிலடியவரன்பினுட்டோய்தருபசுந்தேனே
யற்கிலேர்தருந்தணிகையாரமுதமேயானந்தவருட்குன்றே. (௧)

பாவவாழ்க்கையிற்பாவியேன்செய்திடும்பண்பிலாப்பிழைநோக்கித்
தேவரீர்மனதிரக்கமுற்றேயருள்செய்திடாதிருப்பீரேற்
காவலாகியகடும்பிணித்துயரமிக்கடையனேன்றனக்கினும்
யாவதாகுமோவென்செய்கோவென்செய்கோவியலும்வேற்கரத்திரே. (௨)

சேவியாதவென்பிழைகளையென்னுளேசிறிதறிதரும்போதோ
பாவியேன்மனம்பகீலெனவெதும்பியுட்பதைத்திடைக்காண்கின்றே
னாவியேயருளமுதமேநின்றிருவருடனக்கென்னாமோ
பூவினாயகன்போற்றிடுந்தணிகையம்பொருப்பமர்ந்திடுவாழ்வே. (௩)

துன்பினாலகம்வெதும்பிநைந்தயர்ந்துநின்றுணையடிமலரேத்து
மன்பிலாதவிப்பாவியேன்செய்பிழையனைத்தையும்பொறுப்பாயேல்
வன்பிலாதநின்னடியவர்தந்திருமனத்தினுக்கென்னாமோ
வின்பினாற்சுரர்போற்றிடுந்தணிகைவாழிறைவனேயெம்மானே. (௪)

என்செய்கேனினுந்திருவருள்காண்கிலேனெடுங்கருந்துயருண்டேன்
கன்செய்பேய்மனக்கடையனேனென்னினுங்காப்பதுன்கடனன்றோ
பொன்செய்குன்றமேபூரணஞானமேபுராதனப்பொருள்வைப்பே
மன்செய்மாணிக்கவிளக்கமேதணிகைவாழ்வள்ளலேமயிலோனே. (௫)

மண்ணினண்ணியவஞ்சகர்பாற்கொடுவயிற்றினாலலைப்பட்டேன்
கண்ணினண்ணருங்காட்சியேநின்றிருக்கடைக்கணோக்கருணோக்கி
யெண்ணியெண்ணிநெஞ்சழிந்துகண்ணீர்கொளுமேழையேன்றனக்கின்னும்
புண்ணினண்ணியவேலெனத்துயருறிற்புலையனென்செய்கேனே. (௬)

மலங்கிவஞ்சகர்மாட்டிரைந்தையகோவருந்திநெஞ்சயர்வுற்றே
கலங்கிநின்றிருக்கருணையைவிழையுமென்கண்ணருள்செய்யாயோ
விலங்கியெங்கணுநிறைந்தருளின்பமேயெந்தையேயெந்தாயே
நலங்கிளர்ந்திடுதணிகையம்பதியமர்நாயகமணிக்குன்றே. (௭)

சைவநாயகசம்பந்தனாகியதமிழருட்குன்றேயென்
றெய்வமேநினையன்றியோர்துணையிலேன்றிருவருளறியாதோ
வைவதேகொளும்வஞ்சகர்தம்மிடைவருந்திநெஞ்சழிகின்றேன்
செய்வதோர்கிலேன்கைவிடிலென்செய்கேன்றெளிவிலாச்சிறியேனே. (௮)

வாழ்விலாஞ்சிறுகளிப்பினாலுன்றனைமறந்திறுமாக்கின்றேன்
றாழ்விலேசிறிதெண்ணிநொந்தயாவனென்னறனைமைநன்றருளாளா
* கேழ்விமேவியவடியவர்மகிழ்வுறக்கிடைத்தருள்பெருவாழ்வே
† வேழ்வியோங்கியதணிகைமாமலைதனிலவிளங்கிவீற்றிருப்போனே. (௯)

என்றுமாதர்மேலிச்சைவைத்துன்றனையெண்ணாவேன்றுயருற்றாற
கன்றுநெஞ்சக்கள்வனேனனபிணக்கருத்திடையெண்ணிற்சால
நன்றுநன்றெனக்கெவ்வணமபொன்னருணல்குவையறிகில்லேன்
றூன்றுமாதவர்போற்றிடுந்தணிகைவாழ்சோதியேசுகவாழ்வே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# பணித்திறம்வேட்டல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

நண்ணேனோமகிழ்வினொடுந்திருத்தணிகைமலையதனைநண்ணியென்றன்
கண்ணேநீயமர்ந்தவெழில்கண்குளிரக்காணேனோகண்டுவாரி
யுண்ணேனோவானந்தக்கண்ணீர்கொண்டாடியுனக்குகப்பத்தொண்டு
பண்ணேனோநின்புகழைப்பாடேனோவாயாரப்பாவியேனே. (௧)

பாவியேன்படுந்துயருக்கிரங்கியருட்டணிகையிலென்பால்வாவென்று
கூவிநீயாட்கொளவோர்கனவேனுங்காணேனோகுணப்பொற்குன்றே
யாவியேயறிவேயென்னன்பேயென்னரசேநின்னடியைச்சற்றுஞ்
சேவியேனெனினுமெனைக்கைவிடேலன்பர்பழிசெப்புவாரே. (௨)

வாரேனோதிருத்தணிகைவழிநோக்கிவந்தென்கண்மணியேநின்று
பாரேனோநின்னழகைப்பார்த்துலகவாழ்க்கைதனிற்படுமிச்சோபந்
தீரேனோநின்னடியைச்சேவித்தானந்தவெள்ளந்திளைத்தாடேனோ
சாரேனோநின்னடியார்சமுகமதைச்சார்ந்தவர்தாடலைக்கொள்ளேனோ. (௩)

கொள்ளேனோநீயமர்ந்ததணிகைமலைக்குறவெண்ணங்கோவேவந்தே
யள்ளேனோநின்னருளையள்ளியுண்டேயானந்தத்தழுந்தியாடித்
துள்ளேனோநின்றனைத்துதியேனோதுதித்துலகத்தொடர்பையெல்லாந்
தள்ளேனோநின்னடிக்கீழ்ச்சாரேனோதுணையில்லாத்தனியனேனே. (௪)

தனியேயிங்குழல்கின்றபாவியேன்றிருத்தணிகாசலம்வாழ்ஞானக்
கனியேநின்சேவடியைக்கண்டாரக்கண்டுமனங்களிப்புறேனோ
துனியேசெய்வாழ்விலலைந்தென்னெண்ணமுடியாதுசுழல்வேனாகி
லினியேதுசெய்வேன்மற்றொருதுணையுங்காணேனிவ்வேழையேனே. (௫)

* கேழ்வி, † வேழ்வி எனபன வெதுகைநோக்கித் திரித்தவாறு.

இவ்வேளையருட்டணிகையமர்ந்தருளுந்தேவையெனதிருக்கண்ணுய
செவ்வேளைமனங்களிப்பச்சென்றுபுகழ்ந்தானந்தத்தெளிதேனுண்டே
யெவ்வேளையும்பரவியேத்தேனேவனபணிகளியற்றிடேனே
தெவ்வேளையடாக்கவகைதெரியாமலுழறருமிச்சிறியனேனே. (௬)

சிறியேனிப்போதேசித்திருத்தணிகைமலையமர்ந்ததேவின்பாதங்
குறியேனேவானந்தக்கூத்தாடியன்பர்கடங்குழாத்துட்சென்றே
யறியேனேபொருணிலையையறிந்தெனதென்பதைவிடுத்திவ்வுலமாயை
முறியேனேவுடல்புளகமூடேனேநன்னெறியைமுன்னியின்றே. (௭)

முன்னேனேதிருத்தணிகையடைந்திடநின்சந்நிதியின்முன்னேநின்று
மன்னேனேவடியர்நடனவாழேனேநின்னடியைவாழ்த்திடேனே
வுன்னேனேநன்னிலையையுலகத்தோரொலலீருமுங்கேவாரு
மென்னேனேநின்பெயரையாருங்கூறினுமவாகதிதங்கூறேனே. (௮)

கூறேனேதிருத்தணிகைக்குற்றனடிப்புகழதனைக்கூறிநெஞ்சந்
தேறேனேநின்னடியார்திருச்சமூகஞ்சேரேனேதீராத்துன்ப
மாறேனேநின்னடியனுக்கேனேபவக்கடலவிட்டகன்றேயப்பா
லேறேனேவருட்கடலிலிழியேனேவொழியாதவின்பமாந்தே. (௯)

தேடேனேயென்னுதனைக்குற்றெனவோடித்தேடிச்சென்றே
நாடேனேதணிகைதனினுயகனேநின்னழகைநாடிநாடிக்
கூடேனேவடியருடனகோவேயெங்குகனேயெங்குருவேயென்று
பாடேனேவானந்தப்பரவசமுற்றுனகமலப்பதநண்ணேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சொடுபுலத்தல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வாவாவென்னவருடணிகைமருந்தையென்கண்மாமணியைப்
பூவாயநறவைமறந்தவநாள்போகின்றதுவும்போதாமன
மூவாமுதலிலருட்கேலாமூடநினைவுமினறெண்ணி
யாவாநெஞ்சேயெனைக்கெடுத்தாயந்தோநீதானுவாயோ. (௧)

வாயாதுரைசற்றிடும்புலவோர்வழுத்துந்தணிகைமலையமுதைக்
காயாக்கனியைமறந்தவநாள்கழிகின்றதுவும்போதாம
லீயாக்கொடியாதமக்களறியேலாநினைவுமினறெண்ணி
மாயாவென்றனவாழ்வழித்தாய்மனமேநீதான்வாழ்வாயோ. (௨)

வாழும்படிநல்லருள்புரியுமருவுநதணிகைமலைததேனைச்
சூழுஙகலபமயிலரசைததுதியாபபவமும்போதாமல்
வீழுஙகொடியர்தமககனறிமேவாநினைவுமேவியினறு
தாழுமபடியெனறனையலைததாயசவலைமனமேசாகாயோ. (௩)

காயோமெனநின்றவாககினியகனியாந்தணிகைக்கறபகததைப்
போயோரகணமுமபோறறுகிலாயபுனமைபுரிநதாய்புலங்கெட்டாய்
பேயோவெஙகுநதிரிநதோடிப்பேறுவென்பைப்பேணுகினற
நாயோமனமேநீயுனைநானம்பிவாளாநலிநதேனே. (௪)

தேனுஙகடமுந்திகழ்தணிகைததேவைநினையாயதீநரக
மானுநடையிலுழலகினறாயமனமேயுனறனவஞ்சகததா
னானுமிழநதேன்பெருவாழ்வைநாய்போனலிநதிஙகவமேநீ
தானுமிழநதாயெனனேயுனறனமையிழிவாந்தனமையதே. (௫)

தன்னாலுலகைநடததுமருட்சாமிதணிகைசாராமற்
பொனனாமண்ணாற்பூவையராற்புலம்பிவருநதுமபுன்னெஞ்சே
யுனனாலென்றனுயாவிழநதேனுற்றாரிழநதேனுன்செயலைச்
சொனனாலகைபபரெனைவிட்டுநீதொலையாயிஙகுநிலையாயே. (௬)

நிலைக்குநதணிகையென்னரசைநீயுநினையாயநினைப்பதையுங்
கலைக்குநதொழிலகொணடெனைககலக்கஙகணடாய்பலனென்கண்டாயே
முலைக்குஙகலைக்குமவிழைநதவமேமுயஙகுமூடமுழுநெஞ்சே
யலைக்குஙகொடியவிடநீயெனறறிநதேனமுன்னரறிநதிலனே. (௭)

இலதைநினைப்பாய்பித்தர்கள்போலேஙகாநிறபாயதணிகையிலென்
குலதெய்வமுமாயகோவாய்சசற்குருவாய்நினறகுகனருளை
நலதென்றறியாயானசெய்தநனறிமறநதாயநாணுதெனை
வலதைதயழிததாயவலதொடுநீவாழ்வாயகொலலோவனனெஞ்சே. (௮)

நெஞ்சேயுகநததுணையெனக்குநீயென்றறிநதேநேசிததேன்
மஞ்சோதணிகைமலையமுதைவாரிகொளும்போதெனனுளளே
நஞ்சேகலநதாயுனனுறவுநனறேயினியுன்னட்பகனறு
லுஞ்சேனிலையேல்வனனரகததுளளேனகொளளேனெனனையுமே. (௯)

கொள்ளும்பொழிலசூழ்தணிகைமலைககோவைநினையாதெனைநரகிற்
றளளுமபடிககோதலைபபட்டாயசகததினமடவாரதமமயலாங
கள்ளுணடநதோவெறிகொணடாய்கலைததாயெனைககடந்தோர்க
ளெள்ளும்படிவநதலைககினறாயெனககெனறெஙகேயிருநதாயோ. (௧௦)

இருநதாயிஙகுககண்டவிடததேகாநின்றாயவ்விடததும
பொருநதாயமீணடும்புகுவாயபின்போவாயவருவாயபுகழ்தணிகை
மருநதாயநின்றகுகனடியைவழுததாயெனையுமவலிக்கினறாய
திருநதாய்நெஞ்சேயினசெயலைசசெப்பவெனக்குததிடுக்கிடுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# புன்மைநினைந்திரங்கல்.

## கட்டளைக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

மஞ்சட்பூச்சின் மினுக்கிலிளைஞர்கண்மயங்கவேசெயும்வாள்விழிமாதர்பாற்
கெஞ்சிக்கொஞ்சிநிறையழிந்துன்னருட்கிச்சைநீத்துக்கிடந்தனனாயினேன்
மஞ்சுற்றோங்கும்பொழிற்றணிகாசலவள்ளலெனவினைமாற்றுதனீதியே
தஞ்சத்தால்வந்தடைந்திடுமன்பர்கட்கம்மைக்காக்குந்தனியருட்குன்றமே. (௧)

முலையைக்காட்டிமயக்கியென்னாருயிர்முற்றும்வாங்குறுமுண்டைகணன்மதி
குலையக்காட்டுங்கலவிக்கிசைந்துநின்கோலங்காணக்குறிப்பிலனாயினே
னிலையைக்காட்டுநல்லானந்தவெள்ளமேநேசநெஞ்சகநின்றொளிர்தீபமே
கலையைக்காட்டுமதிதவழ்நற்றணிகாசலத்தமர்ந்தோங்கதிகாரனே. (௨)

வஞ்சமேகுடிகொண்டுவிளங்கியமங்கையார்க்குமயலுழந்தேயவா
நஞ்சமேவுநயனத்திற்சிக்கியநாயினேனுனைநாடுவதென்றுகாண்
கஞ்சமேவுமயன்புகழ்சோதியேகடப்பமாமலர்க்கந்தசுகந்தனே
தஞ்சமேயெனவந்தவர்தம்மையாட்டணிகைமாமலைச்சற்குருநாதனே. (௩)

பாவமோருருவாகியபாவையர்பன்னுகண்வலைப்பட்டுமயங்கியே
கோவைவாயிதழ்க்கிச்சையதாகிநின்குரைகழற்கன்புகொண்டிலனாயினேன்
மேவுவார்வினைநீக்கியளித்திடும்வேலனேதணிகாசலமேலனே
தேவர்தேடருஞ்சீரருட்செல்வனேதெய்வயானைதிருமணவாளனே. (௪)

கரத்தைக்காட்டியேகண்களைநீட்டியேகடையனேனுயிர்வாட்டியகன்னிய
ருரத்தைக்காட்டிமயக்கமயங்கினேனுன்றன்பாதவுபயத்தைப்போற்றிலேன்
புரத்தைக்காட்டுநகையினெரித்ததோர்புண்ணியற்குப்புகல்குருநாதனே
வரத்தைக்காட்டுமலைத்தணிகேசனேவஞ்சனேற்கருள்வாழ்வுகிடைக்குமோ. (௫)

காசமேகங்கடுமேபிணிசூலைமோகாதியாற்றநந்துக்கணக்கலக்கணுசெய்
மோசமேநிசமென்றுபெண்பேய்களைமுன்னினேனினைமுன்னிலனாயினேன்
பாசநீக்கிடுமன்பர்கள்போலெனைப்பாதுகாக்கும்பரமுனக்கையனே
தேசமியாவும்புகழ்தணிகாசலச்செல்வமேயருட்சிற்சுகவாரியே. (௬)

ஐயமேற்றுத்திரிபவராயினுமாசையாம்பொருள்நீத்திடவல்லரோற்
குய்யங்காட்டுமடந்தையர்வாய்ப்பட்டுனைக்கோலமாமலர்ப்பாதங்குறித்திலேன்
மையுலாம்பொழில்சூழ்தணிகைவாழ்வள்ளலேவள்ளிநாயகனேபுவிச்
சையறும்பரஞானிகள்போற்றிடுஞ்சாமியேயெனைக்காப்பதுன்றன்மையே. (௭)

கண்ணைக்காட்டியிருமுலைகாட்டிமோகத்தைக்காட்டியகத்தைக்கொண்டேயழி
மண்ணைக்காட்டிடுமாயவனிதைமார்மாலைப்போக்கிநின்காலைப்பணிவனோ
பண்ணைக்காட்டியுருகுமடியார்தம்பத்திக்காட்டிமுத்திப்பொருளீதென
விண்ணைக்காட்டுந்திருத்தணிகாசலவேலனேயுமையாளருள்பாலனே. (௮)

படியின்மாக்களைவீழ்த்தும்படுகுழிபாவமியாவும்பழகுறும்பாழ்ங்குழி
குடிகொணுற்றக்குழிசிறுநீர்தருங்கொடியவூற்றுக்குழிபுழுக்கொள்குழி
கடிமலக்குழியாகுங்கருக்குழிக்கள்ளமாதரைக்கண்டுமயங்கினே
னொடிவில்சீர்த்தணிகாசலநின்புகழோதிலேனெனக்குண்டுகொலுண்மையே. (௯)

கச்சுக்கட்டிமணங்கட்டிக்காமுகர்கண்ணைக்கட்டிமனங்கட்டிவஞ்சகம்
வைச்சுக்கட்டியவன்கழறக்கட்டியுமண்ணினைக்கட்டியுமானுமுலைக்கட்டிக்
இச்சைக்கட்டியிடுமைபையெனுஞ்சுமையேறக்கட்டியவெறக்கருள்வாய்கொலோ
பிச்சைக்கட்டியபித்தன்புதல்வனேபெருமைகட்டும்பெருந்தணிகேசனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# திருவடிசூடவிழைதல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தேனாலங்கற்குழன்மடவார்திறத்தின்மயங்காத்திறலடைதற்
கானாக்கொடியெம்பெருமான்றனருட்கண்மணியேயற்புதமே
கானார்பொழில்சூழ்திருத்தணிகைக்கரும்பேகருணைப்பெருங்கடலே
வானாரமுதேநின்றிருத்தாளடியேன்முடிமேல்வைப்பாயே. (௧)

தாழுங்கொடியமடவியர்தஞ்சழக்காலுழலாத்தகையடைந்தே
யாழும்பரமானந்தவெள்ளத்தழுந்திக்களிக்கும்படிவாய்ப்ப
வூழுந்தியசீரன்பாமனத்தொளிருஞ்சுடரோயுயர்தணிகை
வாழும்பொருளேநின்றிருத்தாளடியேன்முடிமேல்வைப்பாயே. (௨)

மின்னுண்மருங்குற்பேதையர்தம்வெளிற்றுமயக்குண்மேவாமே
யுன்னும்பரமயோகியர்தம்முடனேமருவியுனைப்புகழவான்
பின்னுஞ்சடையெம்பெருமாற்கோர்பேறேதணிகைப்பிறங்கலின்மேன்
மன்னுஞ்சுடரோநின்றிருத்தாளடியேன்முடிமேல்வைப்பாயே. (௩)

ஆறாத்துயரந்தருங்கொடியார்க்காளாயுழன்றிங்கலையாதே
கூறாப்பெருமைநினடியார்கூட்டத்துடன்போய்க்குலாவும்வண்ணந்
தேறாப்பொருளாஞ்சிவத்தொழுகுந்தேனேதணிகைத்திருமலைவாழ்
மாறாச்சுகமேநின்றிருத்தாளடியேன்முடிமேல்வைப்பாயே. (௪)

விரதமழிக்குங்கொடியார்தம்விழியான்மெலியாதுனைப்புகழுஞ்
சரதரவையிற்சென்றுநின்சீர்தனையேயெழுத்துந்தகையடைவான்
பரதமயின்மேற்செயுந்தணிகைப்பரனேவெள்ளிப்பருப்பதம்வாழ்
வரதன்மகனேநின்றிருத்தாளடியேன்முடிமேல்வைப்பாயே. (௫)

வெயின்மேற்கிடமென்மடவார்வெய்யமயறகண்வீழாமே
யயின்மேற்கரங்கொணிணைப்புகழுமடியாாசவையினடையும்வகைக
குயினமேற்குலவநதிருததணிகைக்குணப்பொறகுன்றேகொளகலப
மயின்மேனமணியேநின்றிருத்தாளடியேன்முடிமேல்வைபபாயே. (௬)

தனமுஙகடந்தேநாரியாமாறனையுங்கடந்தேதவமழிககுஞ்
சினமுஙகடந்தேநினைச்சோநதோர்தெய்வச்சபையிற்சோநதிடவே
வனமுஙகடமுநதிகழ்தணிகைமலையின்மருநதேவாக்கிறைவ
மனமுஙகடநதோயநினறிருததாளடியேனமுடிமேல்வைப்பாயே. (௭)

கல்லாககொடியமடவாாதங்காமக்குழிககண்வீழாமே
நல்லாாகெல்லாநலலவநின்னாமந்துதிககுநலமபெறவே
சொல்லாறபுனைநதமாலையொடுநதொழுதுதணிகைதனைததுதிகக
வல்லார்ககருளுநினறிருததாளடியேனமுடிமேல்வைப்பாயே. (௮)

கள்ளககயற்கண்மடவாாதங்காமத்துழலாதுனைநினைகரு
முளளததவாபாறசோநதுமகிழ்ந்துணமையுணாநதஙகுறநிவொ
னள்ளறபழனததிருததணிகையரசேஞானவமுதளிககும்
வளளற்பெருமானின்றிருத்தாளடியேனமுடிமேலவைபபாயே. (௯)

பாகைபபொருவுமொழியுடையீரொன்றுமடவார்ப்பழிசசாம
லோகைப்பெறுநினறிருததொணடருடனசோநதுணமையுணர்நதிடுவான
ரோகைப்பரிமேல்வருநதெய்வகுளாமணியேதிருததணிகை
வாகைப்புயனேநின்றிருததாளடியேன்முடிமேலவைப்பாயே. (௧௦)

திருசசிறறம்பலம்.

---

# ஆற்றுவிரக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருததம.

திருச்சிற்றம்பலம்.

தணிகைமலையைச்சாரேனோசாமியழகைப்பாரேனோ
பிணிகையறையைப்பேரேனோபேராவன்புகூரேனோ
வணிசெயருணீராரேனோவாருத்தாகந்தீரேனோ
பணிசெய்தொழும்பிற்சேரேனோபாாமீதிரங்குநேனே. (௧)

எளியேனென்னைவிருப்பாரோவேழைக்கிரஙகும்விருப்பாரோ
வளியேன்பேர்நெஞ்சிருப்பாரோவழியாக்காமந்திருப்பாரோ
களியேனென்னவுருப்பாரோகருதுமருட்குக்கருப்பாரோ
தெளியேனயானென்செய்கேனேதென்பாற்றணிகைப்பொருப்பாரோ. (௨)

செயகொடணிகைநாடேனோசெவவேளபுகழைப்பாடேனோ
கைகள்கூபபியாடேனோகருணைககடலினீடேனோ
மெயகொள்புளகமூடேனோமெய்யனபாகள்பாறகூடேனோ
பொய்கொளுலகோடேடேனோபுவிமீ திருகான்மாடேனே. (௩)

வநதென்னெதிரினில்லாரோமகிழவொருசொல்சொல்லாரோ
மூநதமமதனைவெல்லாரோமோகநதீரப்புல்லாரோ
கநதனெனுமபேரலலாரோகருணைநெஞ்சங்கல்லாரோ
சாநதததணிகையிலலாரோசகததிலெலலாமவலலாரோ. (௪)

நாட்டுநதணிகைநண்ணேனோநாதன்புகழையெண்ணேனோ
கூட்டுநதொழும்புபண்ணேனோகுறையாவருணீருண்ணேனோ
சூட்டுமெயககைமண்ணேனோதொழுமபரிடததையண்ணேனோ
காட்டுமெவாதாள்கணணேனோகழியாவாழ்க்கைப்புண்ணேனே. (௫)

காம்பபயலைததடுப்பாரோகடப்பமலர்த்தார்கொடுப்பாரோ
வேமததனததைககடுப்பாரோவென்மேலன்பைவிடுப்பாரோ
மாமற்றொருவீடடுபபாரோமனதிறகோபந்தொடுப்பாரோ
தாமததாழ்வைககெடுப்பாரோதணிகைதனிலவேலெடுப்பாரே. (௬)

காவிமலைககண்வதியேனோகண்ணுண்மணியைததுதியேனோ
பாவிமயலைமிதியேனோபரமானநதததுதியேனோ
வோவிலருளைப்பதியேனோவுயாந்தொழும்பிறகதியேனோ
தாவிலசுகததைமதியேனோசறறுமபயனிலலொதியேனே. (௭)

வருநதுநதணிமுன்மனனாரோவருததமுனககேனென்னாரோ
விருநதென்னிடததேதுன்னாரோவிளைததாளீயவுன்னாரோ
பொருநதிஙகயலாரனனாரோபொருளீதென்றுபன்னாரோ
செருநதிமலருந்திருததணிகைததேவரெவாககுமுன்னாரே. (௮)

தணிகாசலமபோய்ததழையேனோசாமிதிருத்தாள்விழையேனோ
பணிகாதலிததுப்பிழையேனோபாடிமனநுகுழையேனோ
திணிகாணுலகையழையேனோசோநதவவீட்டுணுழையேனோ
பிணிகாணுலகிற்பிறநதுழனறேபேதுற்றலையுமபழையேனே. (௯)

மன்னுஙகுவளையீயாரோமதவேண்மததைககாயாரோ
வினனுஙகோபமோயாரோவென்றுயதனககூத்தாயாரோ
துன்னுமிரககநதோயாரோதுகளேனறுயரையாயாரோ
பன்னுவளஙகள்செறிநதோஙகும்பணைகொடணிகைததூயாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

# ஏழைமையினிரங்கல்.



எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தேனேயுளங்கொடெளிவேயகண்டசிதமேவிநின்றசிவமே
கோனேகனிந்தசிவபோதஞானகுருவேவிளங்குகுகனே
தானேதனக்குநிகராயவிளங்குதணிகாசலத்தமரசே
நானேழையிங்குமனநொந்துநொந்துநலிகின்றசெய்கைநலமோ. (௧)

நலமேவுதொண்டரயனாதிதேவாநகையேகநல்குதணிகா
சலமேவியுன்றனிருதாள்புகழ்ந்துதரிசிப்பதென்றுபுகலாய்
நிலமேவுகின்றசிவயோகருள்ளநிகழ்கின்றஞானநிறைவே
வலமேவுவேல்கையொளிசோகலாபமயிலேறுகின்றமணியே. (௨)

மணியேகலாபமலைமேலமர்ந்தமதியேநினைச்சொன்மலரா
லணியேனலன்புமமையேனமனததிலடியாரடிககண்மகிழ்வாயப்
பணியேனினைந்துபதையேனிருந்துபருகேனுவந்தபடியே
யெணியேனினைக்கிலவமாமிவ்வேழையெதுபற்றியுய்வதரசே. (௩)

உயவண்ணமின்றியுலகாதரத்திலுழல்கினறமாயமடவார்
பொய்வண்ணமொன்றினமனமாழ்கியன்மைபுரிதந்துநின்றபுலையேன்
மெயவண்ணமொனறுதணிகாசலத்துமிளிர்கினறதேவவிறலவேற
கைவண்ணவுன்றனருள்வண்ணமானகழல்வண்ணநண்ணலுளதோ. (௪)

நண்ணுதவஞ்சரிடநாடிநெஞ்சநனிநொந்துநைந்துநவையாம
புண்ணுகின்றவெளியேனையஞ்சல்புரியாதுநம்பொனடியை
யெண்ணுதபாவியிவனெனறுதள்ளினென்செய்வதுயவதறியேன
றண்ணார்பொழிறகண்மதிவந்துலாவுதணிகாசலத்திறைவனே. (௫)

இறையேனுமுன்றனடியெண்ணியங்கியிழுதென்னநெஞ்சமிளகேன
மறையோதுமுன்றனருள்பெற்றதொண்டாவழிபட்டலங்கலணியேன
குறையோடுமிங்குமயல்கொண்டுநினறகொடியேனையாளலுளதோ
நிறையோர்வணங்குதணிகாசலத்தினிலைபெறறிருக்குமவனே. (௬)

அவநாள்கழிககவறிவேனலாதுனடிபேணிநிறகவறியேன்
றவநாடுமனபரொடுசேரவந்துதணிகாசலததையடையே
னெவனானெனக்குமவணியிருக்குமிடமீயிலுன்றனடியா
ரிவனாரிவன்றனியல்பென்னவென்னிலெவனென்றுரைப்பையெனையே. (௭)

எனையாணறிநதுனடிசேரவுன்னையிறையேனுநெஞ்சினிதமாய்
நினையேனயாநதுநிலையற்றதேகநிசமென்றுழன்றுதுயர்வேன்
றனையேனினன்பனெனவோதிலியாவர்தகுமெனறுரைப்பாரசே
வனையோகொளுஞ்செய்தணிகாசலததுமகிழ்வோடமர்ந்தவமுதே. (அ)

மூதுவோராவணங்குதணிகாசலத்துமுதலேயிவ்வேழைமுறியேன்
மதுவானமயங்குமளிபோனமயஙகிமதியாதுநினறபிழையால்
விதுவாகியனபருளமேவுநீகைவிடிலேழையெஙகுமெலிவே
னிதுநீதியல்லவெனவுன்றனகருமெவாசொல்லவலலாரசே. (௯)

திருசசிற்றம்பலம.

# பணித்திறஞ்சாலாப்பாடிழிவு.

எணசீரக்கழிநெடிலடியாசிரியவிருததம்.

திருச்சிற்றம்பலம்.

அடுத்திலேனின்னடியரவைக்குட்சற்று மன்பிலேனின்றெழும்பஞகேன்வஞ் சந, தடுத்திலேனறணிகைதனிறசெனறுநினனைத தரிசனஞ்செயதேமதுரத்தமிழச் சொன்மாலை, தொடுத்திலேனழுதுநினதருளைவேண்டித தொழுதுதொழுதானந்தத் தூய்நீராடே,' னெடுத திலேனல்லனென்னும்பெயரையாநதோவேன்பிறநதேன்புவிச்சு மையாவிருககினறேனே (க)

இரப்படுவேன்மையல்புரிமாயவாழ்விறறியஙகுவேன்சிறிதேனுந்தெளிவொன்றி ல்லேன, மரப்படுவேனசிதடருடன்றிரிவேன்வீணேமஙகையாதஙகணகளெனும்வலை கருள்வீழ்வேன, காபபவாககுமுறபடுவேனகருணையில்லேன்கண்ணனையாயநின்றணி கைமலையைக்காணே, னிரப்பவாககோரணுவளவுமீயேன்பேயேனேன்பிறநதேன்புவி ச்சுமையாவிருககின்றேனே. (உ)

செய்திலேனின்றெண்டாடிகருற்றேவ றிருததணிகைமலையைவலஞ்செய்துக ண்ணீரப், பெயதிலேனபுலனைநதுமொடுககிவீதல்பிறததலெனுஙகடனீநதேன்பெண் கடம்மை, வைதிலேன்மலாகொய்யேன்மாலைசூட்டேன்மணியேநின்றிருப்புகழைவ ழுததேனின்பா, லெயதிலேனிவ்வுடல்கொணடேழையேன்யானேன்பிறந்தேன்புவி சசுமையாவிருககின்றேனே. (ங)

சீாகொணடாாபுகழ்தணிகைமலையிற்சேரேன் சிவபெருமானபெற்றபெருஞ்செல் வமேநின், போகொணடாாதமைவணஙகிமகிழேன்பிததேன்பெற்றதேயமையுமெனப் பிறங்கேன்மாதா, வாாகொண்டாாமுலைமலைவீழ்நதுருளவேனுளும்வஞ்சமேசெய்திடு வேனமதியொன்றிலலே, னேர்கொண்டாரிகழ்நதிடவிஙகேழையேனயானேன்பிறந தேன்புவிச்சுமையாவிருக்கின்றேனே. (ச)

காமாந்தகாரியாய்மாதரல்குற் கடல்வீழ்நதேன்மதிதாழ்நதேன்கவலைசூழ்நதேன், நாமாநதகனையுதைததநாதனீன்றநாயகமாமணியேநன்னலமேயுனறன், பூமாந்தண்சே வடியைபபோற்றேனேஙகும்பொழில்கொடணிகாசலததைப்புகழ்நதுபாடே, னேமாந தபாவியேனநோவநதோவேன்பிறநதேனபுவிச்சுமையாவிருககின்றேனே. (ரு)

நன றறியேன் றீங்கனைத்தும் பறியேன் பொல்லா நங்கையா தங்கண் மாயநவையை ச்சற்றும், மென் றறியேனகொன் றறிவார் தம்மைக்கூடும்வேட னேன் றிருத்தணிகை வெறபினின் பாற், சென் றறியேனிலையென் பதறிவேனென் றுஞ்செய்தறியேனசிவத ருமஞ்செயவோகல்லோ, ரென் றறியேன் வெறியேனிங்கந்தோவந்தோவேன் பிறந்தே னபுவிச்சுமையாவிருக்கின்றேனே. (சு)

அல்லார்க்குங்குழலார்மேலாசைவைப்பே னையாநின் றிருத்தாண்மேலன் புவையே ன், செல்லார்க்கும்பொழிற்றணிகையெங்கேயென்று தேடிடேனின் புகழைச்சிந்தை செய்யேன், கல்லாககுங்கமெனத்தேனவன்கனேனபுன கண்ணினேனுதவாதகையே ன்பொயயே, னலலாககும்பொலலாதபாவியேன்யானேனபிறநதேனபுவிசசுமையா விருககின்றேனே. (எ)

அரும்பாயநகைமடவாககளாயவாளா வலைகினறேனறிவென்பதறியேனின்பா ற், றிரும்பாதபாதகனேனறிவொனறில்லேன் றிருததணிகைமலைகசேககச்சிநதைசெய் யேன், கரும்பாயவெறுததுவேம்பருநதுமபொல்லாக காககையொததேனசறறேனுங கனிதலிலலா, விரும்பாயவன்னெஞசககளவனேனயானேன் பிறநதேன் புவிசசுமையா விருககினறேனே. (அ)

அமபாதனெங்கண்ணாககிச்சைகொளவே னகமலரமுகமலர்வோடருளசெயயு ன்றன், செம்பாதமலரேததேனிலவுகாததேன திருததணிகையேநமதுசெல்வமென் றே, நம்பாதகொடியேனல்லோரைககணடா ஞணிலேனடுஙகிலேனுயிறபொல்லே, னமபாதகததையெடுததியார்ககுஞ்சொலவே னேன் பிறநதேனபுவிசசுமையாவிருககி ன்றேனே. (கூ)

பண்ணேனின் புகழ்சொல்வோர் தமககுப்பூசை பாடேனினறிருச்சீரைப் பரமனீ ன்ற, கண்ணேநினறணிகைதனைககணடுபோறறேனகைகுவியேன்மெயகுளிரேன்க ண்ணீர்பாயே, னுணணேனல்லானநதவமுதையனபருடனுகேனேகாநதததுறவோரெ ண்ண, மெண்ணேன்வனறுயரமணணேனமனஞ்செம்புணணேனேன் பிறந்தேனபுவி ச்சுமையாவிருககின்றேனே (கo)

திருசசிற்றமபலம.



## காணுப்பத்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருததம.

திருச்சிற்றம்பலம்.

வரங்கொளடியர்மனமலரின் மகிழ்வுற்றமர்ந்தமாமணியே
திரங்கொடணிகைமலைவாழுஞ்செல்வப்பெருக்கேசிற்பரமே
தரங்கொளுலகமயலகலத்தாழ்ந்துள்ளுருகவழுதழுது
கரஙகொண்சிரததோடியானுன்னைககண்களாரககண்டிலனே. (க)

வல்லியொருபால்வானவாதம்மகளாண்டொருபால்வரமயின்மே
லெல்லினிலங்குநெட்டிலைவேலேந்திவருமென்னிறையவனே
சொல்லியடங்காததுயரியற்றுந்துகள்சோசனனப்பெருவேலைக்
கல்லியெறிநதுநினனுருவைககண்களாரககண்டிலனே. (உ)

உருததுள்ளிகலுஞ்சூர்முதலையொழிததுவானத்தொண்பதியைத்
திருத்துமணாசேதென்றணிகைததெய்வமணியேசிவஞான
மருததுநினதுதிருவருள்கொண்டாடிப்பாடியனபர்தஞற
கருததுள்ளுருகிநினனுருவைககணகளாரககண்டிலனே. (ங)

போதலிருத்தலெனநினையாப்புனிதாசனனபோரோடு
சாதலகற்றுந்திருததணிகைசசைவககனியேதற்பரமே
யோதலறியாவஞ்சகாபாலுழனறேமாதாக்குளளுருகுங்
காதலகறறிநின்னுருவைககணகளாரககண்டிலனே. (ச)

வீட்டைப்பெறுவோருள்ளகததுவிளஙகுமவிளககேவிண்ணோர்த
நாட்டைநலஞ்செயதிருததணிகைநகததிலமாந்தநாயகமே
கேட்டைத்தருவஞ்சகவுலகிறகிடைததமாயவாழககையெனுங
காட்டைககடநதுநினனுருவைககணகளாரககணடிலனே. (ரு)

மட்டிததளறுபடககடலைமலைககுஙகொடியமாவுருவைச
சட்டித்தருளுநதணிகையிலெனருயேதமரேசற்குருவே
யெட்டிககனியாமிவவுலகததிடாவிட்டகலநினபததத்தைக்
கட்டிததழுவிநினனுருவைககண்களாரககண்டிலனே. (சா)

இலககமறியாவிருவினையாலிம்மானிடமொனறெடுத்தடியேன்
விலககமடையாவஞ்சகாபால்வீணடைபோககிமேவிமனத
தலக்கணியறறுமபொய்வாழ்விலலைநதேனறணிகையரசேயுக
தலககமகன்றுநினனுருவைககண்களாரககணடிலனே. (எ

விரைவாய்கடப்பநதாரணிநதுவிளஙகுமபுயனேவேலோனே
தரைவாயதவததாறறணிகையமாதருமக்கடலேதனியடியேன்
றிரைவாயசனனககடறபடிநதேதியஙகியலைந்தேன்சிவஞானக்
கரைவாயேறிநின்னுருவைக்கணகளாரககண்டிலனே. (அ)

பள்ளவுலகப்படுகுழியிற்பரிநதஙகுழலாதானநத
வெள்ளததழுநதுமன்பர்விழிவிருநதேதணிகைவெற்பரசே
யுள்ளமகலவஙகுமிஙகுமோடியலையும்வஞ்சநெஞ்சக
கள்ளமகற்றிநின்னுருவைககணகளாரககண்டிலனே. (கூ)

அடலையணிந்தோர்புறங்காட்டிலாடுமபெருமானளித்தருளும்
விடலையெனமூவருமபுகழும்வேலோயதணிகைமேலோயே
நடலையுலகநடையளறறைறநண்ணுதோஙகுமானநதக
கடலையடுத்துநின்னுருவைக்கண்களாரக்கண்டிலனே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# பணித்திறஞ்சாலாமை.

## கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

வஞ்சகப்பேதையர்மயக்கிலாழ்ந்துழ
னெஞ்சகப்பாவியேனினைந்திலேனையோ
வெஞ்சகப்போரினைவிட்டுளோர்புகழ்
தஞ்சகத்தணிகைவாழ்தருமவானையே. (௧)

வாணிகர்கூந்தலார்வகைகளுண்மிக
மாணிகழ்பேதையேன்மதித்திலேனையோ
தாணிரும்புகழ்கொளுந்தணிகைமேலருட்
டேணிருந்தொழுகியசெங்கரும்பையே. (௨)

கருங்கடுநிகர்நெடுங்கண்ணினார்மய
லொருங்குறுமனத்தினேனுன்னிலேனையோ
தரும்புகழ்மிகுந்திடுந்தணிகைமாமலை
மருங்கமர்ந்தன்பருண்மன்னும்வாழ்வையே. (௩)

வைவளர்வாட்கணார்மயக்கில்வீழ்ந்தருப்
பொய்வளர்நெஞ்சினேன்போற்றிலேனையோ
மெய்வளரன்பாகனைமேவியேத்துறுஞ்
செய்வளர்தணிகையிற்செழிக்குந்தேனையே. (௪)

செழிப்படுமங்கையர்தீயமாயையிற்
பழிப்படுநெஞ்சினேன்பரவிலேனையோ
வழிப்படுமன்பர்களவறுமைநீக்கியே
பொழிற்படுந்தணிகையிற்பொலிந்தபொன்னையே. (௫)

பொதிதருமங்கையர்புளகக்கொங்கைமேல்
வதிதருநெஞ்சினேன்மதித்திலேனையோ
மதிதருமன்பர்தம்மனத்திலெண்ணிய
சதிதருந்தணிகைவாழ்கற்பகத்தையே. (௬)

திருச்சிற்றம்பலம்.

# குறைநேர்ந்தபத்து.



எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

வான்பிறநதார்புகழ்தணிகைமலையைககண்டுவெள்ளலேநின்புகழைமகிழ்ந்துகூறே
ன், றேன்பிறநதமலாககுழலாககாளாவாளாதிரிகின்றேன்புரிகின்றேனறீமைநாளு,
மூன்பிறந்தவுடலோம்பியவமேவாழ்நாளொழிக்கினறேன பழிககாளாயுற்றேனநதோ,
யேன்பிறநதேனேன்பிறநதேன்பாவியேனயானெனகுறையையெவாகெடுததிஙகிய
மபுகேனே. (க)

மெய்யாவோநற்றணிகைமலையைச்சார்ந்து மேன்மையுறுநினபுகழைவிரும்பியே
தசே, னுயயாவோவன்னறியேன்பயன்படாதவொதியனையேனெட்டிதனையொத்தே
னன்பா, பொயயாவோடனமடவாாபோகம்வேட்டேனபுலையனேனசற்றேனுமபு
னிதமில்லே, னையாவோநாணுமற்பாவியேன்யானயாாகெடுததென்குறைதனனைய
றைகுவேனே. (உ)

வாட்செல்லாநெடுங்கண்ணாமயலில்வீழ்ந்து மனம்போனவழிசென்றுவருந்தாநி
ன்றேன, சேட்செலலாவளாததணிகைததேவதேவேசிவபெருமானபெறறபெருஞ
செல்வமேநா, ளுட்செலலாநின்றதினியெனசெயசேனோநாயினேனபிழைதன்னைநா
டிநின்பாற, கோட்சொல்லாநிறபரெனிலென்னுமோவெனகுறையையெடுததெவர்க
ெளியேனகூறுகேனே. (௩)

பொல்லாதமங்கையாதமயற்குள்ளாகும்புலையமனததால்வாடிப்புலம்புகின்றேன்,
கல்லாதபாவியென்றுகைவிட்டாயோகருணையுருவாகியசெஙகரும்பேமேரு, வில்லா
ன்றன்செலவமேதணிகைமேவுமெய்ஞ்ஞானவொளியேயிவ்வினையேன்றனப, மெல்
லாநீயறிவாயேயறிநதும்வாராதிருநதாலென்குறையையெவர்க்கியம்புகேனே. (ச)

முன்னறியேன்பின்னறியேனமாதர்பாலென் மூடமனமிழுத்தோடப்பின்சென்
றெயததேன், புன்னெறியேனபொயயரொடும்பயின்றேனின்றன்புனிதவருட்கடலா
டேன்புளகமூடேன், பொன்னனையன்றொழுஞ்சடிலப்புனிதனீன்றபுண்ணியமேத
ணிகைவளாபோதவாழ்வே, யெனனைாசேயென்னமுதேநின்பாலன்றியெவர்க்கெடு
ததென்குறைதனனையியம்புகேனே. (ரு)

விடுமோட்டிற்றிரிந்துமடமாதரார்தம்வெய்யநீாக்குழிவீழ்ந்துமீளாநெஞ்சத், தடு
மாற்றத்தொடும்புலையவுடலையோம்பிச்சார்நதவர்க்கோரணுவளவுந்தானீயாது,படுகாட்
டிற்பலனுதவாப்பனைபோனின்றேன்பாவியேனுடற்சுமையைப்பலருங்கூடி,யிடுகாட்
டில்வைக்குங்காலென்செய்வேனோவென்குறையையெவர்கெடுததிங்கியம்புகேனே.

மின்னைநேரிடைமடவார்மயல்செய்கின்றவெங்குழியில்வீழ்ந்தழுந்திவெறுத்தே
ண்போலப், பின்னையேயெழுந்தெழுந்துமீட்டுமீட்டும்பேயபோலவீழ்ந்தாடிமயறகுண்
மூழ்கிப், பொன்னையேயொத்தவுனதருளைவேண்டிப்போற்றாதுவீணேநாட்போக்குகி
ன்ற, வென்னையேயான்சிரிப்பேனாகிலந்தோவென்குறையையெவர்க்கெடுத்திங்கியம
புகேனே. (எ)

முலையொருபான்முகமொருபால்காட்டும்பொல்லாமூடமடவார்கடமைமுயங்கிநி
ன்றே, னிலையொருபாலனமொருபான்மலஞ்சேர்த்துண்ணுமேழைமதியேன்றணிகை
யேந்தலேபொன், மலையொருபால்வாங்கியசெவ்வண்ணமேனிவள்ளறருமருந்தேநின
மலர்த்தாளேத்தேன், புலையொருவாவஞ்சகநெஞ்சுடையேனென்றன்புன்மைதனையெ
வர்க்கெடுத்துப்புகலுவேனே. (அ)

வேய்ப்பான்மென்றேண்மடவார்மறைக்குமாயவெம்புழுச்சேர்வெடிப்பினிடை
வீழ்ந்துநின்றேனை, றாய்ப்பாலையுண்ணாதுநாய்ப்பாலுண்ணுந்தகையனேன்றிருத்தணி
கைதன்னைச்சார்ந்து, யாய்ப்பாலையொருமருங்கானின்றசெல்வத்தாரமுதேநின்னருளை
யடையேன்கண்டாய், யேய்ப்பாலைநடுவெகருங்கல்போனின்றெய்த்தேனென்குறையை
யெவர்க்கெடுத்திங்கியம்புகேனே. (கூ)

வஞ்சமடமாதரார்போகமென்னுமலத்தினிடைக்கிருமியெனவாளாவீழ்ந்தேன், கஞ்
சமலர்மனையானுமாலுந்தேடக்காணாதசெங்கனியிற்கனிந்ததேனே, தஞ்சமென்போர்க
கருள்புரியும்வள்ளலேகற்றணிகையனாசேயுனதுதாளைப்போற்றேன், னெஞ்சலிலாவி
னைச்சேமவிடமாயுற்றேனென்குறையையெவர்க்கெடுத்திங்கியம்புகேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# முறையிட்டபத்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னைப்பொருளாநினைப்போர்பாற்போந்துமிடியாலிரந்தலுத்தே
னின்னைப்பொருளென்றுணராதநீசனினியோர்நிலைகாணேன்
மின்னைப்பொருவுஞ்சடைப்பவளவெற்பில்விளைந்தவியன்கரும்பே
முன்னைப்பொருளேதணிகையனேமுறையோமுறையோமுறையேயோ. (௧)

மக்கட்பிறவியெடுத்துமுனைவழுத்தாக்கொடியமரமனையேன்
றுக்கக்கடலில்வீழ்ந்துமனஞ்சோர்கின்றேனோர்துணைகாணேன்
செக்கர்ப்பொருவுவடிவேற்கைத்தேவேதெவிட்டாத்தெள்ளமுதே
முக்கட்கரும்பின்முழுமுத்தேமுறையோமுறையோமுறையேயோ. (௨)

அன்பினுனதுதிருவடிக்கேயாளாய்த்தொண்டொன்றுறாதே
துன்பினுடையோர்பாலணுகிச்சோர்ந்தேனினியோர்துணைகாணே
னென்பினமலிந்தமாலைபுனையெம்மானந்தபெம்மானே
முன்பினவொயமுளைந்தோனேமுறையோமுறையோமுறையேயோ. (௩)

அருகாமலத்தினலைந்திரக்கமறியாவஞ்சநெஞ்சகர்பா
லுருகாவருந்தியுழன்றலைந்தேனுன்றுளன்றித்துணைகாணேன்
பெருகாதரவிற்சிவன்பெறுந்றபேறேதணிகைப்பெருவாழ்வே
முருகாமுகமூவிரண்டுடையாயமுறையோமுறையோமுறையேயோ. (௪)

பொன்னின்றெளிருமாபனயன்போற்றுமுன்றூட்புகழ்மறந்தே
கன்னின்றணங்குமனத்தார்பாற்கனிந்தேனினியோர்துணைகாணேன்
மின்னின்றிலங்குசடைக்கனியுள்விளைந்தநறவேமெய்யடியர்
முன்னின்றருளுந்தணிகையனேமுறையோமுறையோமுறையேயோ. (௫)

வெவ்திருள்ளவரின்மொழிகேளாவீணரிடம்போயமிகமெலிந்தே
யதிருங்கழற்சேவடிமறந்தேனந்தோவினியோர்துணைகாணே
னெதிருங்குயினமேற்றவழ்தணிகையிறையேமுகக்கணியற்கனியின்
முதிருஞ்சுவையேமுதற்பொருளேமுறையோமுறையோமுறையேயோ. (௬)

ஈனத்திவறுமனக்கொடியோரிடம்போய்மெலிந்துநாடோறு
ஞானத்திருத்தாட்டுணைசிறிதுநாடேனினியோர்துணைகாணே
னூனத்தறுகண்மலையுரியினசட்டைபுனைந்தோனறுமபேறே
மோனத்தவாதமகவிளக்கேமுறையோமுறையோமுறையேயோ. (௭)

தேவேயெனநிற்போற்றாதசிறியரிடம்போய்த்தியங்கியெனறன்
கோவேநினறனிருத்தாளைக்குறிக்கமறந்தேன்றுணைகாணேன்
மாவேழத்தினுரிபுனைந்தவள்ளறகினியமகப்பேறே
மூவேதனையயறுத்தருள்வோயமுறையோமுறையோமுறையேயோ. (௮)

வேதாநந்தனொடுபோற்றிமேவப்படுநின்பதமறந்தே
யீதாநந்தந்திடுவீரென்றீனரிடமபோயிரந்தலைந்தேன
போதானந்தப்பரசிவத்திறபோந்தபொருளேபூரணமே
மூதானந்தவாரிதியேமுறையோமுறையோமுறையேயோ. (௯)

வடியாககருணைவாரிதியாமவள்ளலுன்றண்மலாமறந்தே
கொடியாரிடம்போய்க்குறையிரந்தேனகொடியேனினியோர்துணைகாணே
னடியார்க்கெளியமுகக்கணுடையம்மானளித்தவருமருந்தே
முடியாமுதன்மைப்பெரும்பொருளேமுறையோமுறையோமுறையேயோ. (௧௦)

திருச்சிற்றமபலம்.

# நெஞ்சவலங்கூறல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இழுதைநெஞ்சினேனென்செயவானபிறந்தேனேழைமார்முலைக்கேவிழைந்துழன்றேன
பழுதைபாம்பெனமயங்கினன்கொடியேன்பாவியேனெந்தப்பரிசுகொண்டடைவே
னழுதுகண்கணீரார்ந்திடுமடியரகத்துள்ளூறியவானந்தவமுதே
தொழுதுமால்புகழ்தணிகையென்னரசேதோன்றலேபரஞ்சுடரருளொளியே. (௧)

வஞ்சநெஞ்சினேன்வல்விலங்கனையேன்மங்கைமார்முலைமலைதனிலுருள்வேன்
பஞ்சபாதகமோருருவெடுத்தேன்பாவியேனெந்தப்பரிசுகொண்டடைவேன்
கஞ்சன்மால்புகழ்கருணையங்கடலேகண்கண்மூன்றுடைக்கரும்பொளிர்முத்தே
யஞ்சலஞ்சலென்றன்பரைக்காக்குமண்ணலேதணிகாசலத்தரசே. (௨)

மையநெஞ்சினேன்மதியிலேன்கொடியவாட்கணார்முலைமலைக்குபசரித்தேன்
பையபாம்பினைநிகர்த்தவெங்கொடியபாவியேனெந்தப்பரிசுகொண்டடைவேன
மெய்யருள்ளகம்விளங்கொளிவிளக்கேமேலையோர்களுமவிளம்பரும்பொருளே
செய்யமேனியெஞ்சிவபிரானளித்தசெல்வமேதிருத்தணிகையந்தேவே. (௩)

மதியினெஞ்சினேனெறியிலியனையேன்மாதர்கண்ணெனும்வலையிடைப்பட்டேன்
பதியிலேழையேன்படிறுவஞ்சகனேன்பாவியேனெந்தப்பரிசுகொண்டடைவேன்
பொதியிலாடியசிவபிரானளித்தபுண்ணியாவருட்போதகநாதா
துதியிராமனுக்கருள்செயுந்தணிகைத்தூயனேபசுந்தோகைவாகனனே. (௪)

துட்டனெஞ்சினேனெட்டியையனையேன்றுயர்செய்மாதர்கள்சூழலுடினமும்
பட்டவஞ்சனேனென்செயவுதித்தேன்பாவியேனெந்தப்பரிசுகொண்டடைவே
னட்டமாடியநாயகனளித்தநல்லமாணிக்கநாயகமணியே
மட்டறுபபொழில்சூழ்திருத்தணிகைவள்ளலேமயில்வாகனத்தேவே. (௫)

காயுநெஞ்சினேன்பேயினையனையேன்கடிகொள்கோதையார்கண்வலைப்பட்டேன
பாயும்வெம்புலிநிகர்த்தவெஞ்சினத்தேன்பாவியேனெந்தப்பரிசுகொண்டடைவேன
றாயுந்தந்தையுஞ்சாமியுமெனதுசார்புமாகியதணிகையங்குகனே
யாயுங்கொன்றைசெஞ்சடைக்கணிந்தாடுமையாதந்தருளானந்தப்பேறே. (௬)

தீங்குநெஞ்சினேன்வேங்கையையனையேன்றீயமாதர்தந்திறத்துழல்கின்றேன்
பாங்கிலாரொடும்பழகியவெறியேன்பாவியேனெந்தப்பரிசுகொண்டடைவேன்
தேங்குகங்கையசெஞ்சடையிருந்தசிவபிரான்செல்வத்திருவருட்பேறே
யோங்குநற்றணிகாசலத்தமர்ந்தவுண்மையேயெனக்குற்றிடுந்துணையே. (௭)

கள்ளநெஞ்சினேனஞ்சினையனையேன்கடியமாதர்தங்கருக்குழியெனுமோர்
பள்ளமாழ்ந்திடுபுலையனேன்கொலையேன்பாவியேனெந்தப்பரிசுகொண்டடைவேன்
வெள்ளவார்சடைவித்தகப்பெருமான்வேண்டநற்பொருள்விரித்துரைத்தோனே
புள்ளலம்புதண்வாவிசூழ்தணிகைப்பொருப்பமர்ந்திடுமெய்புனிதபூரணனே. (அ)

மத தனெஞ்சினேன் பிததரி றறிரிவேணமா தர்கண்களின்மயங்கிநின் றலைந்தேன்
பததியெனபதோரணுவுமுறறிலலேனபாவியேனெந்தப்பரிசுகொண்டடைவேன்
பிததநாயகனருடிருப்பேறேபிரமனமாலுக்குமபேசரும்பொருளே
ததைதபாடுறுமபொழிற்செறிதணிகாசலததினமேவியதற்பரவொளியே. (கூ)

அழுககுநெஞ்சினேன்பொயயலதறியேனணங்கனார்மயலாழத்தில்விழுந்தேன்
பழுககுமூடருட்சோநதிநெகொடியேன்பாவியேனெநதப்பரிசுகொணடடைவேன்
மழுககையேநதியமாசிலாமணிகருண்மன்னியோஙகியவளரொளிப்பிழமபே
வழுககிலாபுகழ்தணிகையெனனரசேவளளலேயென்னைவாழ்விக்கும்பொருளே. (கo)

திருச்சிற்றம்பலம்.

# ஆற்றுப்புலம்பல்.

கொச்சககலிபபா.

திருச்சிற்றம்பலம்.

அண்ணுவோவென்னருமையையாவோபன்னிரண்டு
கணணுவோவேல்பிடிததகையாவோசெம்பவள
வண்ணுவோநறறணிகைமன்னுவோவெனறென்றே
யெணணுவோதுன்பததிருஙகடற்குண்மன்னினனே. (க)

மன்னப்பாரபோறறுமணியேநினபொன்னருளைத
துனனபபாராதுசுழனறேனருணைகிரி
தன்னபபாநறறணிகைதனனிலமர்ந்தருளு
மெனனப்பாவினனுமிநநவேழைககிரஙகாயோ. (உ)

காயநினறநெஞ்சககடையேனநிருததணிகை
வாய்நினறுனதுபுகழ்வாய்பாடககைகுவித்துத
தூயநினறேதாளைததொழுதாடித்துனபமெலாம்
போய்நினறடைவேனோபுண்ணியநின்பொனனருளே. (ந)

பொனபிணிக்குநெஞசப்புலையேனையிவ்வுலகில்
வனபிணிககோபெறறுவளாததாயறியேனே
யெனபிணைததாரவளளறகினிமைபெறுமணியே
யன்பிணைதோபோற்றுமருட்டணிகைமன்னவனே. (ச)

வன்றேயும்வஞ்சகாதம்வன்சார்பும்வன்றுயரு
மென்றேயுங்கொண்டதனையெண்ணியிடிவேனே
வன்றேமுறைபோகியையாமுறையேயோ
மனறேமுறைதணிகைவாழ்வேமுறையேயோ. (ரு)

திருச்சிற்றம்பலம்.

# திருவருள்விழைதல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

தாணுவீன்றருள்செல்வமேதணிகையிற்சாமியேநினையேதக்க
காணுவேனிலையருளிவண்புன்மையிற்காலங்கள்கழிக்கின்றேன்
மாணுமன்பர்களெனச்சொலாரையநீவந்தெனக்கருள்வாயே
நாணுவேனலனடுங்கலனெஞ்சகலனாயினுங்கடையேனே. (௧)

கடைப்பட்டேங்குமிந்நாயினுக்கருட்கடவுணீவருவாயென
மடைப்பட்டோங்கியவன்பகத்தொண்டர்களவந்துனைத்தடுப்பாரே
றடைப்பட்டாயெனிலென்செய்வேனென்செய்வேன்றளாவதுதவிரேனே
யடைப்பட்டோங்கியவயற்றிருத்தணிகையம்பதியமர்ந்திடுதேவே. (௨)

தேவரேமுதலுலகங்கள்யாவையுஞ்சிருட்டியாதியசெய்யு
மூவரேயெதிர்வருகினுமதித்திடேனமுருகநின்பெயர்சொல்வோர்
யாவரேனுமெனகுடிமுழுதாண்டெனையளித்தவரவரேகாண்
டாவநாடொறுந்தணிகையம்பதியில்வாழ்சண்முகப்பெருமானே. (௩)

திருச்சிற்றம்பலம்.

---

# புண்ணியநீற்றுமான்மியம்.

வண்ணக்கவிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திவசங்கடொறுங்கொண்டிடுதீமைப்பிணிதீரும்
பவசங்கடமறுமிவ்விகபரமும்புகழ்பரவுங்
கவசங்களெனச்சூழ்ந்துறுகண்ணேறுந்தவிருஞ்
சிவசண்முகவெனவேயருட்டிருநீறணிந்திடிலே. (௪)

மாலேந்தியகுழலார்தருமயல்போமிடரயல்போங்
கோலேந்தியவரசாட்சியுங்கூடும்புகழ்நீடும்
மேலேந்தியவானாடர்கண்மெலியாவிதமொருசெவ்
வேலேந்தியமுருகாவெனவெண்ணீறணிந்திடிலே. (௫)

தவமுண்மையொடுறும்வஞ்சகர்தஞ்சார்வதுதவறும்
நவமணியவடியாரிடநலகுந்திறன்மல்கும்
பவனன்புனல்கனன்மண்வெளிபலவாகியபொருளாஞ்
சிவசண்முகவெனவேயருட்டிருநீறணிந்திடிலே. (௬)

துயிலேறியசோர்வுங்கெடுந் துயரங்கெடுநடுவெண்
கையிலேறியபாசந் துணிகண்டேமுறிந் திடுமால்
குயிலேறியபொழில்சூழ்திருக்குன்றேறிநடக்கும்
மயிலேறியமணியேயெனவளர்நீறணிந்திடிலே. (௪)

தேறுப்பெருமனமானதுதேறுந் துயரமாறும்
மாறுப்பிணிமாயுந் திருமருவுங்கருவொருவும்
வீறுப்பொடுவருசூர்முடிவேறுக்கிடவருமோ
* ஆறுக்கரப்பொருளேயெனவருணீறணிந்திடிலே. (௫)

திருச்சிற்றம்பலம்.

---

# உறுதியுணர்த்தல்.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்

மஞ்சோபிணிமிடியாதியைநோக்கிவருந்துறுமென்
னெஞ்சேதணிகையனாறெழுத்துண்டுவெண்ணீறுண்டுநீ
யெஞ்சேலிரவும்பகலுந்துதிசெய்திடுதிகண்டா
யஞ்சேலிதுசத்தியமாமெனச்சொல்லையறிந்துகொண்டே. (௧)

அறியாதநம்பிணியாதியைநீக்குமருண்மருந்தி
னெறியாந்தணிகையனாறெழுத்துண்டுவெண்ணீறுண்டுநீ
யெறியாதிரவும்பகலுந்துதிசெய்திடுதிகண்டாய்
குறியாதிருக்கலையென்னையென்றன்குணநெஞ்சமே. (௨)

என்றேபிணிகளொழியுமென்றேதுயரெய்தியிடே
னின்றேதணிகையனாறெழுத்துண்டுவெண்ணீறுண்டுநீ
யின்றேயிரவும்பகலுந்துதிசெய்திடுதிகண்டாய்
நன்றேயெக்காலமும்வாழியவாழியநன்னெஞ்சமே (௩)

திருச்சிற்றம்பலம்.

---

* ஆறக்கரம் - என்பது. ஆறுக்கரமென நீட்டும் வழி நீட்டல்.

## எண்ணத்தேங்கல்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

போதுகொண்டவனுமாலுநின்றேத்துமபுண்ணியநின்றிருவடிக்கே
யாதுகொண்டடைகேன்யாதுமேற்செய்கேன்யாதுநின்றிருவுளமறியேன
தீதுகொண்டவனென்றெனக்கருளசிறிதுஞ்செய்திடாதிருப்பையோசிறியோ
னேதிவன்செயலொன்றிலையெனககருதியீவையோதணிகைவாழிறையே. (௧)

வாழ்வனோநினபொன்னடிநிழல்இடைததேவயங்குமானநதவெள்ளதது
ளாழ்வனோவெளியேனல்லதிவவுலகிலறஞ்செயாககொடியர்பாற்சென்றே
தாழ்வனோதாழ்நதபணிபுரிநதவமேசஞ்சரிததுழனறுவெநநரகில்
வீழ்வனோவிஃதென்றறிகிலேன்றணிகைவெறபினுளொளிரருள்விளக்கே. (௨)

திருச்சிற்றம்பலம்.

---

## கையடைமுட்டற்கிரங்கல்.

க ட் ட ளை க க லி த் து றை.

திருச்சிற்றம்பலம்.

காரூநததாண்டதொடுமேவுமுககட்கனிகனிநது
சீரூநதொழுகுசெக்தேனேதணிகையிற்றெளளமுதே
போரூநதவொறறியினின்முன்னரேற்றிடப்பேதையனே
னேர்பூத்தவொண்பளிதங்காண்கிலனதறகென்செயவனே. (௧)

கருமருந்தாயமணிகண்டநாயகனகண்மணியா
மருமருநதேதணிகாசலமேவுமெனனுருயிரே
திருமருங்காரொற்றியூர்மேவியநினறிருமுன்னரா
யொருமருஙகேற்றவென்செய்கேன்கற்பூரவொளியினுககே. (௨)

பாலெடுதத்தேத்துநற்பாம்பொடுவேங்கையுப்பார்த்திடவோர்
காலெடுததம்பலத்தாடும்பிரான்றிருககண்மணியே
வேலெடுததோய்தென்றணிகாசலத்தமர்வித்தகநின்
பாலெடுத்தேற்றகிடைக்குங்கொலோவெணபளிதமெற்கே. (௩)

கண்ணப்பனென்னுந் திருப்பெயராலுலகம்புகழுந்
திண்ணப்பனேத்துஞ்சிவஞானமகனுக்குத்தெண்டனிட்ட
வண்ணப்பமொன்றிந்தமேதினிமாயையில்வீழ்வதற்றுத்
தெண்ணப்படுநின்றிருவருள்கவிவவேழையற்கே. (௪)

திருச்சிற்றம்பலம்

---

# பொது.

### கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

எப்பாலவருமிறைஞ்சுந்தணிகையிருந்தருளென
னப்பாவுனபொன்னடிகளென்னெஞ்சகமிடமாகமிக்க
வெப்பானநஞ்சனவஞ்சகர்பாற்செலும்வெந்துயர்நீத்
திப்பாரினின்னடியார்க்கேவல்செய்யவெனக்கருளே. (௧)

எய்யாதருடணிகாசலமேவியவென்னருமை
யையாநின்றுதிருவடியேதஞ்சமன்றேயவனுஞ்
செய்யாண்மருவுமபுயனுடைதேவனுஞ்சேணவனு
மெய்யாதவாயுளுஞ்செல்வமும்வண்மையுநண்ணினரே. (௨)

நீளாவமாதிதரும்பேரிருண்மலநீங்கிவெய்ய
வாளாருங்கண்ணியாமாயையைநீக்கிமலிகரணக்
கோளாருமவாதனைநீத்துமெய்ஞ்ஞானக்குளிகொடுநின்
றாளாகுநாளெந்தநாளறியேனறணிகாசலனே. (௩)

ஊனபாகருமிவ்வுடற்பொய்மையைத்தேர்ந்தெலாழிந்தவமே
மானபாகருங்கண்ணியாமையில்வீழுமயக்கமறவே
தேனபாகருஞ்சோலைத்தணிகாசலத்துன்றிருவழகை
நானபாகருநாளெந்தநாண்மயிலேறியநாயகனே. (௪)

என்னேகுறைநமக்கேழைநெஞ்சேமயிலேறிவரு
மன்னேயெனநெடுமாலுமபிரமனும்வாழ்த்திநிற்குந்
தன்னோதணிகைத்தடமலைவாழுநற்றந்தையருட்
பொன்னோதிருவடிப்போதுகண்டாயநமபுகலிடமே. (௫)

பேதைநெஞ்சேயென்றன்பின்போந்திடுதியிப்பேயுலக
வாதையஞ்சேற்பொறிவாய்க்கலங்கிலிறையும்மயங்கேற
போதையெஞ்சேறணிகாசலம்போயப்பொருப்பமர்ந்த
தாதையஞ்சேவடிக்கீழ்க்குடியாகத்தயங்குவமே. (௬)

திருச்சிற்றம்பலம்.

# நாளவம்படாமைவேண்டல்.

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

குன்றமொத்திலங்குபணைமுலைநெடுங்கட்கோதையர்பால்விரைந்தோடிச்
சென்றவிப்புலையேன்மனத்தினைமீட்டுன்றிருவடிக்காக்குநாளுளதோ
வென்றணியுயிரேயென்னுடைப்பொருளேயென்னுளத்தினித்தெழுமின்பே
மன்றலம்பொழில்சூழ்தணிகையம்பொருப்பில்வந்தமர்ந்தருள்செயுமணியே. (௧)

மணிக்குழையடர்த்துமதர்த்தவேற்கணார்வஞ்சகமயக்கினிலாழ்ந்து
கணிக்கருந்துயர்கொண்மனத்தினைமீட்டுன்கழலடிக்காக்குநாளுளதோ
குணிக்கரும்பொருளேகுணப்பெருங்குன்றேகுறிகுணங்கடந்ததோர்நெறியை
யெணிக்கருமாலுமயனுநின்றேத்துமெந்தையேதணிகையெம்மிறையே. (௨)

இறைக்குளேயுலகமடங்கலுமருட்டுமிலைநெடுவேற்கணாரகச்
சிறைக்குளேவருந்துமனத்தினைமீட்டுன்றிருவடிக்காக்குநாளுளதோ
மறைக்குளேமறைந்தம்மறைக்கரிதாயவள்ளலேயுள்ளகப்பொருளே
யறைக்குளேமடவார்க்கனநடைபயிற்றுமணித்திருத்தணிகைவாழரசே. (௩)

அரைமதிக்குறழுமொண்ணுதல்வாட்கணலார்முலையணங்கனாரல்குற
புரைமதித்துழலுமனத்தினைமீட்டுன்பொன்னடிக்காக்குநாளுளதோ
பரைமதித்திடஞ்சேர்பராபரற்கருமைப்பாலனேவேலுடையவனே
விரைமதித்தோங்குமலர்ப்பொழிற்றணிகைவெற்பினிலொளிருமெய்விளக்கே.

விளக்குறழ்மணிப்பூண்மேலணிந்தோங்கிவிம்முறுமிளமுலைமடவா
களக்கினிலாழ்ந்தமனத்தினைமீட்டுன்கழலடிக்காக்குநாளுளதோ
வளக்கருங்கருணைவாரியேஞானவமுதமேயானந்தப்பெருக்கே
கிளக்கரும்புகழ்கொடணிகையம்பொருப்பிற்கிளர்ந்தருள்புரியுமென்கிளையே

கிளைக்குறுமபிணிக்கோருறையுளாமடவார்கீழுறுமல்குலெனகுழிவீழ்ந்
திளைக்கும்வன்கொடியமனத்தினைமீட்டுனிணையடிக்காக்குநாளுளதோ
விளைக்குமானந்தவியன்றனிவித்தேமெய்யடியவருளவிருப்பே
திளைக்குமாதவத்தோர்க்கருள்செயுந்தணிகைத்தெய்வமேயருட்செழுந்தேனே.

தேன்வழிமலர்ப்பூங்குழற்றுடியிடைவேற்றிறல்விழிமாதரார்புணர்ப்பாங்
கானவழிநடக்குமனத்தினைமீட்டுன்கழல்வழிநடத்துநாளுளதோ
மான்வழிவருமென்னம்மையைவேண்டிவண்புனத்தடைந்திட்டமணியே
வானவழியடைக்குஞ்சிகரிசூழ்தணிகைமாமலையமர்ந்தருண்மருந்தே. (௭)

மருந்தெனமயக்குங்குதலையந்தீஞ்சொன்வாணுதன்மங்கையரிடத்திற்
பொருந்தெனவலிக்குமனத்தினைமீட்டுன்பொன்னடிக்காக்குநாளுளதோ
வருந்திடாதருந்தவடியருள்ளோங்குமானந்தத்தேறலேயமுதே
யிருந்தருமுனிவர்புகழ்செயுந்தணிகையினிதமர்ந்தருளியவின்பே. (௮)

இனபமறறுறுகணவிளைவிழிநிலமாமோநிழையவர்புழுககுழியிற
றுன்பமுற்றுழலுமனததினைமீட்டுன்றுணையடிககாககுநாளுளதோ
வன்பாமுறறுணரவருளசெயுந்தேவேயரியயன்பணிபெரியவனே
வனபதையகறறிமனபதைககருள்வான்மகிழ்நதுறுந்தணிகையின்வாழ்வே. (௯)

வாழுமிவ்வுலகவாழ்க்கைஙயமிகவும்மலித்திடுமெங்கையர்தம்பாற்
றாழுமென்கொடியமனததினைமீட்டுனறாண்மலர்க்காக்குநாளுளதோ
சூழுநெஞ்சிருளைப்போழுமெய்யொளியேதோற்றமீறற்றசிறசுகமே
யூழுமுற்பவமோரேழும்விட்டகலவுதவுசீரருட்பெருஙகுனறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# அன்பிற்பேதுறல்.



எழுசீரககழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றமபலம்.

மூடர்கடமகுணமுற்படுங்கொடியமுறியனேனறனககுநின்னடியா
மேடவிழ்கமலததிருநறவருநதவெனறுகொலருளபுரிந்திடுவா
யாடரவணிநதேயமபலததாடுமையருககொருதவப்பேறே
கோடணிதருககள்குலவுநற்றணிகைக்குன்றமர்நதிடுகுணக்குன்றே. (௧)

கறறவாபுகழ்நின்றிருவடிமலரைககடையனேனமுடிமிசையமாததி
யுறறவிவவுலகமயககறமெயமையுணாததுநாளெநதநாளறியே
னறறவருணருமபரசிவததெழுந்தநல்லருட்சோதியேநவைதீா
கொறறவேலுகநதகுமரனேதணிகைக்குன்றமாந்திடுகுணககுன்றே. (௨)

ஞாலவாழ்வெனும்புனமலமிசைநதுழலுநாயினுங்கடையவிந்நாய்க்குன
சீலவாழ்வளிகருநதிருவடிககமலததேன்றருநாளுமொன்றுணடோ
வாலவாயுகநதவொருசிவதருவிலருள்பழுததளிந்தசெஙகனியே
கோலவானவாகளபுகழ்திருத்தணிகைக்குன்றமர்நதிடுகுணககுன்றே. (௩)

பவமெனுஙகடற்குளவீழ்நதுழன்றேங்கும்பாவியேன்றன்முகம்பார்த்திங
கெவையுநாடாமலென்னடிநிழற்கீழிருந்திடென்றுரைப்பதெந்நாளோ
சிவமெனுந்தருமக்கடலகததெழுநதெள்ளியவமுதமேதேனே
குவிமுலைவல்லிக்கொடியொடுநதணிகைக்குன்றமர்ந்திடுகுணக்குன்றே. (௪)

முலைமுகங்காட்டிமயக்கிடுங்கொடியார்முன்புழன்றேங்குமிவ்வெளியே
னிலைமுகங்காட்டுநின்றிருப்பாதநீழல்வந்தடையுநாளென்றோ
மலைமுகங்குழையவளைத்திடுந்தெய்வமணிமகிழ்கண்ணினுண்மணியே
கொலைமுகஞ்செல்லார்க்கருடருந்தணிகைக்குன்றமர்ந்திடுகுணக்குன்றே. (௫)

வருபயனறியா துழன்றிடுமேழைமதியினேனுய்ந்திடுமவண்ண
மொருவருநினது திருவடிப்புகழையுன்னுநாளெந்தநாளறியே
னருவுருவாகுஞ்சிவபிரானளித்தவருமபெற்றசெல்வமேயமுதே
குருவுருவாகியருடருந்தணிகைக்குன்றமர்ந்திடுங்குணக்குன்றே. (௬)

அழிதருமுலகவாழ்வினைமெய்யென்றலைந்திடுமெபாவியேனியற்றும்
பழிதரும்பிழையையெண்ணுறேலின்றுபாதுகாத்தளிப்பதுன்கடனே
மொழிதருமுகட்செங்கரும்பீன்றமுத்தமேமுத்தியின்முதலே
கொழிதருமருவிபொழிதருந்தணிகைக்குன்றமர்ந்திடுங்குணக்குன்றே. (௭)

நின்னிலையறியாவஞ்சகரிடத்தினின்றுநின்றலைதருமெளியேன்
றன்னிலையறிந்துமையகோவின்னுந்தயையிலாதிருந்தனையென்னே
பொன்னிலைப்பொதுவினடஞ்செயும்பவளப்பொருப்பினுண்மலர்ந்திடும்பூவே
கொன்னிலைவேல்கைக்கொளுந்திருத்தணிகைக்குன்றமர்ந்திடுங்குணக்குன்றே.

பாடிநின்றிருச்சீர்புகழ்ந்திடாக்கொடியபதகர்பானாடொறுஞ்சென்றே
வாடிநின்றேங்குமேழையேனெஞ்சவாட்டமிங்கறிந்திலையென்னே
யாடிநீறாடியருள்செயும்பரமனகமகிழரும்பெறன்மருந்தே
கோடிலங்குயர்வானணிதிருத்தணிகைக்குன்றமர்ந்திடுங்குணக்குன்றே. (௯)

வன்பொடுசெருக்கும்வஞ்சாபாலலையாவண்ணமின்றருள்செயாயென்னிற்
றுன்பொடுமெலிவேனின்றிருமலர்த்தாட்டுணையன்றித்துணையொன்றுங்காணே
னன்பொடும்பரமனுமைகையிற்கொடுக்கவகமகிழ்ந்தணைக்குமாரமுதே
கொன்பெறுமிலைவேற்கரத்தொடுந்தணிகைக்குன்றமர்ந்திடுங்குணக்குன்றே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## கூடல் விழைதல்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சகமாறுடையாரடையாநெறியார்சடையாவிடையார்தனியானா
ருகமாருடையாருமையோர்புடையாருதவுமுரிமைத்திருமகனா
முகமாறுடையார்முகமாறுடையாரெனவேயெனதுமுன்வந்தா
ரகமாருடையேன்பதியாதென்றேனலைவாயென்றாரஃதென்னே. (௧)

விதுவாழ்சடையாவிடைமேல்வருவாவிதிமாலறியாவிமலனா
மதுவாழ்குழலாள்புடைவாழுடையார்மகனாகுகனாமயிலூர்வார்
முதுவாழ்வுடையாதவமேயலைவேன்முன்வந்திடயானறியாதே
புதுவாழ்வுடையாரெனவேமதிபோய்நின்றேனந்தோபொல்லேனே. (௨)

காயோடேனாய்க்கனல்கையேந்திககாடேயிடமாக்கணங்கொண்ட
பேயோடாடிப்பலிதேர்தருமோபிததப்பெருமான்றிருமகனார்
தாயோடுறழுந்தணிகாசலனார்தகைசேர்மயிலார்தனிவேலார்
வேயோடுறழ்தோட்பாவையாமுனமென்வெள்வளைகொண்டார்வினவாமே. (௩)

பொன்னாபுயனார்புகழும்புகழார்புலியின்னதளார்புயநாலார்
தென்னாசடையார்கொடிமேல்விடையாசிவனாருமைதிருமகனா
ரென்னாயகனாரென்னுயிர்போல்வாரெழின்மாமயிலாரிமையோரக
டந்நாயகனார்தணிகாசலனார்தணிவந்திவண்மாறந்தாரே. (௪)

கல்லாலடியாகல்லடியுண்டார்கண்டாருலகங்களைவேதஞ்
செல்லாநெறியார்செல்லுறுமுடியாசிவனாருமைத்திருமகனா
ரெல்லாமுடையார்தணிகாசலனாரென்னாயகனாரியல்வேலார்
நல்லாரிடையென்வெள்வளைகொடுபின்னணார்மயின்மேனடந்தாரே. (௫)

காரூர்சடையார்கனலாமழுவாகலவாபுரமூன்றெரிசெய்தா
ராரூருடையார்பலிதேர்நதிடுமெமமரனாருமைத்திருமகனார்
போரூருறைவார்தணிகாசலனார்புதியாரெனவென்முனம்வந்தா
ரேரூரெமதூரினில்வாவென்றாரெளியேனேமாந்திருந்தேனே. (௬)

கண்ணார்நுதலார்விடமார்களனார்கரமார்மழுவார்களைகண்ணார்
பெண்ணாபுயனாரயன்மாற்கரியார்பெரியார்கைலைப்பெருமானார்
தண்ணாசடையார்தருமாமகனார்தணிகாசலனார்தனிவேலா
ரெண்ணாரெளியாளிவளென்றெனையானெனசெயகேனோவிடர்கொண்டே. (௭)

மழுவார்தருகைபபெருமானமகனாமயில்வாகனனாரயில்வேலார்
தழுவாவினையைததணியாரணியார்தணிகாசலனார்தம்பாதந்
தொழுவாரழுவார்விழுவாரெழுவார்துதியாநிற்பாரவர்நிற்க
புழுவாருடலோம்பிடுமென்முனர்வந்தருடநதருளிப்போனாரே. (௮)

நிருத்தம்பயின்றாகடனஞ்சயின்றார்நினைவார்தங்கணெறிககேற்க
வருததம்பகர்வாரருமைப்புதல்வராறுமாமுகனாரயில்வேலார்
திருததம்பெறுவார்புகழுந்தணிகைததிருமாமலையாரொருமாதின்
வருத்தம்பாரார்வளையுந்தாரார்வாராரவர்தம்மனமென்னே. (௯)

பிரமன்றலையிற்பலிகொண்டெருதிற்பெயரும்பிச்சைப்பெருமானார்
திரமன்றினிலேநடனமபுரிவார்சிவனார்மகனார்திறல்வேலார்
தரமன்றலைவான்பொழில்சாரெழில்சேர்தணிகாசலனார்தமியேன்முன்
வரமனறவுமால்கொளநின்றனனான்மடவாரலரான்மனநொந்தே. (௰)

திருச்சிற்றம்பலம்.

# தரிசனவேட்கை.

௯.

குரு

அ, எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வேல்கொளுங்கமலக்கையனையெனையாண்மெய்யனையையனையுலக
மால்கொளுமனத்தரறிவருமருந்தைமாணிக்கமணியினைமயின்மேற்
கால்கொளுங்குகனையெந்தையையெனதுகருத்தனையயனரியறியாச
சால்கொளுங்கடவுட்டனியருண்மகனைத்தணிகையிற்கண்டிறைஞ்சுவனே. (௧)

கண்ணனையயனைவிண்ணவர்கோனைக்காக்கவைத்திட்டவேற்கரனைப்
பண்ணனையடியர்பாடலுக்கருளும்பதியினைமதிகொடண்ணருளாம்
வண்ணனையெல்லாவண்ணமுமுடையவரதனீன்றெடுத்தருண்மகனைத்
தண்ணனையெனதுகண்ணனையவனைத்தணிகையிற்கண்டிறைஞ்சுவனே. (௨)

என்னுடையுயிராயானபெறும்பேற்றையென்னுடைப்பொருளினையெளியேன்
மன்னுடைக்குருவின்வடிவினையெனகண்மணியினையணியினைவரதத்தே
மின்னுடைப்பவளவெற்பினிலுதித்துமிளிரருட்டருவினையடியேன
றன்னுடைத்தேவைத்தந்தையைத்தாயைத்தணிகையிற்கண்டிறைஞ்சுவனே.

பரங்கிரியமருங்கற்பகத்தருவைப்பராபரஞ்சுடரினையெளியேற்
கிரங்கிவந்தருளுமேரகத்திறையையெண்ணுதற்கரியபேரின்பை
யுரங்கிளர்வானோர்க்கொருதனிமுதலையொப்பிலாதோங்கியவொன்றைத்
தரங்கிளரருணகிரிக்கருள்பவனைத்தணிகையிற்கண்டிறைஞ்சுவனே. (௪)

அரும்பெறன்மணியையமுதினையன்பரன்பினுக்கெளிவருமரசை
விரும்புமாதவத்தோருள்ளகத்தொளிரும்விளக்கினையளக்கரும்பொருளைக்
கரும்பினையென்னுட்கனிந்திடுங்கனியைமுனிந்திடாதருளருட்கடலைத்
தரும்பரசிவத்துட்கிளர்ந்தொளிரொளியைத்தணிகையிற்கண்டிறைஞ்சுவனே.

மாரனையெரித்தோன்மகிழ்திருமகனைவாகையம்புயத்தனைவடிவேற
றீரனையழியாச்சீரனைஞானச்செல்வனைவல்வினைநெஞ்சச்
சூரனைத்தடிந்தவீரனையழியாச்சுகத்தனைத்தேன்றுளிகடப்பந்
தாரனைக்குகனெனப்பேருடையவனைத்தணிகையிற்கண்டிறைஞ்சுவனே. (௬)

வேதனைச்சிறைக்குள்வேதனைபடச்செயவிமலனையமலனையற்பர்
போதனைக்கடங்காப்போதனையைந்தாம்பூதனைமாதவர்புகழும்
பாதனையுமையாள்பாலனையெங்கள்பரமனைமகிழ்விக்கும்பரனைத்
தாதனையுயிர்க்குளுயிரனையவனைத்தணிகையிற்கண்டிறைஞ்சுவனே. (௭)

குழகனையழியாக்குமரனையட்டகுணத்தனைக்குறித்திடலரிதா
மழகனைச்செந்திலப்பனைமலைதோறாடல்வாழண்ணலைத்தேவர்
கழகனைத்தண்டைக்காலனைப்பிணிக்கோர்காலனைவேலனைமனத்திற்
சழக்கிலார்க்கருளுஞ்சாமிநாதனைத்தென்றணிகையிற்கண்டிறைஞ்சுவனே. (௮)

முத்தனைமுத்திக்கொருதனிவித்தைமுதல்வனைமுருகனைமுக்கட்
பித்தனையத்தனெனக்கொளுஞ்செல்வப்பிள்ளையைப்பெரியவருளஞ்சேர்
சுத்தனைப்பதிவலைப்படுமவனைத்துரியனைத்துரியமுங்கடந்த
சத்தனைநித்தநின்மலச்சுடரைத்தணிகையிற்கண்டிறைஞ்சுவனே. (௯)

வள்ளயிறகரங்கொள்வள்ளலையிரவில்வள்ளிநாயகிதனைக்கவர்ந்த
கள்ளனையடியருள்ளகத்தவனைக்கருத்தனைக்கருதுமானந்த
வெள்ளநின்றாடவருள்குருபரனைவிருப்புறுபொருப்பனைவினையைத்
தள்ளவந்தருள்செய்திடுந்தயாநிதியைத்தணிகையிற்கண்டிறைஞ்சுவனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# நாளெண்ணிவருந்தல்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இன்னுமெத்தனைநாட்செல்லுமேழையேனிடர்க்கடல்விடுத்தேற
மின்னும்வேற்படைமிளிர்தருங்கைத்தலவித்தகப்பெருமானே
துன்னுநற்றணிகாசலத்தமர்ந்தருடோன்றலேமயிலேறி
மன்னுமுத்தமவள்ளனின்றிருமனக்கருத்தறியேனே. (௧)

ஏறிலாதநின்னருள்பெறவெனக்கினுமெத்தனைநாட்செல்லும்
மாறிலாதவர்மனத்தொளிர்சோதியேமயின்மிசைவரும்வாழ்வே
தூறிலாவளச்சோலைசூழ்தணிகைவாழ்சுத்தசின்மயத்தேவே
யூறிலாப்பெருநிலையவானந்தமேயொப்பிலானருட்பேறே. (௨)

கூழைமாமுகிலனையவர்முலைத்தலைக்குளித்துழன்றலைகின்ற
வேழைநெஞ்சினேனெத்தனைநாட்செல்லுமிடர்க்கடல்விடுத்தேற
மாழைமேனியனவழுத்துமாணிக்கமேவாழ்த்துவாயவாபொல்லா
வூழைநீக்கிநல்லருடருநந்தெய்வமேயுத்தமச்சுகவாழ்வே. (௩)

ஐயவின்னுநானெத்தனைநாட்செலுமல்லல்விட்டருண்மேவத்
துய்யநன்னெறிமன்னியவடியர்தந்துயர்தவிர்த்தருள்வோனே
வெய்யநெஞ்சினரெட்டொணுமெய்யனேவேல்கொளுங்கரத்தோனே
செய்யமேனியஞ்சிவபிரான்பெற்றநற்செல்வனேதிறலோனே. (௪)

பாவியேனின்னுமெத்தனைநாட்செலும்பருவரல்விடுத்துய்யக்
கூவியேயன்பர்க்கருடரும்வள்ளலேகுணப்பெருங்குன்றேயென்
னாவியேயெனையாள்குருவடிவமேயானந்தப்பெருவாழ்வே
வாவியேர்தருந்தணிகைமாமலைமிசைமன்னியவருட்டேனே. (௫)

எளியனேனின்னுமெத்தனைநாட்செலுமிடர்க்கடல்விடுத்தேற
வொளியனேகமாய்த்திரண்டிடுஞ்சிற்பரவுருவமேவுருவில்லா
வெளியதாகியவத்துவேமுத்தியின்மெய்ப்பயன்றருவித்தே
யளியதாகியநெஞ்சினர்க்கருடருமாறுமாமுகத்தேவே. (௬)

தொண்டனேனின்னுமெத்தனைநாட்செலுந்துயாக்கடல்விடுத்தேற
வண்டனேயண்டர்க்கருடரும்பரசிவனருளியபெருவாழ்வே
கண்டனேகர்வந்தனைசெயுஞ்சூரனைக்களைந்தருள்களைகண்ணே
விண்டனேர்புகுஞ்சிகரிசூழ்தணிகையில்விளங்கியவேலோனே. (௭)

வீணனேனின்னுமெத்தனைநாட்செல்லும்வெந்துயாக்கடனீந்தக்
காணவானவாக்கரும்பெருந்தலைவனேகருணையங்கண்ணனே
தூணனேர்புயச்சுந்தரவடிவனேதுளக்கிலார்க்கருளீயு
மேணனேயெனையேன்றுகொடேசிகவிறைவனேயயலோனே. (௮)

கடையனேனின்னுமெத்தனைநாட்செலுங்கடுந்துயர்க்கடனீந்த
விடையினேறியசிவபிரான்பெற்றருள்வியனிருமகப்பேறே
யுடையநாயகிக்கொருபெருஞ்செல்வமேயுலகெலாமளிப்போனே
யடையநின்றவர்க்கருள்செயுந்தணிகைவாழானந்தத்தெளிதேனே. (௯)

பேயனேனின்னுமெத்தனைநாட்செலும்பெருந்துயர்க்கடனீந்த
மாயனேமுதல்வானவாதமக்கருண்மணிமிடற்றிறையோற்குச்
சேயனேயகந்தெளிந்தவர்க்கினியனேசெல்வனேயெனைக்காக்குந்
தாயனேயெனறனசற்குருநாதனேதணிகைமாமலையானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# ஏத்தாப்பிறவியிழிவு.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கல்லையொத்தவென்னெஞ்சினையுருக்கேன்கடவுணின்னடிகண்டிடவிழையே
னல்லையொத்தகோதையாக்குளங்குழைவேனன்பிலாரொடமர்ந்தவமுழல்வேன்
றில்லையப்பனென்றுலகெடுத்தேத்துஞ்சிவபிரான்றருஞ்செல்வநின்றணிகை
யெல்லையுற்றனையேத்திநின்றுடேனென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௧)

மையனெஞ்சினேன்மதிசிறிதில்லேன்மாதரார்முலைமலையிவர்ந்துருள்வே
னையநின்றிருவடித்துணைமறவாவன்பாதங்களையடுத்துளமகிழே
னுய்யநின்றிருத்தணிகையையடையேனுடையநாயகனுதவியபேறே
யெய்யவிவ்வெறும்வாழ்க்கையிலுழல்வேனென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௨)

புலையமாதர்தம்போகத்தைவிழைந்தேன்புன்மையாவைகரும்புகலிடமானே
னிலையமாந்திருத்தணிகையையடையேனிருத்தனீன்றருணின்மலக்கொழுந்தே
விலையிலாதநின்றிருவருள்விழையேன்வீணாதங்களைவிரும்பிநின்றலைந்தே
னிலையெனுந்தணுவளவுமொன்றீயேனென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௩)

மருட்டுமங்கையர்புழுக்குழியாழ்ந்துவருந்திநாடொறுமனமிளைக்கின்றேன்
றெருட்டுநின்றிருத்தணிகையையடையேன்சிவபிரான்பெற்றசெல்வமேநினது
வருட்டிறத்தினைநினைந்துநெக்குருகியழுதுகண்கணீரார்ந்திடநில்லே
னிருட்டுவாழ்க்கையிலிடறிவீழ்கின்றேனென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௪)

நச்சிலேபழகியகருங்கண்ணார்நலத்தைவேட்டுநற்புலத்தினையிழந்தேன்
பிச்சிலேமிகமயங்கியமனத்தேன்பேதையேன்கொடும்பேயனேன்பொய்யேன்
*சச்சிலேசிவனளித்திடுமணியேதங்கமேயுன்றன்றணிகையைவிழையே
னெச்சிலேவிழைந்திடருறுகின்றேனென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௫)

மின்னையன்னநுண்ணிடையிளமடவார்வெய்யநீர்க்குழிவிழுந்திளைத்துழன்றேன்
புன்னையஞ்சடைமுன்னவனளித்தபொன்னையன்னநின்பூங்கழல்புகழே
னன்னையென்னநல்லருடருந்தணிகையடைந்துநின்றுநெஞ்சகமகிழ்ந்தாடே
னென்னையென்னையிங்கெனசெயலன்றோவென்செய்வான்பிறந்தேனெளியேனே.

பட்டிமாடெனத்திரிதருமடவார்பாழ்ங்குழிகளுள்வீழ்ந்தாழ்ந்திளைக்கின்றேன்
றட்டிலாப்புகழ்த்தணிகையையடையேன்சம்புவென்னுமோர்தருவொளிர்கனியே
யொட்டிலேனினையுளத்திடைநினையேனுதவுறாதுநச்சுறுமரமானே
னெட்டியெனமுனமினிப்புறுமந்தோவென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௭)

ஓங்கிநீண்டவாளுறழ்கருங்கண்ணாருவர்ப்புக்கேணியிலுழைத்தகமிளைத்தேன்
வீங்கிநீண்டதோரொதியெனநின்றேன்விழலுக்கேயிறைத்தலைந்தனன்வீணே
தாங்கினேனுடற்சுமைதனைச்சிவஞானநயநின்றிருத்தணிகையையடையே
னேங்கினேன்சுழற்படுந்துரும்பெனவேயென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௮)

பண்ணளாவியமொழியினான்மயக்கும்படிற்றுமங்கையர்பால்விழைவுற்றேன்
றண்ணளாவியசோலைசூழ்தணிகைத்தடத்தளாவியதருமநற்றேவே
பெண்ணளாவியபுடையுடைப்பெருமான்பெற்றசெல்வமேயற்றவர்க்கமுதே
யெண்ணளாவியவஞ்சகநெஞ்சோடென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௯)

கானறுவளகத்தியரளக்கர்காமத்தாழ்ந்தகங்கலங்குறநின்றேன்
வானமேவுறும்பொழிற்றிருத்தணிகைமலையைநாடிநின்மலர்ப்பதம்புகழேன்
ஞானநாயகியொருபுடையமர்ந்தநம்பனார்க்கொருநற்றவப்பேறே
யீனனாகியிங்கிடர்ப்படுகின்றேனென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

* வித்து. விச்சு. என்றாற்போல, சத்து, சச்சு எனப்போலியாயிற்று.

# பவனிச்செருக்கு.

கலிவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

பூவுண்டவெள்விடையேறியபுனிதன்றருமகனார்
பாவுண்டதோரமுதன்னவாபசுமாமயின்மேல்வந்
தாவுண்டனரெனதின்னலமறியாரெனவிருந்தா
ளுவுண்டவர்திருமுன்பிதுநலமன்றுமக்கெனவே. (௧)

ஒன்றார்புரமெரிசெய்தவரொற்றித்திருநகரார்
மன்றார்நடம்முடையார்தருமகனார்பசுமயின்மே
னின்றாரதுகண்டேனகலைநில்லாதுகழன்ற
தென்றாரொடுசொல்வேனெனையானேமறந்தேனே. (௨)

வாரார்முலையுமையாடிருமணவாளாதம்மகனா
ராராவமுதனையாருயிரனையாரயிலவனா
நேரார்பணிமயிலின்மிசைநின்றாரதுகண்டே
னீரார்விழியிமைநீங்கினநிறைநீங்கியதன்றே. (௩)

ஒன்றேடிரண்டெனுங்கண்ணினருதவுந்திருமகனா
ரென்றேடிகலெழிலாமயிலேறியங்குற்றார்
நன்றேடினமகிழ்கூர்ந்தவாநகைமாமுகங்கண்டேன
கன்றேடினபசுவாடினகலையூடினவன்றே. (௪)

மலைவாங்குவிலரனார்திருமகனார்பசுமயிலி
னிலைதாங்குறநின்றாரவர்நிற்குந்நிலைகண்டே
னலைதீங்கினகுழறாங்கினவகமேங்கினவரைமேற்
கலைநீங்கினமுலைவீங்கினகளியோங்கினவன்றே. (௫)

மான்கண்டகையுடையார்தருமகனார்தமைமயின்மே
னான்கண்டனனவர்கண்டனர்நகைகொண்டனமுடனே
மீன்கண்டனவிழியாரதுபழியாகவிளைத்தா
ரேன்கண்டனையென்றாளையென்னென்றுரைக்கேனே. (௬)

செங்கண்விடைதனிலேறியசிவனார்திருமகனா
ரெங்கண்மணியனையார்மயிலின்மீதுவந்திட்டா
ரங்கண்மிகமகிழ்வோடுசென்றவர்நின்றதுகண்டே
னிங்கண்வளையிழந்தேன்மயலுழந்தேன்கலையெனவே. (௭)

தண்டேன்பொழிபிதழிப்பொலிசடையார்தருமகனார்
பண்டேன்புரிதொடையார்தமைப்பசுமாமயின்மீதிற்
கண்டேன்வளைகாணேன்கலைகாணேன்மிகுகாமங்
கொண்டேன்றுயில்விண்டேனென்றுகூறேன்வருமாறே. (௮)

மாவீழ்ந்திடுவிடையார்திருமகனார்பசுமயின்மே
னீவீழ்ந்திடனின்றாதுகண்டேனென்றனெஞ்சே
பூவீழ்ந்ததுவண்டேமதிபோயவீழ்ந்ததுவண்டே
நாவீழ்ந்ததுமலரேகழைநாணவீழ்ந்ததுமலரே. (௯)

வெற்றார்புரமெரித்தார்தருமேலார்மயின்மேலே
யுற்றாரவரெழின்மாமுகத்துள்ளேநகைகண்டேன்
பொற்றாபுயங்கண்டேனறுயாவிண்டேனெனைப்போல
மற்றாபெறுவாரோவினிவாழ்வேன்மனமகிழ்ந்தே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# திருவருள்விலாசப்பத்து.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆறுமுகப்பெருங்கருணைக்கடலேதெய்வயானைமகிழ்மணிக்குன்றேயரசேமுக்கட்,
பேறுமுகப்பெருஞ்சுடர்க்குட்சுடரேசெவ்வேல்பிடித்தருளும்பெருந்தகையேபிரமஞா
னம், வீறுமுகப்பெருங்குணத்தோரிதயத்தோங்கும்விளக்கமேயானந்தவெள்ளமேமு
ன், றேறுமுகப்பெரியவருட்குருவாயென்னைச்சிறுகாலையாட்கொண்டதேவதேவே.

கண்ணிமதிபுனைந்தசடைக்கனியேமுக்கட்கரும்பேயென்கண்ணேமெய்க்கருணை
வாழ்வே, புண்ணியநன்னிலையுடையோருளத்தில்வாய்க்கும்புத்தமுதேயானந்தபோக
மேசீ, ரெண்ணியமெய்த்தவர்க்கெல்லாமெளிதிலீந்தவென்னரசேயாறுமுகத்திறையா
ம்வித்தே, திண்ணியவென்மனமுருக்கிக்குருவாயென்னைச்சிறுகாலையாட்கொண்ட
தேவதேவே. (௨)

நின்னிருதாட்டுணைபிடித்தேவாழ்கின்றேனின்னையலாற்பின்னையொருநேயங்
காணே, னென்னையினித்திருவுளத்தினினைதியோநானேழையினுமேழைகண்டாயெ
ந்தாயெந்தாய், பொன்னையன்றிவிரும்பாதபுல்லர்தம்பாற்போகவொழிந்துன்பதமே
போற்றும்வண்ணஞ், சின்னமளித்தருட்குருவாயென்னைமுன்னேசிறுகாலையாட்கொ
ண்டதேவதேவே. (௩)

கல்வியெலாங்கற்பித்தாய்நின்பானேயங்காணவைத்தாயிவ்வுலகங்கானலென்றே,
யொல்லும்வகையறிவித்தாயுள்ளேநின்றென்னுடையானேநின்னருளமுதவுகின்றா, யி
ல்லையெனப்பிறர்பாற்சென்றிரவாவண்ண மேற்றமளித்தாயிரக்கமென்னேயென்னே,
செல்வவருட்குருவாகிநாயினேனைச்சிறுகாலையாட்கொண்டதேவதேவே. (௪)

எந்தைபிரானென்னிறைவனிருக்கவிங்கேயென்னகுறைநமக்கென்றேயிறுமாப்
புற்றேன், மந்தவுலகினிற்பிறரையொருகாசுக்குமதியாமனின்னடியேமதிக்கின்றேன்
யா, னிந்தவடியேனிடத்துன்றிருவுளந்தானெவ்வாறோவறிகிலேனேழையேனாற், சிந்
தைமகிழ்ந்தருட்குருவாயென்னைமுன்னேசிறுகாலையாட்கொண்டதேவதேவே. (௫)

மாருதபெருஞ்செல்வயோகர்போற்றுமாமணியேயாறுமுகமணியேநின்சீர், கூறு தபுலேவாய்மையுடையாரதம்மைக்கூடாதவண்ணமருட்குருவாய்வந்து, தேருதநிலே யெல்லாநதேற்றியோங்குஞ்சிவஞானச்சிறப்படைந்துதிகைப்புநீங்கிச், சீருதவாழ்வி டைநான்வாழவென்னேச்சிறுகாலேயாட்கொண்டதேவதேவே. (ச)

கற்றறிந்தமெய்யுணர்ச்சியுடையோருள்ளக்கமலதேயோஙகுபெருஙகடவுளேநி ன், பொற்றகைமாமலரடிச்சீர்வழுத்துகின்றபுண்ணியர்தங்குழுவிலெனேப்புகுதநியெ ன்று, முற்றவருட்சிந்தனேதந்தின்பமேவியுடையாயுன்னடியவனென்றோஙகும்வண் ணஞ்,சிற்றறிவையகற்றியருட்குருவாயென்னேச்சிறுகாலேயாட்கொண்டதேவதேவே

ஞாலமெலாம்படைத்தவனேப்படைத்தமுக்கணுயகனேவடிவேற்கைநாதனேநா ன், கோலமெலாங்கொடியேனற்குணமொன்றில்லேன்குற்றமேவிழைநதேனிக்கோது ளோனேச், சாலமெலாஞ்செயுமடவார்மயக்கினீக்கிச்சன்மார்க்கமடையவருடருவாய் ஞானச், சீலமெலாமுடையவருட்குருவாய்வந்துசிறுகாலேயாட்கொண்டதேவதேவே.

கற்பனேயேயெனுமுலகச்சழக்கிலந்தோகாலூன்றிமயங்குகின்றகடையனேனேச், சொற்பனமிவ்வுலகியற்கையென்றுநெஞ்சந்துணிவுகொளச்செயவிதுனறுனேப்பொ ற்ருளே,யற்பகலுநினேநதுகனிந்துருகிஞானவானந்தபோகமுறவருளல்வேண்டுஞ்,சிற் பரசற்குருவாய்வந்தென்னேமுன்னேசிறுகாலேயாட்கொண்டதேவதேவே. (சு)

பன்னிருகண்மலாமலர்ந்தகடலேஞானப்பாஞ்சுடரேயாறுமுகம்படைததகோவே, யென்னிருகண்மணியேயெநதாயேயெனேயீன்றேனேயென்னரசே யென்றன்வாழ் வே, மின்னிருவர்புடைவிளங்கமயின மீதேறிவிரும்புமடியாரகாணமேவுந்தேவே, செ ன்னியினின்னடிமலாவைத்தென்னேமுன்னேசிறுகாலேயாட்கொண்டதேவதேவே.

திருச்சிற்றமபலம்.

---

# திருவருட்பேற்றுவிழைவு.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

உலகம்பரவும்பரஞ்சோதியுருவாங்குருவேயும்பரிடைக்
கலகந்தருசூர்க்கிளேகளேந்தகதிர்வேலரசேகவின்றருசீாத
திலகந்திகழ்வாணுதற்பரையின்செல்வப்புதல்வாதிறலதளு
விலகுங்கலபமயிற்பரிமேலேறும்பரிசென்னியம்புகவே. (க)

புகுவானவர்தம்மிடர்முழுதும்போக்குங்கதிர்வேற்புண்ணியனே
மிகுவான்முதலாம்பூதமெலாம்விதித்தேநடத்தும்விளேவனேத்துந்
தகுவான்பொருளாமுனதருளேயென்றேலடியேன்றனேயிங்கே
நகுவான்வருவித்திருணெறிக்கேநடத்தலழகோநவிலாயே. (உ)

அழகாவமலாவருளாளாவறிவாவறிவாரகமேவுங்
குழகாகுமராவெனையாண்டகோவேநின்சீர்குறியாரைப்
பழகாவண்ணமெனக்கருளிப்பரனேநினைப்பணிகின்றோர்க்
கழகாதரவாம்பணிபுரிவாரடியார்க்கடிமையாக்குகவே. (௩)

ஆக்குந்தொழிலாற்களித்தானையடக்குந்தொழிலாலடக்கிப்பின்
காக்குந்தொழிலாலருள்புரிந்தகருணைக்கடலேகடைநோக்கா
ஞேக்குந்தொழிலோர்சிறிதுன்பாலுளதேனமாயாநொடிப்பெல்லாம்
போக்குந்தொழிலென்பாலுண்டாமிதற்கென்புரிவேன்புண்ணியனே. (௪)

புரிவேன்விரதந்தவந்தானம்புரியாதொழிவேன்புண்ணியமே
பரிவேன்பாவம்பரிவேனிப்பரிசாலொன்றும்பயன்காணேன்
றிரிவேனினதுபுகழ்பாடிச்சிறியேனிதனைத்தீர்வேனே
லெரிவேனெரிவாய்நரகத்தேயிருப்பேனிளைப்பேன்விளைப்பேனே. (௫)

விளைப்பேன்பவமேயடிச்சிறியேன்வினையால்விளையும்வினைப்போகந்
திளைப்பேனெனினுங்கதிர்வடிவேற்றேவேயென்னுந்திருமொழியா
விளைப்பேனலனிங்கியம்புகிற்பேனெனக்கென்குறையுண்டெமதூதன்
வளைப்பேனெனவந்திடிலவனைமடிப்பேன்கருணைவலத்தாலே. (௬)

வலத்தால்வடிவேற்கரத்தேந்துமணியேநின்னைவழுத்துகின்ற
நலத்தாலுயர்ந்தபெருந்தவர்பானண்ணும்பரிசுநல்கினையே
றலத்தாலுயர்ந்தவானவருந்தமியேற்கிணையோசடமான
மலத்தால்வருந்தாப்பெருவாழ்வான்மகிழ்வேனின்பம்வளர்வேனே. (௭)

இன்பப்பெருக்கேயருட்கடலேயிறையேயழியாவிரும்பொருளே
யன்பர்க்கருளும்பெருங்கருணையரசேயுணர்வாலாம்பயனே
வன்பாக்கரிதாம்பரஞ்சோதிவடிவேவடிவேன்மணியேயென்
றுன்பத்திடரைப்பொடியாக்கிச்சுகந்தந்தருளத்துணியாயே. (௮)

சுகமேயடியருளத்தோங்குஞ்சுடரேயழியாத்துணையேயென்
னகமேபுகுந்தவருட்டேவேயருமாமணியேயாரமுதே
யிகமேபரத்துமுனக்கன்றியெத்தேவருக்குமெமக்கருள
முகமேதிலையெம்பெருமானேநினக்குண்டாறுமுகமலரே. (௯)

ஆறுமுகமுந்திணிதோளீராறுங்கருணையடித்துணையும்
வீறுமயிலுந்தனிக்கடவுள்வேலுந்துணையுண்டெமக்கிங்கே
சீறும்பிணியுங்கொடுங்கோளுந்தீயவினையுஞ்செறியாவே
நாறும்பகட்டானதிகாரநடவாதுலகம்பரவுறுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# செல்வச்சீர்த்திமாலை.

இரட்டைக்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அடியார்க்கெளியரெனுமுக்கணையர்தமக்குமுலகீன்றவம்மை தனக்குந்திருவாய்
முத்தளித்துக்களிக்குமருமருந்தே, கடியார்கடப்பமலர்மலர்ந்தகருணைப்பொருப்பே
கற்பகமேகண்ணுண்மணியேயென்பாமனக்கமலம்விரிக்குங்கதிரொளியே, படியார்வளி
வான்றீமுதலைம்பகுதியாயபரம்பொருளே பகர்தற்கரியமெய்ஞ்ஞானப்பாகேயசுரப்
படைமுழுதுந், தடிவாயெனவச்சுரர்வேண்டத்தடிந்தவேற்கைத்தனிமுதலேதணிகாச
லமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே. (௧)

காயாதளிர்க்கனிந்தன்பாற்கல்லாலடிநின்றருளொழுகுங்கனியுட்சுவையேயடிய
ரமனக்கவலைபகற்றுங்கற்பகமே, யோயாதுயிர்க்குளொளிர்தெவையுமுணர்த்தியருளு
மொன்றேயெனதுள்ளக்களிப்பேயைம்பொறியு மொடுக்கும்பெரியோர்க்கோருறவே,
தேயாக்கருணைப்பாற்கடலேதெளியாவசுரர்போர்க்கடலே தெய்வப்பதியேமுதற்கதி
யேதிருச்செந்தூரிற்றிகழ்மதியே, தாயாயெனைக்காக்கவருந்தனியேபரமசற்குருவே
தணிகாசலமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே. (௨)

நாணுமயன்மாலிந்திரன்பொன்னாட்டுப்புலவர்மணம்வேட்ட நங்கைமார்கண்மங்
கலப்பொன்னாணைக்காத்தளித்தநாயகமே, சேணும்புவியும்பாதலமுந்துதித்தொழுகுஞ்
செந்தேனே செஞ்சொற்சுவையேபொருட்சுவையேசிவன்கைப்பொருளேசெங்கழுநீர்
ப், பூணுந்தடந்தோட்பெருந்தகையேபொய்யரறியாப்புண்ணியமேபோகங்கடந்தயோ
கியர்முப்போகம்விளைக்கும்பொற்புலமே, தாணுவெனவுலகமெலாந்தாங்குந்தலைமை
த்தயாநிதியேதணிகாசலமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே. (௩)

முன்னைப்பொருட்குமுதற்பொருளேமுடியாதோங்குமுதுமறையே முக்கட்கரு
ம்பீன்றெடுத்தமுழுமுத்தேமுதிர்ந்தமுக்கனியே,பொன்னைப்புயங்கொண்டவன்போ
ற்றும்பொன்னேபுனிதபூரணமே போதமணக்கும்புதுமலரேபுலவரெவரும்புகும்பதி
யே, மின்னைப்பொருவுமுலகமயல்வெறுத்தோருள்ளவிளக்கொளியேமேலுங்கீழுநடுவு
மெனவிளங்கிநிறைந்தமெய்த்தேவே, தன்னைப்பொருவுஞ்சிவயோகந்தன்னையுடை
யோர்தமப்பயனேதணிகாசலமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே. (௪)

பித்தப்பெருமான்சிவபெருமான்பெரியபெருமான்றனக்கருமைப் பிள்ளைப்பெரு
மானென்னப்புலவர்பேசிக்களிக்கும்பெருவாழ்வே,மத்தப்பெருமானீக்குமொருமருந்தே
யெல்லாம்வல்லோனேவஞ்சச்சமணவல்லிருளைமாய்க்குஞானமணிச்சுடரே, யத்தக்கம
லத்தயிற்படைகொளரசேமூவர்க்கருள்செய்தே யாக்கலளித்தலழித்தலெனுமம்முத்
தொழிலுந்தருவோனே, சத்தவுலகசராசரமுந்தாளிலொடுக்குந்தனிப்பொருளேதணி
காசலமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே. (௫)

ஏதமகற்றுமென்னரசேயென்னுருயிரேயென்னறிவே யென்கணொளியேயென பொருளேயெனசற்குருவேயென்ருயே, காதமணக்குமலர்க்கடப்பங்கண்ணிப்புயனே காங்கெயனேகருணைக்கடலேபனனிருகட்கரும்பேயிருவர்காதலனே, சீதமதியைமுடித்தசடைச்சிவனாசெல்வத்திருமகனே திருமாலுடனான்முகன்மகவான்றேடிப்பணியுஞ்சீமானே, சாதல்பிறத்தறவிர்த்தருளுஞ்சரணம்புயனேசத்தியனேதணிகாசலமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே. (௬)

வன்பிற்பொதிந்தமனத்தினர்பால்வருந்தியுழல்வேனல்லாலுன் மலர்த்தாணினையேனென்னேயிம்மதியிலேனுமுய்வேனே, வனபிற்கிரங்கிவிடமுண்டோனருமைமகனேயாராமுதே யகிலம்படைத்தோன்காத்தோனினறழித்தோனேத்தவளித்தோனே, துனபிறகிடனும்வன்பிறப்பைத்தொலைக்குந்துணையேசுகோதயமே தோகைமயின்மேற்றோன்றுபெருஞ்சுடரேயிடராற்சோரவுற்றே, தன்பிற்படுமெச்சுரராவிதரிக்கவேலைத்தரித்தோனேதணிகாசலமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே (எ)

மாலுமயனுமுருத்திரனும்வானத்தவருமானிடரு மாவும்புள்ளுமூர்வனவுமலையுங்கடலும்மற்றவையும், மாலுங்கதியுஞ்சதகோடியண்டப்பரப்புந்தானுகவனறோவடிவமேருவிற்கொண்டருளுந்தூயவற்புதமே, வேலுமயிலுங்கொண்டொருவாய்விளையாட்டியற்றும் வித்தகமேவேதப்பொருளேமதிச்சடைசேர்விமலனறனகோமெய்ப்பொருளே, சாலுஞ்சுகுணத்திருமலையேதவத்தோர்புகழுந்தற்பரனேதணிகாசலமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே. (அ)

ஏதநிறைத்தவிவ்வுலகத்தியல்பின்வாழ்க்கையிடத்தெளியே னெண்ணியடங்காப்பெருந்துயர்கொண்டெந்தாயந்தோவிளைகின்றேன், வேதநிறைத்துநின்கமலமென்றாட்டுணையேதுணையல்லால் வேறொன்றறியேனஃதறிந்திவ்விளையேற்கருளவேண்டாவோ, போதநிறைந்துஞ்சற்குருவேபுனிதஞானத்தறிவுருவேபொய்யரறியாப்பரவெளியேபுரமூன்றெரித்தோனருமொளியே, சாதனிறைத்துமவருள்ளத்தலந்தாணிறைந்தநந்தயாநிதியேதணிகாசலமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே. (௯)

முருகாவெனநினறேத்தாதமூடரிடம்போய்மதிமயங்கிமுன்னுமடவார்முலைமுகட்டினமுயங்கியலைந்தேனினைமறந்தே, னுருகாவஞ்சமனத்தேனையுருத்தீர்த்தியமனொருபாசத்துடலநடுங்கவிசிக்கிலவற்குறைப்பதறியேனுத்தமனே, பருகாதுள்ளத்தினித்திருக்கும்பாலேதேனேபகரருட்செம் பாகேதோகைமயிலடத்தும்பரமேயாவும்படைத்தோனே, தருகாதலித்தோனமுடிகொடுத்ததருமத்துரையேதற்பரனேதணிகாசலமாந்தலத்தமர்ந்தசைவமணியேசண்முகனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# செவியறிவுறுத்தல்.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உலகியற்கஞ்சுரத்துழன்றுநாடொறு
மலகில்வெந்துயர்கிளைத்தழுங்குநெஞ்சமே
யிலகுசிற்பரகுகவென்றுநீநிடிற்
கலகமில்லின்பமாங்கதிகிடைக்குமே. (௧)

மருளுறுமுலகிலாம்வாழ்க்கைவேண்டியே
யிருளுறுதுயாக்கடலிழியுநெஞ்சமே
தெருளுறுநீற்றினைச்சிவவென்றுட்கொளி
லருளுறுவாழ்க்கையிலமர்தலுண்மையே. (௨)

வல்வினைப்பகுதியான்மயங்கிவஞ்சர்தங்
கொல்வினைக்குழியிடைக்குதிகுநெஞ்சமே
யில்வினைச்சண்முகவென்றுநீறிடி
னல்வினைபழுக்குமோநாடுவாய்கருமே (௩)

கடும்புலைக்கருத்தர்தங்கருத்தின்வண்ணமே
விடும்புனலெனத்துயர்விளைகுநெஞ்சமே
யிடும்புகழ்ச்சண்முகவென்றுநீறிடி
னடுங்குமச்சந்நினைநணற்கென்றுமே. (௪)

அன்பிலாவஞ்சாதம்மவலச்சூழலி
லென்பிலாப்புழுவெனவிரஙகுநெஞ்சமே
யின்புருசசண்முகவென்றுநீறிடிற
றுன்புறுத்தனிககதிச்சூழல்வாயகருமே. (௫)

செறிவிலாவஞசகச்செல்வர்வாயிலி
லறிவிலாதுழலுமென்னவலநெஞ்சமே
யெறிவிலாச்சண்முகவெனறுநீறிடின்
மறிவிலாச்சிவகதிவாயில்வாயக்குமே. (௬)

மறிதருகண்ணிஞர்மயககத்தாழ்ந்துவீண்
வெறியொடுமலைந்திடர்விளைகுநெஞசமே
நெறிசிவசண்முகவெனறுநீறிடின்
முறிகொளீஇநினறவுன்மூடந்தீருமே. (௭)

காயமாஙகானலைக்கருதிநாடொறு
மாயமாங்கானிடைவருந்துநெஞ்சமே
நேயமாஞ்சண்முகவென்றுநீறிடிற்
றேயமாம்பெருமபிணித்துன்பநீங்குமே. (௮)

சதிசெயுமஙகையர்தமதுகணவலை
மதிகெடவழுநதியேவணஙகுநெஞ்சமே
நிதிசிவசண்முகவென்றுநீறிடில்
வதிதருமுலகிலுன்வருததநதீருமே. (௯)

பசையறுவஞசகாபாற்சென்றேங்கியே
வசைபெறநாடொறும்வருந்துநெஞ்சமே
யிசைசிவசண்முகவென்றுநீறிடிற்
றிசைபெறமதிபபருஞ்சிறுமைநீங்குமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# தேவவாசிரியம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

யாரையுங்கடவிழியினான்மயக்குறுமேந்திழையவர்வெந்நீர்த்
தாரைதனையுமவிரும்பிவீழ்த்தாழ்ந்தவென்றனக்கருளுண்டேயோ
காரைமுட்டியப்புறஞ்செலுஞ்செஞ்சுடர்க்கதிரவனிவராழித்
தேரையெட்டுறும்பொழில்செறிதணிகையிற்றேவாகடொழுந்தேவே. (௧)

மறிக்கும்வேற்கணார்மலக்குழியாழ்ந்துழல்வன்றசையறுமென்பைக்
கறிகருநாயினுங்கடையனாய்க்குன்றிருக்கருணையுமுண்டேயோ
குறிகும்வேய்மணிகளைககதிரிரதவானகுதிரையைப்புடைதடெங்குந
தெறிகருநல்வளஞ்செறிதிருத்தணிகையிற்றேவர்கடொழுநதேவே. (௨)

பிரியமேயவன்மடந்தையர்தங்களைப்பிடித்தலைததிவெஞ்சக்
கரியபேயினும்பெரியபேயகுந்திருக்கருணையுமுண்டேயோ
வரியமாலயனிந்திரன்முதலினோமருலகறிந்தப்பாற்
றெரியவோங்கியசிகிரிசூழதணிகையிறறேவர்கடொழுந்தேவே. (௩)

திருச்சிற்றம்பலம்.

# இங்கிதப்பத்து.



க லி நி லை வ ண் ண த் து றை.

திருச்சிற்றம்பலம்.

சீர்வளர்குவளைத்தார்வளர்புயனார்சிவனார்தம்
பேர்வளர்மகனாகார்வளர்தணிகைப்பெருமானா
ரேர்வளர்மயின்மேலூர்வளர்நியமத்திடைவந்தால்
வார்வளர்முலையாரார்வளர்கில்லார்மயலம்மா. (௧)

மந்தாரஞ்சேர்பைம்பொழிலின்கண்மயிலேறி
வந்தாரந்தோகண்டனனங்கைவளைகாணேன்
சந்தாரஞ்சூழ்தண்கிளர்சாரற்றணிகேசர்
தந்தாரென்பாற்றந்தாரென்னைத்தந்தாரே (௨)

நதியும்மதியும்பொதியுஞ்சடையார்நவின்மாலும்
விதியுந்துதியைம்முகனார்மகனார்மிகுசீருந்
நிதியும்பதியுங்கதியுந்தருவார்நெடுவேலார்
வதியும்மயின்மேல்வருவார்மலரேவருமாறே. (௩)

சந்தார்வரையுட்சிந்தாமணிநேர்தணிகேசர்
மந்தாநிலமேவுந்தார்மறுகின்மயிலேறி
வந்தார்நிலவோவாசெந்தாமரையின்மலர்வாசக்
கொந்தாகுழலெனனிலையுங்கலையுங்கொண்டாரே. (ச)

தந்தேநயமாமாதவர்புகழுந்தணிகேசர்
சந்தேனெழிவாயந்தேன்மொழியாய்தனியின்று
வந்தேனினிமேல்வாரேனென்றார்மனமாழ்கி
நொந்தேன்முலைமீதவ்வுரையென்றானுவலென்னே. (ரு)

தண்டணிகாந்தளோர்சண்பகமலரிற்றளர்வெய்தத்
தெண்டணிநீலமோர்செங்குவளையினிற்றிகழ்வென்பால்
வண்டணிகேசரும்வந்தருள்வாரோவாராரோ
தொண்டணிவீரொருசோதிடமேனுஞ்சொல்லீரே. (சு)

காமலர்நறவுக்கேமலர்மூவிருகாலேநீ
தேமலாதணிகைததேவர்மருங்கிற்சேர்வாயே
லாமலருடையாட்கென்பெயர்பலவாமவையுள்ளே
யோமலரடிகேளொன்றினையொன்றென்றுரையாயே. (எ)

தேடுங்கிளிநீநின்னைவிளம்பித்திருவன்று
ராடுந்தணிகையிலென்னுயிரன்னாருகேபோய்க்
கூடுந்தனமிசையெனபெயர்வைததகவோதைக்கே
யீடுங்கெடவின்றென்னையுமீந்தருளென்பாயே. (அ)

பொன்னையிருத்தும்பொன்மலரெகினப்புள்ளேநீ
யனனையிகழ்ந்தேயங்கலர்செய்வானனுாாகந
தன்னையளிகருந்தண்டணிகேசர்தம்பாற்போ
யென்னையிகழ்ந்தாளென்செயல்கொண்டாளென்பாயே. (கூ)

வதியுந்தணிகையில்வாழ்வுறுமென்கண்மணியன்னார்
மதியுந்தழல்கெடமாமயின்மிதிவண்வருவாரேற்
றிதியும்புவிபுகல்நினபெயர்நெறியைத்தெரிவிபபா
னதியுந்துணவுதவுவனங்கொடிநீநடவாயே. (க0)

மன்றோர்தணிகையினின்றீர்கதிதரவந்தீரோ
வென்றேனசைதருமின்றேன்மொழியாயானுன்பா
லின்றேசுரருலகெய்திடவநதேனென்றார்காண
குன்றேர்முலையாயென்னடியவாசொற்குறிதானே. (கக)

சேதனநந்தார்சென்றுவணங்குந்திறல்வேலார்
தாதனவண்ணத்துள்ளொளிரிகினறதணிகேசா
மாதனமுந்தாவந்தெனவந்தேவாதாதா
வாதனமென்றாரெனனடியம்மாவவர்சூதே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

# போற்றித்திருவிருத்தம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கங்கையஞ்சடைசேர்முக்கட்கரும்பருண்மணியேபோற்றி
யங்கையங்கனியேபோற்றியருட்பெருங்கடலேபோற்றி
பங்கையன்முதலோர்போற்றும்பரம்பரஞ்சுடரேபோற்றி
சங்கைதீர்த்தருளுந்தெய்வச்சரவணபவனேபோற்றி. (௧)

பணிப்பறவருளுமுக்கட்பரஞ்சுடரொளியேபோற்றி
யினிப்புறுகருணைவான்றேனெனக்கருள்புரிந்தோய்போற்றி
துனிப்பெரும்பவந்தீர்த்தென்னைச்சுகம்பெறவைத்தோய்போற்றி
தனிப்பெருந்தவமேபோற்றிசண்முகத்தரசேபோற்றி. (௨)

மணப்புதுமலரேதெய்வவான்சுவைக்கனியேபோற்றி
தணப்பறவடியர்க்கின்பந்தருமொருதருவேபோற்றி
கணப்பெருந்தலைவரேத்துங்கழற்பதத்தரசேபோற்றி
குணப்பெருங்குன்றேபோற்றிகுமரசற்குருவேபோற்றி. (௩)

தவம்பெறுமுனிவருள்ளத்தாமரையமர்ந்தோய்போற்றி
புவம்பெறுஞ்சிறியேன்றனைப்பாதுகாத்தளித்தோய்போற்றி
நவம்பெறுநிலைக்குமேலாநண்ணியநலமேபோற்றி
சிவம்பெறும்பயனேபோற்றிசெங்கதிர்வேலோய்போற்றி. (௪)

மூவடிவாகிநின்றமுழுமுதற்பரமேபோற்றி
மாவடியமர்ந்தமுக்கண்மலைதருமணியேபோற்றி
சேவடிவழுத்துந்தொண்டர்சிறுமைதீர்த்தருள்வோய்போற்றி
தூவடிவேல்கைக்கொண்டசுந்தரவடிவேபோற்றி. (௫)

விண்ணுறுசுடரேயென்னுள்விளங்கியவிளக்கேபோற்றி
கண்ணுறுமணியேயென்னைக்கலந்தநற்களிப்பேபோற்றி
பண்ணுறுபயனேயென்னைப்பணிவித்தமணியேபோற்றி
யெண்ணுறுமடியார்தங்கட்கினியதெள்ளமுதேபோற்றி. (௬)

மறையெலாம்பரவநின்றமாணிக்கமலையேபோற்றி
சிறையெலாந்தவிர்த்துவானோர்திருவுறச்செய்தோய்போற்றி
குறையெலாமறுத்தேயின்பங்கொடுத்தவென்குருவேபோற்றி
துறையெலாம்விளங்குஞானச்சோதியேபோற்றிபோற்றி. (௭)

தாருகப்பதகன்றன்னைத்தடிந்தருள்செய்தோய்போற்றி
வேருகச்சூரமாவைவீட்டியவேலோயபோற்றி
யாருகசசமயககாட்டையழிததவெஙகனலேபோற்றி
போருகததகரையூாநதபுண்ணியமூாததிபோறறி. (அ)

சிஙகமாமுகனைககொன்றதிறலுடைசசிம்புள்போறறி
துங்கவாரணததோனகொண்டதுயாதவிாததளிததோய்போற்றி
செங்கணமானமருகபோறறிசிவபிரான்செல்வபோற்றி
யெங்களாரமுதேபோறறியாவர்க்குமிறைவபோற்றி. (கூ)

முததியின்முதல்வபோற்றிமூவிருமுகத்தபோறறி
சததிவேறகாததபோற்றிசஙகரிபுதல்வபோற்றி
சிததிதநதருளுந்தேவர்சிகாமணிபோறறிபோறறி
பததியினவிளைநதவினபப்பரம்பரபோறறிபோற்றி. (க௦)

தெருளுடையோாகருவாய்ததசிவாநநததேனேபோற்றி
பொருளுடைமறையோருள்ளமபுகுந்தபுண்ணியமேபோற்றி
மருளுடைமனததினேனைவாழ்விததவாழ்வேபோற்றி
யருளுடையரசேயெஙகளறுமுகததமுதேபோற்றி. (கக)

பொயயனேன்பிழைகளெல்லாம்பொறுததிடலவேண்டும்போற்றி
கையனேனறனையின்னுங்காததிடல்வேண்டும்போற்றி
மெயயனேமெய்யருள்ளமேவியவிளைவேபோறறி
ஐயனேயப்பனேயெம்மரசனேபோற்றிபோறறி. (கஉ)

முருகநின்பாதம்போற்றிமுளரியங்கணறகன்பா
மருகநின்கழல்கள்போறறிவானவாமுதலவபோற்றி
பெருகருள்வாரிபோற்றிபெருங்குணபொருபபேபோற்றி
தருகநினகருணைபோறறிசாமிநின்னடிகளபோறறி. (கங)

கோதிலாகருணததோய்போற்றிகுகேசநின்பாதமபோற்றி
தீதிலாச்சிநதைமேவுசிவபரஞ்சோதிபோற்றி
போதிஞனமுகனுஙகாணுப்பூரணவடிவபோற்றி
யாதிநின்றுளகளபோற்றியநாதிநினனடிகள்போற்றி. (கச)

வேதமுங்கலைகளயாவும்விளம்பியபுலவபோற்றி
நாதமுங்கடநதுநின்றநாதநின்கருணைபோற்றி
போதமும்பொருளுமாகுமபுனிதநின்பாதமபோற்றி
யாதரமாகியெனனுளமர்நதவென்னரசேபோற்றி. (கரு)

திருச்சிற்றம்பலம்.

# தனித்திருத்தொடை.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

என்னிருகண்ணின்மேவுமிலங்கொளிமணியேபோற்றி
பன்னிருபடைகொண்டோங்கும்பன்னிருகரத்தோய்போற்றி
மின்னிருநங்கைமாருண்மேவியமணாளபோற்றி
நின்னிருபாதம்போற்றிநீள்வடிவேலபோற்றி. (௧)

## கலிவிருத்தம்.

மதிவளர்சடைமுடிமணிதருசுரர்முடிமணியெனகோ
பதிவளர்சரவணபவநவசிவகுருபதியெனகோ
துதிவளர்துணையடிதொழுமடியவர்பெறுதுணையெனகோ
நிதிவளர்பரசுகநிலைபெறுநெறிதருநினையானே. (௨)

## கட்டளைக்கலித்துறை.

முருகாசரணஞ்சரணமென்றுன்பதமுன்னியுள்ள
முருகாதநாயனையேற்குநின்றண்ணருளுண்டுகொலோ
வருகாதபாற்கடன்மீதேயனந்தலமர்ந்தவன்றன்
மருகாமுக்கண்ணனுணமைந்தாவெழின்மயில்வாகனனே. (௩)

## வெண்பா.

உலகம்பரவுமொருமுதல்வாதெய்வத்
திலகந்திகழிடத்துத்தேவே - யிலகுதிருப்
புள்ளிருக்கும்வேளூரப்புனிதாவடியேன்ற
னுள்ளிருக்குந்துன்பையொழி. (௪)

செக்கச்சிவந்தேதிகழொருபாற்பச்சையதா
யக்கட்பரிதிபுரத்தாரந்தோங்கு - முக்கட்
குழைக்கருமபீன்முத்துக்குமாரமணியேயென்
பிழைக்கிரங்கியாளுதியோபேசு. (௫)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருமாலைப்பணிகொண்டுகிரிகொண்டதாருகனைச்செறித்துவாகைப்
பெருமாலையணிதிணிதோட்பெருமானேயொருமான்றன்பெண்மேற்காமர்
வருமாலையுடையவர்போன்மணமாலைபுனைந்தமுழுமணியேமுக்கட்
குருமாலைப்பொருளுணர்ந்தகுமாரகுருவேபரமகுருவேபோற்றி. (௬)

தோடேந்துகடப்பமலர்த்தொடையொடுசெங்குவளைமலர்த்தொடையுமேந்து
பாடேந்துமறிஞர்தமிழ்ப்பாவொடுநாயடியேன்சொற்பாவுமேற்றுப்
பீடேந்துமிருமடவார்பெட்பொடுமோங்கவர்கண்முலைப்பெரியயானைக்
கோடேந்துமணிநெடுந்தோட்குமரகுருவேபரமகுருவேபோற்றி (௭)

நீரவேய்ந்தசடைமுடித்துத்தோலுடுத்துநீறணிந்துநிலவுங்கொன்றைத்
தாரவேய்ந்துவிடங்கலந்தகளங்காட்டிநுதலிடையோர்தழற்கண்காட்டிப்
போரவேய்ந்தமணிமன்றிலாடுகின்றபெரும்பித்தப்பெருமானீன்ற
கூரவேய்ந்தவேலணிதோட்குமரகுருவேபரமகுருவேபோற்றி. (௮)

பெண்குணத்திற்கடைப்படுமோர்பேய்க்குணங்கொணாயேன்றன்பிழைகளெல்லா
மெண்குணப்பொற்குன்றேநின்றிருவுளத்திற்சிறிதேனுமெண்ணேல்கண்டாய்
பண்குணத்திற்சிறந்திடுநின்பத்தர்தமைப்புரப்பதுபோற்பாவியேனை
வண்குணத்திற்புரத்தியிலையேனுமெனைக்கைவிடேல்வடிவேலோனே (௯)

கலிவிருத்தம்.

சத்திவேற்கரத்தநின்சரணம்போற்றிமெய்ப்
பத்தியோடருச்சனைபயிலும்பண்பிலேன்
முத்திசார்குவரெனமொழிதல்கேட்டுநற்
புத்தியோடுன்பதம்புகழ்வர்புண்ணியா (௧௦)

தேனேயமுதேசிவமேதவமேதெளிவேயெங்
கோனேகுருவேகுலமேகுணமேகுகனேயோ
வானேவெளியேயனலேபுனலேமலையேயென்
றானேயுயிரேயுணர்வேயெனதுள்ளுறைவானே (௧௧)

கட்டளைக்கலித்துறை.

ஆறுமுகங்கொண்டவையாவென்றன்பமனைந்துமின்னு
மேறுமுகங்கொண்டதல்லாலிறங்குமுகமிலையால்
வீறுமுகங்கொண்டகைவேலின்வீரம்விளங்கவென்னைச்
சீறுமுகங்கொண்டவந்தனபமோட்டச்செலுத்துகவே. (௧௨)

பண்கொண்டசண்முகத்தையாவருண்மிகும்பன்னிரண்டு
கண்கொண்டநீசற்றுங்கண்டிலையோவென்கவலைவெள்ளந்
திணைகொண்டவெட்டுத்திசைகொண்டுநீள்சத்தத்தீவுங்கொண்டு
மண்கொண்டுவிண்கொண்டுபாதாளங்கொண்டுவளர்கின்றதே (௧௩)

வன்குலஞ்சேர்கடன்மாமுதல்வேரறமாட்டிவண்மை
நன்குலஞ்சேர்விண்ணகரளித்தோய்நறுங்கண்ணியென்னை
நின்குலஞ்சேர்த்தனையின்றுவிட்டேலுளநொந்துகொண்டு
பின்குலம்பேசுகின்றோருமுண்டோவிப்பெருநிலத்தே. (௧௪)

திருச்சிற்றம்பலம்.

# தெய்வமணிமாலை.

திருச்சிற்றம்பலம்.

திருவோங்குபுண்ணியச்செயலோங்கியன்பருட்டிறலோங்குசெல்வமோங்கச், செறிவோங்கவறிவோங்கிநிறைவானவின்பந்திகழ்ந்தோங்கவருளைக்கொடுத்து, மருவோங்குசெங்கமலமலரோங்குவணமோங்கவளர்கருணைமயமோங்கியோர், வரமோங்குதெள்ளமுதவயமோங்கியானந்தவடிவாகியோங்கிஞான, உருவோங்குமுணர்வினிறைவொளியோங்கியோங்குமயிலூர்ந்தோங்கியெவ்வுயிர்க்கும், உறவோங்குநின்பதமெனுள்ளோங்கிவளமோங்கவுய்கின்றநாளெந்தநாள், தருவோங்குசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௧)

பரமேதுவினைசெயும்பயனேதுபதியேதுபசுவேதுபாசமேது, பத்தியேதடைகின்றமுத்தியேதருளேதுபாவபுண்ணியங்களேது, வரமேதுதவமேதுவிரதமேதொன்றுமிலைமனம்விரும்புணவுண்டுநல், வத்திரமணிந்துமடவாரொடிருந்துமலர்சூடிவிளையாடிமேற், கரமேவவிட்டுமுலைதொட்டுவாழ்ந்தவரொடுகலந்துமகிழ்கின்றசுகமே, கண்கண்டசுகமிதேகைகண்டபலனென்னுங்கயவரைக்கூடாதருள், தரமேவுசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே (௨)

துடியென்னுமிடையனம்பிடியென்னுநடைமுகிற்றுணையென்னும்பின்னளகஞ், சூதென்னுமுலைமலைத்துணையென்னுமலைபுனற்சுழியென்னமொழிசெய்யுநீள், வடியென்னும்விழிநிறையுமதியென்னும்வதனமெனமங்கையர்தமங்கமுற்றே, மனமென்னுமொருபூவிமயலென்னுமதுமேவிமாழ்கநான்வாழ்க்கவிதப், படியென்னுமாசையைக்கடியென்னவொருசொலிப்படியென்னவறியாதுநின், படியென்னமொழிப்படியின்னவிதத்தைநீபடியென்னுமென்செய்குவேன், தடிதுன்னுமதில்சென்னைக்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே (௩)

வள்ளலுனையுள்ளபடிவாழ்த்துகின்றோர்தமைமதித்திடுவதன்றிமற்றை, வானவரைமதியென்னின்ஞானவரையொருகனவின்மாட்டினுமறந்துமதியேன், கள்ளமறுமுள்ளமுறுநின்பதமலால்வேறுகடவுள்பதத்தையவரென், கண்ணெதிரடுத்தையநண்ணெனவளிப்பினுங்கடுவெனவெறுத்துநிற்பேன், எள்ளளவுமிம்மொழியிலேசுமொழியன்றுண்மையென்னையாண்டருள்புரிகுவாய், என்றந்தையேயென்னதுதாயேயென்னின்பமேயென்றனறிவேயென்னன்பே, தள்ளரியசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. ( )

பதிபூசைமுதலநற்கிரியையாலுமனமெனும்பசுகரணமீங்குசுத்த, பாவனையறச்சுத்தபாவனையினிற்குமெய்ப்பதியோகநிலைமையதனால், மதிபாசமற்றதனடங்கிடவடக்கவேமலைவின்மெய்ஞ்ஞானமயமாய், வரவுபோக்கற்றநிலைகூடுமெனவெனதுளேவ

துணைவந்தகுருவே, துதிவாய்மைபெறுசாந்தபதமேவுமதியமே துரிசறுசுயஞ்சோதியே, தோகைவாகனமீதிலங்கவருதோன்றலே சொல்லரியநல்லதுணையே, ததிபெறுஞ்சென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௫)

காமவுட்பகைவனுங்கோபவெங்கொடியனுங்கனலோபமுழுமூடனும், கடுமோகவீணனுங்கொடுமதமெனுந்துட்டகண்கெட்டவாங்காரியும், ஏமமறுமாச்சரியவிழலனுங்கொலையென்றியம்புபாதகனுமாமிவ், வெழுவருமிவ்வாக்குற்றவுறவானபோகளுமெனைப்பற்றிடாமலருள்வாய், சேமமிகுமாமறையினோமெனுமருட்பதத்திறனருளிமலயமுனிவன, சிந்தனையினைவந்தனையுவந்தமெய்ஞ்ஞானசிவதேசிகசிகாரத்தனமே, தாமமொளிர்சென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௬)

நிலையுறுநிராசையாமுயர்குலப்பெண்டிரொடுநிகழ்சாந்தமாம்புதல்வனும், நெறிபெறுமுதாரகுணமெனனுநற்பொருளுமருணீகுமறிவாந்துணைவனும், மலைவறுநிராங்காரநண்பனுஞ்சுத்தமுறுமனமென்னுநல்லேவலும், வருசகலகேவலமிலாதவிடமும்பெற்றுவாழ்கின்றவாழ்வருளுவாய், அலையிலாச்சிவஞானவாரியேயானந்தவமுதமேகுமுதமலரா, யணிகொள்பொற்கொடிபசுங்கொடியிருபுறம்படரந்தழகுபெறவருபொன்மலையே, தலைவர்புகழ்சென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௭)

ஒருமையுடனினதுதிருமலரடிநினைக்கின்றவுத்தமர்தமுறவுவேண்டும், உள்ளொன்றுவைத்துப்புறம்பொன்றுபேசுவாருறவுகலவாமைவேண்டும், பெருமைபெறுநினதுபுகழ்பேசவேண்டும்பொய்ம்மைபேசாதிருக்கவேண்டும், பெருநெறிபிடித்தொழுகவேண்டுமதமானபேய்பிடியாதிருக்கவேண்டும், மருவுபெண்ணாசையைமறக்கவேவேண்டுமுனைமறவாதிருக்கவேண்டும், மதிவேண்டுநின்கருணைநிதிவேண்டுநோயற்றவாழ்வினான்வாழவேண்டு, தருமமிகுசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௮)

ஈயென்றுநானொருவரிடநின்றுகேளாதவியல்புமென்னிடமொருவரீ, திடுவென்றபோதவர்க்கிலையென்றுசொல்லாமலிடுகின்றதிறமுமிறையாம், நீயென்றுமெனைவிடாநிலையுநானென்றுமுனையணிவிடாநெறியுமயலார், நிதியொன்றுநயவாதமனமுமெய்ந்நிலைநின்றுநெகிழாததிடமுமுலகிற், சீயென்றுபேயென்றுநாயென்றுபிறர்தமைத்தீங்குசொல்லாததெளிவும், திரமொன்றுவாய்மையுந்தூய்மையுந்தந்துநின்திருவடிக்காளாக்குவாய், தாயொன்றுசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௯)

கரையில்வீண்கதைகளெலாமுதிர்க்கருங்காக்கைபோறகத்துறுவார்கள்ளுண்டதீக, சந்தநாறிடவூதுதைக்காதநாறிடவுறுக்குமேபோயிருக்காதநாற, வரையில்வாய்கொடுதர்க்கவாதமிடுவோர்சிவமணங்கமழ்மலர்ப்பொன்வாய்க்கு, மவுனமிடுவோரிவர்களுடனேகூடிவழக்குநல்வழக்கெனினுநான, உரையிலவாதமையுற்றுனதுபுகழ்பேசுமவரோடுறவுபெறவருளுவா, யுயர்தெய்வயானையொடுகுறவர்மடமானுமுளுவப்புறுகுணக்குன்றமே, தரையிலுயர்சென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௧௦)

நாம்பிரமநமையன்றியாம்பிரமமவேறில்லைநன்மைதீமைகளுமில்லை, நவில்கின்ற வாகியாந்தரமிரண்டினுமொன்றாநடுநின்றதென்றவீணர், போம்பிரமநீதிகேட்போர பிரமையாகவேபோதிப்பர்சாதிப்பர்தாம, புனமைநெறிகைவிடார்தம்பிரமமவினையொன்றுபோநதிடிறபோகவிடுவார், சாமபிரமமாமிவர்கடாம்பிரமமெனுமறிவுதாமபுபாமபெனுமறிவுகாண், சததுவவகண்டபரிபூரணாகாரவுபசாந்தசிவசிற்பிரமநீ, தாம்பிரிவில்சென்னையிற்கந்தகோட்டத்துளவளர்தலமோங்குகந்தவேளே, தணமுகததுயயமணியுண முகச்சைவமணிசணமுகததெயவமணியே. (கக)

பாரகொண்டநடையிலவன்பசிகொண்டுவெந்திரப்பாமுகம்பாாத்திரங்கும், பண்புநின்றிருவடிககனபுநிறையாயுளும்பதியுநனனிதியுமுணாவும், சீாகொண்டநிறையுமுட்பொறையுமெய்ப்புகழுநோயததீமையொருசறறுமணுகாத, திறமுமெயததிடமுநல்லிடமுநின்னடியாாபுகழ்செப்புகின்றோரடைவாகாண், கூாகொணடநெட்டிலைககதிரவேலுமயிலுமொருகோழியங்கொடியுமவிண்ணோா, கோமான்றனமகளுமொருமானறன்மகளுமாலகொணடநினகோலமறவேன், தாாகொணடசென்னையிற்கந்தகோட்டத்துளவளர்தலமோங்குகந்தவேளே, தண்முகததுயயமணியுண்முகச்சைவமணிசண்முகததெய்வமணியே. (கஉ)

வன்பெருநெருப்பினைபபுன்புழுபபற்றுமோவானையொருமானறுவுமோ, வலியுளளபுலியையோரெலிசீறுமோபெரியமலையையோரீச்சிறகிறைல, துனபுறவசைககுமோவச்சிரததூணொருதுரும்பினாற்றுண்டமாமோ, சூரியனையிருள்வந்துசூழுமோகாறறினமழைதோயுமோவிலலையதுபோல், அனபுடையநின்னடியாபொனனடியையுன்னுமவரடிமலாமுடிககணிநதோாக, கவலமுறுமோகாமம்வெகுளியுறுமோமனததறபமும்விகற்பமுறுமோ, தன்புகழ்செயசென்னையிற்கநதகோட்டத்துள்வளாதலமோஙகுகநதவேளே, தண்முகததுயயமணியுணமுகச்சைவமணிசணமுகததெயவமணியே. (கங)

கானலிடைநீருமொருகட்டையிற்கள்வனுஙகாணுறுகயிற்றிலரவுங், கடிசருகிளிஞ்சிலிடைவெள்ளியுமபொனனைககதிததபிததனையினிடையும், மானலிறகண்டுளமயஙகல்போற்கற்பனையைமாயையிறகண்டுவீணே, மனையெனறுமகவெனறுமுறவென்றுநிதியென்றும்வாழ்வென்றுமானமென்று, மூனலினுடம்பெனறுமுயிரென்றுமுளமெனறுமுள்ளெனறும்வெளியென்றுமவா, றுலகெனறுமளவறுவிகாரமுறநின்றவெனையுணமையறிவிததகுருவே, தானமிகுசென்னையிறகநதகோட்டததுள்வளாதலமோங்குகந்தவேளே, தண்முகததுயயமணியுண்முகச்சைவமணிசண்முகததெய்வமணியே.

கற்றொளிகொளுணர்வினோர்வேண்டாதவிப்பெருஙகன்மவுடலிற்பருவநோ, ண்டழியுமிளமைதான்பகல்வேடமோபுரைக்கடனீாகொலோகபடமோ, உறறொளியினவெயிலிட்டமஞ்சளோவானிட்டவொருவிலோநீாககுமிழியோ, வுலையனல்பெறககாற்றுளூதுநதுருததியோவொன்றுமறியேனிதனைநான், பற்றுறுதியாக்கொண்டுவனிதையாகண்வலையினிற்பட்டுமதிகெட்டுழன்றே, பாவமேபயில்கின்றதல்லாதுநின்னடிப்பறறணுவுமுற்றறிகிலேன், சற்றையகல்சென்னையிறகநதகோட்டத்துள்வளா தலமோஙகுகநதவேளே, தணமுகததுய்யமணியுண்முகச்சைவமணிசண்முகததெயவமணியே. (கரு)

சடமாகியின்பந்தராதாகிமிகுபெருஞ்சஞ்சலாகாரமாகிச், சற்றாகிவெளிமயற்பற்றாகியோடுமிதநனமைபெறுசெல்வமந்தோ, விடமாகியொருகபடநடமாகியாற்றிடை

விரைந்துசெலும்வெள்ளமாகி, வேலையலையாகியாங்காரவலையாகிமுதிர்வேனிலுறுமேகமாகிக், கடமாயசகடமுறுகாலாகிநீடுவாய்க்காலோடுநீராகியே, கற்பிலாமகளிர்போற்பொற்பிலாதுழலுமிதுகருதாதவகையருளுவாய், தடமேவுசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே (௧௬)

உப்புறுபாண்டமெனவொன்பதுதுவாரத்துளுற்றசும்பொழுகுமுடலை, உயர்கின்றவானிடையெறிந்தகல்லென்றுமலையுற்றிழியுமருவியென்றும், வெப்புறுகாற்றிடைவிளக்கென்றுமேகமுறுமின்னென்றும்வீசுகாற்றின், மேற்பட்டபஞ்சென்றுமஞ்சென்றும்வினைதந்தவெறுமாயவேடமென்றும், கப்புறுபறவைக்குடம்பையென்றும்பொய்த்தகனவென்றுநீரிலெழுதும், கையெழுத்தென்றுமுட்கண்டுகொண்டிலாசைகைவிட்டேனென்னசெய்குவேன், தப்பற்றசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௧௭)

எந்தைநினைவாழ்த்தாதபேயர்வாய்கூழ்க்குமேக்கற்றிருக்கும்வெறுவாய், எங்கள்பெருமானுனைவணங்காதமூடர்தலையிகழ்விறகெடுக்குந்தலை, கந்தமிகுநின்மேனிகாணாதகயவர்கண்கலநீர்சொரிந்தவழுகண், கடவுணினைப்புகழ்தனைக்கேளாதவீணர்செவிகைத்திழவுகேட்குஞ்செவி, பந்தமறநினையெணாப்பாவிகணெஞ்சம்பகீரெனநடுங்குநெஞ்சம், பரமநின்றிருமுன்னர்குவியாதவஞ்சர்கைபலியேற்கநீள்கொடுங்கை, சந்தமிகுசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௧௮)

ஐயநின்சீர்பேசுசெல்வர்வாய்நல்லதெள்ளமுதுண்டுவந்ததிருவாய், அப்பநின்றிருவடிவணங்கினோர்தலைமுடியணிந்தோங்கிவாழுந்தலை, மெய்யநின்றிருமேனிகண்டபுண்ணியர்கண்கண்மிக்கவொளிமேவுகண்கள், வேலநின்புகழ்கேட்டவித்தகர்திருச்செவிவிழாச்சுபங்கேட்குஞ்செவி, துய்யநின்பதமெண்ணுமேலோர்கணெஞ்சமெய்ச்சுகரூபமானநெஞ்சம், தோன்றலுன்றிருமுன்குவித்தபெரியோர்கைகள்சுவர்ணமிடுகின்றகைகள், சையமுயர்சென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே (௧௯)

உழலுற்றவுழவுமுதலுறுதொழிலியற்றிமலமொத்தபலபொருளீட்டிவீண், உற்றவயிறுநிறையவெண்சோறடைத்திவ்வுடலையோதிபோலவளர்த்துநாளும், விழலுற்றவாழ்க்கையைவிரும்பினேனையவிவ்வெய்யவுடல்பொய்யென்கிலேன், வெளிமயக்கோமாயவிடமயக்கோவென்றுவிதிமயக்கோவறிகிலேன், கழலுறநின்றுணைக்கானமலர்வணங்கிநின்கருணையைவிழைந்துகொண்டெங், களைகணேயீராறுகண்கொண்டவென்றனிருக்கண்ணேயெனப்புகழ்கிலேன், தழைவுற்றசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே (௨௦)

வானமெங்கேயமுதபானமெங்கேயமரர்வாழ்க்கையபிமானமெங்கே, மாட்சியெங்கேயவர்கள்சூழ்ச்சியெங்கேதேவமன்னனரசாட்சியெங்கே, ஞானமெங்கேமுனிவர்மோனமெங்கேயந்நான்முகன்செய்கையெங்கே, நாரணன்காத்தலைநடத்தலெங்கேமறைநவின்றிடுமொழுக்கமெங்கே, ஈனமங்கேசெய்ததாருகனையாயிரவிலக்கமுறுசிங்

கமுகனை, யெண்ணரியதிறல்பெற்றசூரனைமறக்கருணையீந்துபணிகொண்டிலையெனில், தானமிகுசென்னைக்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே (உக)

மனமானவொருசிறுவன்மதியானகுருவையுமதித்திடானின்னடிச்சீர், மகிழ்கல்விகற்றிடான்சும்மாவிரான்காமமடுவினிடைவீழ்ந்துசுழல்வான், சினமானவெஞ்சுரத்துழலுவன்லோபமாஞ்சிறுகுகையினூடுபுகுவான், செறுமோகவிருளிடைச்செல்குவான்மதமெனுஞ்செய்குன்றிலேறிவிழுவான், இனமானமாச்சரியவெங்குழியினுள்ளேயிறங்குவான்சிறிதுமந்தோ, என்சொல்கேளானெனதுகைப்பட்டானமற்றிதற்கேழையேனென்செய்குவேன், தனநீடுசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (உஉ)

வாய்கொண்டுரைத்தலரிதென்செய்கேனென்செய்கேன்வள்ளலுனசேவடிக்கண் மன்னாதுபொன்னாசைமண்ணாசைபெண்ணாசைவாய்ந்துழலுமென்றன்மனது, பேய்கொண்டுகள்ளுண்டுகோலினால்மொத்துண்டுபித்துண்டவன்குரங்கோ, பேசுறுகுலாலனாற்சுழல்கின்றதிகிரியோபேதைவிளையாடுபந்தோ, காய்கொண்டுபாய்கின்றவெவ்விலங்கோபெருங்காற்றினாற்சுழல்கறங்கோ, காலவடிவோவிந்தராஜாலவடிவோவெனதுகாமவடிவோவறிகிலேன், தாய்கொண்டசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே.

கற்றமேலவரொடுங்கூடிநில்லேன்கல்விகற்குநெறிதேர்ந்துகல்லேன், கனிவுகொண்டுனதுதிருவடியையொருகனவினுங்கருதிலேனல்லனல்லேன், குற்றமேசெய்வதென்குணமாகுமப்பெருங்குற்றமெல்லாங்குணமெனக், கொள்ளுவதுநின்னருட்குணமாகுமென்னிலென்குறைதவிர்த்தருள்புரிகுவாய், பெற்றமேல்வருமொருபெருந்தகையினருளுருப்பெற்றெழுந்தோங்குசுடரே, பிரணவாகாரசின்மயவிமலசொரூபமேபேதமிலபரப்பிரமமே தற்றகையசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (உ௪)

பாய்ப்பட்டபுலியன்னநாய்ப்பட்டகயவர்தம்பாழ்ப்பட்டமனையினெடுநாட், பண்பட்டகழுநீரும்விண்பட்டவின்னமுதுபட்டபாடாகுமன்றிப், போய்ப்பட்டபுல்லுமணிபூப்பட்டபாடுநற்பூண்பட்டபாடுதவிடும், புனபட்டவுமியுமுயர்பொன்பட்டபாடவர்கள்போகமொருபோகமாமோ, ஆய்ப்பட்டமறைமுடிச்சேய்ப்பட்டநின்னடிக்காட்பட்டபெருவாழ்விலே, அருள்பட்டநெறியுமெய்ப்பொருள்பட்டநிலையுமுறவமர்போகமேபோகமாம், தாய்ப்பட்டசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (உரு)

சேவலங்கொடிகொண்டநினையன்றிவேறுசிறுதேவரைச்சிந்தைசெய்வோர், செங்கனியைவிட்டுவேப்பங்கனியையுண்ணுமொருசிறுகருங்காக்கைநிகர்வார், நாவலங்காரமறவேறுபுகழ்பேசிநின்னற்புகழ்வழுத்தாதபேர், நாயப்பால்விரும்பியான்றூய்ப்பாலைநயவாதநவையுடைப்பேயராவார், நீவலந்தரநினதுகுற்றேவல்புரியாதுநின்றுமற்றேவல்புரிவோர், நெல்லுக்கிறைக்காதுபுல்லுக்கிறைக்கின்றநெடியவெறுவீணராவார், தாவலஞ்சென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (உசு)

பிரமனினியென்னைப்பிறப்பிக்கவல்லனோபெய்சிறையிலின்னுமொருகால், பின்பட்டுநிற்குமோமுன்பட்டகுட்டிற்பெறுந்துயர்மறந்துவிடுமோ, இரவுநிறமுடையயமனினியென்னைக்கனவினுமிறப்பிக்கவெண்ணமுறுமோ, எண்ணுறானுதையுண்டுசிதையுண்டதன்னுடலிருந்தவடுவெண்ணுறானோ, கரவுபெறுவினைவந்துநலியுமோவதனையொருகாசுக்குமதியேனெலாம், கற்றவர்கள்பற்றுநின்றிருவருளையானுங்கலந்திடப்பெற்றுநின்றேன், தரமருவுசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (உஎ)

நீருண்டுபொழிகின்றகாருண்டுவிளைகின்றநிலனுண்டுபலனுமுண்டு, நிதியுண்டுதுதியுண்டுமதியுண்டுகதிகொண்டநெறியுண்டுநிலையுமுண்டு, ஊருண்டுபேருண்டுமணியுண்டுபணியுண்டுடையுண்டுகொடையுமுண்டு, உண்டுண்டுமகிழவேயுணவுண்டுசாந்தமுறுமுளமுண்டுவளமுமுண்டு, தேருண்டுகரியுண்டுபரியுண்டுமற்றுள்ளசெல்வங்கள்யாவுமுண்டு, தேனுண்டுவண்டுறுகடம்பணியுநின்பதத்தியானமுண்டாயிலரசே, தாருண்டசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (உஅ)

உளமெனதுவசநின்றதில்லையென்றால்லைவினையொல்லைவிட்டிடவுமில்லை, உன்பதத்தனபில்லையென்றனுக்குற்றதுணையுனையன்றிவேறுமில்லை, இளையனவனுக்கருளவேண்டுமென்றுன்பாலிசைக்கின்றபேருமில்லை, ஏழையவனுக்கருள்வதேனென்றுனெதிர்நின்றியம்புகின்றோருமில்லை, வளமருவுமுனதுதிருவருள்குறைவதில்லைமேன்மற்றொருவழக்குமில்லை, வந்திரப்போர்களுக்கில்லையெனபதில்லைநீவன்மனத்தவனுமல்லை, தளாவிலாச்சென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே. தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (உகூ)

எத்திக்குமென்னுளந்தித்திக்குமின்பமேயென்னுயிர்க்குயிராகுமோர், ஏகமேயானந்தபோகமேயோகமேயென்பெருஞ்செல்வமேநன், முத்திக்குமுதலானமுதல்வனேமெய்ஞ்ஞானமூர்த்தியேமுடிவிலாத, முருகனேநெடியமான்மருகனேசிவபிரான்முத்தாடுமருமைமகனே, பத்திக்குவந்தருளபரிந்தருணின்னடிப்பற்றருளியென்னையிந்தப், படியிலேயுழல்கின்றகுடியிலேயொருவனுபபண்ணுமலாண்டருளுவாய, சத்திக்குநேசசென்னைக்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௩0)

நான்கொண்டவிரதநின்னடியலாற்பிறர்தம்மைநாடாமையாகுமிந்த, நலவிரதமாங்கனியையின்மையெனுமொருதுட்டநாய்வந்துகவ்வியந்தோ, தான்கொண்டுபோவதினியென்செய்வேனென்செய்வேன்றளராமையென்னுமொருகைத், தடிகொண்டடிக்கவோவலியிலேன்சிறியனேன்றன்முகம்பார்த்தருளுவாய், வான்கொண்டதெள்ளமுதவாரியேமிகுகருணைமழையேமழைக்கொண்டலே, வள்ளலேயென்னிருகண்மணியேயெனின்பமேமயிலேறுமாணிக்கமே, தான்கொண்டசென்னையிற்கந்தகோட்டத்துள்வளர்தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணியுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே. (௩க)

திருச்சிற்றம்பலம்.

# கந்தர்சரணப்பத்து.

திருச்சிற்றம்பலம்.

அருளாரமுதேசரணஞ்சரணம் அழகாவமலாசரணஞ்சரணம்
பொருளாவெனையாள்புனிதாசரணம் பொன்னேமணியேசரணஞ்சரணம்
மருள்வார்க்கரியாய்சரணஞ்சரணம் மயில்வாகனனேசரணஞ்சரணங்
கருணாலயனேசரணஞ்சரணங் கந்தாசரணஞ்சரணஞ்சரணம் (௧)

பண்ணேர்மறையின்பயனேசரணம் பதியேபரமேசரணஞ்சரணம்
விண்ணேரொளியேவெளியேசரணம் வெளியின்விளைவேசரணஞ்சரணம்
உண்ணேருயிரேயுணர்வேசரணம் உருவேயருவேயுறவேசரணங்
கண்ணேமணியேசரணஞ்சரணங் கந்தாசரணஞ்சரணஞ்சரணம். (௨)

முடியாமுதலேசரணஞ்சரணம் முருகாகுமராசரணஞ்சரணம்
வடிவேலரசேசரணஞ்சரணம் மயிலூர்மணியேசரணஞ்சரணம்
அடியார்க்கெளியாய்சரணஞ்சரணம் அரியாய்பெரியாய்சரணஞ்சரணங்
கடியாக்கதியேசரணஞ்சரணங் கந்தாசரணஞ்சரணஞ்சரணம் (௩)

பூவேமணமேசரணஞ்சரணம் பொருளேயருளேசரணஞ்சரணங்
கோவேகுகனேசரணஞ்சரணங் குருவேதிருவேசரணஞ்சரணந்
தேவேதெளிவேசரணஞ்சரணஞ் சிவசண்முகனேசரணஞ்சரணங்
காவோதருவேசரணஞ்சரணங் கந்தாசரணஞ்சரணஞ்சரணம் (௪)

நடவுந்தனிமாமயிலோய்சரணம் நல்லார்புகழும்வல்லோய்சரணந்
திடமுந்திருவுந்தருவோய்சரணந் தேவர்க்கரியாய்சரணஞ்சரணந்
தடவண்புயனேசரணஞ்சரணந் தனிமாமுதலேசரணஞ்சரணங்
கடவுண்மணியேசரணஞ்சரணங் கந்தாசரணஞ்சரணஞ்சரணம். (௫)

கோலக்குறமான்கணவாசரணங் குலமாமணியேசரணஞ்சரணஞ்
சீலத்தவருக்கருள்வோய்சரணஞ் சிவனார்புதல்வாசரணஞ்சரணம்
ஞாலத்துயர்தீர்நலனேசரணம் நடுவாகியநல்லொளியேசரணங்
காலற்றெறுவோய்சரணஞ்சரணங் கந்தாசரணஞ்சரணஞ்சரணம். (௬)

நங்கட்கினியாய்சரணஞ்சரணம் நந்தாவுயர்சம்பந்தாசரணந்
திங்கட்சடையான்மகனேசரணஞ் சிவைதந்தருளும்புதல்வாசரணந்
துங்கச்சுகநன்றருள்வோய்சரணஞ் சுரர்வாழ்த்திடுந்துரையேசரணங்
கங்கைக்கொருமாமதலாய்சரணங் கந்தாசரணஞ்சரணஞ்சரணம். (௭)

ஒளியுள்ளொளியேசரணஞ்சரணம் ஒன்றேபலவேசரணஞ்சரணந்
தெளியுந்தெருளேசரணஞ்சரணஞ் சிவமேதவமேசரணஞ்சரணம்
அளியுங்கனியேசரணஞ்சரணம் அமுதேயறிவேசரணஞ்சரணங்
களியொன்றருள்வோய்சரணஞ்சரணங் கந்தாசரணஞ்சரணஞ்சரணம். (௮)

மன்னேயெனையாள்வரதாசரணம் மதியேயடியேன்வாழ்வேசரணம்
பொனனேபுனிதாசரணஞ்சரணம் புகழ்வாரிதயம்புகுவாய்சரணம்
அனனேவடிவேலரசேசரணம் அறுமாமுகனேசரணஞ்சரணங
கனனோபுயனேசரணஞ்சரணங கநதாசரணஞ்சரணஞ்சரணம். (கூ)

வேதப்பொருளேசரணஞ்சரணம் விண்ணோர்பெருமான்சரணஞ்சரணம்
போததிறனேசரணஞ்சரணம் புனேமாமயிலோயசரணஞ்சரணம்
நாததொலியேசரணஞ்சரணம் நவையில்லவனேசரணஞ்சரணங
காதுகனிதாம்புகழோய்சரணங் கநதாசரணஞ்சரணஞ்சரணம. (கO)

திருச்சிற்றம்பலம.

---

கொச்சகக்கலிப்பா.

கூழுக்கழுவேனோகோததணிகைக்கோவேயென்
னூழுககழுவேனோவோயாததுயாப்பிறவி
யேழுக்கழுவேனோவென்செயகேனெனசெய்கேன
பாழுககிறைததேனீதுன்செயலோபாாககுமிடம். (க)

கட்டளைககலிப்பா.

சிந்தைக்குமவழியில்லையுன் றன்மையைத
தெரிதற்கென்னுந திருத்தணிகேசனே
யுந்தைககும்வழியில்லையென்றுலிநத
வுலகில்யாவருனையன் றிநீரமொள்ள
மொாநதைககுமவழியில்லவாத்திரு
முண்டைக்கும்வழியிலலையரையிறசாண
கநதைககும்வழியிலலையரகர
கஞ்சிககும்வழியிலலையிஙகையனே. (உ)

அறுசீரடியாசிரியவிருத்தம.

கறிபிடித்தவூன்கடையிற்கண்டவாதங்கால்பிடிததுக்கவ்வும்பொல்லா
வெறிபிடிததநாய்ககேனும்விததைபயிற்றிடவாகும்வேண்டிவேண்டி
மறிபிடிததசிறுவனைப்போலவாத்தியாாமனமறுகிவருந்தத்தங்கள்
குறிபிடிததுக்காட்டுவோர்கியாவர்படிபபிக்கவலார்குமரவேளே. (ந)

வண்ணவிருத்தம்.

திருமாலயருள்ளங்கொள்ளுமோர்செவ்வியவேலோனே
குருமாமணியேகுணமணியேசூரர்கோவேமேலோனே
கருமாமலமறுவண்ணந்தண்ணளிகண்டேகொண்டேனே
கந்யேபதியேகனநிதியேகற்கண்டேதண்டேனே.

அருமாதவருயாநெஞ்சம்விஞ்சியவண்ணவிண்ணவனே
அரசேயமுதேயறிவுருவேமுருகையாமெய்யவனே
உருவாகியபவபாதஞ்சிதிடவோதியவேதியனே
யொளியேவெளியேயுலகமெலாமுடையோனேவானவனே. (ச)

திருச்சிற்றமபலம்.

---

# சண்முகர்கொம்மி.

திருச்சிற்றம்பலம்.

குறவர்குடிசை நுழைநதாண்டி - அந்த
கோமாட்டியெசசில் விழைந்தாணடி
துறவா வணஙகும் புகழாண்டி - அவன
தோறறதைப் பாடியடியுஙகடி. (க)

மாமயிலேறி வருவாண்டி - அனபர்
வாழ்ததவரஙகள் தருவாணடி
தீமையிலாத புகழாணடி - அவன்
சீரததியைப் பாடியடியுஙகடி. (உ)

பன்னிருதோள்க ளுடையாண்டி - கொடும்
பாவிகளதன்னை யடையாணடி
என்னிருகணக ளனையாண்டி - அவன்
எற்றதைதப்பாடி யடியுஙகடி. (ஙு)

வேஙகைமரமாகி நின்றாண்டி - வநத
வேடர்தமையெலாம வென்றாண்டி
தீங்குசெயசூரனைக கொனறாண்டி - அந்த
தீரனைப்பாடி யடியுஙகடி. (ச)

சீர்திகழ்தோகைமயினமேலே - இளஞ்
செஞ்சுடர்தோன்றுந திறமபோலே
கூர்வடிவேல்கொண்டு நமபெருமான் - வருங
கோலததைப்பாருங்கள் கோதையர்காள். (ரு)

ஆறுமுகங்களிற் புன்சிரிப்பும் - இரண்
டாறுபுயந்திக ழற்புதமும
வீறுபரஞ்சுடர் வண்ணமுமோர் - திரு
மேனியும்பாருங்கள் வெள்வளைகாள். (சு)

ஆனநதமான வமுதனடி - பர
மானந்தநாட்டுக் கரசனடி
தானநதமில்லாச் சதுரனடி - சிவ
சணமுகநஙகுரு சாமியடி. (௭)

வேதமுடிசொல்லு நாதனடி - சதுர
வேதமுடிதிகழ பாதனடி
நாதவடிவுகொ ணடதனடி - பர
நாதங்கடநத நலத்தனடி. (௮)

ததுவததுளளே யடங்காணடி - பர
ததுவமனறித துடங்காணடி
சததுவஞான வடிவாண்டி - சிவ
சண்முகநாதனைப் பாடுங்கடி. (௯)

சசிதானநத வுருவாணடி - பர
தற்பரபோகந தருவாண்டி
உசசிதாழனபாக குறவாணடி - அநத
உததமதேவனைப் பாடுங்கடி. (௧௦)

அற்புதமான வழகனடி - துதி
அனபாககருளசெய் குழகனடி
சிறபரயோகத திறத்தனடி - அநத
சேவகன்கீரததியைப பாடுஙகடி. (௧௧)

சைவநதழைககத தழைததாணடி - ஞான
சமபந்தப்போகொண டழைததாணடி
பொயவநதவுளளததிற போகாண்டி - அநத
புண்ணியனபொன்னடி போற்றுஙகடி. (௧௨)

வாசிநடததித தருவாண்டி - ஒரு
வாசியிலிஙகே வருவாண்டி
ஆசில்கருணை யுருவாண்டி - அவன
அறபுததாண்மல ரேத்துங்கடி. (௧௩)

இராபபகலில்லாவிடததாண்டி - அன்பர்
இனபவுளங்கொ ணடத்தாணடி
அராப்பளியீநத திடததாணடி - அநத
அணணலைப்பாடி யாடியுஙகடி. (௧௪)

ஒன்றிரணடான வுளவாணடி - அநத
ஒனறிரணடாகா வளவாண்டி
மின்றிரணடன்ன வடிவாண்டி - அந்த
மேலவன்சீரததியைப பாடுஙகடி. (௧௫)

திருச்சிற்றம்பலம்.

# சண்முகர் காலைப்பாட்டு.

திருச்சிற்றம்பலம்

வாருமவாரும் தெய்வவடிவேல் முருகரே
வள்ளி மணாளரே வாரும்
புள்ளிமயி லோரே வாரும். (௧)

சங்கமொலித்தது தாழ்கடல் விம்மிற்றுச
சண்முக நாதரே வாரும்
உண்மை வினோதரே வாரும. (௨)

பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்றுப
பொன்னான வேலரே வாரும்
மின்னா முந்நூலரே வாரும் (௩)

காகங்கரைந்தது காலையு மாயிற்றுக
கண்ணுதல் சேயரே வாரும்
ஒண்ணுதல் நேயரே வாரும. (௪)

செங்கதிர் தோன்றிற்றுத் தேவர்கள் சூழ்ந்தனர்
செங்கல்வ ராயரே வாரும
எங்குரு நாதரே வாரும். (௫)

அருண னுதித்தன னன்பர்கள் சூழ்ந்தனர்
ஆறுமுகத் தோரே வாரும்
மாறிலகத் தோரே வாரும் (௬)

சூரியன் றோன்றினன் றொண்டர்கள் சூழ்ந்தனர்
சூரசங் காரரே வாரும
வீரசிங் காரரே வாரும. (௭)

வீணைமுரன்றது வேதியர் சூழ்ந்தனர்
வேலாயுதத் தோரே வாரும்
காலாயுதத் தோரே வாரும். (௮)

சேவலொலித்தது சின்னம் பிடித்தனர்
தேவர்கள் தேவரே வாரும்
மூவர் முதல்வரே வாரும். (௯)

பத்தர்கள் சூழ்ந்தனர் பாடல்பயின்றனர்
பன்னிரு தோளரே வாரும்
பொன்மலர்த் தாளரே வாரும். (௧௦)

மாலைகொணர்ந்தனா மஞ்சனம் போந்தது
மாமயில் வீரரே வாரும்
தீமையில் தீரரே வாரும். (கக)

தொண்டாகள் நாடினர் தோத்திரம் பாடினா
சுப்பிர மணியரே வாரும்
வைப்பி னணியரே வாரும். (கஉ)

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



அருட்பெருஞ்ஜோதி



# திருவருட்பா.



குறள் வெண்பா

திருச்சிற்றம்பலம்

எல்லாஞ்செயலகூடு மென்ஞணையமபலததே '
மெலலாமவல்லான்றனையே யேத்து.

திருசசிற்றமபலம.



அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை.






உ

சிவமயம.

சிவகணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பா.

## ஆறுவது திருமுறை.

# அருட்பெருஞ்ஜோதி அகவல்.

அருட்சபைநடம்புரி அருட்பெருஞ்ஜோதி
தெருட்பெருஞ்சீரசொலத திகழ்விததியே.

நிலைமண்டிலவாசிரியப்பா.

அருட்பெருஞ் ஜோதி யருட பெருஞ்ஜோதி
அருடபெருஞ் ஜோதி யருட் பெருஞ்ஜோதி
அருட்சிவ நெறிசா ரருட்பெரு நிலைவா
ழருட்சிவ பதியா மருட் பெருஞ்ஜோதி
ஆகம முடிமேலாரண முடிமே
லாகநின றோங்கிய வருட் பெருஞ்ஜோதி
இகநிலைப பொருளாய்ப் பரநிலைப பொருளா
யகமறப் பொருந்திய வருட் பெருஞ்ஜோதி

ஈனமின் றிகபரத திரண்டின்மேற் பொருளா
* யானலின ரோங்கிய வருட் பெருஞ்ஜோதி
உரைமனங் கடந்த வொருபெரு வெளிமே
லரசு செய்தோங்கு மருட் பெருஞ்ஜோதி
ஊக்கமு முணர்ச்சியு மொளிதரு மாக்கையு
மாக்கமு மருளிய வருட் பெருஞ்ஜோதி
எல்லையில் பிறப்பெனு மெழுகடல் கடந்தியென
னல்லலை நீக்கிய வருட் பெருஞ்ஜோதி
ஏறு நிலைமிசை யேற்றியென் றனக்கே
யாறுறு காட்டிய வருட் பெருஞ்ஜோதி
ஐயமுந் திரிபு மறுத்தென துடம்பினுள்
ளையமு நீக்கிய வருட் பெருஞ்ஜோதி
ஒன்றென விரண்டென வொன்றிரண் டெனவிவை
யன்றென விளங்கிய வருட் பெருஞ்ஜோதி
ஓதா துணர்ந்திட வொளியளித் தெனக்கே
யாதார மாகிய வருட் பெருஞ்ஜோதி
ஔவிய மாதியோ ராறுந் தவிர்த்தபே
ரவ்வியல் வழுத்து மருட் பெருஞ்ஜோதி
திருநிலைத் தனிவெளி சிவவெளி யெனுமோ
ரருள்வெளிப் பதிவள ரருட் பெருஞ்ஜோதி
சுத்தசன் மார்க்க சுகத்தனி வெளியெனு
மத்தகைச் சிற்சபை யருட் பெருஞ்ஜோதி
சுத்தமெய்ஞ் ஞான சுகோதய வெளியெனு
மத்து விதச்சபை யருட் பெருஞ்ஜோதி
தூய கலாந்தச் சுகந்தரு வெளியெனு
மாய சிற்சபையி லருட் பெருஞ்ஜோதி
ஞான யோகாந்த நடத்திரு வெளியெனு
மானியில் சிற்சபை யருட் பெருஞ்ஜோதி
விமல போதாந்தமா மெய்ப்பொருள் வெளியெனு
மமல சிற்சபையி லருட் பெருஞ்ஜோதி
பெரிய நாதாந்தப் பெருநிலை வெளியெனு
மரிய சிற்றம்பலத் தருட் பெருஞ்ஜோதி
சுத்த வேதாந்தத் துரியமேல் வெளியெனு
மத்தகு சிற்சபை யருட் பெருஞ்ஜோதி
சுத்த சித்தாந்த சுகப்பெரு வெளியெனு
மத்தனிச் சிற்சபை யருட் பெருஞ்ஜோதி

* ஆன அவ்விடத்து. அகரவீறு "பெற்றோன் றுயர்ந்த பெருமான்." என்றாற் போலத் தொக்கிநின்றது.

தகர மெய்ஞ்ஞானத் தனிப்பெரு வெளியெனு
மகர நிலைப்பதி யருட் பெருஞ்ஜோதி

தத்துவா தீதத் தனிப்பொருள் வெளியெனு
மத்திரு வம்பலத் தருட் பெருஞ்ஜோதி

சச்சிதா னந்தத் தனிப்பர வெளியெனு
மச்சிய லம்பலத் தருட் பெருஞ்ஜோதி

சாகாக் கலைநிலை தழைத்திடு வெளியெனு
மாகாயத் தொளிர ருட் பெருஞ்ஜோதி

காரண காரியங் காட்டிடு வெளியெனு
மாரண சிற்சபை யருட் பெருஞ்ஜோதி

ஏக மனேக மெனப்பகர் வெளியெனு
மாகமச் சிற்சபை யருட் பெருஞ்ஜோதி

வேதாக மங்களின் விளைவுகட் கெல்லா
மாதார மாஞ்சபை யருட் பெருஞ்ஜோதி

என்றா தியசுடர்க் கியனிலை யாயது
நன்றாந் திருச்சபை யருட் பெருஞ்ஜோதி

சமயங் கடந்த தனிப்பொருள் வெளியா
யமையுந் திருச்சபை யருட் பெருஞ்ஜோதி

முச்சுடர் களுமொளி முயங்குற வளித்தரு
ளச்சுட ராஞ்சபை யருட் பெருஞ்ஜோதி

துரியமுங் கடந்த சுகபூ ரணந்தரு
மரிய சிற்றம்பலத் தருட் பெருஞ்ஜோதி

எவ்வகைச் சுகங்களு மினிதுற வளித்தரு
ளெவ்வகைச் சிற்சபை யருட் பெருஞ்ஜோதி

இயற்கை யுண்மையதா யியற்கை யின்பமுமா
மயர்ப்பிலாச் சிற்சபை யருட் பெருஞ்ஜோதி

சாக்கிரா தீதத் தனிவெளியாய் நிறை
வாக்கிய சிற்சபை யருட் பெருஞ்ஜோதி

சுட்டுதற் கரிதாஞ் சுகாதீத வெளியெனு
மட்டமேற் சிற்சபை யருட் பெருஞ்ஜோதி

நவந்தவிர் நிலைகளு நண்ணுமோர் நிலையா
யவந்தவிர் சிற்சபை யருட் பெருஞ்ஜோதி

உபய பக்கங்களு மொன்றெனக் காட்டிய
வுபய சிற்சபையி லருட் பெருஞ்ஜோதி

சேகரமாம் பல சித்திநிலைக் கெலா
மாகர மாஞ்சபை யருட் பெருஞ்ஜோதி

மனாதிகட் கரிய மதாதீத வெளியா
மனாதி சிற்சபையி லருட் பெருஞ்ஜோதி

ஓதிநின றுணர்ந் துணர்ந் துணாதற் கரிதா
மாதி சிற்சபையி லருட் பெருஞ்ஜோதி

வாரமு மழியா வரமுந தருந்திரு
வாரமுதாஞ் சபை யருட் பெருஞ்ஜோதி

இழியாப் பெருநல மெல்லா மளித்தரு
ளழியாச சிற்சபை யருட் பெருஞ்ஜோதி

கற்பம் பலபல கழியினு மழிவுறு
வறபுதந தருஞ்சபை யருட் பெருஞ்ஜோதி

எனைத்துந துன்பிலா வியலளித தெண்ணிய
வனைத்துந தருஞ்சபை யருட் பெருஞ்ஜோதி

பாணிப் பிலதாய்ப் பரவினோர்க கருளபுரி
யாணிப் பொனம்பலத் தருட் பெருஞ்ஜோதி

எம்பல மெனததொழு தேததினோர்க கருள்புரி
அம்பலத தாடல்செய யருட பெருஞ்ஜோதி

தம்பர ஞான சிதம்பர மெனுமோ
ரமபரத் தோங்கிய வருட் பெருஞ்ஜோதி

எசசபை பொதுவென வியம்பின ரறிஞாக
ளச்சபை யிடங்கொளு மருட் பெருஞ்ஜோதி

வாடுதல் நீக்கிய மணிமன் றிடையே
யாடுதல் வல்ல வருட் பெருஞ்ஜோதி

நாடகத திருச்செய னவிறறிடு மொருபே
ராடகப் பொதுவொளி ரருட் பெருஞ்ஜோதி

கற்பனை முழுவதுங கடநதொளி தருமோ
ரற்புதச் சிறசபை யருட் பெருஞ்ஜோதி

ஈன்றநற் றாயினு மினிய பெருநதய
வான்ற சிற்சபையி லருட் பெருஞ்ஜோதி

இன்புறு நானுளத தெண்ணியாங கெண்ணியாங
கன்புறத் தருசபை யருட் பெருஞ்ஜோதி

எம்மையு மென்னைவிட் டிறையும பிரியா
தம்மை யபபனுமா மருட் பெருஞ்ஜோதி

பிரிவுற் றறியாப் பெரும்பொருளா யென
னறிவுக் கறிவா மருட் பெருஞ்ஜோதி

சாதியு மதமுஞ் சமயமுங காணா
வாதி யநாதியா மருட் பெருஞ்ஜோதி

தநுகர ணாதிக டாங்கடந தறியுமோ
ரநுபவ மாகிய வருட் பெருஞ்ஜோதி

உனுமுணர் வுணர்வா யுணர்வெலாங் கடநத
வநுபவா தீத வருட் பெருஞ்ஜோதி

பொதுவுணர் வுணரும் போதலாற் பிரித்தே
யதுவெனி லற்றென் றருட் பெருஞ்ஜோதி

உளவினி லறிந்தா லொழியமற் றளக்கி
னளவினி லளவா வருட் பெருஞ்ஜோதி

என்னையும் பணிகொண் டிறவா வரமளித்
தன்னையி லுவந்த வருட் பெருஞ்ஜோதி

ஓதி யோதாம லுறவெனக் களித்த
வாதியீ றில்லா வருட் பெருஞ்ஜோதி

படியடி வான்முடி பற்றினுந் தோற்றா
வடிமுடி யெனுமோ ரருட் பெருஞ்ஜோதி

பவனத் தினண்டப் பரப்பினெங் கெங்கு
மவனுக் கவனா மருட் பெருஞ்ஜோதி

திவளுற்ற வண்டத் திரளினெங் கெங்கு
மவளுக் கவளா மருட் பெருஞ்ஜோதி

மதனுற்ற வண்ட வரைப்பினெங் கெங்கு
மதனுக் கதுவா மருட் பெருஞ்ஜோதி

எப்பாலு மாய் வெளியெல்லாங் கடந்துமே
லப்பாலு மாகிய வருட் பெருஞ்ஜோதி

வல்லதா யெல்லா மாகி யெல்லாமு
மல்லதாய் விளங்கு மருட் பெருஞ்ஜோதி

எப்பொருள் மெய்ப்பொரு ளென்பர் மெய்கண்டோ
ரப்பொரு ளாகிய வருட் பெருஞ்ஜோதி

தாங்கி லாண்ட சராசர நிலைநின
றோங்குற விளங்கு மருட் பெருஞ்ஜோதி

சத்தர்க ளெல்லாந் தழைத்திட வகம்புறத்
தத்திசை விளங்கு மருட் பெருஞ்ஜோதி

சத்திக ளெல்லாந் தழைக்கவெங் கெங்கு
மத்தகை விளங்கு மருட் பெருஞ்ஜோதி

மூர்த்தறு மைந்தொழின் மூர்த்திகள் பலர்க்கு
மைந்தொழி லளிக்கு மருட் பெருஞ்ஜோதி

பெரிதினும் பெரிதாய்ச் சிறிதினுஞ் சிறிதா
யரிதினு மரிதா மருட் பெருஞ்ஜோதி

காட்சியுங் காணுக் காட்சியு மதுதரு
மாட்சியு மாகிய வருட் பெருஞ்ஜோதி

இன்புறு சித்திக ளெல்லாம் புரிகவென்
றன்புட னெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி

இறவா வரமளித் தென்னைமே லேற்றிய
வறவாழி யாந்தனி யருட் பெருஞ்ஜோதி

நானந்த மில்லா நலம்பெற வெனக்கே
யானந்த நல்கிய வருட் பெருஞ்ஜோதி

எண்ணிய வெண்ணியாங் கியற்றுக வெனவெற்னை
யண்ணியுள் ளோங்கு மருட் பெருஞ்ஜோதி

மேயினை மெய்ப்பொருள் விளங்கினை நீயது
வாயினை யென்றரு ளருட் பெருஞ்ஜோதி

எண்ணிற் செழுந்தே னினியதெள் ளமுதென
வண்ணித் தினிக்கு மருட் பெருஞ்ஜோதி

சிந்தையிற் றுன்பொழி சிவம்பெறு கெனத்தொழி
லந்தையு மெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி

எங்கெங் கிருந்துயி ரேதெது வேண்டினு
மங்கங் கிருந்தரு ளருட் பெருஞ்ஜோதி

சகமுதல் புறப்புறந் தங்கிய வகப்புற
மகப்புற முற்றுமா மருட் பெருஞ்ஜோதி

சிகரமும் வகரமுஞ் சேர்தனி யுகரமு
மகரமு மாகிய வருட் பெருஞ்ஜோதி

உபரச வேதியி னுபயமும் பரமு
மபரமு மாகிய வருட் பெருஞ்ஜோதி

மந்தண மிதுவென மறுவிலா மதியா
லந்தணர் வழுத்து மருட் பெருஞ்ஜோதி

எம்புயக் கனியெனை வெண்ணுவா ரிதய
வம்புயத் தமர்ந்த வருட் பெருஞ்ஜோதி

செடியுறுத் தேதிட தேகமும போகமு
மடியருக்கே தரு மருட் பெருஞ்ஜோதி

துன்பறுத் தொருசிவ துரிய சுகந்தனை
யன்பருக்கே தரு மருட் பெருஞ்ஜோதி

பொதுவது சிறப்பது புதியது பழையதென்
றதுவது வாய்த்திக ழருட் பெருஞ்ஜோதி

சேதனப் பெருநிலை திகழ்தரு மொருபரா
யாதனத் தோங்கிய வருட் பெருஞ்ஜோதி

ஓமயத் திருவுரு வுவப்புட னளித்தெனக்
காமயத் தடைதவி ரருட் பெருஞ்ஜோதி

எப்படி யெண்ணிய தென்கருத் திங்கெனக்
கப்படி யருளிய வருட் பெருஞ்ஜோதி

எத்தகை விழைந்தன வென்மன மிங்கெனக்
கத்தகை யருளிய வருட் பெருஞ்ஜோதி

இங்குறத் திரிந்துள மிளையா வகையெனக்
கங்கையிற் கனியா மருட் பெருஞ்ஜோதி

பாருயப் புரிகெனப் பணித்தெனக் கருளியென்
னாருயிர்க் குள்ளொளி ரருட் பெருஞ்ஜோதி

தேவியுற் றொளிர்தரு திருவுரு வுடனென
தாவியிற் கலந்தொளி ரருட் பெருஞ்ஜோதி

எவ்வழி மெய்வழி யென்ப வேதாகம
மவ்வழி யெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி

வையமும் வானமும் வாழ்ந்திட வெனக்கரு
ளையறி வளித்த வருட் பெருஞ்ஜோதி

சாமா றனைத்துந் தவிர்த்திங் கெனக்கே
யாமா றருளிய வருட் பெருஞ்ஜோதி

சத்தியமாஞ் சிவ சத்தியை யீந்தெனக்
கத்திறல் வளர்க்கு மருட் பெருஞ்ஜோதி

சாவா நிலையிது தந்தன முனக்கே
யாவா வெனவரு ளருட் பெருஞ்ஜோதி

சாதியு மதமுஞ் சமயமும் பொய்யென
வாதியி லுணர்த்திய வருட் பெருஞ்ஜோதி

மயர்ந்திடேல் சிறிது மனந்தளர்ந் தஞ்சே
லயர்ந்திடே லென்றரு ளருட் பெருஞ்ஜோதி

தேசுறத் திகழ்தரு திருநெறிப் பொருளிய
லாசுறத் தெரித்த வருட் பெருஞ்ஜோதி

காட்டிய வுலகெலாங் கருணையாற் சித்தியி
னாட்டியல் புரியு மருட் பெருஞ்ஜோதி

எங்குல மெம்மின மென்பதொண் ணூற்று
றங்குல மென்றரு ளருட் பெருஞ்ஜோதி

எம்மத மெம்மிறை யென்ப வுயிர்த்திர
ளம்மத மென்றரு ளருட் பெருஞ்ஜோதி

கூறிய கருநிலை குலவிய கீழ்மே
லாறிய லெனவுரை யருட் பெருஞ்ஜோதி

எண்டர முடியா திலங்கிய பற்பல
வண்டமு நிறைந்தொளி ரருட் பெருஞ்ஜோதி

சாருயிர்க் கெல்லாந் தாரக மாம்பரை
யாருயிர்க் குயிரா மருட் பெருஞ்ஜோதி

வாழி நீடூழி வாழியென் றோங்குபே
ராழியை யளித்த வருட் பெருஞ்ஜோதி

மாய்ந்தவா் மீட்டும் வருநெறி தந்திதை
யாய்ந்திடென் றுரைத்த வருட் பெருஞ்ஜோதி

எச்சநினக் கிலை யெல்லாம் பெறுக வென்
றச்சந் தவிர்த்தவென் னருட் பெருஞ்ஜோதி

நீடுக நீயே நீளுல கனைத்து நின்
றோடுக வென்ற வென்னருட் பெருஞ்ஜோதி

முத்திற லவடிவமு முன்னியாங் கெய்துறு
மத்திற லெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி

மூவகைச் சித்தியின் முடிபுகண் முழுவது
மாவகை யெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி

கரும சித்திகளின் கலைபல கோடியு
மரசுற வெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி

யோகசித்தி கள்வகை யுறுபல கோடியு
மாக வென் றெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி

ஞானசித் தியின்வகை நலவிரி வனைத்து
மானியின் றெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி

புடையுறு சித்தியின் பொருட்டே முத்தியை
யடைவதென் றருளிய வருட் பெருஞ்ஜோதி

முத்தி யென்பது நிலைமுன் னுறு சாதன
மத்தக வென்ற வென்னருட் பெருஞ்ஜோதி

சித்தி யென்பது நிலைசேர்ந்த வனுபவ
மத்திற மென்ற வென்னருட் பெருஞ்ஜோதி

ஏக சிற்சித்தியே யியலுற வனேக
மாகிய தென்ற வென்னருட் பெருஞ்ஜோதி

இன்பசித் தியினிய லேக மனேக
மன்பருக கென்ற வென்னருட் பெருஞ்ஜோதி

எட்டிரண் டெனபன வியலுமுற் படியென
வட்ட நின் றருளிய வருட் பெருஞ்ஜோதி

இப்படி கண்டனை யினியுறு படியெலா
மப்படியே யெனு மருட் பெருஞ்ஜோதி

படிமுடி கடந்தனை பாரிது பாரென
வடிமுடி காட்டிய வருட் பெருஞ்ஜோதி

சோதியுட் சோதியின் சொரூபமே யந்த
மாதி யென் றருளிய வருட் பெருஞ்ஜோதி

இந்த சிற்சோதியி னியலுரு வாதி
யந்தமென் றருளிய வருட் பெருஞ்ஜோதி

ஆதியு மந்தமு மறிந்தனை நீயே
யாதியென் றருளிய வருட் பெருஞ்ஜோதி

நல்லமு தென்னொரு ளுவுளங்காட்டி யென்
னல்லலை நீக்கிய வருட் பெருஞ்ஜோதி

கற்பக மென்னுளங் கைதனிற் கொடுத்தே
யற்புத மியற்றெனு மருட் பெருஞ்ஜோதி

# அருட்பெருஞ்ஜோதி அகவல்.

கதிர்நல மென்னிரு கண்களிற் கொடுத்தே
    யதிசய மியற்றெனு மருட்பெருஞ்ஜோதி
அருளொளி யென்றனி யறிவினில் விரித்தே
    யருணெறி விளக்கெனு மருட்பெருஞ்ஜோதி
பரையொளி யென்மனப் பதியினில் விரித்தே
    யரசது வியற்றெனு மருட்பெருஞ்ஜோதி
வல்லப சத்திகள் வகையெலா மளித்தென
    தல்லலை நீக்கிய வருட்பெருஞ்ஜோதி
ஆரிய லகம்புற மகப்புறம் புறப்புற
    மாரமு தெனக்கரு ளருட்பெருஞ்ஜோதி
சூரிய சந்திர சோதியுட் சோதியென
    றாரியர் புகழ்தரு மருட்பெருஞ்ஜோதி
பிறிவே தினியுனைப் பிடித்தன முனக்குநம்
    மறிவே வடிவெனு மருட்பெருஞ்ஜோதி
எஞ்சே லுலகினில் யாதொன்று பற்றியு
    மஞ்சே லென்றரு ளருட்பெருஞ்ஜோதி
மாண்டுழ லாவகை வந்திளங் காலையே
    யாண்டுகொண் டருளிய வருட்பெருஞ்ஜோதி
பற்றுக ளனைத்தையும் பற்றறத் தவிர்த்தென
    தற்றமு நீக்கிய வருட்பெருஞ்ஜோதி
சமயங் குலமுதல் சார்பெலாம் விடுத்த
    வமயந் தோன்றிய வருட்பெருஞ்ஜோதி
வாயதற் குறித்தெனு மறை யாகமங்களா
    லாயதற் கரிய வருட்பெருஞ்ஜோதி
எல்லாம் வல்லசித் தெனக்களித் தெனக் குனை
    யல்லா திலையெனு மருட்பெருஞ்ஜோதி
நவையிலா வுளத்தி னாடிய நாடிய
    வவையெலா மளிக்கு மருட்பெருஞ்ஜோதி
கூற்றுதைத் தென்பாற் குற்றமுங் குணங்கொண்
    டாற்றன் மிகக்களித்த வருட்பெருஞ்ஜோதி
நன்றறி வறியா நாயினேன் றனையு
    மன்று வந்தாண்ட வருட்பெருஞ்ஜோதி
நாயினுங் கடையே னீயினு மிழிந்தே
    னாயினு மருளிய வருட்பெருஞ்ஜோதி
தோத்திரம் புகலேன் பாத்திர மல்லே
    னாத்திர மளித்த வருட்பெருஞ்ஜோதி
எச்சோ தனைகளு மியற்றா தெனக்கே
    * யச்சோ வென்றரு ளருட்பெருஞ்ஜோதி

* அச்சோ - இரக்கக்குறிப்பு.

ஏறுநிலைநடு வேற்றி யென்றனை யீண்
டாறுறு கடத்திய வருட் பெருஞ்ஜோதி

தாபத் துயரந் தவிர்த்துல குறுமெலா
வாபத்து நீக்கிய வருட் பெருஞ்ஜோதி

மருட்பகை தவிர்த்தெனை வாழ்வித் தெனக்கே
யருட் குருவாகிய வருட் பெருஞ்ஜோதி

உருவமு மருவமு முபயமு மாகிய
வருணிலை தெரித்த வருட் பெருஞ்ஜோதி

இருளறுத் தென்னுளத் தெண்ணியாங் கருளி
யருளமு தளித்த வருட் பெருஞ்ஜோதி

தெருணிலை யிதுவெனத் தெருட்டி யென்னுளத் திருந்
தருணிலை காட்டிய வருட் பெருஞ்ஜோதி

பொருட்பத மெல்லாம் புரிந்துமே லோங்கிய
வருட்பத மளித்த வருட் பெருஞ்ஜோதி

உருள் சகடாகிய வுளஞ்சலி யாவகை
யருள்வழி நிறுத்திய வருட் பெருஞ்ஜோதி

வெருள்மன மாயை வினையிருணீக்கி யுள
ளருள் விளக்கேற்றிய வருட் பெருஞ்ஜோதி

சுருள் விரிவுடை மனச்சுழலெலா மறுத்தே
யருளொளி நிரப்பிய வருட் பெருஞ்ஜோதி

விருப்போ டிகலுறு வெறுப்புந் தவிர்த்தே
யருட்பே றளித்த வருட் பெருஞ்ஜோதி

அருட்பேர் தரித்துல கனைத்து மலர்ந்திட
வருட்சீ ரளித்த வருட் பெருஞ்ஜோதி

உலகெலாம் பரவ வென்னுளத் திருந்தே
யலகிலா வொளிசெய யருட் பெருஞ்ஜோதி

விண்ணினுள் விண்ணாய விண்ணடு விண்ணா
யண்ணி நிறைந்த வருட் பெருஞ்ஜோதி

விண்ணுறு விண்ணாய விண்ணிலை விண்ணா
யண்ணி வயங்கு மருட் பெருஞ்ஜோதி

காற்றினுட் காற்றாயக் காற்றிடைக் காற்றா
யாற்றவி னோங்கு மருட் பெருஞ்ஜோதி

காற்றுறு காற்றாய்க் கானிலைக் காற்றா
யாற்ற விளங்கு மருட் பெருஞ்ஜோதி

அனலினு ளனலா யனனடு வனலா
யனலுற விளங்கு மருட் பெருஞ்ஜோதி

அனலுறு மனலா யனனிலை யனலா
யனலுற வயங்கு மருட் பெருஞ்ஜோதி

புனலினுட் புனலாய்ப் புனலிடைப் புனலா
யனலென வயங்கு மருட்பெருஞ்ஜோதி
புனலுறு புனலாய்ப் புனனிலைப் புனலா
யனையெனப் பெருகு மருட்பெருஞ்ஜோதி
புவியினுட் புவியாய்ப் புவியிடைப் புவியா
யவைதர வயங்கு மருட்பெருஞ்ஜோதி
புவியுறு புவியாய்ப் புவிநிலைப் புவியா
யவைகொள விரிந்த வருட்பெருஞ்ஜோதி
விண்ணிலை சிவத்தின் வியனிலை யளவி
யண்ணுற வமைத்த வருட்பெருஞ்ஜோதி
வளிநிலைச் சத்தியின் வளனிலை யளவி
யளியுற வமைத்த வருட்பெருஞ்ஜோதி
நெருப்பது நிலைநடு நிலையெலா மளவி
யுருப்பிட வகுத்த வருட்பெருஞ்ஜோதி
நீர்நிலை திரைவளர் நிலைதனை யளவி
யாருற வகுத்த வருட்பெருஞ்ஜோதி
புவிநிலைச் சுத்தமாம் பொற்பதி யளவி
யவையுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணினிற் றிண்மையை வகுத்ததிற் கிடக்கை
யண்ணுற வமைத்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணினிற் பொன்மை வகுத்ததி லைம்மையை
யண்ணுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணினி லைம்பூ வகுத்ததி லைந்திற
மண்ணுற வமைத்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணினி னாற்றம் வகுத்தது பலவகை
யண்ணுறப் புரிந்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணினிற் பற்பல வகைகரு நிலையிய
லண்ணுறப் புரிந்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணினி லைந்தியல் வகுத்ததிற் பல்பய
னண்ணுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணிடை யடிநிலை வகுத்ததிற் பன்னிலை
யண்ணுற வமைத்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணிலைந் தைந்து வகையுங் கலந்துகொண்
டண்ணுறப் புரிந்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணியற் சத்திகள் மண்செயற் சத்திக
ளண்ணுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி
மண்ணுருச் சத்திகள் மண்கலைச் சத்திக
ளண்ணுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

மணணொளிச் சத்திகள் மண்கருச் சததிக
ளெண்ணுற வகுதத வருட் பெருஞ்ஜோதி

மணகணச் சததிகள் வகைபல பலவு
மண்கொள வமைதத வருட் பெருஞ்ஜோதி

மண்ணிலைச சததாகள் வகைபல பலவு
மண்ணுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

மண்கரு வுயிாதொகை வகைவிரி பலவா
வணகொள வமைத்த வருட் பெருஞ்ஜோதி

மண்ணினிற் பொருள்பல வகைவிரி வெவவே
றணணுறப் புரிந்த வருட் பெருஞ்ஜோதி

மண்ணுறு நிலைபல வகுதததிற் செயலபல
வணணுற வமைதத வருட் பெருஞ்ஜோதி

மண்ணிடைப் பக்குவம் வகுததிற் பயன்பல
வணணுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

மண்ணியல் பலபல வகுததிற பிறவு
மணணுற வமைதத வருட் பெருஞ்ஜோதி

நீரினிற் றண்மையு நிகழு மொழுக்கமு
மாறுற வகுதத வருட் பெருஞ்ஜோதி

நீரினிற பசுமையை நிறுததி யதிறபல
வாறுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

நீரிடைப் பூவியல் நிகழுறு திறவிய
லாதர வகுதத வருட் பெருஞ்ஜோதி

நீரினிற் சுவைநிலை நிரைத்ததிற பல்வகை
யாறுறப் புரிநத வருட் பெருஞ்ஜோதி

நீரினிற கருநிலை நிகழததிய பறபல
வாருற வகுதத வருட் பெருஞ்ஜோதி

நீரிடை நான்கிய னிலவுவித ததிற்பல
வாதர வகுதத வருட் பெருஞ்ஜோதி

நீரிடை யடிநடு நிலையுற வகுததன
லாதரப புரிநத வருட பெருஞ்ஜோதி

நீரிடை யொளியியல் நிகழ்பல குணவிய
லாதர வகுதத வருட் பெருஞ்ஜோதி

நீரிடைச் சததிகள் நிகழ்வகை பலபல
வாதர வகுத்த வருட் பெருஞ்ஜோதி

நீரினிற சததாக ணிறைவகை யுறைவகை
யாரதரப புரிந்த வருட் பெருஞ்ஜோதி

நீரிடை யுயிாபல நிகழுறு பொருள்பல
வாறுற வமைதத வருட் பெருஞ்ஜோதி

நீரிடை நிலைபல நிலையுறு செயல்பல
வாகொள வகுதத வருட பெருஞ்ஜோதி

நீருரு பக்குவ நிறைவுறு பயன்பல
வாறுற வமைத்த வருட்பெருஞ்ஜோதி
நீரியல் பலபல நிரைத்ததிற் பிறவு
மாதரப் புரிந்தவருட் பெருஞ்ஜோதி
தீயினிற் சூட்டியல் சேர்பரச் செலவிய
லாயுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி
தீயினில் வெண்மைத் திகழியல் பல்வா
வாயுற வகுத்தவருட்பெருஞ்ஜோதி
தீயிடைப் பூவெலாந் திகழுறு திறமெலா
மாயுறவகுத்தவருட்பெருஞ்ஜோதி
தீயிடையொளியே திகழுறவமைத்ததி
லாய்பல வகுத்த வருட்பெருஞ்ஜோதி
தீயிடை யருநிலை திருநிலை கருநிலை
யாயுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி
தீயிடை மூவியல் செறிவித் ததிற்பல
வாயவகை யமைத்த வருட் பெருஞ்ஜோதி
தீயிடை நடுநிலை திகழ்நடு நடுநிலை
யாயுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி
தீயிடைப் பெருந்திறல் சித்திகள் பலபல
வாயுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி
தீயிடைச் சித்துகள் செப்புறு மனைத்து
மாயுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி
தீயிடைச் சத்திகள் செறிதரு சத்தாக
ளாயபல வகுத்த வருட் பெருஞ்ஜோதி
தீயிடையுயிர்பல திகழுறு பொருள்பல
வாய்வகை யமைத்த வருட் பெருஞ்ஜோதி
தீயிடை நிலைபல திகழ்செயல் பலபய
னாயபல வகுத்த வருட் பெருஞ்ஜோதி
தீயினிற் பக்குவஞ் சேர்குண மியற்குண
மாயபல வகுத்த வருட் பெருஞ்ஜோதி
தீயிடை யுருக்கியல் சிறப்பியல் பொதுவிய
லாயுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி
தீயியல் பலபல செறித்ததிற் பலவு
மாயுறப் புரிந்த வருட் பெருஞ்ஜோதி
காற்றிடை யசையியல் கலையிய லுயிரிய
லாற்றலி னமைத்த வருட் பெருஞ்ஜோதி
காற்றிடைப் பூவியல் கருதுறு திறவிய
லாற்றலின் வகுத்த வருட் பெருஞ்ஜோதி

காற்றினி லூறியல் காட்டுறு பலபல
வாற்றலி னமைதத வருட் பெருஞ்ஜோதி
காற்றினிற் பெருநிலை கருநிலை யளவில
வாறறவும் வகுதத வருட் பெருஞ்ஜோதி
காறறிடை யீரியல காட்டி யதிற்பல
வாற்றவும வகுதத வருட் பெருஞ்ஜோதி
காற்றினி லிடைநடு கடைநடு வகப்புற
மாற்றவும் வகுதத வருட் பெருஞ்ஜோதி
காற்றினிற குணம்பல கணம்பல வணமபல
வாறறிலினமைத்த வருட் பெருஞ்ஜோதி
காற்றிடைச் சததிகள் கணக்கில வுலபபில
வாற்றவு மமைத்த வருட் பெருஞ்ஜோதி
காறறிடைச் சத்தாகள் கணிதங கடந்தன
வாற்றவும் வகுத்த வருட் பெருஞ்ஜோதி
காற்றிடை யுயிர்பல கதிபல கலைபல
வாற்றலி னமைத்த வருட் பெருஞ்ஜோதி
காற்றிடை நாணிலைக் கருவிக ளனைததையு
மாற்றுற வகுதத வருட் பெருஞ்ஜோதி
காற்றிடை யுணரியல் கருதிய லாதிய
வாற்றுற வகுதத வருட் பெருஞ்ஜோதி
காறறிடைச செயலெலாங கருதிய பயனெலா
மாற்றவும் வகுதத வருட் பெருஞ்ஜோதி
காற்றிணிற் பககுவக கதியெலாம் விளைவித்
தாறறலின் வகுதத வருட் பெருஞ்ஜோதி
காறறினிற காலங கருதுறு வகையெலா
மாற்றவும் வகுதத வருட் பெருஞ்ஜோதி
காற்றியல் பலபல கணித்ததிற் பிறவு
மாற்றவும் வகுத்த வருட் பெருஞ்ஜோதி
வெளியிடைப் பகுதியின விரிவிய லணைவிய
லளியுற வமைதத வருட் பெருஞ்ஜோதி
வெளியிடைப் பூவெலாம் வியபபுறு திறனெலா
மளியுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி
வெளியினி லொலிநிறை வியனிலை யனைத்து
மளியுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி
வெளியிடைக கருநிலை விரிநிலை யருநிலை
யளிகொள வகுதத வருட் பெருஞ்ஜோதி
வெளியிடை முடிநிலை விளங்குற வகுததே
யளிபெற விளக்கு மருட் பெருஞ்ஜோதி

வெளியினிற் சத்திகள் வியப்புறச் சத்தாக
ளளியுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

வெளியிடை யொன்றே விரித்ததிற் பற்பல
வளியுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

வெளியிடைப் பலவே விரித்ததிற் பற்பல
வளிதர வமைத்த வருட் பெருஞ்ஜோதி

வெளியிடை யுயிரியல் வித்தியல் சித்திய
லளிபெற வமைத்த வருட்பெருஞ்ஜோதி

வெளியி னனைத்தையும் விரித்ததிற் பிறவு
மளியுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

புறநடு வொடுகடை புணர்ப்பித் தொருமுத
லறமுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

புறத்தலை நடுவொடு புணர்ப்பித் தொருகடை
யறம்பெற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அகப்புற நடுக்கடை யணைவுறப் புறமுத
லகப்பட வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அகப்புற நடுமுத லணைவுறப் புறக்கடை
யகப்பட வமைத்த வருட் பெருஞ்ஜோதி

கருத்தக நடுவொடு கடையணைத் தகமுத
லருளுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

தணியக நடுவொடு தலையணைத் தகக்கடை
யணியுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அகநடு புறக்கடை யணைத்தகப் புறமுத
லகமுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அகநடு புறத்தலை யணைத்தகப் புறக்கடை
யகலிடை வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அகநடு வதனு லகப்புற நடுவை
யகமற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அகப்புற நடுவா லணிபுற நடுவை
யகப்பட வமைத்த வருட்பெருஞ்ஜோதி

புறநடு வதனுறப் புறப்புற நடுவை
யறமுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

புகலரு மகண்ட பூரண நடுவா
லகநடு வகுத்த வருட் பெருஞ்சோதி

புறப்புறக் கடைமுதல் புணர்ப்பாற் புறப்புற
மறக்கணம் வகுத்த வருட் பெருஞ்ஜோதி

புறத்தியல் கடைமுதல் புணர்ப்பாற் புறத்துறு
மறக்கணம் வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அகப்புறக் கடைமுத லணைவா லகக்கணை
மகத்துற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அகக்கடை முதல்புணர்ப் பதனு லகக்கணை
மகத்திடை வகுத்த வருட் பெருஞ்ஜோதி

வானிடைக் காற்றுங் காற்றிடை நெருப்பு
மானற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

நெருப்பிடை நீரு நீரிடைப் புவியு
மருப்பிட வகுத்த வருட் பெருஞ்ஜோதி

நீர்மே னெருப்பு நெருப்பினமே லுயிர்ப்பு
மார்வுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

புனன்மேற் புவியும் புவிமேற் புடைப்பு
மனன்மேல் வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பகுதிவான் வெளியிற் படர்ந்த மாபூத
வகல்வெளி வகுத்த வருட் பெருஞ்ஜோதி

உயிர்வெளி யிடையே யுரைக்கரும் பகுதி
யயல்வெளி வகுத்த வருட் பெருஞ்ஜோதி

உயிர்வெளி யதனை யுணர்கலை வெளியி
லயலற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

கலைவெளி யதனைக் கலப்பறு சுத்த
வலர்வெளி வகுத்த வருட் பெருஞ்ஜோதி

சுத்தநல் வெளியைத் துரிசறு பரவெளி
யதனிடை வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பரவெளி யதனைப் பரம்பர வெளியி
லரசுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பரம்பர வெளியைப் பராபர வெளியி
லரந்தைகெட வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பராபர வெளியைப் பகர்பெரு வெளியி
லராவற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பெருவெளி யதனைப் பெருஞ்சுக வெளியி
லருளுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

குணமுதல் கருவிகள் கூடிய பகுதியி
லணைவுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

மனமுதல் கருவிகள் மன்னுயிர் வெளியிடை
யனமுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

காலமே முதலிய கருவிகள் கலைவெளி
யாலுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

துரிசறு கருவிகள் சுத்தநல் வெளியிடை
யரசுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

இவ்வெளி யெல்லா மிலங்க வண்டங்க
ளெவ்வயி னமைத்த வருட் பெருஞ்ஜோதி
ஓங்கிய வண்ட மொளிபெற முச்சுட
ராங்கிடை வகுத்த வருட் பெருஞ்ஜோதி
சிருட்டித் தலைவரைச் சிருட்டி யண்டங்களை
யருட்டிறல் வகுத்த வருட் பெருஞ்ஜோதி
காவல்செய் தலைவரைக் காவ லண்டங்களை
யாவகை யமைத்த வருட் பெருஞ்ஜோதி
அழித்தல் செய் தலைவரை யவரண்டங்களை
யழுக்கற வமைத்த வருட் பெருஞ்ஜோதி
மறைத்திடு தலைவரை மற்று மண்டங்களை
யறத்தொடு வகுத்த வருட் பெருஞ்ஜோதி
தெளிவுசெய் தலைவரைத் திகழு மண்டங்களை
யளிபெற வகுத்த வருட் பெருஞ்ஜோதி
விந்துவாஞ் சத்தியை விந்தி னண்டங்களை
யந்திறல் வகுத்த வருட் பெருஞ்ஜோதி
ஓங்கார சத்திக ளுற்ற வண்டங்களை
யாங்காங் கமைத்த வருட் பெருஞ்ஜோதி
சத்தத் தலைவரைச் சாற்று மண்டங்களை
யத்தகை வகுத்த வருட் பெருஞ்ஜோதி
நாதமாம் பிரமு நாத வண்டங்களு
மாதரம் வகுத்த வருட் பெருஞ்ஜோதி
பகர்பரா சத்தியைப் பதியு மண்டங்களை
யகமற வகுத்த வருட் பெருஞ்ஜோதி
பரசிவ பதியைப் பரசிவாண்டங்களை
வரசுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி
எண்ணில் பல்சத்தியை யெண்ணி லண்டங்களை
வண்ணுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி
அளவில் பல்சத்தரை யளவி லண்டங்களை
யளவுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி
உயிர்வகை யண்ட முலப்பில வெண்ணில
வயாவுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி
களவில கடல்வகை கங்கில கரையில
வளவில வகுத்த வருட் பெருஞ்ஜோதி
கடலவை யனைத்துங் கரையின்றி நிலையுற
வடலன லமைத்த வருட் பெருஞ்ஜோதி
கடல்களு மலைகளுங் கதிகளு நதிகளு
மடலுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

கடலிடைப் பல்வளங் கணித்ததிற் பல்லுயி
ரடலுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

மலையிடைப் பல்வளம் வகுத்ததிற் பல்லுயி
ரலைவற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

ஒன்றினி லொன்றே யொன்றிடை யாயிர
†மன்றற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

பத்திடை யாயிரம் பகரதிற் கோடி
யத்துற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

நூற்றிடை யிலக்க நுவலதி லனந்த
மாற்றிடை வகுத்த வருட்பெருஞ்ஜோதி

கோடியி லனந்த கோடிபல் கோடி
யாடுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

வித்திய லொன்றா விளைவியல் பலவா
வத்தகை யமைத்த வருட்பெருஞ்ஜோதி

விளைவிய லனைத்தும் வித்திடை யடங்க
வளவுசெய் தமைத்த வருட்பெருஞ்ஜோதி

வித்தும் பதமுமவ் விளையுப கரிப்பு
மத்திற லமைத்த வருட்பெருஞ்ஜோதி

வித்திடை முளையும் முளையிடை விளைவு
மத்தக வமைத்த வருட்பெருஞ்ஜோதி

வித்தினுள் வித்தும் வித்ததில் வித்து
மத்திறம் வகுத்த வருட்பெருஞ்ஜோதி

விளைவினுள் விளைவும் விளைவதில் விளைவு
*மளையுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

முளையதின் முளையும் முளையினுள் முளையு
மளைதர வமைத்த வருட்பெருஞ்ஜோதி

வித்திடைப் பதமும் பதத்திடை வித்து
‡மத்துற வமைத்த வருட்பெருஞ்ஜோதி

பதமதிற் பதமும் பதத்தினுட் பதமு
மதிர்வற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

ஒற்றுமை வேற்றுமை யுரிமைக ளனைத்து
மற்றன வகுத்த வருட்பெருஞ்ஜோதி

பொருணிலை யுறுப்பியல் பொதுவகை முதலிய
வருளுற வகுத்த வருட்பெருஞ்ஜோதி

---

† அன்று-பகை. * அளை-அளைதல் என்னும் பொருள் மேல்நின்ற முதனிலைத் தொழிற்பெயர். ‡ அத்து-அது என்னும் சுட்டுப்பெயரினிடையில் தகரமெய் விரித்தல்.

உறவினி லுறவு முறவினிற் பகையு
மறனுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பகையினிற் பகையும் பகையினி லுறவு
மகைவுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பாதியு முழுதும் பதிசெயு மந்தமு
மாதியும் வகுத்த வருட் பெருஞ்ஜோதி

துணையு நிமித்தமுந் துலங்கதி னதுவு
மணைவுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

உருவதி னுருவு முருவினுள் ளுருவு
மருளுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

அருவினுள் ளருவு மருவதி லருவு
மருளிய லமைத்த வருட் பெருஞ்ஜோதி

கரணமு மிடமுங் கலைமுத லணையுமோ
ரணிலை வகுத்த வருட் பெருஞ்ஜோதி

உருவதி லருவு மருவதி லுருவு
மருளுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

வண்ணமும் வடிவு மயங்கிய வகைபல
வண்ணுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

சிறுமையிற் சிறுமையுஞ் சிறுமையிற் பெருமையு
மறிதர வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பெருமையிற் பெருமையும் பெருமையிற் சிறுமையு
மருணிலை வகுத்த வருட் பெருஞ்ஜோதி

திண்மையிற் றிண்மையுந் திண்மையி னொண்மையு
மண்மையின வகுத்த வருட் பெருஞ்ஜோதி

மென்மையின் மென்மையும் மென்மையில் வன்மையு
மன்மையுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

அடியினுள் ளடியு மடியிடை யடியு
மடியுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

நடுவினு ணடுவு நடுவதி னடுவு
மடர்வுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

முடியினுண் முடியு முடியினின் முடியு
மடர்தர வமைத்த வருட் பெருஞ்ஜோதி

அகப்பூ வகவுறுப் பாக்க வதற்கவை
யகத்தே வகுத்த வருட் பெருஞ்ஜோதி

புறப்பூ புறத்திற் புனையுரு வாக்கிட
வுறத்துடன் வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அகப்புறப் பூவகப் புறவுறுப் பியற்றிட
வகத்திடை வகுத்த வருட் பெருஞ்ஜோதி

புறப்புறப் பூவதிற புறப்புற வுறப்புற
வறத்திடை வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பாரிடை வேர்வையிற் பையிட முட்டையி
லாருயி ரமைக்கு மருட் பெருஞ்ஜோதி

ஊர்வன பறப்பன வுறுவன நடப்பன
வார்வுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அசைவில்வசைவுள வாருயிர்த் திரள்பல
வசைவற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

அறிவொரு வகைமுத லைவகை யறுவகை
யறிதர வகுத்த வருட் பெருஞ்ஜோதி

வெவ்வே றியலொடு வெவ்வேறு பயனுற
வவ்வா றமைத்த வருட் பெருஞ்ஜோதி

சித்திர விசித்திர சிருட்டிகள் பலபல
வத்தகை வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பெண்ணினுளாணு மாணினுட் பெண்ணு
மண்ணுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பெண்ணினுண் மூன்று மாணினுள்ளிரண்டு
மண்ணுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பெண்ணிடை நான்கு மாணிடை மூன்று
மண்ணுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

பெண்ணிய லாணு மாணியற் பெண்ணு
மண்ணுற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

பெண்டிறற் புறத்து மாண்டிற லகத்து
மண்டுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பெண்ணியன் மனமு மாணிய லறிவு
மண்ணுற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

தனித்தனி வடிவினுந் தக்கவாண் பெண்ணிய
லனைத்துற வகுத்த வருட் பெருஞ்ஜோதி

உனற்கரு முயிருள வுடலுள வுலகுள
வனைத்தையும வகுத்த வருட் பெருஞ்ஜோதி

ஓவுறு வெழுவகை யுயிர்முத லனைத்து
மாவகை வகுத்த வருட் பெருஞ்ஜோதி

பைகளின் முட்டையிற் பாரினில் வேர்வினி
லைபெற வமைத்த வருட் பெருஞ்ஜோதி

தாய்கருப் பையினுட் டங்கிய வுயிர்களை
யாய்வுறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

முட்டைவாய்ப் பயிலு முழுவுயிர்த் திரள்களை
யட்டமே காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

நிலம்பெறு முயிர்வகை நீள்குழு வனைத்து
மலம்பெறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

வேர்வுறு வுதித்த மிகுவுயிர்த் திரள்களை
யாவுறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

உடலுறு பிணியா லுயிருடல் கெடாவகை
யடலுறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

சிசுமுதற் பருவச் செயல்களி னுயிர்களை
யசைவறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

உயிருறு முடலையு முடலுறு முயிரையு
மயர்வறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

பாடுறு மவத்தைகள் பலவினு முயிர்களை
யாடுறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

மூச்சுட ராதியா லெச்சக வுயிரையு
* மச்சறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

வான்முகிற் சத்தியான் மழைபொழிவித் துயி
† ரானறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

இன்புறு சத்தியா லெழின்மழை பொழிவித்
தன்புறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

எண்ணியல் சத்தியா லெல்லா வுலகினு
மண்ணுயிர் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

அண்டப் புறப்புற வமுதம் பொழிந்துயி
ரண்டுறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

தேவரை யெல்லாந் திகழ்வுற வமுதளித்
தாவகை காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

அகப்புற வமுதளித் தைவ ராதிகளை
வகைப்படக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

தருமக வமுதாற் சததி சத்தர்களை
யருளினிற் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

காலமு நியதியுங் காட்டி யெவ்வுயிரையு
‡ மாலறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

விச்சையை யிச்சையை விளைவித் துயிர்களை
யச்சறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

போகமு மளிப்பும் பொருந்துவித் துயிர்களை
யாகவுட் காக்கு மருட் பெருஞ்ஜோதி

கலையறி வளித்துக் களிப்பினி லுயிரெலா
மலைவறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

---

* அச்சு-அஞ்சுதலென்னு முதனிலைத் தொழிற்பெயர்.

† அற மிகவும். ‡ ஆல் அசைவு.

விடய நிகழ்ச்சியான் மிகுமுயி ரனைத்தையு
மடைவுறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

துன்பளித் தாங்கே சுகமளித் துயிர்களை
யன்புறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

கரணேந்தி யத்தாற் களிப்புற வுயிர்களை
யரணேர்ந தளித்தரு ளருட் பெருஞ்ஜோதி

எத்தகை யெவ்வுயி ரெண்ணின வவ்வுயிாக்
கத்தகை யளித்தரு ளருட் பெருஞ்ஜோதி

எப்படி யெவ்வுயி ரெண்ணின வவ்வுயிர்க்
கப்படி யளித்தரு ளருட் பெருஞ்ஜோதி

எங்கா துயிர்த்திர ளெங்கெங் கிருந்தன
வ ஙகாங களித்தரு ளருட் பெருஞ்ஜோதி

சொல்லுறு மசுதகத் தொல்லுயிர்க் கவ்வகை
யல்லலிற் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

சுத்தமு மசுத்தமுந் தோயுயிர்க் கிருமையி
னத்தகை காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

வாய்ந்திடுஞ் சுத்த வகையுயிர்க் கொருமையி
னாய்ந்துறக் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

எவையெலா மெவையெலா மீண்டின வீண்டின
மவையெலாங் காத்தரு ளருட் பெருஞ்ஜோதி

அண்டத் துரிசையு மகிலத் துரிசையு
மண்டற வடக்கு மருட் பெருஞ்ஜோதி

பிண்டத் துரிசையும் பேருயிர்த் துரிசையு
மண்டற வடக்கு மருட் பெருஞ்ஜோதி

உயிருறு மாயையி னுறுவிரி வனைத்து
மயிரற வடக்கு மருட் பெருஞ்ஜோதி

உயிருறு மிருவினை யுறுவிரி வனைத்து
மயர்வற வடக்கு மருட் பெருஞ்ஜோதி

காமப் புடைப்புயிர் கண்டொடா வகை
யாமற வடக்கு மருட் பெருஞ்ஜோதி

பொங்குறு வெகுளிப் புடைப்புக ளெல்லா
மங்கற வடக்கு மருட் பெருஞ்ஜோதி

மதம்புரை மோகமு மற்றவு மாங்காங்
கதம்பெற வடக்கு மருட் பெருஞ்ஜோதி

வடுவுறு மசுத்த வாதனை யனைத்தையு
மடர்பற வடக்கு மருட் பெருஞ்ஜோதி

சுத்தமு மசுத்தமுந் தோய்ந்த வாதனைகளை
அத்தகை யடக்கு மருட் பெருஞ்ஜோதி

நால்வயிற் றுரிசு நண்ணுயி ராதியி
லாலற வடக்கு மருட் பெருஞ்ஜோதி
நால்வயிற் படைப்பு நால்வயிற் காப்பு
மாலற வடக்கு மருட் பெருஞ்ஜோதி
மூவிடத் திருமையின் முன்னிய தொழில்களி
லாவிடத் தடக்கு மருட் பெருஞ்ஜோதி
மூவிட மும்மையின் முன்னிய தொழில்களி
லாவிட மடக்கு மருட் பெருஞ்ஜோதி
தத்துவச் சேட்டையுந் தத்துவத் துரிசு
மத்தகை யடக்கு மருட் பெருஞ்ஜோதி
சுத்தமா நிலையிற் சூழ்வுறு விரிவை
யத்தகை யடக்கு மருட் பெருஞ்ஜோதி
காரின் மாமாயைக் கரும்பெருந் திரையா
லரசது மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
பேருறு நீலப் பெருந்திரை யதனா
லாருயிர் மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
பச்சைத் திரையாற் பரவெளி யதனை
யச்சுற மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
செம்மைத் திரையாற் சித்துறு வெளியை
யம்மையின் மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
பொன்மைத் திரையாற் பொருளுறு வெளியை
யன்மையின் மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
வெண்மைத் திரையான் மெய்ப்பதி வெளியை
யண்மையின் மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
கலப்புத் திரையாற் கருதனு பவங்களை
யலப்புற மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
விடய நிலைகளை வெவ்வேறு திரைகளா
லடர்புற மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
தத்துவ நிலைகளைத் தனித்தனித் திரையா
லத்திற மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
திரைமறைப் பெல்லாந் தீர்த்தாங் காங்கே
யரசுறக் காட்டு மருட் பெருஞ்ஜோதி
தோற்றமா மாயைத் தொடர்பறுத் தருளி
னாற்றலைக் காட்டு மருட் பெருஞ்ஜோதி
சுத்தமா மாயைத் தொடர்பறுத் தருளை
யத்தகை காட்டு மருட் பெருஞ்ஜோதி
எனைத் தாணவமுத லெல்லாந் தவிர்த்தே
வனுக்கிரகம் புரி யருட் பெருஞ்ஜோதி

விடைய மறைப்பெலாம் விலைவித் துயிர்களை
யடைவுறத் தெருட்டு மருட் பெருஞ்ஜோதி
சொருப மறைப்பெலாந் தொலைப்பித் துயிர்களை
யருளினிற் றெருட்டு மருட் பெருஞ்ஜோதி
மறைப்பின் மறந்தன வருவித் தாங்கே
யறதொடு தெருட்டு மருட் பெருஞ்ஜோதி
எவ்வகை யுயிர்களு மின்புற வாங்கே
யவ்வகை தெருட்டு மருட் பெருஞ்ஜோதி
கடவுளா மறைப்பைக் கடிந்தவர்க் கின்ப
மடையுறத் தெருட்டு மருட் பெருஞ்ஜோதி
சத்திகண் மறைப்பைத் தவிர்த்தவர்க் கின்ப
மதனுறத் தெருட்டு மருட் பெருஞ்ஜோதி
சததர்கண் மறைப்பைத் தவிர்த்தவர்க் கின்ப
மத்தகை தெருட்டு மருட் பெருஞ்ஜோதி
படைக்குந் தலைவர்கள் பற்பல கோடியை
யடைப்புறப் படைக்கு மருட் பெருஞ்ஜோதி
காக்குந் தலைவர்கள் கணக்கில் பல்கோடியை
யாக்குறக காக்கு மருட் பெருஞ்ஜோதி
அடக்குந் தலைவர்க ளளவிலர் தம்மையு
மடர்ப்பற வடக்கு மருட் பெருஞ்ஜோதி
மறைக்குந் தலைவர்கள் வகைபல கோடியை
யறதொடு மறைக்கு மருட் பெருஞ்ஜோதி
தெருட்டுந் தலைவர்கள் சேர்பல கோடியை
யருட்டிறந் தெருட்டு மருட் பெருஞ்ஜோதி
ஐந்தொழி லாதிசெய் யைவ ராதிகளை
யைந்தொழி லாதிசெ யருட் பெருஞ்ஜோதி
இறந்தவ ரெல்லா மெழுந்திட வுலகி
லறந்தலை யளித்த வருட் பெருஞ்ஜோதி
செத்தவ ரெல்லாஞ் சிரித்தாங் கெழுதிற
லத்தகை காட்டிய வருட் பெருஞ்ஜோதி
இறந்தவ ரெழுகவென் றெண்ணியாங் கெழுப்பிட
வறந்துணை யெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி
செத்தவ ரெழுகெனச் செப்பியாங் கெழுப்பிட
வத்திற லெனக்கரு ளருட் பெருஞ்ஜோதி
சிததெலாம் வல்ல திறலளித் தெனக்கே
யத்த னென்றோங்கு மருட் பெருஞ்ஜோதி
ஒன்றதி ரண்டது வொன்றினி ரண்டது
வொன்றினி னொன்றது வொன்றெனு மொன்றே

ஒன்றல விரண்டல வொன்றினி ரண்டல
ஒன்றினு ளொன்றல வொன்றெனு மொன்றே

ஒன்றினி லொன்றுள வொன்றினி லொன்றில
ஒன்றுற வொன்றிய வொன்றெனு மொன்றே

களங்கநீத் துலகங் களிப்புற மெய்ந்நெறி
விளங்க வென்னுளே விளங்கு மெய்ப்பொருளே

மூவிரு நிலையின் முடிநடு முடிமேல்
ஓவற விளங்கு மொருமை மெய்ப்பொருளே

எழுநிலை மிசையே யின்புரு வாகி
வழுநிலை நீக்கி வயங்கு மெய்ப்பொருளே

நவநிலை மிசையே நடுவுறு நடுவே
சிவமய மாகித் திகழ்ந்த மெய்ப்பொருளே

ஏகா தசநிலை யாததி னடுவே
ஏகா தனமிசை யிருந்த மெய்ப்பொருளே

திரையோ தசநிலை சிவவெளி நடுவே
வரையோ தருசுக வாழ்க்கை மெய்ப்பொருளே

ஈரெண் ணிலையென வியம்புமே னிலையிற்
பூரண சுகமாய்ப் பொருந்து மெய்ப்பொருளே

எல்லா நிலைகளு மிசைந்தாங் காங்கே
எல்லா மாகி யிலங்கு மெய்ப்பொருளே

மனாதிகள் பொருந்தா வானடு வானு
யனாதி யுண்மையதா யமர்ந்த மெய்ப்பொருளே

தானொரு தானாய்த் தானே தானாய்
ஊனுயிர் விளக்கு மொருதனிப் பொருளே

அதுவினு ளதுவா யதுவே யதுவாய்ப்
பொதுவினுள் நடிக்கும் பூரணப் பொருளே

இயல்பினு ளியல்பா யியல்பே யியல்பா
உயலுற விளங்கு மொருதனிப் பொருளே

அருவினு ளருவா யருவரு வருவா
யுருவினுள் விளங்கு மொருபரம் பொருளே

அலகிலாச் சித்தா யதுநிலை யதுவா
யுலகெலாம் விளங்கு மொருதனிப் பொருளே

பொருளினுட் பொருளாய்ப் பொருளது பொருளா
யொருமையின் விளங்கு மொருதனிப் பொருளே

ஆறுறு சித்திக ளறுபத்து நான்கெழு
கோடியும் விளங்கக் குலவு மெய்ப்பொருளே

கூட்டுறு சித்திகள் கோடிபல் கோடியும்
ஆட்டுற விளக்கு மருட் பெரும்பொருளே

அறிவுறு சித்திக ளனந்த கோடிகளும்
பிறிவற விளக்கும் பெருந்தனிப் பொருளே
வீடுக ளெல்லாம் விதிநெறி விளங்க
ஆடல்செய் தருளு மரும்பெரும்பொருளே
பற்றுக ளெல்லாம் பதிநெறி விளங்க
உற்றரு ளாடல்செ யொருதனிப் பொருளே
பரத்தினிற் பரமே பரத்தின்மேற் பரமே
பரத்தினுட் பரமே பரம்பர பரமே
பரம்பெறும் பரமே பரந்தரும் பரமே
பரமபதம பரமே பரஞ் சிதமபரமே
பரம்புகழ் பரமே பரம்பகர் பரமே
பரஞ்சுக பரமே பரஞ்சிவ பரமே
பரங்கொள் சிற்பரமே பரஞ்செய தற்பரமே
தரங்கொள் பொறபரமே தனிப்பெருமபரமே
வரம பராபரமே வணம பராபரமே
பரம் பராபரமே பதம் பராபரமே
சத்திய பதமே சத்துவ பதமே
நித்திய பதமே நிர்க்குண பதமே
தத்துவ பதமே தற்பத பதமே
சித்துறு பதமே சிற்சுக பதமே
தம்பரம பதமே தனிச்சுகம் பதமே
அம்பரம் பதமே யருட்பரம பதமே
தந்திர பதமே சந்திர பதமே
மந்திர பதமே மந்தண பதமே
நவந்தரு பதமே நடந்தரு பதமே
சிவந்தரு பதமே சிவசிவ பதமே
பிரம மெய்க்கதியே பிரம மெய்ப்பதியே
பிரம நிர்க்குணமே பிரம சிற்குணமே
பிரமமே பிரமப் பெருநிலை மிசையுறும்
பரமமே பரம பதந்தருஞ் சிவமே
அவனோ டவளா யதுவா யலதாய்
நவமா நிலைமிசை நண்ணிய சிவமே
எம்பொருளாகி யெமக்க கருள் புரியுஞ்
செம் பொருளாகிய சிவமே சிவமே
ஒருநிலை யிதுவே யுயர்நிலை யெனுமொரு
திருநிலை மேவிய சிவமே சிவமே
மெய்வைத் தழியா வெறுவெளி நடுவுறு
தெய்வப் பதியாஞ் சிவமே சிவமே

புனைதவிர்த் தெனக்கே பொன்முடி சூட்டிச்
சிரமுற நாட்டிய சிவமே சிவமே

கல்வியுஞ் சாகாக் கல்வியு மழியாச்
செல்வமு மளித்த சிவமே சிவமே

அருளமு தெனக்கே யளித்தரு ணெறிவாய்த்
தெருளுற வளர்க்குஞ் சிவமே சிவமே

சத்தெலா மாகியுந் தானொரு தானாஞ்
சித்தெலாம் வல்லதோர் திருவருட் சிவமே

எங்கே கருணை யியற்கையி னுள்ளன
அங்கே விளங்கிய வருட்பெருஞ் சிவமே

யாரே யென்னினு மிரங்குகின் றார்க்குச்
சீரே யளிக்குஞ் சிதம்பர சிவமே

பொய்ந்நெறி யனைத்தினும் புகுத்தா தெனையருட்
செந்நெறி செலுத்திய சிற்சபைச் சிவமே

கொல்லா நெறியே குருவரு ணெறியெனப்
பல்கா லெனக்குப் பகர்ந்த மெய்ச்சிவமே

உயிரெலாம் பொதுவி னுளம்பட நோக்குக
செயிரெலாம் விடுகெனச் செப்பிய சிவமே

* பயிர்ப்புறு காரணப் பரிசுகள் பற்பல
உயிர்த்திர ளொன்றென வுரைத்த மெய்ச்சிவமே

உயிருள்யா மெம்மு ளுயிரிவை யுணர்ந்தே
உயிர்நலம் பரவுகென் றுரைத்த மெய்ச்சிவமே

இயலரு ளொளியோ ரேகதே சத்தினும்
உயிரொளி காண்கவென் றுரைத்த மெய்ச்சிவமே

அருளலா தணுவு மசைந்திடா ததனால்
அருணலம் பரவுகென் றறைந்த மெய்ச்சிவமே

அருளுறி னெல்லா மாகுமீ துண்மை
அருளுற முயல்கவென் றருளிய சிவமே

அருணெறி யொன்றே தெருணெறி மற்றெலாம்
இருணெறி யெனவெனக் கியம்பிய சிவமே

அருள்பெறிற் றுரும்புமோ ரைந்தொழில் புரியுந்
தெருளிது வெனவே செப்பிய சிவமே

அருளறி வொன்றே யறிவுமற் றெல்லாம்
மருளறி வென்றே வகுத்த மெய்ச்சிவமே

அருட்சுக மொன்றே யரும்பெறற் பெருஞ்சுகம்
மருட்சுகம் பிறவென வகுத்த மெய்ச்சிவமே

---

பயிர்ப்பு அருவருப்பு.

அருட்பே றதுவே யரும்பெறற் பெரும்பே
றிருட் பேறறுக்குமென் றியம்பிய சிவமே

அருட்டனி வல்லப மதுவே யெலாஞ்செய்
பொருட்டனிச் சித்தெனப் புகன்ற மெய்ச்சிவமே

அருளறி யாரதமை யறியா ரெம்மையும்
பொருளறி யாரெனப் புகன்ற மெய்ச்சிவமே

அருணிலை யொன்றே யனைத்தும் பெறுநிலை
பொருணிலை காண்கெனப் புகன்ற மெய்ச்சிவமே

அருள்வடி வதுவே யழியாத தனிவடி
வருள்பெற முயலுகென் றருளிய சிவமே

அருளே நம்மிய லருளே நம்முரு
அருளே நம்வடி வாமென்ற சிவமே

அருளே நம்மடி யருளே நம்முடி
அருளே நம்நடு வாமென்ற சிவமே

அருளே நம்மறி வருளே நம்மனம்
அருளே நங்குண மாமென்ற சிவமே

அருளே நம்பதி யருளே நம்பதம
அருளே நம்மிட மாமென்ற சிவமே

அருளே நந்துணை யருளே நந்தொழில
அருளே நம்விருப பாமென்ற சிவமே

அருளே நமபொரு ளருளே நம்மொளி
அருளே நாமறி வாயென்ற சிவமே

அருளே நஙகுல மருளே நம்மினம்
அருளே நாமறி வாயென்ற சிவமே

அருளே நஞ்சுக மருளே நம்பெயா
அருளே நாமறி வாயென்ற சிவமே

அருளொளி யடைந்தனை யருளமு துண்டனை
அருண்மதி வாழ்கவென் றருளிய சிவமே

அருணிலை பெற்றனை யருள்வடி வுற்றனை
அருளர சியற்றுகென் றருளிய சிவமே

உள்ளகத் தமர்ந்தென துயிரிற் கலந்தருள்
வள்ளல் சிற்றம்பலம் வளர்சிவ பதியே

நிகரிலா வின்ப நிலைநடு வைத்தெனைத
தகவொடு காக்குந் தனிச்சிவ பதியே

சுத்த சன்மார்க்க சுகநிலை தனிலெனைச்
சத்திய னாக்கிய தனிச்சிவ பதியே

ஐவருங் காண்டற் கரும்பெரும் பொருளென்
கைவரப் புரிந்த கதிசிவ பதியே

துன்பற தொலைத் தருட்சோதியால் நிறைந்த
　　இன்ப மெனக்கரு ளெழிற்சிவ பதியே
சித்தமும் வாக்குஞ் செல்லாப் பெருநிலை
　　ஒத்துற வேற்றிய வொருசிவ பதியே
கையற வனைத்துங் கடிந்தெனைத் தேற்றி
　　வையமேல் வைத்த மாசிவ பதியே
இன்புறச் சிறியே னெண்ணுதோ றெண்ணுதோ
　　றன்பொடென் கண்ணுறு மருட்சிவ பதியே
பிழையெலாம் பொறுத்தெனுட் பிறங்கிய கருணை
　　மழையெலாம் பொழிந்து வளர்சிவ பதியே
உளத்தினுங் கண்ணினு முயிரினு மெனது
　　குளத்தினு நிரம்பிய குருசிவ பதியே
பரமுட னபரம் பகர்நிலை யிவையெனத்
　　திரமுற வருளிய திருவருட் குருவே
மதிநிலை யிரவியின் வளர்நிலை யனலின்
　　றிதிநிலை யனைத்துந் தெரித்த சற்குருவே
கணநிலை யவற்றின் கருநிலை யனைத்துங்
　　குணமுறத் தெரித்துட் குலவு சற்குருவே
பதிநிலை பசுநிலை பாச நிலையெலா
　　மதியுறத் தெரித்துள் வயங்கு சற்குருவே
பிரம ரகசியம் பேசி யெனுளத்தே
　　தரமுற விளங்குஞ் சாந்த சற்குருவே
பரம ரகசியம் பகர்ந்தென துளத்தே
　　வரமுற வளர்ந்து வயங்கு சற்குருவே
சிவரகசிய மெலாந் தெரிவித் தெனக்கே
　　நவநிலை காட்டிய ஞான சற்குருவே
சத்திய லனைத்துஞ் சித்தியன் முழுது
　　மத்தகை தெரித்த வருட்சிவ குருவே
அறிபவை யெல்லா மறிவித் தெனுள்ளே
　　பிறிவற விளங்கும் பெரிய சற்குருவே
கேட்பவை யெல்லாங் கேட்பித் தெனுள்ளே
　　வேட்கையின் விளங்கும் விமல சற்குருவே
காண்பவை யெல்லாங் காட்டுவித் தெனக்கே
　　மாண்பத மளித்து வயங்கு சற்குருவே
செய்பவை யெல்லாஞ் செய்வித் தெனக்கே
　　உய்பவை யளித்தெனு ளோங்கு சற்குருவே
உண்பவை யெல்லா முண்ணுவித் தென்னுள்
　　பண்பினில் விளங்கும் பரம சற்குருவே

சாகாக கல்வியின் றரமெலாங் கற்பித்
தேகாக கரப்பொரு ளீந்த சற்குருவே

சததியமாஞ் சிவ சித்திக ளனைத்தையு
மெய்ததகை யளித்தெனுள் விளங்கு சற்குருவே

எல்லா நிலைகளு மேற்றிச் சித்தெலாம்
வல்லானென வெனை வைத்த சற்குருவே

சீருற வருளாந் தேசுற வழியாப்
பேருற வென்னைப் பெற்ற நற்றாயே

பொருந்திய வருட் பெரும்போகமே யுறுகெனப்
பெருந்தயவா லெனைப் பெறற நற்றாயே

ஆன்ற சன்மார்க்க மணிபெற வெனைத்தான்
ஈனறமு தளிதத வினிய நற்றாயே

பசித்திடு தோறுமென பாலணைந் தருளால்
வசிததமு தருளபுரி வாயமை நற்றாயே

தளர்ந்ததோ றடியேன் சாற்பணைந தென்னை
உளந்தெளி வித்த வொருமை நற்றாயே

அருளமு தேமுத லைவகை யமுதமும்
தெருளுற வெனக்கருள் செல்வ நற்றாயே

இயலமுதே முத லெழுவகை யமுதமு
முயலுற வெனக்கரு ளுரிய நறறாயே

நண்புறு மெண்வகை நவவகை யமுதமும
பணபுற வெனககருள் பண்புடைத தாயே

மற்றுள வமுத வகையெலா மெனககே
உற்றுண வளித்தரு ளோஙகு நற்றாயே

கலககமு மசசமுங் கடிந்தென துளததே
அலக்கணுந் தவிாததரு ளனபுடைத தாயே

துய்ப்பினி லனைத்துஞ் சுகமபெற வளிதயெனக்
கெய்ப்பெலாந் தவிர்தத வினபுடைத் தாயே

சிததிக லெல்லாந் தெளிநதிட வெனககே
சத்தியை யளித்த தயவுடைத தாயே

சததிநி பாதந் தனையளித தெனைமேல்
வைத்தமு தளிதத மரபுடைததாயே

சத்தி சத்தர்களெலாஞ் சார்ந்தெனை தேவல்செய்
சிததியை யளித்த தெய்வ நற்றாயே

தன்னிக ரில்லாத் தலைவனைக் காட்டியே
என்னை மேலேற்றிய வினிய நற்றாயே

வெளிப்பட விரும்பிய விளைவெலா மெனக்கே
யளித்தளித் தின்புசெய் யன்புடைத் தாயே

எண்ணகத் தொங்குறத் தென்னை யெஞ்ஞான்றுங்
கண்ணெனக் காக்குங் கருணை நற்றாயே
இன்னரு ளமுதளித் திறவாத் திறல்புரிந்
தென்னை வளர்த்திடு மின்புடைத் தாயே
என்னுட லென்னுயி ரென்னறி வெல்லாம்
* தன்ன வென்றாக்கிய தயவுடைத் தாயே
தெரியா வகையாற் சிறியேன றளர்ந்திடத்
தரியா தணைத்த தயவுடைத் தாயே
சினமுத லனைத்தையுந் தீர்த்தெனை நனவினுங்
கனவினும் பிரியாக் கருணை நற்றாயே
தூக்கமுஞ் சோம்புமென் றுன்பமு மச்சமும்
ஏக்கமு நீக்கிய வென்றனித் தாயே
துன்பெலாந் தவிர்த்துளே யன்பெலா நிரம்ப
இன்பெலா மளித்த வென்றனித் தந்தையே
எல்லா நன்மையு மென்றனக் களித்த
எல்லாம் வல்லசித் தென்றனித் தந்தையே
நாயிற் கடையே னலம்பெறக் காட்டிய
தாயிற் பெரிதுந் தயவுடைத் தந்தையே
அறிவிலாப் பருவத் தறிவெனக் களித்தே
பிறிவிலா தமர்ந்த பேரருட் டந்தையே
புன்னிக ரில்லேன் பொருட்டிவ ணடைந்த
தன்னிக ரில்லாத் தனிப்பெருந் தந்தையே
அகத்தினும் புறத்தினு மமர்ந் தருட்ஜோதி
சகத்தினி லெனக்கே தந்த மெய்த்தந்தையே
இணையிலாக் களிப்புற் றிருந்திட வெனக்கே
துணையடி சென்னியிற் சூட்டிய தந்தையே
ஆதியீ றறியா வருளர சாட்சியிற்
சோதிமா மகுடஞ் சூட்டிய தந்தையே
எட்டிரண் டறிவித் தெனைத்தனி யேற்றிப்
பட்டி மண்டபத்திற் பதித்த மெய்த்தந்தையே
தங்கோ லளவது தந்தருட் சோதிச்
செங்கோல் செலுத்தெனச் செப்பிய தந்தையே
தன்பொரு ளனைத்தையுந் தன்னர சாட்சியி
லென் பொருளாக்கிய வென்றனித் தந்தையே
தன்வடி வனைத்தையுந் தன்னர சாட்சியி
லென் வடிவாக்கிய வென்றனித் தந்தையே

* தன்ன அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைப்பெயர்.

தன்சித் தனைத்தையுந் தன் சமுகத்தினி
லென் சித்தாக்கிய வென்றனித் தந்தையே

தன் வசமாகிய தத்துவ மனைத்தையு
மென வசமாக்கிய வென்னுயிர்த் தந்தையே

தன்கையிற் பிடித்த தனியருட் ஜோதியை
யென்கையிற் கொடுத்த வென்றனித் தந்தையே

தன்னையுந் தன்னருட் சத்தியின் வடிவையு
மென்னையு மொன்றென வியற்றிய தந்தையே

தன்னிய லென்னியல் தன்செய லென்செய
லென்ன வியற்றிய வென்றனித் தந்தையே

தன்னுரு வென்னுரு தன்னுரை யென்னுரை
என்ன வியற்றிய வென்றனித் தந்தையே

சதுரப் பேரருட் டனிப்பெருந் தலைவனென
றெதிரற் றோங்கிய வென்னுடைத் தந்தையே

மனவாக் கறியா வரைப்பினி லெனக்கே
இனவாக் கருளிய வென்னுயிர்த் தந்தையே

உணர்ந்துணர்ந் துணரினு முணராப் பெருநிலை
யணைந்திட வெனக்கே யருளிய தந்தையே

துரிய வாழ்வுடனே சுகபூரண மெனும்
பெரியவாழ் வளித்த பெருந்தனித் தந்தையே

ஏறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
பேறளித் தாண்ட பெருந்தகைத் தந்தையே

எவ்வகைத் திறத்தினும் மெய்த்துதற் கரிதா
மவ்வகை நிலையெனக் களித்த நற்றந்தையே

இனிப் பிறவாநெறி யெனக்களித் தருளிய
தனிப்பெருந் தலைமைத் தந்தையே தந்தையே

பற்றயாந் தஞ்சிய பரிவுகண் டணைந்தெனைச்
சற்று மஞ்சேலெனத் தாங்கிய துணையே

தளர்ந்த வத்தருணமென் றளர்வெலாந் தவிர்த்துட்
கிளர்ந்திட வெனக்குக் கிடைத்த மெய்த்துணையே

துறையிது வழியிது துணிவிது நீசெயும்
முறையிது வெனவே மொழிந்த மெய்த்துணையே

எங்குறு தீமையு மெனைத் தொடரா வகை
கங்குலும் பகலு மெய்க்காவல்செய் துணையே

வேண்டிய வேண்டிய விருப்பெலா மெனக்கே
யீண்டிருந் தருள்புரி யென்னுயிர்த் துணையே

இகத்தினும் பரத்தினு மெனக்கிடர் சாரா
தகத்தினும் புறத்தினு மமர்ந்த மெய்த்துணையே

அயாவற வெனக்கே யருட்டுணை யாகியென
னுயிரினுஞ் சிறந்த வொருமை யென்னட்பே

அன்பினிற் கலந்தென தறிவினிற் பயின்றே
யின்பினி லளைந்த வென்னின்னுயிர் நட்பே

நான்புரிவன வெலாந் தான்புரிந் தெனக்கே
வானபத மளிக்க வாய்த்த நன்னட்பே

உள்ளமு முணர்ச்சியு முயிருங் கலந்துகொண்
டெள்ளுறு நெய்யிலென் னுள்ளுறு நட்பே

செற்றமுந் தீமையுந் தீர்த்துநான் செய்த
குற்றமுங் குணமாகக் கொண்டவென் னட்பே

குணங்குறி முதலிய குறித்திடா தெனையே
யணங்கறக் கலந்த வன்புடை நட்பே

பிணக்கும் பேதமும் பேயுலகோர் புகல்
கணக்குந் தீர்த்தெனைக் கலந்த நன்னட்பே

சவலை நெஞ்சகத்தின் றளர்ச்சியு மச்சமுங்
கவலையுந் தவிர்த்தெனைக் கலந்த நன்னட்பே

களைப்பறிந் தெடுத்துக் கலக்கந் தவிர்த்தெனைக்
கிளைப்பறிந் துதவிய வென்னுயி ருறவே

தனைத் தழுவுறு தாணுசிறி தறியா
தெனைத் தழுவிய வென்னுயி ருறவே

மனக்குறை நீக்கி நலவாழ் வளித்தென்று
மெனக்குற வாகிய வென்னுயி ருறவே

துன்னு மனாதியே சூழ்ந்தெனைப் பிரியா
தென்னுற வாகிய வென்னுயி ருறவே

என்று மோர்நிலையா யென்று மோரியலா
யென்று முள்ளதுவா மென்றனிச் சத்தே

அனைத்துல கவைகளு மாங்காங் குணரினு
மினைத்தென வறியா வென்றனிச் சத்தே

பொதுமறை முடிகளும் புகலவை முடிகளு
மிதுவெனற் கரிதா மென்றனிச் சத்தே

ஆகம முடிகளு மவைபுகல் முடிகளு
மேகுதற் கரிதா மென்றனிச் சத்தே

சத்தியஞ் சத்தியஞ் சத்திய மெனவே
யித்தகை வழுத்து மென்றனிச் சத்தே

துரியமுங் கடந்ததோர் பெரியவான் பொருளென
வுரைசெய் வேதங்க ளுன்னு மெய்ச்சத்தே

அன்றத னப்பா லதன்பர மதுதா
னென்றிட நிறைந்த வென்றனிச் சத்தே

என்று முள்ளது வா யெங்குமோர் நிறைவா
யென்று மவிளங்கிடு மென்றனிச் சித்தே

சத்திகள் பலவாய்ச் சத்தர்கள் பலவா
யித்தகை விளங்கு மென்றனிச் சித்தே

தத்துவம் பலவாய்த் தத்துவி பலவா
யித்தகை விளங்கு மென்றனிச் சித்தே

படிநிலை பலவாய்ப் பதநிலை பலவா
யிடிவற விளங்கிடு மென்றனிச் சித்தே

மூர்த்தர்கள் பலவாய் மூர்த்திகள் பலவா
யேற்பட விளக்கிடு மென்றனிச் சித்தே

உயிர்வகை பலவா யுடல்வகை பலவா
யியலுற விளக்கிடு மென்றனிச் சித்தே

அறிபவை பலவா யறிவன பலவா
யெறிவற விளக்கிடு மென்றனிச் சித்தே

நினைபவை பலவாய் நினைவன பலவா
யினைவற விளக்கிடு மென்றனிச் சித்தே

காட்சிகள் பலவாய்க் காண்பன பலவா
யேட்சியின் விளக்கிடு மென்றனிச் சித்தே

செய்வினை பலவாய்ச் செய்வன பலவா
யெய்வற விளக்கிடு மென்றனிச் சித்தே

அண்ட சராசர மனைத்தையும் பிறவையு
மெண்டற விளக்கு மென்றனிச் சித்தே

எல்லாம் வல்ல சித்தெனமறை புகன்றிட
வெல்லாம் விளக்கிடு மென்றனிச் சித்தே

ஒன்றதி லொன்றென் றுரைக்கவும் படாதா
யென்றுமோர் படித்தா மென்றனி யின்பே

இதுவது வென்னு மியலுடை யதுவா
யெதிரற நிறைந்த வென்றனி யின்பே

ஆக்குறு மவத்தைக ளனைத்தையுங் கடந்துமே
லேக்கற நிறைந்த வென்றனி யின்பே

அறிவுக வறிவினி லதுவது வதுவா
வெறிவற் றோங்கிய வென்றனி யின்பே

விடய மெவற்றினு மேன்மேல் விளைந்தவை
யிடையிடை யோங்கிய வென்றனி யின்பே

இம்மையு மறுமையு மியம்பிடு மொருமையு
மெம்மையு நிரம்பிடு மென்றனி யின்பே

முத்தர்கள் சித்தர்கள் சத்திகள் சத்தர்க
ளெத்திறத் தவாக்குமா மென்றனி யின்பே

எல்லா நிலைகளி னெல்லா வுயிருறு
மெல்லா வின்புமா மென்றனி யின்பே
கருமபுறு சாறுங் கனிநதமுக கனியின
விரும்புறு மிரதமு மிககதீம் பாலும
குணங்கொள் கோறறேனுங கூட்டி யொன்றாக்கி
மணங்கொளப் பதஞ்செய் வகையுற வியற்றிய
உணவெனப் பலகா லுணக்கினும் நிகரா
வணமுறு மினப மயமே யதுவாயக்
கலந தறிவுருவாய்க கருதுதற் கரிதாய்
நலநதரு விளககமு நவிலருந் தண்மையும்
உள்ளதா யென்று முள்ளதா யென்று
முள்ளதா யென்ற னுயிருள முடம்புடன்
எல்லா மினிபப வியலுறு சுவையளித
தெல்லாம் வல்லசித தியற்கைய தாகிச்
சாகா வரமுந தனிததபே ரறிவும
மாகாதலிற் சிவ வல்லப சத்தியும்
செயற் கருமனநத சிததியு மினபமும்
மயக்கறத் தருநதிறல் வண்மைய தாகிப்
பூரண வடிவாய்ப் பொஙகி மேறறதும்பி
யாரண முடியுட னாகம முடியுங
கடநதென தறிவாங் கனன்மேற் சபைநடு
நடந திகழ்கின்ற மெய்ஞ்ஞான வாரமுதே
சததிய வமுதே தனிததிரு வமுதே
நிததிய வமுதே நிறைசிவ வமுதே
சச்சி தானநதத தனிமுத லமுதே
மெயச் சிதாகாச விளைவரு ளமுதே
ஆனநத வமுதே யருளொளி யமுதே
தானநத மிலலாத தததுவ வமுதே
நவநிலை தருமோா நல்லதெள் ளமுதே
சிவநிலை தனிலே திரணடவுள் ளமுதே
பொயபடாக கருணைப் புண்ணிய வமுதே
கைபடாப் பெருஞ்சிாக கடவுளவா னமுதே
அகம்புற மகப்புற மாகிய புறபபுற
முகந்த நான்கிடதது மோஙகிய வமுதே
பனிமுத னீககிய பரம்பர வமுதே
தனி முதலாய சிதம்பர வமுதே
உலகெலாங் கொள்ளினும் † உலப்பிலா வமுதே
வலகிலாப் பெருந்திற லற்புத வமுதே

† உலப்பு குறைவு.

அண்டமு மதன்மே லண்டமு மவற்றுள
பண்டமுங் காட்டிய பரம்பர மணியே

பிண்டமு மதிலுறு பிண்டமு மவற்றுள
பண்டமுங் காட்டிய பராபர மணியே

நினைத்தவை நினைத்தவை நினைத்தாங் கெய்துற
வனைத்தையுந் தருமோ ரரும்பெறன் மணியே

விண்பத மனைத்து மேற்பத முழுவதுங்
கண்பெற நடத்துங் ககனமா மணியே

பார்பத மனைத்தும் பகரடி முழுவதுஞ்
சார்புற நடத்துஞ் சரவொளி மணியே

அண்டகோ டிகளெலா மரைக்கணத் தேகிக்
கண்டு கொண்டிடவொளிர் கலைநிறை மணியே

சராசர வுயிர்தொறுஞ் சாற்றிய பொருடொறும்
விராவியுள் விளங்கும் வித்தக மணியே

மூவரு முனிவரு முத்தருஞ் சித்தருந்
தேவரு மதிகுஞ் சித்திசெய் மணியே

தாழ்வெலாந் தவிர்த்துச் சகமிசை யழியா
வாழ்வெனக் களித்த வளரொளி மணியே

நவமணி முதலிய நலமெலாந் தருமொரு
சிவமணி யெனுமருட் செல்வமா மணியே

வான்பெறற் கரிய வகையெலாம் விரைந்து
நான்பெற வளித்த நாத மந்திரமே

கற்பம் பலபல கழியினு மழியாப்
பொற்புற வளித்த புனித மந்திரமே

அகரமு முகரமு மழியாச் சிகரமும்
வகரமு மாகிய வாய்மை மந்திரமே

ஐந்தென வெட்டென வாறென நாலெனு
முந்துறு மறைமுறை மொழியு மந்திரமே

வேதமு மாகம விரிவுக ளனைத்து
மோத நின் றுலவா தோங்கு மந்திரமே

உடற்பிணி யனைத்தையு முயிர்ப்பிணி யனைத்தையு
மடர்ப்புறத் தவிர்த்த வருட்சிவ மருந்தே

சித்திக்கு மூலமாஞ் சிவமருந் தென வுளந்
தித்திக்கு ஞானத் திருவருண் மருந்தே

இறந்தவ ரெல்லா மெழுந்திடப் புரியுஞ்
சிறந்த வல்லபமுறு திருவருண் மருந்தே

மரணப் பெரும்பிணி வாராவகை மிகு
கரணப் பெருந்திறல் காட்டிய மருந்தே

நரைதிரை மூப்பவை நண்ணா வகைதரு
முரைதரு பெருஞ்சீ ருடைய நன்மருந்தே
என்றே யெனினு மிளமையோ டிருக்க
நன்றே தருமொரு ஞானமா மருந்தே
மலப்பிணி தவிர்த்தருள் வலந்தரு கின்றதோர்
நலத்தகை யதுவெனக் காட்டிய மருந்தே
சிற்சபை நடுவே திருநடம புரியு
மற்புத மருந்தெனு மானந்த மருந்தே
இடையுறப் படாத வியற்கை விளக்கமாய்த்
தடையொன்று மில்லாத் தகவுடை யதுவாய்
மாற்றிவை யென்ன மதித்தளப் பரிதா
யூற்றமும் வண்ணமு மொருங்குடை யதுவாய்க்
காட்சிக் கினிய நற்கலையுடை யதுவா
யாட்சிக் குரிய பன்மாட்சியு முடைத்தாய்க்
கைதவர் கனவினுங் காணுதற் கரிதாய்ச்
செய்தவப் பயனாந் திருவருள் வலத்தால்
உளம்பெரு மிடமெலா முதவுக வெனவே
வளம்பட வாய்த்த மன்னிய பொன்னே
புடம்படாத் தரமும் விடம்படாத் திறமும்
வடம்படா நலமும் வாய்த்தசெம் பொன்னே
மும்மையுந் தருமொரு செம்மையை யுடைத்தா
யிம்மையே கிடைத்திங் கிலங்கிய பொன்னே
எடுத்தெடுத் துதவினு மென்றுங் குறையா
தடுத்தடுத் தோங்கு மெய்யருளுடைப் பொன்னே
தளர்ந்திடே லெடுக்கின் வளர்ந்திடு வேமெனக்
கிளர்ந்திட வுரைத்துக் கிடைத்த செம்பொன்னே
எண்ணிய தோறு மியற்றுக வென்றெனை
யண்ணியென் கரத்தி லமர்ந்தபைம் பொன்னே
நீகேண் மறக்கினு நின்னையாம் விடேப்
போகே மெனவெனைப் பொருந்திய பொன்னே
எண்ணிய வெண்ணியாங் கெய்திட வெனக்குப்
பண்ணிய தவத்தாற் பழுத்தசெம் பொன்னே
விண்ணிய றலைவரும் வியந்திட வெனக்குப்
புண்ணியப் பயனாற் பூத்தசெம் பொன்னே
நால்வகை நெறியினு நாட்டுக வெனவே
பால்வகை முழுதும் பணித்தபைம் பொன்னே
எழுவகை நெறியினு மியற்றுக வெனவே
முழுவகை காட்டி முயங்கிய பொன்னே

எண்ணிய படியெலா மியற்றுக வென்றெனைப்
புண்ணிய பலத்தாற் பொருந்திய நிதியே
ஊழிதோ றூழி யுலப்புறா தோங்கி
வாழியென் றெனக்கு வாய்த்த நன்னிதியே
இதமுற வூழிதோ றெடுத்தெடுத் துலகோர்க
குதவினு முலவா தோங்கு நன்னிதியே
இருநிதி யெழுநிதி யியனவ நிதிமுதற்
றிருநிதி யெல்லாந் தருமொரு நிதியே
எவ்வகை நிதிகளு மிந்தமா நிதியிடை
யவ்வகை கிடைக்கு மென்றருளிய நிதியே
அற்புதம் விளங்கு மருட்பெரு நிதியே
கற்பனை கடந்த கருணைமா நிதியே
நற்குண நிதியே சற்குண நிதியே
நிர்க்குண நிதியே சிற்குண நிதியே
பளகிலா தோங்கும் பளிக்குமா மலையே
வளமெலா நிறைந்த மாணிக்க மலையே
மதியுற விளங்கு மரகத மலையே
வதிதரு பேரொளி வச்சிர மலையே
உரைமனங் கடந்தாங் கோங்கு பொன்மலையே
துரியமேல் வெளியிற் சோதிமா மலையே
புற்புதந் திரைநுரை புரைமுத லிலதோ
ரற்புதக் கடலே யமுதத் தெண்கடலே
இருட்கலை தவிர்த்தொளி யெல்லாம் வழங்கிய
வருட்பெருங் கடலே யானந்தக் கடலே
பவக்கடல் கடந்துநான் பார்த்தபோ தருகே
யுவப்புறு வளங்கொண் டோங்கிய கரையே
என்றுயர்ச் சோடைக ளெல்லாந் தவிர்த்துள
நன்றுற விளங்கிய நந்தனக் காவே
சேற்றுநீ ரின்றி நற் றீஞ்சுவை தருமோ
ரூற்றுநீ ரிரம்ப வுடைய பூந்தடமே
கோடைவாய் விரிந்த குளிர்தரு நிழலே
மேடைவாய் வீசிய மெல்லிய காற்றே
களைப்பறக் கிடைத்த கருணை நன்னீரே
யிளைப்பற வாய்த்த வின்சுவை யுணவே
தென்னை வாய்க்கிடைத்த செவ்விளநீரே
தென்னைவான் பலத்திற் றிருகு தீம்பாலே
நீர்நசை தவிர்க்கு நெல்லியங் கனியே
வேர்விளை பலவின் மென்சுவைச் சுளையே

கட்டமோம் பழமே கதலிவான் பழமே
யிட்ட நற்சுவைசெய யிலந்தையங் கனியே
புனிதவான் றருவிற புதுமையாம் பலமே
கனியெலாங் கூட்டிக் கலந்ததீஞ் சுவையே
இதந்தரு கரும்பி லெடுத்த தீஞ்சாறே
பதந்தரு வெல்லப் பாகினின் சுவையே
சாலவே யினிக்குஞ் சர்க்கரைத் திரளே
யேலவே நாவுக் கினிய கற்கண்டே
உலப்புறா தினிக்கு முயர்மலைத் தேனே
கலப்புறு மதுரங் கனிந்த கோற்றேனே
நவையிலா தெனக்கு நண்ணிய நறவே
சுவையெலாந் திரட்டிய தூய தீம்பதமே
பதம்பெறக் காய்ச்சிய பசுநறும் பாலே
யிதம்பெற வுருக்கிய விளம்பசு நெய்யே
உலர்ந்திடா தென்று மொருபடித் தாகி
மலர்ந்து நல்வண்ணம் வயங்கிய மலரே
இகந்தரு புவிமுத லெவ்வுல குயிர்களு
முகந்திட மணக்குஞ் சுகந்த நன்மணமே
யாழுறு மிசையே யினியவின் னிசையே
யேழுறு மிசையே யியலரு ளிசையே
திவவொளிப் பருவஞ் சேர்ந்த நல்லவளே
யவளொடுங் கூடி யடைந்ததோர் சுகமே
நாதநல் வரைப்பி னண்ணிய பாட்டே
வேதகீதத்தில் விளை திருப பாட்டே
நன்மார்க்க நாவி னவிற்றிய பாட்டே
சன்மார்க்க சங்கந் தழுவிய பாட்டே
நம்புறு மாகம நவிற்றிய பாட்டே
யெம்பல மாகிய வம்பலப் பாட்டே
என்மனக் கண்ணே என்னருட் கண்ணே
யென்னிரு கண்ணே யென்கணுண் மணியே
என்பெருங் களிப்பே யென்பெரும் பொருளே
யென்பெருந் திறலே யென்பெருஞ் செயலே
என்பெருந் தவமே யென்றவப் பலனே
யென்பெருஞ் சுகமே யென்பெரும் பேறே
என்பெரு வாழ்வே யென்றன் வாழ்முதலே
யென்பெரு வழக்கே யென்பெருங் கணக்கே
என்பெரு நலமே யென்பெருங் குலமே
யென்பெரு வலமே யென்பெரும் புலமே

என்பெரு வரமே யென்பெருந் தரமே
யென்பெரு நெறியே யென்பெரு நிலையே

என்பெருங் குணமே யென்பெருங் கருத்தே
யென்பெருந் தயவே யென்பெருங் கதியே

என்பெரும் பதியே யென்னுயி ரியலே
யென்பெரு நிறைவே யென்றனி யறிவே

தோலெலாங் குழைந்திடச் சூழ்நரம் பனைத்தும்
மேலெலாங் கட்டவை விட்டுவிட் டியங்கிட

என்பெலா நெக்குநெக் கியலிடை நெகிழ்ந்திட
மென்புடைத் தசையெலா மெய்யுறத் தளர்ந்திட

இரத்த மனைத்து முள்ளிறுகிடச் சுக்கில
மூரத்திடை பந்தித் தொருதிர ளாயிட

மடலெலா மூளை மலர்ந்திட வமுத
முடலெலா மூற்றெடுத் தோடி நிரம்பிட

ஒண்ணுதல் வியர்த்திட வொளிமுக மலர்ந்திடத்
தண்ணிய வுயிர்ப்பினிற் சாந்தந் ததும்பிட

உண்ணகை தோற்றிட வுரோமம் பொடித்திடக்
கண்ணினீர் பெருகிக் கால்வழிந் தோடிட

வாய்துடித் தலறிட வளர்செவித் துளைகளிற்
கூயிசைப் பொறியெலாங் கும்மெனக் கொட்டிட

மெய்யெலாங் குளிர்ந்திட மென்மார் பசைந்திடக்
கையெலாங் குவிந்திடக் காலெலாஞ் சுலவிட

மனங் கனிந் துருகிட மதிநிறைந் தொளிர்ந்திட
வினம்பெறு சித்த மியைந்து களித்திட

அகங்கார மாங்காங் கதிகரிப் பமைந்திடச்
சகங்காண வுள்ளந் தழைத்து மலர்ந்திட

அறிவுரு வனைத்து மானந்த மாயிடப்
பொறியுறு மான்மதப் போதமும் போயிடத்

தத்துவ மனைத்துந் தாமொருங் கொழிந்திடச்
சத்துவ மொன்றே தனித்துநின் றோங்கிட

உலகெலாம் விடய முளவெலா மறைந்திட
வலகிலா வருளி னாசைமேற் பொங்கிட

என்னுளத் தெழுந்துயி ரெலா மலர்ந்திட
வென்னுளத் தோங்கிய வென்றனி யன்பே

பொன்னடி கண்டருட் புத்தமு துணவே
யென்னுளத் தெழுந்த வென்னுடை யன்பே

தன்னையே யெனக்குத் தந்தருள் ளொளியா
லென்னை வேதித்த வென்றனி யன்பே

என்னுளே யரும்பி யென்னுளே மலர்ந்
தென்னுளே விரிந்த வென்னுடை யன்பே

என்னுளே விளங்கி யென்னுளே பழுத்
தென்னுளே கனிந்த வென்னுடை யன்பே

தன்னுளே நிறைவுறு தரமெலா மளித்தே
யென்னுளே நிறைந்த வென்றனி யன்பே

துன்புள வனைத்துந் தொலைத்தென துருவை
யின்புரு வாக்கிய வென்னுடை யன்பே

பொன்னுடம் பெனக்குப் பொருந்திடும் பொருட்டா
லென்னுளங் கலந்த வென்றனி யன்பே

தன்வச மாகித் ததும்பிமேற் பொங்கி
யென்வசங் கடந்த வென்னுடையன்பே

தன்னுளே பொங்கிய தண்ணமு தணவே
யென்னுளே பொங்கிய வென்றனி யன்பே

அருளொளி விளங்கிட வாணவ மெனுமோ
ரிருளற வென்னுளத் தேற்றிய விளக்கே

துன்புறு தத்துவத் துரிசெலா நீக்கிநல்
லின்புற வென்னுளத் தேற்றிய விளக்கே

மயலற வழியா வாழ்வு மேன்மேலு
மியலுற வென்னுளத் தேற்றிய விளக்கே

இடவெளி யனைத்து மியலொளி விளங்கிட
நடுவெளி நடுவே நாட்டிய விளக்கே

கருவெளி யனைத்துங் கதிரொளி விளங்கிட
வுருவெளி நடுவே யொளிதரு விளக்கே

தேற்றிய வேதத் திருமுடி விளங்கிட
வேற்றிய ஞான வியலொளி விளக்கே

ஆகம முடிமே லருளொளி விளங்கிட
வேகம தறவே விளங்கொளி விளக்கே

ஆரியா வழுத்திய வருணிலை யனுதி
காரியம் விளக்குமோர் காரண விளக்கே

தண்ணிய வமுதே தந்தென் னுளத்தே
புண்ணியம் பலித்த பூரண மதியே

உய்யா வமுத முதவி யென்னுளத்தே
செய்தவம் பலித்த திருவளர் மதியே

பதியெலாந் தழைக்கப் பதம்பெறு மமுத
நிதியெலா மளித்த நிறைதிரு மதியே

பாலெனத் தண்கதிர் பரப்பி யென்றென்று
மேல்வெளி விளங்க விளங்கிய மதியே

உயங்கிய வுள்ளமு முயிருந் தழைத்திட
வயங்கிய கருணை மழைபொழி மழையே

எனையும் பணிகொண் டென்னுளே நிரம்ப
மனனியல் கருணை மழைபொழி மழையே

உளங்கொளு மெனக்கே யுவகைமேற் பொங்கி
வளங்கொளக் கருணை மழைபொழி மழையே

நலந்தர வுடலுயிர் நல்லறி வெனக்கே
மலர்ந்திடக் கருணை மழைபொழி மழையே

தூய்மையா லெனது துரிசெலா நீக்கிநல்
வாய்மையாற் கருணை மழைபொழி மழையே

வெம்மல விரவது விடிதருணந் தனிற்
செம்மையி லுதித்துளந் திகழ்ந்தசெஞ் சுடரே

திரையெலாந் தவிர்த்துச் செவ்வியுற் றாங்கே
வரையெலாம் விளங்க வயங்குசெஞ் சுடரே

அலகிலாத் தலைவர்க ளரசுசெய் தத்துவ
வுலகெலாம் விளங்க வோங்குசெஞ் சுடரே

முன்னுறு மலவிருள் முழுவது நீங்கியே
யென்னுள வரைமே லெழுந்தசெஞ் சுடரே

ஆதியு நடுவுட னந்தமுங் கடந்த
ஜோதியா யென்னுளஞ் சூழ்ந்தமெய்ச் சுடரே

உள்ளொளி யோங்கிட வுயிரொளி விளங்கிட
வெள்ளொளி காட்டிய மெய்யருட் கனலே

நலங்கொளப் புரிந்திடு ஞான யாகத்திடை
வலஞ்சுழித் தெழுந்து வளர்ந்தமெய்க் கனலே

வேதமு மாகம விரிவும் பரம்பர
நாதமுங் கடந்த ஞானமெய்க் கனலே

எண்ணிய வெண்ணிய வெலாந்தர வென்னுள
நண்ணிய புண்ணிய ஞானமெய்க் கனலே

வலமுறு சுத்த சன்மார்க்க நிலைபெறு
நலமெலா மளித்த ஞானமெய்க் கனலே

இரவொடு பகலிலா வியல்பொது நடமிடு
பரம வேதாந்தப் பரம்பரஞ் சுடரே

வரநிறை பொதுவிடை வளர்திரு நடம்புரி
பரம சித்தாந்தப் பதிபரஞ் சுடரே

சமரச சத்தியச் சபையி னடம்புரி
சமரச சத்தியத் தற்சுயஞ் சுடரே

சபையென துளமெனத் தானமர்ந் தெனக்கே
யபய மளித்ததோ ரருட் பெருஞ்ஜோதி

மருளெலாந் தவிர்த்து வரமெலாங் கொடுத்தே
யருளமு தருத்திய வருட் பெருஞ்ஜோதி

வாழி நின்பேரருள் வாழிநின் பெருஞ்சீ
ராழி யொன் றளித்த வருட்பெருஞ்ஜோதி

என்னையும் பொருளென வெண்ணி யென்னுளத்தே
யன்னையு மப்பனு மாகிவீற் றிருந்து

உலகியல் சிறிது முளம் பிடியாவகை
யலகில் பேரருளா லறிவது விளக்கிச்

சிறுநெறி செல்லாத் திறனளித் தழியா
துறுநெறி யுணர்ச்சிதந் தொளியுறப் புரிந்து

சாகாக் கலவியின் றரமெலா முணர்த்திச்
சாகா வரத்தையுந் தந்து மேன்மேலும்

அன்பையும் விளைவித் தருட்பே ரொளியா
லின்பையு நிறைவித் தென்னையு நின்னையு

ஓருரு வாக்கி யானுனை னியப்படியெலாஞ்
சீருறச் செய்துயிர்த் திறம்பெற வழியா

அருளமு தளித்தனை யருணிலை யேற்றினை
யருளறி வளித்தனை யருட்பெருஞ்ஜோதி

வெல்கநின் பேரருள் வெல்கநின் பெருஞ்சீர்
* வல்க வின்றோங்கிய வருட்பெருஞ் ஜோதி

உலகுயிர்த் திரளெலா மொளிநெறி பெற்றிட
விலகு மைந்தொழிலையும் யான்செயத் தந்தனை

போற்றி நின்பேரருள் போற்றி நின்பெருஞ்சீ
ராற்றலி னோங்கிய வருட் பெருஞ்ஜோதி

மூவருந் தேவரு முத்தருஞ் சித்தரும்
யாவரும் பெற்றிடா வியலெனக் களித்தனை

போற்றி நின்பேரருள் போற்றிநின் பெருஞ்சீ
ராற்றலி னோங்கிய வருட் பெருஞ்ஜோதி

• சித்திக ளனைத்தையுந் தெளிவித் தெனக்கே
சத்திய நிலைதனைத் தயவினிற் றந்தனை

போற்றி நின்பேரருள் போற்றிநின் பெருஞ்சீ
ராற்றலி னோங்கிய வருட் பெருஞ்ஜோதி

உலகினி லுயிர்களுக் குறுமிடை யூறெலாம்
விலகநீ யடைந்து விலக்குக மகிழ்க

சுத்த சன்மார்க்கச் சுகநிலை பெறுக
வுத்தம னாகுக வோங்குக வென்றனை

போற்றி நின்பேரருள் போற்றிநின் பெருஞ்சீ
ராற்றலி னோங்கிய வருட் பெருஞ்ஜோதி

அருட் பெருஞ்ஜோதி யருட் பெருஞ்ஜோதி
யருட் பெருஞ்ஜோதி யருட் பெருஞ்ஜோதி.

திருச்சிற்றம்பலம்.

## அருட்பெருஞ்ஜோதி யகவல் முற்றிற்று.

---

* அல்கல் - குறைதல்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பா.

## பரசிவவணக்கம்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருவிளங்கச்சிவயோகசித்தியெலாம்விளங்கச் சிவஞானநிலைவிளங்கச்சிவாநுபவம்விளங்கத், தெருவிளங்குதிருத்தில்லைத்திருச்சிற்றம்பலத்தேதிருக்கூத்துவிளங்கவொளிசிறந்ததிருவிளக்கே, உருவிளங்கவுயிர்விளங்கவுணர்ச்சியதுவிளங்கவுலகமெலாம்விளங்கவருளுதவுபெருந்தாயாம், மருவிளங்குகுழல்வல்லிமகிழ்ந்தொருபால்விளங்கவயங்குமணிப்பொதுவிளங்கவளர்ந்தசிவக்கொழுந்தே.

திருச்சிற்றம்பலம்.

## பதிவிளக்கம்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அகரநிலைவிளங்குசத்தரனைவருக்குமவர்பாலமர்ந்தசத்திமாரவர்களனைவருக்குமவராற், பகரவருமண்டவகையனைத்தினுக்குமபிண்டப்பகுதிகளங்கனைத்தினுக்குமபதங்களனைத்தினுக்கும், இகரமுறுமுயிரெவைக்குங்கருவிகளங்கெவைக்குமெய்ப்பொருட்குமநுபவங்களெவைக்குமுத்தியெவைக்கும், சிகரமுதற்சித்திவகையெவைக்குமொளிவழங்குந்திருச்சிற்றம்பலத்தனிலேதெய்வமொன்றேகண்டீர். (க)

வண்ணமிகுபூதவெளிபகுதிவெளிமுதலா வகுக்குமடிவெளிகளெலாமயங்குவெளியாகி, எண்ணமுறுமாமவுனவெளியாகியதன்மேலிசைத்தபரவெளியாகியியலுபயவெளியாய், அண்ணுறுசிற்பரவெளியாயதற்பரமாம்வெளியாயமர்ந்தபெருவெளியாகியருளின்பவெளியாய்த், திண்ணமுறுந்தனியியற்கையுண்மைவெளியானதிருச்சிற்றம்பலந்தனிலேதெய்வமொன்றேகண்டீர். (உ)

சார்பூதவிளக்கமொடுபகுதிகளின் விளக்கந் தத்துவங்கள் விளக்கமெலாந்தருவிளக்கமாகி, நேராதிவிளக்கமதாய்ப்பரைவிளக்கமாகிநிலைத்தபராபரைவிளக்கமாகியகம்புறமும், பேராசைவிளக்கமதாய்ச்சுத்தவிளக்கமதாயப்பெருவிளக்கமாகியெலாம்பெற்றவிளக்கமதாயச், சீராடவிளங்குகின்றவியற்கைவிளக்கமதாந்திருச்சிற்றம்பலந்தனிலே தெய்வமொன்றேகண்டீர். (௩)

இடம்பெறுமிந்திரியவின்பங்கரணவின்பமுலகவின்பமுயிரின்பமுதலெய்துமின்பமாகித, தடம்பெறுமோரானமவின்பந்தனித்தவறிவின்பஞ்சத்தியப்பேரின்பமுத்தியின்பமுமாயதன்மேல், நடம்பெறுமெய்ப்பொருளின்பமதிரதிசயவின்பமஞானசித்திப்பெரும்போகநாட்டரசின்பமுமாய்த, திடம்பெறவோங்கியவியற்கைத்தனியின்பமயமாந்திருச்சிற்றம்பலந்தனிலேதெய்வமொன்றேகண்டீர். (௪)

எல்லாந்தானுடையதுவாயெல்லாம்வல்லதுவா யெல்லாந்தானானதுவாயெல்லாந்தானலதாய்ச், சொல்லாலும்பொருளாலுந்தோன்றுமறிவாலுந்துணிந்தளக்கமுடியாதாய்த்துரியவெளிகடந்த, வல்லாளரநுபவத்தேயதுவதுவாயவருமதித்திடுங்காலரியதுவாய்ப்பெரியதுவாயணுவுஞ், செல்லாதநிலைகளினுஞ்செல்லுவதாயவிளங்குந்திருச்சிற்றம்பலந்தனிலேதெய்வமொன்றேகண்டீர். (௫)

அயர்வறுபேரறிவாகியவ்வறிவுக்கறிவா யறிவறிவுளறிவாயாங்கதனுள்ளோரறிவாய், மயர்வறுமோரியற்கையுண்மைத்தனியறிவாயச்செயற்கைமன்னுவறிவனைத்தினுக்கும்வயங்கியதாரகமாய்த், துயரறுதாரகமுதலாயம்முதற்கோர்முதலாய்த்துரியநிலைகடந்ததன்மேல்சுத்தசிவநிலையாய, உயர்வுறுசிற்றம்பலத்தேயெல்லாந்தாமாகியோங்குகின்றதனிக்கடவுளொருவருண்டேகண்டீர். (௬)

அண்டமெலாம்பிண்டமெலாமுயிர்களெலாம்பொருள்களானவெலாமிடங்களெல்லாம்நீக்கமறநிறைந்தே, கொண்டவெலாங்கொண்டவெலாங்கொண்டுகொண்டுமேலுங்கொள்வதற்கேயிடங்கொடுத்துக்கொண்டுசெலிப்பினறிக, கண்டமெலாங்கடந்துநின்றேயகண்டமதாய்துவுங்கடந்தவெளியாயதுவுங்கடந்ததனிவெளியாம, ஒண்டகுசிற்றம்பலத்தேயெல்லாம்வல்லவராயோங்குகின்றதனிக்கடவுளொருவருண்டேகண்டீர்.

பாரொடுநீர்கனல்காற்றுகாயமெனும்பூதப்பகுதிமுதற்பகாநாதப்பகுதிவரையான, ஏர்பெறுதத்துவவுருவாய்த்தத்துவகாரணமா யியம்பியகாரணமுதலாயகாரணத்தினமுடிவாய், நேருறுமம்முடிவனைத்துநிகழ்ந்திடுபூரணமாய்நித்தியமாய்ச்சத்தியமாயநிர்க்குணசிற்குணமாய, ஓதருசன்மாத்திரமாந்திருச்சிற்றம்பலத்தேயோங்குகின்றதனிக்கடவுளொருவருண்டேகண்டீர். (௮)

இரவிமதியுடுக்கண்முதற்கலைகளெலாந்தம்மோரிலேசமதாயெண்கடந்தேயிலங்கியபிண்டாண்டம், பரவுமறைப்பொருள்களுயிர்த்திரள்கண்முதலெல்லாம்பகரகத்தும்புறத்துமகப்புறத்துடனப்புறத்தும், விரவியெங்குநீக்கமறவிளங்கியந்தமாதிவிளம்பரியபேரொளியாயவ்வொளிப்பேரொளியாய், உரவுறுசின்மாத்திரமாந்திருச்சிற்றம்பலத்தேயோங்குகின்றதனிக்கடவுளொருவருண்டேகண்டீர். (௯)

ஆற்றுவிடயானந்தந்தத்துவவானந்த மணியோகானந்தமதிப்பருஞானானந்தம், பேற்றுறுமான்மானந்தம்பரமானந்தஞ்சேர்பிரமானந்தஞ்சாந்தப்பேரானந்தத்தோ,டேற்றிடுமேகானந்தமத்துவிதானந்தமியன்றசச்சிதானந்தஞ்சுத்தசிவானந்த, ஊற்றமதாஞ்சமரசவானந்தசபைதனிலேயோங்குகின்றதனிக்கடவுளொருவருண்டேகண்டீர்.

வருத்தவுயிர்முதற்பலவாம்பொருள்களுக்கும்வடிவம்வண்ணமுதற்பலவாங்குணங்களுக்கும்புகுத்தல், புகுத்தலுற்றமுதற்பலவாஞ்செயல்களுக்குந்தாமேபுகல்கரணமுபகரணங்கருவியுபகருவி, மிகுத்தவுறுப்பதிகரணங்காரணம்பல்காலம்வி இத்திடமேற்றவைமுழுதுமாகியல்லாராகி, உகப்புறுமோர்சுத்தசிவானந்தசபைதனிலேயோங்குகின்றதனிக்கடவுளொருவருண்டேகண்டீர். (௧௧)

இயற்கையிலேபாசங்களொன்றுமிலார்குணங்க ளேதுமிலார்தத்துவங்களேதுமிலாமற்றோர், செயற்கையில்லாபிறப்பிலலாரிறப்பில்லாயாதுந்திரிபிலலாகளங்கமில்லாதீமையொன்றுமில்லார், வியப்புறவேண்டுதலிலலாவேண்டாமையில்லாமெய்யேமெய்யாகியெங்குமவிளங்கியின்பமயமாய, உயத்தருமோர்சுத்தசிவானந்தசபைதனிலேயோங்குகின்றதனிக்கடவுளொருவருண்டேகண்டீர். (௧௨)

ஒன்றுமலாரிரண்டுமலாரொன்றிரண்டுமானா ருருவுமலாருருவுமலாருருவருவுமானார், அன்றுமுளாரின்றுமுளாரென்றுமுளார்தமக்கோராதியிலாரந்தமிலாருமபெருஞ்சோதியினார், என்றுகனல்மதியகத்தும்புறத்துமவிளங்கிவோர்யாவுமிலார்யாவுமுளாரயாவுமலாரயாவும், ஒன்றுறுதாமாகிநின்றார்திருச்சிற்றம்பலத்தேயோங்குகின்றதனிக்கடவுளொருவருண்டேகண்டீர் (௧௩)

திருச்சிற்றமபலம்.

---

# அஷ்டகம்.

## அருட்பெருஞ்சோதியட்டகம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

அருட்பெருவெளியிலருட்பெருவுலகத்தருட்பெருந்தலத்துமேனிலையில்
அருட்பெருமபீடத்தருட்பெருவடிவிலருட்பெருந்திருவிலேயமர்ந்த
அருட்பெரும்பதியேயருட்பெருநிதியேயருட்பெருஞ்சிதியென்னமுதே
அருட்பெருங்களிப்பேயருட்பெருஞ்சுகமேயருட்பெருஞ்சோதியெனனரசே. (௧)

குலவுபேரண்டபபகுதியோரனந்தகோடிகோடிகளுமாங்காங்கே
நிலவியபிண்டப்பகுதிகள்முழுதுநிகழ்ந்தபறபலபொருட்டிரளும்
விலகுறாதகத்துமபுறத்துமேலிடத்துமமெய்யறிவானந்தம்விளங்க
அலகுறுதொழியாதருவதிலவிளங்குமருட்பெருஞ்சோதியென்னரசே. (௨)

கணமுதற்பொறியால்மனமுதறகரணககருவினுற்பகுதியின்கருவால்
எணமுதற்புருடதத்துவத்தினுற்பரத்தாலிசைக்குமோர்பரம்பரவுணர்வால்
விண்முதற்பரையாலபராபரவறிவால்விளங்குவதரிதெனவுணர்ந்தோர்
அணமுதறறடித்துப்படித்திடவோங்குமருட்பெருஞ்சோதியென்னரசே. (௩)

நசைத்தமேனிலையீதெனவுணர்ந்தாங்கேநண்ணியுங்கண்ணுறாதந்தோ
இசைத்தமாமறைகளுமயங்கினமயங்கித் திரும்பினவெனிலதன்னியலை
யிசைத்தலெங்ஙனமோவையகோசிறிதுமிசைத்திடுவேமெனநாவை
அசைத்திடற்கரிதென்றுணர்ந்துளோர்வழுத்துமருட்பெருஞ்சோதியென்னரசே (௪)

சுத்தவேதாந்தமவுனமோவலதுசுத்தசித்தாந்தராசியமோ
நித்தநாதாந்தநிலையநுபவமோநிகழ்பிறமுடிபினமேன்முடிபோ
புத்தமுதனையசமரசத்ததுவோபொருளியலறிந்திலமெனவே
அத்தகையுணர்ந்தோருரைத்துரைத்தேத்துமருட்பெருஞ்சோதியென்னரசே. (௫)

ஏகமோவன்றியனேகமோவென்றுமியற்கையோசெயற்கையோசித்தோ
தேகமோபொதுவோசிறப்பதோபெண்ணோடிகழ்ந்திடுமாணதோவதுவோ
யோகமோபிரிவோவொளியதோவெளியோவுரைப்பதெற்றோவெனவுணர்ந்தோர்
ஆகமோடுரைத்துவழுத்தநின்றோங்குமருட்பெருஞ்சோதியென்னரசே. (௬)

தத்துவமனைத்துந்தனித்தனிகடந்தேதத்துவாதீதமேனிலையில்
சித்தியல்முழுதுந்தெரிந்தனமவைமேற்சிவநிலைதெரிந்திடச்சென்றேம்
ஒத்தவந்நிலைக்கண்யாமுமெம்முணர்வுமொருங்குறக்கரைந்துபோயினமென்
றத்தகையுணர்ந்தோர்வழுத்தநின்றோங்குமருட்பெருஞ்சோதியென்னரசே. (௭)

எங்குமாய்விளங்குஞ்சிற்சபையிடத்தேயிதுவதுவெனவுரைப்பரிதாய்த்
தங்குமோரியற்கைத்தனியநுபவத்தைத்தந்தெனைத்தன்மயமாக்கிப்
பொங்குமானந்தபோகபோகியனாய்ப்புத்தமுதருத்தியென்னுளத்தே
அங்கையிற்கனிபோன்றமர்ந்தருள்புரிந்தவருட்பெருஞ்சோதியென்னரசே. (௮)

திருச்சிற்றம்பலம்.

## ப தி வி ள க் க ம்.

### எ ழு சீ ர டி யா சி ரி ய வி ரு த் த ம்.

திருச்சிற்றம்பலம்.

உரைவளர்கலையேகலைவளருரையேயுரைகலைவளர்தருபொருளே
விரைவளர்மலரேமலர்வளர்விரையேவிரைமலர்வளர்தருநறவே
கரைவளர்தருவேதருவளர்கரையேகரைதருவளர்கிளர்கனியே
பரைவளரொளியேயொளிவளர்பரையேபரையொளிவளர்சிவபதியே. (௧)

ஒளிவளருயிரேயுயிர்வளரொளியேயொளியுயிர்வளர்தருமுணர்வே
வெளிவளர்நிறைவேநிறைவளர்வெளியேவெளிநிறைவளர்தருவிளைவே
வளிவளரசைவேயசைவளர்வளியேவளியசைவளர்தருசெயலே
அளிவளரனலேயனல்வளரளியேயளியனல்வளர்சிவபதியே. (௨)

அடிவளரியலேயியல்வளரடியேயடியியல்வளர்தருகதியே
முடிவளர்பொருளேபொருள்வளர்முடியேமுடிபொருள்வளர்சுகநிதியே
படிவளர்விதையேவிதைவளர்படியேபடிவிதைவளர்பலநிகழ்வே
தடிவளர்முகிலேமுகில்வளர்தடியேதடிமுகில்வளர்சிவபதியே. (௩)

சிரமவளாமுதலேமுதலவளாசிரமேசிரமுதலவளாதருசெறிவே
தரமவளாநிலையேநிலையவளாதரமேதரநிலையவளாதருதகவே
வரமவளாநிறையேநிறையவளாவரமேவரநிறையவளாதருவயமே
பரமவளாபதமேபதமவளாபரமேபரபதமவளாசிவபதியே. (௪)

திருவளாவளமேவளமவளாதிருவேதிருவளம்வளாதருதிகழ்வே
உருவளாவடிவேவடிவளருருவேயுருவடிவளர்தருமுறையே
கருவளருவேயருவளாகருவேகருவருவளாநவநிதியே
குருவளாநெறியேநெறிவளாகுருவேகுருநெறிவளாசிவபதியே. (௫)

நிறைவளாமுறையேமுறைவளாநிறையேநிறைமுறைவளாபெருநெறியே
பொறைவளாபுவியேபுவிவளாபொறையேபுவிபொறைவளாதருபுனலே
துறைவளாகடலேகடல்வளாதுறையேதுறைகடலவளாதருசுவையே
மறைவளாபொருளேபொருளவளர்மறையேமறைபொருளவளாசிவபதியே. (௬)

தவமவளாதயையேதயைவளாதவமேதவநிறைதயைவளாசதுரே
நவமவளாபுரமேபுரமவளாநவமேநவபுரமவளாதருமிறையே
துவமவளாகுணமேகுணமவளாதுவமேதுவகுணம்வளாதருதிகழ்வே
சிவம்வளாபதமேபதமவளாசிவமேசிவபதமவளாசிவபதியே. (௭)

நடம்வளாநலமேநலமவளர்நடமேநடநலமவளாதருமொளியே
இடமவளாவலமேவலமவளரிடமேயிடமவலமவளாதருமிசைவே
திடமவளருளமேயுளமவளாதிடமேதிடவுளமவளாதருதிருவே
கடமவளருயிரேயுயிரவளாகடமேகடமுயிரவளாசிவபதியே. (௮)

அதுவளரணுவேயணுவளரதுவேயதுவணுவளாதருமுறவே
விதுவளரொளியேயொளிவளர்விதுவேவிதுவொளிவளாதருசெயலே
மதுவளாசுவையேசுவைவளாமதுவேமதுவுறுசுவைவளரியலே
பொதுவளாவெளியேவெளிவளாபொதுவேபொதுவெளிவளாசிவபதியே. (௯)

நிதிவளாநிலமேநிலமவளாநிதியேநிதிநிலமவளாதருநிறைவே
மதிவளாநலமேநலமவளாமதியேமதிநலமவளாதருபரமே
கதிவளாநிலையேநிலைவளாகதியேகதிநிலைவளாதருபொருளே
பதிவளாபதமேபதமவளாபதியேபதிபதமவளாசிவபதியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆற்றாமை.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

எழுவினும்வலியமனத்தினேன்மலஞ்சாரீயினுநாயினுமிழிந்தேன்
புழுவினுஞ்சிறியேன்பொய்விழைந்துழல்வேன்புன்மையேன்புலைத்தொழிற்கடையேன்
வழுவினும்பெரியேன்மடத்தினும்பெரியேன்மாண்பிலாவஞ்சகநெஞ்சக்
குழுவினும்பெரியேனம்பலக்கூத்தன்குறிப்பினுக்கென்கடவேனே. (௧)

கற்றமேல்வாதமுற்றவினைக்கருதேன்கலகாதமுற்றவினிற்களித்தேன்
உற்றமேச்சகவோருவட்டுறவிருந்தேனுலகியற்போகமேயுவந்தேன்
செற்றமேவிழையுஞ்சிறுநெறிபிடித்தேன்தெய்வமொன்றெனுமறிவறியேன்
குற்றமேயுடையேனம்பலக்கூத்தன்குறிப்பினுக்கென்கடவேனே. (௨)

கடுமையேன்வஞ்சக்கருத்தினேன்பொல்லாக்கன்மனக்குரங்கனேன்கடையேன்
நெடுமையாண்பனைபோல்நின்றவெற்றுடம்பேனீசனேன்பாசமேயுடையேன்
நடுமையொன்றறியேன்கெடுமையிற்கிளைத்தநச்சுமாமரமெனக்கிளைத்தேன்
கொடுமையேகுறித்தேனம்பலக்கூத்தன்குறிப்பினுக்கென்கடவேனே (௩)

நிலத்திலும்பணத்துமநீள்விழிமடவார்நெருக்கிலும்பெருக்கியநினைப்பேன்
புலத்திலும்புரைசேர்பொறியிலுமனத்தைப்போக்கிவீண்போதுபோக்குறுவேன்
நலத்திலோரணுவுநண்ணிலேன்கடையநாயினுங்கடையனேனவையேன்
குலத்திலுங்கொடியேனம்பலக்கூத்தன்குறிப்பினுக்கென்கடவேனே. (௪)

செடிமுடிந்தலையுமனத்தினேன்றுன்பச்செல்லினாலரிப்புண்டசிறியேன்
அடிமுடியறியுமாசைசற்றறியேனறிந்தவாதங்களையடையேன்
படிமுடிவழித்துக்கடிகொளுங்கடையாபணத்திலுங்கொடியனேன்வஞ்சக்
கொடிமுடிந்திடுவேனம்பலக்கூத்தன்குறிப்பினுக்கென்கடவேனே (௫)

அரங்கினிற்படைகொண்டுயிர்க்கொலைபுரியுமறக்கடையவரினுங்கடையேன்
இரங்கிலோர்சிறிதுமிரக்கமுற்றறியேனியலுறுநாசியுட்கிளைத்த
சிரங்கினிற்கொடியேன்சிவநெறிபிடியேன்சிறுநெறிச்சழக்கையேசிலுக்குக்
குரங்கெனப்பிடித்தேனம்பலக்கூத்தன்குறிப்பினுக்கென்கடவேனே. (௬)

வாட்டமேயுடையார்தங்களைக்காணின்மனஞ்சிறிதிரக்கமுற்றறியேன்
கோட்டமேயுடையேன்கொலையனேன்புலையேன்கூற்றினுங்கொடியனேன்மாயை
யாட்டமேபுரிந்தேனறத்தொழில்புரியேன்சழக்குமவலமுமியற்றுங்
கூட்டமேவிழைந்தேனம்பலக்கூத்தன்குறிப்பினுக்கென்கடவேனே. (௭)

கலைத்தொழிலறியேன்கள்ளுணுங்கொடியேன்கறிக்குழல்நாயினுங்கடையேன்
விலைத்தொழிலுடையேன்மெய்யெலாம்வாயாய்விளம்புறும்வீணனேன்சுத்தப்
புலைத்தொழில்புரிவேன்பொய்யனேன்சீற்றம்பொங்கியமனத்தினேன்பொல்லாக்
கொலைத்தொழில்புரிவேனம்பலக்கூற்றன்குறிப்பினுக்கென்கடவேனே. (௮)

பணமிலாரக்கிடுக்கணபுரிநதுறுஞசோறறுப்பணம்பறிநது ழலகின்றபடிறேன
எணமிலாதடுதாரக்குறும்பெருநதீமையியற்றுவேனெடடியேயனேயேன
மணமிலாமலாிறபூததனனிருகாணமாடடெனததிரிநதுழலகின்றேன
குணமிலாககொடியேனமபலககூததனகுறிப்பறிநதுகொணடவேனே. ( )

கடியரிறகடியேனகடையரிறகடைடயேன களவரிறகளவனேனகாமப
பொடியரிறபொடியேனபுலையரிறபுலையேனபொயயரிறபொயயனேனபொலலாச்
செடியரிறசெடியேனசினததரிறசினததேனறீயரிறறீயனேனபாபக
கொடியரிற்கொடியேனம்பலககூததனகுறிப்பினுககெனகடவேனே. (கo)

திருசசிறறமபலம.

## இ து வு ம் அ து.

### எ ண சீ ர டி ய ா சி ரி ய வி ரு த் த ம.

திருச்சிற்றம்பலம்

குலததிடையுங்கொடியனொருகுடிததனததுங்கொடியேனகுறிகளிலுங்கொடியனன்றிககுணஙகளிலுஙகொடியேன, மலததிடையேபுழுததசிறுபுழுககளிலுஙகடையேன்வனமததுபபெருமபாவிவஞசநெஞசப்புலையேன, நலததிடையோரணுவளவுமநணணுகிலேனபொல்லாநாயககுநகைதோனறநினறேன்பேயககுமிகவிழிந்தேன், நிலததிடைநானெனபிறநதேனினகருததையறியேனிககுணனேநடராஜநிபுணமணிவிளககே (க)

விளககறியாவிருட்டறையிறகவிழ்ந்துகிடந்தழுது விம்முகின்றகுழவியினுமிகப்பெரிதுஞ்சிறியேன, அளககறியாதுயாககடலிலவிழுநதுநெடுஙகாலமலைநதலைநதுமெலிநததுருமபதனினமிகததுருமபேன, கிளககறியாககொடுமையெலாஙகிளைததபழுமரததேனகெடுமதியேனகடுமையினேன *கிறிபேசும்வெறியேன, களககறியாப்புவியிடைநானெனபிறநதேனநதோகருணைநடததரசேநின்கருததையறியேனே. (உ)

அறியாதபொறியவாககுமிழிநததொழிலவாககுமதிகரித்துததுன்மாாக்கத்தரசுசெயுங்கொடியேன, குறியாதகொடுமபாவசசுமைசுமககுநதிறததேனகொலலாமையென்பதையோர்குறிப்பாலுஙகுறியேன, செறியாதமனக்கடையேனறீமையெலாமுடையேன்சினத்தாலுமததததாலுஞசெறிநதபுதலனையேன, எறியாதபுவியிடைநானேன்பிறநதேனுனறனிதயமறியேனமனறிலினிததநடததிறையே. (ந)

இனிததபழசசாறுவிடுததிழிததமலஙகொளுமோரிழிவிலஙகினிழிந்துநின்றேனிரககமொன்றுமிலலேன, அனிததநெறியிடைததொடாநதுமனிததவுடம்பெடுததவறக்கடையர்தமககெல்லாமறககடையனேனேன, பனிததமனககுரஙகாட்டிப்பலிககுழலுஙகொடியேனபாதகமுஞசூதகமுமபயினறபெரும்படிறேன், தனிததகடுங்குணததனேனேன்பிறநதேனினதுதனிககருததை யறிநதிலேனசபைககேறறுமொளியே.

* கிறி - பொய.

ஏறுகின்றேமென மதித்தேயிறங்குகின்றகடையேனேதமெலாநிறைமனத்தேனி
ரக்கமிலாப்புலையேன், சீறுகின்றபுலியனையேன்சிறுதொழிலேபுரிவேன் செய்வகை
யொன்றறியாதசிறியரினுஞ்சிறியேன், மாறுகின்றகுணப்பேதைமதியதனாலிழிந்தேன்
வஞ்சமெலாங்குடிகொண்டவாழ்க்கைமிகவுடையேன், வீறுகின்றவுலகிடைநானேன்
பிறந்தேனினதுமெய்க்கருத்தையறிந்திலேன்விளங்குநடத்தரசே. (௫)

அரசரெலாம்மதித்திடப்பேராசையிலேயரசோடாலெனவேமிகக்கிளைத்தேனருள
றியாக்கடையேன், புரசமரம்போற்பருத்தேநெட்டியெனத்தழைத்தேன்புங்கெனவு
ம்புளியெனவும்மங்கியுதிர்கின்றேன், பரசுமவகைதெரிந்துகொள்ளேன்தெரிந்தாரைப்ப
ணியேன்பசையறியாக்கருங்கன்மனப்பாறைசுமந்துழல்வேன், விரசுநிலத்தேன்பிறந்
தேனின்கருத்தையறியேன்வியக்குமணிமன்றோங்கிவிளங்குபரம்பொருளே. (௬)

பொருளறியேன்பொருளறிந்தார்போன்றுநடித்திங்கே பொங்கிவழிந்துடைகின்
றேன்பொய்யகத்தேன்புலையேன், மருளறியாத்திருவாளருளங்கயக்கத்திரிவேன்வை
யுண்டுமுழவுத்தவாமாடெனவேதடித்தேன், வெருளறியாக்கொடுமனத்தேன்விழற்கி
றைத்துக்களிப்பேன்வீணர்களிற்றலைநின்றேன்விலக்கனைத்தும்புரிவேன், தெருளறி
யேனுலகிடைநானேன்பிறந்தேனினது திருவுளத்தையறிந்திலேன்தெய்வநடத்தவ
னே. (௭)

தவம்புரியேன்றவம்புரிந்தார்தமைப்போலநடித்துத் தருக்குகின்றேனுணர்ச்சியி
லாச்சடம்போலிருந்தேன், பவம்புரிவேன்கமரினிடைப்பாலகவிழ்க்குங்கடையேன்
பயனறியாவஞ்சமனப்பாறைசுமந்துழல்வேன், அவம்புரிவேனறிவறியேனன்பறியேன
ன்பாலேயானினடியடைந்தார்க்கணுத்துணையுமுதவேன், நவம்புரியுமுலகிடைநானே
ன்பிறந்தேனினதுநல்லதிருவுளமறியேன்ஞானநடத்திறையே. (௮)

இறையளவுமறிவொழுக்கத்திச்சையிலேனாகி விருந்தூழன்றுவாடுகின்றோரெல
லாங்குமிழ்ந்தேன், பொறையளவோநன்மையெலாம்போகவிட்டுத்தீமைபுரிகின்
றேனெரிகின்றபுந்நெருப்பிற்கொடியேன், நிறையளவோமுறையளவோநிலையளவுந்
தவிர்ந்தநெடுஞ்சாலநெஞ்சகத்தேனீலவிடம்போல்வேன், கறையளவாவுலகிடைநானே
ன்பிறந்தேனினதுகருத்தறியேன்கருணைநடங்காட்டுகின்றகுருவே. (௯)

காட்டுகின்றவுவாக்கடல்போற்கலைகளிலுஞ்செல்வக்களிப்பினிலுஞ்சிறந்துமிக்க
களித்துநிறைகின்றேன், நீட்டுகின்றவாபத்திலொருசிறிதுமுதவேன்நெடுந்தூரமாழ்ந்
துதவாப்படுங்கிணறுபோல்வேன், ஆட்டுகின்றவருட்பெருமையொருசிறிதுந்தெரியே
னச்சமிலேனாணமிலேனடக்கமொன்றுமில்லேன், கூட்டுகின்றவுலகிடைநானேன்பி
றந்தேனினதுகுறிப்பறியேன்மன்றினடங்குலவுகுலமணியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## இதுவுமது.

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தாவுமானெனக்குதித்துக்கொண்டோடித்தையலார்முலைத்தடம்படுங்கடையேன்
கூவுகாக்கைக்குச்சோறிலோர்பொருக்குங்கொடுக்கநேர்ந்திடாக்கொடியரிற்கொடியேன்
ஓவுறாதுழலீயெனப்பலகாலோடியோடியேதேடுறுந்தொழிலேன்
சாவுறாவகைக்கென்செயக்கடவேன்றந்தையேயெனைத்தாங்கிக்கொண்டருளே (௧)

போகமாதியைவிழைந்தனன்வீணிற்பொழுதுபோக்கிடுமிழுதையேனழியாத்
தேகமாதியைப்பெறமுயன்றறியேன்சிறுகுநெஞ்சகக்குரங்கொடுமுழல்வேன்
காகமாதிகளருந்தவோர்பொருக்குங்காட்டநேர்ந்திடாக்கடையரிற்கடையேன்
ஆகமாதிசொல்லறிவறிவேனோவப்பனேயெனையாண்டுகொண்டருளே (௨)

விழியைத்தூக்கின்றவஞ்சரைவிழைந்தேன்விருந்திலேயுணவருந்தியோர்வயிற்றுக்
குழியைத்தூக்கின்றகொடியரிற்கொடியேன்கோபவெய்யனேன்பாபமேபயின்றேன்
வழியைத்தூர்ப்பவர்க்குளவுரைத்திடுவேன்மாயமேபுரிபேயரிற்பெரியேன்
பழியைத்தூர்ப்பதற்கென்செயக்கடவேன்பரமனேயெனைப்பரிந்துகொண்டருளே.

மதத்திலேயபிமானங்கொண்டுழல்வேன்வாட்டமேசெயுங்கூட்டத்திற்பயில்வேன்
இதத்திலேயொருவார்த்தையும்புகலேன்ஈயுமொய்த்திடற்கிசையுறத்துண்பேன்
குதத்திலேயிழிமலத்தினுங்கடையேன்கோடைவெய்யிலின்கொடுமையிற்கொடியேன்
சிதத்திலேயுறற்கென்செயக்கடவேன்றெய்வமேயெனைச்சேர்த்துக்கொண்டருளே.

கொடியவெம்புலிக்குணத்தினேனுதவாக்கூவநேர்ந்துளேன்பாவமேபயின்றேன்
கடியநெஞ்சினேன்குங்குமஞ்சுமந்தகழுதையேனவப்பொழுதையேகழிப்பேன்
விடியுமுன்னரேயெழுந்திடாதுறங்கும்வேடனேன்முழுமூடரிற்பெரியேன்
அடியனாவதற்கென்செயக்கடவேனப்பனேயெனையாண்டுகொண்டருளே. (௫)

தூங்குகின்றதேசுகமெனவறிந்தேன்சோறதேபெறும்பேறதென்றுணர்ந்தேன்
எங்குகின்றதேதொழிலெனப்பிடித்தேனிரக்கின்றோர்களேயெனினுமவர்பால்
வாங்குகின்றதேபொருளெனவலித்தேன்வஞ்சநெஞ்சினாற்பஞ்செனப்பறந்தேன்
ஓங்குகின்றதற்கென்செயக்கடவேனுடையவாவெனையுவந்துகொண்டருளே. (௬)

வருத்தநேர்பெரும்பாரமேசுமந்துவாடுமோர்பொதிமாடெனவுழன்றேன்
பருத்தவூனுடன்மெலமுணத்திரியும்பன்றிபோன்றுளேனன்றியொன்றறியேன்
கருத்திலாதயல்குரைத்தலுப்படைந்தகடையநாயினிற்கடையனேனருட்குப்
பொருத்தனாவதற்கென்செயக்கடவேன்புண்ணியாவெனைப்புரிந்துகொண்டருளே.

துருக்கலோகொடுங்கருங்கலோவயிரச்சூழ்கலோவெனக்காழ்கொளுமனத்தேன்
தருக்கலாணவக்கருக்கலோடுழல்வேன்சந்தைகாயெனப்பந்தமுற்றலைவேன்
திருக்கெலாம்பெற * வெருக்கெனப்புகுவேன்தீயனேன்பெரும்பேயனேனுளந்தான்
உருக்கலாவதற்கென்செயக்கடவேனுடையவாவெனையுவந்துகொண்டருளே. (௮)

* வெருக்கு—ககரமெய்விரிக்கும் வழிவிரித்தல் (பூனை).

கானமேயுழல்விலங்கினிற்கடையேன்காமமாதிகள்களைகணிற்பிடித்தேன்
மானமேவிடச்சாதியேமதமேவாழ்க்கையேயெனவாரிக்கொண்டலைந்தேன்
ஈனமேபொருளெனக்களித்திருந்தேனிரக்கமென்பதோரெட்டுணையறியேன்
ஞானமேவுதற்கென்செயக்கடவேனாயகாவெனைநயந்துகொண்டருளே. (௯)

இருளையேயொளியெனமதித்திருந்தேனிச்சையேபெருவிச்சையெனவலைந்தேன்
மருளையேதருமனக்குரங்கோடுமவனமேலாஞ்சுழன்றினமெனத்திரிந்தேன்
பொருளைநாடொறும்புந்திசெய்தறியேன்பொதுவிலேநடம்புரிகின்றோயுன்ற
னருளைமேவுதற்கென்செயக்கடவேனப்பனேயெனையாண்டுகொண்டருளே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## முறையீடு.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மருந்தறியேன்மணியறியேன்மந்திரமொன்றறியேன்மதியறியேன்விதியறியேன்வாழ்க்கைநிலையறியேன், திருந்தறியேன்றிருவருளின்செயலறியேனந்தான் செய்தறியேன்மனமடங்குந்திறத்தினிலோரிடத்தே, யிருந்தறியேனந்தோவாயேத்திடவுமறியேனெந்தைபிரானமணிமன்றமெய்தவறியேனே, யிருந்திசைசொலவறியேனெங்ஙனநானபுகுவேன் யாதுகுரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே.

அகங்காரக்கொடுங்கிழங்கையகழ்ந்தெறியவறியேனறிவறிந்தவந்தணர்பாற்செறியுநெறியறியேன், நகங்காணமுறுதவர்போலநலம்புரிந்துமறியேனச்சுமரக்கனிபோலேயிச்சைகனிந்துழன்றேன், மகங்காணும்புலவரெலாம்வந்துதொழந்திகழுமணிமன்றந்தனையடையும்வழியுமறிவேனோ, இகங்காணத்திரிகின்றேனெங்ஙனநானபுகுவேன் யாதுகுரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (௨)

கற்குமுறைகற்றறியேன்கற்பனகற்றறிந்தகருத்தாதிருக்கூட்டத்திற்களித்திருக்கவறியேன், நிற்குநிலைநின்றறியேனின்றாரினடித்தேனெகொடுங்காமப்பெருங்கடலைநீந்தும்வகையறியேன், சிற்குணமாமணிமன்றிற்றிருநடம்புரியுந்திருவடியென்சென்னிமிசைச்சேர்க்கவறிவேனோ, இறகுணஞ்செயத்துழலகின்றேனெங்ஙனநான்புகுவேன் யாதுகுரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே (௩)

தேகமுறுபூதநிலைத்திறஞ்சிறிதுமறியேனசித்தாந்தநிலையறியேனசித்திநிலையறியேன், யோகமுறுநிலைசிறிதுமுணர்ந்தறியேனசிறியேனுலகநடையிடைக்கிடந்தேயுழைப்பாரிற்கடையேன, ஆகமுறுதிருநீற்றினொளிவிளங்கவசைந்தேயம்பலத்திலாடுகின்றவடியையறிவேனோ, ஏகவநுபவமறியேனெங்ஙனநானபுகுவேன் யாதுகுரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (௪)

வேதாந்தநிலைநாடிவிரைந்துமுயன்றறியேன்மெய்வகையுங்கைவகையுஞ்செயவகையுமறியேன், நாதாந்தத்திருவீதிநடந்திடுதற்கறியேனாளுமரன்றறியேனெங்கோ

ஞூரென்றறியேன், போதாந்தத்திருநாடுபுகவறியேன் ஞானபூரணகாயமெனும்பொது
வையறிவேனே, ஏதாந்தீயேன்சரிதமெங்ஙனநான்புகுவேன் யார்க்குரைப்பேனென்
னசெய்வேனேதுமறிந்திலனே. (௫)

கலைமுடிவுகண்டறியேன்சரணமெலாமடக்குங்கதியறியேன்கதியறிந்தகருத்தா
களையறியேன், கொலைபுலைகளவிடுத்தறியேன் கோபமறுத்தறியேன் கொடுங்காமக்கடல்
கடக்குங்குறிப்பறியேன் குணமா, மலைமிசைநின்றிடவறியேன் ஞானநடம்புரியுமணி
மன்றந்தனையடையும்வழியுமறிவேனே, இலையெனும்பொய்யுலகினிடையெங்ஙனநா
ன்புகுவேன்யார்க்குரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (௬)

சாதிமதஞ்சமயமெனுஞ்சங்கடம்விட்டறியேன்சாத்திரசேற்றிடைநின்றசஞ்சலம்வி
ட்டறியேன், ஆதியந்தநிலையறியேனலையறியாக்கடல்போலானந்தப்பெரும்போகத்த
மர்ந்திடவுமறியேன், நீதிநெறிநடந்தறியேன் சோதிமணிப்பொதுவில்நிருத்தமிடுமொ
ருத்தர்திருக்கருத்தையறிவேனே, ஏதிலாசாருலகினிடையெங்ஙனநான்புகுவேன்யார்
க்குரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (௭)

சாகாத்தலையறியேன் வேகாத்காலின்றரமறியேன் போகாத்தண்ணீரையறியேன்,
ஆகாயநிலையறியேன் மாகாயநிலையுமறியேன் மெய்ந்நெறிதனையோரணுவளவுமறியேன்,
மாகாதலுடையபெருந்திருவாளர்வழுத்துமணிமன்றந்தனையடையும் வழியுமறிவே
னே, *ஏகாயவுலகினிடையெங்ஙனநான்புகுவேன்யார்க்குரைப்பேனென்னசெய்வே
னேதுமறிந்திலனே. (௮)

தத்துவமென்வசமாக்கத்தான்செலுத்தவறியேன் சாகாதகல்விகற்குந்தரஞ்சிறிது
மறியேன், அத்தநிலைசத்தநிலையறியேன் மெய்யறிவையறியேன் மெய்யறிந்தடங்குமறி
ஞரையுமறியேன், சுத்தசிவசன்மார்க்கத்திருப்பொதுவினிடத்தே தூயநடம்புரிகின்ற
ஞாயமறிவேனே, எத்துணையுங்குணமறியேனெங்ஙனநான்புகுவேன்யார்க்குரைப்பே
னென்னசெய்வேனேதுமறிந்திலனே. (௯)

வரையபரமார்க்கமொடுபரமார்க்கமறியேன் மரணபயந்தவிர்த்திடுஞ்சன்மார்க்கமதை
யறியேன், திரையறுதண்கடலறியேன் கடலைக்கடைந்தே தெள்ளமுதமுணவறியே
ன்சினமடக்கவறியேன், உரையுணர்வுகடந்ததிருமணிமன்றந்தனிலேயொருமைநடம்
புரிகின்றபெருமையறிவேனே, இரையுறுபொய்யுலகினிடையெங்ஙனநான்புகுவே
னயார்க்குரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

* ஏகம் - முத்தி-ஈறுதொக்குநின்றது.

## அடியார்பேறு.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அடியாற்வருத்தநதனைககண்டுதரியாரினபமளிததிடுவார்
வடியாககருணைப்பெருங்கடலாரெனறபெரியோரவார்தமையெலாம்
நெடியார்ககரியாய்கொடியேனென்றொருவனறனையுநீககியதோ
கடியாககொடுமோபாதகனமுனகணடபரிசிஙகணடிலனே. (க)

மையார்பாம்புகொடியதெனபபகர்வாரதற்கும்பரிநதுமுனனாள்
ஐயாகருணையளிததனையென்னைவிலினுமளிநதிலையே
மையாமிடறறோயானநதமனறினடிப்போயவலவினையேன
னையாநின்றேனையோநானபாம்பிற்கொடியனானேனே. (உ)

பீழைபுரிவான்வருநதுகினறபேயககுஙகருணைபெரிதளிப்பான்
ஊழையகறறுமபெருஙகருணையுடையானெனபாருனையையோ
மூழைமனததாற்குரஙகெறிநதவிளஙகாயாகிமொததுணணு
மேழையடியேனவருததஙகணடிருததலழகோவெங்கோவே. (௩)

மருணடுலகிறகொலைபுரிவார்மனமேகனாயாககல்லெனறு
பொருணடியனினறிருவாககேபுகலவறிநதேனென்னளவிற
கருணாநிதிநின்றிருவுளமுஙகலலெனறாைக்கவறிநதிலனே
இருணடியவிச்சிறியேனுககினனுமிரஙகாதிருநதாயே. (௪)

முன்னுஙகொடுமைபலபுரிநதுமுடுகிப்பின்னுஙகொடுமைசெய
உன்னுஙகொடியாதமககுமருளுதவுஙகருணையுடையானே
மன்னும்பதமேதுணையென்றுமதிததுவருநதுஞ்சிறியேனுக
கினனுஙகருணைபுரிந்திலைநானென்னகொடுமைசெய்தேனோ. (௫)

அங்கேயடியர்தமககெல்லாமருளாரமுதமளிததையோ
இங்கேசிறியேனொருவனுககுமிடர்தானளிககவிசைநதாயேல்
செஙகேழ்வணணததனிககனியேசிவமேயடிமைசசிறுநாயேன்
எங்கேபுகுவேனெனசெயவேனெவரென்முசம்பார்ததிடுவாரோ. (௬)

அளியேயனபரனபேநலலமுதேசுத்தவறிவான
வெளியேவெளியிலின்பநடமபுரியுமரசேவிதியொன்றுந
தெளியேன்றீஙகுபிறரசெயினுநதீங்குநினையாதிருவுளந்தா
னெளியேனளவினினைககவொருப்படுமோகருணையெந்தாயே. (௭)

தீதுநினைககும்பாவிகட்குஞ்செயதாய்கருணையெனததெளிந்து
வாதுநினைககுமனககடையேன்மகிழ்வுற்றிருந்தேனென்னளவில்
சூதுநினைப்பாயெனில்யார்ககுச்சொலவேனயாரைததுணைகொள்வே
னேதுநினைப்பேனையோநான்பாவியுடமபேனெடுத்தேனே. (௮)

பொதுவெனறறிநதுமிரஙகாதசிலாக்குஙகருணைபுரிவதன்றிக்
கதுவெனறழுஙகநினையாதினசருணையுளநதானறிவென்ப
திதுவென்றறியாவெவளோவருநதவெநதவகையாறறுணிநததுவோ
எதுவெனறறிவேனெனபுரிவேனேயோபுழுவிலிழிநதேனே. (௯)

வெடிககபபாரததுநிற்கின்றவெய்யாதமையுமவினைததுயர்கள
பிடிககப்பாரககததுணியாதபெருமானினது திருவுளநதான
நடிககப்பாரகுழலகததேசிறியேனமனதுநவையாலே
துடிககப்பாரததிஙகிருநததுகாணேயோவிதற்குநதுணிநததுவோ. (௧௦)

கல்லுஙகனியததிருநோககமபுரியுஙகருணைககடலேநான்
அலலுமபகலுநதிருககுறிப்பையெதிரபாரததிஙகேயயாகின்றேன்
கொலலுங்கொடியரககுதவுகினறகுறுமபுததேவாமனம்போலச்
சொலலுமிரஙகாவனமைகற்கவெஙகேயையோதுணிந்தாயோ. (௧௧)

படிமேலாசைபலவைததுப்பணியுமவாக்குமபரிநதுசுகக
கொடிமேலுறசசெயதருளகின்றாயெனபாலிரக்கஙகொண்டிலேயே
பொடிமேலணிநினனருட்கிதுதானழகோபொதுவினடிககுமுனற
னடிமேலாசையலலாலவேறாசையையோவறியேனே. (௧௨)

நாயேனுலகிலறிவுவநதநாள்தொட்டிநதநாள்வரையு
மேயேன்பிறிதிலுனகுறிபபேயெதிரபாரததிருநதேனென்னுடைய
தாயேபொதுவினடமபுரியெநதாயேதயவுதாராயேல
மாயேனேயோவெதுகொணடுவாழ்நதிஙகிருககததுணிவேனே. (௧௩)

நயத்தாலுனதுதிருவருளைநணணுகொடியேனுயுடமபை
உயததான்வையேனமடிததிடுவேனமடிததாறபினனருலகததே
வயததாலெநதவுடம்புறுமோவெனனவருமோவென்கினற
பயததாலேயோவிவவுடமபைசசுமககின்றேனெம்பரஞ்சுடரே. (௧௪)

இனபமடைததுன்னடியரெலாமிழியாதேறியிருக்கினறா
வனபரிடததேபலகாறசெனறவரோடுறவுகலழஙகியுனறன
அனபருறவைவிடுததுலகிலாடிப்பாடியடுததவினைத
துனபமுடுகிசசுடச்சுடவுஞ்சோறுணடிருககத்துணிநதேனே. (௧௫)

எநநாள்கருணைத்தனிமுதனீயென்பாலிரஙகியருளுதலோ
அநநாளிநநாளிநநாளெனறெண்ணியெண்ணியலமநதேனே
சென்னாள்களிலோரநனனாளுந்திருநாளானதிலலையையோ
மூனனாளெனனையாட்கொணடாயெனனநாணமுடுகுவதே. (௧௬)

எந்தவகைசெயதிடிறகருணையெநதாயநீதானிரஙகுவையோ
அநதவகையைநானறியேனறிவிப்பாருமெனககில்லை
இநதவகையிஙகையோநானிருநதாறபின்னரென்செயவேன்
பந்தவகையற்றவருளததேநடிககுமுண்மைப்பரமபொருளே. (௧௭)

அடுக்குநதொண்டா தமக்கெல்லாமருளீந்திங்கேயென்னளவிற
கொடுக்குந்தன்மைதனையொளித்தாலொளிக்கப்படுமோகுணக்குன்றே
தடுக்குந்தடையும்வேறில்லைதமியேன்றனையித்தாழ்வகற்றி
எடுக்குந்துணையும்பிறிதில்லையையோவின்னுமிரங்கிலையே (கஅ)

எல்லாமுடையாய்நின்செயலேயெல்லாமென்றுலனசெயல்க
ளெல்லாநின்றுசெயலன்றேவென்னேயென்னைப்புறந்தள்ளல
யல்லா லென்னைப்புறம்விடுத்தாற்புறத்துமுன்றனமயமன்றே
நல்லோரெங்குஞ்சிவமயமென்றுரைப்பாரெங்கணாயகனே. (க௯)

கூடுங்கருணைத்திருக்குறிப்பையிறைப்பொழுதேகுறிப்பித்து
வாடுஞ்சிறியேன்வாட்டமெல்லாந்தீர்த்துவாழ்வித்திடவேண்டும்
பாடும்புகழோயுனையல்லால்துணைவேறில்லைப்பரவெளியி
லாடுஞ்செல்வத்திருவடிமேலாணைமுக்காலாணையதே. (உ0)

திருச்சிற்றம்பலம்.

## ஆத்துமவிசாரத்தழுங்கல்.



### எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

போகமேவிழைந்தேன்புலைமனச்சிறியேன்பூப்பினும்புணர்ந்தவெம்பொறியேன்
ஏகமேபொருளென்றறிந்திலேன்பொருளினிச்சையாலெருந்துநோவுறியாக
காகமேயெனப்போய்ப்பிறர்தமைவருத்திக்களித்தபாதகத்தொழிற்கடையேன்
மோகமேயுடையேனென்னினுமெந்தாய்முனிந்திடேல்காத்தருளெனையே. (க)

பூப்பினும்பலகால்மடந்தையர்தமைப்போய்ப்புணர்ந்தவெம்புலையனேன்விடஞ்சார்
பாப்பினுங்கொடியருறவையேவிழைந்தபள்ளனேன்கள்ளனேனொருக்கும்
ஆப்பினும்வலியேனறத்தொழில்புரியேன்பிறலடுத்தவாகரங்கள்
கூப்பினுங்கூப்பாக்கொடுங்கையேனென்னினுங்கோபியேல்காத்தருளெனையே. (உ)

விழுத்தலைநெறியைவிரும்பிலேன்கரும்பின்மிகவினிக்கின்றநின்புகழ்கள்
வழுத்தலையறியேன்மக்களேமனையேவாழ்க்கையேதுணையெனமதித்துக்
கொழுத்தலைமனத்துப்புழுத்தலைப்புலையேன்கொக்கனேன்செக்கினைப்பலகா
லிழுத்தலையெருதேனுழத்தலேயுடையேனென்னினுங்காத்தருளெனையே. (ந)

புலைவிலைக்கடையிற்றலைகுனித்தலைந்துபொறுக்கியசுணங்கனேன்புரத்தில
தலைவிலைபிடித்துக்கடைவிலைபடித்ததயவிலாச்சழக்கனேன்சழக்கா
உலைவிலையெனவேவியக்கவெந்தொழிலிலுழன்றுழன்றழன்றதோருளத்தேன்
இலைவிலையெனக்கென்றகங்கரித்திருந்தேனென்னினுங்காத்தருளெனையே. (ச)

கொட்டிலையடையாப்பட்டிமாடனையேன்கொட்டைகள்பரப்பிமேல்வனைந்த
கட்டிலைவிரும்பியடிக்கடிபடுத்தகடையனேனகங்குலும்பகலும்
அட்டிலையடுத்தபூனைபோலுணவையறவுண்டுகுப்பைமேற்போட்ட
செட்டிலைப்பனையேனென்னினுமவேறுநினைந்திடேல்காத்தருளெனையே. (ரு)

நேரிழையவர்தம்புணர்முலைநெருககிலநெருககியமனததினேன் வீணிற்
போரிழைவெறியர்புகழ்பெறுவெறியேனபுனகலையிலாசகொருகலையி
லோரிழையெனினுங்கொடுததிலேனீளவுடுததுடுததுரொறுந்திரிநதே
னேரிழைவிழைநதுபூண்டுளங்களிததேனென்னினுங்காததருளனையே. (௬)

அளததிலேபடிநததருமபினுஙசடையேனசடனேனறிவிலேனுலகிற
குளததிலேகுளிப்பார்குளிககவெஞ்சிறுநீககுழியிலேகுளிததவெங்கொடியேன்
வளததிலேபொசிததுததளததிலேபடுககமனங்கொண்டசிறியனேனமாயைக
களததிலேபயின்றவுளததிலேபெரியனென்னினுங்காததருளனையே. (௭)

தொழுதெலாமவலலகடவுளேநினனைத்துதித்திலேன்றாய்மையொன்றறியேன்
கழுதெலாமனையேனிழுதெலாமுணவிற்கலநதுணககருதியசருததேன
பழுதெலாமபுரிநதுபொழுதெலாஙகழிததபாவியேனறீமைகள்சிறிது
மெழுதலாம்படித்தனறெனமிகவுடையேனென்னினுங்காததருளனையே. (௮)

வட்டிமேபெருக்கிககொட்டியேயேழைமனைகவாகருததினேனோட்டைச
சட்டியேயெனினும்பிறர்கொளததரியேன்தயவிலேன்சூதெலாமடைதத
பெட்டியேநிகாததமனததினேனுலகிறபெரியவாமனமவெறுததிடச்செய
வெட்டியேகளளிவெட்டியேயடைததவேடனேனமூடரிறறலையேன
எட்டியேமணணுஙகட்டியேயனையேனென்னினுங்காததருளனையே. (௯)

உடுததிலேஞ்சிறிதுமுணடிலேமெனவாநதோதியவறிஞருககேநுங
கொடுததிலேனகொடுக்குஙகுறிபபிலேனுலகிறகுணமபெரிதுடையநல்லோரை
யடுததிலேனடுததறகாசையுமிலலேனவணிமேல்நலலவனெனப்பே
ரெடுததிலேனெனினுநதெயவமேதுணையெனறிருககினறேனகாததருளனையே.

திருச்சிற்றம்பலம்.

## அவாவறுப்பு.

### எழுசீரடியாசிரியவிருததம்

திருச்சிற்றம்பலம்.

காலவாழ்க்கையிலேசார்நதவரெலலாநதககமுப்போதினுந்தனிததே
சீலமார்பூசைககடன்முடிககின்றார்சிறியனேனறவஞ்செயவானபோலே
ஞாலமேலவாககுககாட்டிநான்றனிததேநவிலுமிந்நாயவயிற்றினுககே
காலையாதியமுப்போதினுஞ்சோற்றுககடன்முடித்திருந்தனனெநதாய. (௧)

சோற்றிலேவிருப்பஞ்சூழ்நதிடிலொருவன்றனனுநற்றவமெலாஞ்சுருங்கி
யாற்றிலேகரைததபுளியெனப்போமென்றறிஞர்களுரைததிடலசிறிதும்
போற்றிலேனுனனைப்போற்றிலேனசுவையிற்பொருந்தியகாரசாரஞ்சேர
சாற்றிலேகலநதசோற்றிலேயாசைதஙகினேனென்செயவேனெநதாய. (௨)

விருப்பிலேன்போலககாட்டினேனன்றிவிளைவிலாதுணெலாமறுத்த
கருப்பிலேயெனினுங்கஞ்சியாதிகளைககருததுவந்துண்ணுதற்கமையேன்
நெருப்பிலேயுருககுநெய்யிலேசிறிதுந்நீரிடாத்தயிரிலேநெகிழ்ந்த
பருப்பிலேசோற்றுப்பொருப்பிலேயாசைபற்றினேனென்செய்வேனெந்தாய. (௩)

உறியிலேதயிரைத்திருடியுண்டனனென்றொருவனையுரைப்பதோர்வியப்போ
குறியிலேயமைத்தவுணவெலாந்திருடிக்கொண்டுபோயுண்டனன்பருப்புக்
கறியிலேபொரித்தகறியிலேகூட்டுக்கறியிலேகலந்தபேராசை
வெறியிலேயுனையுமறந்தனன்வயிறுவீங்கிடவுண்டனனெந்தாய் (௪)

கீரையேவிரும்பேன்பருப்பொடுகலந்தகீரையேவிரும்பினேன்வெறுந்தண்
ணீரையேவிரும்பேன்றெங்கிளங்காயினீரையேவிரும்பினேனுணவி
லாரையேயெனக்குநிகரெனப்புகல்வேனையகோவடிச்சிறுநாயேன்
பேரையேயுரைக்கிற்றவமெலாமோட்டம்பிடிக்குமேயென்செய்வேனெந்தாய். (௫)

பாலிலேகலந்தசோறெனில்விரைந்தேபசியிலாதொருபெருவயிற்றுச்
சாலிலேயடைக்கத்தடைபடேன்வாழைத்தகுபலாமாமுதற்பழத்தின்
றோலிலேயெனினுங்கிள்ளியோர்சிறிதுஞ்சூழ்ந்தவாக்கண்டிடத்துணியேன்
வாலிலேனிருக்கிலவனத்திலேயிருக்கவாய்ப்புளேனென்செய்வேனெந்தாய். (௬)

உடம்பொருவயிறுயச்சருக்கரைகலந்தவுணவடியேயுண்டனன்பலகால்
கடம்பெறுபுளிச்சோறுண்டுளேகளித்தேன்கட்டிநற்றயிரிலேகலந்த
தடம்பெறுசோற்றிற்றருக்கினேனெலுமிச்சம்பழச்சோற்றிலேசடித்தேன்
இடம்பெறுமற்றைச்சித்திரச்சோற்றிற்செருக்கினேனென்செய்வேனெந்தாய். (௭)

மிளகுமென்மேலுஞ்சோத்தபலவுணவில்விருப்பெலாம்வைத்தனனுதவாச்
சுளகினுங்கடையேன்பருப்பிலேயமைத்ததுவையலேசுவாக்கமென்றுண்டே
னிளகிலாமனத்தேனினியபச்சடிசிலெவற்றிலுமிச்சைவைத்திசைத்தேன்
குளகுணும்விலங்கினிலைக்கறிக்காசைகொண்டனனென்செய்வேனெந்தாய். (௮)

தண்டுகாய்கிழங்குபூமுதலொன்றுந்தவறவிட்டிடுவதற்கமையேன்
கொண்டுபோய்வயிற்றுக்குழியெலாநிரம்பக்கொட்டினேன்குணமிலாக்கொடியேன்
வண்டுபோல்விரைந்துவயலெலாநிரம்பமலங்கொட்டவோடியபுலையேன்
பண்டுபோற்பசித்தூணருவழிபார்த்தபாவியேனென்செய்வேனெந்தாய். (௯)

வறுத்தலேபொடித்துமலர்த்தலேபுரட்டிவைத்தலேதுவட்டலிற்சுவைக
ளுறுத்தலேமுதலாவுற்றபல்லுணவையொருமலவயிற்றுப்பையுள்ளே
துறுத்தலேயெனக்குத்தொழிலெனத்துணிந்தேன்றுணிந்தவரைக்கணந்தருமவன்பசியைப்
பொறுத்தலேயறியேன்மலப்புலைக்கூட்டைப்பொறுத்தனனென்செய்வேனெந்தாய்.

பருப்பிடியரிவாலிடிகளாதிகளாற்பண்ணியபண்ணிகாரங்க
ளொருப்பிடிநிரம்பவரவரவெல்லாமொருபெருவயிற்றிலேயடைத்தேன்
கருப்பிடியுலகினெருப்பிடியனையகடையரிற்கடையனேனுதவாத்
துருப்பிடியிருப்புத்துண்டுபோற்கிடந்துதூங்கினேனென்செய்வேனெந்தாய். (௧௧)

அடிக்கடிநுண்மைவிழைந்துபோயவைகளடுக்கியவிடந்தொறுமலைந்தே
தடிக்கடிநாய்போனுகர்ந்துவாய்சுவைத்துத்தவம்புரிந்தாரெனநடித்தேன்
பொடிக்கடிநாசித்துளையிலேபுகுத்திப்பொங்கினேனையகோவெனது
முடிக்கடிபுனையமுயன்றிலேனறிவின்மூடனேனென்செய்வேனெந்தாய். (௧௨)

உண்டியேவிழைந்தேனெனினுமென்றனையுடையவாவடியனேனுனையே
யண்டியேயிருந்தேனிருக்கின்றேனிருப்பேனப்பநின்றுணையின்றனக்கே
தொண்டுறுதவாகைச்சோற்றினைவிரும்பேனாயனேதுணைநினையலலாற்
கண்டிலேனென்னைக்காப்பதுன்கடனெக் கைவிடேல்கைவிடேலெந்தாய். (௧௫)

திருச்சிற்றம்பலம்

# திருவருட்பெருமை.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வெறுத்துரைத்தேன்பிழைகளெலாம்பொறுத்தருளல்வேண்டும் விளங்கறிவுக்கறிவாகிமெய்ப்பொதுவினடிப்போய், கறுத்துரைத்தார்தமக்குமருள்கனிந்துரைக்கும்பெரியகருணைநெடுங்கடலேமுக்கண்ணெங்குக்கரும்பே, மறுத்துரைப்பதெவனருணீவழங்குகினுமனநிமிறுத்திடினுமுனையலான்மற்றொருசார்பறியேன், செறுத்துரைத்தவுரைகளெலாந்திருவருளேயென்றுசிந்திப்பதல்லாமற்செய்கையொன்றிலனே.

மிகுத்துரைத்தேன்பிழைகளெலாஞ்சகித்தருளல்வேண்டுமெய்யறிவின்புருவாகியம்பொதுவினடிப்போய், தொகுத்துரைத்தமறைகளும்பின்விரித்துரைத்துங்காணத்துரியநடுவேயிருந்த பெரியபரம்பொருளே, பகுத்துரைத்தபயனுரைகட்கோர்பொருளாகிவிளங்கும்பரஞ்சுடரே பரம்பரனேபசுபதியேயடியேன், வகுத்துரைப்பதெவனருணீவழங்குகினுமனநிமிறுத்திடினுமுனையலான்மற்றொருசார்பிலனே.

முன்னவனேசிறியேனுனைச்சிறிதுமறியாதே முனிந்துரைத்தபிழைபொறுத்துக்கனிந்தருளல்வேண்டு, மென்னவனேயென்றுணையேயென்றுறவேயென்னையீன்றவனேயென்றாயேயென்குருவேயென்று, மன்னவனேயென்னுடையவாழ்முதலேயென்கண்மாமணியேமணிமிடற்றோர்மாணிக்கமலையே, அன்னவனேயம்பலத்துளாடுகின்றவமுதேயாறணிந்தசடையாயானவேறுதுணையிலனே. (௩)

சினந்துரைத்தேன்பிழைகளெலாமனம்பொறுத்தல்வேண்டுந் தீனதயாநிதியே மெய்ஞ்ஞானசபாபதியே, புனைந்துரைப்பாரகத்தொன்றும்புறத்தொன்றுநினைத்தே பொய்யுலகராங்கவர்போற்புனைந்துரைத்தேனலனால், இனைந்திருந்தவெனையாட்கொண்டென்னுளமர்ந்தெனைத்தானெவ்வுலகுந்தொழநிலைமேலேற்றியசற்குருவே, கனந்தருசிற்சுகவமுதங்களித்தளித்தநிறைவே கருணைநடத்தரசேயென்கண்ணிலங்குமணியே. (௪)

ஊடுதற்கோரிடங்காணேனுவக்குமிடமுளதோவுன்னிடமுமென்னிடமுமோரிடமாதலினால், வாடுதற்குநேர்ந்திடிலோமாட்டாமையாலுமனம்பிடியாமையினாலுஞ் சினந்துரைப்பேன்சிலவே, கூடுதற்குவல்லவனீகூட்டியெனைக்கொண்டேகுலம்பேசவேண்டாமெனக்குறிப்பினைத்துமறிந்தாய், நாடுதற்கிங்கென்றாலேமுடியாதுநீயேநாடுவித்துக்கொண்டருள்வாய்ஞானசபாபதியே. (௫)

என்னுளநீகலந்துகொண்டாயுன்னுளநான்கலந்தேனென்செயலுன்செயலுன்றனிருஞ்செயலென்செயலே, பின்னுளனாம்பிதற்றலெலாம்வேறுகுறித்தெனைநீபிழையேற்றுநினைத்திடிலோபெருவழக்கிட்டிடுவேன், அன்னையினுந்தயவுடையாயப்பனெனக்காணுயனறியுமென்னுருயிருக்காருயிராய்நிறைந்தாய, மன்னுமணிப்பொதுநடஞ்செய்மன்னவனேகருணைமாநிதியேயெனக்கருள்வாயமனக்கலக்கந்தவிர்த்தே. (௬)

எணங்குறியேனியல்குறியேனெதுநினையாதேயென்பாட்டிருந்தேனிங்கெனைவலிந்துநீயே, மணங்குறித்துக்கொண்டாய்நீகொண்டதுதொட்டெனதுமனம்வேறுபட்டதிலைமாட்டாமையாலே, கணங்குறித்துச்சிலபுகன்றேனபுகன்றமொழியெனதுகருத்திலிலையுனனுடையகருத்திலுண்டோவுண்டேல், குணங்குறிப்பானகுற்றமொன்றுங்குறியானென்றறவோர்கூறிடுமவ்வார்த்தையின்றுமாறிடுமோயரசே. (௭)

மனம்பிடியாமையினுலோமாட்டாமையாலோமறதியினுலோவெனதுவருத்தமதனுலோ, தினம்பிடியாமயக்காலோதிகைப்பாலோபிறாமேற்சினத்தாலோவெதனுலோசிலபுகன்றேனிதனை, சினமபிடியாததேவர்திருவுளமபிடியாதெனவேசிந்தைகளித்திருக்கின்றேன்றிருவுளத்தையறியேன, இனமபிடியாமையுமுண்டோவுண்டெனிலன்புடையாரோசல்புகழ்பேசலெனவியம்புதலென்னுலகே. (௮)

நாயகரேயுமதுவசநானிருக்கின்றதுபோல்நாடியதத்துவத்தோழிநங்கையரென்வசத்தே, மேயவராகாமையினுலவாமேலங்கெழுந்தவெகுளியினுறசிலபுகன்றேனவேறுநினைத்தறியேன, தாயவரேவெறுப்புவரிலவிதிவெறுக்கவென்ருர்சூழவிதித்தாரைவெறுத்திடுதலவாதுணிவே, தீயவராயினுங்குற்றங்குறியாதுபுகன்ருறறீமொழியன்றெனத்தேவர்செப்பியதுமுளதே (௯)

குற்றமொருசிறிதெனினுங்குறித்தறியேனவேறோர்குறையதனுற்சிலபுகன்றேன்குறித்தறியேனமீட்டும, சற்றுமனமவேறுபட்டதிலைகண்டீரெனதுசாமியுமமேலாணையொருசதுருநினைத்தறியேன, பெறறவளுமுறறவருஞ்சுறறமுநீரெனறேபிடித்திருக்கின்றேனபிறிதோர்வெடிப்புமுரைத்தறியேன, இறைமைதொடுத்தெனனளவில்வேறுநினையாதீரெனனுடையநாயகரேயெனனுசையிதுவே. (௧௦)

திருச்சிற்றமபலம.

## பிரிவாற்ருமை.

### எழுசீரடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

செய்வகையறியேனமன்றுண்மாமணிநினறிருவுளக்குறிப்பையுந்தெரியேன்
உய்வகையறியேனுணாவிலேனந்தோவுறுகண்மேலுறுங்கொலென்றுலந்தேன்
மெயவகையடையேனவேறொருகுரைப்பேனவினையனேனென்செயவிரைகேன்
பொய்வகையுடையேனெங்஫னமபுகுகேன்புலையனேன்புகலறியேனே. (௧)

அறிவிலேனறிந்தாக்கடிப்பணிபுரியேனச்சமுமவலமுமுடையேன்
செறிவிலேன்பொதுவாந்தெய்வநீநினதுதிருவுளத்தெனைநினையாயேல்
எறிவிலேன்சிறியேனெங்஫னம்புகுவேனென்செய்வேன்யார்துணையென்பேன்
பிறிவிலேன்பிரிந்தாலுயிாதரிக்கலனென்பிழைபொறுத்தருள்வதுன்கடனே. (௨)

உன்கடனடியேன் கருதலென்றுணர்ந்தேனுடல்பொருளாவியுமுனக்கே
பின்கடனின்றிக்கொடுத்தனன் கொடுத்தபின்னுநான் றளருதலழகோ
என்கடன் புரிவேன்யார்க்கெடுத்துரைப்பேனென்செய்வேன்யார்துணையென்பேன்
முன்கடன்பட்டார்போன் மனங்கலங்கிமுறிதலோர்கணந்தரியேனே. (௩)

தரித்திடேன்சிறிதுந்தரித்திடேனெனது தளர்ச்சியுந்துன்பமுந்தவிர்த்தே
தெரித்திடலனைத்துந்தெரித்திடல்வேண்டுந்தெரித்திடாயெனிலிடரனைத்தா
னெரித்திடுமந்தோவென்செய்வேனெங்கேயெய்துகேன்யார்துணையென்பேன்
திரித்தநெஞ்சகத்தேன் சரித்திரமனைத்துந்திருவுளந்தெரிந்ததுதானே. (௪)

தானெனைப்புணர்ந்தருணமீதெனவேசத்தியமுணர்ந்தனன்றனித்தே
தேனுறக்கருதியிருக்கின்றேனிதுநின்றிருவுளந்தெரிந்ததெந்தாயே
ஆனெனக்கூவியணைந்திடல்வேண்டுமரைக்கணமாயினுந்தாழ்க்கில
நானிருப்பறியேன்றிருச்சிற்றம்பலத்தேநடம்புரிஞானநாடகனே. (௫)

ஞானமுமதனாலடையநுபவமும்நாயினேனுணர்ந்திடவுணர்த்தி
யீனமுமிடருந்தவிர்த்தனையந்நாளிந்நாளடியனேனிங்கே
யூனமொன்றிலலோயநின்றனைக்கூவியுழைக்கின்றேனொருசிறிதெனினு
மேனனவினவாதிருத்தலுமழகோயிறையுநான்றரிக்கலனினியே. (௬)

இனியநற்றாயினினியவென்னரசேயென்னிருகண்ணினுண்மாமணியே
கனியெனவினிக்குங்கருணையாரமுதேகனகவம்பலத்துறுங்களிப்பே
துனியுறுமனமுஞ்சோம்புறுமுணர்வுஞ்சோர்வுறுமுகமுங்கொண்டடியேன்
தனியுளங்கலங்கலழகதோவெனைத்தான்றந்தநற்றந்தைநீயலையோ. (௭)

தந்தையுந்தாயுங்குருவும்யான்போற்றுஞ்சாமியும்பூமியும்பொருளுஞ்
சொந்தநல்வாழ்வுநேயமுந்துணையுஞ்சுற்றமுமுற்றுநீயென்றே
சிந்தையுற்றிங்கேயிருக்கின்றேனிதுநின்றிருவுளந்தெரிந்ததேயெந்தாய்
நிந்தைசெய்யுலகிலயானுளங்கலங்கல்நீதியோநின்னருட்கழகோ. (௮)

அழகனேஞானவமுதனேயென்றனப்பனேயம்பலத்தரசே
குழகனேயின்பக்கொடியுளங்களிக்குங்கொழுநனேசுத்தசன்மார்க்கக்
கழகநேர்நின்றகருணைமாநிதியேகடவுளேகடவுளேயெனநான்
பழகநேர்ந்திட்டேனின்னுமிவ்வுலகிற்பழங்கணுலழுங்குதலழகோ. (௯)

பழம்பிழிமதுரப்பாட்டலவெனினும்பத்தரும்பித்தரும்பிதற்றும்
கிழம்பெறும்பாட்டேகேட்பதுன்னுள்ளக்கிளர்ச்சியென்றறிந்தநாண்முதலாய்
வழங்குநின்புகழேபாடுறுகின்றேன்மற்றொருபற்றுமிங்கறியேன்
* சழங்குடையுலகிற்றளருதலழகோதந்தையுந்தாயுநீயலையோ. (௧௦)

தாயுமென்னொருமைத்தந்தையுஞ்ஞானசபையிலேதனிநடம்புரியுந்
தூயநின்பாதந்துணையெனப்பிடித்தேன்றாக்கமுஞ்சோம்பலுந்துயரும்
மாயையும்வினையுமறைப்புமாணவமுமவளைத்தெனைப்பிடித்திடலழகோ
நாயினேனினியோர்கணந்தரிப்பறியேனல்லருட்சோதிதந்தருளே. (௧௧)

* சழங்குமெலிக்கும் வழிமெலித்தல்-சழக்குவழக்கிற்கு மாறுபட்டது.

சோதியேயென்னைநீசோதனைதொடங்கிற்சூழுயிர்விடத்தொடங்குவனான்
நீதியேநிறைந்தநின்றிருவருணீநிகழ்த்தினீநிச்சயமிதுவே
ஓதியேயுணர்தற்கரும்பெரும்பொருளேயுயிர்க்குயிராகியவொளியே
யாதியேநடுவேயந்தமேயாதிநடுவந்தமில்லதோரறிவே (க௨)

இல்லையுண்டெனுமிவ்விருமையுங்கடந்தோரியற்கையினிறைந்தபேரின்பே
அல்லையுண்டெழுந்ததனிப்பெருஞ்சுடரேயம்பலத்தாடல்செய்யமுதே
வல்லையினடியேன்றுயரொலாந்தவிர்த்துவழங்குகநின்னருள்வழங்கல்
நல்லையின்றலதுநாளையென்றிடிலோநானுயிர்தரிக்கலனரசே. (க௩)

அரைசெலாம்வழங்குந்தனியரசதுநின்னருளரசெனவறிந்தனன்பின்
உரைசெய்நின்னருண்மேலுற்றபேராசையுளமெலாமிடங்கொண்டதெந்தாய்
வரைசெயாமேன்மேற்பொங்கிவாய்ததும்பிவழிகின்றதெனவசங்கடந்தே
யிரைசெயவென்னுவிதழைக்கவவ்வருளையீந்தருளிறையிப்போதே. (க௪)

போதெலாம்வீணிற்போக்கியேமாந்தபுழுத்தலைப்புலையர்கள்புணர்க்குஞ்
சூதெலாங்கேட்குந்தொறுமுனைப்பரவுந்தூயர்கள்மனமதுதுளங்கித்
தாதெலாங்கலங்கத்தளருதலழகோதனியருட்சோதியாலந்த
வாதெலாந்தவிர்த்துச்சுத்தசன்மார்க்கம்வழங்குவித்தருளுகவிரைந்தே (க௫)

விரைந்துநின்னருளையீந்திடல்வேண்டும்விளம்புமித்தருணமென்னுளந்தான்
கரைந்துகாதலிற்பெருகிமேற்பொங்கிக்கரையெலாங்கடந்துகண்டாய்
உரைந்தெனைமணந்தவள்ளலேயெல்லாம்வல்லவாவம்பலவாணா
இரைந்தவென்னுடம்பைத்திருவுடம்பாக்கித்திகழ்வித்தசித்தனேசிவனே. (க௬)

சிவந்திகழ்கருணைத்திருநெறிச்சார்புந்தெய்வமோனமேயெனுந்திறமும்
நவந்தருநிலைகள்சுதந்தரத்தியலும்நன்மையுநாதிறைமுதலாந்
துவந்துவந்தவிர்த்துச்சுத்தமாதியமுச்சுகவடிவம்பெறும்பேறுந்
தவந்திகழெல்லாம்வல்லசித்தியுநீதந்தருள்தருணமீதெனக்கே. (க௭)

தருணமிஞ்ஞான்றேசுத்தசன்மார்க்கத்தனிநெறியுலகெலாந்தழைப்பக்
கருணையுஞ்சிவமேபொருளெனக்கருதுங்கருத்துமுற்றெம்மனோர்களிப்பப்
பொருணிறையோங்கத்தெருணிலைவிளங்கப்புண்ணியம்பொற்புறவயங்க
வருணயந்தருள்வாய்திருச்சிற்றம்பலத்தேயருட்பெருஞ்சோதியென்னரசே. (க௮)

என்னுளவரைமேலருளொளியோங்கிற்றிருளிரவொழிந்ததுமுழுதும்
மன்னுறுமிதயமலாமலர்ந்ததுநன்மங்கலமுழங்குகின்றனசீர்ப்
பொன்னணியலவிளக்கம்பொலிந்ததுசித்திப்பூவையர்புணர்ந்திடப்போந்தார்
சொன்னநற்றருணமருட்பெருஞ்சோதிதுலங்கவந்தருளுகவிரைந்தே. (க௯)

வந்தருள்புரிகவிரைந்திதுதருணமாமணிமன்றிலேஞான
சுந்தரவடிவச்சோதியாய்விளங்குஞ்சுத்தசன்மார்க்கசற்குருவே
தந்தருள்புரிகவரமெலாம்வல்லதனியருட்சோதியையென்று
சிந்தையிற்புணர்ப்பித்தெனையொடுங்கலந்தேசெயத்துவித்தருள்கசெய்வகையே. (௨௦)

திருச்சிற்றம்பலம்.

## சிற்சபைவிளக்கம்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சோறுவேண்டினுநதுகிலணிமுதலாஞ்சுகங்கள்வேண்டினுஞ்சுகமலர்சுகமாம்
வேறுவேண்டினுநினையடைந்தன்றிமேவொணாதெனுமேலவருணர்கே
மாறுவேண்டிலேனவந்துநிற்கின்றேனவள்ளலேயுனறன்மனககுறிப்பறியேன
சாறுவேண்டியபொழில்வடலரசேசத்தியசசபைததனிப்பெரும்பதியே. (௧)

எஞ்சலின்றியதுயரினாலிடாவிடுகெகுண்டையநினனினருள்விரும்பி
வஞ்சநெஞ்சினேன்வந்துநிற்கின்றேனவள்ளலேயுனறனமனககுறிப்பறியேன
அஞ்சலென்றெனையாட்கொளல்வேண்டுமெப்பநின்னலாலறிகிலேனென்றுந
தஞ்சமென்றவாககருள்வடலரசேசததியச்சபைத்தனிப்பெரும்பதியே. (௨)

சூழ்விலாதுழல்மனததினாற்சுழலுந்துட்டனேனருட்சுகப்பெரும்பதிநின்
வாழ்வுவேண்டினேன்வந்துநிற்கின்றேன்வள்ளலேயுன்றன்மனக்குறிப்பறியேன
ஊழவிடாமையிலனாக்கணமெனினுமுன்னைவிட்டயலொன்றுமுற்றறியேன்
தாழ்விலாதசீர்தருவடலரசேசததியச்சபைததனிப்பெருமபதியே. (௩)

ஆட்டமோய்கிலாவஞ்சகமனததாலலைதந்தையவோவயர்ந்துளமயர்ந்து
வாட்டமோடிவணவந்துநிற்கின்றேன்வள்ளலேயுன்றனமனககுறிப்பறியேன
நாட்டநினபுடையன்றிமற்றறியேனாயினேனைப்பிழைபொறுததிதுதருணந்
தாட்டலந்தருவாய்வடலரசேசததியசசபைததனிப்பெருமபதியே. (௪)

கருணையொன்றிலாககன்மனக்குரங்கால்காடுமேடுழன்றுளமெலிந்தந்தோ
வருணநின்புடைவந்துநிற்கின்றேன்வள்ளலேயுன்றன்மனக்குறிப்பறியேன்
அருணனென்றெனையகற்றிடுவாயேலையவோதுணையறிந்திலனிதுவே
தருணமெற்கருள்வாய்வடலரசேசத்தியசசபைததனிப்பெருமபதியே. (௫)

கரணவாதனையாலமிகமயங்கிககலங்கினேனொருகளைகணுமறியேன்
மரணநீககிடவந்துநிற்கின்றேன்வள்ளலேயுன்றன்மனககுறிப்பறியேன
இரணனென்றெனையெண்ணிடேல்பிறிதோரிச்சையொன்றிலேனெந்தைநின்னுபய
சரணமீந்தருள்வாய்வடலரசேசத்தியசசபைததனிபபெரும்பதியே. (௬)

தூயநெஞ்சினேனன்றுநின்கருணைச்சுகமவிழைந்திலேனெனினுமபொய்யுலக
மாயமவேண்டிலேன்வந்துநிற்கின்றேன்வள்ளலேயுன்றன்மனககுறிப்பறியேன்
ஈயவாயததநறறருணமீந்தருள்கவெந்தைநின்மலரிணையடியலலாற
றாயமொன்றிலேன்றனிவடலரசேசததியச்சபைததனிபபெரும்பதியே. (௭)

சிரத்தையாதியசுபகுணஞ்சிறிதுஞ்சேர்ந்திலேனருட்செயலிலேன்சாகா
வரததைவேண்டினேன்வந்துநிற்கின்றேன்வள்ளலேயுன்றன்மனககுறிப்பறியேன்
கரத்தைநேருளக்கடையனென்றெனைநீகைவிடேலொருகணமினியாற்றேன்
தரததையீந்தருள்வாய்வடலரசேசத்தியச்சபைததனிப்பெரும்பதியே. (௮)

பத்தியஞ்சிறிதுற்றிலேனுன்பாற்பத்தியொன்றிலேன்பரமநின்கருணை
மத்தியம்பெறவந்துநிற்கின்றேனவள்ளலேயுன்றன்மனக்குறிப்பறியேன்
எத்தியஞ்சலையெனவருளாயேலேழையேனுயிரிழப்பனுனாணை
சத்தியம்புகன்றேன்வடலரசேசத்தியச்சபைத்தனிப்பெரும்பதியே. (௯)

கயவுசெய்மதகரியெனச்செருக்குங்கருத்தினேன்மனக்கரிசினாலடைந்த
மயர்வுநீக்கிடவந்துநிற்கின்றேன்வள்ளலேயுன்றன்மனக்குறிப்பறியேன்
உயவுவந்தருள்புரிந்திடாயெனிலென்னுயிர்தரித்திடாதுன்னடியாணை
நயவுசெய்தருள்வாய்வடலரசேசத்தியச்சபைத்தனிப்பெரும்பதியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவடிமுறையீடு.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சீரிடம்பெறுமோர்திருச்சிற்றம்பலத்தேதிகழ்தனித்தந்தையேநின்பால்
சேரிடமறிந்தேசேர்ந்தனன்கருணைசெய்தருள்செய்திடத்தாழ்க்கில்
யாரிடம்புகுவேன்யாதுணையெனப்பேன்யார்க்கெடுத்தெனக்குறையிசைப்பேன்
போரிடமுடியாதினித்துயரொடுநான்பொறுக்கலேனருள்கவிப்போதே. (௧)

போதுதான்விரைந்துபோகின்றதருணீபுரிந்திடத்தாழ்த்தியேலையோ
யாதுதான்புரிவேன்யாரிடம்புகுவேன்யார்க்கெடுத்தெனக்குறையிசைப்பேன்
தீதுதான்புரிந்தேனெனினுநீயதனைத்திருவுளத்தடைத்திடுவாயேல்
ஈதுதான்றந்தைமரபினுக்கழகோவென்னுயிர்த்தந்தைநீயலையோ. (௨)

தந்தைநீயலையோதநயனானலனோதமியனேனளர்ந்துளங்கலங்கி
எந்தையேகுருவேயிறைவனேமுறையோவென்றுநின்றோலிடுகின்றேன்
சிந்தையேயறியார்போன்றிருந்தனையேற்சிறியனேனென்செய்கேனையோ
சந்தையேபுகுந்தநாயினிற்கடையேன்றளர்ச்சியைத்தவிர்ப்பவர்யாரோ. (௩)

யாரினுங்கடையேன்யாரினுஞ்சிறியேனென்பிழைபொறுப்பவர்யாரே
பாரினும்பெரிதாம்பொறுமையோய்நீயேபாவியேன்பிழைபொறுத்திலையேல்
ஊரினும்புகுதவொண்ணுமோபாவியுடம்பைவைத்துலாவவும்படுமோ
சேரினுமெனைத்தான்சோதிடார்ப்பொதுவாந்தெய்வத்துக்கடாதவனென்றே. (௪)

அடாதகாரியங்கள்செய்தனனெனினுமப்பநீயடியனேன்றன்னை
விடாதவாறறிந்தேகளித்திருக்கின்றேன்விடுதியோவிட்டிடுவாயேல்
உடாதவெற்றரைநேர்ந்துயங்குவேனையோவுன்னருளடையநானிங்கே
படாதபாடெல்லாம்பட்டனனந்தப்பாடெலாம்நீயறியாயோ. (௫)

அறிந்திலையோவென்பாடெலாமென்றேயழைத்தனனப்பனேயென்னை
எறிந்திடாதிந்தத்தருணமேவந்தாயெடுத்தணைத்தஞ்சிடேன்மகனே
பிறிந்திடேஞ்சிறிதும்பிறிந்திடேமுலகிற்பெருந்திறற்சித்திகளெல்லாஞ்
சிறந்திடவுனக்கேதந்தனமெனவென்சென்னிதொட்டுரைத்தனைகளித்தே. (௬)

களிததெனதுடம்பிற்புகுந்தனையெனதுகருத்திலேயமாந்தனைகனிந்தே
தெளிததவெனனறிவில்விளஙகினையுயிரிறசிறப்பினுறகலநதனையுள்ளந
தளிாததிடச்சாகாவரங்கொடுதடுதனறுநதடைபடாசசித்திகளெல்லாம
அளிததனையெனககேநின்பெருஙகருணையடியன்மேல்வைததவாறெனனே. (௭)

எனனிகரில்லாவிழிவினேனறனைமேலேற்றினையாவரும்வியபபப்
பொனனியலவடிவுமபுனைபடாவுளமுமபூரணஞானமுமபொருளும்
உன்னியவெல்லாமவலலசிததியுமபேருவகையுமுதவினையெனககே
தன்னிகரில்லாததலைவனேநினதுதயவையெனனென்றுசாறறுவனே. (௮)

சாற்றுவேனெனதுதநதையேதாயேசறகுருநாதனேயென்றே
போறறுவேனறிருச்சிற்றமபலததாடுமபூரணாவெனவுலகெலலாந
தூற்றுவேனன்றியெனக்குநீசெயததூயபேருதவிககுநானென்
ஆறறுவேனுவியுடலபொருளெல்லாமபபநினசுதநதரமன்றோ. (௯)

சுதநதரமுனககேகொடுததனமுனதுதூயநல்லுடமபினிறபுகுநதேம்
இதநதருமுளததிலிருநதனமுனையேயினபுறககலந்தனமழியாப
பதநதனிலவாழ்கவருட்பெருஞ்சோதிப்பரிசுபெறறிடுகபொற்சபையுஞ்
சிதநதருசபையும்போற்றுகவெனறுயதெய்வமேவாழ்கநினசீரே. (௧௦)

திருசசிறறமபலம்

---

## தற்சுதந்தரமின்மை.



### அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இப்பாரிலுடலாவிபொருளுமுன்பாறகொடுததேன்மற்றெனக்கென்றிங்கே
எப்பாலுஞ்சுதநதரமோாிறையுமிலையருட்சோதியிறைகையெனனுந
துப்பாயவுடலாதிதருவாயோவின்னுமெனைச்சோதிப்பாயோ
அப்பாநின்றிருவுளத்தையறியேனிவவடியேனுலாவதென்னே. (௧)

என்னேயெம்பெருமானிஙகின்னுமணாதிலனென்றேயேங்கியேங்கி
மன்னேயென்மணியேகண்மணியேயென்வாழ்வேநல்வரததாற்பெற்ற
பொன்னேயற்புதமேசெமபொருளேயென்புகலேமெயப்போதமேயென்
அன்னேயென்னப்பாவெனறழைத்தலறியடியேனுலாவதெனனே. (௨)

பொடியெடுக்கப்போயதனைமறந்துமடியெடுததனையிற்புனைவேன்கில்லோா
தடியெடுக்கக்காணிலதறுளங்கலங்கியோடுவெனித்தரததேனிஙகே
முடியெடுக்கவலலேனோவிறைவாநின்னருளிலதேல்முனனேவைத்த
வடியெடுக்கமுடியாதேயநதோவிச்சிறியேனுலாவதென்னே. (௩)

பாட்டுவித்தாற்பாடுகின்றேன்பணிவிததாற்பணிகின்றேன்பதியேநினைக
கூட்டுவிததாற்கூடுகின்றேன்குழைவிததாற்குழைகின்றேனகுறிததவூணை
யூட்டுவித்தாலுண்கின்றேனுறக்குவிததாலுறங்குகின்றேனுறங்காதென்று
மாட்டுவித்தாலாடுகின்றேனநதோவிச்சிறியேனுலாவதெனனே. (௪)

உடுப்பவனுமுண்பவனும்நானேயென்னவுநாணமுறுவதெந்தாய்
தடுப்பவனுநடைதீர்த்துக்கொடுப்பவனும்பிறப்பிறப்புத்தன்னைநீக்கி
யெடுப்பவனுங்காப்பவனுமின்பவநுபவவுருவாயென்னுளோங்கி
யடுப்பவனுநீயென்றாலந்தோவிச்சிறியேனாலாவதென்னே. (௫)

சாவதென்றும்பிறப்பதென்றுஞ்சாற்றுகின்றபெரும்பாவந்தன்னையெண்ணி
நோவதின்றுபுதிதன்றேயென்றுமுளதாவிந்தநோவைநீக்கி
ஈவதுமன்றிடைநடிப்போயநின்றலேயாகுமற்றையிறைவராலே
யாவதொன்றுமில்லையென்றாலந்தோவிச்சிறியேனாலாவதென்னே. (௬)

இசைத்திடவுநினைத்திடவும்பெரிதரிதாந்தனித்தலைமையிறைவாவுன்றன்
அசைத்திடுபேரருட்செயலாலசைவதன்றியைந்தொழில்செய்நாதராலுந்
தசைத்திடுபுன்றரும்பினையுமகங்கரித்துத்தங்கள்சுதந்தரத்தாலிங்கே
யசைத்திடற்குமுடியாதேலந்தோவிச்சிறியேனாலாவதென்னே. (௭)

கல்லாயமனத்தையுமோர்கணத்தினிலேகனிவித்துக்கருணையாலே
பல்லாருமதிசயிக்கப்பக்குவந்தந்தருட்பதமும்பாலிக்கின்றோய்
எல்லாஞ்செய்வல்லோய்சிற்றம்பலத்தேயாடலிடுகின்றோய்நின்னா
லல்லாலொன்றாகாதேலந்தோவிச்சிறியேனாலாவதென்னே. (௮)

களைசேரப்புரிந்தாலுங்கடையேன்செய்குற்றமெலாங்கருதிமாயைத்
திளைசேரப்புரிந்தாலுந்திருவுளமேதுணையெனநான்சிந்தித்திங்கே
யுளைசேரவிருந்ததலன்றியுடையாயென்னுறவேயென்னுயிரேயென்ற
னரசேயென்னம்மேயெனனப்பாவிச்சிறியேனாலாவதெனனே. (௯)

இன்பேநன்றருளியருளியற்கையிலேவைத்தாலுமிங்கேயென்னைத்
துன்பேசெயவித்தாலுமென்செய்வேனின்னருளேதுணையென்றந்தோ
வென்பேதைமனமடங்கியிருப்பதன்றியெல்லாங்கண்டிருக்குமென்ற
னன்பேயென்னம்மேயென்னப்பாவிச்சிறியேனாலாவதென்னே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## அத்துவிதானந்தத்தநுபவவிடையீடு.

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்தகுபொன்னம்பலத்தேதிருநடஞ்செய்தருளுந் திருவடிகளடிச்சிறியேன்சென்னிமிசைவருமோ, உருத்தகுநானிலத்திடைநீண்மலத்தடைபோய்ஞானவுருப்படிவமடைவேனோவொன்றிரண்டென்னாத, பொருத்தமுறுசுத்தசிவானந்தவெள்ளந்ததும்பிப்பொங்கியகம்புறங்காணாதெங்குநிறைந்திடுமோ, அருத்தகுமவ்வெள்ளத்தேநான்மூழ்கிநான்போயதுவாகப்பெறுவேனோவறிகிலன்மேல்விளைவே. (௧)

களைந்ததனிக்களைகாண்பதுளதோகளைகண்டபொழுதெனையுங்கண்டுதெளிவேனோ, அரணமெலாங்கடந்ததிருவருள்வெளிநேர்படுமோவவ்வெளிக்குளானந்தவநுபவந்தானுறுமோ, மரணமெலாந்தவிர்ந்துசிவமயமாகிநிறைதல்வாய்த்தி

டுமோமூலமலவாதனையும்போமோ, சரணமெலாந்தரமன்றிற்றிருநடஞ்செய்பெருமான்றனதுதிருவுளமெதுவோசற்றுமறிந்திலனே. (௨)

நாதாந்தத்திருவீதிநடந்துகடப்பேனோ ஞானவெளிநடுவின்ப நடந்தரிசிப்பேனோ,போதாந்தத்திருவடியென்சென்னிபொருந்திடுமோபுதுமையறச்சிவயோகம்பொங்கிநிறைந்திடுமோ, வேதாந்தசித்தாந்தசமரசமும்வருமோவெறுவெளியிற்சுத்தசிவவெளிமயந்தானுறுமோ, பாதாந்தவலர்நீறுமணக்கமன்றிலாடுமெபரமர்திருவுளமெதுவோபரமமறிந்திலனே. (௩)

சிதம்பரதேயானந்தசித நர்திருநடநான் சிறிதறிந்தபடியின்னுமுழுதுமறிவேனோ, பதம்பெறததேம்பழம்பிழிந்துபாலுநறும்பாகும்பசுநெய்யுங்கலந்ததெனப்பாடிமகிழ்வேனோ, நிதம்பரவியானந்தநித்திரைநீங்காதநித்தர்பணிபுரிந்தின்பசித்திபெறுவேனோ, மதம்பரவுமலச்செருக்கிறசிறந்தசிறியேனோன்வள்ளல்குருநாதர்திருவுள்ளமறியேனே. (௪)

களக்கமறப்பொதுநடநான்கண்டுகொண்டதருணங்கடைச்சிறியேனுளம்பூத்துகாய்த்ததொருகாய்தான், விளக்கமுறப்பழுத்திடுமோவெம்பியுதிர்ந்திடுமோவெம்பாதுபழுக்கினுமென்கரத்திலகப்படுமோ, கொளக்கருதுமலமாயைக்குரங்குகவர்ந்திடுமோகுரங்குகவராதெனதுகுறிப்பிலகப்படினும், துளக்கமறவுண்ணுவனோதொண்டைவிக்கிக்கொளுமோசோதிதிருவுளமெதுவோவேதுமறிந்திலனே. (௫)

திருப்பொதுவிற்றிருநடநான்சென்றுகண்டதருணஞ்சித்தியெனும்பெண்ணரசியெத்தியென்கைபிடித்தாள், கருப்பறியாதெனையதன்முன்கலந்தபுத்தியெனுமோர்காரிகைதான்கண்டளவிற்கனிந்துமகிழ்ந்திடுமோ, விருப்பமுறாதெனைமுனிந்துவிடுத்திடுமோநேயம்விளைந்திடுமோவிவர்க்குநிதஞ்சண்டைவிளைந்திடுமோ, தருப்பொதுவிலிருவர்க்குஞ்சந்தியுண்டாமோதடைபடுமோதிருவுளந்தானசற்றுமறிந்திலனே. (௬)

ஆனந்தநடம்பொதுவிற்கண்டதருணத்தேயருமருந்தொன்றென்கருத்திலடைந்தமர்ந்ததுதான், கானந்தமத்தாலேகாரமறைபடுமோகடுங்காரமாகியென்றன்கருத்திலுறைந்திடுமோ, ஊனந்தமறக்கொளும்போதினிக்கரசந்தருமோவுணக்கசந்துகுமட்டியெதிரெடுத்திடநேர்ந்திடுமோ, ஞானந்தவுளவறிந்துபிறாக்கியவருமோநல்லதிருவுளமெதுவோவல்லதறிந்திலனே. (௭)

தாய்கொண்டதிருப்பொதுவிலெங்கள்குருநாதன்சந்நிதிபோய்வரவிடுத்ததனிக்கரணப்பூவை, காய்கொண்டுவந்திடுமோபழங்கொண்டுவருமோகனிந்தபழங்கொண்டுவருங்காலத்தனைமதமாம, பேய்கொண்டுபோயவிடுமோபிலத்திடைவீழ்ந்திடுமோபின்படுமோமுன்படுமோபிணங்கியொளித்திடுமோ, வாய்கொண்டுவென்றிடுமோதோற்றிடுமோவென்னைமறந்திடுமோதிருவுளத்தின்வண்ணமறிந்திலனே. (௮)

தீட்டுமணிப்பொதுநடஞ்செய்திருவடிகண்டேத்தச்செல்கின்றேன்சிறியேன்முன்சென்றவழியறியேன், காட்டுவழிகிடைத்திடுமோநாட்டுவழிதருமோகாலிளைப்புக்கண்டிடுமோகாணுதோகளிப்பாம், மேட்டினிடைவிடுத்திடுமோபள்ளத்தேவிடுமோவிவேகமெனுந்துணையுறுமோவேடாபயமுறுமோ, ஈட்டுதிருவடிச்சமுகங்காணவுநேர்ந்திடுமோவெப்படியோதிருவுளந்தானேதுமறிந்திலனே. (௯)

ஞானமணிப்பொதுநடஞ்செய்திருவடிகண்டிடவேநடக்கின்றேனந்தோமுன்னடந்தவழியறியேன், ஊனமிகுமாணவமாம்பாவியெதிர்ப்படுமோவுடைமையெலாம்பறித்திடுமோநடைமெலிந்துபோமோ, ஈனமுறுமகங்காரப்புலிகுறுக்கேவருமோவிச்சையெனுமிராகதப்பேயெனைப்பிடித்துக்கொளுமோ, ஆனமலத்தடைநீக்கவருட்டுணைதானுறுமோஐயர்திருவுளமெதுவோயாதுமறிந்திலனே. (௪௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவருட்புகழ்ச்சி.

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கதவந்திறவாயோதிரைகளெலாந்தவிர்த்தேதிருவருளாம்பெருஞ்சோதித்திருவுருக்காட்டாயோ, உருக்கியமுதூற்றெடுத்தேயுடம்புயிரோடுளமுமொளிமயமேயாக்குறமெய்யுணர்ச்சியருளாயோ, கருக்கருதாத்தனிவடிவோய் நின்னையென்னுட்கலந்தேகங்குலபகலின்றியென்றுங்களித்திடச்செய்யாயோ, செருக்கருதார்தவாகக்கருளுஞ்சித்திபுரத்தரசேசித்தசிகாமணியேயென்றிருநடநாயகனே. (௧)

மணிக்கதவந்திறவாயோமறைப்பையெலாந்தவிர்த்தே மாற்றறியாப்பொன்னேநின்வடிவதுகாட்டாயோ, கணிக்கறியாப்பெருநிலையிலென்னொடுநீகலந்தேகரைகடந்தபெரும்போகங்கண்டிடச்செய்யாயோ, தணிக்கறியாக்காதல்மிகப்பெருகுகின்றதரசேதாங்கமுடியாதினியென்றனித்தலைமைப்பதியே, திணிக்கலையாதியையெல்லாமபணிக்கவல்லசிவமேசித்தசிகாமணியேயெனதிருநடநாயகனே. (௨)

உரைகடந்ததிருவருட்பேரொளிவடிவைகலந்தேவுவட்டாதபெரும்போகமோங்கியுறும்பொருட்டே, இரைகடந்தென்னுள்ளகத்தேயெழுந்துபொங்கித்ததும்பியென்காதற்பெருவெள்ளமெனைமுற்றும்விழுங்கிக, கரைகடந்துபோனதினித்தாங்கமுடியாதுகண்டுகொள்வாய்நீயேயுனகருத்தின்வண்ணமரசே, திரைகடந்தகுருமணியேசிவஞானமணியேசித்தசிகாமணியேயெனதிருநடநாயகனே. (௩)

உன்புடைநான்பிறாபோலேயுடுக்கவிழைந்தேனோஉண்ணவிழைந்தேனோவேறுடைமைவிழைந்தேனோ, அன்புடையாயென்றனைநீயணைந்திடவேவிழைந்தேனந்தோவெனதுசைவெள்ளமணைகடந்ததரசே, எனபுடைவந்தணைகவெனவியம்புகின்றேனுலகோரெனசொலினுஞ்சொல்லுக வெனணிலச்சையெலாமவிடுத்தேன், தென்புடையோர்முகநோக்கித் திருப்பொதுநிற்கின்றோய் சித்தசிகாமணியேயென்றிருநடநாயகனே. (௪)

இறந்திறந்தேயிளைத்ததெலாம்போதுமிந்தவுடம்பே யியற்கையுடம்பாகவருளின்னமுதமளித்தென், புறந்தழுவியகம்புணர்ந்தேகலந்துகொண்டென்நாளும்பூரணமாஞ்சிவபோகம்பொங்கியிடவிழைந்தேன், பிறந்திறந்துபொய்க்கதியைப்பெற நினைந்தேமாந்தபேதையர்போலெனைநினையேல்பெரியதிருக்கதவந், திறந்தருளியணைந்திடுவாய்சிற்சபைவாழரசேசித்தசிகாமணியேயென்றிருநடநாயகனே. (௫)

பொய்யுடையார்விழைகின்றபுணர்ச்சிவிழைந்தேனோ பூணவிழைந்தேனோவான்காணவிழைந்தேனோ, மெய்யுடையாயெனையொடுநீவிளையாடவிழைத்தேன்விளையாட்

ட்டென்பதுஞானம்விளையும்விளையாட்டே, பையுடைப்பாம்பணையரொடுமாடுகின்றோ
யெனதுபண்பறிந்தோநண்புவைத்தபண்புடையோயினனே, செய்யுடையென்னொடு
கூடியாடவெழுந்தருள்வாய்சித்தசிகாமணியேயென்றிருநடநாயகனே. (௬)

கூறுகின்றசமயமெலாமதங்களெலாம்பிடித்துக்கூவுகின்றார்பலனொன்றுங்கொண்
டறியாவீணே, நீறுகின்றார்மண்ணுகிநாறுகின்றாரவாபோல்நீயுலகிலழிந்துவிடநினைத்
தேனொருநிலைமேல், ஏறுகின்றதிறம்விழைந்தேனையேறுவித்தாயாங்கேயிலங்குதிருக்கதவு
திறந்தின்னமுதமளித்தே, தேறுகின்றமெய்ஞ்ஞானசித்தியுறப்புரிவாய்சித்தசிகாமணி
யேயென்றிருநடநாயகனே. (௭)

வேதநெறியாகமத்தினெறிபவுராணங்கள் விளம்புநெறியிதிகாசம்விதித்தநெறிமு
ழுதும், ஓதுகின்றசூதனைத்துமுளவனைத்துங்காட்டியுள்ளதனையுள்ளபடியுணரவுணா
த்தினையே, ஏதமறவுணர்ந்தனனவீண்போதுகழிப்பதற்கோவெள்ளளவுமெண்ணமிலே
னென்னொடுநீபுணர்ந்தே, தீதறவேயனைத்தும்வல்லசித்தாடல்புரிவாய்சித்தசிகாமணி
யேயென்றிருநடநாயகனே. (௮)

கலையுரைத்தகற்பனையேநிலையெனக்கொண்டாடுங்கண்மூடிவழக்கமெலாமண்மூ
டிப்போக, மலைவறுசன்மார்க்கமொன்றேநிலைபெறமெய்யுலகமவாழ்ந்தோங்கக்கருதிய
ருள்வழங்கினையென்றனக்கே, யுலைவறுமிப்பொழுதேநற்றருணமெனநீயேயுணர்த்தி
னைவந்தணைந்தருள்வாயுண்மையுரைத்தவனே, சிலைநிகர்வன்மனங்கரைத்துத்திருவமு
தமளித்தோய்சித்தசிகாமணியேயென்றிருநடநாயகனே. (௯)

திருத்தகுமோர்தருணமிதிற்றிருக்கதவந்திறந்தே திருவருட்பேரொளிகாட்டித்
திருவமுதமூட்டிக, கருத்துமகிழ்ந்தென்னுடம்பிற்கலந்துளத்திற்கலந்துகனிந்துயி
ரிற்கலந்துறிவிற்கலந்துலகமனைத்தும், உருத்தகவேயடங்குகின்றவூழிதொறுமபிரியா
தொன்றுகிக்காலவரையுரைப்பவெலாங்கடந்தே, திருத்தியொடுவிளங்கியருளாடல்
செயவேண்டுஞ்சித்தசிகாமணியேயென்றிருநடநாயகனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## பிள்ளைச்சிறுவிண்ணப்பம்.



எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தடித்தவோர்மகனைத்தந்தையீண்டடித்தாற்றாயுடனணைப்பள்தாயடித்தாற்
பிடித்தொருதந்தையணைப்பனிங்கெனக்குப்பேசியதந்தையுந்தாயும்
பொடித்திருமேனியம்பலத்தாடும்புனிதநீயாதலாலென்னை
யடித்ததுபோதுமணைத்திடல்வேண்டுமம்மையப்பாவினியாற்றேன். (௧)

பெற்றதம்பிள்ளைக்குணங்களையெல்லாம்பெற்றவரறிவரேயல்லால்
மற்றவரறியாரென்றனையீன்றவள்ளலேமன்றிலேநடிக்கும்
கொற்றவவோண்குணத்தவநீதான்குறிக்கொண்டகொடியனேன்குணங்கள்
முற்றுநன்கறிவாயறிந்துமென்றனைநீமுனிவதென்முனிவுதீர்ந்தருளே. (௨)

வெம்மதிக்கொடியமகன்கொடுஞ்செயகைவிரும்பினுமங்ஙனம்புரியச்
சம்மதிக்கினருரவன்றனைப்பெற்றதந்தைதாயமகன்விருப்பாலே
இம்மதிச்சிறியேன்விழைந்ததொன்றிலைநீயெனறனைவிழைவிககவிழைந்தேன்
செம்மதிககருணைத திருநெறியிதுநின்றிருவுளமறியுமேயெந்தாய. (௩)

பொய்பிழையனந்தம்புகல்கின்றேனதிலோர்புன்முளையாயினும்பிறர்க்கு
நைபிழையுளதேல்நவின்றிடேன்பிறர்பால்நண்ணியகருணையாற்பலவே
கைபிழையாமைகருதுகின்றேனின்கழறபதம்விழைகின்றேனல்லாற்
செய்பிழைவேறென்றறிகிலேனந்தோ திருவுளமறியுமேயெந்தாய். (௪)

அப்பணிமுடியென்னப்பனேமன்றிலானந்தநடம்புரியரசே
இப்புவிதனிலேயறிவுவந்ததுதொட்டிந்தநாள்வரையுமென்றனக்கே
எபபணியிட்டாயப்பணியலதென்னிச்சையாற்புரிந்ததொன்றிலையே
செப்புவதென்னுன்செய்தவையெல்லாந்திருவுளமறியுமேயெந்தாய். (௫)

முன்னொடுபின்னுநீதருமடவார்முயக்கினிற்பொருந்தினேனதுவும்
பொன்னொடுவிளங்குஞ்சபைநடத்தரசுன்புணர்ப்பலாலென்புணர்ப்பலவே
யென்னொடுமிருந்திங்கறிகின்றநினககேயெந்தைவேறியம்புவதென்னோ
சொன்னநெடுவானத்தரம்பையரெனினுந்துரும்பெனக்காண்கினறேனறிததே. (௬)

இன்னுமிங்கெனைநீமடந்தையர்முயக்கிலெய்துவித்திடுதியேலதுவுந்
தன்னுளப்புணர்ப்பிஙஙெனகவொருசிறிதுஞ்சமமதமன்றுநானிதனைப்
பன்னுவதென்னேயிதிலருவருப்புப்பாலுணுங்காலையேயுளதால்
மன்னுமம்பலத்தேநடம்புரிவோயென்மதிபபெலாந்திருவடிமலர்க்கே. (௭)

அறிவிலாச்சிறியபருவததிற்றூனேயருந்தலிலெனக்குளவெறுப்பைப்
பிறிவிலாதெனவுட்கலநதநீயறிதியினறுநான்பேசுவதென்னே
செறிவிலாககடையேனென்னினுமடியேனறிருவருளமுதமேவிழைந்தேன்
எறிவிலாச்சுவைவேறெவற்றினும்விழைவோரொட்டுணையேனுமின்றெநதாய். (௮)

இன்சுவையுணவுபலபலவெனககிங்கெநதைநீகொடுப்பிககச்சிறியேன்
நின்சுவையுணவெனறுண்கின்றேனினனுநீதருவிததிடிலதுநின
றன்சுதந்தரமிங்கெனசகதிலிறையுஞ்சமமதமில்லைநான்றூனே
யென்சுதந்தரததிற்றேடுவேனல்லேன்றேடியதும்மிலையீண்டே. (௯)

செறிவதின்மனததேன்காசிலேயாசைசெயதிலேனிந்நாளன்றி
அறிவதில்லாதசிறுபருவததுமடுததவர்கொடுததகாசவர்மே
லெறிவதுமேட்டிலெறிநததுமெனகருள்ளிருக்கின்றநீயறிந்ததுவே
பிறிவதில்லாநின்னருட்பெரும்பொருளைப்பெற்றனன்பேசுவதென்னே. (௧௦)

பணத்திலேசிறிதுமாசையொன்றிலைநான்படைத்தவப்பணங்களைப்பலகால்
கிணறறிலேயெறிந்தேனகுளததிலுமெறிநதேன்கேணியிலெறிந்தனனெந்தாய்
குணததிலேநீதான்கொடுக்கினறபொருளையெறிகலேன்கொடுககின்றேன்பிறர்க்கே
கணத்திலேயெல்லாங்காட்டுநின்னருளைக்கண்டனனினிச்சொல்வதென்னே. (௧௧)

கிளைத்தவிவ்வுடம்பிலாசையெள்ளளவுங்கிளைத்திலேனபசியறவுணவு
திளைத்திடுந்தோறும்வெறுப்பொடுமுண்டேனின்றுமேவெறுப்பிலுண்கின்றேன
தளைத்திடுமுடையூணுடம்பொருசிறிதுநதடித்திடநினைத்திலேனின்றும்
இளைத்திடவிழைகின்றேனிதுநான்முனியம்பலென்னீயறிந்ததுவே. (கஉ)

இவ்வுலகதிலேயிறையரசாட்சியின்பத்துமற்றையின்பதது
மெவ்வளவெனினுமிச்சையொன்றறியேனெண்ணுந்தோறருவருக்கின்றே
னவ்வுலகதிலேயிந்திராபிரமரரிமுதலோரடைகின்ற
கவ்வையின்பததுமாசைசற்றறியேனெந்தையென்கருத்தறிந்ததுவே. (கங)

சரியையோர்நான்குங்கிரியையோர்நான்குஞ்சாற்றிடும்யோகமோர்நான்கும்
புரியவும்பதங்கள்பொருந்தவுமெனதுபுந்தியிலாசைசற்றறியேன
பெரியதோர்ஞானநான்கினுமாசைபெற்றிலேனமுத்திபெற்றிடவும்
உரியதோரிச்சையெனக்கிலையென்றனுள்ளநீயறிந்ததேயெந்தாய். (கச)

இறக்கவுமாசையில்லையிப்படிநானிருக்கவுமாசையினறினிநான்
பிறக்கவுமாசையில்லையுலகெல்லாம்பெரியவர்பெரியவரெனவே
சிறக்கவுமாசையில்லைவிசித்திரங்கள்செய்யவுமாசையொன்றில்லை
துறக்கவுமாசையில்லைதுயரடைந்துதூங்கவுமாசையொன்றில்லையே. (கரு)

சற்சபைக்குரியார்தம்மொடுங்கூடித்தனித்தபேரன்புமெய்யறிவும்
நற்சபைக்குரியவொழுக்கமுமழியாநல்லமெய்வாழ்க்கையும்பெற்றே
சிற்சபைநடமும்பொற்சபைநடமுநினைதொறும்பாடிநின்றாடித்
தெற்சபையுலகத்துயிர்களெலாமின்பஞ்செயவெதனனிச்சையாமெந்தாய். (கசு)

உருமலியுலகிலுன்னைநான்கலந்தேயூழிதோறூழியும்பிரியா
தொருமையுற்றழியாப்பெருமைபெற்றடியேனுன்னையேபாடிநின்றாடி
இருநிலத்தோங்கிக்களிக்கவும்பிறருக்கிடுக்கணுற்றாலவைதவிர்த்தே
திருமணிப்பொதுவிலன்புடையவராச்செய்யவுமிச்சைகாணெந்தாய். (கஎ)

எவ்வுயிர்த்திரளுமென்னுயிரெனவேயெண்ணிநல்லின்புறச்செயவு
மவ்வுயிர்களுக்குவருமிடையூற்றையகற்றியேயச்சநீக்கிடவுஞ்
செவ்வையுற்றுனதுதிருப்பதம்பாடிச்சிவசிவவென்றுகூத்தாடி
யொவ்வுறக்களிப்பாலழிவுறாதிங்கேயோங்கவுமிச்சைகாணெந்தாய். (கஅ)

உலகறிவெனக்கிங்குற்றநாள்தொடங்கியுன்னறிவடையுநாள்வரையி
லிலகியென்னோடுபழகியுமெனைத்தானெண்ணியுநண்ணியும்பின்னர்
விலகியமாந்தரைவருமிங்கேமெய்யுறக்கூடிநின்றுனையே
யலகில்பேரன்பிற்போற்றிவாழ்ந்திடவுமடியனேற்கிச்சைகாணெந்தாய். (கக)

திருவளர்திருச்சிற்றம்பலமோங்குஞ்சிதம்பரமெனும்பெருங்கோயி
லுருவளர்மறையுமாகமக்கலையுமுரைத்தவாறியல்பெறப்புதுக்கி
மருவளர்மலரின்விளக்கிநின்மேனிவண்ணங்கண்டுளங்களித்திடவுங்
கருவளருலகிற்றிருவிழாக்காட்சிகாணவுமிச்சைகாணெந்தாய். (உ0)

தங்கமேயனையார்கூடியஞானசமரசசுத்தசன்மார்க்கச்
சங்கமேகண்டுகளிக்கவுஞ்சாகாத்திருக்கோயில்கண்டிடவுந்
துங்கமேபெறுஞ்சற்சங்கநீடூழிதுலங்கவுஞ்சங்கத்திலடியே
னங்கமேகுளிரநின்றனைப்பாடியாடவுமிச்சைகாணெந்தாய். (உக)

கருணையேவடிவாய்ப்பிறர்களுக்கடுத்தகடுந்துயரச்சமாதிகளைத்
தருணநின்னருளாற்றவிர்த்தவாக்கின்பந்தரவுமவன்புலைகொலையிரண்டு
மொருவியநெறியிலுலகெலாநடக்கவுஞற்றவுமம்பலந்தனிலே
மருவியபுகழைவழுத்தவுநினைவாழ்த்தவுமிச்சைகாணெந்தாய். (உஉ)

மண்ணுலகதிலேயுயிர்கள்தாம்வருந்தும்வருத்தத்தையொருசிறிதெனினுங்
கண்ணுறப்பார்த்துஞ்செவியுறக்கேட்டுங்கணமுநானசகித்திடமாட்டே
னெண்ணுறுமெனக்கேநின்னருள்வலத்தாலிசைத்தபோதிசைத்தபோதெல்லாம்
நண்ணுமவ்வருத்தந்தவிர்க்கநல்வரந்தானல்குதலெனக்கிச்சையெந்தாய். (உங)

இவையலாற்பிறிதோர்விடயத்திலிச்சையெனக்கிலையிவையெலாமென்னுட்
சிவையொடுமோங்குபெருந்தயாநிதிநின்றிருவுளத்தறிந்ததுதானே
தவமிலேனெனினுமிச்சையின்படிநீதருதலேவேண்டுமிவ்விச்சை
நவையிலாவிச்சையெனவறிவிக்கவறிந்தனனவின்றனனெந்தாய். (உச)

தனிப்பெருஞ்சோதித்தலைவனேயெனதுதந்தையேதிருச்சிற்றம்பலத்தே
கனிப்பெருங்கருணைக்கடவுளேயடியேன்கருதிநின்றுரைக்கும்விண்ணப்ப
மினிப்புறநினதுதிருவுளத்தடைத்தேயெனக்கருள்புரிகநீவிரைந்தே
யினிச்சிறுபொழுதுந்தரித்திடேனுன்றனிணைமலர்ப்பொன்னடியாணை. (உரு)

திரிபிலாப்பொருளேதிருச்சிற்றம்பலத்தேதிகழ்கின்றதெய்வமேயன்பர்
பரிவுறுந்தோறும்விரைந்துவந்தருளும்பண்பனேபரையிடப்பாகா
பெரியபொற்சபையினடம்புரிகின்றபேரருட்சோதியேயெனக்கே
யுரியநற்றந்தைவள்ளலேயடியேனுரைக்கின்றேன்கேட்டருளிதுவே. (உசா)

தானலாதிறையுமுயிர்க்கசைவில்லாததலைவனேதிருச்சிற்றம்பலத்தே
வானலால்வேறொன்றிலையெனவுரைப்பவயங்கியமெய்யின்பவாழ்வே
யூனலாலுயிருமுளமுமுள்ளுணர்வுமுவப்புறவினிக்குந்தெள்ளமுதே
ஞானநாடகஞ்செய்தந்தையேயடியேனவில்கின்றேன்கேட்டருளிதுவே. (உஎ)

என்னுயிர்க்குயிராந்தெய்வமேயென்னையெழுமையுங்காத்தருளிறைவா
வென்னுளத்தினிக்குந்தீஞ்சுவைக்கனியேயெனக்கறிவுணர்த்தியகுருவே
யென்னுடையன்பேதிருச்சிற்றம்பலத்தேயெனக்கருள்புரிந்தமெய்யின்பே
யென்னையீன்றெடுத்ததந்தையேயடியேனிசைக்கின்றேன்கேட்கவிம்மொழியே.

திருச்சிற்றம்பலம்.

# பிள்ளைப்பெருவிண்ணப்பம்.



## எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கருணையாரமுதேயென்னுயிர்க்குயிரேகனிந்தசிற்றம்பலக்கனியே
வருணமாமறையின்மெய்ப்பொருளாகிவயங்கியவள்ளலேயன்பா
தெருணிறையுளத்தேதிகழ்தனித்தலைமைத்தெய்வமேதிருவருட்சிவமே
தருணமென்றொருமைத்தந்தையேதாயேதரித்தருளதிருச்செவிக்கிதுவே. (க)

என்னையாண்டருளியென்பிழைபொறுத்தவிறைவனேதிருச்சிற்றம்பலத்தே
யென்னையாண்டருளுனக்குநல்லருளிங்கீகுதுமென்றவெனகுருவே
யென்னைவேறெண்ணாதுள்ளதேயுணாதியெனக்குளேவிளங்குபேரொளியே
யென்னையீன்றளித்ததந்தையேவிரைந்திங்கேற்றருள்திருச்செவிக்கிதுவே. (உ)

இரும்புநேர்மனத்தேன்பிழையெலாம்பொறுத்தென்னிதயத்திலெழுந்திருந்தருளி
விரும்புமெய்ப்பொருளாந்தன்னியலெனக்குவிளங்கிடவிளக்கியுட்கலந்தே
கரும்புமுக்கனிபாலமுதொடுசெழுந்தேனகலந்தெனவினிக்கின்றோய்பொதுவி
லரும்பெருஞ்சோதியப்பனேயுளத்தேயடைத்தருளென்மொழியிதுவே. (ங)

மலத்திலேகிடந்தேன்றனையெடுத்தருளிமன்னியவடிவளித்தறிஞா
குலத்திலேபயிலுந்தரமுமிங்கெனக்குக்கொடுத்துளேவிளங்குசற்குருவே
பலத்திலேசிற்றம்பலத்திலேபொன்னம்பலத்திலேயன்பாதம்மறிவாந்
தலத்திலேயோங்குந்தலைவனேயெனதுதந்தையேகேட்கவெனமொழியே. (ச)

விண்டபோதகருமறிவரும்பொருளேமெய்யனேயையனேயுலகில்
தொண்டனேன்றன்னையடுத்தவாநேயர்சூழ்ந்தவுருறவினர்தாயர்
கொண்டடென்பிறந்தோரயலவொனுமிகுறிப்பினர்முகங்களிலிளைப்பைக்
கண்டபோதெல்லாமயங்கியெனனுளங்கலங்கியகலக்கநீயறிவாய். (ரு)

சீத்தசிற்சபையென்னப்பனேயெனதுதெய்வமேயென்பெருஞ்சிறப்பே
யாத்தவிவ்வுலகிலம்மையர்துணைவரடுத்தவுருறவினாநேயர்
வேர்த்தமற்றயலார்பசியினாற்பிணியால்மெய்யுளம்வெதும்பியவெதுப்பைப்
பார்த்தபோதெல்லாம்பயந்தெனதுள்ளம்பதைத்ததுன்னுளமறியாதோ. (சா)

பணைத்தனிவெளியில்நடம்புரிந்தருளும்பரமனேயரும்பெரும்பொருளே
தணைத்தலத்தியன்றவாழ்க்கையிலவறுமைச்சங்கடப்பாவியால்வருந்தி
நணைத்தவரிளையாமுதலினேரொனையோநண்பனென்றவரவர்குறைக
ளுணைத்தபோதெல்லாநடுங்கியென்னுள்ளமுடைந்ததுனனுளமறியாதோ. (எ)

அன்னையேயப்பாதிருச்சிற்றம்பலத்தென்னையனேயிவ்வுலகத்திலே
பொன்னையேயுடையார்வறியவர்மடவார்புகலுமாடவரிவர்களுக்குள்
தன்னையேயறியாப்பிணியினாலாவிதளர்கின்றாதருணமீதெனவே
சொன்னபோதெல்லாம்பயந்துநானடைந்தசோபத்தைநீயறியாயோ. (அ)

உண்டதோறெலலாமழுதெனவினிககுமொருவனேசிற்சபையுடையாய்
விண்டபேருலகிலம்மவிவ்வீதிமேவுமோரகததிலேயொருவர்
ஒண்டியிரமடிநதாரலறுகினரூறென்றொருவரோடொருவாதாம்பேசிக்
கொண்டபோதெல்லாஙகேட்டெனதுள்ளங்குலைநடுங்கியதறிநதிலையோ. (௯)

காவிநேர்கண்ணுள்பங்கனேதலைமைககடவுளேசிற்சபைதனிலே
மேவியவொளியேயிவ்வுலகதிலூர்வீதியாதிகளிலேமனித
ராவிபோனதுகொண்டுறவினரழுதவழுகுரல்கேட்டபோதெல்லாம்
பாவியேனுள்ளம்பகீரெனநடுங்கிப்பதைத்ததுன்னுளமறியாதோ. (௧0)

நாதனேயென்னைநம்பியமாந்தர்ஞாலத்திற்பிணிபலவடைந்தே
யேதநேர்ந்திடககண்டையகோவடியேனெய்தியசோபமுமிளைப்பு
மோதநேருள்ளநடுககமுந்திகைப்புமுற்றபேரோககமாதிகளுந்
தீதனேனின்றுநினைததிடவுள்ளந்திடுக்கிடனீயறிந்திலையோ. (௧௧)

கற்றவருளத்தேகரும்பினிலினிக்குங்கண்ணுதற்கடவுளேயென்னைப்
பெற்றதாய்நேயருறவினர்துணைவாபெருகியபழககமிகுடையோா
மற்றவரிங்கேதனித்தனிபிரிநதுமறைநதிட்டதோறுமப்பிரிவை
யுற்றுநானினைக்குநதோறுமுண்ணடுஙகியுடைநதனனுடைகின்றேனெந்தாய். (௧௨)

என்றும்நாடுறுவோர்ககின்பமேபுரியுமெந்தையேயென்றனைச்சூழ்ந்தே
நன்றுநாடியநல்லோருயிர்ப்பிரிவைநாயினேனகண்டுகேட்டுற்ற
அனறுநானடைந்தநடுக்கமுந்துயருமளவிலையளவிலையறிவா
யின்றவாபிரிவைநினைததிடுந்தோறுமெய்திடுந்துயருநீயறிவாய். (௧௩)

நிலைபுரிந்தருளுநிததனேயுலகினெறியலாநெறிகளிற்சென்றே
கொலைபுரிநதிட்டகொடியவரிவரொன்றயலவாகுறிததபோதெல்லா
முலைபுரிநதிடுவெந்தீவயிற்றுள்ளேயுற்றெறனநடுநடுகுற்றே
துலைபுரிந்தோடிககண்களைமூடிததுயர்ந்ததும்நீயறிநததுவே. (௧௪)

ஓர்ந்தவுள்ளகத்தேநிறைந்தொளிர்கின்றவொருவனேயுலகியலதிலே
மாந்தாகளிறப்பைகுறித்திடும்பறையினவல்லொலிகேட்டபோதெல்லாம்
காநதியென்னுள்ளங்கலஙகியகலக்கங்கடவுணீயேயறிந்திடுவா
யேந்துமிவ்வுலகிலிறப்பெனிலெந்தாயென்னுளநடுங்குவதியல்பே. (௧௫)

மறைமுடிவயஙகுமொருதனிததலைமைவள்ளலேயுலகரசாள்வோ
ருறைமுடிவாள்கொணடொருவனையொருவருயிரறச்செய்தனரெனவே
தறையுறச்சிறியேன்கேட்டபோதெல்லாந்தளாந்துளநடுங்கிநின்றயர்ந்தே
னிறையுமிவ்வுலகிற்கொலையெனிலெந்தாயென்னுளநடுஙகுவதியல்பே. (௧௬)

தாயமொழிகுறித்தேகணககிலேமற்றோர்தாய்ககுநாலென்பதையிரண்டா
வாய்மொழிவஞ்சம்புகன்றனன்வணைநதேனடுங்கினேனினைத்ததைமனத்தே
தூயமொழிநேயாநமபிஞேரிலலிற்சூழ்ந்தனனினைத்ததுதுயாநதேன்
காய்மொழிபுகனறேனபொயமொழிபுகன்றேன்கலங்கினேனதுநினைத்தெந்தாய்.

எட்டரும்பொருளேதிருச்சிற்றம்பலத்தேயிலங்கியவிறைவனேயுலகிற்
பட்டினியுற்றார்பசித்தனர்களையாற்பரதவிக்கின்றனரென்றே
யொட்டியபிறராற்கேட்டபோதெல்லாமுளம்பகீரெனநடுக்குற்றே
னிட்டவிவ்வுலகிற்பசியெனிலெந்தாயென்னுளநடுங்குவதியல்பே. (௧௮)

பல்லிகள்பலவாயிடத்துமுச்சியினும்பகருநோமுதற்பலவயினும்
சொல்லியதோறும்பிறர்துயர்கேட்கச்சொல்கின்றவோவெனச்சூழ்ந்தே
மெல்லியமனநொந்திளைத்தனனெந்தாய்கூகைவெங்குரல்செயுந்தோறும்
வல்லியகுரல்கேட்டயாபசுப்போலவருந்தினேனெந்தைநீயறிவாய். (௧௯)

காக்கைகள்கூவக்கலங்கினேன்பருந்தின்கடுங்குரல்கேட்டுளங்குலைந்தேன்
தாக்கியவாந்தைக்குரல்செயப்பயந்தேன்சாக்குரற்பறவையாற்றளர்ந்தேன்
வீக்கியவேறுகொடுஞ்சகுனஞ்செயவீக்களால்மயங்கினேன்விடத்தி
னூக்கியபாம்பைக்கண்டபோதுள்ளமொடுங்கினேனடுங்கினேனெந்தாய். (௨௦)

வேறுபல்விடஞ்செயுயிர்களைக்கண்டுவெருவினேன்வெய்யநாய்க்குழுவின்
சீறியகுரலோடழுகுரல்கேட்டுத்தியங்கினேன்மற்றைவெஞ்சகுனக்
கூறதாமவிலங்குபறவையூர்வனவெங்கோள்செறுமாடவாமடவா
ரூறுசெயகொடுஞ்சொல்லிவைக்கெலாமுள்ளமுயங்கினேன்மயங்கினேனெந்தாய்.

நிறமுறுவிழிக்கீழ்ப்புறத்தொடுதோளுநிறையுடம்பிற்சிலவுறுப்பு
முறவுதோற்றுடித்துத்துடித்திடுந்தோறுமுன்னிமற்றவைகளையந்தோ
பிறர்துயர்காட்டத்துடித்தவோவென்றுபேதுற்றுமயங்கிநெஞ்சுடைந்தேன்
நறுவியதுகிலிற்கறையுறக்கண்டேநடுங்கினேனெந்தைநீயறிவாய். (௨௨)

மங்கையரனைத்தாவலிந்துறுந்தோறுமயங்கினாமிவரொடுமுயங்கி
இங்குளங்களித்தாற்களித்தவர்க்குடனேயின்னலுற்றிடுமகின்னல்,
தங்கியபிறர்தந்துயர்தனைக்கண்டலாகுமத்துயருறத்தரியேம்
பங்கமீதெனவேயெண்ணினானுள்ளம்பயந்ததுமெந்தைநீயறிவாய். (௨௩)

வலிந்தெனையழைக்குமடந்தையர்தெருவிலமர்ந்துவந்தடுத்தபின்னினைந்தே
மலிந்திவர்காணிலவிடுவரனறிவரால்மயங்கியுண்மகிழ்ந்தனமெனிலோ
நலிந்திடுபிறர்தந்துயர்தனைக்கண்டேநடுங்குறவருமெனப்பயந்தே
மெலிந்துடனொளித்துவீதிவேறுறன்றின்மேவினேனெந்தைநீயறிவாய். (௨௪)

களிப்புறுசுகமாமுணவினைக்கண்டகாலத்துமுண்டகாலத்தும்
நெளிப்புறுமனத்தோடஞ்சினேனெனைத்தானோந்தபல்சுபங்களில்நேய
ரளிப்புறுவிருந்துண்டமாகவென்றழைக்கவவர்களுக்கன்பினோடாங்கே
யொளிப்புறுவார்த்தையுரைத்தயலொளித்தேபயத்தொடுமுற்றனனெந்தாய். (௨௫)

இன்புறுமுணவுகொண்டபோதெல்லாமிச்சுகத்தாலினியாது
துன்புறுங்கொல்லோவென்றுளநடுங்கிச்சூழ்வெறுவயிற்றொடுமிருந்தே
னன்பிலேயன்பர்கொடுத்தவையெல்லாமையகோதெய்வமேயிவற்றால்
வன்புறச்செய்யேலென்றுளம்பயந்துவாங்கியுண்டிருந்தனனெந்தாய். (௨௬)

உற்றதாரணியிலெனக்குலகுணர்ச்சியுற்றநாண்முதலொருசிலநாள்
பெற்றதாய்வாட்டமபார்ப்பதற்கஞ்சிப்பேருணவுண்டனனசிலநா
ளுற்றவாநேயரன்புளாரவாட்டமுறுவதற்கஞ்சினேனுண்டேன்
மற்றிவையல்லாற்சுகவுணுக்கொள்ளமனநடுங்கியதுநீயறிவாய். (௨௭)

தொழுந்தகையுடையசோதியேயடியேன்சோம்பலால்வருந்திடுந்தோறு
மழுந்தவென்னுள்ளமபயந்ததையெனனுளளவிடற்கெய்துமோபகலில்
விழுந்துறுதூககம்வரவதுதடுத்தும்விட்டிடாவன்மையாற்றூங்கி
யெழுந்தபோதெல்லாமபயததொடுமெழுநதேனென்செயவேனெனசெய்வேனெனறே.

அந்தமோடாதியில்லதோர்பொதுவிலரும்பெருஞ்சோதியேயடியேன்
சொந்தமோவறியேன்பகலிரவெல்லாந்தூக்கமேகண்டனன்றூககம
வந்தபோதெல்லாம்பயத்தொடும்படுத்தேனமற்றுநானெழுநதபோதெல்லாந
தொந்தமாம்பயத்தாற்சிவசிவதூக்கநதொலைவதெக்காலமென்றெழுந்தேன். (௨௯)

உடையவம்பலததிலொருவனேயென்றனுயிர்க்குயிராகியவொளியே
கடையனனவில்நடுங்கியநடுககங்கணககிலேசிறிதுறுங்கனவி
லிடையுறுநடுக்கங்கருதவுஞ்சொலவுமெணணவுமெழுதவுமபடுமோ
நடையுறுசிறியேன்கனவுகண்டுள்ளநடுங்கிடாநாளுமொனறுளதோ. (௩௦)

பகலிரவடியேனபடுத்தபோதெல்லாந்தூககமாம்பாவிவநதிடுமே
யிகலுறுகனவாநகொடியவெம்பாவியெய்துமேயென்செயவோமெனறே
யுகலுறவுள்ளேநடுங்கியநடுககமுன்னுளமறியுமேயெநதாய்
நகலுறச்சிறியேனகனவுகண்டுள்ளநடுங்கிடாநாளுமொனறுளதோ. (௩௧)

தொகுப்புறுசிறுவாபயிலுங்காற்பயிற்றுநதொழிலிலேவநதகோபததிற்
சகிப்பிலாமையினாலடித்தனனடிததருணநான்கலங்கியகலக்கம்
வகுப்புறநினதுதிருவுளமறியுமற்றுஞ்சிலவுயிாகளிற்கோப
மிகப்புகுநதடிததுப்பட்டபாடெல்லாமெய்யநீயறிந்ததேயன்றோ. (௩௨)

ஒடித்தவிவ்வுலகிற்சிறுவர்பாற்சிறியவுயிர்கள்பாற்றீமைகண்டாஙகே
யடிததிடற்கஞ்சியுளைந்தனனென்னாலாற்றிடாககாலததிற்சிறிதே
பொடித்துநானபயநதபயமெலாமுனதுபுநதியிலறிந்ததேயெந்தாய
வெடிததவெஞ்சினமெனனுளமுறககண்டேவெதும்பியநடுக்கநீயறிவாய். (௩௩)

கோபமேவருமோகாமமேவருமோகொடியமோகங்களேவருமோ
சாபமேயனையதடைமதம்வருமோதாமதபபாவிவநதிடுமோ
பாபமேபுரியுமலோபமேவருமோபயனில்மாற்சரியம்வந்திடுமோ
தாபவாஙகாரமேயுறுமோவென்றையநான்றளர்ந்ததுமறிவாய். (௩௪)

காமமாமதமாங்காரமாதிகளென்கருததிலேயுற்றபோதெல்லாம்
நாமமாருளததோடையகோநான்றுணடுங்கியநடுக்கநீயறிவாய்
சேமமாருலகிற்காமமாதிகளைச்செறிநதவாதங்களைக்கண்டே
யாமைபோலொடுங்கியடங்கினேனதுவுமையநின்றிருவுளமறியும். (௩௫)

கருத்துவேறுகிக்கோயிலிற்புகுந்துன்காட்சியைக்கண்டபோதெல்லாம்
வருத்தமேயடைந்தேனபயத்தொடுந்திரும்பிவந்துநொந்திளைத்தனனெந்தாய்
நிருத்தனேநின்னைத்துதித்தபோதெல்லாமநெகிழ்ச்சியில்லாமையாற்நடுங்கிப்
பருத்தவென்னுடம்பைப்பார்த்திடாதஞ்சிப்பதைத்ததுமையநீயறிவாய். (௩௬)

புன்புலாலுடம்பினைச்சுத்தமுமிதனிற்புகுந்துநானிருக்கின்றபுணர்ப்பு
மென்பொலாமணியேயெண்ணிநானெண்ணியேங்கியவேக்கநீயறிவாய்
வன்புலாலுணணுமனிதரைக்கண்டுமயங்கியுண்ணடுங்கியாற்றும
லென்பெலாங்கருகவிளைத்தனனந்தவிளைப்பையுமையநீயறிவாய. (௩௭)

இந்தவிர்சடையெம்மிறைவனேயென்னோடியல்கலைத்தருக்கஞ்செய்திடவே
வந்தவாதம்மைக்கண்டபோதெல்லாமமனமிகநடுங்கினேனறிவாய
சந்தியுற்றொருகாற்படித்தசாத்திரத்தைத்தமியனேன்மீளவுங்கண்டே
நொந்ததுமுலகப்படிப்பிலென்னுள்ளநொந்ததுமையநீயறிவாய். (௩௮)

முனிந்தவெவ்வினையோநின்னருட்செயலோதெரிந்திலேனமோகமேலின்றித்
தனித்தனியொருசாமடந்தையாதமக்குளொருத்தியைக்கைதொடச்சார்ந்தேன
குனித்தமற்றவளைத்தொட்டனனறிக்கலப்பிலேனமறிந்துகுறித்தே
பனித்தனனினைத்தோறுமுளளுடைந்தேன்பகரவதென்னைநீயறிவாய். (௩௯)

பதியனேபொதுவிற்பரமநாடகஞ்செயபண்பனேநண்பனேயுலகி
லொதியனேன்பிறர்பாலுரத்தவார்த்தைகளாலொருசிலவார்த்தகள்புரிந்தே
மதியிலாமையினுலகங்கரித்ததன்பின்வள்ளலுன்னருளினாலறிந்தே
விதியைநாவொறுத்துநடுங்கியதெல்லாமெய்யனேநீயறிந்ததுவே. (௪0)

அருளினையளிக்குமப்பனேயுலகிலனபுளார்வலிந்தெனக்கீந்த
பொருளினைவாங்கிப்போனபோதெல்லாமபுழுங்கியபுழுக்கநீயறிவாய்
மருளுமப்பொருளைச்சாலகத்தெறிந்துமனமிகவிளைத்ததுமபொருளால்
இருளுறுமெனநானுளநடுங்கியதுமெந்தைநின்றிருவுளமறியும். (௪௧)

பொருளிலேயுலகமிருப்பதாதலினால்புரிந்துநாமொருவர்பாற்பலகால
மருவினாற்பொருளினிச்சையாற்பலகால்மருவுகின்றனெனக்கருதி
வெருவுவொனநானஞ்சியெவ்விடத்துமேவிலேனென்னைநீயறிவா
யொருவுமப்பொருளைநினைத்தபோதெல்லாமுவட்டினேனிதுவுநீயறிவாய். (௪௨)

தகைத்தபேருலகிலையனேயடியேன்தடித்தவீள்ளத்தொடுகளித்தே
நகைத்தபோதெல்லாம்நடுங்கினேனிங்கோலவாகனங்களிலேறி
யுகைத்தபோதெல்லாம்நடுங்கினேனவிரைந்தேயோடியபோதெலாம்பயந்தேன்
பகைத்தபோதயலார்பகைகளுக்கஞ்சிப்பதுங்கினேனொதுங்கினேனெந்தாய். (௪௩)

சகப்புறவாழ்வைப்பார்த்திடிற்கேட்கிற்சஞ்சலமுறுமெனப்பயந்தே
நகர்ப்புறத்திருக்குந்தோட்டங்கடோறும்நண்ணியும்பிறவிடத்தலைந்தும்
பகற்பொழுதெல்லாநாடொறுங்கழித்தேன்பகலன்றியிரவுமப்படியே
மிகப்பலவிடத்துந்திரிந்தனனடியேன்விளம்பலென்னீயறிந்ததுவே. (௪௪)

உருவுளமடவார்தங்களைநான்கண்ணுற்றபோதுளநடுக்குற்றே
னொருவுளத்தவரோவலிந்திடவேறுருவளகத்தொளித்தயலிருந்தேன்
கருவுளச்சண்டைக்கூக்குரல்கேட்டகாலத்தினானுற்றகலக்கந்
திருவுளமறியுமுரத்தசொல்லெனதுசெவிபுகிற்கனல்புகுவதுவே. (௬௫)

பண்ணிகாரங்கள்பொசித்தவப்போதும்பராக்கிலேசெலுத்தியபோது
மெண்ணியமடவார்தங்களைவிழைந்தேயிசைந்தனுபவித்தவப்போதும்
நண்ணியதயிலமுழுக்குற்றபோதுநவின்றசங்கீதமுநடமுங்
கண்ணுறக்கண்டுகேட்டவப்போதுங்கலங்கியகலக்கநீயறிவாய். (௬௬)

நயந்தபொற்சரிகைத்துகிலெனக்கெனதுநண்பினருடுத்தியபோது
பயந்தவப்பயத்தையறிந்தவரெல்லாம்பயந்தனர்வெய்யிலிற்கவிகை
வியந்துமேற்பிடித்தபோதெலாமுள்ளம்வெருவினேனரைத்துகில்வீசி
யயந்தருதெருவில்நடப்பதற்கஞ்சியரைக்குமேல்வீக்கினனெந்தாய். (௬௭)

கையுறவீசிநடப்பதைநாணிக்கைகளைக்கட்டியேநடந்தேன
மெய்யுறக்காட்டவெருவிவெண்டுகிலால்மெய்யெலாமையகோமறைத்தேன்
வையமேற்பிறர்தங்கோலமுநடையும்வண்ணமுமண்ணலேசிறிதும்
பையநானூன்றிப்பார்த்ததேயில்லைபார்ப்பனேலபயமிகப்படைப்பேன். (௬௮)

வைகியநகரிலெழிலுடைமடவார்வலிந்தெனைக்கைபிடித்திழுத்தும்
சைகைவேறுரைத்துஞ்சரசவார்த்தைகளாற்றனித்தெனைப்பலவிசையறிந்தும்
பொய்கரைந்தாணைபுகன்றுமேல்விழுந்தும்பொருண்முதலியகொடுத்திசைத்துங்
கைகலப்பறியேனடுங்கினேனவரைக்கடிந்துமில்லைநீயறிவாய். (௬௯)

எளியரைவலியாரடித்தபோதையோவென்மனங்கலங்கியகலக்கம்
தெளியநானுரைக்கவல்லவனல்லேன்றிருவுளமறியுமெந்தாயே
களியரைக்கண்டுபயந்தவெம்பயந்தான்கடலினும்பெரியதுகண்டா
யளியர்பாற்கொடியர்செய்தவெங்கொடுமையறிந்தவென்னடுக்கமாரறிவார். (௭௦)

இரவிலேபிறர்தம்மிடத்திலேயிருந்தவிருப்பெலாங்கள்ளர்கள்கூடிக்
கரவிலேகவர்ந்தார்கொள்ளையென்றெனதுகாதிலேவிழுந்தபோதெல்லாம்
விரைவிலேநெருப்பைமெய்யிலேமூட்டிவெதுப்பல்போல்வெதும்பினேனெந்தா
யுரவிலேயொருவர்திடுக்கெனவரக்கண்டுளநடுக்குற்றனன்பலகால். (௭௧)

உரத்தொருவருக்கங்கொருவர்பேசியபோதுள்ளநடுங்கினேன்பலகால்
கரத்தினாலுரத்துக்கதவுதட்டியபோதையவோகலங்கினேன்கருத்தில்
புரத்திலேயம்மாவப்பனேயையோவெனப்பிறர்புகன்றசொல்புகுந்தே
தரத்திலென்னுளத்தைக்கலக்கியகலக்கந்தந்தைநீயறிந்ததுதானே. (௭௨)

மண்ணினீணடையில்வந்தவெந்துயரைமதித்துளம்வருந்தியபிறர்தங்
கண்ணினீர்விடக்கண்டையவோநானுங்கண்ணினீர்விட்டுளங்கவன்றே
னண்ணிநின்றொருவரசப்பிலேயென்னையழைத்தபோதடியனேனெஞ்ச
தெண்ணியாதுற்றதோவெனக்கலங்கியேனெனல்மறந்தனனெந்தாய. (௭௩)

தேட்டிலேமிகுந்தசென்னையிலிருந்தாற்சிலுகுறுமென்றுளம்பயந்தே
நாட்டிலேசிறியவூர்ப்புறங்களிலேநண்ணினேனூர்ப்புறமடுத்த
காட்டிலேபருக்கைக்கல்லிலேபுஞ்சைக்களத்திலேதிரிந்துற்றவிளைப்பை
யேட்டிலேயெழுதமுடியுமோவிவைகளெந்தைநீயறிந்ததுதானே. (௫௪)

என்புடைவந்தார்தம்முகநோக்கியென்கொலோவென்கொலோவிவர்தாந்
துன்புடையவரோவின்புடையவரோசொல்லுவதென்னையோவென்றே
வன்புடைமனந்துகலங்கியங்கவரவாவெனல்மறந்தனனெந்தா
யன்புடையவரைக்கண்டபோதெல்லாமென்கொலோவென்றயர்ந்தேனே. (௫௫)

காணுறுபசுக்கள்கன்றுகளாதிகதறியபோதெலாம்பயந்தே
னேணுறுமாடுமுதல்பலமிருகமிளைத்தவைக்கண்டுளமிளைத்தேன்
கோணுறுகோழிமுதல்பலபறவைகூவுதல்கேட்டுளங்குலைந்தேன்
வீணுறுகொடியார்கையிலேவாளைவிதிர்த்தல்கண்டென்னெனவெருண்டேன். (௫௬)

பிதிர்ந்தமண்ணுடம்பைமறைத்திடவிபார்பின்முன்னோக்காதுமேல்நோக்கி
யதிர்ந்திடநடந்தபோதெலாம்பயந்தேனவர்புகன்றிட்டதீமொழிகள்
பொதிந்திருசெவியிற்புகுந்தொறும்பயந்தேன்புண்ணியாநின்றுதியெனுமோர்
முதிர்ந்ததீங்கனியைக்கண்டிலேனவோத்துமுறிந்தகாய்கண்டுளந்தளர்ந்தேன். (௫௭)

வாடியபயிரைக்கண்டபோதெல்லாம்வாடினேன்பசியினாலிளைத்தே
வீடுதோறிரந்தும்பசியறாதயர்ந்தவெற்றரைக்கண்டுளம்பதைத்தேன்
நீடியபிணியால்வருந்துகின்றோரென்னேருறக்கண்டுளந்துடித்தேன்
* ஈடினமானிகளாயேழைகளாயநெஞ்சிளைத்தவர்தமைக்கண்டேயிளைத்தேன். (௫௮)

நலிதருசிறியதெய்வமென்றையோநாட்டிலேபலபெயர்நாட்டிப்
பலிதரவாடுபன்றிக்குக்கிடங்கள்பலிக்கடாமுதலியவுயிரைப்
பொலிவுறக்கொண்டேபோகவுங்கண்டேபுந்திநொந்துளநடுக்குற்றேன்
கலியுறுசிறியதெய்வவெங்கோயில்கண்டகாலத்திலும்பயந்தேன். (௫௯)

துண்ணெனக்கொடியோர்பிறவுயிர்கொல்லத்தொடங்கியபோதெலாம்பயந்தேன்
கண்ணினாலையோபிறவுயிர்பதைக்கக்கண்டகாலத்திலும்பதைத்தேன்
மண்ணினில்வலையுந்தூண்டிலுங்கண்ணிவகைகளுங்கண்டபோதெல்லா
மெண்ணியென்னுள்ளநடுங்கியநடுக்கமெந்தைநின்றிருவுளமறியும். (௬௦)

நடுநிலையில்லாக்கூட்டத்தைக்கருணைநண்ணிடாவரையரைநாளுங்
கெடுநிலைநினைக்குஞ்சிற்றதிகாரக்கேட்டரைப்பொய்யலாற்கிளத்தாப்
படுநிலையவரைப்பார்த்தபோதெல்லாம்பயந்தனன்சுத்தசன்மார்க்க
விடுநிலையுலகநடையெலாங்கண்டேவெருவினேன்வெருவினேனெந்தாய். (௬௧)

ஓங்கியதிருச்சிற்றம்பலமுடையவொருதனித்தலைவனேயென்னைத்
தாங்கியதாயேதந்தையேகுருவேதயாநிதிக்கடவுளேநின்பால்
நீங்கியமனத்தார்யாவரேயெனினுமவர்தமைநினைத்தபோதெல்லாந்
தேங்கியவுள்ளம்பயந்தனனதுநின்றிருவுளமறியுமேயெந்தாய். (௬௨)

* ஈடு - ஒப்பு.

காட்டியரணைமேலிருக்கவும்பயந்தேன்காலின்மேற்காலவைக்கப்பயந்தேன்
பாட்டயல்கேட்கப்பாடவும்பயந்தேன்பஞ்சணைபடுக்கவும்பயந்தேன்
நாட்டியவுயர்ந்ததிண்ணைமேலிருந்துநன்குறக்களித்துக்கால்கீழே
நீட்டவும்பயந்தேனீட்டிப்பேசுதலைநினைக்கவும்பயந்தனனெந்தாய். (௬௩)

தலைநெறிஞானசுத்தசன்மார்க்கஞ்சார்ந்திடமுயலுறுதந்தோ
கலைநெறியுலகக்கதியிலேகருத்தைக்கனிவுறவைத்தனராகிப்
புலைநெறிவிரும்பினருலகுயிர்கள்பொதுவெனக்கண்டிரங்காது
கொலைநெறிநின்றார்தமக்குளம்பயந்தேனெந்தைநான்கூறுவதென்னே. (௬௪)

இவ்வணஞ்சிறியேற்குலகியலறிவிங்கெய்தியநாளதுதொடங்கி
நைவணமிறைப்பகலவரையடைந்தடுக்கமுந்துன்பமுமுனாக்க
எவ்வணத்தவாகும் † அல்குறுதெனில்யானிசைப்பதென்னிசைத்தேயமையும்
செவ்வணத்தருணமிதுதலைவாநின்றிருவுளமறிந்ததேயெல்லாம். (௬௫)

தரைத்தலத்தெனைநீயெழுமையும்பிரியாத்தம்பிரானல்லையோமனத்தைக்
கரைத்துளேபுகுந்தென்னுயிரினுட்கலந்தகடவுள்நீயல்லையோவெனைத்தா
னிரைத்திவணளித்தோர்சிற்சபைவிளங்குமெந்தைநீயல்லையோநின்பா
லுரைத்ததலென்னொழுக்கமாதலாலுரைத்தேனீயறியாததொன்றுண்டோ. (௬௬)

கைத்தலத்தோங்குங்கனியிலென்னுள்ளேகனிந்தவென்களைகணீயல்லையோ
மெய்த்தலத்தகத்துமபுறத்தும்விட்டகலாமெய்யநீயல்லையோவெனது
பைத்தறீர்த்தருளுந்தந்தைநீயல்லையோபரிந்துநின்றிருமுனவிண்ணப்பஞ்
செய்ததென்னொழுக்கமாதலாற்செய்தேன்றிருவுளந்தெரிந்ததேயெல்லாம். (௬௭)

இன்னவாறடியேனச்சமுந்துயருமெய்திநின்றிளைத்தனனந்தோ
துன்னவாணவமுமாயையும்வினையுஞ்சூழ்ந்திடுமறைப்புமிங்குனைத்தா
னுன்னவாசறவேயுறக்கவொட்டேமென்பவாலென்செய்வேனெனது
மன்னவாஞானமன்றவாவெல்லாம்வல்லவாவிதுதகுமேயோ. (௬௮)

எள்ளலாம்பயத்தாற்றுயரினுலைந்தவிளைப்பெலாமிங்குநானாற்றிக்
கொள்ளவேயடுத்தேன்மாயையாதிகளென்கூடவேயடுத்தனனந்தோ
வள்ளலேயெனதுவாழ்முதற்பொருளேமன்னவாநின்னலாலறியே
னுள்ளலேவறிலையென்னுடல்பொருளாவியுன்னதேயென்னதன்றெந்தாய். (௬௯)

என்சுதந்தரமோரெட்டுணையேனுமில்லையேயெந்தையெல்லாமுன்
றன்சுதந்தரமேயடுத்தவித்தருணந்தமியனேனறைபலதுயரும்
வன்சுவைமயக்குமச்சமுமறைப்புமாயையும்வினையுமாணவமு
மின்சுவைக்கனிபோலுண்கின்றதழகோவிவைக்கெலாநானிலக்கலவே. (௭௦)

அறிவொருசிறிதிங்கறிந்தநாண்முதலென்னப்பனேநினைமறந்தறியேன்
செறிவிலாச்சிறியபருவத்தும்வேறுசிந்தைசெய்தறிந்திலேனுலகிற்
பிறிதொருபிழையுஞ்செய்திலேனந்தோபிழைத்தனனாயினுமென்னைக்
குறியுறக்கொண்டேகுலங்குறிப்பதுநின்குணப்பெருங்குன்றினுக்கழகோ. (௭௧)

---

† அல்குறுது - குறைவுபடாது.

ஐயநானும்பருவத்திற்றனையடுத்தனனேயனேடப்பா
பொய்யுலகாசையெனக்கிலையுனக்கென்புகலெனவனுமங்கிசைந்தே
மெய்யுறத்துறப்பபோமென்றுபோயதினதுமெய்யருள்மீட்டிடமீண்டேம்
துய்யநின்னுள்ளமறிந்ததேயெந்தாயின்றுநான்சொலலுவதென்னே. (௭௨)

தோவிலாசசிறியபருவத்திற்றனேதெய்வமேதெய்வமேயெனநின்
சாரவுகொண்டெல்லாச்சாரவையுமவிடுத்தேன்றந்தையுங்குருவுநீயெனறேன்
போவிலாதுளத்தேவந்தவாபாடிப்பித்தறிந்தேனபிறாமதிப்பறியே
னோவிலாப்பிழைகளொன்றையுமறியேனின்றுநானுரைப்பதியென்னே. (௭௩)

பொறித்துனைப்பதியாப்பெற்றநாளடிமைபுரிந்ததுபோலவேயின்னுஞ்
செறித்துநிற்கின்றேனன்றியென்னுரிமைத்தெய்வமுங்குருவுமெய்ப்பொருளும
நெறித்தநற்றாயுந்தந்தையுமின்புநேயமுநீயெனப்பெற்றே
குறித்தறிந்தனபின்னந்தைநானேறிக்குதித்ததென்கூறுகநீயே. (௭௪)

பரிந்துனைப்பதியாப்பெற்றநாளடிமைபணிபுரிந்தாங்கிதுவரையில்
புரிந்துறுகின்றேனன்றியென்னுயிரும்பொருளுமென்புணர்ப்புமென்னறிவும்
விரிந்தவென்சுகமுந்தந்தையுங்குருவுமெய்ம்மையுமயாவுநீயென்றே
தெரிந்தபின்னந்தோவேறுநானசெய்தசெய்கையென்செப்புகநீயே. (௭௫)

மைதவழ்விழிபெண்ணம்மையோர்புடைகொள்வள்ளலேநின்னையன்பாலும
வைதவாதமைநானமதித்திலேனப்பால்வாழ்த்துகின்றோர்தமைவாழ்த்தி
யுய்தவரிவரென்றுறுகின்றேனல்லாலுன்னருளறியநான்வேறு
செய்ததொன்றிலையேசெய்தனனெனினுந்திருவுளத்தடைத்திடலழகோ. (௭௬)

ஆரணமுணாத்தவொணாப்பெலாம்பலவாமாகமமுணாவொணாப்பெல்லாங்
காரணநின்றுதிருவருட்செங்கோலகணிப்பருங்களிப்பிலேயோங்கி
நாரணாமுதலோர்போற்றிடவிளங்கிநடக்கின்றபெருமைநானறிந்துந்
தாரணியிடையித்துன்பமாதிகளாற்றனையனேனிளருதலழகோ. (௭௭)

பாரமுதல்நாதப்பதியெலாங்கடந்தப்பாலுமப்பாலுமப்பாலு
மோராமுதலாகித்திருவருட்செங்கோலுணாப்பருமபெருமையினோங்கிச
சீர்பெறவிளங்கநடத்திமெய்ப்பொதுவிற்சிறந்தமெய்த்தந்தைநீயிருக்க
வாரகடலுலகிலசசமாதிகளானமகன்மனம்வருந்துதலழகோ (௭௮)

ஆந்தவேதாந்தப்பதிமுதல்யோகாந்தப்பதிவரையுமப்பாலுந
தோந்தருளாணைத்திருநெறிச்செங்கோலசெல்லவோர்சிறசபையிடத்தே
சாந்தபேரின்பத்தனியரசியற்றுந்தந்தையேதனிப்பெருந்தலைவா
போந்திடேனந்தவித்தத்தினுநினக்கேபிள்ளைநானவருந்துதலழகோ. (௭௯)

சித்திகளெல்லாம்வல்லசோஞானத்திருச்சபைதன்னிலேதிகழுஞ்
சத்திகளெல்லாஞ்சத்தாகளெல்லாந்தழைத்திடத்தனியருட்செங்கோல்
சத்தியஞானம்விளக்கியேநடத்துந்தனிமுதற்றந்தையேதலைவா
பித்தியலுடையேனெனினுநின்றனக்கேபிள்ளைநான்வாடுதலழகோ. (௮0)

சாற்றுபேரண்டப்பகுதிகளனைத்துந்தனித்தனியவற்றுளேநிரம்பித்
தோற்றுமாபிண்டப்பகுதிகளனைத்துஞ்சோதியால்விளக்கியானந்த
வாற்றிலேநனைத்துவளர்த்திடும்பொதுவிலரும்பெருந்தந்தையேயினைப்
பேற்றிலேவிழைந்தேன்றலைவநின்றனக்கேபிள்ளைநான்பேதுறலழகோ. (௮௧)

சிறந்ததத்துவங்களனைத்துமாயலவாய்த்திகழொளியாயொளியெல்லாம்
பிறங்கியவெளியாய்வெளியெலாம்விளங்கும்பெருவெளியாயதற்கப்பால்
நிறைந்தசிற்சபையிலருளரசியற்றுநீதிநற்றந்தையேயினிமேற்
பிறந்திடேனிறவேனின்னைவிட்டகலேன்பிள்ளைநான்வாடுதலழகோ. (௮௨)

எண்ணியவெல்லாம்வல்லபேரருளாமிணையிலாத்தனிநெடுஞ்செங்கோல்
நண்ணியதிருச்சிற்றம்பலத்தமர்ந்தேநடத்துமோர்ஞானநாயகனே
தண்ணருளளிக்குந்தந்தையேயுலகிற்றனையனான்பயத்தினாற்றுயரா
லண்ணியமலங்களைந்தினாலின்னுமையகோவாடுதலழகோ. (௮௩)

கலையெலாம்புகலுங்கதியெலாங்கதியிற்காண்கின்றகாட்சிகளெல்லாம்
நிலையெலாநிலையினோர்ந்தனுபவஞ்செய்நிறைவெலாம்விளங்கிடப்பொதுவின்
மலைவிலாச்சோதியருட்பெருஞ்செங்கோல்வாய்மையானடத்துமோர்தனிமைத்
தலைவனேயெனதுதந்தையேநினதுதனையனான்றளருதலழகோ. (௮௪)

ஆதியேநடுவேயந்தமேயெனுமிவ்வடைவெலாமின்றியொன்றான
சோதியேவடிவாய்த்திருச்சிற்றம்பலத்தேதூயபேரருட்டனிச்செங்கோல்
நீதியோநடத்துந்தனிப்பெருந்தலைமைநிருத்தனேயொருத்தனேநினை
யோதியேவழுத்துந்தனையனானிங்கேயுறுகணுற்றளருதலழகோ. (௮௫)

அத்தனேதிருச்சிற்றம்பலத்தரசேயரும்பெருஞ்சோதியேயடியார்
பித்தனேயெனினும்பேயனேயெனினும்பெரிதருள்புரிதனித்தலைமைச்
சித்தனேயெல்லாஞ்செய்திடவல்லசெல்வனேசிறப்பனேசிவனே
சுத்தனேநினதுதனையனான்மயங்கித்துயர்ந்துளம்வாடுதலழகோ. (௮௬)

உற்றதோர்திருச்சிற்றம்பலத்தோங்குமொருதனித்தந்தையேநின்பாற்
குற்றநான்புரிந்திங்கறிந்திலேன்குற்றங்குயிற்றினேனென்னினிலக்குற்ற
மிற்றெனவறிவித்தறிவுதந்தென்னையின்புறப்பயிற்றுதல்வேண்டும்
மற்றயலார்போன்றிருத்தலோதந்தைவழக்கிதுநீயறியாயோ. (௮௭)

குற்றமோகுணமோநானறியேனென்குறிப்பெலாந்திருச்சிற்றம்பலத்தே
உற்றதாதலினாலுலகியல்வழக்கிலுற்றனமற்றெனதலைவே
* தெற்றெனவருட்கேகுற்றமென்பதுநான்செய்திடிற்றிருத்தலேயன்றி
மற்றயலார்போன்றிருப்பதோதந்தைமரபிதுநீயறியாயோ. (௮௮)

மாயையால்வினையாலரிபிரமாதிவானவர்மனமதிமயங்கித்
தீயகாரியங்கள்செய்திடிலந்தோசிறியனேன்செய்வதுபுதிதோ
வாயினுந்தீயவிவையெனவறியேனறிவித்துத்திருத்துதலன்றி
நீயிவண்பிறர்போன்றிருப்பதுதந்தைநெறிக்கழகல்லவேயெந்தாய். (௮௯)

* தெற்றென - விரைந்து.

கருணையுஞ்சிவமேபொருளெனக்காணுங்காட்சியுமபெறுகமற்றெலலா
மருணெறியெனநீயெனக்கறிவித்தவண்ணமேபெற்றிருக்கின்றே
னிருணெறிமாயைவினைகளாற்கலக்கமெயதியதெனசெயவேனெந்தாய்
தெருணிலையின்றிக்கலங்கினேனெனினுஞ்சிறுநெறிபிடித்ததொன்றிலையே. (௯௰)

கலங்கியபோதுந்திருச்சிற்றம்பலத்திற்கருணையங்கடவுளேநினபா
விலங்கியநேயம்விலங்கியதிலையேயெந்தைநினனுளமறியாதோ
மலங்கியமனத்தேன்புகல்வதென்வினையால்மாயையால்வருமபிழையெலலா
மலங்குமென்பிழைகளல்லவென்றன்னோடடிக்கடியறைந்தனனணடே. (௯௧)

இரும்பினுங்கொடியமனஞ்செயும்பிழையுமெனபிழையன்றெனபபலகால்
விரும்பிநின்னடிக்கேவிண்ணபபித்திருந்தேன்வேறுநானசெயததிங்கென்னே
யருமபொனேதிருசசிற்றம்பலததமுதேயப்பனேயென்றிருக்கின்றேன
றருமபினுஞ்சிறியேன்புகல்வதெனனினதுதூயதாந்திருவுளமறியும். (௯௨)

வருமுயிரிரக்கம்பற்றியேயுலகவழக்கிலென்மனஞ்சென்றதோறும
வெருவிநினனடிக்கேவிண்ணபபித்திருந்தேன்விண்ணப்பஞ்செய்கினறேனின்று
முருவவெனனுயிராதானுயிரிரக்கந்தானொன்றதேயிரணடிலையிரக்க
மொருவிலெனனுயிருமொருவுமென்னுளளததொருவனேநினபததாணை. (௯௩)

தலைவாகவெல்லாந்தனிததனிவணங்குந்தலைவனேயின்றுமென்னுளமும்
மலைவிலெனனறிவுநானுமிவ்வுலகவழக்கிலேயுயிரிரக்கததா
லிலகுகினறனமநானென்செய்வேனிரக்கமென்னுயிரொன்னவேறிலையே
நிலைபெறுமிரக்கம்நீங்கிலென்னுயிருமநீங்குநின்றிருவுளமறியும். (௯௪)

ஆதலாலிரக்கம்பற்றிநானுலகிலாடலேயன்றியோர்விடயக்
காதலாலாடல்கருதிலேனவிடயககருத்தெனக்கில்லையெனறிடலிப்
போதலாற்சிறியபோதுமுணடதுநினபுநதியிலறிநததுதானே
யீதலாலவேறோதிதெனதிடததேயில்லைநானிசைபபதெனனெந்தாய். (௯௫)

என்னையுமிரக்கந்தனனையுமொன்றாயிருக்கவேயிசைவிததிவ்வுலகில
மனனிவாழ்வுறவேவருவிததகருணைவளளல்நீநினைககிதுவிடயம
பன்னலென்னடியேனுயினுமபிள்ளைபபாங்கினுலுகைகினறேனெந்தா
யின்னவாறெனநீசொனனவாறியற்றுதிருந்ததோரிணையுமிங்கிலையே. (௯௬)

உறுவினைதவிர்க்குமொருவனேயுலகிலோடியுமாடியுமுழன்றும்
சிறுவர்தாந்தநதைவெறுப்பவார்க்கினறாசிறியனேனொருதினமேனும்
மறுகிநின்றுடியாரததிங்குணடோநின்பணிமதிப்பலாலெனக்குச
சிறுவிளையாட்டிற்சிந்தையேயிலைநின்றிருவுளமறியுமேயெந்தாய. (௯௭)

தந்தையாவெறுப்பமக்கடாமபயனில்சழக்குளாயாடிவெங்காமச்
சிந்தையராகித்திரிகின்றாரந்தோசிறியனேனொருதினமேனு
மெந்தைநின்னுள்ளம்வெறுப்பநின்பணிவிட்டிவ்வுலகியலிலவ்வாறு
தெந்தனவெனறேதிரிந்ததுண்டேயோதிருவுளமறியநானறியேன். (௯௮)

அம்புவிதனிலேதந்தையாவெறுப்பவடிக்கடியயலவருடனே
வம்புறுசண்டைவிளைக்கின்றாசிறுவாவள்ளலேநின்பணிவிடுத்தே
இம்பரிவ்வுலகிலொருதினமேனுமேழையேன்பிறரொடுவெகுண்டே
வெம்புறுசண்டைவிளைத்ததுண்டேயோமெய்யநின்றுணைநானறியேன். (௯௯)

வள்ளலிவ்வுலகிற்றந்தையாவெறுப்பமக்கடாமொழுக்கத்தைமறந்தே
கள்ளருந்துதல்சூதாடுதல்காமக்கடைதொறுமயங்குதல்பொய்யே
விள்ளுதல்புரிவாரையகோவடியேன்மெய்யநின்றிருப்பணிவிடுத்தே
யெள்ளியவ்வாறுபுரிந்ததொன்றுண்டோவெந்தைநின்றுணைநானறியேன். (௧௦௦)

மலைவிலாத்திருச்சிற்றம்பலத்தையாநந்தவள்ளலேயுலகினிற்பெற்றோர்
குலைநடுக்குறவேகடுகடுத்தோடிக்கொடியதீநெறியிலேமக்கள்
புலைகொலைகளவேபுரிகின்றாரடியேன்புண்ணியநின்பணிவிடுத்தே
யுலையவவ்வாறுபுரிந்ததொன்றுண்டோவுன்பதத்தாணைநானறியேன். (௧௦௧)

தனிப்பெருஞ்சோதித்தந்தையேயுலகிற்றந்தையாப்பலகா
மினிப்புறுமொழியாலறிவுறமக்கட்கேற்கவேபயிற்றிடுந்தோறும்
பணிப்புறவோடிப்பதுங்கிடுகின்றார்பண்பனேயென்னைநீபயிற்றத்
தினைத்தனையேனும்பதுங்கியதுண்டோதிருவுளமறியநானறியேன். (௧௦௨)

தன்னைநேரில்லாத்தந்தையேயுலகிற்றந்தையாதங்களையழைத்தே
சொன்னசொன்மறந்தேமக்கடம்மனம்போனசூழலேபோகின்றாரடியே
னென்னைநீயுணர்த்தல்யாதுமலையினிலக்கெனக்கொள்கின்றேனல்லாற
பின்னையோரிறையுமறந்ததொன்றுண்டோவெரியுநின்றுணைநானறியேன். (௧௦௩)

போற்றுவார்போற்றும்புனிதனேமக்கள்பொருந்துதந்தையர்தமையே
வேற்றுவாழ்வுடையவீடுதாபணந்தாமெல்லியசரிகைவத்திரந்தா
வேற்றவாபரணந்தாவெனக்கேட்டேயிரங்குவாரிவைகுறித்தடியேன்
தேற்றுவாயநின்னைக்கேட்டதொன்றுண்டோதிருவுளமறியநானறியேன். (௧௦௪)

குணம்புரியெனதுதந்தையேயுலகிற்கூடியமக்கள்தந்தையரைப்
பணம்புரிகாணிபூமிகள்புரிநற்பதிபுரியேற்றபெண்பாரத்தே
மணம்புரியெனவேவருத்துகின்றொன்மனத்திலேயொருசிறிதெனினு
மெணம்புரிந்துனைநானவருத்தியதுண்டோவெந்தைநின்றுணைநானறியேன். (௧௦௫)

இகத்திலேயெனைவந்தாண்டமெய்ப்பொருளேயென்னுயிர்த்தந்தையேயிந்தச்
சகத்திலேமக்கள்தந்தையரிடத்தேதாழ்ந்தவராயப்புறங்காட்டி
யகத்திலேவஞ்சம்வைத்திருக்கின்றாரையகோவஞ்சம்நின்னளவில்
முகத்திலேயெனதகத்திலேயுண்டோமுதல்வநின்றுணைநானறியேன். (௧௦௬)

தன்மைகாண்பரியதலைவனேயெனதுதந்தையேசகத்திலேமக்கள்
வன்மைவார்த்தைகளாற்றந்தையாதம்மைவைகின்றாவள்ளலேமருந்தே
யென்மனக்கனியேயென்னிருகண்ணேயென்னுயிர்க்கிசைந்தமெய்த்துணையே
நின்மனம்வெறுப்பப்பேசியதுண்டோநின்பதத்தாணைநானறியேன். (௧௦௭)

ஒப்பிலாமணியென் னப்பனேயுலகிலுற்றிடுமக்கள் தந்தையரை
வைப்பிலவேறொருவர்வைதிடக்கேட்டுமனம்பொறாதிருக்கின்றாரடியேன்
தப்பிலாயநினைவேறுரைத்திடக்கேட்டாற்றரிப்பனோதரித்திடேனன்றி
வெப்பிலென்னுயிர்தான்றரிக்குமோயாதாய்விளையுமோவறிந்திலேனெந்தாய். (௧௦௮)

இத்தகையுலகிலிங்ஙனஞ்சிறியேனெந்தைநின்றிருப்பணிவிடுத்தே
சித்தம்வேறாகித்திரிந்ததேயிலைநான்றெரிந்தநாண்முதலிதுவரையு
மத்தனேயரசேயையனேயமுதேயப்பனேயம்பலத்தாடுஞ்
சித்தனேசிவனேயென்றெனதுளத்தேசிந்தித்தேயிருக்கின்றேனின்றும் (௧௦௯)

பொய்வகைமனத்தேனென்னினுமெந்தாய்பொய்யுலகாசைசற்றறியேன்
நைவகைதவிர்த்திருச்சிற்றம்பலத்தேநண்ணியமெய்ப்பொருண்மது
கைவகைப்படலெக்கணத்திலோவெனநானகருதினேன்கருத்தினைமுடிக்கச்
செய்வகையறியேனென்னசெய்வேனோதெய்வமேயென்றிருக்கின்றேன். (௧௧௦)

அன்னையேயென்றனப்பனேதிருச்சிற்றம்பலத்தமுதனேயெனநான
உன்னையேகருதியுன்பணிபுரிந்திங்குலகிலேகருணையெனபதுதா
னென்னையேநிலையாயிருத்தவுள்வருந்தியிருக்கின்றேனென்னுளமெலிவும்
மன்னுமென்னுடம்பினமெலிவுநானிருக்கும்வண்ணமுந்திருவுளமறியும். (௧௧௧)

பொய்படாப்பயனேபொற்சபைநடஞ்செய்புண்ணியாகண்ணினுண்மணியே
கைபடாக்கனலேகறைபடாமதியேகணிப்பருங்கருணையங்கடலே
தெய்வமேயெனநானின்னையேகருதித்திருப்பணிபுரிந்திருக்கின்றேன்
மைபடாவுள்ளமெலிவும்நானிருக்குமவண்ணமுந்திருவுளமறியும. (௧௧௨)

தன்னிகரறியாத்தலைவனேதாயேதந்தையேதாங்குநற்றுணையே
யென்னிருகண்ணேயென்னுயிர்க்குயிரேயென்னுடையயப்பினில்வைப்பே
யுன்னுதற்கினியவொருவனேயெனநானுன்னையேநினைத்திருக்கின்றேன
மன்னுமென்னுள்ளமெலிவுநானிருக்கும்வண்ணமுந்திருவுளமறியும். (௧௧௩)

திருவளர்திருவம்பலத்திலேயந்நாள்செப்பியமெய்ம்மொழிப்பொருளு
முருவளர்திருமந்திரத்திருமுறையாலுணர்த்தியமெய்ம்மொழிப்பொருளுங
கருவளரடியேனுளத்திலேநின்றுகாட்டியமெய்ம்மொழிப்பொருளும்
மருவியென்னுளத்தேநம்பிநானிருக்கும்வண்ணமுந்திருவுளமறியும. (௧௧௪)

உவந்தெனதுளத்தேயுணர்த்தியவெல்லாமுறுமலையிலக்கெனநம்பி
நிவந்ததோள்பணைப்பமிகவுளங்களிப்பநின்றதுமநிலைத்தமெய்ப்பொருளிப்
பவந்தனிறபெறுதல்சத்தியமெனவேபறபலகுறிகளாலறிந்தே
சிவந்தபொனமலைபோலிருந்ததுமிந்நாளிளைப்பதுந்திருவுளமறியும. (௧௧௫)

ஏய்ந்தபொன்மலைமேற்றம்பத்திலேறியேகவுமேகவுநணுகித்
தேய்ந்தபோதடியேனபயந்தவெம்பயத்தைத்தீர்த்துமேலேற்றியதிறத்தை
வாய்ந்துளேகருதிமலையெனப்பணைத்தேமனங்களிப்புற்றுமெய்யின்பந்
தோய்ந்துநின்றுடிச்சுழன்றதுமிந்நாள்சுழல்வதுந்திருவுளமறியும். (௧௧௬)

வாட்டமோடிருந்தசிறியனேன்றனதுவாட்டமுமாயையாதிகளி
னீட்டமுந்தவிர்க்கத்திருவுளத்திரங்கியெனையோர்பொருளெனமதித்தே
தீட்டரும்புகழ்சேர்திருவடித்துணைகள்செலுத்தியதிருச்சிலம்பொலிநான்
கேட்டபோதிருந்தகிளர்ச்சியுமிந்நாள்கிலேசமுந்திருவுளமறியும். (௧௧௭)

கற்றவர்கல்லார்பிறர்பிறர்குரலென்காதிலேகிடைத்தபோதெல்லாம்
மற்றவர்தமக்கெனனுற்றதோவவர்தம்மரபினருறவினர்தமக்கு
ஞற்றதிங்கெதுவோவென்றுளநடுங்கியோடிப்பார்த்ததோடிப்பார்த்திரவு
மெற்றருபகலுமேங்கினனடைந்தவேக்கமுந்திருவுளமறியும். (௧௧௮)

கருணையம்பதிநங்கண்ணுண்மாமணிநங்கருத்திலேகலந்ததெள்ளமுதம்
மருணெறிதவிர்க்குமருந்தெலாம்வல்லவள்ளல்சிற்றம்பலமன்னும்
பொருணிறையின்பம்நம்மையாண்டளித்தபுண்ணியம்வருகின்றதருணந்
தருணமிப்போதென்றெண்ணினானிருக்குந்தன்மையுந்திருவுளமறியும். (௧௧௯)

இமையவர்பிரமநாரணர்முதலோரெய்துதற்கரியபேரின்பந்
தமையறிந்தருட்சார்ந்தபேரொளிநந்தயாநிதிதனிப்பெருந்தந்தை
யமையுநம்முயிர்க்குத்துணைதிருப்பொதுவிலையர்தாம்வருகின்றசமயம்
சமயமிப்போதென்றெண்ணினானிருக்குந்தன்மையுந்திருவுளமறியும். (௧௨0)

அடியனேனுள்ளந்திருச்சிற்றம்பலத்தென்னமுதநின்மேல்வைத்தகாதல
நெடியவேழ்கடலிற்பெரிதெனக்கிந்நாள்நிகழ்கின்றவாவலும்விரைவும்
படியவென்றனாற்சொலமுடியாதுபார்ப்பறப்பார்த்திருக்கின்றேன்
செடியனேனிருக்குமவண்ணங்களெல்லாந்திருவுளங்கண்டதேயெந்தாய். (௧௨௧)

புன்னிரண்டாண்டுதொடங்கிநானிற்றைப்பகல்வரையடைந்தவையெல்லா
முன்னிநின்றுரைத்தாலுலப்புறாததனாலொருசிலவுரைத்தனனெனினு
மென்னுளத்தகத்தும்புறத்துமுட்புறத்துமியல்புறப்புறத்தினும்விளங்கி
மன்னியசோதியாவுநீயறிந்தவண்ணமேவகுப்பதென்னினக்கே. (௧௨௨)

இதுவரையடியேனடைந்தவெம்பயமுமிடர்களுந்துன்பமுமெல்லாம்
பொதுவளர்பொருளேபிறர்பொருட்டல்லாற்புலையனேன்பொருட்டலவிதுநின்
மதுவளர்மலர்ப்பொற்பதத்துணையறியவகுத்தனனடியனேன்றனக்கே
யெதிலுமோராசையிலையிலைபயமுமிடருமற்றிலையிலையெந்தாய். (௧௨௩)

என்னளவிலையேயென்னினும்பிறர்பாலெய்தியகருணையாலெந்தா
யுன்னுறுபயமுமிடருமென்றனையுயிரொடுந்தின்கின்றதந்தோ
வின்னுமென்றனக்கிவ்விடரொடுபயமுமிருக்கிலென்னுயிர்தரியா
தன்னையுங்குருவுமப்பனுமானவமுதனேயளித்தருளெனையே. (௧௨௪)

பயத்தொடுதுயருமறைப்புமாமாயைப்பற்றொடுவினையுமாணவமும்
கயத்தவன்மயக்குமருட்சியுமெனதுகருத்திலேயினியொருகணமும்
வியத்திடத்தரியேனிவையெலாந்தவிர்த்துன்மெய்யருளளித்திடல்வேண்டு
முயத்தருவாயேலிருக்கின்றேனிலையேலுயிர்விடுகின்றனனின்றே. (௧௨௫)

ஐயநான்பயந்தாற்றுயரினாலடைந்தவடைவையுண்ணினைந்திடுந்தோறும்
வெய்யதீமூட்டிவிடுத்தலொப்பதுநான்மிகவிவறுலினைந்திட்டேன
வையமேலினிநானிவைகளாவிளைக்கவசமிலேனிவையெலாந்விர்த்தே
யுய்யவைப்பாயேலிருக்கின்றேனிலையேலுயிர்விடுகின்றனனின்றே. (கஉசு)

பயந்துயரிடருண்மருட்சியாதியவிப்பகையெலாம்பற்றறத்தவிர்த்தே
நயந்தநின்னருளாரமுதளித்தடியேனுடியீணடெண்ணியவெல்லாம்
வியந்திடத்தருதல்வேண்டுமீதெனதுவிண்ணப்பநின்றிருவுளத்தே
வயந்தரக்கருதித்தயவுசெய்தருள்கவள்ளலேசிற்சபைவாழ்வே. (கஉஎ)

என்னுயிர்காத்தல்கடனுனக்கடியேனிசைத்தவிண்ணப்பமேற்றருளி
யுனனுமென்னுள்ளத்துறும்பயமிடர்களுறுகணமற்றிவையெலாமொழித்தே
நின்னருளமுதமளித்தெனதெண்ணநிரப்பியாட்கொள்ளுதலவேண்டும
மன்னுபொற்சபையிலவயங்கியமணியேவள்ளலேசிற்சபைவாழ்வே. (கஉஅ)

பரிக்கிலேனபயமுமிடருமவெந்துயரும்பற்றறத்தவிர்த்தருளினிநான்
தரிக்கிலேனசிறிதுந்தரிக்கிலேனுள்ளந்தரிக்கிலேன்றரிக்கிலேனந்தோ
புரிக்கிலேசத்தையகற்றியாட்கொள்ளும்பொற்சபையண்ணலேகருணை
வரிக்கண்ணோர்மடந்தைபாகனேசிவனேவள்ளலேசிற்சபைவாழ்வே. (கஉகூ)

திருச்சிற்றம்பலம்.

---

## வேண்டுகோள்.

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அப்பாநான்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டுமாருயிர்கட்கெல்லாநானன்பு செயலவேண்டு, மெய்ப்பொருண்மெய்ப்பதமுமெங்கணுநான்சென்றேயெந்தைநினதருட்புகழையியம்பியிடல்வேண்டும், செப்பாதமேனிலைமேற்சுத்தசிவமார்க்கந்திகழ்ந்தோங்கவருட்சோதிசெலுத்தியிடலவேண்டும், தப்பேதுநானசெயினுநீபொறுத்தலவேண்டுந்தலைவநினைப்பிரியாதநிலைமையும்வேண்டுவனே. (க)

ஐயாநான்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டுமடிமுடிகண்டெந்நாளுமநுபவித்தல்வேண்டும், பொய்யாதவாய்மைகளேபுகன்றிடுதல்வேண்டும்புகன்றபடிபுகன்றபடிபுரிந்திடுதலவேண்டும, *எய்யாதவருட்சோதியென்கையுறலவேண்டுமிறந்தவுயிர்தமைமீட்டுமெழுப்பியிடல்வேண்டும், நையாதவண்ணமுயிர்காத்திடுதல்வேண்டும்நாயகநின்றனைப்பிரியாதுறுதலும்வேண்டுவனே. (உ)

அண்ணாநான்வேண்டுதல்கேட்டருள்புரிதலவேண்டு மழியாததனிவடிவம்யானடைதலவேண்டுங், கண்ணாரநினையெங்குங்கண்டுவத்தல்வேண்டுங் காணாதகாட்சியெலாங்கண்டுகொளல்வேண்டும், பண்ணாரநின்றனையேபாடியுறல்வேண்டும்பரமானந்தப்பெருங்கூத்தாடியிடல்வேண்டும், உண்ணாடியுயிர்களுறுந்துயர்தவிர்த்தல்வேண்டுமுனைப்பிரியாதுறுகின்றவுறவதுவேண்டுவனே. (௩)

---

* எய்யாத - அறியாத.

அத்த நான்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டு மருட்பெருஞ்சோதியைப்பெற்றேயகங்களித்தல்வேண்டுஞ், செத்தாரைமீட்டுமிங்கேயெழுப்பியிடல்வேண்டுந் திருச்சபைக்கேயடிமைகளாச்செயவித்தல்வேண்டு, மொத்தாருமுயர்ந்தாருந்தாழ்ந்தாருமெவருமொருமையுளராகியுலகியனடத்தல்வேண்டு, மெத்தாலுமழியாதவடிவதிலேநானுமெந்தாயுமொன்றாகவினிதுறல்வேண்டுவனே. (௪)

அனையேநான்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டு மருட்பெருஞ்சோதியைப்பெற்றேயகமகிழ்தல்வேண்டும், வனைசேரெவ்வுலகமுமோரொழுக்கமுறல்வேண்டும் மடிந்தாரைமீளவுநான்வருவித்தல்வேண்டும், புனைசேருங்கொலைநெறியும்புலைநெறியுஞ்சிறிதும்பொருந்தாமலெவ்வுயிரும்புரிந்துவத்தல்வேண்டு, முனைசேர்மெய்த்திருவடிவிலெந்தாயுநானுமொன்றாகியெஞ்ஞான்றுமோங்குதல்வேண்டுவனே. (௫)

அடிகேள்நான்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டு மண்டமெலாம்பிண்டமெலாங்கண்டுகொளல்வேண்டுந், துடிசேரெவ்வுலகமுமெத்தேவருமெவ்வுயிருஞ்சுத்தசிவசன்மார்க்கம்பெற்றிடுதல்வேண்டும், படிவானும்படைத்தன்முதலைந்தொழிலும்ஞானம்படைத்தன்முதலைந்தொழிலுநான்புரிதல்வேண்டு, மொடியாததிருவடிவிலெந்தாயுநானுமொன்றாகியெஞ்ஞான்றுமோங்குதல்வேண்டுவனே. (௬)

அம்மானென்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டுமாணவமாதியமுழுதுமறுத்துநிற்றல்வேண்டு, மிம்மாலைத்தத்துவங்களெல்லாமென்வசத்தேயியங்கியொருதீமையுமிலாதிருத்தல்வேண்டு, மெம்மானென்வேண்டுதல்வேண்டாமையறல்வேண்டுமேகசிவபோகமநுபோகமுறல்வேண்டுந், தம்மானத்திருவடிவிலெந்தாயுநானுஞ்சார்ந்துகலந்தோங்குகின்றதன்மையும்வேண்டுவனே. (௭)

அச்சாநான்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டு மாறந்தநிலைகளெலாமறிந்தடைதல்வேண்டு, மெச்சார்புமாகியுயிர்க்கிதம்புரிதல்வேண்டுமெனையடுத்தார்தமக்கெலாமின்புதரல்வேண்டு, மிச்சாதிசமயவிகற்பங்களெலாந்தவிர்த்தேயெவ்வுலகுஞ்சன்மார்க்கப்பொதுவடைதல்வேண்டு, முச்சாதியந்தமிலாத்திருவடிவில்யானுமுடையாயுங்கலந்தோங்குமொருமையும்வேண்டுவனே. (௮)

அறிவாநான்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டுமைந்தொழில்நான்புரிந்துலகிலருள்விளக்கல்வேண்டுஞ், செறியாதகரணமெலாஞ்செறித்தடக்கல்வேண்டுஞ்சித்தாந்தவேதாந்தப்பொதுசிறத்தல்வேண்டு, மெறியாதென்னெண்ணமெலாமினிதருளல்வேண்டுமெல்லாஞ்செயவல்லசித்தேயெனக்களித்தல்வேண்டும், பிறியாதென்னொடுகலந்துநீயிருத்தல்வேண்டும்பெருமானின்றனைப்பாடியாடுதல்வேண்டுவனே. (௯)

அருளாநான்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டு மணுத்துணையுஞ்சினங்காமமடையாமைவேண்டும், மருளாயவுலகமெலாமருணீங்கிஞானமன்றிடத்தேவள்ளலுனைவாழ்த்தியிடல்வேண்டு, மிருளாமையுறல்வேண்டுமெனையடுத்தார்சுகம்வாய்ந்திடல்வேண்டுமெவ்வுயிருமின்படைதல்வேண்டும், பொருளாமோர்திருவடிவிலுடையாயுநானும் புணர்ந்துகலந்தொன்றாகிப்பொருந்துதல்வேண்டுவனே. (௧௦)

அமலாநான்வேண்டுதல்கேட்டருள்புரிதல்வேண்டு மாடிநிற்குஞ்சேவடியைப்பாடிநிற்கவேண்டும், யமனுதித்தடையென்றுமெய்தாமைவேண்டுமெல்லாஞ்செயவல்லதி

றனெனக்களித்தல்வேண்டுவ, * கமையாதியடைந்துயிர்களெல்லாஞ்சன்மாரககங்காதலித்தேதிருப்பொதுவைககளிதடேத்தலவேணடும், விமலாதியுடையவொருதிருவடிவில்யானுமவிமலாநீயுங்கலந்தேவிளங்குதலவேணடுவனே. (கக)

திருசசிற்றம்பலம.

## அபயநிலை.

அறுசீரடியாசிரியவிருததம.

திருச்சிற்றம்பலம்.

ஆணையாணைநீயஞ்சலையஞ்சலையருளொளிதருகினமும
கோணைமாநிலததவரொலாமநின்னையேகுறிககொள்வர்நினககேயெம்
மாணையம்பலததரசையுமளிததனமவாழகநீமகனேயென
† றேணைபெற்றிடவெனககருள்புரிந்தநின னிணைமலர்பபதம்போற்றி. (க)

திருச்சிறறம்பலம்.

## இதுவுமது.

எணசீரடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

எல்லாவுலகமுமென்வசமாயினவெல்லாவுயிர களுமென்னுயிராயின
எல்லாஞானமுமென்ஞானமாயினவெல்லாவிதைையுமென்விதைையாயின
எலலாப்போகமுமென்போகமாயினவெல்லாவின்பமுமென்னின்பமாயின
எல்லாம்வல்லசிற்றமபலதனென்னபபரெல்லாம்நல்கியெனனுள்ளத்துள்ளாரே. (க)

திருச்சிற்றமபலம.

## சிவானந்த நிலை.

வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

கண்டேன் களித்தேன்கருணைத திருவமுத
முண்டேனுயாநிலைமேலோஙகுகினறேன—கொண்டேன
அழியாத்திருவுருவமச்சாவெனுஞானறு
மழியாச்சிற்றம்பலத்தையான. (க)

* கமை - பொறுமை. † ஏணை - வன்மை.

பாரதேன்பணிந்தேன்பழிச்சினேன்மெய்ப்புளகம்
போதாதேனென னுள்ளமெலாம்பூரித்தேன—ஆர்த்தேநின்
றாடுகின்றேனபாடுகின்றேனனபுருவானேனருளை
நாடுகினறேனசிற்சபையைநான். (உ)

எண்ணுகின்றேனெண்ணங்களெல்லாந்தருகின்றா
னுண்ணுகின்றேனுண்ணவுண்ணவூட்டுகின்றான்—நண்ணுதிருச்
சிற்றம்பலத்தேதிருநடஞ்செய்கின்றானென்
குற்றம்பலபொறுத்துக்கொண்டு. (௩)

கொண்டானடிமைகுறியான்பிழையொன்றுங்
கண்டானளித்தான்கலந்திருந்தான் - பண்டாய
நான்மறையுமாகமமுநாடுந்திருப்பொதுவில்
வான்மயத்தானென்னைமகிழ்ந்து. (௪)

திருச்சிற்றம்பலம்.



## ஆன்மதரிசனம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருவெலாந்தருமோர்தெய்வமாமொருவன்றிருச்சிற்றம்பலந்திகழ்கின்றா
னுருவெலாமுணர்ச்சியுடல்பொருளாவியுளவெலாமாங்கவனறனக்கே
தெருவெலாமறியக்கொடுத்தனன்வேறுசெயலிலேனெனநினைத்திருந்தே
னருவெலாமுடையாயநீயறிந்ததுவேயடிக்கடியுரைப்பதென்னினக்கே. (௧)

நினைத்தபோதெல்லாநின்னையேநினைத்தேனினைப்பறநின்றபோதெல்லா
மெனைத்தனியாக்கிநினக்கேநின்றேனென்செயலென்னவோசெயலுந்
தினைத்தனையெனினும்புரிந்திலேனெல்லாஞ்சிவன்செயலாமெனப்புரிந்தே
னனைத்துமென்னரசேநீயறிந்ததுவேயடிக்கடியுரைப்பதென்னினக்கே. (உ)

களித்தபோதெல்லாநின்னியலுணர்ந்தேகளித்தனன்கண்கணீர்ததும்பித்
துளித்தபோதெல்லாநின்னருணினைத்தேதுளித்தனன்சூழ்ந்தவருளத்தைத்
தெளித்தபோதெல்லாநின்றிறம்புகன்றேதெளித்தனன்செய்கைவேறறியே
னொளித்திருவுளமேயறிந்ததிவ்வனைத்துமுரைப்பதென்னடிக்கடியுனக்கே. (௩)

உண்டதும்பொருந்தியுவந்ததுமுறங்கியுணர்ந்ததுமுலகியலுணர்வாற்
கண்டதுங்கருதிக்களித்ததுங்கலைகள்கற்றதுங்கலந்ததுங்காதல்
கொண்டதுநின்னோடன்றிநான்றனித்தென்குறிப்பினிற்குறித்ததொன்றிலையே
யொண்டகுமுனதுதிருவுளமறிந்ததுரைப்பதென்னடிக்கடியுனக்கே. (௪)

களவிலேகளித்தகாலத்துநீயேகளித்தனைநான்களித்தறியே
னுளவிலேயுவந்தபோதுநீதானேயுவந்தனைநானுவந்தறியேன்
கொளவிலேசமுமோர்குறிப்பிலேனனைத்துங்குறித்தனைகொண்டனைநீயே
யளவிலேயெல்லாமறிந்தனையரசேயடிக்கடியுரைப்பதென்னினக்கே. (௫)

திலதவாணுதலார்தமைக்கனவிடத்துஞ்சிறிதுநான்விழைந்திலேனிந்த
வுலகவாழ்விலோரணுத்துணையெனினுமுவப்பிலேனுலகுறுமாயைக்
கலகவாதனைதீர்காலமென்றுறுமோகடவுளேயெனத்துயர்ந்திருந்தே
னலகிலாத்திறலோய்நீயறிந்ததுநானடிக்கடியுரைப்பதென்னினக்கே. (௬)

சாதியுமதமுஞ்சமயமுந்தவிர்ந்தேன்சாத்திரக்குப்பையுந்தணந்தேன்
நீதியுநிலையுஞ்சத்தியப்பொருளுநித்தியவாழ்க்கையுஞ்சுகமு
மாதியுநடுவுமந்தமுமெல்லாமருட்பெருஞ்சோதியென்றறிந்தே
னோதியவனைத்துநீயறிந்ததுநானுரைப்பதென்னடிக்கடியுனக்கே. (௭)

பித்தெலாமுடையவுலகர்தங்கலகப்பிதற்றெலாமென்றொழிந்திடுமோ
சத்தெலாமொன்றென்றுணர்ந்தசன்மார்க்கசங்கமென்றோங்குமோதலைமைச்
சித்தெலாம்வல்லசித்தனென்றுறுமோதெரிந்திலேனெனத்துயர்ந்திருந்தே
னெத்தெலாமுனதுதிருவுளமறிந்ததுரைப்பதென்னடிக்கடியுனக்கே. (௮)

ஒன்றெனக்காணுமுணர்ச்சியென்றுறுமோவூழிதோறூழிசென்றிடினு
மென்றுமிங்கிறவாவியற்கையென்றுறுமோவியலருட்சித்திகளனைவந்
தொன்றலென்றுறுமோவனைத்துமென்வசத்தேயுறுதலென்றோவெனத்துயர்ந்தே
னின்றிருவுளமேயறிந்ததிவ்வனைத்துமுரைப்பதென்னடிக்கடியுனக்கே. (௯)

கள்ளவாதனையைக்களைந்தருணெறியைக்காதலித்தொருமையிற்கலந்தே
யுள்ளவாறிந்தவுலகெலாங்களிப்புற்றோங்குதலென்றுவந்துறுமோ
வள்ளலேயதுகண்டடியனேனுள்ளமகிழ்தலென்றோவெனத்துயர்ந்தேன்
ஒள்ளியோய்நினதுதிருவுளமறிந்ததுரைப்பதென்னடிக்கடியுனக்கே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## சிவதரிசனம்.

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருவுடையாயசிற்சபைவாழ்சிவபதியேயெல்லாஞ்செய்யவல்லதனித்தலைமைச்சித்தசிகாமணியே, யுருவுடையென்னுயிர்க்குயிராயொளிர்கின்றவொளியேயுன்னுதொறுமென்னுளத்தேயூறுகின்றவமுதே, யருவுடையபெருவெளியாயதுவிளங்குவெளியாயப்பாலுமாய்நிறைந்தவருட்பெருஞ்சோதியனே, மருவுடையாள்சிவகாமவல்லிமணவாளாவந்தருள்கவருட்சோதிதந்தருள்கவிரைந்தே. (௧)

சொல்லவனேபொருளவனேதுரியபதத்தவனேதூயவனேநேயவனேசோதியுருவவனே, நல்லவனேநன்னிதியேஞானசபாபதியேநாயகனேதாயகனேநண்பவனேயனை

த்தும், அல்லவனேயானவனேயம்மையப்பாவென்னையாண்டவனேதாண்டவனேயருட்குருவேயெல்லாம், வல்லவனேசிவகாமவல்லிமணவாளாமன்னவனேயென்னவனே வந்தருள்கவிரைந்தே. (௨)

துரியநிலைதுணிந்தவருஞ்சொல்லருமெய்ப்பொருளேசுத்தசிவானந்தசபைச்சித்தசிகாமணியே, பெரியசிவபதியேநின்பெருமையறிந்திடவேபேராசைப்படுகின்றேன் பித்தர்களிற்பெரியேன், கரியமணித்திறத்தினையுங்காணவல்லேனல்லேன்கண்மணியே நின்றிறத்தைக்காணுதல்வல்லேனோ, அரியபெரும்பொருளாமுன்னருட்சோதியெனக்கேயளித்தனையேயறிந்துகொள்வேனளித்திடுகவிரைந்தே. (௩)

மறப்பறியாப்பேரறிவில்வாய்த்தபெருஞ்சுகமேமலைவறியாநிலைநிரம்பவயங்கியசெம்பொருளே, இறப்பறியாத்திருநிலையிலென்னைவளர்த்தருளுமென்னுடையநற்றாயேயெந்தாயேநினது, சிறப்பறியாவுலகமெலாஞ்சிறப்பறிந்துகொளவேசித்தசிகாமணியேநீசித்தியெலாம்விளங்கப், பிறப்பறியாப்பெருந்தவரும்வியப்பவந்துதருவாய்பெருங்கருணையரசேநீதருந்தருணமிதுவே. (௪)

முன்னுழைப்பாலுறுமெனவேமொழிகின்றார்மொழியின்முடிவறியேனெல்லாஞ்செய்முன்னவனேநீயென, றன்னுழைப்பாதருள்வாயேலுண்டனைத்துமொருநின்றனதுசுதந்தரமேயிங்கெனதுசுதந்தரமோ, வென்னுழைப்பாலென்பயனோ விரங்கியருளாயேலயானொன்றறிவெதுமேலென்னைமதிப்பவரார், பொன்னுழைப்பாற்பெறலுமரிதருளிலையேலெல்லாம்பொதுநடஞ்செய்புண்ணியநீயெண்ணியவாறாமே. (௫)

விழித்துவிழித்திமைத்தாலுஞ்சுடருதயமிலையேல் விழிகள்விழித்திளைப்பதலால் விளைவொன்றுமிலையே, மொழித்திறஞ்செய்தடிக்கடிநான்முடுகிமுயன்றாலுமுன்னவநின்பெருங்கருணைமுன்னிடலின்றெனிலோ, செழித்ததுறாநற்பயனெதுவோதிருவுளந்தானிரங்கிலசிறுதுரும்போரைந்தொழிலுஞ்செய்திடல்சத்தியமே, பழித்துரைப்பாருரைக்கவெலாம்பசுபதிநின்செயலேபரிந்தெனையும்பாடுவித்துப்பரிசுமகிழ்ந்தருளே, (௬)

மாநிருபாதிபர்சூழமணிமுடிதான்பொறுத்தே மண்ணுளவாளுளமனத்தினினைத்தேனோ, தேனொருவார்மொழிச்சியரைத்திளைக்கவிழைந்தேனோதீஞ்சுவைகள்விரும்பினனோதீமைகள்செய்தேனோ, நானொருபாவமுமறியேன்நன்னிதியேயெனதுநாயகனேபொதுவிளங்குநடராஜபதியே, யேனொருமையிலர்போனீயிருக்கின்றாயழகோவென்னொருமையறியாயோயாவுமறிந்தாயே. (௭)

பாவிமனக்குரங்காட்டம்பார்க்கமுடியாதேபதிவெறுத்தேனிதிவெறுத்தேன்பற்றனைத்துந்தவிர்ந்தே, னாவியுடல்பொருளையுன்பாற்கொடுத்தேனுன்னருட்பேராசைமயமாகியுனையடுத்துமுயல்கின்றேன், கூவியெனையாட்கொள்ளநினையாயோநினதுகுறிப்பறியேன்பற்பலகால்கூவியிளைக்கின்றேன், தேவிசிவகாமவல்லிமகிழுமணவாளாதெருணிறைவானமுதளிக்குந்தருணமிதுதானே. (௮)

கட்டவிழ்ந்தகமலமெனக்கருத்தவிழ்ந்துநினையே கருதுகின்றேன்வேறொன்றுங்கருதிலேனிதுதான், சிட்டருளந்திகழ்கின்றசிவபதியேநினதுதிருவுளமேயறிந்ததுநான்செப்புதலென்புவிமேல், விட்டகுறைதொட்டகுறையிரண்டுநிறைந்தனனீ விரைந்துவந்தேயருட்சோதிபுரிந்தருளுந்தருணந், தொட்டதுநான்றுணிந்துரைத்தேனீயுணர்த்தவுணர்ந்தேசொல்வதலாலென்னறிவாற்சொல்லவல்லேனன்றே. (௯)

காட்டையெலாங்கடந்துவிட்டேனாட்டையடைந்தனது கடிநகர்ப்பொன்மதிற் காட்சிகண்குளிரக்கண்டேன், கோட்டையெலாங்கொடிநாட்டிக்கோலமிடப்பார்த்தேனகோயிலின்மேல்வாயிலிலேகுறைகளெலாந்தவிர்ந்தேன், சேட்டையற்றுக்கருவியெலாமெனவசநின்றிடவேசித்தியெலாம்பெற்றேனான்றிருச்சிற்றம்பலமேல், பாட்டையெலாம்பாடுகின்றேனித்தருணம்பதியே பலந்தருமென்னுளந்தனிலேகலந்துநிறைந்தருளே. (௧௦)

சித்தியெலாம்வல்லசிவசித்தனுளங்கலந்தான்செத்தாரையெழுப்புகின்றதிருநாள்களடுத்த, இத்தினமேதொடங்கியழியாதநிலையடைதற்கேற்றகுறியேற்றவிடத்திசைந்தியல்கின்றனநாஞ், சத்தியமேபெருவாழ்விற்பெருங்களிப்புற்றிடுதல்சந்தேகித்தலையாதேசாற்றியவெனமொழியை, நித்தியவானமொழியெனநினைந்துமகிழ்ந்தமைவாய்நெஞ்சேநீயஞ்சேலுள்ளஞ்சேலஞ்சேலே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## வாதனைக்கழிவு.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொழுதுவிடிந்ததினிச்சிறிதும்பொறுத்துமுடியேனெனநின்றே
யழுதுவிழிகணீர்துளும்பக்கூவிக்கூவியயாகின்றேன்
பழுதுதவிர்க்குந்திருச்செவிக்குட்பட்டிலையோபலகாலும்
உழுதுகளைத்தமாடனையேன்றுணைவேறறியேனுடையானே. (௧)

உடையாய்திருவம்பலத்தாடலொருவாவொருவாவுலவாத
கொடையாயெனநானின்றனையேகூவிக்கூவியயர்கின்றேன்
தடையாயினதீர்த்தருளாதேதாழ்க்கிலழகோபுலைநாயிற்
கடையாயதிரிந்தேன்கலங்குதல்சமமதமோகருணைக்கருத்தினுக்கே. (௨)

கருணைக்கருத்துமலர்ந்தெனதுகலக்கமனைத்துந்தவிர்த்தேயித்
தருணத்தருளாவிடிலடியேனறியேன்றளர்வேன்றளர்வதுதான்
அருணச்சுடரேநின்னருளுக்கழகோவழகென்றிருப்பாயேல்
தெருணற்பதஞ்சாரடியரெலாஞ்சிரிப்பார்நானுந்திகைப்பேனே. (௩)

திகைப்பாதிகைக்கநான்சிறிதுந்திகையேனெனநின்றிருவடிக்கே
வகைப்பாமாலைசூட்டுகின்றேன்மற்றொன்றறியேன்சிறியேற்குத்
தகைப்பாரிடையித்தருணத்தேதாராயெனிலோபிறரெல்லாம்
நகைப்பார்நகைக்கவுடம்பினைவைத்திருத்தலழகோநாயகனே. (௪)

நாயிற்கடையேன்கலக்கமெலாந்தவிர்த்துநினதுநல்லருளை
யீயிற்கருணைப்பெருங்கடலேயென்னேகெடுவதியற்கையிலே
தாயிற்பெரியதயவுடையான்குற்றம்புரிந்தோனறன்னையுமோர்
சேயிற்கருதியணைத்தானென்றுரைப்பாருனைத்தானறிந்தோரே. (௫)

தெரிந்தபெரியார்க்கருள்புரிதல்சிறப்பென்றுரைத்ததெய்வமறை
திரிந்தசிறியார்க்கருள்புரிதல்சிறப்பிற்சிறப்பெனறுரைத்தனவே
புரிந்தம்மறையைப்புகன்றவனுநீயேயென்றாற்புண்ணியனே
விரிந்தமனத்துச்சிறியேனுக்கிரங்கியருளல்வேண்டாவோ. (௬)

வேண்டாருளரோநின்னருளைமேலோரன்றிக்கீழோரும்
ஈண்டார்வதற்குவேண்டினராலின்றுபுதிதோயானவேண்டல்
தூண்டாவிளக்கேதிருப்பொதுவிற்சோதிமணியேயாறுமூன்
றாண்டாவதிலேமுன்னென்னையாண்டாய்கருணையளித்தருளே. (௭)

அருளேவடிவாமரசேநீயருளாவிடிலிவ்வடியேனுக்
கிருளேதொலைபவருளளிப்பாரெவரோவெலலாம்வல்லோய்நின்
பொருளேய்வடிவிற்கலையொன்றேபுறத்துமகத்தும்புணர்ந்தெங்குந்
தெருளேயுறவெத்தலைவருக்குஞ்சிறந்தவருளாய்த்திகழ்வதுவே. (௮)

திகழ்ந்தாயின்றதிருப்பொதுவிற்சிவமேநின்னைத்தெரிந்துகொண்டு
புகழ்ந்தார்தம்மைப்பொறுத்திடவும்புன்மையறிவாற்பொய்யுரைத்தே
யிகழ்ந்தேன்றனைக்கீழ்வீழ்த்திடவுமென்னேபுவிக்கிங்கிசைத்திலைநீ
யகழ்ந்தார்தமையும்பொறுக்கவெனவமைத்தாயெல்லாமமைத்தாயே. (௯)

எல்லாம்வகுத்தாயெனக்கருளில்யாரேதடுப்பாரெல்லாஞ்செய்
வல்லானவகுத்தவண்ணமெனமகிழ்வாரென்கண்மணியேயென்
சொல்லானவையுமணிந்துகொண்டதுரையேசோதித்திருப்பொதுவில்
நல்லாய்கருணைநடத்தரசேதருணமிதுநீநயந்தருளே. (௧௦)

நயந்தகருணைநடத்தரசேஞானவமுதேநல்லோர்கள்
வியந்தமணியேமெய்யறிவாம்விளக்கேயென்னைவிதித்தோனே
கயந்தமனத்தேனெனினுமிகக்கலங்கிநரகக்கடுங்கடையிற்
பயந்தபொழுதுந்தாழ்த்திருத்தலழகோகடைக்கண்பார்த்தருளே. (௧௧)

பார்த்தாரிரங்கச்சிறியேனுன்பாவிமனத்தாற்பட்டதுயர்
தீர்த்தாயந்நாளதுதொடங்கித்தெய்வந்துணையென்றிருக்கின்றேன்
சேர்த்தாயுலகிலிந்நாளிற்சிறியேன்றனைவெந்துயர்ப்பாவி
யீர்த்தாலதுகண்டிருப்பதுவோகருணைக்கழகிங்கெந்தாயே. (௧௨)

தாயேயெனைத்தான்றந்தவனேதலைவாஞானசபாபதியே
பேயேனசெய்தபெருங்குற்றம்பொறுத்தாட்கொண்டபெரியோனே
நீயேயிந்நாள்முகமறியாநிலையிலிருந்தால்நீடுலகில்
நாயேயனையேனெவர்துணையென்றெங்கேபுகுவேனவிலாயே. (௧௩)

ஆயேன்வேதாகமங்களைநன்கறியேன்சிறியேனவலமிகும்
பேயேனெனினும்வலிந்தெனைப்பெற்றகருணைப்பெருமானே
நீயேயருளநினைத்தாயேலெல்லாநலமுநிரம்புவனுன்
காயேயெனினுங்கனியாகுமன்றேநினதுகருணைக்கே. (௧௪)

கருணாநிதியேயென னிரண்டுகண்ணே கண்ணிற்கலந்தொளிருந்
தெருணுடொளியேவெளியேமெய்ச்சிவமேசித்தசிகாமணியே
இருணுலகிலறிவின்றியிருக்கத்தரியேனித்தருணந்
தருணுவடியேற்கருட்சோதிதருவாயெனமுன்வருவாயே. (கரு)

வருவாயென்கண்மணிநீயென்மனத்திற்குறித்தவண்ணமெலாந்
தருவாயதருணமிதுவேமெய்த்தலைவாஞானசபாபதியே
யுருவாயசிறிதுதாழ்க்கிலுயிரொருவுமுரைத்தேனென்னுடைவா
யிருவாயலநின்றிருவடிபாட்டிசைக்குமொருவாயிசைத்தேனே. (கசு)

தேனேதிருச்சிற்றம்பலத்திற்றெள்ளாரமுதேசிவஞான
வானேஞானசித்தசிகாமணியேயென்கண்மணியேயெ
னூனேபுகுந்தென்னுளங்கலந்தவுடையாயடியேனுவந்திடநீ
தானேமகிழ்ந்துதந்தாயித்தருணங்கைம்மாறறியேனே. (கஎ)

அறியேன்சிறியேன்செய்தபிழையனைத்தும்பொறுத்தாயருட்சோதிக்
குறியேகுணமேபெறவென்னைக்குறிக்கொண்டளித்தாயசன்மார்க்க
நெறியேவிளங்கவெனைக்கலந்துநிறைந்தாயநினையொருகணமும்
பிறியேன்பிறியேனிறவாமைபெற்றேனுற்றேன்பெருஞ்சுகமே. (கஅ)

சுகமேநிரம்பப்பெருங்கருணைத்தொட்டிலிட்டேயெனையமர்த்தி
யகமேவிளங்கத்திருவருளாரமுதமளித்தேயணைத்தருளி
முகமேமலர்த்திச்சித்திநிலைமுழுதுங்கொடுத்துமூவாமற்
சகமேலிருக்கப்புரிந்தாயேதாயேயெனைத்தந்தாயே. (க௯)

தந்தாயின்றுந்தருகின்றாய்தருவாய்மேலுந்தனித்தலைமை
யெந்தாயநினதுபெருங்கருணையென்னென்றுரைப்பேனிவ்வுலகிற்
சிந்தாகுலந்தீர்த்தருளெனநான்சிறிதேகூவுமுனனென்பால்
வந்தாயகலந்துமகிழ்கின்றாயெனதுபொழுதுவான்பொழுதே. (உ0)

திருச்சிற்றம்பலம்.

---

# அநுபோகநிலயம்.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இனிப்பிரிந்திறையுமிருக்கலேன்பிரிவையெண்ணினுமையவோமயங்கிப்
பனிப்பிலென்னுடம்புமுயிருமுள்ளுணர்வும்பரதவிப்பதையறிந்திலையோ
தனிப்படுஞானவெளியிலேயின்பத்தனிநடம்புரிதனித்தலைவா
கனிப்பயனறுதற்கிதுதகுதருணங்கலந்தருள்கலந்தருளெனையே. (க)

பிரிந்தினிச்சிறிதுந்தரிக்கலேனபிரிவைபபேசினுநெயவிடுந்தீபபோ
லெரிநதுளஙகருகிமயங்கல்கண்டிலையோவெஙகணுஙகண்ணுடையெந்தாய்
புரிநதசிறபொதுவிற்றிருநடமபுரியுமபுண்ணியாவெனனுயிாத்துணைவா
கரந்திடாதுறுதற்கிதுதகுதருணஙகலநதருள்கலநதருளெனையே. (௨)

மேலையேகாந்தவெளியிலேநடஞ்செய்மெய்யனேயையனேயெனககு
மாலையேயணிந்தமகிழ்நனேயெல்லாமவல்லனேநலலனேயருட்செங
கோலையேநடததுமிறைவனேயோரெண்குணததனேயினிச்சகிப்பறியேன்
காலையேதருதற்கிதுதகுதருணங்கலந்தருள்கலநதருளெனையே. (௩)

பண்டுகொண்டெனைத்தான்பிழைகுறியாதபணபனேதிருச்சிற்றமபலததே
தொண்டுகொண்டடியர்களிககநின்றுடுந்தூயனேநேயனேபிரமன்
விண்டுகண்டறியாமுடியடியெனக்கேவிளஙகுறக்காட்டியவிமலா
கண்டுகொண்டுறுதற்கிதுதகுதருணஙகலந்தருள்கலந்தருளெனையே. (௪)

தனித்துணையெனுமென்றந்தையேதாயேதலைவனேசிற்சபைதனிலே
யினிததெள்ளமுதேயென்னுயிாக்குயிரேயெனனிருகணணுண்மாமணியே
யநித்தமேநீக்கியாண்டவெனகுருவேயணணலேயினிபபிரிவாற்றேன்
கனித்துணைதருதற்கிதுதகுதருணஙகலந்தருள்கலநதருளெனையே. (௫)

துன்பெலாநதவிர்ககுநதிருச்சிற்றமபலததேசோதியுட்சோதியேயழியா
வினபெலாமளிககுமிறைவனேயென்னையீனறநற்றநதையேதாயே
யனபெலாமாகிநிறைநததோாநிறைவேயணணலேயினிப்பிரிவாறறேன
பொனபதநதருதற்கிதுதகுதருணமபுணாநதருள்புணாநதருளெனையே. (௬)

ஏதுமொன்றறியாப்பேதையாம்பருவததென்னையாட்கொண்டெனையுவந்தே
ஓதுமின்மொழியாற்பாடவேபணித்தவொருவனேயெனனுயிாததுணைவா
வேதமும்பயனுமாகியபொதுவிலவிளங்கியவிமலனேஞான
போதகநதருதற்கிதுதகுதருணம்புணாந்தருளபுணாநதருளெனையே. (௭)

எண்ணியவெனதுள்ளெண்ணமேயெண்ணததிசைந்தபேரினபமேயான்றன்
பண்ணியதவமேதவத்துறும்பலனேபலததினுற்கிடைததவெனபதியே
தண்ணியமதியேமதிமுடியரசேதனிததசிறசபைநடததமுதே
புண்ணியமளிததற்கிதுதகுதருணமபுணாநதருள்புணாநதருளெனையே. (௮)

மலப்பகைதவிர்க்குந்தனிப்பொதுமருந்தேமநதிரமேயொளிர்மணியே
நிலைபபடவெனையன்றாண்டருளளிததநேயனேதாயனையவனே
பலப்படுபொன்னம்பலததிலேநடஞ்செயபரமனேபரமசிற்சுகந்தான
புலப்படத்தருதற்கிதுதகுதருணம்புணாநதருள்புணாநதருளெனையே. (௯)

களிப்புறுமடியேன்கையிலேகிடைததகற்பகததீஞ்சுவைக்கனியே
வெளிப்புறததோஙகும்விளககமேயகததேவிளங்குமோர்விளக்கமேயெனக்கே
ஒளிப்பிலாதன்றேயளிததசிற்பொதுவிலொருவனேயினிப்பிரிவாற்றேன்
புளிப்பறவினிததற்கிதுதகுதருணம்புணாந்தருள்புணர்ந்தருளெனையே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

# தற்போதவிழப்பு.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அவ்வண்ணம்பழுத்தவருமறிந்திலர்சற்றெனினு மறிந்தனமோசிறிதுகுருவரு
ளாலேயந்தச், செவ்வண்ணம்பழுத்ததனித்திருவுருக்கண்டவர்கருந்தெரியாமலிருப்
பமெனச்சிந்தனைசெய்திருந்தேன், இவ்வண்ணமிருந்தவெனைப்பிறரறியத்தெருவிலி
ழுத்துவிடுத்ததுகடவுளியற்கையருட்செயலோ, மவ்வண்ணப்பெருமாயை தன்செய
லோவறியேன்மனமாலைபாய்வதுகாண்மன்றிநடத்தரசே. (௧)

கள்ளிருந்தமலரிதழிச்சடைக்கனியின்வடிவங்கண்டுகொண்டேன்சிறிதடியேன்க
ண்டுகொண்டபடியே, நள்ளிருந்தவண்ணமினனுங்கண்டுகண்டுகளித்தேநாடறியாதி
ருப்பமெனநேரனறுநினைந்தொருசார், உள்ளிருந்தவெனைத்தெருவிலிழுத்துவிடுத்தது
தானுன்செயலோபெருமாயைதன்செயலோவறியேன், வள்ளிருந்தகுணக்கடையே
னிதைநினைக்குந்தோறுமனமாலைபாய்வதுகாண்மன்றிநடத்தரசே. (௨)

இத்திருந்தவண்ணமெலாமிகத்திருந்தவருட்பேரின்பவடிவஞ்சிறியேன்முன்ப
ரிந்ததவத்தால், சத்திருந்தார்காணாதேசிறிதுகண்டுகொண்டதரநினைந்துபெரிதின்னு
ந்தான்காண்பேமெனநேற, யத்திருந்தவெனைப்புறத்தேயிழுத்துவிடுத்ததுதானுண்ட
வனினருட்செயலோமருட்செயலோவறியேன், மத்திருந்தாரென்னளவிலென்னி
னைப்பாரந்தோமனமாலைபாய்வதுகாண்மன்றிநடத்தரசே. (௩)

கருங்களிறுபோன்மதத்தாற்கண்செருக்கிவீணே காலமெலாங்கழிக்கின்றகடை
யாகடைத்தலைவாய், ஒருங்குசிறியேனறனைமுன்வலிந்தருளேவடிவாயுள்ளமரந்தேயு
ள்ளதனையுள்ளபடியுணர்த்திப், பெருங்கருணையாலளித்தபேறதனையின்னும்பிறரறியா
வகைபெரிதும்பெறுதுமெனவுள்ளே, மருங்கிருந்தவெனைவெளியிலிழுத்துவிட்டதெ
னனோமனமாலைபாய்வதுகாண்மன்றிநடத்தரசே. (௪)

நாடுகின்றமறைகளெலாநாமறியோமென்று நாணியுரைத்தலமரவேநல்லமணிம
ன்றில், லாடுகின்றசேவடிகண்டானந்தக்கடலிலாடுமனப்பாபோனமக்குமருள்கிடைத்த
தெனினும், வீடுகின்றபிறர்சிறிதுமறியாமலிருக்கவேண்டுமெனவிருந்தவெனைவெ
ளியிலிழுத்திட்டு, வாடுகின்றவகைபுரிந்தவிதியைநினைந்தையோமனமாலைபாய்வதுகா
ணமன்றிநடத்தரசே. (௫)

நதிகலந்தசடையசையத்திருமேனிவிளங்கநல்லதிருக்கூத்தாடவல்லதிருவடிகள்
கதிகலந்துகொளச்சிறியேன்கருத்திடையேகலந்துகள்ளமறவுள்ளபடிகாட்டிடக்கண்டி
னனும், பதிகலந்துகொளுமட்டும்பிறரறியாதிருக்கப்பரிந்துள்ளேயிருந்தவென்னைவெ
ளியிலிழுத்திட்டு, மதிகலந்துகலங்கவைத்தவிதியைநினைந்தையோமனமாலைபாய்வது
காண்மன்றிநடத்தரசே. (௬)

மஞ்சனையகுழலம்மையெங்கள்சிவகாமவல்லிமகிழ்திருமேனிவண்ணமதுசிறிதே, நஞ்சனையகொடியேன்கண்டிடப்புரிந்தவருளைநாடறியாவகையினானுநீடநினைந்திருந்தேன், அஞ்சனையபிறவொல்லாமறிந்துபலபேசியலாதூற்றவளியவெனைவெளியிலிழுத்திட்டு, வஞ்சனைசெய்திடவந்தவிதியைநினைந்தையோமனமாலைபாய்வதுகாணமன்றினடத்தரசே. (௭)

அரிபிரமருருத்திரருமறிந்துகொளமாட்டாதலமரவுமீதென்னவதிசயமோமலத்திற், புரிபுழுவிலிழிந்தேனைப்பொருளாக்கியருளாம் பொருளளிக்கப்பெற்றனனிப்புதுமைபிறரறியா, துரிமைபெறவிருப்பனெனவுள்ளிருந்தவென்னை யுலகறியவெளியிலிழுத்தலகில்விருத்தியினால், வரிதலையிட்டாட்டுகின்றவிதியைநினைந்தையோ மனமாலைபாய்வதுகாண்மன்றினடத்தரசே. (௮)

விழற்கிறைத்துக்களிக்கின்றவீணர்களிற்சிறந்தவினைக்கொடியேம்பொருட்டாகவிரும்பியெழுந்தருளிக், கழறகிசைந்தபொன்னடிநந்தலைமேலேயமைத்துக்கருணைசெயப்பெற்றனமிக்கருணைநம்மையின்னும், நிழற்கிசைத்தமேனிலையிலேற்றுமெனமகிழ்ந்துநின்றவெனைவெளியிலிழுத்துலகவியாபார, வழக்கிலவளைத்தலைக்கவந்தவிதியைநினைந்தையோமனமாலைபாயவதுகாண்மன்றினடத்தரசே. (௯)

அடிபிடித்துத்திரிகின்றமறைகளெலாங்காணா வருள்வடிவைக்காட்டிநம்மையாண்டுகொண்டகருணைக், கொடிபிடித்தகுருமணியைக்கூடுமட்டும்வேறோர்குறிப்பின்றியிருப்பமெனக்கொண்டகத்தேயிருந்தேன், படிபிடித்தபலாபலவும்பகர்ந்திடவிங்கெனைத்தான்படுவழக்கிட்டுலகியலாமவெளியிலிழுத்தலைத்தே, மடிபிடித்துப்பறிக்கவந்தவிதியைநினைந்தையோமனமாலைபாய்வதுகாணமன்றினடத்தரசே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## மாயாவிளக்கம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இடுக்கறவெனைத்தான்வளர்த்திடப்பரையாஞ்செவிலிபாற்சேர்த்தனையவளோ
வெடுக்கவுநினையாள்படுக்கவுமொட்டாளென்செய்வேனுனனுமெனனிடைப்பால்
மடுக்கநற்றாயும்வந்திலள்நீயும்வந்தெனைப்பார்த்திலையந்தோ
தடுக்கருங்கருணைத்தந்தையேதளர்ந்தேன்றனையனேன்றளர்ந்திடலழகோ. (௧)

தளர்ந்திடேல்மகனேயென்றெனையெடுத்தோர்தாய்கையிற்கொடுத்தனையவளோ
வளர்ந்திடாவகையேநினைத்தனள்போன்றுமாயமேபுரிந்திருக்கின்றாள்
கிளர்ந்திடவெனைத்தான்பெற்றநற்றாயுங்கேட்பதற்கடைந்திலளந்தோ
வுளந்தருகருணைத்தந்தையேநீயுமுற்றிலைபெற்றவாக்கழகோ. (௨)

தாங்கவென்றெனையோர்தாய்கையிற்கொடுத்தாய்தாயவள்நான்றனித்துணர்ந்து
தூங்கவுமொட்டாளெடுக்கவுந்துணியாள்சூதையேநினைத்திருக்கின்றாள்
ஓங்குநற்றாயும்வந்திலாளந்தோவுளந்தளர்வுற்றனனீயு
மீங்குவந்திலையேலென்செய்கேனிதுதானெந்தைநின்றிருவருட்கழகோ. (௩)

அத்தநீயென்னையோர்தாய்கையிற்கொடுத்தாயாங்கவள்மகள்கையிற்கொடுத்தாள்
நித்தியமகளோர்நீலிபாற்கொடுத்தாளந்நீலியோதனபுடையாடுந்
தத்துவமடவார்தங்கையிற்கொடுத்தாள்தனித்தனியவரவரொடுத்தே
கத்தவெம்பயமேகாட்டினார்நானுங்கலங்கினேன்கலங்கிடலழகோ. (௪)

வாங்கியசெவிலியறிவொருதுயிற்றமகள்கையிற்கொடுத்தனளென்னைத்தான்
ஈங்கிவள்கருத்திலெதுநினைத்தனளோவென்செய்வேனென்னையேயுணர்ந்து
தூங்கவுமொட்டாளடிக்கடிகிள்ளித்தொட்டிலுமாட்டிடுகின்றாள்
ஏங்குறுகின்றேன்பிள்ளைதன்னருமையீன்றவரறிவரோவெந்தாய். (௫)

வலத்திலேசெவிலியெடுத்திடச்சோம்பிமக்கள்பாற்காட்டிவிட்டிருந்தாள்
மலத்திலேயுழைத்துச்சகிடாததழல்கேட்டும்வந்தெனையெடுத்திலாரவரும்
இலத்திலேகூடியாடுகின்றனரானென்செய்வேனென்னுடையருமை
நிலத்திலேயவர்களறிந்திலார்பெற்றோய்நீயுமிங்கறிந்திலையேயோ. (௬)

தும்மினேன்வெதும்பித்தொட்டிலிற்கிடந்தேசோர்ந்தழுதிளைத்துமென்குரலுங்
கம்மினேன்செவிலியம்மிபோலசையாள்காதுறக்கேட்டிருக்கின்றாள்
செம்மியேமடவார்கொம்மியேபாடிச்சிரித்திருக்கின்றனரந்தோ
இம்மியேயெனினுமீந்திடார்போலவிருப்பதோநீயுமென்றாயே. (௭)

துருவிலாவயிரத்தொட்டிலேதங்கத்தொட்டிலேபலவிருந்திடவுந்
திருவிலாப்பொத்தைத்தொட்டிலிற்செவிலிசிறியனைக்கிடத்தினளெந்தாய்
பிரிவிலாத்தனிமைத்தலைவநீபெற்றபிள்ளைநானெனக்கிதுபெறுமோ
கருவிலாய்நீயித்தருணம்வந்திதனைக்கண்டிடிற்சகிக்குமோநினக்கே. (௮)

காய்ந்திடுமனத்தாள்போன்றனள்சிறிதுங்கனிவிலாள்காமமாதிகளாம்
பாய்ந்திடுவேடப்பயல்களாலெனக்குப்பயம்புரிவித்தனள்பலகால்
தேய்ந்திடுமதியென்றெண்ணினாள்குறையாத்திருமதியெனநினைந்தறியாள்
சாய்ந்தவச்செவிலிகையிலேயெனைத்தந்ததுசாலுமெந்தாயே. (௯)

ஞானவானந்தவல்லியாம்பிரியாநாயகியுடனெழுந்தருளி
யீனமாற்றிடநீயெடுத்தெனையணைத்தேயின்னமுதனைத்தையுமருத்தி
யூனமொன்றில்லாதோங்குமெய்த்தலத்திலுறப்புரிந்தெனைப்பிரியாமல்
வானமும்புவியுமதிக்கவாழ்ந்தருள்கமாமணிமன்றிலெந்தாயே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## அபயத்திறன்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆடகமணிப்பொற்குன்றமேயென்னையாண்டுகொண்டருளியபொருளே
வீடகத்தேற்றும்விளக்கமேவிளக்கின்மெய்யொளிக்குள்ளொளிவியப்பே
வாடகச்சிறியேனவாட்டங்களெல்லாந்தவிர்த்தருள்வழங்கியமன்றில்
நாடகக்கருணைநாதனேயுன்னைநம்பினேன்கைவிடேலெனையே. (௧)

வட்டவான்சுடரேவளரொளிவிளக்கேவயங்குசிற்சோதியேயடியேன்
இட்டமேயிட்டத்தியைந்துளேகலந்தவின்பமேயென்பெரும்பொருளே
கட்டமேதவிர்த்திங்கென்னைவாழ்வித்தகடவுளேகனகமன்றகத்தே
* நட்டமேபுரியும்பேரருளரசேநம்பினேன்கைவிடேலென்னையே. (உ)

புல்லவாமனத்தேனென்னினுஞ்சமயம்புகுதவாபொய்யநெறியொழுக்கஞ்
சொல்லவாபிறழாத்துதிக்கவாசிறிதோர்சொப்பனத்தாயினுநினையேன்
கல்லவாமனத்தோருறவையுங்கருதேன்கனகமாமன்றிலேநடிக்கு
நல்லவாவெல்லாம்வல்லவாவுனையேநம்பினேன்கைவிடேலென்னையே. (ங)

புண்படாவுடம்பும்புரைபடாமனமும்பொய்படாவொழுக்கமும்பொருந்திக்
கண்படாதிரவும்பகலுநின்றனையேகருத்தில்வைத்தேத்துதற்கிசைந்தேன்
உண்பனேயெனினுமுடுப்பனேயெனினுமுலகரைநம்பிலேனெனது
நண்பனேநலஞ்சார்பண்பனேவுனையேநம்பினேன்கைவிடேலென்னையே. (ச)

புண்ணிலேபுகுந்தகோலெனத்துயரம்புகுந்தெனைக்கலக்கியபோதுங்
கண்ணிலேயெனதுகருத்திலேகலந்தகருத்தனேநின்றனையல்லால்
மண்ணிலேவயங்கும்வானிலேபிறரைமதித்திலேன்மதிக்கின்றாதமையும்
நண்ணிலேனவேறொன்றெண்ணிலேனுனையேநம்பினேன்கைவிடேலென்னையே. (ரு)

ஊன்பெறுமுயிருமுணர்ச்சியுமன்புமொழுக்கமுமுண்மையுமென்னைத்
தான்பெறுதாயுந்தந்தையுங்குருவுந்தனிப்பெருந்தெய்வமுந்தவமும்
வான்பெறுபொருளும்வாழ்வுநற்றுணையுமக்களுமனைவியுமுறவும்
நான்பெறுநண்பும்யாவுநீயென்றேநம்பினேன்கைவிடேலென்னையே. (சு)

வாட்டமுந்துயருமச்சமுந்தவிர்த்தென்வடிவமும்வண்ணமுமுயிருந்
தேட்டமுநீயேகொண்டுநின்கருணைத்தேகமுமுருவுமெய்ச்சிவமும்
ஈட்டமுமெல்லாம்வல்லநின்னருட்பேரின்பமுமன்புமெய்ஞ்ஞான
நாட்டமுங்கொடுத்துக்காப்பதுன்கடனம்பினேன்கைவிடேலென்னையே. (எ)

வம்பனேன்பிறர்போல்வையமும்வானுமற்றவுமதித்திலேன்மதஞ்சார்
† உம்பனேரகங்காரந்தவிர்ந்தெல்லாவுலகமும்வாழ்கவென்றிருந்தேன்
செம்பொனேகருணைத்தெய்வமேயெல்லாஞ்செயவல்லசித்தனேசிவனே
நம்பனேஞானநாதனேயுனையேநம்பினேன்கைவிடேலென்னையே. (அ)

ஆயகாலிருந்துநடந்திடவலியில்லாமையாலழுங்குவாரெனவுண்
மேயகாலிருந்துந்திருவருளுறவோர்விருப்பிலாமையின்மிகமெலிந்தேன்
தீயகான்விலங்கைத்தூயமானிடஞ்செய்சித்தனேசத்தியசபைக்கு
நாயகாவுயிர்க்குநாயகாவுனையேநம்பினேன்கைவிடேலென்னையே. (கூ)

அற்றமுமறைக்குமறிவிலாதோடியாடியசிறுபருவத்தே
குற்றமுங்குணங்கொண்டென்னையாட்கொண்டகுணப்பெருங்குன்றமேகுருவே
செற்றமும்விருப்புந்தீர்ந்தமெய்த்தவர்தஞ்சிந்தையிலினிக்கின்றதேனே
நற்றகவுடையநாதனேயுனையேநம்பினேன்கைவிடேலென்னையே. (க0)

* நட்டம் - நடனம். † உம்பல் - யானை.

படம்புரிபாம்பிற்கொடியனேன்கொடியபாவியிற்பாவியேனதீமைக்
கிடமபுரிமனதேனிரககமொன்றிலலேனென்னினுநதுணையெந்தவிதத்துந
திடம்புரிநினபொனனடித்துணையெனவேசிந்தனைசெய்திருக்கின்றேன
நடமபுரிகருணைநாயகாவுனையேநம்பினேன்கைவிடேலெனையே. (௧௧)

படித்தனனுலகப்படிப்பெலாமெய்ந்நூல்படிததவாதங்களைப்பார்தது
நொடிததனனகடிந்துநோககினேனகாமநோககினேன்பொய்யாதம்முறவு
பிடிததனனுலகிற்பேதையாமயஙகப்பெரியாிறபெரியாபோற்பேசி
நடிததனனெனினுநினனடிததுணையேநம்பினேன்கைவிடேலெனையே. (௧௨)

பஞ்சுநேருலகப்பாட்டிலேமெலிநதபாவியேன்சாவியேபோன
புனசெயேயனையேன்புழுத்தலைப்புலையேன்பொயயெலாமபூரித்தவஞ்ச
நெஞ்சினேன்பாபநெறியினேன்சினததினெடியனேன்கொடியனேனகாம
நஞ்சினேனெனினுமஞ்சினேனுனையேநமபினேன்கைவிடேலெனையே. (௧௩)

சயந்துளேவுவட்டுங்காஞ்சிரஙகாயிற்கடியனேன்காமமேகலநது
வியந்துளேமகிழுமவீணனேனகொடியவெகுளியேனவெய்யனேன்வெறியேன்
* மயநதுளேனுலகவாழ்க்கையைமனையைமககளையொககலைமதிததே
நயநதுளேனெனினும்பயநதுளேனுனையேநம்பினேனகைவிடேலெனையே. (௧௪)

ஓடினேன்பெரும்பேராசையாலுலகிலூாதொறுமுணடியேயுடையே
தேடினேனகாமசசேறறிலேவீழ்ந்துதியஙகினேனமயஙகினேனதிகைததது
வாடினேனசிறிய † வாரியானமகிழ்ந்தேன்வஞ்சமேபொருளெனமதிதது
நாடினேனெனினும்பாடினேனுனையேநம்பினேனகைவிடேலெனையே. (௧௫)

காட்டிலேதிரியும்விலஙகினிற்கடையேன்கைவழக்கததினுலொடிந்த
ஓட்டிலேயெனினுமாசைவிட்டறியேனுலுததனேனொருசிறுதுரும்பும்
ஏட்டிலேயெழுதிககணககிட்டகொடியேனெச்சலுமுமிழ்நதிடேனாக்
நாட்டிலேபெரியேனெனனினுமுனையேநம்பினேனகைவிடேலெனையே. (௧௬)

துனித்தவெம்மடவார்பகல்வந்தபோதுதுறவியிறககெடுததிருந்தேன்
தனித்திரவதிலேவந்தபோதோடிததழுவினேன்தடமுலைவிழைந்தே
னினிததசொல்புகன்றேனென்பினைககறிததேயிடாபபட்டநாயெனவிளைத்தேன்
நனிததவருடையேனென்னினுமுனையேநமபினேனகைவிடேலெனையே. (௧௭)

தார்ததடமுலையார்பலரொடுநான்சார்தலததிலேவந்தபோதவரைப்
பார்ததிலேன்வாாததைபகாநதிலேன்தவசுப்பாதகப்பூனைபோலிருந்தேன்
போததுநானறனிததபோதுபோய்வலிநதுபேசினேனவஞ்சரிற்பெரியேன்
நாாததிடருளத்தேனெனனினுமுனையேநம்பினேனகைவிடேலெனையே. (௧௮)

பெண்மையேவிழைநதேனவாமனமறியேன்பேயெனப்பிடித்தனன்மடவாாக்
குண்மையேபுகல்வானபோன்றவாதமைத்தொட்டுவந்தகங்களித்தபொய்யுளத்தேன்
தண்மையேயறியேனவெம்மையேயுடையேன்சாததிரம்புகன்றுவாய்தடிததேன்
நண்மையேயடையேனெனனினுமுனையேநம்பினேன்கைவிடேலெனையே. (௧௯)

* மயந்துளேன் - மயங்கினேன். † வாரி - வருவாய்.

வன்மையிற்பொருண்மேலிச்சையில்லவன்போல்வாதிபோல்வார்தமைகள்வழங்கி
யன்மையிற்பிறர்பாலுளவினாற்பொருளையடிக்கடிவாங்கியகொடியே
னின்மையுறவருக்குதவிலேன்பொருளையெனைவிடக்கொடியருக்கீந்தேன்
நன்மையுற்றறியேனென்னினுமுனையேநம்பினேனைக்கைவிடேலெனையே. (௨௦)

கட்டமேயறியேனடுத்தவரிடத்தேகாசிலேயாசையில்லவன்போற்
பட்டமேகாட்டிப்பணம்பறித்துழன்றேன்பகலெலாந்தவசிபோலிருந்தேன்
இட்டமேயிரவிலுண்டயல்புணர்ந்தேயிழுதையிற்றூங்கினேன்களித்து
நட்டமேபுரிந்தேனென்னினுமுனையேநம்பினேன்கைவிடேலெனையே. (௨௧)

காணியேகருதுங்கருத்தினைப்பிறர்க்குக்காட்டிடாதம்பெலாமடங்குந்
தூணியேயெனச்சார்ந்திருந்தனன்சோற்றுச்சுகத்தினாற்சோம்பினேனுதவா
வேணியேயனையேனிரப்பவர்க்குமியுமீந்திலேனீந்தவனெனவே
நாணிலேனுணர்தேனென்னினுமுனையேநம்பினேன்கைவிடேலெனையே. (௨௨)

அடுத்தவர்மயங்கிமதித்திடநினைத்தேனடிக்கடிபொய்களேபுனைந்தே
யெடுத்தெடுத்துரைத்தேனெனக்கெதிரிலையென்றிகழ்ந்தனனகங்கரித்திருந்தேன்
கொடுத்தவர்தமையேமிகவுபசரித்தேன்கொடாதவர்தமையிகழ்ந்துரைத்தேன்
நடுத்தயவறியேனென்னினுமுனையேநம்பினேனைக்கைவிடேலெனையே. (௨௩)

எளியவர்வளைத்தநிலமெலாங்கவருமெண்ணமேபெரிதுளேன்புன்செய்க்
களியுணுமனையிற்சர்க்கரைகலந்துகாய்ச்சுபால்கேட்டுண்டகடையேன்
றுளியவர்க்குதவேன்விருப்பிலார்போலச்சுவைபெறச்சுவைத்தநாக்குடையேன்
* நளிரெனச்சுழன்றேனென்னினுமுனையேநம்பினேன்கைவிடேலெனையே. (௨௪)

கொலைபலபுரிந்தேபுலைநுகர்ந்திருந்தேன்கோடுறுகுரங்கினிற்குதித்தே
யலைதருமனத்தேனறிவிலேனெல்லாமறிந்தவன்போற்பிறர்க்குரைத்தேன்
மலைவுறுசமயவலையகப்பட்டேமயங்கியமதியினேனல்லோர்
நிலையலவெனவேதிரிந்தனனெனினுநம்பினேன்கைவிடேலெனையே. (௨௫)

ஈயெனப்பறந்தேனெறும்பெனவுழன்றேனெட்டியேயெனமிகத்தழைத்தேன்
பேயெனச்சுழன்றேன்பித்தனேயெனவாய்ப்பிதற்றெருடுமோர்தொறும்பெயர்ந்தேன்
காயெனக்காய்த்தேன்கடையெனநடந்தேன்கல்லெனக்கிடந்தனன்குரைக்கும்
நாயெனத்திரிந்தேனென்னினுமுனையேநம்பினேன்கைவிடேலெனையே. (௨௬)

ஒன்றியேயுணவையுண்டுடல்பருத்தவூத்தையேனுத்தமபுறவே
வென்றியேயுரைத்துவினைகளேவிளைத்தவீணனேனூர்தொறுஞ்சுழன்ற
பன்றியேயனையேன்கட்டுவாரற்றபகடெனத்திரிகின்றபடிறேன்
நன்றியேயறியேனென்னினுமுனையேநம்பினேன்கைவிடேலெனையே. (௨௭)

கவையெலாந்தவிர்ந்தவெறுமரமனையேன்கள்ளனேன்கள்ளுண்டகடியேன்
சுவையெலாம்விரும்பிச்சுழன்றதோர்கடையேன்றுட்டனேன்றீதெலாந்துணிந்தேன்
இவையெலாமந்நாளுடையனேயலனேயிந்நாளிறைவநின்னருளால்
நவையெலாந்தவிர்ந்தேன்றூயனுய்ந்நினையேநம்பினேனைக்கைவிடேலெனையே. (௨௮)

திருச்சிற்றம்பலம்.

* நளிர் - ஞெண்டு.

# பிரிவாற்றாமை.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

### திருச்சிற்றம்பலம்.

போகமாட்டேன்பிறரிடத்தேபொய்யிற்கிடநதுபுலாநதுமனம்
வேகமாட்டேன்பிறிதொனறும்விரும்பமாட்டேனபொயயுலக
ஞகமாட்டேனரசேயென்னப்பாவெனறனையாநான்
சாகமாட்டேனுனைப்பிரிநதாறறரிககமாட்டேன்கண்டாயே. (க)

செல்லமாட்டேன்பிறரிடத்தேசிறிதுநதரியேன்றீமொழிகள்
சொலலமாட்டேனினிககணமுநதுயரமாட்டேனசோமபன்மிடி
புல்லமாட்டேனபொய்யொழுக்கமபொருந்தமாட்டேன்பிறவுயிரைக
கொலலமாட்டேனுனையல்லால்குறிககமாட்டேனகனவிலுமே. (உ)

வெறுககமாட்டேனின்றனையேவிரும்பிப்பிடிததேனறுயர்சிறிதும
பொறுககமாட்டேனுலகவாபோறபொயயிற்கிடநதுபுரணடினிநான
சிறுககமாடடேனரசேநின்றிருததாளாணைநினனாணை
மறுக்கமாட்டேன்வழஙகுவனவெல்லாமவழஙகிவாழியவே. (ங)

கருணைப்பெருககேயானநதக்கனியேயெனனுட்கலநதொளிருந்
தருணசசுடரேயெனையீன்றதாயேயெனனைததநதோனே
வருணப்படிகமணிமலையேமனறினடஞ்செய்வாழ்வேநற்
பொருணமெய்ப்பதியேயினிததுயரம்பொறுக்கமாட்டேனகண்டாயே. (ச)

திண்ணம்பழுத்தசிந்தையிலேதிததிததுலவாச்சுயஞ்சோதி
வண்ணம்பழுததததனிப்பழமேமனறிலவிளஙகுமணிச்சுடரே
தண்ணம்பழுததமதியமுதேதருவாயிதுவேதருணமென்றன்
எணணம்பழுததததினிச்சிறியேனிறையுநதரியேன்றரியேனே. (ரு)

நாட்டுக்கிசைநதமணிமன்றில்ஞானவடிவாய்நடஞ்செயரு
ளாட்டுககிசைந்தபெருங்கருணையப்பாவென்றனரசேயென
பாட்டுககிசைந்தபதியேயோபரமானநதப்பழமேமேல்
வீட்டுககிசைந்தவிளக்கேயென்விவேகம்விளஙகவிளக்குகவே. (சா)

வேதந்தலைமேற்கொளவிரும்பிவேண்டிப்பரவுநினதுமலர்ப்
பாதநதலைமேற்சூட்டியெனைப்பணிசெயதிடவும்பணிததனைநான்
சாதந்தலைமேலெடுததொருவர்தமபினசெலவுநதரமிலலே
னேதநதலைமேறசுமநதேனுககிசசீரகொடுததலெவ்வாறே: (எ)

பொயவிட்டகலாப்புலைக்கொடியேனபொருட்டாவிரவிற்போந்தொருநின்
கைவிட்டகலாபபெரும்பொருளெனகையிற்கொடுததேகளிப்பிததாய
மைவிட்டகலாவிழியின்பவல்லிமகிழுமணவாளா
மெய்விட்டகலாமனத்தவாககுவியப்பமுனறுமெய்யருளே. (அ)

சாமத்திரவிலெழுந்தருளித்தமியேன்றாக்கந்தடுத்துமயற்
காமக்கடலைக்கடத்தியருட்கருணையமுதங்களித்தளித்தாய்
நாமத்தடிகொண்டடியெயாக்குநடையாரமக்குநடையானே
னேமத்தருட்பேறடைந்தேனென்னதவஞ்செய்திருந்தேனே (௯)

பாதியிரவிலெழுந்தருளிப்பாவியேனையெழுப்பியருட்
சோதியளித்தென்னுள்ளகத்தேசூழ்ந்துகலந்துதுலங்குகின்றாய்
நீதிநடஞ்செய்பேரின்பநிதிநான்பெற்றநெடும்பேற்றை
யோதிமுடியாதெனபோலிவ்வுலகம்பெறுதல்வேண்டுவனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

# பிரியேனென்றல்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அப்பாநான்பற்பலகாலறைவதென்னேயடியே னச்சமெலாந்துன்பமெலாமறுத்துவிரைந்துவந்தே, யிப்பாரிலிதுதருணமெனையடைந்தருளியெண்ணமெலாமுடித்தென்னையேன்றுகொள்ளாவெனிலோ, தப்பாமலுயிர்விடுவேனசத்தியஞ்சத்தியநின்றாளிணைகளறிகவிதுதயவுடையோயெவர்க்கும், துப்பாகித்துணையாகித்துலங்கியமெய்த்துணையேசுத்தசிவானந்தவருட்சோதிநடத்தரசே. (௧)

ஆணையுனமேலாணையுனமேலாணையுன்மேலையா அரைக்கணமுநினைப்பிரிந்தேயினித்தரிக்கமாட்டேன், கோணைநிலத்தவர்பேசக்கேட்டதுபோலினனுங்குறும்புமொழிசெவிகளுறக்கொண்டிடவுமாட்டேன், ஊணையுறக்கத்தையுநான்விடுகின்றேனீதானுவந்துவராயெனிலென்றனுயிரையும்விட்டிடுவேன், மாணைமணிப்பொதுநடஞ்செய்வள்ளால்நீயெனது மனமறிவாயினமுனக்குவகுத்துரைப்பதென்னே. (௨)

படமுடியாதினித்துயரம்படமுடியாதரசே பட்டதெல்லாமபோதுமிந்தப்பயந்தீரத்திப்பொழுதென், னுடலுயிராதியவெல்லாமநீயெடுத்துக்கொண்டுனனுடலுயிராதியவெல்லாமுவந்தெனக்கேயளிப்பாய், வடலுறுசிற்றம்பலத்தேவாழ்வாயென்கண்ணுண்மணியேயென்குருமணியேமாணிக்கமணியே, நடனசிகாமணியேயென்னவமணியேஞானநன்மணியேபொன்மணியேநடராஜமணியே. (௩)

வாழையடிவாழையெனவந்ததிருக்கூட்ட மரபினிலயானொருவனன்றோவகையறியேனிந்த,வேழைபடும்பாடுனக்குந்திருவுளச்சம்மதமோவிதுதகுமோவிதுமுறையோவிதுதருமந்தானோ, மாழைமணிப்பொதுநடஞ்செய்வள்ளால்யானுனக்குமகனலனோநீயெனக்குவாய்த்ததந்தையலையோ, கோழையுலகுயிர்த்துயரமினிப்பொறுக்கமாட்டேன் கொடுத்தருணின்னருளொளியைக்கொடுத்தருளிப்பொழுதே. (௪)

செயவகையென்னென்னத்திகைத்தேன்றிகையேலென்றொருநாள்திருமேனிகாட்டியெனைத்தெளிவித்தாயநீயே, பொய்வகையன்றிதுநினதுபுந்தியறிந்ததுவேபொன்

னடியே துணையென நானென்னுயிரை வைத்திருந்தேன், எவ்வகையென்னம்பெருமா னருள்புரிவானென்றே யெந்தைவரவெதிர்பார்த்தே யின்னுமிருக்கின்றேன், ஐவகையி வ்வுயிர்த்துயரமினிப்பொறுக்கமாட்டே னருட்சோதிப்பெரும்பொருளையளித்தருளிப் பொழுதே. (௫)

முன்னொருநாண்மயங்கினனீ மயங்கேலென்றெனக்கு முன்னின்றுருக்காட்டினை நான்முகமலர்ந்திங்கிருந்தே, னின்னுமவரக்காணே னினவரவையெதிர்பார்த்தேயெண் ணியெண்ணிவருந்துகின்றேனென்னசெய்வேனந்தோ, அன்னையினுந்தயவுடையாய் நின்றயவைநினைத்தேயாருயிரைத்திருக்கின்றேனுணையிதுகண்டா, யென்னிருகண் மணியேயென்னறிவேயென்னன்பேயென்னுயிர்க்குப்பெருந்துணையேயென்னுயிர்நா யகனே. (௬)

உன்னைமறந்திடுவேனோமறப்பறியேன்மறந்தா லுயிர்விடுவேன்கணந்தரியேனு ன்னுணையிதுநீ, யென்னைமறந்திடுவாயோமறந்திடுவாயெனில்யானென்னசெய்வே னெங்குறுவேனெவர்க்குரைப்பேனெந்தா, யன்னையினுந்தயவுடையாய்நீமறந்தாயெ னினு மகிலமெலாமளித்திடுநின்னருள்மறவாதெனறே,யினனுமிகக்களித்திங்கேயிரு க்கின்றேன்மறவேல் விதுதருணமருட்சோதியெனக்குவிரைந்தருளே. (௭)

நான்மறந்தேனெனினுமெனைத்தானமறவானெனது நாயகனென்றுடுகின்றே னெனினுமிதுவரையும், வானமறந்தேன்வானவரைமறந்தேன்மாலயனைமறந்தேனம் முருத்திரரைமறந்தேனெனனுடைய, வூனமறந்தேனுயிர்மறந்தேனுணர்ச்சியெலாம றந்தேனுலகமெலாமறந்தேனிங்குனைமறந்தறியேன், பான்மறந்தகுழவியைப்போ ல்பாரேலிங்கெனையே பரிந்துநினதருட்சோதிபுரிந்துமகிழ்ந்தருளே. (௮)

தெருவிடத்தேவிளையாடித்திரிந்தவெனைவலிந்தே சிவமாலையணிந்தனையச்சிறு வயதிலிந்த, வுருவிடத்தேநினக்கிருந்தவாசையெலாமிந்நா ளோடியதோபுதியவொரு வுருவுவிழைந்ததுவோ, கருவிடத்தேயெனைக்காத்தகாவலனேயுனதுசால்பிடித்தேன விடுவேனோகைப்பிடியன்றதுதான, வெருவிடத்தென்னுயிர்ப்பிடிகாணுயிரகன்றால ன்றிவிடமாட்டேனவிடமாட்டேனவிடமாட்டேனனே. (௯)

பெரியனருட்பெருஞ்சோதிப்பெருங்கருணைப்பெருமானபெருமபுகழைப்பேசுத லேபெரும்பேறெனறுணர்ந்தே, துரியநிலத்தவரெல்லாந்துதிக்கின்றாரேழைதுதித்தல் பெரிதலவிங்கேதுதித்திடவென்றெழுந்த, வரியபெருமபேராசைக்கடல்பெரிதேய துவெனனளவுகடந்திழுக்கின்றதாதலினால்விரைந்தே, யுரியவருளமுதளித்தேநினைத் துதிப்பித்தருள்வாயுலகமெலாங்களித்தோங்கவோங்குநடத்தரசே. (௧௰)

கவலையெலாந்தவிர்ந்துமிக்ககளிப்பினொடுநினையே கைகுவித்துக்கண்களிநீர்க ணிர்துசூந்திடவே, சவலைமனச்சலனமெலாந்தீர்ந்துசுகமயமாயத் தானேதானாகியின் பத்தனிநடஞ்செயயிணைத்தாள, தவலருஞ்சீர்ச்சொன்மாலைவனைந்துவனைந்தணிந்து தானுகிநானுடத்தருணமிதுதானே,குவலயத்தாரதிசயிக்கவெழுந்தருளிவருவாய்குரு வேயென்குற்றமெலாங்குணமாககொண்டவனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பேறு.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

படிகளெலாமேற்றுவித்தீர்பரமநடம்புரியும் பதியையடைவித்தீர்ப்பதிநடுவேவிளங்கும், கொடிகணிறைமணிமாடக்கோயிலையுங்காட்டிக் கொடுத்தீர்க்கோயிலிலே கோபுரவாயிலிலே, செடிகளிலாத்திருக்கதவந்திறப்பித்துக்காட்டித்திரும்பவுநீர்மூடுவித்தீர்திறந்திடுதல்வேண்டும், அடிகளிதுதருணமினியரைக்கணமுந்தரியேனம்பலத்தே நடம்புரிவீரளித்தருள்வீர்விரைந்தே. (௧)

பெட்டியிலுலவாதபெரும்பொருளுண்டிதுநீ பெறுகவெனவதுதிறக்கும்பெருந்திறவுக்கோலு, மெட்டிரண்டுந்தெரியாதேனென்கையிலேகொடுத்தீரிதுதருணந்திறந்ததனையெடுக்கமுயல்கின்றேன், அட்டிசெயநினையாதீரரைக்கணமுந்தரியேனரைக்கணத்துக்காயிரமாயிரங்கோடியாக,வட்டியிட்டுநும்மிடத்தேவாங்குவனும்மாணைமணிமன்றில்நடம்புரிவீர்வந்தருள்வீர்விரைந்தே. (௨)

கைக்கிசைந்தபொருளெனக்குவாய்க்கிசைந்துண்பதற்கேகாலமென்னகணக்கென்னகருதுமிடமென்ன, மெய்க்கிசைந்தனுறுரைத்ததுநீர்சத்தியஞ்சத்தியமே விடுவேனோவின்றடியேனவிழற்கிறைத்தேனலவே, செய்க்கிசைந்தசிவபோகம்விளைத்துணவேயிறைத்தேன் றினந்தோறுங்காத்திருந்தேனறிவுளமேயறியும், மைக்கிசைந்தவிழியம்மைசிவகாமவல்லி மகிழநடம்புரிகின்றீர்வந்தருள்வீர்விரைந்தே. (௩)

பரிகலத்தேதிருவமுதம்படைத்துணவேபணித்தீர்பணித்தபின்னேயென்னுடையபக்குவம்பார்க்கின்றீர், இருநிலத்தேபசித்தவர்க்குப்பசிநீக்கவல்லாரிவர்பெரியரிவர்சிறியரென்னலவழக்கலவே, யுரிமையுறறேனுமக்கேயென்னுள்ளமன்றேயறிந்தீருட்பொருளாவிகளையெலாமும்மவெனக்கொண்டீர், திரிவகத்தேநானவருந்தப்பார்த்திருத்தலழகோ சிவகாமவல்லிமகிழ்திருநடநாயகரே. (௪)

பொய்கொடுத்தமனமாயைச்சேற்றில்விழாதெனக்கேபொன்மணிமேடையிலேறிப்புந்திமகிழ்ந்திருக்க, கைகொடுத்தீருலகமெலாங்களிக்கவுலவாத காலிரண்டுங்கொடுத்தீரெக்காலுமழியாத, மெய்கொடுக்கவேண்டுமுமைவிடமாட்டேன்கண்டீர்மேலேறினேனினிக்கீழ்விழைந்திறங்கேனென்றும், மைகொடுத்தவிழியம்மைசிவகாமவல்லி மகிழநடம்புரிகின்றீர்வந்தருள்வீர்விரைந்தே. (௫)

மின்போலேவயங்குகின்றவிரிசடையீரடியேன்விளங்குமுமதிணையடிகண்மெய்யுறப்பிடித்தேன், முன்போலேயேமாந்துவிடமாட்டேன்கண்டீர் மூனிவறியீரினியொளிக்கமுடியாதுநுமக்கே, யென்போலேயிரக்கம்விட்டுப்பிடித்தவர்களிலையேயெனபிடிக்குளிசைந்ததுபோலிசைந்ததிலைபிறர்க்கே, பொன்போலேமுயல்கின்றமெய்த்தவர்க்குமரிதேபொய்த்தவனேன்செய்த்தவமவ்வானவையகத்திற்பெரிதே. (௬)

எதுதருணமதுதெரியேனென்னினுமெம்மானே யெல்லாஞ்செய்வல்லவனேயெ
னறனிநாயகனே, இதுதருணநதவறுமெனிலெனனுயிாபோய்விடுமிவ் வெளியேன்
மேற்கருணைபுரிந தெழுநதருளலவேணடும, மதுதருணவாரிசமுமலாநததருளுநயம்
வாயததுசிறசபைவிளககம்வயங்குகினறதுலகில், விதுதருணவமுதளிதததென்னெ
ண்ணமெலாமுடிககுமவேலையிதுகாலையெனவிளம்பவும்வேணடுவதோ. (௭)

கோளறிந்தபெருந்தவாதங்குறிப்பறிநதேயுதவுங் கொடையாளாசிவகாமக்கொடி
கலிசைநதகொழுநா, ஆளறிநதிங்கெனையாண்டவரசேயென்னமுதேயமபலத்தேநடம்
புரியுமருமபெருஞசோதியனே, தாளறிந்தேனின்வரவுசததியஞ்சததியமேசநதேகமில்
லையநததனிததிருவரவின், நாளறிநதுகொளலவேணடுநவிலுகநீயெனதுநனவிடை
யாயினுமன்றிக்கனவிடையாயினுமே. (௮)

அனறெனககுரீயுளாததருணமிதுவெனவேவறிந் திருககினறேனடியேனுயினு
மென்மனநதான, கனறெனசசென்றடிக்கடியுட்கலங்குகினறதாசேகணனுடையக
ரும்பேயெனகவலைமனக்கலககம, பொனறிடப்பேரின்பவெள்ளம்பொஙகிடவிவவுல
கிறபுண்ணியாகளுளங்களிபபப்பொருநதிவிளங்கிடநீ, இனறெனககுவெளிபபடவெ
னனிதயமலாமிசைநினறெழுநதருளியருள்வதெலாமினிதருள்கவிரைநதே. (௯)

இதுசருணநமையாளற்கெழுநதருளுநதருணமினிததடையொனறிலைகண்டாயெ
ன்மனனேநீதான,மதுவிழுமோரீப்போலேமயஙகாதேகயங்கிவாடாதேமலங்காதேமல
ாநதுமகிழ்நதிருப்பாய, குதுகலமேயிதுதொடஙகிககுறைவிலைகாணமதுகுருவாணைந
மதுபெருஙகுலதெய்வததாணை, பொதுவில்நடம்புரிகின்றபுணணியனுமொனக்குட்பு
ணாநதுரைதததிருவாாததைபொன்வாாததையிதுவே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

# சிவானந்தத்தழுந்தல்.

## எண்சீரடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

காரணகாரியககல்விகளெல்லாங்கற்பிததெனனுளளேகலநதுகொண்டென்னை
நாரணாநான்முகாபோற்றமேலேற்றிநாதாநதநாட்டுகோநாயகனுககி
பூரணமாமினபமபொஙகிநததுமபப்புததமுதாமருட்போனகநதநதே
யாரணவீதியிலாடச்செய்தீரேயருட்பெருஞ்சோதியென்னுண்டவாநீரே. (௧)

தேகமெப்போதுஞசிதையாதவணணஞ்செய்வித்தெலாம்வல்லசிததியுந்தந்தே
போகமெல்லாமென்றனபோகமதாககிப்போதாநதநாட்டைப்புரககமேலேற்றி
யேகசிவானநதவாழ்கக்கையிலெனறுமினபுற்றுவாழுமியல்பளிததென்னை
யாகமவீதியிலாடசசெயதீரேயருட்பெருஞ்சோதியென்னுணடவாநீரே. (௨)

தானநதமில்லாததனமையைககாட்டுஞ்சாகாதகல்வியைத்தந்தெனக்குள்ளே
தேனந்ததெள்ளமுதூற்றிப்பெருக்கிததிததிததுச்சித்தஞ்சிவமயமாக்கி
வானநதமாதியுங்கணடுகொண்டழியாவாழ்க்கையிலின்புற்றுச்சுத்தவேதாந்த
ஆனந்தவீதியிலாடச்செய்தீரேயருட்பெருஞ்சோதியென்னுண்டவாநீரே. (௩)

சிற்சபையினபததிருநடங்காட்டிததெள்ளமுதூட்டியெனசிந்தையைத்தேற்றிப்
பொற்சபைதனிற்பொருததியெல்லாஞ்செயபூரணசித்திமெயப்போகமுநதநதே
தற்பரமாமோாசதானந்தநாட்டில்சததியனுககியோர்சுததசிததாந்த
அற்புதவீதியிலாடச்செயதீரேயருட்பெருஞ்சோதியென்னுண்டவர்நீரே. (௪)

தததுவமெல்லாமென்றனவசமாக்கிசசாகாவரததையுநதந்தெனைததேற்றி
யொததுவநதுள்ளேகலநதுகொண்டெல்லாவுலகமும்போற்றவுயாநிலையேற்றிச்
சிததியெலாஞ்செயச்செயவிததுச்சததுஞ்சிததுமவெளிபபடசசுததநாதாந்த
அததிருவீதியிலாடச்செயதீரேயருட்பெருஞ்சோதியென்னுண்டவாநீரே. (௫)

இத்தனையென்றுநினைதெண்ணிடலொண்ணுவென்பிழையாவையுமன்பினிற்கொணடே
சத்தியமாஞ்சிவசித்தியையெனபாற்றநதெனையாவரும்வநதனைசெயவே
நிததியனாககிமெய்ச்சுததசனமாாக்கநீதியையோதியோாசுததபோதாந்த
அததணிவீதியிலாடசசெய்தீரேயருட்பெருஞசோதியெனனுண்டவாநீரே. (௬)

மருநதிதுமணியிதுமநதிரமிதுசெயவகையிதுதுறையிதுவழியிதுவெனவே
யிருநதெனுளறிவிததுததெள்ளமுதளிததேயெனனையுநதனனையுமேகமதாககிப்
பொருநதியெலாஞ்செயவலலவோாசிததிப்புணணியவாழ்க்கையில்நண்ணியோகாந்த
வருநதவவீதியிலாடச்செயதீரேயருட்பெருஞசோதியென்னுண்டவர்நீரே. (௭)

பதிசாரவைததுமுற்பசுநிலைகாட்டிப்பாசவிமோசனப்பகுவனாககி
நிதிசாரநாளிநதநீளுலகததேநினைததனநினைததனநேருறபபுரிந்து
திதிசேரமன்னுயிாககின்பஞ்செய்கின்றசிததியெலாநதநதுசுததகலாந்த
வதிகாரவீதியிலாடசசெய்தீரேயருட்பெருஞ்சோதியென்னுணடவர்நீரே. (௮)

இருளானமலமறுததிகபரஙகணடேயெல்லாவுயிாகளுமினபுற்றுவாழ
மருளானபற்பலமாாககஙகளெல்லாம்வழிதுறைதெரியாமல்மண்மூடிபபோகத
தெருளானசுததசன்மாாக்கமதொன்றேசிறந்துவிளஙகவோாசிற்சபைகாட்டும
அருளானவீதியிலாடசசெய்தீரேயருட்பெருஞசோதியெனனுண்டவாநீரே. (௯)

இருட்சாதிததத்துவச்சாததிரககுப்பையிருவாயப்புபபுனசெயிலெருவாககிபபோட்டு
மருட்சாதிசமயஙகள்மதஙகளாச்சிரமவழகலெலாங்குழிககொட்டிமண்மூடிபபோட்டுத
தெருட்சாருஞ்சுததசனமாாக்கநனனீதிசிறநதுவிளஙகவோாசிறசபைகாட்டும
அருட்சோதிவீதியிலாடசசெயதீரேயருட்பெருஞ்சோதியெனனுண்டவர்நீரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

# திருமுன்விண்ணப்பம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாழைமாமணிப்பொதுநடம்புரிகின்றவள்ளலேயழிகின்ற
வாழைவான்பழச்சுவையெனபபததாதம்மனததுளேதித்திப்பே
யேழைநாயினேனவிண்ணப்பந்திருச்செவிககேற்றருள்செயல்வேண்டுங்
கோழைமானிடபபிறப்பிதிலுன்னருட்குருவுருக்கொளுமாறே. (௧)

பொன்னின்மாமணிப்பொதுநடம்புரிகின்றபுண்ணியா கனிந்தோங்கி
மன்னுவாழையின்பழச்சுவையெனப்பத்தாமனத்துளேதித்திப்போய்
சின்னநாயினேன்விண்ணப்பந்திருச்செவிசேர்த்தருள்செயல்வேண்டும்
இன்னவென்னுடைத்தேகநல்லொளிபெறுமியலுருக்கொளுமாறே. (௨)

விஞ்சுபொன்னணியம்பலத்தருணடம்விளைத்துயிர்க்குயிராகி
எஞ்சுறாதபேரின்பருள்கின்றவென்னிறைவநின்னருளின்றி
அஞ்சுநாயினேன்விண்ணப்பந்திருச்செவியமைத்தருள்செயல்வேண்டுந்
துஞ்சுமிவ்வுடலிம்மையேதுஞ்சிடாச்சுகவுடல்கொளுமாறே. (௩)

ஓங்குபொன்னணியம்பலத்தருணடமுயிர்களெலாமொளிவண்ணப்
பாங்குமேவநின்றாடல்செய்யிறைவநின்பதமலர்பணிந்தேத்தாத
தீங்குநாயினேன்விண்ணப்பந்திருச்செவிசேர்த்தருள்செயல்வேண்டும்
ஈங்குவீழுடலிம்மையேவீழ்ந்திடாவியலுடலுறுமாறே. (௪)

இலங்குபொன்னணிப்பொதுநடம்புரிகின்றவிறைவவிவ்வுலகெல்லாந்
துலங்கும்வண்ணநின்றருளுநின்றிருவடித்துணைதுணையென்றுமற்
கலங்குநாயினேன்விண்ணப்பந்திருச்செவிகலந்தருள்செயல்வேண்டும்
அலங்குமிவ்வுடலிம்மையேயழிவுறாவருளுடலுறுமாறே. (௫)

சிறந்தபொன்னணித்திருச்சிற்றம்பலத்திலேதிருநடம்புரிகின்ற
அறந்தவாதசேவடிமலர்முடிமிசையணிந்தகமகிழ்ந்தேத்த
மறந்தநாயினேன்விண்ணப்பந்திருச்செவிமடுத்தருள்செயல்வேண்டும்
பிறந்தவிவ்வுடலிம்மையேயழிவுறாப்பெருநலம்பெறுமாறே. (௬)

விளங்குபொன்னணிப்பொதுநடம்புரிகின்றவிமலநின்றிருத்தாளை
உளங்கொளன்பாதம்முளங்கொளுமிறைவநின்னொப்பிலாப்பெருந்தண்மை
களங்கொள்நாயினேன்விண்ணப்பந்திருச்செவிகலந்தருள்செயல்வேண்டுந்
துளங்குமிவ்வுடலிம்மையேயழிவுறாத்தொல்லுடலுறுமாறே (௭)

வாய்ந்தபொன்னணிப்பொதுநடம்புரிகின்றவள்ளலேமறையெல்லா
மாய்ந்துமின்னவென்றறிந்திலாநின்றிருவடிமலர்பணியாமற்
சாய்ந்தநாயினேன்விண்ணப்பந்திருச்செவிதரித்தருள்செயல்வேண்டு
மேய்ந்தவிவ்வுடலிம்மையேதிருவருளியலுடலுறுமாறே. (௮)

மாற்றிலாதபொன்னம்பலத்தருணடம்வயங்கநின்றருளிகின்ற
பேற்றிலாருயிர்க்கின்பருளிறைவநின்பெய்கழற்கணிமாலை
சாற்றிடாதவென்விண்ணப்பந்திருச்செவிதரித்தருள்செயல்வேண்டுங்
காற்றிலாகியவிவ்வுடலிம்மையேகதியுடலுறுமாறே. (௯)

தீட்டுபொன்னணியம்பலத்தருணடஞ்செய்துயிர்த்திரட்கின்பங்
காட்டுகின்றதோர்கருணையங்கடவுணின்கழலிணைகருதாதே
நீட்டுகின்றவென்விண்ணப்பந்திருச்செவிநேர்ந்தருள்செயல்வேண்டும்
வாட்டுமிவ்வுடலிம்மையேயழிவுறாவளமடைந்திடுமாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# வாதனைக்கிரங்கல்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

படமாட்டேன் றுயர்சிறிதும்படமாட்டேனினிநான் பயப்படவுமாட்டேனும்பதத்துணையேபிடித்தேன, விடமாட்டேனேமாநதுவிடமாட்டேன்கண்டீா மெய்ம்மையிதுநும்மாணைவிளம்பினனும்மடியேன, கெடமாட்டேன்பிறமொழிகள்கேட்டிடவுமாட்டேன் கிளரொளியம்பலத்தாடல்வளரொளிநுமமல்லால், நடமாட்டேனென்னுளததேநான்சாகமாட்டே னல்லதிருவருளாலேநான்ருனேனே. (௧)

சாகாதகல்வியிலேதலைகாட்டிககொடுததீா தடையறியாககால்காட்டித்தரம்பெறவுமளிததீா, மாகாதலுடையவனுமனஙகனிவிததழியாவானமுதுமமெயஞ்ஞானமருந்துமுணப்புரிநதீா, போகாதபுனலாலேசுததவுடமபினராம் புணணியருமநணணரியபொதுநிலையுநதந்தீா, நாகாதிபதிகளுநினறேததவளர்ககினறீா நடராசரேநுமககுநானெதுசெயவேனே. (௨)

வேதாநதநிலையுமதனந்ததேவிளங்குமெய்ந்நிலையுங்காட்டுவிததீா விளங்கியசித்தாந்தப, போதாந்தநிலையுமப்பாற்புகலரிதாம்பெரியபொருணிலையுநதெரிவிததீாபுண்ணியரேநுமது, பாதாநதமறிவிததீாசுத்தவடிவுடனேபகாபிரணவாகாரப்பரிசுமெனககளிததீா, நாதாந்தத்தனிச்செங்கோலநானசெலுததககொடுததீா நடராசரேநுமககுநானெதுசெய்வேனே. (௩)

ஆரீயென்றெதிாவினவில்விடைகொடுககதெரியாவறிவிலியேன்பொருட்டாகவன்றுவநதென்றனககே, ஏரீடுமெபெரும்பொருளொன்றீநதுமகிழ்ந்தாண்டீரின்றும்வலிநதெளியேனபாலெய்தியொளியோஙகப், பார்நீடததிருவருளாமபெருஞ்சோதியளிததிர்பகருமெலாம்வல்லசித்திப்பணபுறவுஞசெய்தீா, நார்நீடநான்ருனயநடம்புரிகினறீரேநடராசரேநுமககுநானெதுசெயவேனே. (௪)

பாயிரமாமறைகளெலாம்பாடுகின்றபாட்டுன்பாட்டேயென்றறிந்துகொண்டேன்பரம்பொருளுன பெருமை, ஆயிரமாயிரங்கோடிநாவுடையோரொனினுமணுததுணையும்புகலரிதேலநதோவிச்சிறியேன, வாயிரங்காவகைபுகலததுணிந்தேனென்னுடையமனத்தாசையொருகடலோவெழுகடலிற்பெரிதே, சேயிரங்காமுனமெடுததேயணைத்திடுந்தாயனையாய திருச்சிறறம்பலம்விளஙகுஞ்சிவஞானகுருவே. (௫)

ஊனுளாககுமுயிரளவுமுலகளவுமறியேனுன்னளவையறிவேனோவென்னளவையறிந்தோய், வானுளாககமாட்டாதேவருந்தினவேமறையும்வகுத்துளாககவறியாதேமயங்கினவேயந்தோ, கோனுளாககுங்குறிகுணங்கள்கடந்தபெருவெளிமேல்கூடாதேகூடிநின்றகோவேநின்னியலை, நானுளாககநானுரோநானுரோநவில்வேன்நானெனவேநாணுகின்றேனடராசகுருவே. (௬)

கண்ணுடையீர்பெருங்கருணைக்கடலுடையீரெனது கணக்கறிந்தீர்வழக்கறிந்தீர் களித்துவந்தன்றுரைத்தீர், எண்ணுடையாரெழுத்துடையாரெல்லாரும்போற்றவென்னிதயமலர்மிசைநின்றெழுந்தருளிவாமப், பெண்ணுடையமணங்களிக்கப்பேருலகங்களிக்கப்பெத்தருமுத்தருமகிழ்ப்பபத்தரெலாம்பரவ, விண்ணுடையவருட்சோதிவிளையாடல்புரியவேண்டுமென்றேனென்பதன்முன்விரைந்திசைந்தீரதற்கே. (௭)

பொதுநடஞ்செய்மலரடியென்றலைமேலமைத்தீர்புத்தமுதமளித்தீரென்புன்மையெலாம்பொறுத்தீர், சதுமறையாகமங்களெலாஞ்சாற்றரியபெரியதனித்தலைமைத்தந்தையரேசாகாதவரமும், மெதுநினைத்தேனினைத்தாங்கேயதுபுரியுந்திறமுமின்பவனுபவநிலையுமெனக்கருளுவதற்கே, இத்தருணமென்றேனென்பதன்முன்கொடுத்தீரெனபுகல்வேனென்புடைநும்மன்பிருந்தவாறே. (௮)

கரும்பின்மிகவினிக்கின்றகருணையமுதளித்தீர்கண்ணனையீர்கனகசபைக்கருதியசிற்சபைமுன், றுரும்பின்மிகச்சிறியேனான்றுநின்றுநயந்தேன்றுயரெல்லாந்தொலையிட்டாதுறையேயவ்வெல்லை, விரும்புறவாயறிந்துதானருணமிந்தத்தருணமவிழைந்தருளவேண்டுமென விளம்பினேனடியேன், பெரும்பிழைகளனைத்தினையும் பொறுத்தருளியிந்நாள்பெரிதளித்தீரருட்பெருமைபெற்றவளிற்பெரிதே. (௯)

அந்நாளிலடிச்சிறியேனம்பலவாயிலிலேயருளைநினைந்தொருபுறத்தேயயர்ந்தழுது நின்றேன், முந்நாளில்யான்புரிந்தபெருந்தவத்தாலெனக்குமுகமலர்ந்துமொழிந்தவருண்மொழியைநினைந்தந்த, செந்நாளையெதிர்பார்த்தேபணுஞருங்களித்தேன்சிந்தைமலர்ந்திருந்தேனச்செல்வமிகுதிருநாள், இந்நாளேயாதலினாலெனக்கருள்வீரென்றேனென்பதன்முன்னளித்தீர்நும்மன்புலகிற்பெரிதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# முறையீடு.

## எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உருவாயருவாயொளியாய்வெளியாயுலவாவொருபேரருளாரமுதந்
தருவாயிதுவேதருணந்தருணந்தரியேன்சிறிதுந்தரியேனினிநீ
வருவாயலையேலுயிர்வாழ்கலன்னின்மதிசேர்முடிமேற்பதியேயடியேன்
குருவாய்முனமேமனமேயிடமாக்குடிகொண்டவனேயபயமபயம். (௧)

என்னேசெயவேணசெய்வகையொன்றறிகி[illegible]ருள்வாயிதுவேதருணம்
மன்னேயயனுந்திருமாலவனுமதித்தற்கரியபெரியபொருளே
அன்னேயப்பாவையாவரசேயன்பேயறிவேயமுதேயழியாப்
பொன்னேமணியேபொருளேயருளேபொதுவாழ்புனிதாவபயமபயம். (௨)

கருணாநிதியேயபயமபயங்கனகாகரனேயபயமபயம்
அருணாடகனேயபயமபயமழகாவமலாவபயமபயம்
தருணாதவனேயபயமபயந்தனிநாயகனேயபயமபயம்
தெருணாடுறவாவபயமபயந்திருவம்பலவாவபயமபயம். (௩)

மருளுந்துயருநதவிரும்படியென்மனமன்றிடைநீவருவாயபயம்
இருளுமபவமுமபெறுவஞ்சகநெஞ்சினனென்றிகழேலபயமபயம்
வெருளுஙகொடுவெம்புலையுங்கொலையும்விடுமாறருள்வாயபயமபயம்
அருளும்பொருளுந்தெருளுந்தருவாயபயமபயமபயமபயம். (ச)

இனியோரிறையுந்தரியேனபயமிதுநின்னருளேயறியுமபயங்
கனியேயெனநீநினையேலபயங்கனியேகருணைககடலேயபயந்
தனியேன்றுணைவேறறியேனபயந்தகுமோதகுமோதலைவாவபயந
துனியேயறவந்தருள்வாயபயஞ்சுகநாடகனேயபயமபயம. (ரு)

அடியாரிதயாம்புயனேயபயமரசேயமுதேயபயமபயம்
முடியாஇனிநான்றரியேனபயம்முறையோமுறையோமுதல்வாவபயம்
கடியேனலஞனபயமபயங்கருணாகரனேயபயமபயந்
தடியேலருளவாயபயமபயந்தருணாதவனேயபயமபயம் (சா)

மலவாதனைதீர்கலவாவபயம்வலவாதிருவம்பலவாவபய
முலவாநெறிநீசொலவாவபயமுறைவாயுயிராவாயிறைவாயபயம்
பலவாகுலநான்றரியேனபயம்பலவாபகவாபனவாவபயம்
நலவாவடியேனலவாவபயம்நடநாயகனேவபயமபயம். (எ)

கொடியேன்பிழைநீகுறியேலபயஙகொலைதீர்நெறியென்குருவேயபயம்
முடியேன்பிறவேனெனநின்னடியேமுயல்வேன்செயல்வேறறியேனபயம்
படியேயறியும்படியேவருவாய்பதியேகதியேபரமேயபயம்
அடியேனினியோரிறையுநதரியேனரசேயருள்வாயபயமபயம் (அ)

இடாதீர்நெறியேயருள்வாயபயமினிநான்றரியேன்றரியேனபயம
விடாபோலெனைநீநினையேலபயமவிடுவேனலஞனபயமபயம
உடலோடுறுமாபொருளாவியுமிஙகுனவேயெனவேயலவேயபயம்
சுடர்மாமணியேயபயமபயஞ்சுகநாடகனேயபயமபயம். (கூ)

குற்றம்பலவாயினுநீகுறியேல்குணமேகொளுமென்குருவேயபயம்
பற்றம்பலமேயலதோர்நெறியும்பதியேயறியேனடியேனபயம்
சுற்றம்பலவுமுனவேயெனவோதுணைவேறிலைநின்றுணையேயபயம
சிற்றம்பலவாவருள்வாயினிநானசிறிதுந்தரியேன்றரியேனபயம. (க0)

திருச்சிற்றம்பலம.

## உண்மைகூறல்.

எணசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தனிப்பெருந்தலைவரேதாயவரேயென்றந்தையரேபெருந்தயவுடையவரே
பனிப்பறுத்தெனையாண்டபரம்பரரேயெம்பாரவதிபுரஞானப்பதிசிதம்பரரே
இனிச்சிறுபொழுதேனுந்தாழ்த்திடல்வேண்டாமிறையவரேயுமையிஙகுக்கண்டல்லா
லநிதயவுலகினைப்பார்க்கவுமாட்டேனருட்பெருஞ்சோதியீராணைநும்மீதே. (க)

பெறுவதுநுமையன்றிப்பிறிதொன்றும்விரும்பேன் பேசலும்பேச்சன்றிப்பிறி தொன்றும்பேசேன், னுறுவதும்மருளன்றிப்பிறிதொன்றுமுவவேனுன்னலுந்திறனன் றிப்பிறிதொன்றுமுன்னேனே, மறுநெறிதீர்த்தெனைவாழ்வித்துக்கொண்டீர்வள்ளலேநு ந்திருவரவுகண்டலலால், அறுசுவையுண்டிகொண்டருந்தவுமாட்டேனருட்பெருஞ்சோ தியீராணைநும்மீதே. (உ)

கரும்பிடையிரதமுங்கனியிலின்சுவையுங்காட்டியென்னுள்ளங்கலந்தினிக்கின்றீ
விரும்பிநும்பொன்னடிக்காட்பட்டுநின்றேன்மேல்வினைவறிகிலேனவிச்சையொன்றில்லேன்
றுரும்பினுஞ்சிறியனையன்றுவந்தாண்டீர்தூயநும்பேரருட்சோதிகண்டல்லா
லரும்பெறலுண்டியைவிரும்பவுமாட்டேனருட்பெருஞ்சோதியீராணைநும்மீதே. (ங)

தடுத்தெனையாட்கொண்டதந்தையரேயெந்தனிப்பெருந்தலைவரேசபைநடத்தவரே
தொடுத்தொன்றுசொல்கிலேன்சொப்பனத்தேனுந்தூயநுந்திருவருணையம்விட்டறியேன
விடுத்திடிலெனைநீர்விடுப்பனென்னுயிரைவெருவுளக்கருத்தெலாந்திருவுளத்தறிவீர்
அடுத்தினிப்பாயலிற்படுக்கவுமாட்டேனருட்பெருஞ்சோதியீராணைநும்மீதே. (ச)

காசையும்பணத்தையுங்கன்னியர்தமையுங்காணியினாட்சியுங்கருதிலேன்கண்டீர்
நேசநுந்திருவருணேசமொன்றல்லால்நேசமற்றிலையிதுநீரறியீரோ
ஏசறலகற்றிவந்தென்னைமுன்னாண்டீரிறையவரேயுமையின்றுகண்டல்லால்
ஆசையிற்பிறரொடுபேசவுமாட்டேனருட்பெருஞ்சோதியீராணைநும்மீதே. (ரு)

என்பொருளென்னுடலென்னுயிரெல்லாமீந்தனனும்மிடத்தெம்பெருமானீர்
இன்பொடுவாங்கிக்கொண்டெனையாட்கொண்டீரென்செயலொன்றிலையாவுநுஞ்செயலே
வன்பொடுநிற்கிலீரென்பொடுகலந்தீர்வள்ளலேநுந்திருவரவுகண்டல்லா
லன்பொடுகாண்பாரைமுன்பிடமாட்டேனருட்பெருஞ்சோதியீராணைநும்மீதே. (சு)

திருந்துமென்னுள்ளத்திருக்கோயில்ஞானசித்திபுரமெனச்சத்தியங்கண்டேன்
இருந்தருள்கின்றீரென்னிருகண்களின்புறவன்றுவந்தெழிலுருக்காட்டி
* வருந்தலையெனவென்றனைத்தேற்றியவாறேவள்ளலேயின்றுநும்வரவுகண்டல்லா
லருந்தவாநேரினும்பொருந்தவுமாட்டேனருட்பெருஞ்சோதியீராணைநும்மீதே. (எ)

கணக்கணமின்றியேகடனிலைசெய்தீர்கருணைக்கடற்குக்கணக்கணஞ்செய்யீ
உணக்கணவாதவுயாவுடையீரென்னுணக்கணவிப்பலவுதவிசெய்கின்றீர்
வணக்கணவெண்குணமாநிதியாநீர்வாய்மையிற்குறித்தநும்வரவுகண்டல்லா
லணக்கணமாயினுந்தரித்திடமாட்டேனருட்பெருஞ்சோதியீராணைநும்மீதே. (அ)

மடுக்கநும்பேரருட்டண்ணமுதெனக்கேமாலையுங்காலையுமத்தியானத்துங்
கடுக்குமிரவினும்யாமத்தும்விடியற்காலையினுந்தந்தென்கடும்பசிதீர்த்து
யெடுக்குநற்றாயொடுமிணைந்துநிற்கின்றீரிறையவரேயும்மையிங்குக்கண்டல்லா
லடுக்கவிழ்கலையெடுத்துடுக்கவுமாட்டேனருட்பெருஞ்சோதியீராணைநும்மீதே. (கூ)

* வருந்தலை - வருந்தற்க.

கறுத்துரைக்கின்றவர்களித்துரைக்கின்றகாலையிலெனைநேர்கருதத்துளநின்றேன்
நிறுத்துரைக்கின்றபன்மைகளின்றிரீடொளிப்பொற்பொதுநாடகம்புரிவீர்
செறுத்துரைக்கின்றவர்மேதாவதற்கரியீர்சிற்சபையீரெனைச்சேர்ந்திடல்வேண்டும்
அறுத்துரைக்கின்றேனுன்பொறுத்திடமாட்டேனருட்பெருஞ்சோதியீராணைநும்மீதே

திருச்சிற்றம்பலம்.

# அருள்விளக்கமாலை.

## எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அருள்விளக்கேயருட்சுடரேயருட்சோதிச்சிவமேயருளமுதேயருணிறைவேயருள்வடிவப்பொருளே, யிருள்கடிந்தென்னுளமுழுதுமிடங்கொண்டபதியேயென்னறிவேயென்னுயிரேயெனக்கினியவுறவே, மருள்கடிந்தமாமணியேமாற்றறியாப்பொன்னேமன்றிலநடம்புரிகின்றமணவாளாவெனக்கே, தெருளளித்ததிருவாளாஞானவுருவாளாதெய்வநடத்தரசேநான்செய்மொழியேற்றருளே. (௧)

கோடையிலேயிளைப்பாற்றிக்கொள்ளும்வகைகிடைத்தகுளிர்தருவேதருநிழலேநிழல்கனிந்தகனியே, யோடையிலேயூறுகின்றதீஞ்சுவைத்தண்ணீரேயுகந்ததண்ணீரிடைமலர்ந்தசுகந்தமணமலரே, மேடையிலேவீசுகின்றமெல்லியபூங்காற்றேமென்காற்றில்விளைசுகமேசுகத்திலுறும்பயனே, யாடையிலேயெனைமணந்தமணவாளாபொதுவிலாடுகின்றவரசேயென்னலங்கலணிந்தருளே. (௨)

இன்புறநானெய்ப்பிடத்தேபெற்றபெருவைப்பேயேங்கியபோதென்றன்னைத்தாங்கியநற்றுணையே, யன்புறவென்னுட்கலந்தேயண்ணிக்குமமுதேயச்சமெலாந்தவிர்த்தென்னையாட்கொண்டகுருவே, யென்பருவங்குறியாதேயெனைமணந்தபதியேயிசசையுற்றபடியெல்லாமெனக்கருளுந்துரையே, துன்பறமெய்யன்பருக்கேபொதுநடஞ்செய்யரசேதூயதிருவடிகளுக்கென்சொல்லுமணிந்தருளே. (௩)

ஒசித்தகொடியனையேற்குக்கிடைத்தபெரும்பற்றேயுண்மயங்கும்போதுமயக்கொழித்தருளுந்தெளிவே, பசித்தபொழுதெதிர்கிடைத்தபாற்சோற்றுத்திரளே பயந்தபொழுதெல்லாமென்பயந்தவிர்த்ததுரையே, நசித்தவரையெழுப்பியருணல்கியமாமருந்தேநான்புணரநானுகிநண்ணியமெய்ச்சிவமே, கசித்தமனத்தன்பர்தொழப்பொதுநடஞ்செய்யரசேகளித்தெனதுசொன்மாலைகழலிலணிந்தருளே. (௪)

மனமிளைத்துவாடியபோதென்னெதிரேகிடைத்துவாட்டமெலாந்தவிர்த்தெனககுவாழ்வளித்தநிதியே, சினமுகத்தார்தமைக்கண்டுதிகைத்தபொழுதவரைச்சிரித்தமுகத்தவராக்கவெனக்களித்தசிவமே, அனமுகத்தானரிமுதலோர்துருவிநிற்கவெனக்கேயடிமுடிகள்காட்டுவித்தேயடிமைகொண்டபதியே, யினமெனப்பேரன்பர்தொழப்பொதுநடஞ்செய்யரசேயென்னுடையசொன்மாலையாவுமணிந்தருளே. (௫)

கங்குலிலேவருந்தியவென்வருத்தமெலாந்தவிர்த்தேகாலையிலேயென்னுளத்தேகிடைத்தபெருங்களிப்பே, செங்குவளைமாலையொடுமல்லிகைப்பூமாலைசேர்த்தணிந்தெ

ன்றனைமணந்ததெய்வமணவாளா, எங்குமொளிமயமாகிநின்றநிலைகாட்டியென்னகத்தும்புறத்தும்நிறைந்திலங்கியமெய்ப்பொருளே, தூங்குமுறைதிருப்பொதுவிற்றிருநடஞ்செய்யரசேசொன்மாலைசூட்டுகின்றேன்றோளிலணிந்தருளே. (௬)

கரைந்துவிடாதென்னுடையநாவகத்தேயிருந்து கனத்தசுவைதருகின்றகற்கண்டேகனிவாய், விரைந்துவந்தென்றுன்பமெலாந்தவிர்த்தவருளமுதேமெய்யருளேமெய்யாகிவிளங்குகின்றவிளக்கே, திரைந்தவுடல்விரைந்துடனேபொன்னுடம்பேயாகித் திகழ்ந்தழியாதோங்கவருள்சித்தேமெய்ச்சத்தே, வரைந்தென்னைமணம்புரிந்துபொதுநடஞ்செய்யரசேமகிழ்வொடுநான்புனைந்திடுஞ்சொன்மாலையணிந்தருளே. (௭)

கதிக்குவழிகாட்டுகின்றகண்ணேயென்கண்ணிற்கலந்தமணியேமணியிற்கலந்த கதிரொளியே, விதிக்குமுலகுயிர்க்குயிராய்விளங்குகின்றசிவமே மெய்யுணர்ந்தோர் கையகத்தேவிளங்கியதீங்கனியே, மதிக்குமதிக்கப்புறம்போய்வயங்குதனிநிலையே மறைமுடியாகமமுடிமேல்வயங்குமின்பநிறைவே, துதிக்குமன்பர்தொழப்பொதுவில் நடம்புரியுமரசேசொன்மாலைசூட்டுகின்றேன்றோளிலணிந்தருளே. (௮)

அண்டவளவெவ்வளவோவவ்வளவுமவற்றில் அமைந்தசராசரவளவெவ்வளவோவவ்வளவும், கண்டதுவாயாங்கவைகள்தனித்தனியேயகத்துங்காண்புறத்துமகப்புறத்தும்புறப்புறத்தும்விளங்க, விண்டகுபேரருட்சோதிப்பெருவெளிக்குநடுவேவிளங்கியொருபெருங்கருணைக்கொடிநாட்டியருளாந், தண்டகுமோர்தனிச்செங்கோல்நடத்திமன்றில்நடிக்குந் தனியரசேயென்மாலைதோளிலணிந்தருளே. (௯)

நல்லார்சொல்யோகாந்தப்பதிகள்பலகோடி நாட்டியதோர்போதாந்தப்பதிகள்பலகோடி, வல்லார்சொல்கலாந்தநிலைப்பதிகள்பலகோடிவழுத்துமொருநாதாந்தப்பதிகள் பலகோடி, யில்லார்ந்தவேதாந்தப்பதிகள்பலகோடியிலங்குகின்றசித்தாந்தப்பதிகள்பல கோடி, யெல்லாம்பேரருட்சோதித்தனிச்செங்கோல்நடத்துமென்னரசேயென்மாலை யினிதுபுனைந்தருளே. (௧௦)

நாட்டியதோர்சுத்தபராசத்தியண்டமுதலா ஞானசத்தியண்டமதுகடையாகவிவற்றுள், ஈட்டியபற்பலசத்திசத்தரண்டப்பகுதி யெத்தனையோகோடிகளுந்தன்னிழற்கீழ்விளங்கச், சூட்டியபொன்முடியிலங்கச்சமரசமெய்ஞ்ஞானசுத்தசிவசனமாகப் பெருநிலையிலமர்ந்தே, நீட்டியபேரருட்சோதித்தனிச்செங்கோல்நடத்தும்நீதிநடத்தரசேயென்னெடுஞ்சொலணிந்தருளே. (௧௧)

தன்பெருமைதானறியாத்தன்மையனேயெனதுதனித்தலைவாவென்னுயிர்க்குளினித்ததனிச்சுவையே, நின்பெருமைநானறியேனான்மட்டோவறியேனெடுமால்நான்முகன்முதலாமூர்த்திகளுமறியார், அன்புறுமாகமமறைகளறியாவேயெனினுமவருமவைகளுஞ்சிலசொலலணிகின்றார்நினக்கே, யென்பருவங்குறியாதேயெனையாண்டவரசேயானுமவர்போலணிகின்றேனணிந்திங்கருளே. (௧௨)

உண்ணவுண்ணத்தெவிட்டாதேதித்தித்தென்னுடம்போடுயிருணர்வுங்கலந்து கலந்துள்ளகத்தும்புறத்தும், தண்ணியவண்ணம்பரவப்பொங்கிநிறைந்தாங்கேததும்பியென்றனைமயமெல்லாந்தன்மயமேயாக்கி, யெண்ணியவென்னெண்ணமெலாமெய்த்தவொளிவழங்கியிலங்குகின்றபேரருளாமின்னமுதத்திரளே, புண்ணியமேயென்பெரியபொருளேயென்னரசேபுன்மொழியென்றிகழாதேபுனைந்துமகிழ்ந்தருளே. (௧௩)

நாட்டார்கள்சூழ்ந்துமதித்திடமணிமேடையிலே நடுவிருக்கவென்றனையேநாட்
டியபேரிறைவா, பாட்டாளர்பாடுதொறும்பரிசளிக்குந்துரையே பன்னுமறைப்பாட்
டேமெய்ப்பாட்டினதுபயனே, கூட்டாளாசிவகாமக்கொடிக்கிசைந்தகொழுநாகோவே
யென்கணவாவென்குரவாவென்குணவா, நீட்டாளர்புகழ்ந்தேத்தமணிமன்றில்நடிக்
கும்நிருநடத்தரசேயென்னெடுமொழிகொண்டருளே. (௧௪)

கைக்கிசைந்தபொருளேயென்கருத்திசைந்தகனியே கண்ணேயென்கண்களுக்
கேகலந்திசைந்தகணவா, மெய்க்கிசைந்தவணியேபொனமேடையிலென்னுடனேமெ
ய்கலந்ததருணத்தேவிளைந்தபெருஞ்சுகமே, நெய்க்கிசைந்தவுணவேயெனனெறிக்கி
சைந்தநிலையேநித்தியமேயெல்லாமாஞ்சத்தியமேயுலகில், பொய்க்கிசைந்தார்காணாதே
பொதுநடஞ்செய்யரசேபுன்மொழியென்றிகழாதேபுனைந்துமகிழ்ந்தருளே. (௧௫)

கொடுத்திடநானெடுத்திடவுங்குறையாதநிதியே கொல்லாதநெறியேசித்தெல்லா
ஞ்செய்பதியே, மடுத்திடவுமடுத்தடுத்தேமடுப்பதற்குள்ளாசைவைப்பதன்றிவெறுப்ப
றியாவண்ணநிறையமுதே, யெடுத்தெடுத்துப்புகன்றாலுமுலவாதவொளியேயென்னு
யிரேயென்னுயிர்க்கிசைந்தபெருந்துணையே, தடுத்திடவல்லவரில்லாத்தனிமுதற்பே
ரரசேதாழ்மொழியெனறிகழாதேதரித்துமகிழ்ந்தருளே. (௧௬)

தனித்தனிமுக்கனிபிழிந்துவடித்தொன்றாக்கூட்டிச் சாக்கரையுங்கற்கண்டின்
பொடியுமிகக்கலந்தே, தனித்தநறுந்தேன்பெய்துபசும்பாலுந்தேங்கின்றனிப்பாலுஞ்
சேர்த்தொருதீம்பருப்பிடியுமவிரவி, யினித்தநறுநெய்யளைந்தேயிளஞ்சூட்டினிறக்கி
யெடுத்தசுவைக்கட்டியினுமினித்திடுந்தெள்ளமுதே, யனித்தமறத்திருப்பொதுவிலவி
ளங்குநடத்தரசேயடிமலர்க்கென்சொல்லணியாமலங்கலணிந்தருளே. (௧௭)

மலைவறியாப்பெருஞ்சோதிவச்சிரமாமலையே மாணிக்கமணிப்பொருப்பேமரகதப்
போவரையே, விலையறியாவுயராணிப்பெருமுத்துத்திரளேவிண்ணவருநண்ணருமோ
ரமெய்ப்பொருளின்விளைவே, கொலையறியாக்குணத்தோர்சங்கூட்டுறவேயருட்செங்
கோலநடத்துகின்றதனிக்கோவேமெய்யறிவால், நிலையறிந்தோர்போற்றுமணிமன்றி
ல்நடத்தரசேநின்னடிப்பொன்மலர்களுக்கென்னெடுஞ்சொலணிந்தருளே. (௧௮)

கண்களிக்கப்புகைசிறிதுங்காட்டாதேபுருவக் கலைநடுவேவிளங்குகின்றகற்பூரவி
ளக்கே, பண்களிக்கப்பாடுகின்றபாட்டில்விளைசுகமேபத்தருளேதித்திக்கப்பழுத்ததனி
ப்பழமே, மண்களிக்கவான்களிக்கமணந்தசிவகாமவல்லியெனமறைகளெலாம்வாழ்த்
துகின்றவாமப், பெண்களிக்கப்பொதுநடஞ்செய்நடத்தரசேநினதுபெரும்புகழ்ச்சே
வடிகளுக்கென்னருமபுமணிந்தருளே. (௧௯)

உருவெளியேயுருவெளிக்குள்ளூற்றவெளியுருவே யுருநடுவும்வெளிநடுவுமொன்
றானவொன்றே, பெருவெளியேபெருவெளியிற்பெருஞ்சோதிமயமேபெருஞ்சோதி
மயநடுவேபிறங்குதனிப்பொருளே, மருவொழியாமலரகத்தேவயங்குமொளிமணியே
மந்திரமேதந்திரமேமதிப்பரியமருந்தே, திருவொழியாதோங்குமணிமன்றினடத்தரசே
சிறுமொழியென்றிகழாதேசோத்துமகிழ்ந்தருளே. (௨௦)

நானென்றுந்தானென்றும்நாடாதநிலையில்ஞானவடிவாய்விளங்கும்வானநடுநிலை
யே, யூனென்றுமுயிரென்றுங்குறியாமேமுழுதுமொருவடிவாநதிருவடிவமுவந்தளித்
தபதியே, தேனென்றுங்கரும்பென்றுஞ்செப்பரிதாய்மனமுந்தேகமுமுள்ளுயிருணா

வுந்திதிக்குஞ்சுவையே, வாவென்றமொளியென் றும்வகுப்பரிதாம்பொதுவில்வய ங்குநடத்தரசேயென் மாலையுமேற்றருளே. (உக)

எட்டிரண்டுமென்னென்றால்மயங்கியவென் றனக்கே யெட்டாதநிலையெல்லாமெ ட்டுவித்தகுருவே, சுட்டிரண்டுங்காட்டாதேதுரியநிலைநடுவேசுகமயமாய்விளங்குகின் றசுத்தபரம்பொருளே, மட்டிதுவென் றறிவதற்குமாட்டாதேமறைகள்மவுனமுறப்பர ம்பரத்தேவயங்குகின்றவொளியே, தட்டறியாத்திருப்பொதுவிற்றனிநடஞ்செய்யரசே தாழ்மொழியென் றிகழாதேதரித்துமகிழ்ந்தருளே. (உஉ)

சாதிகுலஞ்சமயமெலாந்தவிர்த்தெனைமேலேற்றித்தனித்ததிருவமுதளித்ததனித் தலைமைப்பொருளே, ஆதிநடுக்கடைகாட்டாதண்டபகிரண்டமாருயிர்களகம்புறமற்ற னைத்துநிறைவொளியே, யோதியுணர்ந்தவரெல்லாமெனைக்கேட்கவெனைத்தானோதா மலுணர்ந்துணர்வாமுருவுறச்செய்யுறவே, சோதிமயமாய்விளங்கித்தனிப்பொதுவில் நடிக்குநாயகநடத்தரசேயென் சொலலுமணிந்தருளே. (உங)

அடிக்கடியென் னகத்தினிலும்புறத்தினிலுஞ்சோதியருளுருவாய்த்திரிந்துதிரிந்த ருள்கின்றபொருளே, படிக்களவினமறைமுடிமேலாகமத்தின முடிமேற்பதிந்தபதமெ ன்முடிமேற்பதித்ததனிப்பதியே, பொடிக்கனகத்திருமேனித்திருமணங்கற்பூரப்பொ டிமணத்தோடகம்புறமும்புதுமணஞ்செய்யமுதே, யடிக்கனகவம்பலத்தேதிருச்சிற்ற மபலத்தேயாடல்புரியரசேயென்னலங்கலணிந்தருளே. (உச)

அறையாதமிகுபெருங்காற்றடித்தாலுஞ்சிறிது மசையாதேயவியாதேயண்டபகிர ண்டத், துறையாவும்பிண்டவகைத்துறைமுழுதும்விளங்கத்தூண்டாதேவிளங்குகி ன்றசோதிமணிவிளக்கே, மறையாதேகுறையாதேகளங்கமுமில்லாதேமயக்காதேப னிக்காதேவயங்குகின்றமதியே, இறையாயெவ்வுயிரகத்துமகப்புறத்துமபுறத்துமில ங்குநடத்தரசேயென் னிசையுமணிந்தருளே. (உரு)

பார்த்தாலும்நினைத்தாலும்படித்தாலும்படிக்கப் பக்கநின்றுகேட்டாலும்பரிந்து ணுணர்ந்தாலும், ஈர்த்தாலும்பிடித்தாலுங்கட்டியணைத்தாலுமித்தனைக்குநித்திக்குமி னித்தசுவைக்கரும்பே, வேர்த்தாவிமயங்காதுகனிந்தநறுங்கனியேமெய்யமைமயறிவான ந்தமவிளக்குமருளமுதே, தீர்த்தாவென் றன்பரெலாந்தொழப்பொதுவில்நடிக்குந்தெ ய்வநடத்தரசேயென்சிறுமொழியேற்றருளே (உசு)

பற்றுதலும்விடுதலுமுள்ளடங்குதலுமீட்டுமெ படுதலொடுசுடுதலும்புண்படுத்தலு மில்லாதே, உற்றொளிகொண்டோங்கியெங்குந்தன்மயமாய்ஞானவுருவாகியுயிர்க்குயி ராயோங்குகின்றநெருப்பே, சுற்றுதலுந்தோன் றுதலுமறைதலுமவெச்செனறேசுடுத லுமில்லாதென் றுந்துலங்குகின்றசுடரே, முற்றுமுணர்ந்தவருளத்தேதிருச்சிற்றம்பல த்தேமுயங்குநடத்தரசேயென்மொழியுமணிந்தருளே. (உஎ)

ஐம்பூதபாகங்கண்முதனுன்குமவற்றுள்ளேயடுத்திடுநன் னுன்குமவையகம்புறமே ல்நடுக்கீழ், கம்பூதபக்கமுதலெல்லாந்தன்மயமாய்க்காணுமவற்றப்புறமுங்கலந்ததனி க்கனலே, செம்பூதவுலகங்களபூதாண்டவகைகள்செழித்திடநற்கிரணப்பித்திகழ்கி ன்றசுடரே, வெம்பூதத்தடைதவிர்ந்தாரேத்தமணிமன்றில்விளங்குநடத்தரசேயென்வி ளம்புமணிந்தருளே. (உஅ)

வாதுறுமிந்தியகரணபரங்கண்முதனான்கும்வகுத்திடுநின்றன்குமகம்புறமேல்கீழ்நடுபெபா, லோதுறுமற்றெல்லாநதன்மயமாககலந்தேயோங்கவற்றினப்புறமுமொளிராகின்றவொளியே, சூதுறுமிந்திபகரணலோகாண்டமனைத்துஞ்சுடரபரப்பிவிளங்குகின்றசுயஞ்சோதிச்சுடரே, போதுறவார்பலாநின்றுபோற்றநடம்பொதுவில்புரியுநடத்தரசேயென்புகலுமணிந்தருளே. (உகூ)

பகுதிபராமுதனான்குமவறறுறுநன்னான்கும் பரவியெலாந்தன்மயமாம்படிநிறைந்துவிளங்கித, தகுதிபெறுமப்பகுதிககபபுறமுஞசென்றேதனியொளிசசெஙகோல்நடததித்தழைககினறவொளியே, மிகுதிபெறுபகுதியுலகம்பகுதியண்டம்விளஙகவருட்சுடர்பரப்பிவிளங்குகின்றசுடரே, தொகுதிபெறுகடவுளாகளேத்தமன்றில்நடிக்குநதுரியநடத்தரசேயெனசொல்லுமணிநதருளே (௩0)

மாமாயைப்பரமாதிநான்குமவறறுள்ளே வயங்கியநன்னனகுந்தன்மயத்தாலேவிளககி, ஆமாறம்மாமாயைககப்புறததுநிறைநதேயறிவொன்றேவடிவாகிவிளஙகுகின்றவொளியே, தாமாயாபுவனஙகளமாமாயையணடந்தழைத்துவிளஙகிடககதிரசெய்தனிததபெருஞ்சுடரே, தேமாலுமபிரமனுமநிணறேத்தமனறிலநடிககுந்தெயவநடததரசேயெனசிறுமொழியேற்றருளே. (௩க)

சுததபரமுதலநான்குமவறறுறுநன்னான்குந்தூயவொளிவடிவாகததுலங்குமொளியளிததே, நிததபரம்பாநடுவாயமுதலாயநதமதாயநீடியவோாபெருநிலைமேலாடியபேரொளியே, விததமுறுஞசுத்தபரலோகாணடமனைததுமவிளக்கமுறசசுடாபரப்பிவிளங்குகினறசுடரே, சததியஞானநதச்சித்தாபுகழ்பொதுவிலதனிததநடத்தரசேயெனசாறறுமணிந்தருளே. (௩உ)

சாற்றுகின்றகலையைந்திற்பரமாதிநான்குந்தககவவற்றாடிருந்தநன்னான்குநிறைந்தே, யூற்றுகினறவகமபுறமேல்நடுகீழ்மற்றனைததுமுறறிடுநதனமயமாகியொளிராகின்றவொளியே; தோறறுகினறகலையுலகஙகலையண்டமுழுதுநதுலங்குகின்றசுடர்பரப்பிச்சூழ்கின்றசுடரே, போறறுகின்றமெயயடியாகளிப்பநடித்தருளுமபொதுவினடத்தரசேயென்புகலுமணிநதருளே. (௩௩)

நாடியவோங்காரமைந்திறபரமுதலோர்நான்கும் நன்னான்குமாறிடத்தும்நயநதுநிறைநதருளி, யீட்டியசெமபொருணிலையோடிலககியமுமவிளஙகவினிதுநின்றுவிளஙகுகின்றவினபமயவொளியே, கூட்டியவோஙகாரவுலகோங்காரவண்டமகுடிவிளங்கககதிாபரபபிகுலவுபெருஞ்சுடரே, பாட்டியலகொணடன்பரெலாமபோறறமன்றினடிக்கும்பரமநடததரசேயென்பாட்டுமணிநதருளே. (௩௪)

மன்னுகின்றவபரசததிப்பரமாதியவற்றுள் வகுத்தநிலையாதியெலாம்வயங்கவயினெல்லாம், பன்னுகினறபற்பலவாம்விசித்திரசித்திரங்கள்பரவிவிளஙகிடவிளககிப்பநிநதருளுமொளியே, துன்னபரசததியுலகபரசததியண்டஞ்சுகம்பெறவேகதிாபரபபிததுலங்குகின்றசுடரே, யுன்னுமன்பருளங்களிக்கத்திருச்சிற்றம்பலததேயோங்குநடத்தரசேயென்னுனாயுமணிந்தருளே. (௩௫)

விளங்குபரசத்திகளின்பரமாதியவற்றுள்விரிந்தநிலையாதியெலாம்விளங்கவொளிவழஙகிக், களங்கமிலாப்பரவெளியிலந்தமுதலநடுதோன் காட்டாதேநிறைநதெங்கும்

கலந்திடும்பேரொளியே, யுளங்குலவுபரசத்தியுலகமண்டமுழுதுமொளிவிளங்கச்சுடர்பரப்பியோங்குதனிச்சுடரே, வளங்குலவுதிருப்பொதுவில்மாநடஞ்செய்யரசேமகிழ்ந்தெனதுசொல்லெனுமோர்மாலையணிந்தருளே. (௧௬)

தெரிந்தமகாசுத்தபரமுதலுமவற்றுள்ளே சிறந்தநிலையாதிகளுந்தெளிந்துவிளங்குறவே, பரிந்தவொருசிவவெளியினீக்கமறநிறைந்தே பரமசுகமயமாகிப்பரவியபேரொளியே, விரிந்தமகாசுத்தபரலோகாண்டமுழுதும்மெய்யறிவானந்தநிலைவிளக்குகின்றசுடரே, புரிந்ததவப்பயனாகும்பொதுவினடத்தரசே புன்மொழியெனநிகழாதே புனைந்துமகிழ்ந்தருளே. (௧௭)

வாய்ந்தபரநாதமந்திறபரமுதலுமவற்றுன்மன்னுநிலையாதிகளும்வயங்கியிடநிறைந்தே, யாய்ந்தபரசிவவெளியிலவெளியுருவாயெல்லாமாகியதன்னியல்விளக்கியலர்ந்திடும்பேரொளியே, தோய்ந்தபரநாதவுலகண்டமெலாம்விளங்கச்சுடர்பரப்பிவிளங்குகின்றதூயதனிச்சுடரே, வேய்ந்தமணிமன்றிடத்தேநடம்புரியுமரசேவிளம்புறுமென்சொன்மாலைவிளங்கவணிந்தருளே. (௧௮)

கல்லார்க்குங்கற்றவர்க்குங்களிப்பருளுங்களிப்பே காணார்க்குங்கண்டவர்க்குங்கண்ணளிக்குங்கண்ணே, வல்லார்க்குமாட்டார்க்கும்வரமளிக்கும்வரமே மதியார்க்கும்மதிப்பவர்க்கும்மதிகொடுக்கும்மதியே,நல்லார்க்கும்பொல்லார்க்குநடுநின்றநடுவேநரர்களுக்குஞ்சுரர்களுக்கும்நலங்கொடுக்குநலமே, யெல்லார்க்கும்பொதுவில்நடமிடுகின்றசிவமேயென்னரசேயானபுகலுமிசையுமணிந்தருளே. (௧௯)

காட்சியுறக்கண்களுக்குக்களிக்கும்வண்ணமுளதாய்க்கையுமெய்யுமபரிசிக்கச்சுகபரிசத்ததுவாய்ச், சூழ்ச்சியுறநாசிக்குச்சுகந்தஞ்செய்குவதாய்த்தூயசெவிக்கினியதொருசுகநாதத்ததுவாய், மாட்சியுறவாய்க்கினியபெருஞ்சுவையீகுவதாய்மறைமுடிமேல்பழுத்தெனக்குவாய்த்தபெரும்பழமே, யாட்சியுறவருளொளியாற்றிருச்சிற்றம்பலத்தேயாடல்புரியரசேயென்னலங்கலணிந்தருளே. (௨௦)

திரையிலதாயழிவிலதாய்த்தோலிலதாய்ச்சிறிதுஞ்சினைப்பிலதாய்ப்பனிப்பிலதாய்ச்செறிந்திடுகோதிலதாய், விரையிலதாய்ப்புரையிலதாய்க்காரிலதாய்மெய்யேமெய்யாகியருள்வண்ணமவிளங்கியின்பமயமாய்ப், பரைவெளிக்கப்பால்விளங்குதனிவெளியிற்பழுத்தேபடைத்தவெனதுளத்தினிக்கக்கிடைத்ததனிப்பழமே, உரைவளர்மாமறைகளெலாம்போற்றமணிப்பொதுவிலோங்குநடத்தரசேயெனதுரையுமணிந்தருளே.

காய்ப்பிலதாய்த்துவர்ப்பிலதாயுவர்ப்பிலதாய்ச்சிறிதுங்கசப்பிலதாய்ப்புளிப்பிலதாய்க்கார்ப்பிலதாய்ப்பிறவிற், சேர்ப்பிலதாயெஞ்ஞான்றுந்திரிபிலதாயுயிர்க்கேதினைத்தனையுநோயதருமதீமையொன்றுமிலதாய்ப், பார்ப்பனையேனுள்ளகத்தேவிளங்கியறிவினம்படைத்திடமெய்த்தவப்பயனாற்கிடைத்ததனிப்பழமே, யோப்புடையார்போற்றமணிமன்றிடத்தேவெளியாயோங்கியபேரரசேயென்னுரையுமணிந்தருளே.

தெற்றியிலேநான்பசித்துப்படுத்திளைத்ததருணந்திருவமுதோர்திருக்கரத்தேதிகழ்வள்ளத்தெடுத்தே, ஒற்றியிற்போற்பசித்தனையோவெனவென்றனையெழுப்பியுவந்துகொடுத்தருளியவென்னுயிர்க்கினியதாயே, பற்றியவென்பற்றனைத்துந்தன்னடிப்பற்றாகப்பரிந்தருளியென்னையீன்றபண்புடையெந்தாயே, பெற்றியுளார்சுற்றிநின்றுபோற்றமணிப்பொதுவிற்பெருநடஞ்செய்யரசேயென்பிதற்றுமுவந்தருளே. (௨௩)

தாய்முதலோரொடுசிறியபருவந்தனிற்றில்லைத்தலத்திடையேதிரைதூக்கத்தரிசித்தபோது, வேயவகைமேறகாட்டாதேயென்றனக்கேயெல்லாமவெளியாகக்காட்டியவென்மெய்யுறவாம்பொருளே, காயவகையில்லாதுளத்தேகனிந்தநறுங்கனியேகனவிடத்துமனவிடத்துமெனைப்பிரியாக்களிப்பே, தூயவகையோர்போற்றமணிமன்றினடம்புரியுஞ்சோதிநடத்தரசேயென்சொல்லுமணிந்தருளே. (சுச)

ஓங்கியவோர்துணையின்றிப்பாதியிரவதிலேயுயர்ந்தவொட்டுத்திண்ணையிலேபடுத்தகடைச்சிறியேன், தூங்கிமிகப்புரண்டுவிழத்தரையில்விழாதெனையேதூக்கியெடுத்தணைத்துக்கீழ்க்கிடத்தியமெய்த்துணையே, தாங்கியவென்னுயிர்க்கின்பந்தந்தபெருந்தகையேசற்குருவேநான்செய்பெருந்தவப்பயனாம்பொருளே, யேங்கியவென்னேக்கமெலாந்தவிர்த்தருளிப்பொதுவிலிலங்குநடத்தரசேயெனனிசையுமணிந்தருளே.

தனிச்சிறியேனசிறிதிங்கேவருந்தியபோதத்தனைத்தனவருத்தமெனக்கொண்டுதரியாதக்கணத்தே, பனிப்புறுமவ்வருத்தமெலாந்தவிர்த்தருளிமகனே பயமுனக்கென்னென்றென்னைப்பரிந்தணைத்தகுருவே, யினிப்புறுநன்மொழிபுகன்றென்முடிமிசையேமலர்க்காலிணையமர்த்தியெனையாண்டவென்னுயிர்நற்றுணையே, கனிந்தநறுங்கனியேயென்கண்ணேசிற்சபையிற்கலந்தநடத்தரசேயெனகருத்துமணிந்தருளே. (சுசு)

ஒருமடந்தைவலிந்தணைந்துகலந்தகன்றபின்னருளம்வருந்தியென்செய்தோமென்றயர்ந்தபோது, பெருமடஞ்சேர்பிள்ளாயென்கெட்டதொன்றுமிலைநம்பெருஞ்செயலின்றெனத்தேற்றிப்பிடித்தபெருந்தகையே, திருமடந்தைமாரிருவரென்னெதிரேநடிக்கச்செய்தருளிச்சிறுமையெலாந்தீர்த்ததனிச்சிவமே, கருமடந்தீர்ந்தவரெல்லாம்போற்றம்மணிமன்றிற்காட்டுநடத்தரசேயெனபாட்டுமணிந்தருளே. (சுஎ)

இருளிரவிலொருமூலைத்திண்ணையில்நானபசித்தேயிளைப்புடனேபடுத்திருக்கவெனைத்தேடிவந்தே, பொருளுணவுகொடுத்துண்ணச்செய்வித்தேபசியைப்போக்கியருள்புரிந்தவென்றன்புண்ணியநற்றுணையே, மருளிரவுநீக்கியெல்லாவாழ்வுமெனக்கருளிமணிமேடைநடுவிருக்கவைத்தவொருமணியே, யருளுணவுமளித்தென்னையாட்கொண்டசிவமே யம்பலத்தெனனரசேயென்னலங்கலணிந்தருளே. (சுஅ)

நான்பசித்தபோதெல்லாந்தானபசித்ததாகி நல்லுணவுகொடுத்தென்னைச்செல்வமுறவளர்த்தே, யூன்பசித்தவிளைப்பென்றுந்தோற்றாதவகையேயொள்ளியதெள்ளமுதெனக்கிங்குவந்தளித்தவொளியே, வான்பதிக்குநெடுமாற்குநான்முகற்குமரிதாம்வாழ்வெனக்கேயாகியுறவரமளித்தபதியே, தேன்பரித்தமலாமணமே திருப்பொதுவில்ஞானத்திருநடஞ்செயயரசேயென்சிறுமொழியேற்றருளே. (சுகூ)

நடைக்குரியவுலகிடையோர்நல்லநண்பனாகிநான்குறித்தபொருள்களெலாம்நாழிகையொன்றதிலே, கிடைக்கவெனக்களித்தகத்தும்புறத்துமகப்புறத்தும்கிளர்ந்தொளிகொண்டோங்கியமெய்க்கிளையெனும்பேரொளியே, படைப்புமுதலைந்தொழிலுங்கொள்கவெனக்குறித்தே பயந்தீர்த்தெனதுள்ளகத்தேயமர்ந்ததனிப்பதியே, கடைப்படுமென்கரத்திலொருகங்கணமுந்தரித்தகனநடத்தரசேயென்கருத்துமணிந்தருளே.

நீநினைத்தநன்மையெலாம்யாமறிந்தோம்நினையேநேர்காணவந்தனமென்றென்மடிமேல்மலர்க்கால், தானிலகவைத்தருளிப்படுத்திடநான்செருக்கித்தாள்களெடுத்த

ப்புறத்தேவைத்திடத்தானைத்தே, யெனினைத்தாயிவ்வளவு சுதந்தரமென்மகனே யெனக்கிலையோவென்றருளியெனையாண்டகுருவே, தேனிலைத்ததீம்பாகேசர்க்கரையேகனியேதெய்வநடத்தரசேயென்சிறுமொழியேற்றருளே. (௫௧)

மூர்த்திகளுநெடுங்காலமுயன்றாலுமறியமுடியாதமுடியெல்லாமுன்னியவோர்தினத்தே, ஆர்த்தியுடனறியவெனக்களித்தருளியடியேனைத்தினைத்தனையிடமாக்கியமாந்தவருட்குருவே, பார்த்திபரும்விண்ணவரும்பணிந்துமகிழ்ந்தேத்தப்பரநாதநாட்டரசுபாலித்தபதியே, யோத்திகழுந்திருப்பொதுவிலின்பநடத்தரசேயெனனுடையசொன்மாலையிலங்கவணிந்தருளே. (௫௨)

இச்சையொன்றுமில்லாதேயிருந்தவெனக்கிங்கே யியலுறுசன்மார்க்கநிலைக்கிச்சையையுண்டாக்கித், தச்சுறவேபிறமுயற்சிசெய்யுந்தோறுமவற்றைத்தடையாக்கியுலகறியத்தடைதீர்த்தகுருவே, யெச்சமயமுடிபுகளுந்திருச்சிற்றம்பலத்தேயிருந்தவெனவெனக்கருளியிசைவித்தவிறையே, முச்சகமும்புகழுமணிமன்றிடத்தேநடிக்குமுதலரசேயெனனுடையமொழியுமணிந்தருளே. (௫௩)

கையாததீங்கனியேகயக்காதவமுதேகரையாதகற்கண்டே* புரையாதகரும்பே, பொய்யாதபெருவாழ்வேபுகையாதகனலேபோகாதபுனலேயுள்வேகாதகாலே, கொய்யாதநறுமலரேகோவாதமணியேகுளியாதபெருமுத்தேயொளியாதவெளியே,செய்யாதபேருதவிசெய்தபெருந்தகையேதெய்வநடத்தரசேயெனசிறுமொழியேற்றருளே.

எண்ணாதமந்திரமேயெழுதாதமறையேயேறாதமேனிலைநின்றிறங்காதநிறைவே, பண்ணாதபூசையிலேபடியாதபடிப்பேபாராதபார்வையிலேபதியாதபதிப்பே, நண்ணாதமனத்தகத்தேயண்ணாதநலமே நாடாதநாட்டகத்தேநடவாதநடப்பே, யண்ணாவென்னப்பாவெனையாவெனனரசே யடியிணைக்கென்சொன்மாலை யணிந்துமகிழ்ந்தருளே. (௫௫)

சாகாதகல்வியிலேதலையானநிலையே சலியாதகாற்றிடைநின்றெரியாதகனலே, யேகாதபுனலிடத்தேயிடியாதபுவியே யேசாதமந்திரத்தேபேசாதபொருளே, கூகாவென்றெனைக்கூடியெடுக்காதேயென்றுங்குலையாதவடிவெனக்கேகொடுத்ததனியமுதே, மாகாதலுடையார்கள்வழுத்தமணிப்பொதுவில்மாநடஞ்செய்யரசேயென்மாலையுமேற்றருளே. (௫௬)

சுத்தநிலையநுபவங்கள்தோன்றுவெளியாகித் தோற்றும்வெளியாகியவைதோற்றுவிக்கும்வெளியாய், நித்தநிலைகளினடுவேநிறைந்தவெளியாகிநீயாகிநானாகிநின்றதனிப்பொருளே, சத்தியமேசத்துவமேதத்துவமேநவமேசமரசசன்மார்க்கநிலைத்தலைநின்றசிவமே, புத்தமுதேசித்தியெலாம்வல்லதிருப்பொதுவில்புனிதநடத்தரசேயென்புகலுமணிந்தருளே. (௫௭)

நானளக்குந்தோறுமதற்குற்றதுபோற்காட்டிநாட்டியபின்னொருசிறிதுமளவிலுறாதாகித், தானளக்குமளவதிலேமுடிவதெனத்தோற்றித்தன்னளவுங்கடந்தப்பால்மன்னுகின்றபொருளே, வானளக்கமுடியாதேவானனந்தங்கோடிவைத்தபெருவானள

* புரையாத - ஒப்பில்லாத.

க்கவசமோவென்றுரைத்துத், தேனளக்குமறைகளெலாம்போற்றமணிமன்றிற்றிகழுநடத்தரசேயெனசிறுமொழியேற்றருளே. (௫௮)

திசையறியமாட்டாதே திகைத்தசிறியேனைத்தெளிவித்துமணிமாடத்திருத்தவிசிலேற்றி, நசையறியாநற்றவருமற்றவருஞ்சூழ்ந்துநயப்பவருட்சிவநிலையைநாட்டவைத்தபதியே, வசையறியாப்பெருவாழ்வேமயலறியாவறிவே வானடுவேயின்பவடிவாயிருந்தபொருளே, பசையறியாமனத்தவாக்கும்பசையறிவித்தருள்பரிந்தநடத்தரசேயென்பாட்டுமணிந்தருளே. (௫௯)

என்னுயிருமென்னுடலுமென்பொருளும்யானேயிசைந்துகொடுத்திடவாங்கியிட்டதன்பின்மகிழ்ந்தே, தன்னுயிருந்தன்னுடலுந்தன்பொருளுமெனக்கேதந்துகலந்தெனைப்புணர்ந்ததனித்தபெருஞ்சுடரே, மன்னுயிருக்குயிராகியின்பமுமாய்நிறைந்தமணியேயென்கண்ணேயென்வாழ்முதலேமருந்தே, மின்னியபொன்மணிமன்றில்விளங்குநடத்தரசேமெய்யுமணிந்தருள்வோயென்பொய்யுமணிந்தருளே. (௬௦)

மன்னுகின்றபொன்வடிவுமந்திரமாம்வடிவும்வான்வடிவுங்கொடுத்தெனக்குமணிமுடியுஞ்சூட்டிப், பன்னுகின்றதொழிலைந்துஞ்செய்திடவேபணித்துப்பண்புறவென்னகம்புறமும்விளங்குகின்றபதியே, யுன்னுகின்றதோறுமெனக்குள்ளமெலாமினித்தேயூறுகின்றதெள்ளமுதேயொருதனிப்பேரொளியே, மின்னுகின்றமணிமன்றில்விளங்குநடத்தரசேமெய்யுமணிந்தருள்வோயென்பொய்யுமணிந்தருளே. (௬௧)

நன்மையெலாந்தீமையெனக்குறித்தோடித்திரியுநாய்க்குலத்திற்கடையானநாயடியேனியற்றும், புன்மையெலாம்பெருமையெனப்பொறுத்தருளிப்புலையேன்பொய்யுரைமெய்யுரையாகப்புரிந்துமகிழ்ந்தருளித், தன்மையெலாமுடையபெருந்தவிசேற்றிமுடியுந்தரித்தருளிஐந்தொழில்செய்சதுரளித்தபதியே, யின்மையெலாந்தவிர்த்தடியாரின்பமுறப்பொதுவிலிலங்குநடத்தரசேயெனனிசையுமணிந்தருளே. (௬௨)

விழுக்குலத்தாரருவருக்கும்புழுக்குலத்திற்கடையேன் மெய்யுரையேன்பொய்யுரையைவியந்துமகிழ்ந்தருளி, முழுக்குலத்தோர்முடிசூட்டியைந்தொழில்செயவென வேமொழிந்தருளியெனையாண்டமுதற்றனிப்பேரொளியே, யெழுகுலத்திற்புரிந்தமணக்கழுகுலத்தார்தமக்கே யெட்டாதநிலையேநானெட்டியபொன்மலையே, மழுகுலத்தாரேயோற்றமணிமன்றினடம்புரியும் மாநடத்தென்னரசேயென மாலையணிந்தருளே. (௬௩)

கலைக்கொடிகண்டறியாதபுலைக்குடியிற்கடையேன்கைதவனேன்பொய்தவமுங்கருதிலுவந்தருளி, மலைக்குயர்மாத்தவிசேற்றிமணிமுடியுஞ்சூட்டி மகனேநீவாழ்கவெனவாழ்த்தியவென்குருவே, புலைக்கொடியாரொருசிறிதும்புலப்படக்கண்டறியாப பொன்னேநானுண்ணுகின்றபுத்தமுதத்திரளே, விலைக்கறியாமாமணியேவெறுப்பறியாமருந்தேவிளங்குநடத்தரசேயென்விளம்புமணிந்தருளே. (௬௪)

மதமென்றுஞ்சமயமென்றுஞ்சாத்திரங்களென்றும் மன்னுகின்றதேவரென்றும் மற்றவர்கள்வாழும், பதமென்றும்பதமடைந்தபத்தரநுபவிக்கப்பட்டவநுபவங்களென்றும்பற்பலவாவிரிந்த, விதமொன்றுந்தெரியாதேமயங்கியவென்றனக்கேவெட்ட

வெளியாயறிவித்திட்டவருளிறையே, சதமொன்றுஞ்சுத்தசிவசன்மார்க்கப்பொது
விலதனிநடஞ்செயரசேயெனச்சாற்றுமணிந்தருளே. (சுரு)

என்னாசையெல்லாந்தன்னருள்வடிவந்தனக்கேயெய்திடச்செய்திட்டருளியெனை
யுடனிருத்தித், தன்னாசையெல்லாமென்னுள்ளத்தேவைத்துத்தானுமுடனிருந்த
ருளிக்கலந்தபெருந்தகையே, யென்னாவென்னாருயிரேயப்பாவென்னமுதேயாவாவென
றெனையாண்டதேவாமெய்ச்சிவமே, பொன்னாருமம்பொதுவில்நடம்புரிகின்றவரசேபு
ண்ணியனேயெனமொழிபபூங்கண்ணியுமேற்றருளே. (சுசு)

தன்னரசேசெலுத்திநின்றதத்துவங்களெல்லாந்தனித்தனியென்வசமாகித்தா
ழ்ந்தேவலியற்ற, முன்னரசும்பின்னரசும்நடுவரசும்போற்ற முன்னுமண்டபிண்டங்க
ளெவற்றினுமெப்பாலு, மென்னரசேயென்றுரைக்கவெனக்குமுடிசூட்டி யின்பவடி
வாக்கியென்றுமிலங்கவைத்தசிவமே,யென்னரசேயென்னுயிரேயென்னிருக்கண்மணி
யேயிணையடிப்பொன்மலர்களுக்கென்னிசையுமணிந்தருளே. (சுஎ)

பரவெளியேநடுவெளியேயுபசாந்தவெளியேபாழ்வெளியேமுதலாகவேழ்வெளிக
கப்பாலும், விரவியமாமறைகளெலாந்தனித்தனிச்சென்றளந்துமெய்யளவுகாணாதே
மெலிந்திளைத்துப்போற்ற, வுரவிலவைதேடியவவ்வெளிகளுக்குள்வெளியாயோங்கி
யவ்வவ்வெளிகளைத்தன்னுள்ளடக்கும்வெளியாய, கரையறநின்றோங்குகின்றசுத்தசிவ
வெளியேகனிந்தநடத்தரசேயென்கருத்துமணிந்தருளே. (சுஅ)

வெய்யலிலேநடந்திளைப்புமேவியவக்கணத்தேமிகுநிழலுந்தண்ணமுதுந்தந்தவ
ருள்விளைவே, மையல்சிறிதுற்றிடத்தேமடந்தையர்கள்தாமேவலிந்துவரச்செய்வித்த
மாணபுடையநட்பே, கையறவாற்கலங்கியபோதக்கணத்தேபோந்துகையறவுதவிர்த்
தருளிக்காத்தளித்ததுணையே, ஐயமுறேலென்றெனையாண்டமுதளித்தபதியேயம்பல
த்தென்னரசேயெனலங்கலணிந்தருளே. (சுகூ)

கொலைபுரிவார்தவிரமற்றையெல்லாருநின்னதுகுலத்தாரேநீயெனதுகுலத்துமுதன்
மகனே, மலைவறவேசுத்தசிவசமரசசன்மார்க்கம் வளரவளர்ந்திருக்கவெனவாழ்த்திய
வென்குருவே, நிலைவிழைவார்தமைக்காக்குநீதியனேயெல்லாநிலையும்விளங்குறவரு
ளிலநிறுத்தியசற்குணனே, புலையறியாப்பெருந்தவர்கள்போற்றமணிப்பொதுவிலபு
னிதநடத்தரசேயெனபுகலுமணிந்தருளே. (எ0)

உயிர்க்கொலையும்புலைப்பொசிப்புமுடையவர்களெல்லாமுறவினத்தாரல்லரவர்பு
றவினத்தாராகப், பயிர்ப்புறுமோர்பசிதவிர்த்தன்மாத்திரமேபுரிகபரிந்துமற்றைப்ப
ண்புரையேல்நண்புதவேலிங்கே, நயப்புறுசன்மார்க்கமவரடையளவுமிதுதான்நமதா
ணையென்றெனக்குநவின்றவருளிறையே, * மயர்ப்பறுமெய்த்தவர்போற்றப்பொது
வில்நடம்புரியுமாநடத்தென்னரசேயென்மாலையணிந்தருளே. (எக)

வன்புடையார்கொலைகண்டுபுலையுண்பார்சிறிதும்மரபினரன்றாதலினால்வகுத்தவ
ரளவி, லன்புடையவென்மகனேபசிதவிர்த்தல்புரிகவன்றியருட்செயலொன்றுஞ்செ
யத்துணியேலென்றே, யின்புறவென்றனக்கிசைத்தவென்குருவேயெனைத்தானீன்

* மயர்ப்பு - சோர்வு.

றதனித்தந்தையேதாயேயென்னிறையே, துனபறமெய்த்தவாசூழ்நதுபோற்றுதிருப்
பொதுவிற்றாயநடத்தரசேயென்சொல்லுமணிந்தருளே. (௭௨)

கொடியவரேகொலைபுரிந்துபுலைநுகர்வாரெனினுஙகுறித்திடுமோராபத்தில்வருந
துகினறபோது, படியிலதைப்பார்த்துகவேலவாவருத்தந்துன்பம்பயந்தீர்த்துவிடுகவெ
னப்பரிந்துரைத்தகுருவே, நெடியவரோநான்முகரோநீத்தியரோபிறரோஙனமலரேயென்கி
ன்றேரெல்லாருங்காண, அடியுமுயாமுடியுமெனக்களித்தபெரும்பொருளேயம்பலத
தென்னரசேயென்னலங்கலணிந்தருளே. (௭௩)

தயையுடையாரெல்லாருஞ்சமரசசன்மார்க்கம்சார்ந்தவரேயிஙகவர்கள்தம்மோடுங
கூடி, நயமுறுநல்லருணெறியிற்களித்துவிளையாடிநண்ணுகவெனறெணக்கிசைத்தந
ண்புறுசற்குருவே, யுயலுறுமென்னுயிர்க்கினியவுறவேயெனனறிவிலோங்கியபேரன்
பேயென்னனபிலுறுமொளியே, மயலறுமெய்த்தவர்சூழ்நதுபோற்றுமணிமன்றில்மா
நடத்தென்னரசேயெனமாலையணிந்தருளே. (௭௪)

அருளுடையாரெல்லாருஞ்சமரசசன்மார்க்கமடைந்தவரேயாதலினலவருடனேகூ
டித், தெருளுடையவருணெறியிற்களித்துவிளையாடிச்செழித்திடுகவாழ்கவெனச்செ
ப்பியசற்குருவே, பொருளுடையபெருங்கருணைபூரணமெய்ச்சிவமேபோதாந்தமுத
லாறுநிறைந்தொளிருமொளியே, மருளுடையார்தமக்குமருணீக்கமணிப்பொதுவில்
வயங்குநடத்தரசேயென்மாலையுமேற்றருளே. (௭௫)

வெம்மாலைச்சிறுவரொடும்விளையாடித்திரியுமிகச்சிறியபருவத்தேவியந்துனைநம
து, பெம்மானென்றடிகுறித்துப்பாடும்வகைபுரிந்தபெருமானேநான்செய்தபெருந்தவ
மெய்ப்பயனே, செம்மாந்தசிறியேனைச்சிறுநெறியிற்சிறிதுஞ்செலுத்தாமற்பெருநெறி
யிற்செலுத்தியநற்றுணையே, யம்மானேயெனனுவிக்கானபெரும்பொருளே யம்பலத்
தென்னரசேயென்னலங்கலணிந்தருளே (௭௬)

ஆணவமாமிருட்டறையிற்கிடந்தசிறியேனையணிமாயைவிளக்கறையிலமர்த்தியறி
றிவளித்து, நீணவமாந்தத்துவப்பொனமேடைமிசையேறநிறைந்தவருளமுதளித்து
நித்தமுறவளர்த்து, மாணுறவெல்லாநலமுங்கொடுத்துலகமறியமணிமுடியுஞ்சூட்டி
யவெனவாழ்முதலாம்பதியே, யேணுறுசிற்சபையிடத்துமபொற்சபையினிடத்துமில
ங்குநடத்தரசேயென்னிசையுமணிந்தருளே. (௭௭)

பான்மறுத்துவிளையாடுஞ்சிறுபருவத்திடையே பகருமுலகிச்சையொன்றும்பதி
யாதென்னுளத்தே, மானமறுத்துவிளங்குதிருவைநதெழுத்தேபதியவைத்தபெருவாழ்
வேயெனவாழ்விலுறுஞ்சுகமே, மீனமறுத்துச்சுடாமயமாயவிளங்கியதோர்விணணே
விண்ணனந்தமுள்ளடங்கவிரிந்தபெருவெளியே, ஊனமறுத்தபெருந்தவருக்கொளிவ
டிவங்கொடுத்தேயோங்குநடத்தரசேயென்னுரையுமணிந்தருளே. (௭௮)

மெய்ச்சுகமுமுயிர்ச்சுகமுமிகுங்கரணச்சுகமும்விளங்குபதச்சுகமுமதன்மேல்வீட்
டுச்சுகமு, மெச்சுகமுந்தன்னிடத்தேயெழுந்தசுகமாகவெங்கணுமோர்நீக்கமறவெழுந்
தபெருஞ்சுகமே, யச்சுகமுமடையறிவுமடைந்தவருங்காட்டா ததுதானாயதுவதுவாய
ப்பாலாம்பொருளே, பொய்ச்சுகத்தைவிரும்பாதபுனிதர்மகிழ்ந்தேத்தும் பொதுநடத்
தென்னரசேயென்புகலுமணிந்தருளே. (௭௯)

அண்டவகையெவவளவோவவ்வளவுமவறறிலமைநதவுயிரெவ்வளவோவவ்வளவுமவைகள், கண்டபொருளெவவளவோவவ்வளவுமவற்றில்கலநதகலப்பெவ்வளவோவவ்வளவுநிறைநதே, விணடகுமோநாதவெளிசுததவெளிமோனவெளிஞானவெளிமுதலாமவெளிகளெலாமநிரம்பிக், கொணடதுவாயவிளங்குகின்றசுததசிவமயமேகுலவுநடததரசேயென்குற்றமுங்கொணடருளே (அ௰)

சததியநானமுகரணந்தநாரணாமற்றுளவாநதலைவரவரவருலகிற்சாரநதவர்கள்பிறாக, எததிசையததிசையாகவிசைககுமண்டபபகுதியெததனையோகோடிகளிலிருக்குமுயிரததிரளக, எததனைபேருண்டாலுமணுவளவுங்குறையாதருளவெளியிலொளிவடிவாயானநதமயமாயச, சுததசிவவநுபவமாய்விளஙகியதெள்ளமுதே தூயநடததரசேயென்சொல்லுமணிநதருளே. (அக)

பொறிகரணமுதற்பலவாந்தத்துவமுமவற்றைப்புரிந்தியககிநடததுகின்றபூரணருமவாக்குச், செறியுமுபகாரிகளாஞ்சததிகளுமவரைசசெலுததுகினறசததர்களுநதன்னொளியால்விளங்க, அறிவறிவாயவ்வறிவுக்கறிவாயெவ்விடததுமானதுவாய்ததானதுவாயதுவதுவாயநிறைநதே, நெறிவழஙகப்பொதுவிலருட்டிருநடஞ்செயயரசேநின்னடியேன்சொனமாலைநிலைக்கவணிநதருளே. (அ௨)

உண்ணுகினறவூண்வெறுததுவற்றியும்புற்றெழுந்து மொருகோடிப்பெருந்தலைவராஙகாங்கேவருநதிப், பண்ணுகினறபெருந்தவததுங்கிடைப்பரிதாய்ச்சிறியபயல்களினுஞ்சிறியேற்குககிடைததபெருமபதியே, நண்ணுகின்றபெருஙகருணையமுதளிததெனனுளததேநாளுகித்தாளுகியமாந்தருளிநானரு, ளெண்ணுகின்றபடியெலலாமருள்கினறசிவமேயிலஙகுநடத்தரசேயென்னிசையுமணிநதருளே (அங)

கொள்ளைவினைக்கூட்டுறவாற்கூட்டியபலசமயக கூட்டமுமககூட்டத்தேகூவுகின்றகலையுங், கள்ளமுறுமககலைகளகாட்டியபலகதியுங்காட்சிகளுஙகாட்சிதருகடவுளருமெல்லாம, பிளளைவிளையாட்டெனநன்கறிவிததிஙகெனையேபிள்ளையெனககொண்டுபிள்ளைப்பெயரிட்டபதியே, தளளரியமெய்யடியாாபோறறமணிமனறிற்றனிநடஞ்செய்யரசேயென்சாற்றுமணிந்தருளே. (அச)

நால்வருணமாசசிரமமாசாரமுதலா நவினறகலைசசரிதமெலாம்பிள்ளைவிளையாட்டே, மேலவருணநதோலவருணஙகணடறிவாரிலைநீவிழிததிதுபாரென்றெனககுவிளம்பியசற்குருவே, காலவருணஙகலைபாதேவீணிலலையாதேகாணபனவெலலாமெனககுககாட்டியமெயப்பொருளே, மாலவருணங்கடநதவரைமேல்வருணததேற்றவயஙகுநடததரசேயென்மாலையணிநதருளே. (அரு)

எவவிடததுமெவ்வுயிாக்குமிலங்குசிவமொன்றேயென்றுணையென்மகனேயிரண்டில்லையாங்கே, செவவிடததேயருளொடுசோததிரணடெனககணடறிநீதிகைப்படையேலென்றெனககுச்செப்பியசறகுருவே, அவவிடததேயுவ்விடததேயமாந்ததுபோற்காட்டியங்குமிஙகுமபபுறமுமெஙகுநிறைபொருளே, ஒவ்விடச்சிற்சபையிடத்தும்பொறசபையினிடத்துமோங்குநடததரசேயென்னுரையுமணிந்தருளே. (அசு)

இயல்வேதாகமங்கள்புராணங்களிதிகாசமிவைமுதலாவிந்திரசாலங்கடையாவுரைப்பார், மயலொருநூலமாததிரந்தான்சாலமெனவறிந்தார் மகனேநீநூலனைத்துஞ்சால

மெனவறிக, செயலனைத்துமருளொளியாற்காண்கவெனவெனக்கே திருவுளம்பற்றிய
ஞானதேசிகமாமணியே, மயலறியாவறிவுடையாரெல்லாரும்போற்றவோங்கின்றவரசே
யென்னலங்கலணிந்தருளே. (அஎ)

தோன்றியவேதாகமத்தைச்சாலமெனவுரைத்தேம்சொற்பொருளுமிலக்கியமும்
பொய்யெனக்கண்டறியே, ஊன்றியவேதாகமத்தினுண்மைநினக்காகுமுலகறிவேதா
கமத்தைப்பொய்யெனக்கண்டுணரவா, யான்றதிருவருட்செங்கோலினக்களித்தோ
ம்நீயேயாளகவருளொளியாலெனறளித்ததனிச்சிவமே, யேன்றதிருவமுதெனக்குமீந்த
பெரும்பொருளேயிலங்குநடத்தரசேயென்னிசையுமணிந்தருளே. (அஅ)

நான்முகர்நல்லுருத்திரர்கள்நாரணரிந்திரர்கள்நவிலருகர்புத்தர்முதன்மதத்தலைவ
ரெல்லாம், வான்முகத்திற்றோன்றியருளொளிசிறிதேயடைந்துவானகத்தும்வையகத்
துமமனம்போனபடியே, தேன்முகந்துண்டவரெனவேவிளையாடாநின்றசிறுபிள்ளை
க்கூட்டமெனவருட்பெருஞ்சோதியினாற், றூன்மிகக்கண்டறிகவெனச்சாற்றியசற்கு
ருவேசபையினிடத்தரசேயென்சாற்றுமணிந்தருளே. (அகூ)

தவறுதவேதாந்தசித்தாந்தமுதலாச சாற்றுகின்றவந்தமெலாந்தனித்துரைக்கும்
பொருளே, யிவறுதசுத்தசிவசன்மார்க்கநிலையிலிருந்தருளாம்பெருஞ்சோதிகொண்டறி
தல்கூடு, மெவராலும்பிறிதொன்றாற்கண்டறிதலகூடாதென்றுணையென்மகனேயரு
ட்பெருஞ்சோதியைத்தான, தவறுதுபெற்றனைநீவாழ்கவெனறபதியேசபையினடத்
தரசேயெனசாற்றுமணிந்தருளே. (கூ0)

ஐயமுறேலென்மகனேயிப்பிறப்பிற்றானேயடைவதெலாமடைந்தனைநீயஞ்சலை
யெனறருளி, வையமிசைத்தனியிருத்திமணிமுடியுஞ்சூட்டிவாழ்கவெனவாழ்த்திய
வெனவாழ்க்கைமுதற்பொருளே, துய்யவருட்பெருஞ்சோதிசுத்தசிவவெளியேசுகம
யமேயெலலாஞ்செய்வல்லதனிப்பதியே, யுய்யுநெறிகாட்டிமணிமன்றிடத்தேநடிக்கு
மொருமைநடத்தரசேயெனனுரையுமணிந்தருளே. (கூக)

காலையிலேயென்றனக்கேகிடைத்தபெரும்பொருளே களிப்பேயெனகருத்தகத்
தேகனிந்தநறுங்கனியே, மேலையிலேயிம்மையிலேவொருமையிலேதவத்தாலமேவுகி
ன்றபெரும்பயனுமவிளைவையெலாந்தருமச், சாலையிலேயொருபகலிற்றந்ததனிப்பதி
யேசமரசசன்மார்க்கசங்கத்தலையமர்ந்தநிதியே, மாலையிலேசிறந்தமொழிமாலையணிந்
தாடுமாநடத்தென்னரசேயெனமாலையணிந்தருளே. (கூஉ)

சிற்பதமுந்தற்பதமும்பொற்பதத்தேகாட்டுஞ்சிவபதமேயானந்தத்தேம்பாகின்ப
தமே, சொற்பதங்களகடந்ததனிமுப்பதமுங்கடந்தேதுரியபதமுங்கடந்தபெரியத
னிப்பொருளே, நற்பதமென்முடிசூட்டிக்கற்பதெலாங்கணத்தேநானறிந்துதானாகந
ல்கியவெனகுருவே, பற்பதத்துத்தலைவரெலாம்போற்றமணிமன்றிற்பயிலுநடத்தர
சேயெனபாடலணிந்தருளே. (கூங)

ஆதியிலேயெனையாண்டெனனறிவகத்தேயமர்ந்தவப்பாவென்னன்பேவெனு
ருயிரேயமுதே, வீதியிலேவிளையாடித்திரிந்தபிள்ளைப்பருவமிகப்பெரியபருவமெனவி
யந்தருளியருளாந், சோதியிலேவிழைவுறச்செய்தினியமொழிமாலைதொடுத்திடச்செ
யதணிந்துகொண்டதுரையேசிற்பொதுவாம், நீதியிலேநிறைந்தநடத்தரசேயின்றடி
யேன்நிகழ்த்தியசொன்மாலையுநீதிகழ்த்தியணிந்தருளே. (கூச)

கணக்குவழக்கதுகடந்தபெருவெளிக்குநடுவேகதிர்பரப்பிவிளங்குகின்றகண்ணி
றைந்தசுடரே, பிணக்குமுறுமன்பர்கள்தம்மிதயவெளிமுழுதுமினிதுவிளங்குறநடுவே
யிலங்குமொளிவிளக்கே, மணக்குநறுமணமேசின்மயமாயென்னுளத்தேவயங்குதனி
ப்பொருளேயென்வாழ்வேயென்மருந்தே, பிணக்கறியாப்பெருந்தவர்கள்சூழமணிமன்
றிற்பெருநடஞ்செய்யரசேயென்பிதற்றுமணிந்தருளே. (௯௫)

அடிச்சிறியேனச்சமெலாமொருகணத்தேநீக்கியருளமுதமிகவளித்தோரணியுமெ
னக்கணிந்து, கடிக்கமலத்தயன்முதலோர்கண்டுமிகவியப்பக்கதிர்முடியுஞ்சூட்டியெ
னைக்களித்தாண்டபதியே, வடித்தமறைமுடிவயங்குமாமணியே [illegible]
குக்கடந்தபெருவானவொளியே, படித்தலத்தார்வானுலகத்தாரயர்வியப்ப [illegible]
விறபரிந்தநடத்தரசேயென்பாட்டுமணிந்தருளே. (௯௬)

எத்துணையுஞ்சிறியேனைநான்முகன்மால்முதலோரேறரிதாமபெருநிலைமேலேற்றி
யுடனிருந்தே, மெய்த்துணையாந்திருவருட்பேரமுதமிகவளித்துவேண்டியவாறடிநா
யேன்விளையாடப்புரிந்து, சுத்தசிவசன்மார்க்கநெறியொன்றேயெங்குந்துலங்கவரு
ள்செய்தபெருஞ்சோதியனேபொதுவில, சித்துருவாய்நடம்புரியுமுத்தமசற்குருவேசி
ற்சபையென்னரசேயென்சிறுமொழியேற்றருளே. (௯௭)

இருந்தவிடந்தெரியாதேயிருந்தசிறியேனையெவ்வுலகிலுள்ளவருமேத்திடமேலே
ற்றி, யருந்தவருமயன்முதலாந்தலைவர்களுமுளத்தே யதிசயிக்கத்திருவமுதுமளித்த
பெரும்பதியே, திருந்துமறைமுடிப்பொருளேபொருண்முடியிலுணர்ந்தோர்திகழமு
டிந்துட்கொண்டசிவபோகப்பொருளே, பெருந்தவர்கள்போற்றமணிமன்றில்நடம்பு
ரியும்பெருநடத்தென்னரசேயென்பிதற்றுமணிந்தருளே. (௯௮)

குணமறியேன்செய்தபெருங்குற்றமெலாங்குணமாகக் கொண்டருளியென்னு
டையகுறிப்பெல்லாமுடித்து, மணமுறுபேரருளினபவமுதமெனக்களித்துமணிமுடி
யுஞ்சூட்டியெனைவாழ்கவெனவாழ்த்தித், தணவிலாதென்னுளத்தேதானகலந்துநா
னுந் தானுமொருவடிவாகித்தழைத்தோங்கப்புரிந்தே, அணவுறுபேரருட்சோதியரசு
கொடுத்தருளியாடுகின்றவரசேயென்னலங்கலணிந்தருளே. (௯௯)

தலைகாலிங்கறியாதேதிரிந்தசிறியேனைத் தானேவலிந்தாட்கொண்டருளித்தனை
முழுதுந்தவிர்த்தே, மலைவறுமெய்யறிவளித்தேயருளமுதமருத்திவல்லபசத்திகளெல்
லாமருவியிடப்புரிந்து, நிலையுறவேதானுமடியேனுமொருவடிவாய் நிறையநிறைவித்
துயர்ந்தநிலையதன்மேலமர்த்தி, அலர்தலைப்பேரருட்சோதியரசுகொடுத்தருளியாடுகி
ன்றவரசேயென்னலங்கலணிந்தருளே. (௧௦௦)

திருச்சிற்றம்பலம்.

# வரம்பில்வியப்பு.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

### திருச்சிற்றம்பலம்.

பொன்புனைபுயனுமயனுமற்றவரும்புகலரும்பெரியவோர்நிலையி
லினபுருவாகியருளொடுமெவிளங்கியற்றலையாதியைந்தொழிலுந்
தன்பொதுச்சமுகதனதவாகளியற்றத்தனியாசியற்றுமோதலைவ
னன்பெனுஙகுடிசைநுழைந்தனஞஞலவன்றனைமறுப்பவாயாரே. (௧)

மன்பதைவகுக்கும்பிரமநாரணாகள்மன்னுருத்திரர்களேமுதலா
வொன்பதுகோடித்தலைவர்களாங்காஙகுறுபெருந்தொழில்பலவியற்றி
யின்புறச்சிறிதேகடைககணிததருளியிலங்குமோரிறைவனினறடியே
னன்பெனுஙகுடிசைநுழைந்தனனஙதோவவன்றனைமறுப்பவாயாரே. (௨)

தன்னிகரில்லாத்தலைவவென்றாற்றித்தனித்தனிமறைகளாகமங்க
ளுன்னிநின்றேடியுணாந்துணர்ந்துணராவொருதனிப்பெரும்பதியுவந்தே
புன்னிகரில்லாப்புலையனேன்பிழைகள்பொறுத்தருட்பூரணவடிவா
யெனனுளம்புகுநதேநிறைந்தனனந்தோவெந்தையைததடுப்பவாயாரே. (௩)

பாலவகையாணோபெண்கொலோவிருமைப்பாலதோபாலுருவதுவோ
ஏல்வகையொன்றோவிரண்டதோவனாதியியற்கையோவவதியிலியல்போ
மேல்வகையாதோவெனமறைமுடிகள்விளம்பிடவிளங்குமோதலைவன்
மால்வகைமனததேனுளக்குடில்புகுந்தான்வள்ளலைததடுப்பவாயாரே. (௪)

வரம்பெறுமான்மவுணர்ச்சியுஞ்செல்லாவருபரவுணர்ச்சியுமாட்டா
பரம்பரவுணாசசிதானுநின்றறியாப்பராபரவுணர்ச்சியுமபறறு
வுரம்பெறவுணாவாராயாரெனப்பெரியருணாததிடவோஙகுமோதலைவன்
கரம்பெறுகனிபோலென்னுளம்புகுந்தான்கடவுளைததடுப்பவாயாரே. (௫)

படைத்திடன்முதலைந்தொழில்புரிந்திலங்கும்பரம்பரவொளியெலாமணுவிற்
கிடைத்திடக்கீழ்மேலநடுவெனககாட்டாகிளரொளியாயொளிக்கெல்லாம்
அடைத்தகாரணமாய்க்காரணங்கடந்தவருட்பெருஞ்சோதியாமொருவன்
கடைததனிச்சிறியேனுளமபுகுநதமாந்தான்கடவுளைததடுப்பவர்யாரே. (௬)

அளவெலாஙகடந்தபெருந்தலையண்டவடுககெலாமமமவோரணுவின்
பிளவிலோர்கோடிக்கூற்றிலொன்றாகப்பேசநின்றோஙகியபெரியோன்
களவெலாந்தவிர்த்தென் கருத்தெலாநிரப்பிககருணையாரமுதளிததுளமாம
வளவிலேபுகுந்துவளாகின்றானந்தோவள்ளலைத்தடுப்பவாயாரே. (௭)

உள்ளவாமண்டகோடிகோடிகளிலுளவுயிர்முழுவதுமொருங்கே
கொள்ளைகொணடிடினுமணுததுணையெனினுஙகுறைபடாப்பெருங்கொடைத்தலைவன
கள்ளநெஞ்சகததேனபிழையெலாமபொறுததுக்கருததெலாமினிதுஈதருளித
தள்ளருநிறதென னுள்ளகம்புகுநதானறநதையைததடுப்பவர்யாரே. (௮)

அறிந்தனவறிந்தாங்கறிந்தறிந்தறியாதையகோவையகோவறிவின்
மறிந்தனமயாந்தேமெனமறையனந்தம்வாயகுழைந்துணாததுணாத்துணாயு
முறிந்திடவாளாவிருந்தவெனறறிஞாமொழியுமோா தனிப்பெருந்தலைவன்
செறிந்தெனதுளத்திறசோந்தனனவன்றன்றிருவுளந்தடுப்பவர்யாரே. (௯)

கருமுதற்கருவாய்க்கருவினுட்கருவாய்க்கருவெலாங்காட்டுமோர்கருவாய்க்
குருமுதற்குருவாய்க்குருவெலாங்கிடைத்தகொள்கையாய்க்கொள்கையோடளவா
அருமுதலருவாயல்லவாயப்பாலருட்பெருஞ்சோதியாந்தலைவன்
மருவியென்னுளத்திற்புகுந்தனனவன்றன்வண்மையைத்தடுப்பவாயாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## திருவடிப்புகழ்ச்சி.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வானிருக்கும்பிரமர்களுநாரணரும்பிறரு மாதவம்பண்ணுட்புரிந்துமணிமாடநடுவே, தேனிருக்குமலரணைமேற்பளிக்கறையினூடே திருவடிசேர்த்தருள்கவெனச்செப்பிவருந்திடவும், நானிருக்குங்குடிசையிலேவலிந்துநுழைந்தெனக்கேநல்லதிருவருளமுதநல்கியதன்றியுமென், ஊனிருக்குங்குடிசையிலுமுவந்துநுழைந்தெளியேனுள்ளமெனுஞ்சிறுகுடிசையுள்ளுநுழைந்தனையே. (௧)

படிசெய்பிரமன்முதலோர்பற்பலநாண்முயன்றேபகலொளிசெய்நவமணிகள்பதித்தசிங்காதனத்தே, யடிசெய்தெழுந்தருளியெமையாண்டருளல்வேண்டு மரசேயென்றவரவருமாங்காங்கேவருந்த, வடிசெய்மறைமுடிநடுவேமன்றகத்தேநடிக்குமலரடிகள்சிவப்பவொருவளமுமிலாவசுத்தக், குடிசைநுழைந்தனையேயென்றேசுவரேயன்பாகூசாமலென்னுளமாங்குடிசைநுழைந்தனையே. (௨)

உள்ளபடியுள்ளதுவாயுலகமெலாம்புகினு மொருசிறிதுந்தடையிலதாயொளியதுவேமயமாய், வெள்ளவெளிநடுவுளதாயியற்கையிலேவிளங்கும் வேதமுடியிலக்கியமாமேடையிலேயமர்ந்த, வள்ளன்மலரடிசிவப்பவந்தெனதுகருத்தின்வண்ணமெலாமுவந்தளித்துவயங்கியபேரின்பங், கொள்ளைகொளக்கொடுத்ததுதானபோதாதோவரசேகொடுமைபுலையேனகுடிசையிலுங்குலவிநுழைந்தனையே. (௩)

தடையறியாத்தகையினதாய்த்தன்னிகரில்லதுவாய்த்தத்துவங்களனைத்தினுக்குந்தாரகமாயவைக்கு, விடையறியாததனிமுதலாய்விளங்குவெளிநடுவேவிளங்குகின்றசுத்தியமாமேடையிலேயமர்ந்த, நடையறியாத்திருவடிகள்சிவந்திடவந்தெனதுநவிலவனைத்துந்தவிர்த்தருளிஞானவமுதளித்தாய், கொடையிதுதானபோதாதோவென்னரசேயடியேன்குடிசையிலுங்கோணுதேகுலவிநுழைந்தனையே. (௪)

இறையளவுந்துரிசிலதாய்த்தூய்மையதாய்நிறைவாயியற்கையதாயநுபவங்களைவைக்குமுதலிடமாய், மறைமுடியோடாகமத்தின்மணிமுடிமேன்முடியாய்மன்னுகி

ன்றமெய்ஞ்ஞானமணிமேடையமர்ந்த, நிறையருட்சீரடிமலர்கள்சிவந்திடவந்தடியேன்னினைத்தவெலாங்கொடுத்தருளிநிலைபெறச்செய்தனையே, குறைவிலதிப்பெருவரந்தானபோதாதோவரசேகொடும்புலையேன்குடிசையிலுங்குலவிநுழைந்தனையே. (௫)

உருவினதாயருவினதாயுருவருவாயுணாவாயுள்ளதுவாயொருதன்மையுடையபெரும்பதியாய், மருவியவேதாந்தமுதல்வகுத்திடுங்கலாந்தவளாயதன்மேலருவவெளியில்வயங்கியமேடையிலே, திருவுறவேயமர்ந்தருளுந்திருவடிகள்பெயர்ந்தேசிறியேன்கண்ணடைந்தருளிதிருவனைத்துங்கொடுத்தாய்,குருவேயெனரசேயீதமையாதோவடியேன்குடிசையிலுங்கோணுதேகுலவிநுழைந்தனையே. (௬)

மணமுளதாயொளியினதாய்மந்திரவாதரமாய் வல்லதுவாய்நலலதுவாய்மதங்கடந்தவளைப்பாய், வணமுளதாய்வளமுளதாயவயங்குமொருவெளியில்மணிமேடையமர்ந்ததிருவடிமலாகளபெயாந்தே, எணமுளவென்பாலடைந்தெனெண்ணமெலாமளித்தா யிங்கிதுதானபோதாதோவெனரசேஞான, குணமலையேயருளமுதேகுருவேயென்பதியேகொடும்புலையேன்குடிசையிலுங்குலவிநுழைந்தனையே. (௭)

சிரம்பெறுவேதாகமத்தினடிநடுவுமுடியுஞ் செல்லாதநிலையதுவாயெல்லாம்வல்லதுவாய், பரம்பரமாய்ப்பரமபரமேறபரவுசிதமபரமாயப்பதிவெளியில்விளங்குகின்றமணிமேடையிலே, தரங்குலவவமர்ந்ததிருவடிகள்பெயாந்தெனதுசார்புடைந்தென்னெண்ணமெலாந்தந்தனையெனரசே, குரங்குமனச்சிறியேனுக்கிங்கிதுபோதாதோகொடும்புலையேன்குடிசையிலுங்குலவிநுழைந்தனையே. (௮)

பறறியபற்றனைத்தினையும்பற்றறவிட்டறிவாம் பானமையொன்றேவடிவாகிப்பழுத்தபெரியவரும, உற்றறிதற்கரியவொருபெருவெளிமேல்வெளியிலோங்குமணிமேடையமாந்தோங்கியசேவடிகள, பெறறறியப்பெயாத்துவந்தென்கருத்தனைத்துங்கொடுத்தே பிறவாமலிறவாமறபிறங்கவைத்தாயரசே, கொறறமுளேன்றனக்கிதுதான்போதாதோகொடியேன குடிசையிலுங்கோணுதேகுலவிநுழைந்தனையே. (௯)

கருவியொடுகரணமெலாங்கடந்துகடந்தகன்மேற்காட்சியெலாங்கடந்ததன்மேற்காணுங்கடந்து, வொருநிலையினனுபவமேயுருவாகிப்பழுத்தவுணாசசியினுங்காணுமலோங்குமொருவெளியில, மருவியதோாமேடையிலேவயங்கியசேவடிகள்மலாந்திவந்தென்கருத்தனைத்தும்வழங்கினையின்புறவே, குருமணியேயெனரசேயெனக்கிதுபோதாதோகொடும்புலையேன்குடிசையிலுங்குலவிநுழைந்தனையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## இதுவுமது.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

அடுத்தானையடியேனையஞ்சேலென்றிங் காண்டானைச்சிறுநெறிகளடையாதென்
னைத், தடுத்தானைப்பெருநெறிக்குத்தடைதீர்த்தானைத்தனதருளுந்தன்பொருளுந்தா
னேயென்பாற், கொடுத்தானைக்குற்றமெலாங்குணமாகக்கொள்ளுங்குணத்தானைச்சமய
மதக்குழிநின்றென்னை, யெடுத்தானையெல்லாஞ்செய்வல்லசித்தேயீந்தானைக்கண்டுக
ளித்திருக்கின்றேனே. (௧)

விரித்தானைக்கருவியெலாம்விரியவேதம் விதித்தானைவிளைத்தானைமெய்யேயெ
ன்னைத், தெரித்தானைநடம்பொதுவிற்செய்கின்றானைச்சிறியேனுக்கருளொளியாற்சிற
ந்தபட்டந், தரித்தானைத்தானேநானாகியென்றுந்தழைத்தானையென்னைத்தடுத்தாட்க
ொள்ள, வரித்தானையென்னுயிருக்கின்பானானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்
றேனே. (௨)

நட்டானைநட்டவென்னைநயந்துகொண்டேநம்மகனீயஞ்சலெனநவின்றென்சென்
னி, தொட்டானையெட்டிரண்டுஞ்சொல்லினானைத்துன்பமெலாந்தொலைத்தானைச்சோ
ரந்துரக்க, வொட்டானைமெய்யறிவேயுருவாயென்னுளுற்றானையுணர்ந்தார்க்குமுண
ர்ந்துகொள்ள, வெட்டானையென்னளவிலெட்டினானையெம்மானைக்கண்டுகளித்திருக்கி
ன்றேனே. (௩)

* சோற்றானைச்சோற்றிலுறுஞ்சுகத்தினானைத்துளக்கமிலாப்பாரானைநீரானைக்,
காற்றானைவெளியானைக்கனலானானைக்கருணைநெடுங்கடலானைக்களங்காணத், தோ
ற்றானைநான்காணத்தோற்றினானைச்சொல்லறியேன்சொல்லியபுன்சொல்லையெல்லா,
மேற்றானையென்னுளத்திலெய்தினானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (௪)

சேர்த்தானையென்றனைத்தன்னன்பரோடுசெறியாதமனஞ்செறியச்செம்பொற்று
ளி, லார்த்தானையம்பலத்திலாடாநின்றவானந்தநடத்தானையருட்கண்ணோக்கம், பார்த்தா
னைப்பாரானைப்பாராதானைப்பார்ப்பறவேபார்த்திருக்கப்பண்ணியென்னை, யீர்த்தானை
யைந்தொழினீயியற்றென்றானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (௫)

முளையானைச்சுத்தசிவவெளியிற்றனே முளைத்தானைமூவாதமுதலானானைக், கிளை
யானைக்களங்கமெலாங்களைவித்தென்னைக்காத்தானையென்பிழையைக்கருதிக்கோபம்,
விளையானைச்சிவபோகம்விளைவித்தானை வேண்டாமைவேண்டலிலைமேவியென்று,
மிளையானைமூத்தானைமூப்பிலானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (௬)

புயலானைமழையானையதிர்ப்பினானைப்போற்றியமின்னொளியானைப்புனிதஞான
ச், செயலானைச்செயலெல்லாந்திகழ்வித்தானைத்திருச்சிற்றம்பலத்தானைத்தெளியாரு
ள்ளே, யயலானையுறவானையன்புளானையறிந்தாரையறிந்தானையறிவாலன்றி, யியலா
னையெழிலானைப்பொழிலானானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (௭)

---

* சோறு - முத்தி.

தாயானைத்தந்தையெனக்காயினானைச்சற்குருவுமானானைத்தமியேனுள்ளே, மேயானைக்கண்காணவிளங்கினானைமெய்யமைமையெனக்களித்தானைவேதஞ்சொன்ன, வாயானைவஞ்சமிலாமனத்தினானைவரங்கொடுக்கவல்லானைமணிமன்றனறி, யேயானைத்துரியநடுவிருக்கின்றானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (அ)

தழைத்தானைத்தன்னையொப்பாரில்லாதானைத்தானேதானானானைத்தமியனேனைக், குழைத்தானையென்கையிலோர்கொடைதந்தானைக்குறைகொண்டுநின்றேனைக்குறித்துநோக்கி, யழைத்தானையருளமுதமளிக்கின்றானையச்சமெலாந்தவிர்த்தானையனபேயென்பா, லிழைத்தானையென்னிதயத்திருக்கின்றானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (௯)

உடையானையருட்சோதியுருவினானையோவானைமூவானையுலவாவின்பக், கொடையானையென்குறைதீர்த்தென்னையாண்டுகொண்டானைக்கொல்லாமை குறித்திடாரை, யடையானைத்திருச்சிற்றம்பலத்தினானையடியேனுக்கருளமுதமளிக்கவேபின, னிடையானையென்னாசையெல்லாந்தந்தவெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே.

திருச்சிற்றம்பலம்.

---

# இதுவுமது.

---

## எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அறிந்தானையறிவறிவுக்கறிவானானையருட்பெருஞ்சோதியினானையடியேனன்பிற்
செறிந்தானையெல்லாஞ்செயவல்லசித்தாய்ச்சிறந்தானைச்சிறுநெறியிற்சென்றார்தம்மைப்
பிறிந்தானையென்னுளத்திற்கலந்துகொண்டபிரியமுள்ளபெருமானைப்பிறவித்துன்பை
யெறிந்தானையென்னையெறியாதெடுத்தாண்டானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே

பாலானைத்தேனானைப்பழத்தினானைப்பலனுறுசெங்கரும்பானைப்பாய்ந்துவேகாக்
காலானைக்கலைசாகாத்தலையினானைக்காலெனறுந்தலையென்றுங்கருதற்கெய்தா
மேலானைமேனிலைமேலமுதானானைமேன்மேலுமெனதுளத்தேவிளங்கலன்றி
யேலானையென்பாடலேற்றுக்கொண்டவெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே.

உள்ளானைக்கதவுதிறந்துள்ளேகாணவுளவென்க்கேயுரைத்தானையுணராபாட்டைக், கொள்ளானையென்பாட்டைக்குறிக்கொண்டானைக் கொல்லாமைவிரதமெனக்கொண்டாரைத்தம்மைத், தள்ளானைக்கொலைபுலையைத்தள்ளாதாரைத்தழுவானையான்புரிந்ததவறுநோக்கி, எள்ளானைவிடாதவிர்த்திங்கென்னையாண்டவெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (௩)

உறவானையென்னுயிர்க்குளுயிரானானையுறுபிழைகள்செயினுமவையுன்னியென்னை
மறவானையறவாழிவழங்கினானைவஞ்சகர்க்குத்திருக்கோயில்வழிக்கபாடந்
திறவானையெனைனளவிற்றிறந்துகாட்டிச்சிற்சபையும்பொற்சபையுஞ்சேர்வித்தானை
இறவானைப்பிறவானையியற்கையானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (௪)

அகத்தானைப்புறத்தானையணுவானானையணுவினுக்குள்ளணுவானையதனுள்ளானை
மகத்தானைமகத்தினுமோர்மகத்தானானைமாமகத்தாயிருந்தானைவயங்காநின்ற
சகத்தானையண்டமெலாந்தானானானைத்தனியருளாம்பெருங்கருணைத்தாயானானை
இகத்தானைப்பரத்தானைப்பொதுவிலாடுமெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே.

செய்யானைக்கரியானைப்பசுமையானைத்திகழ்ந்திடுபொன்மையினானைவெண்மையானை
மெய்யானைப்பொய்யானைமெய்யபொயில்லாவெளியானையொளியானைவிளம்புவார்கருக்
கையானையென்னையெடுத்தணைத்துக்கொண்டகையானையெனையென்றுங்கைவிடாதா
னை, யையானையெவ்வுலகுமேத்தவெனையீன்றானைக்கண்டுகளித்திருக்கின்றேனே.

மருந்தானைமணியானைவழுத்தாநின்றமந்திரங்களானானைவானநாட்டு
விருந்தானையுறவானைநண்பினானைமேலானைக்கீழானைமேல்கீழெனப்
பொருந்தானையெனதுயிரிற்பொருந்தினானைப்பொன்னானைப்பொருளானைப்பொதுவாயெங்கு
மிருந்தானையிருப்பானையிருக்கின்றானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (எ)

ஆன்றானையறிவானையழிவிலானையருட்பெருஞ்சோதியினானையலர்ந்தசோதி
மூன்றானையிரண்டானையொன்றானானைமுன்னானைப்பின்னானைமூடநெஞ்சிற்
றோன்றானைத்தூயருளேதோன்றினானைச்சுத்தசிவசன்மார்க்கந்துலங்கவென்னை
யீன்றானையெல்லாமாயல்லாதானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (அ)

தோய்ந்தானையென்னுளத்தேயென்பாலன்பாற்சூழ்ந்தானையான்றொடுத்தசொற்பூமாலை
வேய்ந்தானையென்னுடையவினைதீர்த்தானைவேதாந்தமுடிமுடிமேல்விளங்கினானை
வாய்ந்தானையெயப்பிடத்தேவைப்பானானைமணிமன்றினடிப்பானைவரங்களெல்லா
மீந்தானையாயந்தவாதம்மிதப்பத்தானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே. (கூ)

நன்றானைமன்றகத்தேநடிக்கின்றானைநாடாமைநாடவிவைநடுவேயோங்கி
நின்றானைப்பொன்றாதநிலையினானைநிலையறிந்துநில்லாதாநெஞ்சிலேச
மொன்றானையெவ்வுயிர்க்குமொன்றானானையொருசிறியேன்றனைநோக்கியுளநீயஞ்சே
லென்றானையென்றுமுளவியற்கையானையெம்மானைக்கண்டுகளித்திருக்கின்றேனே.

திருச்சிற்றம்பலம்.

---

## இதுவுமது

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அருளரசையருட்குருவையருட்பெருஞ்சோதியையென்னம்மையையென்னப்ப
னையென்னுடைவனையமுதைத், தெருளுறுமென்னுயிரையெனறனுயிர்க்குயிரையெ
ல்லாஞ்செய்யவல்லதனித்தலைமைச்சித்தசிகாமணியை, மருவுபெருவாழ்வையெல்லா
வாழ்வுமெனக்களித்தவாழ்முதலைமருந்தினைமாமணியையென்கண்மணியைக், கருணை
நடம்புரிகின்றகனகசபாபதியைக் கண்டுகொண்டேன்களித்துக்கொண்டேன்கலந்து
கொண்டேன்களித்தே. (க)

திருத்தகுவேதாந்தமொடுசித்தாந்தமுதலாத்திகழ்கின்றவந்தமெலாந்தேடியுங்க
ண்டறியா, வொருத்தனையுள்ளொளியையொளிருள்ளொளிக்குள்ளொளியை யுள்ளப

டியுள்ளவனையுடையபெருந்தகையை, நிருத்தனைமெய்ப்பொருளானநின்மலனைச்சிவனை நித்தியனைச்சத்தியனைநிர்க்குணனையெனது, கருத்தனைச்சிற்சபையோங்குங்கடவுளையென்கண்ணுற்கண்டுகொண்டேன்கனிந்துகொண்டேன்கலந்துகொண்டேன்களித்தே. (௨)

பாட்டுவந்துபரிசளித்தபதியையருட்பதியைப்பசுபதியைக்கனகசபாபதியையுமாபதியைத், தேட்டமிகும்பெரும்பதியைச்சிவபதியையெல்லாஞ்செய்யவல்லதனிப்பதியைத்திகழ்தெய்வப்பதியை, யாட்டியல்செய்தருள்பரமபதியைநவபதியையானந்தநாட்டினுககோடிபதியையரசைக், காட்டியெனைமணம்புரிந்தென்கைபிடித்தபதியைக்கண்டுகொண்டேன்கனிந்துகொண்டேன்கலந்துகொண்டேன்களித்தே. (௩)

மதித்திடுதலரியவொருமாணிக்கமணியை வயங்கியபேரொளியுடையவச்சிரமாமணியைத், துதித்திடுவேதாகமத்தின்முடிமுடித்தமணியைச்சுயஞ்சோதித்திருமணியைச்சுத்தசிவமணியை, விதித்தனமுதற்றொழிலியற்றுவித்தகுருமணியைவிணமணியையம்மணிக்குள்விளங்கியமெய்ம்மணியைக், கதித்தசுகமயமணியைச்சித்தசிகாமணியைக்கண்டுகொண்டேன்கனிந்துகொண்டேன்கலந்துகொண்டேன்களித்தே. (௪)

மாற்றறியவொண்ணாததனிப்பொன்னையடியேன்வருந்தும்போதென்னைவந்துவாழ்வித்தபொன்னை யாற்றன்மிகுபெரும்பொன்னையுருப்புரியுமரும்பொன்னையென்றன்னையாண்டசெழும்பொன்னைத், தேற்றமிகுபசும்பொன்னைச்செம்பொன்னைஞானசிதம்பரத்தேவிளங்கிவளர்சிவமயமாம்பொன்னைக், காற்றனலாகாயமெலாங்கலந்தவண்ணப்பொன்னைக் கண்டுகொண்டேன்கனிந்துகொண்டேன்கலந்துகொண்டேன்களித்தே. (௫)

ஆய்தருவேதாகமத்தினடிமுடிநின்றிலங்கு மரியபெரும்பொருளையவைகட்குரியவாம்பொருளை, வேய்தருதத்துவப்பொருளைத்தத்துவங்கள்விளங்கவிளங்குகின்றபரமபொருளைத்தத்துவங்களனைத்துந், தோய்தரலில்லாததனிச்சுயஞ்சோதிப்பொருளைச்சுத்தசிவமயமானசுகாதீதப்பொருளைக், காய்தரலில்லாதென்னைக்காத்தவருட்பொருளைக்கண்டுகொண்டேன்கனிந்துகொண்டேன்கலந்துகொண்டேன்களித்தே. (௬)

திருத்தமிகுமுனிவர்களுந்தேவர்களுமழியாச்சித்தர்களுஞ்சிருட்டிசெயுந்திறத்தர்களுங்காக்கு, மருத்தமிகுதலைவர்களுமடக்கிடல்வல்லவருமலைபுரிகின்றவர்களுமுள்ளனுக்கிரகிப்பவரும், பொருத்தமுறச்சத்திகளுஞ்சத்தர்களுமெல்லாம் பொருளெதுவோவெனத்தேடிப்போகவவர்வாதங், கருத்திலொளித்திருக்கின்ற கள்வனையென்கண்ணுற்கண்டுகொண்டேன்கனிந்துகொண்டேன்கலந்துகொண்டேன்களித்தே. (௭)

கோணுதனிலையினராய்க்குறிகுணங்கண்டிடவுங் கூடாதவண்ணமலைக்குகைமுதலாமிடத்தி, லூணுறிவிடுத்துயிர்ப்பையடக்கிமனமடக்கியுறுபொறிகளடக்கிவருமுகங்கள்பலகோடித், தூணுகவசைதலின்றித்தூங்காதுவிழித்துத்தூயசதாசிட்டர்களுந்துரியநிலையிடத்துங், காணுதவகையொளித்தகள்வனையென்கண்ணுற்கண்டுகொண்டேன்கனிந்துகொண்டேன்கலந்துகொண்டேன்களித்தே. (௮)

நீட்டாயசித்தாந்தநிலையினிடத்தமர்ந்தும்நிகழ்கின்றவேதாந்தநெறியினிடத்திருந்து, மாட்டாயபோதாந்தமலைவருநாதாந்தமாதிமற்றையந்தங்களனைத்தினுமுற்றறிந்

தும், வேட்டாசைப்பற்றனைத்தும்விட்டுலகம்போற்றவித்தகராய்விளங்குகின்றமுத்த ர்கட்குநற்றுணையைக், காட்டாமலொளித்திருக்குங்கள்வனையென்கண்ணுறக்கண்டுகொண் டேன்கனிந்துகொண்டேன்கலந்துகொண்டேன்களித்தே. (௯)

மருணெறிசேர்மலவுடம்பையழியாதவிமலவடிவாக்கியெல்லாஞ்செய்வல்லசித்தா ம்பொருளைத், தருணமிது தெரிந்தெனக்குத்தானேவந்தளித்ததயாநிதியையென்னையீன்ற தந்தையையென்றாயைப், பொருணிறைசிற்றம்பலத்தேவிளங்குகின்றபதியைப்புகல ரிதாஞ்சுத்தசிவபூரணமெய்ச்சுகத்தைக், கருணையருட்பெருஞ்சோதிக்கடவுளையென்க ண்ணுறக்கண்டுகொண்டேன்கனிந்துகொண்டேன்கலந்துகொண்டேன்களித்தே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## இதுவுமது.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அருளெலாமளித்தவம்பலத்தமுதையருட்பெருஞ்சோதியையரசை
மருளெலாந்தவிர்த்துவாழ்வித்தமருந்தைவள்ளலைமாணிக்கமணியைப்
பொருளெலாங்கொடுத்தென்புந்தியிற்கலந்தபுண்ணியநிதியைமெய்ப்பொருளைத்
தெருளெலாம்வல்லசித்தைமெய்ஞ்ஞானதீபத்தைக்கண்டுகொண்டேனே. (௧)

துன்பெலாந்தவிர்த்ததுணையையென்னுள்ளத்துரிசெலாந்தொலைத்தமெய்ச்சுகத்தை
யென்பொலாமணியையென்சிகாமணியையென்னிருகண்ணுண்மாமணியை
யன்பெலாமளித்தவம்பலத்தமுதையருட்பெருஞ்சோதியையடியே
னென்பெலாமுருக்கியின்பெலாமளித்தவெந்தையைக்கண்டுகொண்டேனே. (௨)

சித்தத்திலேயூறித்தெளிந்ததெள்ளமுதைச்சித்தெலாம்வல்லமெய்ச்சிவத்தைப்
பத்தத்திலேபழுத்ததனிப்பெரும்பழத்தைப்பரமபரவாழ்வையெம்பதியை
மத்தத்திலேமயங்காமதியிலேவிளைந்தமருந்தைமாமந்திரந்தன்னை
இத்தத்திலேயென்னையிருத்தியாட்கொண்டவிறைவனைக்கண்டுகொண்டேனே. (௩)

உணர்ந்தவருளம்போன்றென்னுள்ளத்தமர்ந்தவொருபெரும்பதியையென்னுவப்பைப்
புணர்ந்தெனைக்கலந்தபோகத்தையென்றன்பொருளையென்புண்ணியப்பயனைக்
கொணர்ந்தொருபொருளென்கரத்திலேகொடுத்தகுருவையெண்குணப்பெருங்குன்றை
மணந்தசெங்குவளைமலரெனக்களித்தவள்ளலைக்கண்டுகொண்டேனே (௪)

புல்லியநெறிநீத்தெனையெடுத்தாண்டபொற்சபையப்பனைவேதஞ்
சொல்லியபடியென்சொல்லெலாங்கொண்டசோதியைச்சோதியாதென்னை
மல்லிகைமாலையணிந்துளேகலந்துமன்னியபதியையென்வாழ்வை
யெல்லியுமிரவுமென்னைவிட்டகலாவிறைவனைக்கண்டுகொண்டேனே. (௫)

பண்ணியதவமும்பலமுமெய்ப்பலஞ்செயபதியுமாமொருபசுபதியை
நண்ணியென்னுளத்தைத்தன்னுளமாக்கிநல்கியகருணைநாயகனை
யெண்ணியபடியேயெனக்கருள்புரிந்தவிறைவனைமறைமுடியிலங்குந்
தண்ணியவிளக்கைத்தன்னிகரில்லாத்தந்தையைக்கண்டுகொண்டேனே. (௬)

பெண்மையை வயங்கு மாண்மையை யனைத்தும் பிறங்கிய பொதுமையைப் பெரிய
தண்மையை யெல்லாம் வல்லவோர் சித்த சாமியைத் தயாநிதி தன்னை
வண்மையை யறியா வரத்தினை ஞான வாழ்வையென் மதியிலே விளங்கு
முண்மையை யென்ற னுயிரினை யென்னுயி ருளொருவனைக் கண்டுகொண் டேனே. (௭)

ஆதியை யாதியந் தமீதென வுள்ள றிவித்த வறிவையென் னனைச்
சோதியை யென்னது துணையை யென் சுகத்தைச் சுத்தசன் மார்க்கத்தின் றுணிபை
நீதியை யெல்லா நிலைகளுங் கடந்த நிலையிலே நிறைந்த மாநிதியை
யோதியை யோதா துணர்த்திய வொளியை யொளிதனைக் கண்டுகொண் டேனே. (௮)

என்செய லனைத்துந் தன்செய லாக்கி யென்னைவாழ் விக்கின்ற பதியைப்
பொன்செயல் வகையை யுணர்த்தி யென்னுளத்தே பொருந்திய மருந்தையென் பொருளை
வன்செய லகற்றி யுலகெலாம் விளங்க வைத்தசன் மார்க்கசற் குருவைக்
கொன்செய லொழித்த சத்திய ஞானக் கோயிலிற் கண்டுகொண் டேனே. (௯)

புன்னிக ரில்லேன் பொருட்டிருட் டிரவிற் போந்தருள் ளளித்தசற் குருவைக்
கன்னிகா யனத்தைக் கனாத்தெனுட் கலந்த கருணையங் கடவுளைத் தன்னைச்
சொன்னிக ரென்னச் சொல்லெலாங் கொண்டே தோன்றுறப் புனைந்தமெய்த் துணையைத்
தன்னிக ரில்லாத் தலைவனை யென்னுந் தந்தையைக் கண்டுகொண் டேனே. (௧௦)

எங்குல மகனே தூங்கலை யென வந் தெடுத்தெனை யணைத்தவென் றாயை
யோங்கிய வென்னுந் தந்தையை யெல்லா முடையவென் னொருபெரும் பதியைப்
பாங்கனி லென்னைப் பரிந்துகொண் டெல்லாப் பரிசுமிங் களித்தற் பரத்தைத்
தாங்குமோர் நீதித் தனிப்பெருங் கருணைத் தலைவனைக் கண்டுகொண் டேனே. (௧௧)

துன்புறேன் மகனே தூங்கலை யெனவென் சோர்வெலாந் தவிர்த்தநற் றுணையை
யன்புளே கலந்த தந்தையை யென்ற னறிவையைப் பாவியே னுளத்தை
யின்பிலே நிறைவித் தருளுரு வாக்கி யினிதமர்ந் தருளிய விறையை
வன்பிலாக் கருணை மாநிதி யெனுமென் வள்ளலைக் கண்டுகொண் டேனே. (௧௨)

நனவினு மெனது கனவினு மெனக்கே நண்ணிய தண்ணிய வமுதை
மனனுறு மயக்கந் தவிர்த்தருட் சோதி வழங்கிய பெருந்தயா நிதியைச்
சினமுத லாறுந் தீர்த்துளே யமர்ந்த சிவகுரு பதியையென் சிறப்பை
யுனலரும் பெரிய துரியமேல் வெளியி லொளிதனைக் கண்டுகொண் டேனே. (௧௩)

கரும்பினின் சாற்றைக் கனிந்த முக்கனியைக் கருதுகோற் றேனறுஞ் சுவையை
யரும்பெறன் முறையை யறிவையென் னன்பை யாவியை யாவியுட் கலந்த
பெருந்தனிப் பதியைப் பெருஞ்சுகக் களிப்பைப் பேசுதற் கரும்பெரும் பேற்றை
விரும்பியென் னுளத்தை யிடங்கொண்டு விளங்கும் விளக்கினைக் கண்டுகொண் டேனே

களங்கொளுங் கடையேன் களங்கெலாந் தவிர்த்துக் களிப்பெலா மளித்த சாக்கரையை
யுளங்கொளுந் தேனை யுணவுணத் தெவிட்டா துள்ளகத் தூறுமின் னமுதை
வளங்கொளும் பெரிய வாழ்வையென் கண்ணுண் மணியையென் வாழ்க்கைமா நிதியைக்
குளங்கொளு மொளியை யொளிக்குளே விளங்குங் குருவையான் கண்டுகொண் டேனே.

சிதம்பரவொளியைச்சிதம்பரவெளியைச்சிதம்பரநடம்புரிசிவத்தைப்
பதந்தருபதத்தைப்பரம்பரபதத்தைப்பதிசிவபதத்தைத்தற்பதத்தை
யிதந்தருமுண்மைப்பெருந்தனிநிலையையாவுமாயல்லவாம்பொருளைச்
சதந்தருசச்சிதானந்தநிறைவைச்சாமியைக்கண்டுகொண்டேனே. (௧௬)

ஆரணமுடிமேலமர்பிரமத்தையாகமமுடியமாபரத்தைக்
காரணவரத்தைக்காரியதரத்தைக்காரியகாரணக்கருவைத்
தாரணநிலையைத்தத்துவபதியைச்சத்தியநித்தியத்தலத்தைப்
பூரணசுகத்தைப்பூரணசிவமாம்பொருளினைக்கண்டுகொண்டேனே. (௧௭)

சுத்தவேதாந்தப்பிரம * ராசியத்தைச்சுத்தசித்தாந்தராசியத்தைத்
தத்துவாதீதத்தனிப்பெரும்பொருளைச்சமரசசத்தியப்பொருளைச்
சித்தெலாம்வல்லசித்தையென்னறிவிற்றெளிந்தபேரானந்தத்தெளிவை
வித்தமாவெளியைச்சுத்தசிற்சபையின்மெய்ம்மையைக்கண்டுகொண்டேனே. (௧௮)

சமயமுமதமுங்கடந்ததோர்ஞானசபைநடம்புரிகின்றதனியைத்
தமையறிந்தவருட்சார்ந்தமெய்ச்சார்பைச்சத்துவநித்தசற்குருவை
யமையவென்மனத்தைத்திருத்திநல்லருளாரமுதளித்தவானந்தவற்புதத்தை
நிமலநிர்க்குணத்தைச்சிற்குணாகாரநீதியைக்கண்டுகொண்டேனே. (௧௯)

அளவைகளனைத்துங்கடந்துநின்றோங்குமருட்பெருஞ்சோதியையுலகக்
களவைவிட்டவர்தங்கருத்துளேவிளங்குங்காட்சியைக்கருணையங்கடலை
யுளவையென்றனக்கேயுரைத்தெலாம்வல்லவொளியையுமுதவியவொளியைக்
குளவயினிறைந்தகுருசிவபதியைக்கோயிலிற்கண்டுகொண்டேனே. (௨௦)

சாகலாந்தாதிச்சடாந்தமுங்கலந்தசமரசசத்தியவெளியைச்
சோர்வெலாந்தவிர்த்தென்னறிவினுக்கறிவாய்த்துலங்கியசோதியைச்சோதிப்
பார்பெரும்பதத்தைப்பதமெலாங்கடந்தபரமசன்மார்க்கமெய்ப்பதியைச்
சோகுணாந்தத்திற்சிறந்ததோர்தலைமைத்தெய்வத்தைக்கண்டுகொண்டேனே. (௨௧)

அடிநடுமுடியோரணுத்துணையேனுமறிந்திடப்படாதமெய்யறிவைப்
படிமுதலண்டப்பரப்பெலாங்கடந்தபதியிலேவிளங்குமெய்ப்பதியைக்
கடியவென்மனனுங்கல்லையுங்கனியிற்கடைக்கணித்தருளியகருணைக்
கொடிவளரிடத்துப்பெருந்தயாநிதியைக்கோயிலிற்கண்டுகொண்டேனே. (௨௨)

பயமும்வன்கவலையிடர்முதலனைத்தும்பற்றறத்தவிர்த்தருட்பரிசும்
நயமுநற்றிருவுமுருவுமீங்கெனக்குநல்கியநண்பனைஞான
வியமுறவெனதுகுளநடஞ்செயுமெந்தையையெனதுயிர்க்குயிரைப்
புயனடுவிளங்கும்புண்ணியவொளியைப்பொற்புறக்கண்டுகொண்டேனே. (௨௩)

கலைநிறைமதியைக்கனலைச்செங்கதிரைக்ககனத்தைக்காற்றினையமுதை
நிலைநிறையடியையடிமுடிதோற்றாநின்மலநிர்க்குணநிறைவை
மலைவறுமுளத்தேவயங்குமெய்வாழ்வைவரவுபோக்கறச்சின்மயத்தை
யலையறுகருணைத்தனிப்பெருங்கடலையன்பினிற்கண்டுகொண்டேனே. (௨௪)

* ராசியம் - இரகசியம்.

மும்மையையெல்லாமுடையபேரரசைமுழுதொருங்குணர்த்தியவுணர்வை
வெம்மையைத்தவிர்த்திங்கெனக்கருளமுதம்வியப்புறவளித்தமெய்விளைவைச்
செம்மையையெல்லாச்சித்தியுமென்பாற்சேரநிட்டப்புரியருட்டிறத்தை
யம்மையைக்கருணையப்பனையென்பேரன்பனைக்கண்டுகொண்டேனே. (௨௫)

கருத்தனையெனதுகண்ணனையவனைக்கருணையாரமுதெனக்களித்த
வொருத்தனையெனையுடையநாயகனையுண்மைவேதாகமமுடியின்
அருத்தனைவரனையபயனைத்திருச்சிற்றம்பலத்தருணடம்புரியு
நிருத்தனையெனதுநேயனைஞானநிலையனைக்கண்டுகொண்டேனே. (௨௬)

வித்தெலாமளித்தவிமலனையெல்லாவிளைவையும்விளக்கவல்லவனை
* அத்தெலாங்காட்டுமரும்பெறன்மணியையானந்தக்கூத்தனையரசைச்
சத்தெலாமானசயம்புவைஞானசபைத்தனித்தலைவனைத்தவனைச்
சித்தெலாம்வல்லசித்தனையொன்றாந்தெய்வத்தைக்கண்டுகொண்டேனே. (௨௭)

உத்தரஞானசித்திமாபுரத்தினோங்கியவொருபெரும்பதியை
யுத்தரஞானசிதம்பரவொளியையுண்மையையொருத்தனியுணர்வை
யுத்தரஞானநடம்புரிகின்றவொருவனையுலகெலாம்வழுத்து
முத்தரஞானசுத்தசன்மார்க்கமோதியைக்கண்டுகொண்டேனே. (௨௮)

புலைகொலைதவிர்த்தநெறியிலேயென்னைப்புணர்த்தியபுனிதனையெல்லா
நிலைகளுங்காட்டியருட்பெருநிலையினிறுத்தியநிமலனையெனக்கு
மலைவறத்தெளிந்தவமுதளித்தழியாவாழ்க்கையில்வாழவைத்தவனைத்
தலைவனையீன்றதாயையென்னுரிமைத்தந்தையைக்கண்டுகொண்டேனே. (௨௯)

பனியிடர்பயந்தீர்த்தெனக்கமுதளித்தபரமனையென்னுளேபழுத்த
கனியனையவனையருட்பெருஞ்சோதிக்கடவுளைக்கண்ணினுண்மணியைப்
புனிதனையெல்லாம்வல்லவோர்ஞானப்பொருளெனக்களித்தமெய்ப்பொருளைத்
தனியனையீன்றதாயையென்னுரிமைத்தந்தையைக்கண்டுகொண்டேனே. (௩௰)

திருச்சிற்றம்பலம்.

குருதரிசனம்.

## திருமுதுகுன்றம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

திருமாலகமலத்திருக்கண்மலர்திகழுமலர்த்தாட்சிவக்கொழுந்தைக்
கருமாலகற்றுந்தனிமருந்தைக்கனகசபையிற்கலந்தவொன்றை
யருமாமணியையாரமுதையனையையறிவையருட்பெருக்கைக்
குருமாமலையைப்பழமலையிற்குலவியோங்கக்கண்டேனே. (௧)

* அத்து - செந்நிறம்.

வானநடுவேவயங்குகின்றமவுனமதியைமதியமுதைத்
தேனையளிந்தபழச்சுவையைத்தெய்வமணியைச்சிவபதத்தை
யூனமறியாருளத்தொளிருமொளியையொளிக்குமொருபொருளை
ஞானமலையைப்பழமலைமேல்நண்ணிவிளங்கக்கண்டேனே. (௨)

தவளநிறத்துத்திருநீறுதாங்குமணித்தோட்டாணுவைநங்
குவளைவிழித்தாயொருபுறத்தேகுலவவிளங்குங்குருமணியைக்
கவளமதமாகரியுரிவைக்களித்தமேனிக்கற்பகத்தைப்
பவளமலையைப்பழமலையிற்பரவியேத்திக்கண்டேனே. (௩)

இளைத்தவிடத்திலுதவியன்பரிடத்தேயிருந்தவேமவைப்பை
வளைத்தமதின்மூன்றெரித்தருளைவளர்த்தகருணைவாரிதியைத்
திளைத்தயோகருளத்தோங்கித்திகழுந்துரியாதீதமட்டுங்
கிளைத்தமலையைப்பழமலையிற்கிளர்ந்துவயங்கக்கண்டேனே. (௪)

மடந்தைமலையாண்மனமகிழமருவும்பதியைப்பசுபதியை
யடாந்தவினையின்றொடக்கையறுத்தருளுமரசையலைகடன்மேற்
கிடந்தபச்சைப்பெருமலைக்குக்கேடிலருளைத்தந்தகம்புறமுங்
கடந்தமலையைப்பழமலைமேற்கண்களிக்கக்கண்டேனே. (௫)

துணியும்பிறவித்தொடுவழக்குஞ்சோர்ந்துவிடவுந்துரியவெளிக்
கினியும்பருக்குங்கிடையாதவின்பமடைந்தேயிருந்திடவும்
பனியுந்திமயமலைப்பச்சைபடர்ந்தபவளப்பருப்பதத்தைக்
* கனியுஞ்சிலையுங்கலந்தவிடமெங்கேயங்கேகண்டேனே. (௬)

கருணைக்கடலையக்கடலிற்கலந்தவமுதையவ்வமுதத்
தருணச்சுவையையச்சுவையிற்சார்ந்தபயனைத்தனிச்சுகத்தை
வருணப்பவளப்பெருமலையைமலையிற்பசைமருந்தொருபால்
பொருணச்சுறவேபழமலையுற்பொருந்தியோங்கக்கண்டேனே. (௭)

என்னுயிரிற்கலந்துகலந்தினிக்குங்கரும்பின்கட்டிதனைப்
பொன்னார்வேணிக்கொழுங்கனியைப்புனிதருளத்திற்புகுங்களிப்பைக்
கன்னுரித்துப்பணிகொண்டகருணைப்பெருக்கைக்கலைத்தெளிவைப்
பன்னகப்பூணணிமலையைப்பழையமலையிற்கண்டேனே. (௮)

நல்லமனத்தேதித்திக்கநண்ணுங்கனியைநலம்புரிந்தென்
னல்லலகற்றும்பெருவாழ்வையன்பாலியன்றவருமருந்தைச்
சொல்லமுடியாத்தனிச்சுகத்தைத்துரியநடுவேதோன்றுகின்ற
வல்லமலையைப்பழமலையில்வயங்கியோங்கக்கண்டேனே. (௯)

ஆதிநடுவுமுடிவுமிலாவருளானந்தப்பெருங்கடலை
யோதியுணர்தற்கரியசிவயோகத்தெழுந்தவொருசுகத்தை
பாதியாகியொன்றாகிப்படர்ந்தவடிவைப்பரம்பரத்தைச்
சோதிமலையைப்பழமலையிற்சூழ்ந்துவணங்கிக்கண்டேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

* கனியுஞ்சிலை - வளைந்தமலை, அதாவது மேரு.

# திருவடி நிலை.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

### திருச்சிற்றம்பலம்.

உலகுபலகோடிகோடிகளிடங்கொளலப்பிலாவணடததினபகுதி
யலகுகாண்பரியபெரியகூட்டததவையெலாமபுறததிறைச்சாபில்
விலகுறுமணுவிறகோடியிலொருகூறிருநதெனவிருநதனமிடைநதே
யிலகுபொறபொதுவினடமபுரிதருணததெனபாவானதிருவடியே. (௧)

தடையுறுப்பிரமன்விண்டுருததிரனமயேசுரனசதாசிவனவிந்து
நடையுறுப்பிரமமுயர்பராசததிநவிலபரசிவமெனுமிவாக
ளிடைவுறுததிருச்சிறறமபலததாடுமிடதுகாறகடைவிரனகததின்
கடையுறுதுகளெனறிநதனனதனமேறகணடனனதிருவடிநிலையே. (௨)

அடாமலததடையாறறடையுறுமயனமாலரனமயேச்சுரனசதாசிவன்வான
படாதருவிநதுபிரணவபபிரமமபராபரமபரனெனுமிவாகள
சுடாமணிப்பொதுவிற்றிருநடமபுரியுநதுணையடிபபாதுகைப்புறததே
யிடாகெடவயஙகுதுகளெனவறிநதேனேததுவன்றிருவடிநிலையே. (௩)

இகததுழலபகுதிததேவாிநதிரன்மாலபிரமனீசானனேமுதலா
மகததுழலசமயவானவாமனறிணமலரடிப்பாதுகைப்புறததும்
புகததரமபொருநதாமலததுறுசிறியபுழுககளெனறிநதனனதன்மேற்
செகததொடாபிகநதாருளததமரொளியிறறெரிநதனனதிருவடிநிலையே. (௪)

பொன்வணப்பொருப்பொன்றதுசகுணந்தமபோநதவானமுடியதாஙகதனமேல்
மனவணச்சோதிதமபமொனறதுமாவயிநதுவாநததததாணடதனமே
லெனவணசசோதிகசொடிபரநாதாநததிலேயிலஙகியதனமேல்
தனவணமணககுமொளிமலராகதசழுவினனதிருவடிநிலையே. (௫)

மண்முதற்பகாபொனவணணததவுளவான்மறறவற்றுட்புறஙகீழ்மே
லணணுறுநனநதாபககமெனறிவறறினமைநதனசததிகளவறறின
கணணுறுசததரெனுமிருபுடைககுஙகருதருமுதலியவிளங்க
நணணுறுமுபயமெனமனறிலெனறுநவினறனாதிருவடிநிலையே. (௬)

தொகையளவிவையெனறிவரும்பகுதிதொல்லையினெலலையுமவற்றின
வகையொடுவிரியுமுளபபடவாஙகேமனனியெஙகணுமிருபாறகுத
தகையுறுமுதலாவணஙகடையாகததயஙகமறறதுவதுகருவிச
சிகையுறவுபயமெனமனறிலாடுமெனபராறறிருவடிநிலையே. (௭)

மனறவோஙகியமாமாயையினபேதவகைதொகைவிரியெனமலிநத
வொனறினுணறனநதகோடிகோடிகளாவுற்றனமறறவையெயலலாம்
நினறவநநிலையினுருசசுவைவிளஙகநினறசததிகளொடுசததா
சென்றதிகரிபபநடிததிடுமபொதுவிலென்பராறறிருவடிநிலையே. (௮)

பேசுமோஙகாரமீறதாபபேசாப்பெரியவோஙகாரமேமுதலா
எசறுமஙகமுபாஙகமவேறஙகமெனறவறறவணவணிசைநத
மாசறுசததிசததராண்டமைததுமன்னதிகாரமைநதியறறத
தேசுசெயதணிபொனனமபலததாடுமெனபராற்றிருவடிநிலேயே. (௯)

பணாதருசுததநிலேமுதலதிரப்பதிவனாநிறுவியாஙகதனமே
லுனாதரவொணணுவெறுவெளிவெட்டவெறுவெளிபெனவுலகுணாநத
புனையறுமினபவநுபவநதாறகோதிருவுருககொணடுபொறபொதுவில
தினையறுமினபநடமபுரிகினறவெனபராறறிருவடிநிலேயே. (௧௦)

திருச்சிற்றமபலம.

---

# அச்சோப்பத்து.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கருததனையெனகணமணியைககணணுதலைப்பெருஙகருணைக்கடலைவேதத
திருததனையெனசிவபதியைததீஙகனியைததெள்ளமுததைதெளிவைவானி
லொருததனையெனனுயிாததுணையையுயிாக்குயிாையுயிாகருணாவையுணாததஞானி
யருததனைசசிறறமபலததெனனருடபெருஞ்சோதியைப்பெறறேனசசோவசசோ. (௧)

மெயயனையெனறுயாதவிாததவிமலனையெனனிதயததேவிளங்குகின்ற
துயயனைமெயததுணைவனைவானறுரியநிலைததலைவனைச்சிறசுகநதநதாளைச
செயயனைவெணணிறததனையெனசிவபதியையொனறுனதெய்வநதனனை
அயயனைசசிறறமபலததெனனருட்பெருஞசோதியைபபெற்றேனச்சோவச்சோ. (௨)

எப்பொருளுமெவவுயிருமெவவுலகும்விளங்கவிளக்கிடுவானறன்னைச
செபபரிய்பெரியவொருசிவபதியைசசிவகதியைசசிவபோகததை
துப்புரவுபெறவெனக்கேயருளமுதநதுணிநதளிததததுணையையென்ற
னப்பனைசசிறறமபலததெனனருடபெருஞசோதியைப்பெறறேனசசோவச்சோ. (௩)

பிறிவனைததுநதோற்றுதெனனுளஙகலநதபெருநதகையெமபெருமானறன்னைச்
செறிவனைததுமெனமனததுககளிததெனககுப்பெருங்களிப்புசசெய்தானறன்னை
முறிவனைததுமினறியருளமுதணவுகொடுததெனககுமுனனினறுனை
யறிவனைசசிறறமபலததெனனருட்பெருஞ்சோதியைப்பெறறேனசசோவச்சோ. (௪)

பொன்புனையுள்ளொளிககொளியைப்பூரணமாமபெரும்பொருளைப்புநிதந்தன்னை
யெனபிழையைபபொறுததெனனையுமேனறுகொணடபெருஙகருணையியறகைதனனை
யினபினையென்னிதயததேயிருநதருளுமபெருவாழ்வையெனனுளோங்கு
மனபினைசசிறறம்பலததெனனருடபெருஞ்சோதியைப்பெறறேனச்சோவச்சோ. (௫)

இததனையெனறிடமுடியாச்சததியெலாமுடையானையெல்லாம்வல்ல
சிததனையெனசிவபதியைததெய்வமெலாம்விரிததடக்குநதெய்வந்தன்னை
யெததனையுமென்பிழைகள்பொறுததனிப்பெருந்தாயையென்னையீனற
வததனைச்சிறறமபலததென்னருட்பெருஞ்சோதியைப்பெற்றேனச்சோவச்சோ. (௬)

எம்மையுமென் றனைப்பிரியாதென்னுளமேயிடங்கொண்டவிறைவன் றன்னை
யிம்மையிலென் றனக்கழியாத்திருவடிவந்தந்தானையெல்லாம்வல்ல
செம்மைதருசித்தனையென்சிவபதியைத்தெள்ளமுதத்திரளையென்ற
னம்மையைச்சிற்றம்பலத்தென்னருட்பெருஞ்சோதியைப்பெற்றேனச்சோவச்சோ.

என்னையுமென்பொருளையுமென்னுயிரையுந்தான்கொண்டிங்கெனபாலன்பால்
தன்னையுந்தன்பொருளையுந்தன்னுயிரையுங்களித்தளித்ததலைவன்றனை
முன்னையும்பின்னையுமெனக்கேமுழுத்துணையாயிருந்தமுழுமுதல்வன்றனை
யன்னையைச்சிற்றம்பலத்தென்னருட்பெருஞ்சோதியைப்பெற்றேனச்சோவச்சோ.

எண்ணலைவேறிரங்கலைநின்னெண்ணமெலாந்தருகின்றாமினனேயென்றென்
கண்ணிரம்பவொளிகாட்டிக்கருத்திலமர்ந்திருக்கின்றகருத்தன்றனைப்
புண்ணியனையுளத்தூறும்புத்தமுதைமெய்யின்பப்பொருளையென்ற
னண்ணலைச்சிற்றம்பலத்தென்னருட்பெருஞ்சோதியைப்பெற்றேனச்சோவச்சோ.

சாதியைநீள்சமயத்தைமதத்தையெலாம்விடுவித்தென்றன்னைஞான
நீதியிலேசுத்தசிவசன்மார்க்கநிலைதனிலேநிறுத்தினனைப்
பாதியையொன்றானவனைப்பரம்பரனைப்பராபரனைப்பதியைஆதி
யாதியைச்சிற்றம்பலத்தென்னருட்பெருஞ்சோதியைப்பெற்றேனச்சோவச்சோ. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## பரசிவநிலை.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்சோதித்தெய்வமெனையாண்டுகொண்டதெய்வ மம்பலத்தேயாடுகின்றவானந்ததெய்வம், பொருட்சாருமறைகளெலாம்போற்றுகின்றதெய்வம் போதாந்தத்தெய்வமுயர்நாதாந்ததெய்வ, மிருட்பாடுநீக்கியொளியீந்தருளுந்தெய்வமெண்ணியநானெண்ணியவாறெனக்கருளுந்தெய்வந், தெருட்பாடலுவந்தெனையுஞ்சிவமாக்குந்தெய்வஞ்சிற்சபையில்விளங்குகின்றதெய்வமதேதெய்வம். (௧)

எல்லாஞ்செய்வல்லதெய்வமெங்குநிறைதெய்வ மென்னுயிரிற்கலந்தெனக்கேயின்பநல்குந்தெய்வம், நல்லார்க்குநல்லதெய்வம்நடுவானதெய்வம்நற்சபையிலாடுகின்றநடராசத்தெய்வங், கல்லார்க்குங்கற்றவர்க்குங்களிப்பருளுந்தெய்வங் காரணமாந்தெய்வமருட்பூரணமாந்தெய்வஞ்,செல்லாதநிலைகளெலாஞ்செல்லுகின்றதெய்வஞ்சிற்சபையில்விளங்குகின்றதெய்வமதேதெய்வம். (௨)

தாயாகித்தந்தையுமாய்த்தாங்குகின்றதெய்வந்தன்னைநிகரில்லாததனித்தலைமைத்தெய்வம், வாயாரவாழ்த்துகின்றோர்மனத்தமர்ந்ததெய்வம் மலரடியென்சென்னிமிசைவைத்தபெருந்தெய்வங், காயாதுகனியாக்கிக்கலந்தினிக்குந்தெய்வங்கருணைநிதித்தெய்வமுற்றுங்காட்டுவிக்குந்தெய்வம், சேயாகவெனைவளர்க்குந்தெய்வமகாதெய்வஞ்சிற்சபையில்விளங்குகின்றதெய்வமதேதெய்வம். (௩)

என்னிதயக்கமலத்தேயிருந்தருளுந்தெய்வமென்னிரண்டுகண்மணிகளுளிலங்குகின்றதெய்வம், பொன்னடியென்சென்னியிலேபொருந்தவைத்ததெய்வமபொய்யாததெயவமிடாசெயயாததெய்வ, மன்னியமல்லாததெயவமறிவானதெய்வமவ்வறிவுகளறிவாமென்னன்பானதெய்வம், சென்னிலையிற்செம்பொருளாய்த்திகழ்கின்றதெய்வம்சிறசபையிலவிளங்குகின்றதெய்வமதேதெய்வம். (௪)

எண்ணியவாவிளையாடென்றெனையளிததெய்வமெல்லாஞ்செய்வல்லசித்தேயெனகீநததெயவம், நண்ணியபொன்னம்பலத்தேநடம்புரியுநதெயவம்நாளுகிததாளுகிநணணுகின்றதெய்வம, பண்ணியவென்பூசையிலேபலிததபெருநதெயவம்பாடுகின்றமறைமுடியிலாடுகினறதெயவம், திண்ணியனென்றெனையுலகஞ்செபபவைதததெய்வம்சிற்சபையில்விளஙகுகின்றதெய்வமதேதெய்வம். (௫)

இச்சையெலாமெனககளிததேயெனைக்கலந்ததெய்வமிறந்தவர்களையெழுப்புகினறதெய்வ, மெச்சமயத்தெய்வமுந்தானெனநிறைந்ததெய்வமெல்லாஞ்செயவல்லதெய்வமெனதுகுலதெய்வம், பிச்சகற்றும்பெருந்தெய்வஞ்சிவகாமியெனுமோர்பெண்கொண்டதெயவமெஙகுங்கண்கண்டதெய்வம், * செச்சைமலரெனவிளங்குந்திருமேனிததெயவம்சிற்சபையில்விளங்குகின்றதெய்வமதேதெயவம். (௬)

சாகாதவரமெனக்கேதந்ததனிததெய்வம்சன்மாக்கசபையிலெனைத்தனிக்கவைத்ததெய்வம், மாகாதலாலெனக்குவாயததவொருதெய்வமமாதவராதியரெல்லாமவாழ்ததுகின்றதெய்வ, மேகாதநிலையதனமேலெனையேற்றுநதெய்வமெணணுதொறுமெனனுளததேயினிககினறதெயவம், தேகாதியுலகமெலாஞ்செயப்பணிதததெய்வம்சிறசபையிலவிளஙகுகின்றதெயவமதேதெய்வம். (௭)

தூண்டாதமணிவிளககாய்த்துலஙகுகின்றதெய்வம்துரியதெய்வமரியதெய்வம்பெரியபெருநதெயவம், மாணடாமையெழுப்புகின்றமருநதானதெயவும்மாணிககவல்லியையோராவலததிலவைதததெயவ, மாண்டாயாணடதெய்வமருட்சோதிததெய்வமாகமவேதாதியெலாமறிவரிதாநதெய்வம், தீணடாதவெளியில்வளாதீண்டாததெய்வமசிற்சபையிலவிளங்குகின்றதெயவமதேதெயவம். (௮)

எவ்வகைததாநதவஞ்செயினுமெய்தரிதாநதெய்வமெனக்கெளிதிற்கிடைததெனமனமிடஙகொணடதெயவ, மவ்வகததாந்தெய்வமதற்கப்பாலாநதெயவமபபாலும்பெருவெளிககேயப்பாலாநதெயவ, மொவ்வகததேயொளியாகியோஙகுகின்றதெய்வமொன்றானதெயவமிகநன்றானதெய்வும், செவ்வகைததெனறறிஞரெலாஞ்சோபெரியதெயவம்சிற்சபையில்விளஙகுகினறதெயவமதேதெயவம. (௯)

சத்தியமாந்தனித்தெய்வந்தடையறியாத்தெய்வம்சத்திகளெல்லாம்விளங்கத்தானோங்குந்தெய்வம், நிததியதன்மயமாகிநின்றதெய்வமெல்லாநிலைகளுந்தன்னருள்வெளியில்நிலைக்கவைத்ததெய்வம், பததிவலைப்படுகினறதெய்வமெனகெல்லாப்பரிசுமளிததழியாதபதத்தில்வைததததெய்வம், சிததியெலாந்தருநதெய்வஞ்சித்தாந்தத்தெய்வம்சிறசபையில்விளங்குகின்றதெய்வமதேதெய்வம். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

* செச்சைமலா - வெட்சிமலா.

# சிவானந்தநிலை.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

### திருச்சிற்றம்பலம்.

அணிவளர் திருச்சிற்றம்பலத்தாடுமானந்தபோகமேயமுதே
மணிவளரொளியேயொளியினுள்ளொளியேமன்னுமென்னுருயிர்த்துணையே
துணிவுறுசித்தாந்தப்பெரும்பொருளேதூயவேதாந்தத்தின்பயனே
பணிவுறுமுளத்தேயினித்திடவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (க)

திருவளர்திருச்சிற்றம்பலத்தாடுந்தெய்வமேமெய்ப்பொருட்சிவமே
யுருவளரொளியேயொளியினுள்ளொளியேயோங்குமென்னுயிர்ப்பெருந்துணையே
யொருதனித்தலைமைப்பெருவெளிநடுவேயுவந்தரசாள்கின்றவரசே
பருவரனீக்கிச்சுவைபெறவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (உ)

துதிவளர்திருச்சிற்றம்பலத்தோங்குஞ்சோதியுட்சோதியேயெனது
மதிவளர்மருந்தேமந்திரமணியேமன்னியபெருங்குணமலையே
கதிதருதுரியத்தனிவெளிநடுவேகலந்தரசாள்கின்றகளிப்பே
பதியுறுமுளத்தேயினித்திடவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (ங)

சீர்வளர்திருச்சிற்றம்பலத்தோங்குஞ்செல்வமேயென்பெருஞ்சிறப்பே
நீர்வளர்நெருப்பேநெருப்பினுள்ளொளியேநிறையொளிவழங்குமோர்வெளியே
யோர்தருகலாந்தமாதியாறந்தத்திருந்தரசளிக்கின்றபதியே
பாருறுமுளத்தேயினித்திடவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (ச)

உரைவளர்திருச்சிற்றம்பலத்தோங்குமொள்ளியதெள்ளியவொளியே
வரைவளர்மருந்தேமவுனமந்திரமேமந்திரத்தாற்பெற்றமணியே
நிரைதருசுத்தநிலைக்குமேனிலையினிறைந்தரசாள்கின்றநிதியே
பரையுறுமுளத்தேயினித்திடவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (ரு)

மேல்வளர்திருச்சிற்றம்பலத்தோங்குமெய்யறிவானந்தவிளக்கே
கால்வளர்கனலேகனல்வளர்கதிரேகதிர்நடுவளர்கின்றகலையே
யாலுறுமுபசாந்தப்பரவெளிக்கப்பாலரசாள்கின்றவரசே
பாலுறுமுளத்தேயினித்திடவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (சு)

இசைவளர்திருச்சிற்றம்பலத்தோங்குமின்பமேயென்னுடையன்பே
திசைவளரண்டகோடிகளனைத்துந்திகழுறத்திகழ்கின்றசிவமே
மிசையுறுமவுனவெளிகடந்ததன்மேல்வெளியரசாள்கின்றபதியே
பசையுறுமுளத்தேயினித்திடவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (எ)

அருள்வளர்திருச்சிற்றம்பலத்தோங்குமரும்பெருஞ்சோதியேயெனது
பொருள்வளரறிவுக்கறிவதாய்த்தன்னைப்புறம்விடாதாண்டமெய்ப்பொருளே
மருவுமோர்நாதவெளிக்குமேல்வெளியில்மகிழ்ந்தரசாள்கின்றவாழ்வே
பருவரனீக்கியினித்திடவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (அ)

வான்வளர் திருச்சிற்றம்பலத்தோங்குமாபெருங்கருணையெம்பதியே
ஊன்வளருயிர்கட்குயிரதாயெல்லாவுலகமுநிறைந்தபேரொளியே
மான்முதன்மூர்த்திமானிலைக்கப்பால்வயங்குமோர்வெளிநடுமணியே
பான்மையுற்றுளத்தேயினித்திடவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (௯)

தலம்வளர்திருச்சிற்றம்பலத்தோங்குந்தனித்தமெய்ப்பொருட்பெருஞ்சிவமே
நலம்வளர்கருணைநாட்டம்வைத்தெனையேநண்புகொண்டருளியநண்பே
வலமுறுநிலைகள்யாவையுங்கடந்துவயங்கியதனிநிலைவாழ்வே
பலமுறுமுளத்தேயினித்திடவெனக்கேபழுத்தபேரானந்தப்பழமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

# ஆற்றாமைகூறல்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலத்தாடுமமுதமேயென்கோவடியனேனாருயிரென்கோ
எம்பலத்தெல்லாம்வல்லசித்தென்கோவென்னிருகண்மணியென்கோ
நம்பிடலனைக்குநற்றுணையென்கோநான்பெற்றபெருஞ்செல்வமென்கோ
இம்பரிப்பிறப்பேமெய்ப்பிறப்பாகியென்னையாண்டருளியநினையே. (௧)

அம்மையேயென்கோவப்பனேயென்கோவருட்பெருஞ்சோதியேயென்கோ
செம்மையேயெல்லாம்வல்லசித்தென்கோதிருச்சிற்றம்பலத்தமுதென்கோ
தம்மையேயுணர்ந்தாருள்ளத்தொளியென்கோதமியனேன்தனித்துணையென்கோ
இம்மையேயழியாத்திருவுருவளித்திங்கென்னையாண்டருளியநினையே. (௨)

எய்ப்பிலேகிடைத்தவைப்பதுவென்கோவென்னுயிர்க்கின்பமேயென்கோ
துய்ப்பிலேநிறைந்தபெருங்களிப்பென்கோசோதியுட்சோதியேயென்கோ
தப்பெலாம்பொறுத்ததயாநிதியென்கோதனிப்பெருந்தலைவனேயென்கோ
இப்பிறப்பதிலேமெய்ப்பயனளித்திங்கென்னையாண்டருளியநினையே. (௩)

அச்சநீக்கியவென்னாரியனென்கோவம்பலத்தெம்பிரானென்கோ
நிச்சலுமெனக்கேகிடைத்தவாழ்வென்கோநீடுமென்னேயனேயென்கோ
பிச்சனேனகளித்தபித்தனேயென்கோபெரியரிற்பெரியனேயென்கோ
இச்சகத்தழியாப்பெருநலமளித்திங்கென்னையாண்டருளியநினையே. (௪)

அத்தனோகிடைத்தசுவைக்கனியென்கோவன்பிலேநிறையமுதென்கோ
சித்தெலாம்வல்லசித்தனேயென்கோதிருச்சிற்றம்பலச்சிவமென்கோ
மத்தனேன்பெற்றபெரியவாழ்வென்கோமன்னுமென்வாழ்முதலென்கோ
இத்தனிப்பிறப்பைநித்தியமாக்கியென்னையாண்டருளியநினையே. (௫)

மறப்பெலாந்தவிர்த்தமதியமுதென்கோமயக்கநீத்தருண்மருந்தென்கோ
பறப்பெலாமொழித்தபதிபதமென்கோபதச்சுவையநுபவமென்கோ
சிறப்பெலாமெனக்கேசெய்ததாயென்கோதிருச்சிற்றம்பலத்தந்தையென்கோ
இறப்பிலாவடிவமிம்மையேயளித்திங்கென்னையாண்டருளியநினையே. (௬)

அன்பிலேபழுத்ததனிப்பழமென்கோவறிவிலேயறிவறிவென்கோ
இன்பிலேநிறைந்தசிவபதமென்கோவென்னுயிர்த்துணைப்பதியென்கோ
வன்பிலாமனத்தேவயங்கொளியென்கோமன்னுமம்பலத்தரசென்கோ
வென்புரியழியாப்பொன்புரியாக்கியென்னையாண்டருளியநினையே. (௭)

தடையிலாதெடுத்தவருளமுதென்கோசர்க்கரைக்கட்டியேயென்கோ
அடைவுறுவயிரக்கட்டியேயென்கோவம்பலத்தாணிப்பொன்னென்கோ
வுடையமாணிக்கப்பெருமலையென்கோவுள்ளொளிக்குள்ளொளியென்கோ
இடைதலற்றோங்குந்திருவளித்திங்கேயென்னையாண்டருளியநினையே. (௮)

மறைமுடிவிளங்குபெரும்பொருளென்கோமன்னுமாகமப்பொருளென்கோ
குறைமுடித்தருள்செய்தெய்வமேயென்கோகுணப்பெருங்குன்றமேயென்கோ
பிறைமுடிக்கணிந்தபெருந்தகையென்கோபெரியவம்பலத்தரசென்கோ
இறைமுடிப்பொருளென்னுளம்பெறவளித்திங்கெனையாண்டருளியநினையே. (௯)

என்னுளம்பிரியாப்பேரொளியென்கோவென்னுயிர்த்தந்தையேயென்கோ
வென்னுயிர்த்தாயேயின்பமேயென்கோவென்னுயிர்த்தலைவனேயென்கோ
வென்னுயிர்வளர்க்குந்தனியமுதென்கோவென்னுடைநண்பனேயென்கோ
வென்பெருவாழ்வின்றனிமுதலென்கோவென்னையாண்டருளியநினையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## இ து வு ம து

எ ழு சீ ர டி யா சி ரி ய வி ரு த் த ம்.

திருச்சிற்றம்பலம்.

கருணைமாநிதியேயென்னிருகண்ணேகடவுளேகடவுளேயென்கோ
தருணவானமுதேயென்பெருந்தாயேதந்தையேதந்தையேயென்கோ
தெருணிறைமதியேயென்குருபதியேதெய்வமேதெய்வமேயென்கோ
அருணிறைதருமென்னருட்பெருஞ்சோதியாண்டவநின்றனையறிந்தே. (௧)

ஒட்டியேயென்னுளூறுமொளியென்கோவொளியெலாம்நிரம்பியநிலைக்கோ
வெட்டியேயென்கோவெட்டியிலெனக்குவிளங்குறக்கிடைத்தவோராயிரப்
பெட்டியேயென்கோபெட்டியினடுவேபெரியவர்வைத்ததோர்தங்கக்
கட்டியேயென்கோவம்பலத்தாடுங்கருணையங்கடவுணின்றனையே. (௨)

துன்பெலாந்தவிர்த்ததுணைவனேயென்கோசோதியுட்சோதியேயென்கோ
அன்பெலாமளித்தவன்பனேயென்கோவம்மையேயப்பனேயென்கோ
வின்பெலாம்புரிந்தவிறைவனேயென்கோவென்னுயிர்க்கின்னமுதென்கோ
வென்பொலாமணியேயென்கண்ணேயென்கோவென்னுயிர்நாதநின்றனையே. (௩)

கருத்தனேயெனதுகருத்தினுக்கிசைந்தகணவனேகணவனேயென்கோ
வொருத்தனேயெல்லாமுடையநாயகனேயொருதனிப்பெரியனேயென்கோ
திருத்தனேயெனதுசெல்வமேயெல்லாஞ்செயவல்லசித்தனேயென்கோ
நிருத்தனேயெனக்குப்பொருத்தனேயென்கோநிறையருட்சோதிநின்றனையே. (௪)

தாயனேயெனதுதாதையேயொருமைத்தலைவனேதலைவனேயென்கோ
பேயனேன்பிழையைப்பொறுத்தருள்புரிந்தபெருந்தகைப்பெரும்பதியென்கோ
சேயனேன்பெற்றசிவபதமென்கோசித்தெலாம்வல்லசித்தென்கோ
தூயனேயெனதுநேயனேயென்கோசோதியுட்சோதிநின்றனையே. (௫)

அரும்பிலேமலாவுற்றருணமணம்வீசுமானந்ததனிமலரென்கோ
கரும்பிலேயெடுத்தசுவைத்திரளென்கோகடையனேனுடையநெஞ்சகமா
மிரும்பிலேபழுத்தப்பேரொளிததும்பியிலங்குமோர்பசும்பொனேயென்கோ
துரும்பினேன்பெற்றபெரும்பதமென்கோசோதியுட்சோதிநின்றனையே. (௬)

தாகமுள்ளெடுத்தபோதெதிர்கிடைத்தசர்க்கரையமுதமேயென்கோ
மோகம்வந்தடுத்தபோதுகைபிடித்தமுகநகைக்கணவனேயென்கோ
போகமுள்விரும்பும்போதிலேவலிந்துபுணர்ந்தவோர்பூவையேயென்கோ
வாகமுட்புகுந்தென்னுயிரினுட்கலந்தவம்பலத்தாடிநின்றனையே. (௭)

தத்துவமனைத்துந்தவிர்த்துநான்றனித்தருணத்திற்கிடைத்ததொன்றென்கோ
சத்துவநிரம்புஞ்சுத்தசன்மார்க்கந்தனிலுறுமனுபவமென்கோ
வொத்துவந்தெனைத்தானகலந்துகொண்டெனக்குளோங்கியவொருமையேயென்கோ
சித்துவந்தாடுஞ்சித்தனேயென்கோதிருச்சிற்றம்பலத்தவநினையே. (அ)

யோகமெய்ஞ்ஞானம்பலித்தபோதுளத்திலோங்கியகாட்சியேயென்கோ
வேகமெய்ஞ்ஞானயோகத்திற்கிடைத்துள்ளிசைந்தபேரின்பமேயென்கோ
சாகலைத்தவிர்த்தெனைநன்னைவாழ்விக்கச்சார்ந்தசற்குருமணியென்கோ
மாகமும்புவியும்வாழ்வுறமணிமாமன்றிலேநடிக்கின்றேயநினையே. (௯)

இரவிலாதியம்பும்பகலிலாதிருந்தவியற்கையுளியற்கையேயென்கோ
வரவிலாவுரைகரும்போக்கிலாநிலையிலவயங்கியவான்பொருளென்கோ
திரையிலாதெலலாமவல்லசித்தெனககேசெய்ததோரசித்தனேயெனகோ
கரவிலாதெனககுப்பேரருட்சோதிகளித்தளித்தருளியநினையே. (௧0)

திருச்சிற்றம்பலம.

---

# திருநடப்புகழ்ச்சி.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பதியேயெம்பரனேயெம்பரம்பரனேயெமது பராபரனேயானந்தப்பதந்தருமெய்ஞ்ஞான, நிதியேமெய்ந்நிறைவேமெய்ந்நிலையேமெய்யின்பநிருத்தமிடுந்தனித்தலைமை நிபுணமணிவிளக்கே, கதியேயென்கண்ணேயென்கண்மணியேயெனதுகருத்தேயென்கருத்திலுற்றகனிவேசெங்கனியே, துதியேயென்றுணையேயென்றோழாவென்னுளத்தேசுத்தநடம்புரிகின்றசித்தசிகாமணியே. (௧)

ஆரணமேயாகமமேயாரணவாகமத்தினரும்பொருளேயரும்பொருளினநுபவமே யறிவே, காரணமேகாரியமேகாரணகாரியங்கள்கடந்தபெரும்பதியேயென்கருத்தமர்ந் தநிதியே, பூரணமேபுண்ணியமேபொதுவிளங்குமரசே புத்தமுதேசத்தியமேபொன் னேசெம்பொருளே, தோரணமேவிளங்குசித்திபுரத்தினுமென்னுளத்துஞ்சுத்தநடம்பு ரிகின்றசித்தசிகாமணியே. (உ)

இணையேதுமின்றிநின்றவிறையவனேமறைசொல்லேகமுமாயனேகமுமாயிலங் குபரம்பரனே, யிணையேதுமின்றிநிறைபெரும்புனலேயதன்மேலனலேயென்னப்பா வென்னவதனையெலாங்கடந்தும், புணையேமெய்ப்பொருளேமெய்ப்புகழேமெய்ப்புக லே யொதுவேயுள்ளதுவேதற்போதமிலாக்குதவுந், துணையேசத்துவமேதத்துவமே யென்னுளத்தேசுத்தநடம்புரிகின்றசித்தசிகாமணியே. (௩)

எருதினுழைத்திருந்தேனுக்கிரங்கியடிச்சிறியே னிருந்தவிடந்தனைத்தேடியிணை ப்பரிமானீர்க்கு, மொருதிருத்தேரூர்ந்தென்னையுடையவளோடடைந்தேயுள்வாயிற் றாழ்பிடித்துப்பயத்தொடுநின்றேனை, வருதியெனத்திருக்கரங்களசைத்தழைத்தபதி யேமணியேயென்மருந்தேயென்வாழ்வேயென்வரமே, சுருதிமுடியடிக்கணிந்ததுரை யேயென்னுளத்தேசுத்தநடம்புரிகின்றசித்தசிகாமணியே. (௪)

அகவடிவையொருகணத்தேயனகவடிவாக்கி யருளமுதமுவந்தளித்தேயடிக்கடி யென்னுளத்தே, முகவடிவந்தனைக்காட்டிகளித்துவியந்திடவேமுடிபனைத்துமுணர் த்தியொருமுன்னிலையில்லாதே, சகவடிவிற்றுஞுகிநாஞுகிநானுந்தானுமொருவடிவா கித்தனித்தோங்கப்புரிந்தே, சுகவடிவந்தனையளித்ததுரையேயெனதுளத்தேசுத்தநட ம்புரிகின்றசித்தசிகாமணியே. (௫)

உடுத்ததுகிலவிழ்த்துவிரித்தொருதரையிற்றனித்தேயுன்றுதுமுன்னியுளத்துறுக லக்கத்தோடே, படுத்தயர்ந்தசிறியேன்றனருகணைந்துமகனேபயமுனக்கென்னென் றென்னைப்பரிந்துதிருக்கரத்தா, லடுத்தணைத்துக்கொண்டெடுத்துப்போய்ப்பிறிதோ ரிடத்தேயமர்த்திநகைத்தருளியவென்னாண்டவனேயரசே, தொடுத்தணியென்மொ ழிமாலையணிந்துகொண்டெனதுளத்தேசுத்தநடம்புரிகின்றசித்தசிகாமணியே. (௬)

ஆற்றாதவடிச்சிறியேற்காற்றலமிகக்கொடுத்தேயம்மையுமாயப்பனுமாயாதரித்த ன்புடனே, போற்றாதகுற்றமெலாம்பொறுத்தருளியெனையிப்பூதலத்தார்வானகத்தா ர்போற்றிமதித்திடவே, யேற்றாதவுயர்நிலைமேலேற்றியெல்லாம்வல்லவிறைமையுந்தந் தருளியவென்னிறையவனேயெனக்கே, தோற்றாததோற்றுவித்ததுரையேயெனது ளத்தேசுத்தநடம்புரிகின்றசித்தசிகாமணியே. (௭)

படிப்படக்கிக்கேள்வியெலாம்பற்றறவிட்டடக்கிப் பார்த்திடலுமடக்கியுறும்பரி சமெலாமடக்கித், தடிப்புறுமூண்சுவையடக்கிக்கந்தமெலாமடக்கிச் சாதிமதஞ்சமய மெனுஞ்சழக்கையும்விட்டடக்கி, மடிப்படக்கிநின்றாலும்நில்லேனெனவேவனக்கு ரங்கும்வியப்பவென்றன்மனக்குரங்குகுதித்த, துடிப்படக்கியாட்கொண்டதுரையே யென்னுளத்தேசுத்தநடம்புரிகின்றசித்தசிகாமணியே. (௮)

பணிந்தறியேனன்புடனேபாடுதலுமறியேன்படித்தறியேன்கேட்டறியேன்பத் தியிற்பூமாலை, யணிந்தறியேன்மனமுருகக்கண்களினீர்பெருகவழுதறியேன்தொழு

தறியேனகங்காரஞ்சிறிதுந், தணிந்தறியேன் றயவறியேன்சத்தியவாசகமுந்தானறியே
னுழுந்தடித்ததடியதுபோலிருந்தேன், றுணிந்தெனக்குங்கருணைசெய்ததுணையேயெ
ன்னுளத்தேசுத்தநடம்புரிகின்றசித்தசிகாமணியே. (௯)

தாங்காதேபசிபெருகிக்கடைநாய்போலுலமயித் தவம்விடுத்தேயவந்தொடுத்தே
தனித்துண்டுவயிறும், வீங்காதேவெழுந்திருக்கவேனவீங்கிவெடித்திடல்போல்விம்மு
மெனிலெழுந்துடனேவெறுந்தடிபோல்விழுந்தே, வாங்காதுதூங்கியதோர்வழக்கமு
டையேனை வலிந்தடிமைகொண்டருளிமறப்பொழித்தெந்நாளுந், தூங்காதேவிழிக்க
வைத்ததுணையேயென்னுளத்தேசுத்தநடம்புரிகின்றசித்தசிகாமணியே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## பற்றறுகை.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆவாவென்றெனையாட்கொண்டருளியதெள்ளமுதே யம்மேயென்னப்பாவென்
னையாவென்னரசே, சாவாதவரமெனக்குத்தந்தபெருந்தகையேதயாநிதியேசிற்சபை
யிற்றனித்தபெரும்பதியே, யோவாதெனதுள்ளகத்தேயூற்றெழுமபேரன்பேயுள்ளப
டியெனனறிவினுள்ளபெருஞ்சுகமே, நீவாவெனமொழிகளெலாநிலைத்தபயன்பெற
வேநித்திரைதீர்ந்தேனிரவுநீங்கிவிடிந்ததுவே. (௧)

ஆராலுமறிந்துகொளற்கரியபெரும்பொருளே யம்மேயென்னப்பாவெனையா
வென்னரசே, காராலுங்கனலாலுங்காற்றாலுங்ககனக் கலையாலுங்கதிராலுங்கடலா
லுங்கடல்சூழ், பாராலும்படையாலுமபிறவாலுந்தடுக்கப் படுதலிலாதனிவடிவமெ
னக்களித்தபதியே, சீராலுங்குணத்தாலுஞ்சிறந்தவர்சேர்ஞான சித்திபுரத்தமுதே
யென்னித்திரைதீர்ந்ததுவே. (௨)

ஆதியந்தந்தோற்றாதவரும்பெருஞ்சோதியனே யம்மேயென்னப்பாவெனையா
வென்னரசே, யோதியெந்தவகையாலுமுணர்ந்துகொளற்கரிதா யுள்ளபடியியற்கை
யிலேயுள்ளவொருபொருளே, யூதியந்தந்தெனையாட்கொண்டுள்ளிடத்தும்புறத்து
மோவாமல்விளங்குகின்றவுடையவனேயிந்தச், சாதியுமதமுமெனும்வாய்ச்சழக்கை
யெலாந்தவிர்த்த சத்தியனேயுண்கின்றேன்சத்தியத்தெள்ளமுதே. (௩)

அச்சமெலாந்தவிர்த்தருளியிச்சையெலாமளித்தவம்மேயென்னப்பாவெனையா
வென்னரசே, * துச்சவுலகாசாரத்துடுக்கனைத்துந்தவிர்த்தேசுத்தநெறிவழங்குவித்த
சித்தசிகாமணியே, யுச்சநிலைநடுவிளங்குமொருதலைமைப்பதியேயுலகமெலாமெடுத்தி
டினுமுலவாதநிதியே, யிச்சமயமெழுந்தருளியிறவாதவரமுமெல்லாஞ்செய்வல்லசித்
தினியற்கையுந்தந்தனையே. (௪)

அன்புடையவென்னறிவேயருளுடையபொருளே யம்மேயென்னப்பாவென்னை
யாவென்னரசே, துன்புடையவுலகரெலாஞ்சுகமுடையாராகத் துன்மார்க்கந்தவிர்த்த

* துச்சம் - உரிமை.

ருளிச்சன்மார்க்கம்வழங்க, வின்புடையபேரருளிங்கெனைப்பொருள்செய்தளித்தவெ
ன்னமுதேயென்னுறவேயெனக்கினியதுணையே, யென்புடைநீயிருக்கின்றாயுன்பு
டைநான்மகிழ்ந்தேயிருக்கின்றேனிவ்வொருமையார்பெறுவாரீண்டே. (௫)

அடுக்கியபேரண்டமெலாமணுக்களெனவிரித்த வம்மேயென்னப்பாவென்னையா
வென்னரசே, நடுக்கியவென்னச்சமெலாந்தவிர்த்தருளியழியாஞானவமுதளித்துலகி
னூட்டியபேரறிவே, யிடுக்கியகைப்பிள்ளையெனவிருந்தசிறியேனுக்கெல்லாஞ்செய்வல்
லசித்தியீந்தபெருந்தகையே, முடுக்கியவஞ்ஞானந்தகாரமெலாந்தவிர்த்துமுத்தருளத்
தேமுளைத்தசுத்தபரஞ்சுடரே. (௬)

ஆங்காரந்தவிர்ந்தவருள்ளோங்காநின்றவனேயம்மேயென்னப்பாவென்னையாவெ
ன்னரசே, யோங்காரநிலைகாட்டியதன்மேலுற்றொளிருமொருநிலையுங்காட்டியப்பாலு
யர்ந்ததனிநிலையிற், பாங்காகவேத்தியெந்தப்பத்ததலைவராலுமபடைக்கவொணாச்சித்
தியைநான்படைக்கவைத்தபதியே, தூங்காதுபெருஞ்சுகமேசுகித்திடவிவ்வுலகைச்சு
த்தசன்மார்க்கந்தனிலேவைத்தருள்கவிணைந்தே. (௭)

ஆடகப்பொற்சபைநடுவேநாடகஞ்செய்தருளு மம்மேயென்னப்பாவென்னையா
வென்னரசே, யேடகத்தேயெழுதாதமறைகளெலாங்களித்தேயென்னுளத்தேயெழு
துவித்தவென்னுரிமைப்பதியே, பாடககான்மடந்தையருமைந்தருஞ்சனமார்க்கப்ப
யன்பெறநல்லருளளித்தபரம்பரனேமாயைக், காடகத்தைவளஞ்செறிந்தநாடகமாப்பு
ரிந்தகருணையனேசிற்சபையிற்கனிந்தநறுங்கனியே. (௮)

அடியாதென்றறிந்துகொளற்கரும்பெரியநிலையேயம்மேயென்னப்பாவென்னை
யாவென்னரசே, முடியாதென்றறிந்திடற்குமுடியாதெனறுணர்ந்தோர்மொழிந்திட
வேமுடியாதுமுடிந்ததனிமுடிபே, கடியாதபெருங்கருணைககருத்தேயென்கருத்திற்க
னிந்துகனிந்தினிக்கின்றகனியேயெனகளிப்பே, மடியாதவடிவெனக்குவழங்கியநல்
வரமேமணிமன்றில்நடமபுரியும்வாழ்க்கையறபொருளே. (௯)

அனந்தமறையாகமங்களளப்பரியசிவமே யம்மேயென்னப்பாவென்னையாவென்
னரசே, மனந்தருவாதனைதவிர்ந்தோரறிவினிலோரறிவாய்வயங்குகின்றகுருவேயென்
வாட்டமெலாந்தவிர்த்தே, யினந்தழுவியெனனுளத்தேயிருந்துயிரிற்கலந்தென்னெ
ண்ணமெலாங்களித்தளித்தவெனனுரிமைப்பதியே, சினந்தவிர்ந்தெவ்வுலகுமோர்ச
ன்மார்க்கமடைந்தேசிறப்புறவைத்தருள்கின்றசித்தசிகாமணியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்புகழ்ச்சி.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்சோதியமுதமேயமுதமளித்தெனைவளர்த்திடவருளாந்
தெருட்பெருந்தாய்தனைக்கையிலேகொடுத்ததெய்வமேசத்தியசிவமே
யிருட்பெருநிலத்தைக்கடத்தியென்றனைமேலேற்றியவினயமேயெல்லாப்
பொருட்பெருநெறியுங்காட்டியகுருவேபொதுநடம்புரிகின்றபொருளே. (௧)

சித்தெலாம்வல்லசித்தனேஞானசிதம்பரச்சோதியேசிறியேன்
கத்தெலாந்தவிர்த்துக்கருத்தெலாமளித்தகடவுளேகருணையங்கடலே
சத்தெலாமொன்றேசத்தியமெனவென்றனக்கறிவித்ததோர்தயையே
புத்தெலாநீக்கிப்பொருளெலாங்காட்டும்பொதுநடம்புரிகின்றபொருளே. (௨)

கலைகளோரனந்தமனந்தமேனோக்கிக்கற்பங்கள்கணக்கிலகடப்ப
நிலைகளோரனந்தநேடியுங்காணுநித்தியநிர்க்குணநிறைவே
யலைகளற்றுயிர்க்கமுதளித்தருளுமருட்பெருங்கடலெனுமரசே
புலைகளவகற்றியெனக்குளேநிறைந்துபொதுநடம்புரிகின்றபொருளே. (௩)

தண்ணியமதியேதனித்தசெஞ்சுடரேசத்தியசாத்தியக்கனலே
யொண்ணியவொளியேயொளிக்குளோரொளியேயுலகெலாந்தழைக்கமெய்யுளத்தே
நண்ணியவிளக்கேயெண்ணியபடிக்கேநல்கியஞானபோனகமே
புண்ணியநிதியேகண்ணியநிலையேபொதுநடம்புரிகின்றபொருளே. (௪)

அற்புதநிறைவே * சற்புதரறிவிலறிவெனவறிகின்றவறிவே
சொற்பனமாயைக்கற்பனைகடந்ததுரியநன்னிலத்திலேதுலங்குஞ்
சிற்பரஞ்சுடரேதற்பரஞானச்செல்வமேசித்தெலாம்புரியும்
பொற்புலமளித்தநற்புலக்கருத்தேபொதுநடம்புரிகின்றபொருளே. (௫)

தத்துவபதியேதத்துவங்கடந்துதனித்ததோர்சத்தியபதியே
சத்துவநெறியிற்சார்ந்தசன்மார்க்கத்தலைக்குளேசார்ந்தநற்சாரே
பித்துறுசமயப்பிணக்குறுமவர்க்குப்பெரிதரிதாகியபேறே
புத்தமுதளித்தென்னுளத்திலேகலந்துபொதுநடம்புரிகின்றபொருளே. (௬)

மேல்வெளிகாட்டிவெளியிலேவிளைந்தவிளைவெலாங்காட்டிமெய்வேத
நூல்வழிகாட்டியென்னுளேவிளங்குமநோக்கமேயாக்கமுந்திறலும்
நால்வகைப்பயனுமளித்தெனைவளர்க்குநாயகக்கருணைநற்றாயே
போலுயிர்க்குயிராயபொருந்தியமருந்தேபொதுநடம்புரிகின்றபொருளே. (௭)

அலப்பறவிளங்குமருட்பெருவிளக்கேயரும்பெருஞ்சோதியேசுடரே
மலப்பிணியறுத்தவாய்மையெம்மருந்தேமருந்தெலாம்பொருந்தியமணியே
‡ யுலப்பறுகருணைச்செல்வமேயெல்லாவுயிர்க்குளுநிறைந்ததோருணர்வே
புலப்பகைதவிர்க்கும்பூரணவரமேபொதுநடம்புரிகின்றபொருளே. (௮)

* சற்புதர் - நல்லறிவுடையவர். ‡ உலப்பு - கேடு.

பரம்பரநிறைவேபராபரவெளியேபரமசிற்சுகந்தரும்பதியே
வரம்பெறுசிவசன்மார்க்கதம்மதியில்வயங்கியபெருஞ்சுடர்மணியே
கரம்பெறுகனியேகனியுறுசுவையேகருதியகருத்துறுகளிப்பே
புரம்புகழ்நிதியேசிரம்புகல்கதியேபொதுநடம்புரிகின்றபொருளே. (௯)

வெற்புறுமுடியிற்றம்பமேலேற்றிமெய்ந்நிலையமர்வித்தவியப்பே
கற்புறுகருத்திலினிக்கின்றகரும்பேகருணைவானமுதத்தெண்கடலே
யற்புறுமறிவிலருளொளியாகியானந்தமாமனுபவமே
பொற்புறுபதியேயற்புதநிதியேபொதுநடம்புரிகின்றபொருளே. (௧௦)

தன்மைகாண்பரியதலைவனேயெல்லாந்தரவல்லசம்புவேசமயப்
புன்மைநீத்தகமும்புறமுமொத்தமைந்தபுண்ணியாநண்ணியபுகலே
வன்மைசேர்மனத்தைநன்மைசேர்மனமாவயங்குவித்தமாந்தமெய்வாழ்வே
பொன்மைசார்கனகப்பொதுவொடுஞானப்பொதுநடம்புரிகின்றபொருளே. (௧௧)

மூவிருமுடியின்முடிந்தவோர்முடிபேமுடிபெலாங்கடந்ததோர்முதலே
தாவியமுதலுங்கடையுமேற்காட்டாச்சத்தியத்தனிநடுநிலையே
மேவியநடுவில்விளங்கியவிளைவேவிளைவெலாந்தருகின்றவெளியே
பூவியலளித்தபுனிதசற்குருவேபொதுநடம்புரிகின்றபொருளே. (௧௨)

வேதமும்பொருளும்பயனுமோரடைவும்விளம்பியவநுபவவிளைவும்
போதமுஞ்சுகமுமாகியிங்கிவைகளபோனதுமாயொளிர்புலமே
யேதமுற்றிருந்தவேழையேன்பொருட்டிவ்விருநிலத்தியலருளொளியாற்
பூதநல்வடிவங்காட்டியென்னுளத்தேபொதுநடம்புரிகின்றபொருளே. (௧௩)

அடியனேன்பொருட்டிவ்வவனிமேற்கருணையருள்வடிவெடுத்தெழுந்தருளி
நெடியனேமுதலோர்பெறற்கருஞ்சித்திநிலையெலாமளித்தமாநிதியே
மடிவுறாதென்றுஞ்சுத்தசன்மார்க்கம்வயங்கநல்வரந்தந்தவாழ்வே
பொடியணிகனகப்பொருப்பொளிர்நெருப்பேபொதுநடம்புரிகின்றபொருளே. (௧௪)

என்பிழையனைத்தும்பொறுத்தருள்புரிந்தென்னிதயத்திலிருக்கின்றகுருவே
யன்புடையரசேயப்பனேயென்றனம்மையேயருட்பெருஞ்சோதி
யின்புறுநிலையிலேற்றியதுணையேயென்னுயிர்நாதனேயெனைப்
பொன்புனைமாலைபுனைந்தவோர்பதியேபொதுநடம்புரிகின்றபொருளே. (௧௫)

சத்தியபதியேசத்தியநிதியேசத்தியஞானமேவேத
நித்தியநிலையேநித்தியநிறைவேநித்தியவாழ்வருணெறியே
சித்தியின்புருவேசித்தியின்கருவேசித்தியற்சித்தியேயெனது
புத்தியின்றெளிவேபுத்தமுதளித்துப்பொதுநடம்புரிகின்றபொருளே. (௧௬)

சித்தொளிர்பரமேபரத்தொளிர்பதியேசிவபதவநுபவச்சிவமே
மத்தத்தடைதவிர்த்தமதிமதிமதியேமதிநிறையமுதநல்வாய்ப்பே
சத்ததிருநெறியேதனிநெறித்துணையேசாமியேதந்தையேதாயே
* புதப்பெருவரமேபுகற்கருந்தரமேபொதுநடம்புரிகின்றபொருளே. (௧௭)

* புதம் - அறிவு.

கலைவளர்கலையேகலையினுட்கலையேகலையெலாந்தருமொருகருவே
நிலைவளர்கருவுட்கருவெனவயங்குநித்தியவானமேஞான
மலைவளர்மருந்தேமருந்துறுபலனேமாபலந்தருகின்றவாழ்வே
புலைதவிர்த்தெனையும்பொருளெனக்கொண்டுபொதுநடம்புரிகின்றபொருளே. (கஅ)

மெய்ம்மையேகிடைத்தமெய்ம்மையேஞானவிளக்கமேவிளக்கத்தின்வியப்பே
கைம்மையேதவிர்த்துமங்கலமளித்தகருணையேகரிசிலாக்களிப்பே
ஐம்மையேயதற்குளதுவதுவாகுமற்புதக்காட்சியேயெனது
பொய்ம்மையேபொறுத்துப்புகலளித்தருளிப்பொதுநடம்புரிகின்றபொருளே. (கக)

காரணவுருவேகாரியவுருவேகாரணகாரியங்காட்டி
யாரணமுடியுமாகமமுடியுமமர்ந்தொளிரற்புதச்சுடரே
நாரணதலமேநாரணவலமேநாரணாகாரத்தின்ஞாங்கர்ப்
பூரணவொளிசெய்பூரணசிவமேபொதுநடம்புரிகின்றபொருளே. (உ0)

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பெருமை.

எ ழு சீ ர டி யா சி ரி ய வி ரு த் த ம்.

திருச்சிற்றம்பலம்

அன்பனேயப்பாவம்மையேயரசேயருட்பெருஞ்சோதியேயடியேன்
துன்பெலாந்தொலைத்ததுணைவனேஞானசுகத்திலேதோற்றியசுகமே
யின்பனேயெல்லாம்வல்லசித்தாகியென்னுளேயிலங்கியபொருளே
வன்பனேன்பிழைகள்பொறுத்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (க)

பெருகுமாகருணைப்பெருங்கடலின்பப்பெருக்கமேயென்பெரும்பேறே
யுருகுமோருள்ளத்த * துவட்டுறுதினிக்குமுண்மைவானமுதமேயென்பாற
கருகுநெஞ்சத்தைத்தளிர்த்திடப்புரிந்தகருணையங்கடவுளேவிரைந்து
வருகவென்றுரைத்தேன்வந்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (உ)

எந்தையென்குருவேயெனதுயிர்க்குயிரேயென்னிருகண்ணினுண்மணியே
யிந்துறுமமுதேயென்னுயிர்த்துணையேயிணையிலாவென்னுடையன்பே
சொந்தநல்லுறவேயம்பலத்தரசேசோதியேசோதியேவிரைந்து
வந்தருளென்றேன்வந்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (ங)

கோவெனவெனதுகுருவெனஞானகுணமெனவொளிச்சிவக்கொழுந்தே
பூவெனவதிலேமணமெனவணத்தின்பொலிவெனவயங்கியபொற்பே
தேவெனத்தேவதேவெனவொருமைச்சிவமெனவிளங்கியபதியே
வாவெனவுரைத்தேன்வந்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (ச)

* உவட்டுறு - பெருக்கெடுத்து.

உள்ளமேயிடமாக்கொண்டென்னையாட்கொண்டவொருவனேயுலகெலாமறியத்
தெள்ளமுதளித்திங்குனைவாழ்விப்பேஞ்சித்தமஞ்சேலென்றசிவமே
கள்ளமேதவிர்த்தகருணைமாநிதியேகடவுளேகனகவம்பலத்தென்
வள்ளலேயென்றேனவந்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (௫)

நல்லவாவளித்தநல்லவாவெனையும்நயந்தவாநாயினேனவின்ற
சொல்லவாவெனக்குத்துணையவாஞானசுகத்தவாசோதியம்பலவா
அல்லவாவனைத்துமானவாவெனையாண்டவாதாண்டவாவெல்லாம்
வல்லவாவென்றேன்வந்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (௬)

திண்மையேமுதலைங்குணக்கருவாயசெல்வமேநல்வழிகாட்டுங்
கண்மையேகண்மைகலந்தவென்கண்ணேகண்ணுறவியைந்தநற்கருத்தே
யுண்மையேயெல்லாமுடையவோர்தலைமையொருதனித்தெய்வமேயுலவா
வண்மையேயென்றேனவந்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (௭)

காய்மையேதவிர்த்துக்கருணையேகனிந்தகற்பகத்தனிப்பெருந்தருவே
தூய்மையேவிளக்கித்துணைமையேயளித்தசோதியேதூய்மையில்லவாக்குச்
சேய்மையேயெல்லாஞ்செயவல்லஞானசித்தியேசுத்தசன்மார்க்க
வாய்மையேயென்றேன்வந்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (௮)

என்னவாவனைத்துமீந்தவாவென்னையீன்றவாவென்னவாவேதஞ்
சொன்னவாகருணைத்தூயவாபெரியார்துதியவாவம்பலத்தமுத
மன்னவாவறிவாலறியறிவறிவாவானந்தநாடகம்புரியு
மன்னவாவென்றேன்வந்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (௯)

விரதமாதிகளுந்தவிர்த்துமெய்ஞ்ஞானவிளக்கினாலென்னுளம்விளக்கி
யிரதமாகியநற்றெள்ளமுதளித்திங்கெனைக்கருத்தனைத்தையும்புரிந்தே
சரதமாநிலையிற்சித்தெலாம்வல்லசத்தியைத்தயவினாற்றருக
வரதனேயென்றேன்வந்தருட்சோதிவழங்கினைவாழிநின்மாண்பே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## இதுவுமது.

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

விரைசேர்பொன்மலரேமலர்மேவியசெந்தேனே
கரைசேர்முக்கனியேகரும்பின்சுவைக்கட்டியனே
திரைதீருள்ளொளியேதிருச்சிற்றம்பலநடஞ்செய்
யரைசேதந்தனையேயருளாரமுதந்தனையே. (௧)

விண்ணார்செஞ்சுடரேசுடர்மேவியவுள்ளொளியே
தண்ணார்வெண்மதியேயதிற்றங்கியதண்ணமுதே
கண்ணார்மெய்க்கனலேசிவகாமப்பெண்காதலனே
யண்ணாதந்தனையேயருளாரமுதந்தனையே. (௨)

துப்பார்செஞ்சடையாயருட்சோதிசுகக்கடலே
செப்பாமேனிலகக்கேசிறியேனைச்செலுத்தியவா
எப்பாலும்புகழும்பொதுவின்படம்புரியும்
அப்பாதந்தனையேயருளாரமுதந்தனையே. (௩)

மெய்யாமெய்யருளேயொளிர்கின்றவிழுப்பொருளே
கையாருங்கனியேயருட்கண்கொண்டதீங்கரும்பே
செய்யாயவெண்ணீறத்தாய்திருச்சிற்றம்பலநடஞ்செ
யையாதந்தனையேயருளாரமுதந்தனையே. (௪)

பொறிவேறின்றிநினைநிதம்போற்றும்புனிதருளே
குறிவேறின்றிநின்றபெருஞ்சோதிக்கொழுஞ்சுடரே
செறிவேதங்களெலாமுறைசெய்யநிறைந்திடும்பே
ரறிவேதந்தனையேயருளாரமுதந்தனையே. (௫)

முத்தாமுத்தருளேயொளிர்கின்றமுழுமுதலே
சித்தாசித்தியெலாந்தரவல்லசெழுஞ்சுடரே
பித்தாபித்தனெனைவலிந்தாண்டபெருந்தகையே
யத்தாதந்தனையேயருளாரமுதந்தனையே. (௬)

தன்னேரில்லவனேயெனைத்தந்ததயாநிதியே
மன்னேமன்றிடத்தேநடஞ்செய்யுமெய்வாழ்முதலே
பொன்னேயென்னுயிரேயுயிருண்ணிறைபூரணமே
யன்னேதந்தனையேயருளாரமுதந்தனையே. (௭)

பவனேவெம்பவநோய்தனைத்தீர்க்கும்பரஞ்சுடரே
சிவனேசெம்பொருளேதிருச்சிற்றம்பலநடிப்போய்
தவநேயம்பெறுவாதமைத்தாங்கியருள்செயவல்
லவனேதந்தனையேயருளாரமுதந்தனையே. (௮)

தேனாயத்தீம்பழமாய்ச்சுவைசேர்கரும்பாயமுதம்
தானாயன்பருளேயினிக்கின்றதனிப்பொருளே
வானாய்க்காலனலாய்ப்புனலாயதில்வாழ்புவியா
யானாயதந்தனையேயருளாரமுதந்தனையே. (௯)

பொடியேற்கும்புயனேயருட்பொன்னம்பலத்தரசே
செடியேற்கன்றளித்தாய்திருச்சிற்றம்பலச்சுடரே
கடியேற்கனையெனுஞ்சிவகாமக்கொடியுடையா
யடியேற்கின்றளித்தாயருளாரமுதந்தனையே. (௧௦)

ஒளியேயவ்வொளியின்னவுள்ளொளிக்குள்ளொளியே
வெளியேயெவ்வெளியுமடங்கின்றவெறுவெளியே
தளியேயம்பலத்தேநடஞ்செய்யுந்தயாநிதியே
யளியேதந்தனையேயருளாரமுதந்தனையே. (௧௧)

மருளேய்நெஞ்சகனேன்மனவாட்டமெலாந்தவிர்த்தே
தெருளேயோர்வடிவாயுறச்செய்தசெழுஞ்சுடரே
பொருளேசிற்சபைவாழ்வுறுகின்றவென்புண்ணியனே
யருளேதந்தனையேயருளாரமுதந்தனையே. (௧௨)

முன்பேயென்றனையேவலிந்தாட்கொண்டமுன்னவனே
யின்பேயென்னுயிரேயெனையீன்றவிறையவனே
பொன்பேரம்பலவாசிவபோகஞ்செய்சிற்சபைவா
ழன்பேதந்தனையேயருளாரமுதந்தனையே. (௧௩)

திருச்சிற்றம்பலம்.

# உபதேசவுண்மை.

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

கண்ணேகண்மணியேகருத்தேகருத்தினிகனியே
விண்ணேவிண்ணிறைவேசிவமேதனிமெய்ப்பொருளே
தண்ணேரொண்மதியேயெனைத்தந்ததயாநிதியே
யுண்ணேருள்ளொளியேயெனக்குண்மையுரைத்தருளே. (௧)

வளியேவெண்ணெருப்பேகுளிர்மாமதியேகனலே
வெளியேமெய்ப்பொருளேபொருள்மேவியமேனிலையே
யளியேயற்புதமேயமுதேயறிவேயரசே
யொளியேயுத்தமனேயெனக்குண்மையுரைத்தருளே. (௨)

அன்பேயென்னரசேதிருவம்பலத்தாரமுதே
யென்பேயுள்ளுருக்கக்கலந்தென்னுளிருந்தவனே
யின்பேயென்னறிவேபரமேசிவமேயெனவே
யுன்பேரோதுகின்றேனெனக்குண்மையுரைத்தருளே. (௩)

தனையாவென்றழைத்தேயருட்சத்தியளித்தவனே
யனையாயப்பனுமாயெனக்காரியனானவனே
யினையாதெனையுமேனிலையேற்றுவித்தாண்டவனே
யுனையானேத்துகின்றேனெனக்குண்மையுரைத்தருளே. (௪)

துப்பார்செஞ்சுடரேயருட்சோதிச்சுகக்கடலே
யப்பாவென்னரசேதிருவம்பலத்தாரமுதே
யிப்பாரிற்பசிக்கேதந்தவின்சுவைநல்லுணவே
யொப்பாவொப்பரியாயெனக்குண்மையுரைத்தருளே. (௫)

என்றேயென்றுளுறுஞ்சுடரேயெனையீன்றவனே
நன்றேநண்பெனக்கேமிகநல்கியநாயகனே
மன்றோர்மாமணியேசுகவாழ்க்கையின்மெய்ப்பொருளே
யொன்றேயென்றுனையேயெனக்குண்மையுரைத்தருளே. (௬)

திருவேதெள்ளமுதேயருட்சித்தசிகாமணியே
கருவேரற்றிடவேகளைகின்றவென்கண்ணுதலே
மருவேமாமலரேமலர்வாழ்கின்றவானவனு
முருவேயென்குருவேயெனக்குண்மையுரைத்தருளே. (௭)

தடையாவுந்தவிர்த்தேயெனைத்தாங்கிக்கொண்டாண்டவனே
யடையாயனபிலர்பாலெனக்கனவொடுதந்தபெருங்
கொடையாயகுற்றமெலாங்குணங்கொண்டகுணக்குன்றமே
யுடையாயுத்தமனேயெனக்குண்மையுரைத்தருளே. (௮)

பெண்ணாயாணுருவாயெனைப்பெற்றபெருந்தகையே
யண்ணாவென்னரசேதிருவம்பலத்தாடுகின்றோய்
எண்ணாநாயடியேன்களித்திட்டவுணவையெலாம்
உண்ணாதுண்டவனேயெனக்குண்மையுரைத்தருளே. (௯)

நந்நாலுங்கடந்தேயொளிர்ஞானசபாபதியே
பொன்னாருஞ்சபையாயருட்பூரணபுண்ணியனே
யென்னாலாவதொன்றுமுனக்கில்லையெனினுமெந்தா
யுன்னாலவாழுகின்றேனெனக்குண்மையுரைத்தருளே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# அமையங்கூறல்.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கருணைததும்பிப்பொதுநோக்குங்கண்ணிற்கிடைத்தகண்ணேயோ கனியிற்க
னிந்தவுருவானகருத்திற்கிடைத்தகருத்தேமெய், யருணனிலையினதுவதுவாயறிவி
ற்கிடைத்தவறிவேயென் னகத்தும்புறத்துமொளிநிறைவித்தமர்ந்தகுருவேயைம்பூத,
வருணமுதலாயவைகடந்தவரைப்பாயவிளங்குமணிமன்றிலவயங்குசுடரேயெல்லாஞ்
செய்வல்லகுருவேயென்னுளத்தே. தருணநடஞ்செயரசேயென்றாயேயென்னைத்த
ந்தாயேதனித்ததலைமைப்பதியேயித்தருணம்வாய்த்ததருணமதே. (௧)

கருவிற்கலந்ததுணையேயென்கனிவிற்கலந்தவமுதேயென்கண்ணிற்கலந்தவொ
ளியேயென்கருத்திற்கலந்தகளிப்பேயென், னுருவிற்கலந்தவழகேயென்னுயிரிற்கல
ந்தவுறவேயென்னுணர்விற்கலந்தசுகமேயென்னுடையவொருமைப்பெருமானே, தெ
ருவிற்கலந்துவிளையாடுஞ்சிறியேன்றனக்கேமெய்ஞ்ஞானசித்தியளித்தபெருங்கருணை
த்தேவேயுலகத்திரளெல்லாம், மருவிக்கலந்துவாழ்வதற்குவாய்த்ததருணமிதுவென
றேவாயேபறையாயறைகின்றேனெந்தாயகருணைவலத்தாலே. (௨)

தானேதயவாற்சிறியேற்குத்தனித்தஞானவமுதளித்ததாயேயெல்லாச்சுதந்தரமு
ந்தந்தகருணையெந்தாயே, யூனேவிளங்கவூனமிலாவொளிபெற்றெல்லாவுலகமுமென்
னுடைமையாகக்கொண்டருணிலைமேலுற்றேனுன்றனருளாலே, வானேமதிக்கச்சாகா
தவாணாயெல்லாம்வல்லசித்தே வயங்கவுனையுட்கலந்துகொண்டேன்வகுக்குந்தொழி

லேமுதலைந்தும், நானேபுரிகின்றேன்புரிதனுனேநீயோநானறியேனநானீயெனனும் பேதமிலாநடஞ்செய்கருணைநாயகனே. (௩)

கலைசார்முடிபுகடந்துணாவுகடந்துநிறைவாய்க்கரிசிலதாயக் கருணைமயமாய்விள ஙகுசிதாகாயநடுவிலியற்கையுண்மைத், தலைசார்வடிவின்படம்புரியும்பெருமைதத னிமுதலேசாகாக்கல்விபயிறறியென்னுட்சார்நதுவிளஙகுஞ்சறகுருவே,புலைசாமனத துச்சிறியேன்றன்குறறமனைததுமபொறுததருளிப் பொனருவடிவுகொடுததெலலாம்பு ரிவல்லபந்தந்தருட்சோதி, நிலைசாரிறைமையளிததனைநானபொதுவில்ஞானநீதியெ னுமிருததமபுரிகினறேன்புரிதனீயோநானேனிகழ்ததாயே. (௪)

கருத்திற்கருதிகொண்டவெலாஙகணத்திற்புரியவெனககேமெயக்காட்சிஞான க்கண்கொடுத்தகண்ணேவிடயககானகத்தே, யெருததிறறிரிநதகடையேனையெலலாவு லகுந்தொழுநிலைமேலேறறிநீயுநானுமொனருயிருககப்புரிநதாயெநதாயே, யிருததிகக ருததிலுன்றயவையெண்ணுநதோறுமநதோவென்னிதயமுருகிததளதள வெனறினகி யிளகிததணணீரா, யருததிபபெருநீராற்றொடுசோநதன்புபபெருககிறகலந்ததுதானது வென்றென்றுநதோறருதேயசசோவச்சோவசசோவே. (௫)

எதுநதெரியாதகஙகரிததிஙகிருநதசிறியேன்றனைவலிந்தே யெலலாவுலகுமதிச யிக்கவெலலாம்வல்லசிததெனவே, யோதும்பொருளைகொடுததெனறுமுலவாவினப ப்பெருநிலையிலோஙகியுறவைததனையேயெனனுடையவொருமைப்பெருமானே, யீது ன்கருணைகியலபோநீயெனபால்வைததபெருஙகருணை யிநநாட்புதிதேயநநாளிலிலை யேயிதனையெண்ணியநான, ருதுமுணாவுமுயிருமுளளததடமுமபிறவாநததுவமுந தாமேகுழைநதுதழைநதமுதசாரமயமாகினறேனே. (௬)

ஓவாதுணடுபடுததுறஙகியுணாநதுவிழிததுக்கதைபேசி யுடம்புநோவாதுளமடக காதேகோநோனபுகுமபிட்டே, சாவாவரமுஞசிததியெலாநதழைததநிலையுஞசனமாா க்கசஙகமதிப்புமபெற்றேனெனசதுரானபெரிதெனசரிததிரததை, யாவாநினைககி லதிசயமென்னப்பாவரசேயமுதேயெனனுவிககினிய துணையே யெனனனபேயறிவே யருட்சோதித, தேவாவிதுநினசெயலேயிசசெயலைநினைககுநதொறுமெனதுசிநதைக னிநதுகனிநதுருகிததெள்ளாரமுதமானதுவே. (௭)

இரவுமபகலுந்தூஙகியவெனறாககமனைததுமியல்யோகததிசைந்தபலனாய்விளைந் ததுநானிரண்டுபொழுதுமுணடவெலாம, பரவுமமுதவுணவாயிறறநதோபலாபாறபக லிரவுமபடிததசமயச்சாததிரமுமபலராற்செய்ததோததிரமும, விரவிககளிததுநாததடி ககவிளமபிவிரிததபாட்டெலலாம வேதாகமததினமுடிமீதுவிளஙகுநதிருப்பாடடாயி னவே, கரவொனறறியாபபெருங்கருணைககடவுளிதுநினறயவிதனைககருதுநதொறு மெனகருததலாநதுசுகமேமயமாககணடதுவே. (௮)

ஊற்றையுடம்பிலிருட்டறைவாயுறங்கிவிழிததுககதைபேசியுண்டிங்குடுததுக்கரு த்திழநதேயுதவாவெருஙினூாதிரிந்து, நேற்றைவரையும்வீண்போதுபோககியிருநதே னறியறியேனேரேயிறறைப்பகலநதோநெடுஙகாலமுமெயததவயோக,வாறறையடை நதோரெலலோருமசசோவெனறேயதிசயிப்பவமுதுணடழியததிருவுருவமடைநதே ன்பெரியவருடசோதிப், பேறறையுரிமைபபேறுகபபெறறேனபெரியபெருமானின் பெருமையிதுவேவிதனியலையாரேதுணிநதுபேசுவரே. (௯)

புணைசோவினையுங்கொடுமாயைப்புணர்ப்புமிருளுமறைப்பினொடு புகலும்பிறவாந் தடைகளெலாம்போக்கிஞானப்பொருள்விளங்கும, வணைசோத்தருளிச்சித்தியெலாம் வழங்கிச்சாகாவரங்கொடுத்துவலிசெய்தென்னுளத்திலமர்ந்துயிரிற்கலந்துமகிழ்ந்துவாழ்கின்றாய், பணைசோவெளியிற்பதியாயப்பாலமேலவெளியில்விளங்குசித்த பதியேசிறியேன்பாடலுக்குப்பரிசுவிணைந்தேபாலித்த, வணைசேயமுதமெனக்களித்தவம்மேயுண்மையறிவளித்தவப்பாபெரியவருட்சோதியப்பாவாழிநின்னருளே. (௪௰)

திருச்சிற்றம்பலம்.

---

# அநுபவநிலை.

## கொச்சககலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

நானான்றானான்நானுந்தானும்மானான்
றேனானான்றெள்ளமுதாய்த்தித்தித்துநிறைகின்றான்
வானானான்ஞானமணிமன்றிலாடுகின்றான்
கோனானானென்னுட்குலாவுகின்றகோமானே. (௧)

திருச்சிற்றம்பலம்.

---

# இதுவுமது.

## கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

நான்செய்தபுண்ணியமென்னுரைக்கேன்பொதுநண்ணியதோர்
வான்செய்தமாமணியென்கையிற்பெற்றுநல்வாழ்வடைந்தேன்
ஊன்செய்ததேகமொளிவடிவாகநின்றோங்குகின்றேன்
தேன்செய்ததெள்ளமுதுண்டேன்கண்டேன்மெய்த்திருநிலையே. (௧)

நான்செய்தபுண்ணியமென்னுரைப்பேன்பொதுநண்ணியதோர்
வான்செய்தமெய்ப்பொருளென்கையிற்பெற்றுமெய்வாழ்வடைந்தேன்
கோன்செய்தபற்பலகோடியண்டங்களுங்கூறவற்றில்
தான்செய்தபிண்டப்பகுதியும்நான்செய்யத்தந்தனனே. (௨)

திருநிலைபெற்றனனம்பலத்தானருட்டெள்ளமுதுண்
டொருநிலைபெற்றனனென்றேசிவமெனவோங்குகின்ற
பெருநிலைபெற்றனன்சுத்தசன்மார்க்கம்பிடித்துநின்றேன்
இருநிலைமுன்னிலையெல்லாநிலையுமெனக்குளவே. (௩)

எத்தனைநான்குற்றஞ்செய்தும்பொறுத்தனைபின்னைநின்பால்
வைத்தனையுள்ளமகிழ்ந்தனைநான்சொன்னவார்த்தைகளிங்
கத்தனையுஞ்சம்மதித்தருள்செய்தனையம்பலத்தே
முத்தனையாயநினக்கென்மேலிருக்கின்றமோகமென்னே. (௪)

இனியேயிறையுஞ்சகிப்பறியேனெனக்கின்பநல்குங்
கனியேயென்றனையிருகண்ணேமுக்கண்கொண்டகற்பகமே
தனியேயென்னையுடைத்தாயேசிற்றம்பலஞ்சார்தந்தையே
முனியேலருள்கவருள்கமெய்ஞ்ஞானமுழுதையுமே. (௫)

புத்தியஞ்சேல்சற்றுமெனநெஞ்சமேசிற்பொதுத்தந்தையார்
நித்தியஞ்சேர்ந்தநெறியிற்செலுத்தினார்நீயினிநன்
முத்தியும்ஞானமெய்ச்சித்தியும்பெற்றுமுயங்கிடுவாய்
சத்தியஞ்சத்தியஞ்சத்தியஞ்சத்தியஞ்சத்தியமே. (௬)

கூடியநாளிதுதான்றருணம்மெனைக்கூடியுள்ளே
வாடியவாட்டமெலாந்தவிர்த்தேசுகவாழ்வளிப்பாய
நீடியதேலினிச்சற்றும்பொறேனுயிர்நீத்திடுவேன்
ஆடியபாதமறியச்சொன்னேனென்னையாண்டவனே. (௭)

ஆக்கியநாளிதுதான்றருணம்மருளாரமுதந்
தேக்கிமெய்யின்புறச்செய்தருள்செய்தருள்செய்தருணீ
நீக்கினையேலினிச்சற்றும்பொறேனுயிர்நீத்திடுவேன்
தூக்கியபாதமறியச்சொன்னேனருட்சோதியனே. (௮)

திருச்சிற்றம்பலம்.

## கைம்மாறின்மை.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இழையெலாம்விளங்குமம்மையிடங்கொணின்கருணையென்னும்
மழையெலாம்பொழிந்தெனனுள்ளமயக்கெலாந்தவிர்த்துநான்செய்
பிழையெலாம்பொறுத்தவுன்றன்பெருமைக்கென்புரிவேனந்தோ
வுழையெலாமிலங்குஞ்சோதியுயர்மணிமன்றுளானே. (௧)

போதுதான்வீணேபோக்கிப்புலையனேன்புரிந்தபொல்லாத
தீதுதான்பொறுத்தவுன்றன்றிருவருட்பெருமைக்கந்தோ
வேதுதான்புரிவேனோகோவெனவென்றுபுகழ்வேன்ஞான
மாதுதானிடங்கொண்டோங்கவயங்குமாமன்றுளானே. (௨)

சிற்றறிவுடையனாகித்தினந்தொறுந்திரிந்துநான்செய்
குற்றமுங்குணமாக்கொண்டகுணப்பெருங்குன்றேயென்னைப்
பெற்றதாயுடனுறங்கும்பெருமநின்பெருமைதன்னைக்
கற்றறிவிலேனெந்தக்கணக்கறிந்துரைப்பேனந்தோ. (௩)

மையரிநெடுங்கணார்தம்வாழ்க்கையின்மயங்கியிங்கே
பொய்யறிவுடையேன்செய்தபுன்மைகள்பொறுத்தாட்கொண்டா
யையறிவுடையார்போற்றுமம்பலத்தரசேநின்சீர்
மெய்யறிவறியேனெந்தவிளைவறிந்துரைப்பேனந்தோ. (௪)

பேயினுமபெரியேன்செய்தபிழைகளுககெல்லையிலலை
யாயினும்பொறுத்தாட்கொண்டாயம்பலத்தரசேயென்றன்
றாயினுமினியவுனறன்றண்ணருட்பெருமைதன்னை
நாயினுஙகடையேனெந்தநலமறிந்துரைப்பேனநதோ. (ரு)

துரும்பினிறசிறியேன்வஞ்சஞ்சூழ்ந்தநெஞ்சகத்தேன்செய்த
பெரும்பிழையனைத்துமந்தோபெருங்குணமாககொண்டா
யரும்பொருளென்னவேதமாகமம்வழுததுகினற
கரும்பினிலினியாயுன்றன்கருணையென்னென்பேனந்தோ. (சா)

வரைகடந்தடியேன்செயதவனபிழைபொறுததாட்கொண்டாய்
திரைகடந்தண்டபிண்டததிசையெலாங்கடநதேயப்பாற்
கரைகடநதோஙகுமுன்றன கருணையஙகடற்சீருளள
முறைகடந்ததுவெனறால்யானுணர்வதென்னுரைபபதென்னே. (எ)

நனவினும்பிழையேசெயதேனுயினுங்கடையேனநதோ
கனவினும்பிழையேசெய்தேன்கருணைமாநிதியேநீதான்
நினைவினுஙகுறியாதாண்டாய்நின்னருட்பெருமைதனனை
வினவினுஞ்சொலவாராகாணேனென்செயவேன்வினையனேனே. (அ)

வனசெயல்பொறுத்தாட்கொண்டவள்ளலேயடியனேன்றன
முன்செயலவைகளோடுமுறுகுபின்செயல்களெலலா
மெனசெயலாககாணேனெனைககலநதொன்றாயநின்றோய்
நினசெயலாககணடேன்கண்டபினனிகழததலென்னே. (கூ)

இருமையுமொருமைதன்னிலீந்தனையெநதாயுன றன்
பெருமையெனனென்றுநான்றனபேசுவேன்பேதமின்றி
யுரிமையால்யானும்நீயுமொனறெனக்கலந்துகொண்ட
வொருமையைநினைககின்றேனென்னுள்ளகந்தழைக்கின்றேனே. (கo)

திருச்சிற்றமபலம்.

## வேண்டுகோள்.

எழுசீரடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

உரத்தவானகத்தேவுரத்தவாஞானவொளியிலோங்குமோாசித்தி
புரத்தவாபெரியோர்புரததவாகுற்றமபொறுததடியேன்றனககளிதத
வரததவாவுண்மைவரததவாவாகமஙகளுமறைகளுஙகாணாத
தரத்தவாவறிவாதாரததவாபொதுவிற்றனிததவாவினிததவாழ்வருளே. (க)

முன்னவாதிபாக்குமுன்னவாவேதமுடிமுடிமொழிகின்றமுதலவா
பின்னவாதிபாகுப்பின்னவாவெவாகும்பெரியவாபெரியவாமதிக்குஞ்
சின்னவாசிறந்தசின்னவாஞானசிதம்பரவெளியிலேநடிக்கும்
மன்னவாவமுதமன்னவாவெல்லாம்வல்லவாநல்லவாழ்வருளே. (உ)

விடையவாதனைதீர்விடையவாசுத்தவித்தைமுன்சிவவரைகடந்த
நடையவாஞானநடையவாவின்பநடம்புரிந்துயிர்களெலாமுதவுங்
கொடையவாவோவாக்கொடையவாவெனையாட்கொண்டெனுளமார்ந்தருளியவென்
னுடையவாவெல்லாமுடையவாவுணர்ந்தோர்க்குரியவாபெரியவாழ்வருளே. (௩)

வலத்தவாநாதவலத்தவாசோதிமலையவாமனமுதல்கடந்த
புலத்தவாவெனதுபுலத்தவாதவிர்த்துப்பூரணஞானநோக்களித்த
நலத்தவாவளையாநலத்தவாமறைகளுமடியுங்காணுதற்கரிதாம்
பலத்தவாதிருவம்பலத்தவாவெல்லாம்படைத்தவாபடைத்தவாழ்வருளே. (௪)

உணர்ந்தவருளத்தையுகந்தவாவியற்கையுண்மையேயுருவதாயின்பம்
புணர்ந்திடவெனைத்தான்புணர்ந்தவாஞானப்பொதுவிலேபொதுநடம்புரிந்தென்
குணந்திகழ்ந்தோங்குங்குணத்தவாகுணமுங்குறிகளுங்கோலமுங்குலமுந்
தணந்தசன்மார்க்கத்தனிநிலைநிறுத்துந்தக்கவாமிக்கவாழ்வருளே. (௫)

தத்துவங்கடந்தத்துவாஞானசமரசசுத்தசன்மார்க்கச்
சத்துவநெறியினடத்தியென்றனைமேற்றனிநிலைநிறுத்தியதலைவா
சித்துவந்தாடுஞ்சித்திமாபுரத்திற்றிகழ்ந்தவாதிகழ்ந்தெனதுளத்தே
ஒத்துநின்றோங்குமுடையவாகருணையுளத்தவாவளத்தவாழ்வருளே. (௬)

மதம்புகல்முடிபுகடந்தமெய்ஞ்ஞானமன்றிலேவயங்கொணடஞ்செய்
பதம்புகலடியேற்கருட்பெருஞ்சோதிபரிசுதந்திடுதுமென்றுளத்தே
நிதம்புகல்கருணைநெறியவாவினையநிலையவாநித்தநிர்க்குணமாம்
சிதம்புகல்வேதசிரத்தவாவினித்ததேனவாஞானவாழ்வருளே. (௭)

மூவிருமுடிபுங்கடந்ததோரியற்கைமுடியிலேமுடிந்தெனதுடம்பு
மாவியுந்தனதுமயம்பெறக்கிடைத்தவருட்பெருஞ்சோதியம்பலவா
வோவுருமுதலாவுரைக்குமெய்யுருவுமுணர்ச்சியுமொளிபெறுசெயலும்
மேவினரவர்க்குண்மேவியவுணர்வுணமேயவாதூயவாழ்வருளே. (௮)

பங்கமோரணுவும்பற்றிடாவறிவாற்பற்றியபெற்றியாருளத்தே
தங்குமோர்சோதித்தனிப்பெருங்கருணைத்தரந்திகழ்சத்தியத்தலைவா
துங்கமுற்றழியாநிலைதருமியற்கைத்தொன்மையாஞ்சுத்தசன்மார்க்கச்
சங்கநின்றேத்துஞ்சத்தியஞானசபையவாவபயவாழ்வருளே. (௯)

இனித்தசெங்கரும்பிலெடுத்ததீஞ்சாற்றினிளம்பதப்பாகொடுதேனுங்
கனித்ததீங்கனியினிரதமுங்கலந்துகருத்தெலாங்களித்திடவுண்ட
மனித்தருமமுதவுணவுகொண்டருந்தும்வானநாட்டவர்களுமவியக்கத்
தனித்தமெய்ஞ்ஞானவமுதெனக்களித்ததனியவாவினியவாழ்வருளே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

## இதுவுமது.

### கலிநிலைத்துறை.

திருச்சிற்றம்பலம்.

கருணாநிதியேயடியேனிருகண்ணுளானே
தெருணாடுமென்சிந்தையுண்மேவியதேவதேவே
பொருணாடியசிற்றம்பலத்தொளிர்புண்ணியாமெய்த்
தருணாவிதுதான்றருணம்மெனைத்தாங்கிக்கொள்ளே. (௧)

கூகாவெனக்கூடியெடாதிக்கொடியனேற்கே
சாகாவரந்தந்ததயாநிதித்தந்தையேநினை
மாகாதலனாகினானிங்குவாழ்கின்றேனென்
யோகாதிசயங்களுரைக்கவுலப்புறாதே. (௨)

எந்தாயுனைக்கண்டுகளித்தனனீண்டிப்போதே
சிந்தாநலமும்பலமும்பெற்றுத்தேக்குகின்றேன்
அந்தாமரையானொடுமாலவனாதியானோர்
வந்தாரெனைவாழ்த்துகின்றாரிங்குவாழ்கவென்றே. (௩)

வாழ்வேனருளாரமுதுண்டிங்குவாழ்கின்றேனா
னேழ்வேதனையுந்தவிர்ந்தேனுனையேயடைந்தேன்
சூழ்வேன்றிருச்சிற்றம்பலத்தைத்துதித்துவாழ்த்தித்
தாழ்வேனலதியார்க்குமினிச்சற்றுந்தாழ்ந்திடேனே. (௪)

தாழாதெனையாட்கொண்டருளியதந்தையேநின்
கேழார்மணியம்பலம்போற்றக்கிடைத்ததுளேனா
னேழாநிலைமேனிலையேறியிலங்குகின்றே
னூழால்வந்ததுன்பங்கள்யாவுமொழிந்ததன்றே. (௫)

கோடாமறையாகமமாதியகூறுகின்ற
சூடாமணியேமணியுள்ளொளிர்சோதியேயென்
பாடானவைதீர்த்தருளீந்துநின்பாதமென்னும்
வாடாமலரென்முடிசூட்டினைவாழிநீயே. (௬)

எல்லாஞ்செய்வல்லவனேயெனையீன்றதாயின்
நல்லாஞ்சிவஞானிகள்பெற்றமெய்ஞ்ஞானவாழ்வே
சொல்லாநெறிகாட்டியென்றன்னைக்குறிப்பிற்கொண்டென்
பொல்லாமைபொறுத்தனைவாழ்கநின்பொற்பதமே. (௭)

பரமானசிதம்பரஞானசபாபதியே
வரமானவெல்லாமெனக்கீந்தநல்வள்ளலேயென்
றரமானதுசற்றுங்குறித்திலைசாமிநின்னை
யுரமானவுள்ளன்பர்களேசுவருண்மையீதே. (௮)

தாயேயெனைத்தந்தையாகிதிதந்தையேயிந்
நாயேன்பிழையாவையுங்கொண்டனைநன்மையென்றே
காயேகனியாககருதுங்கருத்தனேநின்
சேயேயெனவென்பெயரெங்குஞ்சிறந்ததன்றே. (கூ)

பொய்யேயுரைக்கின்றவென்சொல்லும்புனைந்துகொண்டாய
மெய்யேதிருவம்பலத்தாடல்செயவித்தகனே
யெய்யேனினிவெம்மலக்கூட்டிலிருந்தென்னுள்ளம்
நையேன்சுத்தநல்லுடம்பெய்தினனனிலத்தே. (கo)

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பேறு.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அருளேபழுத்தசிவதருவிலளிந்தபழந்தந்தடியேனைத்
தெருளேசிற்றம்பலவாநின்செல்வப்பிள்ளையாக்கினையே
மருளேமுதலாந்தடையெல்லாநீங்கேநின்பால்வளர்கின்றேன்
பொருளேயினிநின்றனைப்பாடியாமெவ்வண்ணம்புகலுகவே. (க)

ஒருவாதடியேனெண்ணியவாறெல்லாமருளியுளங்களித்தே
திருவாசிற்றம்பலவாநின்செல்வப்பிள்ளையாக்கினையே
பெருவாழ்வடைந்தேன்பெருங்களிப்பால்பெருமானின்பால்வளர்கின்றேன்
உருவாருலகினுனைப்பாடியாமெவண்ணமுரைத்தருளே. (உ)

அவமேபுரிந்தேன்றனைமீட்டுன்னருளாரமுதமிகப்புகட்டிச்
சிவமேசிற்றமபலவாநின்செல்வபபிளளையாக்கினையே
பவமேதொலைந்தேனபெருங்களிப்பாற்பதியேநின்பால்வளர்கின்றேன்
நவமேயடியேனினைப்பாடியாமெவணணநவிலுகவே. (ந)

பல்வாதனையுந்தவிர்த்தெனக்கேபரமானந்தவமுதளித்துச்
செல்வாசிற்றம்பலவாநினசெல்வப்பிள்ளையாக்கினையே
வல்வாதனைசெய்மனச்செருக்கைமாற்றிநின்பால்வளர்கின்றேன
நல்வாழ்வளித்தாய்நினைப்பாடியாமெவ்வண்ணநவிலுகவே. (ச)

ஓவாவினபயமாகியோங்குமமுதமுதவியெனைத்
தேவாசிற்றம்பலவாநின்செல்வப்பிள்ளையாக்கினையே
பூவாரமணம்போற்சுகந்தருமெய்ப்பொருளேநினபால்வளர்கின்றேன்
நாவாலடியேனினைப்பாடியாமெவ்வண்ணநவிலுகவே. (ரு)

இளிவேதவிர்த்துச்சிறியேன்றனெண்ணமுழுதுமளித்தருளித்
தெளிவேசிற்றம்பலவாநின்செல்வப்பிள்ளையாக்கினையே
யொளிவேய்வடிவுபெற்றோங்கியுடையாயுன்பால்வளர்கின்றேன்
தளிவேய்நினதுபுகழ்பாடியாமெவண்ணஞ்சாற்றுகவே. (சா)

மறப்பேதவிர்த்தெனைஎன்றுமாளாநிலையிற்றனியமர்த்திச்
சிறப்பேசிற்றம்பலவாநின்செல்வப்பிள்ளையாக்கினையே
பிறப்பேதவிர்ந்தேன்பெருங்களிப்பாற்பெருமானின்பால்வளர்கின்றேன்
திறப்பேருலகினெனைப்பாடியாடுமெண்ணனருசெப்புகவே. (௭)

ஊனேபுகுந்தென்னுளங்கனிவித்துயிரிற்கலந்தேயொன்றாகித
தேனேசிற்றம்பலவாநின்செல்வப்பிள்ளையாக்கினையே
நானேயழியாவாழ்வுடையேனானேனினபால்வளாகினறேன்
தானேருலகினெனைப்பாடியாடுமெண்ணஞ்சாற்றுகவே. (௮)

ஆராவமுதமளித்தருளியன்பாலின்பநிலைக்கேற்றிச
சீரார்சிற்றம்பலவாநின்செல்வப்பிள்ளையாக்கினையே
யோரின்பவநுபவங்களெல்லாமபொருந்தியிருக்கின்றேன்
தீராவுலகிலடிச்சிறியேனசெயயும்பணியைத்தெரித்தருளே. (௯)

மெய்வைப்பழியாநிலைக்கேற்றிவிளங்குமமுதமிகவளித்தே
தெய்வப்பதியேசிவமேநினசெல்வப்பிளளையாக்கினையே
ஐவைப்பறிந்தேனறிசெல்லாமறுத்தேனின்பால்வளர்கின்றேன
பொயவைப்படையேனிவ்வுலகிற்புரியுமபணியைப்புகனறருளே. (௧௦)

திருச்சிற்றமபலம.

# ஆற்றாமை.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இப்பாரமுதலெண்ணூாத்தமதாயிலங்குங்கருணையெங்கோவே
தப்பாயினதீரதெனையுமுனறடுத்தாட்கொணடதயாநிதியே
யெபபாலவரும்புகழ்ந்தேத்துமிறைவாவெல்லாம்வலலோனே
யப்பாவரசேயினிச்சிறிதுமாற்றமாட்டேன்கணடாயே. (௧)

புரைசோதுயரப்புணரிமுற்றுங்கடத்திஞானபூரணமாங்
கரைசோத்தருளியினனமுதக்கடலைக்குடிப்பித்திடல்வேண்டு
முரைசோமறையினமுடிவிளங்குமொளிமாமணியேயுடையானே
யரைசேயப்பாவினிச்சிறிதுமாற்றமாட்டேனகண்டாயே. (௨)

கண்ணாரமுதக்கடலேயென்கணணேகண்ணுட்கருமணியே
தண்ணாமதியேதிரப்பிதழைத்தசுடரேதனிக்கனலே
யெண்ணுடரியபெரியவண்டமெலலாநிறைந்தவருட்சோதி
யண்ணாவரசேயினிச்சிறிதுமாற்றமாட்டேன்கணடாயே. (௩)

பொய்யாதென்றுமெனதுளத்தேபொருந்துமருந்தேபுண்ணியனே
கையார்ந்திலங்குமணியேசெங்கருமபேகனியேகடையேற்குச்
செய்யாவுதவிசெய்தபெருந்தேவேமூவாதெள்ளமுதே
யையாவரசேயினிச்சிறிதுமாற்றமாட்டேன்கண்டாயே. (௪)

இத்தாரணியிலென் பிழைகளெல்லாம்பொறுத்தவென் குருவே
நித்தாசிற்றம்பலத்தாடுநிருத்தாவெல்லாஞ்செயவல்ல
சித்தாசித்திபுரத்தமர்ந்ததேவேசித்தசிகாமணியே
யத்தாவரசேயினிச்சிறிதுமாற்றமாட்டேன்கண்டாயே. (ரு)

எம்மேதகவுமுடையவர்தம்மிதயத்தமர்ந்தவிறையவனே
இம்மேதினியிலெனைவருவித்ததிட்டகருணையெம்மானே
நமமேலவாக்குமறிவரியநாதாவென்னைநயந்தினற
வம்மேயப்பாவினிச்சிறிதுமாறறமாட்டேன்கண்டாயே. (சு)

செப்பார்கலைகள்மொழிந்தபொருட்டிறங்களனைத்துந்தெரிந்துதெளிந்
திப்பாரிடைநின்புகழ்பாடுகினறபெரியரின்மொழிப்பாட்
டொப்பாச்சிறியேன்புன்மொழிப்பாட்டெல்லாமுவந்தவுடையானே
யப்பாவரசேயினிச்சிறிதுமாற்றமாட்டேன்கண்டாயே. (எ)

துப்பாகனகப்பொதுவினடத்தொழிலாலுலகத்துயரொழிக்கும்
வைப்பாமிறைவாசிவகாமவல்லிக்கிசைந்தமணவாளா
வொப்பாருயாந்தாரில்லாதவொருவாவெல்லாமுடையானே
யப்பாவரசேயினிசசிறிதுமாற்றமாட்டேனகண்டாயே. (அ)

ஒப்பாருரைப்பர்நின்பெருமைக்கெனமாமறைகளோலமிடுந
துப்பார்வண்ணச்சுடரேமெய்ச்சோதிப்படிகவண்ணததாய
வெப்பானவைதீரதெனக்கமுதவிருந்துபுரிதல்வேண்டுமென்றன்
அப்பாவரசேயினிச்சிறிதுமாறறமாட்டேன்கண்டாயே. (கூ)

வெப்பாருள்ளக்கலக்கமெலாமிற்றைப்பொழுதேவிலககியொழித்
திப்பாரிடையென்கருததின்வண்ணமெல்லாம்விளைவிீநதருள்க
வொப்பாலுரைத்ததன்றுண்மையுளாததேனகருணையுடையானே
யப்பாவரசேயினிச்சிறிதுமாற்றமாட்டேனகண்டாயே. (கo)

திருச்சிற்றம்பலம்.

# திருப்பள்ளியெழுச்சி.



எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொழுதுவிடிந்ததென்னுள்ளமென்கமலம்பூத்ததுபொன்னொளிபொங்கியதெங்குந்
தொழுதுநிற்கின்றனன்செயபணியெல்லாஞ்சொல்லுதலவேணடுமெனவல்லசற்குருவே
முழுதுமாஞ்னெனவாகமவேதமுறைகளெலாமொழிகினறமுன்னவனே
யெழுதுதலரியசீரருட்பெருஞ்சோதியெனறநதையேபள்ளியெழுந்தருளவாயே. (க)

துறகுணமாயைபோய்த்தொலைந்ததுஞானந் தோன்றிடப்பொன்னொளிதோற்றியகதிரானை, சிறகுணவளைமிசையுதயஞ்செய்ததுமாசிததிகளடிப்பணிசெய்திடச் சூழ்ந்த, நற்குணச்சன்மாாககசங்கததாரெல்லாம்நண்ணினாாதோத்திரம்பண்ணிநிறகி

ன்றார், எற்குணவளித்தவென்னருட்பெருஞ்சோதியென்னம்மையேபள்ளியெழுந்தருள்வாயே. (௨)

கலந்தெளிந்தது கணமழுங்கின சுவண நீடொளிதோன்றிற்றுக்கோடொலிக்கின்ற, அலர்ந்தது தாமரையாணவவிருள்போயழிந்தது கழிந்தது மாயைமாலிரவு, புலர்ந்தது தொண்டரோடண்டருங்கூடிப்போற்றியோ சிவசிவபோற்றியென்கின்றார், இலங்கு குருவளித்தவென்னருட்பெருஞ்சோதியென் குருவேபள்ளியெழுந்தருள்வாயே. (௩)

கல்லாயமனங்களுங்கரையப்பொன்னொளிதான் கண்டது கங்குலும்விண்டது தொண்டர், பல்லாருமெய்யினர்பாடிநின்றாடிப்பரவுகின்றாரன்புவிரவுகின்றாராய், நல்லார் மெய்ஞ்ஞானிகள்யோகிகள்பிறரும்நண்ணினார்சூழ்ந்தனர்புண்ணியநிதியே, யெல்லாஞ்செயவல்லவென்னருட்பெருஞ்சோதியென்றெய்வமேபள்ளியெழுந்தருள்வாயே.

புன்மாலையிரவெல்லாம்புலர்ந்தது ஞானப்பொருப்பின்மேற்பொற்கதிர்பொலிந்தது புலவோர், சொன்மாலைதொடுத்தனர் துதித்துநிற்கின்றார் சுத்தசன்மார்க்கசங்கத்தவரெல்லாம், மன்மாலைமாலையா வந்துசூழ்கின்றார் வானவரொருங்கினர் வாழியென்கின்றார், என்மாலையணிந்தவென்னருட்பெருஞ்சோதியென்பதியேபள்ளியெழுந்தருள்வாயே.

ஒருமையினுலகெலாமோங்குகவெனவே யூதினசின்னங்களூதினசங்கம்
பெருமைகொள்சமரசசுத்தசன்மார்க்கப்பெரும்புகழ்பேசினர்பெரியவர்சூழ்ந்தா
ரருமையுமெளிமையுமாகியன்றாகியம்பலத்தேசித்தியாடல்செய்பதியே
யிருமையுமளித்தவென்னருட்பெருஞ்சோதியென்னரசேபள்ளியெழுந்தருள்வாயே.

சினைப்பள்ளித்தாமங்கள்கொணர்ந்தனரடியார்சிவசிவபோற்றியென்றுவகைகொள்கின்றார், நினைப்பள்ளியுணர்ந்தெள்ளாரமுதளிக்குமநேரமிந்நேரமென்றுரியபுகன்றார், முனைப்பள்ளிப்பயிற்றுதென்றனைக்கலவிப்பயிற்றி முழுதுணர்வித்துடற்பழுதெலாந்தவிர்த்தே, யெனைப்பள்ளியெழுப்பியவருட்பெருஞ்சோதி யென்னப்பனேபள்ளியெழுந்தருள்வாயே. (௭)

மதம்பிடித்தவரெல்லாம்வாய்பிடிப்புண்டுவெந்துநிற்கின்றனர்வாய்திறப்பிப்பான்
கதம்பிடித்தவரெல்லாங்கடும்பிணியாலேகலங்கினார்சூழ்ந்தனருலம்புறுகின்றா
பதம்பிடித்தவரெல்லாமம்பலப்பாட்டேபாடினராடினர்பரவிநிற்கின்றா
ரிதம்பிடித்தென்னையாண்டவருட்பெருஞ்சோதியென்னையனேபள்ளியெழுந்தருள்வாயே

மருளொடுமாயைபோய்த்தொலைந்தது மதங்கள்வாய்மூடிக்கொண்டன மலர்ந்தது கமலம், அருளொளிவிளங்கியதொருதிருச்சபையுமலங்கரிக்கின்றனர் துலங்கிவீற்றிருக்கத், தெருளொடுபொருளுமென்மேலெனக்களித்துச்சித்தெலாஞ்செய்திடத்திருவருள்புரிந்தே, யிருளறுத்தென்னையாண்டவருட்பெருஞ்சோதியென்வள்ளலேபள்ளியெழுந்தருள்வாயே. (௯)

அலங்கரிக்கின்றேமோர்திருச்சபையதிலே யமர்ந்தருட்சோதிகொண்டடிச்சிறியோமை, வலம்பெறுமிறவாதவாழ்விலவைத்திடவேவாழ்த்துகின்றேமுன்னர்வணங்கிநிற்கின்றேம், விலங்கியதிருளெலாம்விடிந்ததுபொழுது விரைந்தெமக்கருளுதலவே

ண்டுமிததருண,மிலங்குநற்றருணமெம்மருட்பெருஞ்சோதியெந்தந்தையேபள்ளியெழுந்தருள்வாயே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# திருவுந்தியார்.

## கலித்தாழிசை.

திருச்சிற்றம்பலம்.

இரவுவிடிந்ததிணையடிவாய்த்தன
பரவிமகிழ்ந்தேனென்றுந்தீபற
பாலமுதுண்டேனென்றுந்தீபற. (௧)

பொழுதுவிடிந்ததுபொற்பதம்வாய்த்தன
தொழுதுமகிழ்ந்தேனென்றுந்தீபற
தூயவனானேனென்றுந்தீபற. (௨)

தூக்கந்தொலைந்ததுசூரியன்றோன்றின
னேக்கந்தவிர்ந்தேனென்றுந்தீபற
வினமுதுண்டேனென்றுந்தீபற. (௩)

துன்பந்தவிர்ந்ததுதூக்கந்தொலைந்தது
இன்பங்கிடைத்ததென்றுந்தீபற
வெண்ணமபலித்ததென்றுந்தீபற. (௪)

ஞானமுதித்ததுநாதமொலித்தது
தீனந்தவிர்ந்ததென்றுந்தீபற
சிற்சபைகண்டேனென்றுந்தீபற. (௫)

திரையற்றுவிட்டதுசெஞ்சுடர்தோன்றிற்று
பரையொளியோங்கிற்றென்றுந்தீபற
பலித்ததுபூசையென்றுந்தீபற (௬)

உள்ளிருணீங்கிற்றென்னுள்ளொளியோங்கிற்றுத்
தெள்ளமுதுண்டேனென்றுந்தீபற
தித்திக்கவுண்டேனென்றுந்தீபற. (௭)

எந்தையைக்கண்டேனிடரெலாநீங்கினேன்
சிந்தைமகிழ்ந்தேனென்றுந்தீபற
சித்திகள்பெற்றேனென்றுந்தீபற. (௮)

தந்தையைக்கண்டேன்சாகாவரம்பெற்றேன்
சிந்தைகளித்தேனென்றுந்தீபற
சித்தெலாம்வல்லேனென்றுந்தீபற. (௯)

முததியைப்பெற்றேனம்முததியினலஞான
சிததியையுறறேனெனறுநீபற
சித்தனுமானேனெனறுநீபற. (௧௦)

திருசசிறறமபலம.

---

## சரணடைதல்.

அறுசீரடியாசிரியவிருததம.

திருச்சிற்றம்பலம்.

எண்ணுகின்றேனெணணமெலாமெயதவருளசெய்கினறதனித
தண்ணாரமுதேசிறசபையிற்றனிததலைமைபபெருவாழவே
கண்ணுறொளியேயொளியெல்லாங்கலநதவெளியேகருதுறுமெ
னணணுவையாவம்மாவென்னப்பாயானுனனடைககலமே. (௧)

திரைசோமறைப்பைத்தீரத்தெனககேதெரியாவெல்லாநதெரிவிததுப
பரைசோஞானப்பெருவெளியிறபழுததகொழுததபழநதநதே
கரைசேரினபககாட்சியெலாஙகாட்டிககொடுததேயெனையாண்ட
அரைசேயையாவம்மாவென்னபபாயானுனனடைக்கலமே. (௨)

தேனேயமுதேசிறசபையிறசிவமேதவமேசெய்கின்றோ
ரூனேபுகுநதவொளியேமெயயுணாவேயென்றனுயிாககுயிராம
வானேயென்னைததாணுக்குவானேகோனேயெலலாம்வல்
லானேயையாவமமாவெனனப்பாயானுன்னடைககலமே. (௩)

கடையேனுள்ளககவலையெலாஙகழற்றிககருணையமுதளிததென்
புடையேயகத்தும்புறத்துமகப்புறததும்விளஙகும்புண்ணியனே
தடையேதவிாகுங்கனகசபைததலைவாஞானசபாபதியே
யடையேனுலகையுனையடைந்தேனடியேனுன்றனடைககலமே. (௪)

இகத்தும்பரத்தும்பெரும்பலன்களெல்லாம்பெறுவிததிம்மையிலே
முகததுமுளத்துஙகளிதுளுமபமூவாவினபநிலையமாததிச
சகததுளவாகணமிகததுதிபபததகோனெனவைததென்னுடைய
வகத்தும்புறத்தும்விளங்குகினறோயடியேனுனறனடைககலமே. (௫)

நீண்டமறைகளாகமங்கள்நெடுநாள்முயன்றுவருநதிநின்று
வேண்டவவைகட்கொருசிறிதும்விளஙககாட்டாதெனமொழியைப்
பூண்டவடியையெனறலைமேற்பொருந்தப்பொருததியெனறனை
யாண்டகருணைப்பெருங்கடலேயடியேனுனறனடைககலமே. (௬)

பாடுஞ்சிறியேன்பாட்டனைததும்பலிககககருணைபாலிததுக்
கோடுமனப்பேயககுரங்காட்டங்குலைததேசீற்றக்கூறறொழித்து
நீடுமுலகிலழியாதநிலைமேலெனைவைத்தென்னுளததே
யாடுங்கருணைப்பெருவாழ்வேயடியேனுன்றனடைககலமே. (௭)

கட்டுக்கடங்காமனப்பரியைக்கட்டுமிடத்தேகட்டுவித்தென்
மட்டுக்கடங்காவாங்காரமதமாவடங்கவடக்குவித்தே
யெட்டுக்கிசைந்தவிரண்டுமெனக்கிசைவித்தெல்லாவினைமுறா
மட்டுக்கொடுத்தேயருத்துகின்றோயடியேனுன்றனடைக்கலமே. (அ)

புல்லுங்களபபுணர்முலையார்புணர்ப்பும்பொருளும்பூமியுமென்
றொல்லுமுலகப்பேராசையுவரிகடத்தியெனதுமனக்
கல்லுங்கனியக்கனிவித்துக்கருணையமுதங்களித்தளித்தே
யல்லும்பகலுமெனதுளத்தேயமர்ந்தோயானுனடைக்கலமே. (௯)

பிச்சங்கவரிநிழற்றியசைத்திடமால்யானைப்பிடரியின்மேல்
நிச்சம்பவனிவருகின்றநிபுணரெல்லாந்தொழுதேத்த
எச்சம்புரிவோர்போற்றவெனையேற்றுநிலைமேலேற்றுவித்தெ
னச்சந்தவிர்த்தேயாண்டுகொண்டோயடியேனுன்றனடைக்கலமே. (௧௦)

இருளைக்கெடுத்தென்னெண்ணமெலாமினிதுமுடியநிரம்புவித்து
மருளைத்தொலைத்துமெய்ஞ்ஞானவாழ்வையடையும்வகைபுரிந்து
தெருளைத்தெளிவித்தெல்லாஞ்செய்சித்திநிலையைச்சேர்வித்தே
யருளைக்கொடுத்தென்றனையாண்டோயடியேனுன்றனடைக்கலமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# பற்றறுத்தல்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சத்தியஞ்சத்தியமருட்பெருஞ்சோதித்தந்தையரேயெனைத்தாங்குகின்றீரே, உத்தமமாகுநந்திருச்சமுகத்தெனனுடல்பொருளாவியை யுவப்புடனளித்தேன், இத்தகையுலகிடையவைக்குமென்றனக்குமேதுஞ்சுதந்தரமில்லையிங்கினிநீர், எத்தகையாயினுஞ்செய்துகொள்கிறபீரெனைப்பள்ளியெழுப்பிமெய்யினபந்தந்தீரே. (௧)

ஆணை நும்மாணையெனனருட்பெருஞ்சோதியாண்டவரேதிருவம்பலத்தவரே, நாணைவிட்டொக்கின்றவாறிதுகணமுநாயகரேயுமைநான்விடமாட்டேன், கோணையென்னுடல்பொருளாவியுநுமக்கேகொடுத்தனனினியென்மேற்குறைசொல்லவேண்டாம், எணைநின்றெடுத்தகைப்பிள்ளைநானன்றோவெனைப்பள்ளியெழுப்பிமெய்யினபந்தந்தீரே. (௨)

அகத்தொன்றுபுறத்தொன்றுநினைத்திங்கில்லை யருட்பெருஞ்சோதியென்றுண்டவரேநீர், சகத்தென்றுமெங்களுஞ்சாக்ஷியாய்நின்றீர்தனிப்பெருந்தேவரீர்திருச்சமுகத்தே, * உகத்தெனதுடல்பொருளாவியையுநுமக்கேயொருமையினளித்தனனிருமையும்பெற்றேன், இகத்தனிற்பரத்திலுமெனக்கோர்பற்றிலைக ணெனைப்பள்ளியெழுப்பிமெய்யினபந்தந்தீரே. (௩)

---

* உகந்து - உகத்து வலித்தல் விகாரம்.

தப்படியெடுத்துக்கொண்டுலகவாபோலே சாற்றிடமாட்டேனுன் சத்தியஞ்சொன னேன, செப்படிவித்தைசெயசித்தரென்றேதுந்தேவரீாவல்லபத்திருச்சமுகத்தே, இப்படிவான்முதலெஙகணுமறியவெனனுடலா தியையீநதனனுமககே, எப்படியாயினுஞ்செயதுகொள்கிற்பீரெனைப்பளளியெழுபபிமெயயினபநதருதீரே. (௪)

தருணததுககேற்றவாசொல்லிப்பின்மாற்றுந தப்புரையீதன்றசத்தியஞ்சொ ணனேன், கருணைப்பெருககினிற்கலநதென துள்ளேகனவினுநனவினுஙகளிப்பருளி ன்றீா, வருணபபொதுவிலுமமாசமுகததெனவண்பொருளா தியைநண்பொடுகொடு ததேன், இருணச்சறுததமுதந்தரவல்லீரெனைப்பள்ளியெழுப்பிமெய்யினபநதாந்தீரே.

வாய்மட்டிறசொலகினறவாாதையன்றிதுவென்மனமொததுச்சொலலியவாய் மைமுககாலும, தாயமட்டிலனறியென்றநதையுஙகுருவுஞ்சாமியுமாகியதனிப்பெருந தகையீா, ஆயமட்டிலெனனுடலா தியைநுமககேயனபுடனகொடுததனனுடவரே நீா, எயமட்டிலெப்படியேனுஞ்செய்கிறபீ ரெனைப்பள்ளியெழுப்பிமெயயின்பந்தந் தீரே (௬)

திததிககப்பேசிககசபபுள்ளேகாட்டுந திருட்டுப்பேச்சனறுநுந்திருவுளமறியும், எததிககுமறியவெனனுடல்பொருளாவியென்பவைமூனறுமுள்ளனபொடுகொடுததே ன்,சிததிககுமூலததைததெளிவிததென்னுள்ளே திருநடஞ்செயகினறதேவரீரதாமே, இததிககிலெப்படியேனுஞ்செயகிற்பீரெனைப்பளளியெழுபபிமெய்யின்பந்தநதீரே.

புன்மாாககத்துளளும்புறததும்வேறுகிப் புகன்றசொல்லன்றுநும்பொன்னடிக ண்ட, சன்மாாககசஙகததுச்சாதுக்கள்காணசசததியஞ்சத்தியஞ்சததியஞ்சொன்னே ன, தனமாாககததெனனுடலா தியைநுமககே தநதனன்றிருவருட்சந்நிதிமுனனே, என்மாாககததெப்படியேனுஞ்செயகிறபீரெனைப்பளளியெழுப்பிமெய்யின்பந்தநதீரே

இசசைவேறில்லையிஙகெனகருததெல்லா மென்னுள்ளமர்ந்தறிந்தேயிருககின்றீ ா, விசசையெலாம்வல்லநுந் திருச்சமுகவிண்ணப்பமென்னுடலா தியைநுமககே, நிச் சலுந்தநதனனெனவசமின்றி நின்றனனென்றெனைநீாசெயவதெல்லாம், எசசெயலாயினுஞ்செய்துகொள்கிறபீ ரெனைப்பள்ளியெழுப்பிமெயயினபநதந்தீரே. (௯)

மன்செயதுகொண்டசன்மாாககததிலிஙகே வானசெய்துகொண்டதுநான்செய் துகொணடேன, முனசெயதுகொண்டதுமிஙஙனஙகண்டாமூவகையாமுடலா தியை நுமது, பொனசெயதுகொணடபொதுவினிலாடும பொனனடிகாணபபொருநதிககொ டுததேன, எனசெயதுகொணடாலுஞ்செயதுகொளகிற்பீ ரெனைப்பள்ளியெழுபபிமெ யயினபநதநதீரே. (௧௦)

தெயவங்கள்பலபலசிந்தைசெயவாருஞ் சோகதிபலபலசெப்புகின்றாரும், பொய் வந்தகலைபலபுகன்றிடுவாரும பொயச்சமயா தியைமெச்சுகினறாரும், மெய்வந்ததிருவ ருள்விளககமொனறில்லாா மேலவிளைவறிகிலாவீணசழிககினறா, எயவநததுனபொழிததவாககறிவருளவீரெனைபபள்ளியெழுப்பிமெயயினபாநதநதீரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# சிற்சத்திதுதி.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சோதிக்கொடியேயானந்தச்சொருபக்கொடியேசோதியுருப்
பாதிக்கொடியேசோதியிடப்பாகக்கொடியேயெனையீன்ற
ஆதிக்கொடியேயுலகுகட்டியாளுங்கொடியேசன்மார்க்க
நீதிக்கொடியேசிவகாமநிமலக்கொடியேயருளுகவே. (௧)

பொருணற்கொடியேமாற்றுயர்ந்தபொன்னங்கொடியேபோதாந்த
வருணக்கொடியேயெல்லாஞ்செய்வல்லாரிடஞ்சோமணிக்கொடியே
தருணக்கொடியேயென்றனைத்தாங்கியோங்குந்தனிக்கொடியே
கருணைக்கொடியேஞானசிவகாமக்கொடியேயருளுகவே. (௨)

நீட்டுக்கொடியேசன்மார்க்கநீதிக்கொடியேசிவகீதப்
பாட்டுக்கொடியேயிறைவரிடப்பாகக்கொடியேபரநாத
நாட்டுக்கொடியேயெனையீன்றஞானக்கொடியேயெனனுறவாங்
கூட்டுக்கொடியேசிவகாமக்கொடியேயடியேற்கருளுகவே. (௩)

மாலக்கொடியேன்குற்றமெலாமன்னித்தருளிமரணமெனுஞ்
சாலக்கொடியையொடித்தெனக்குட்சார்ந்துவிளங்குந்தவக்கொடியே
காலக்கருவைக்கடந்தொளிரானகருவுங்கடந்துவயங்குகின்ற
கோலக்கொடியேசிவஞானக்கொடியேயடியேற்கருளுகவே. (௪)

நாடாக்கொடியமனமடக்கிநல்லமனத்தைக்கனிவித்துப்
பாடாப்பிழையைப்பொறுத்தெனக்குமபரமீந்தாண்டபதிக்கொடியே
தேடாக்கருமசித்தியெலாந்திகழ்த்தயவாற்றெரிவித்த
கோடாக்கொடியேசிவதருமக்கொடியேயடியேற்கருளுகவே. (௫)

மணங்கொள்கொடிப்பூமுதனானகுவகைப்பூவடிவுள்வயங்குகின்ற
வணங்கொள்கொடியேயைம்பூவுமலியமலர்ந்தவானக்கொடியே
கணங்கொள்யோகசித்தியெலாங்காட்டுங்கொடியேகலங்காத
குணங்கொள்கொடியேசிவபோகக்கொடியேயடியேற்கருளுகவே. (௬)

புலங்கொள்கொடியமனம்போனபோக்கிற்போகாதெனைமீட்டு
நலங்கொள்கருணைச்சன்மார்க்கநாட்டில்விடுத்தநற்கொடியே
வலங்கொண்ஞானசித்தியெலாம்வயங்கவிளங்குமணிமன்றிற்
குலங்கொள்கொடியேமெய்ஞ்ஞானக்கொடியேயடியேற்கருளுகவே. (௭)

வெறிக்குஞ்சமயக்குழியில்விழவிரைந்தேன்றன்னைவிழாதவகை
மறிக்குமொருபேரறிவளித்தவள்ளற்கொடியேமனக்கொடியைச்
செறிக்கும்பெரியருளத்தோங்குந்தெய்வக்கொடியேசிவஞானங்
குறிக்குங்கொடியேயானந்தக்கொடியேயடியேற்கருளுகவே. (௮)

கடுத்தவிடாவன்பயங்கவலையெல்லாந்தவிர்த்துக்கருத்தினுள்ளே
யடுத்தகொடியேயருளமுதமளித்தென்றனைமெய்யருட்காரததால்
எடுத்தகொடியேசித்தியெலாமிந்தாமகனேயென்றெனக்கே
கொடுத்தகொடியேயானந்தக்கொடியேயடியேற்கருளுகவே. (கூ)

* எட்டைதவிர்த்தென்னெண்ணமெலாமெய்தவொளிதந்தியான்வனைந்த
பாட்டைப்புனைந்துபரிசளித்தபரமஞானப்பதிகொடியே
தேட்டைத்தனிப்பேரருட்செங்கோல்செலுத்துஞ்சுத்தசனமாக்கக
கோட்டைகொடியேயானந்தகொடியேயடியேற்கருளுகவே. (கo)

திருச்சிற்றம்பலம்.

# பிரிவாற்றாமை.



எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தேடிய துண்டெனிதருவுண்மைதெளிந்திடச்சிறிதுநின்னுடனே
யூடியதுண்டெபிறாதமையடுத்தேயுனாததுமுவந்ததுமுணடோ
ஆடியபாதமறியநானறியேனம்பலத்தருட்பெருஞ்சோதி
கூடியநினனைப்பிரிகலேன்பிரிவைககூறவுஙகூசுமென்றுவே. (க)

மடம்புரிமனததாற்கலஙகியதுண்டுவெள்ளலேநின்றிருவரவுக்
கிடம்புரிசிறியேனகலஙகினேனெனினுமிறையுமவேறெண்ணியதுண்டோ
நடம்புரிபாதமறியநானறியேனுன்செயுமவகையினிநன்றே
திடம்புரிந்தருளிககாததிடல்வேண்டுஞ்சிறிதுநான்பொறுககலேனசிவனே. (உ)

நீக்கியமனம்பின்னடுத்தெனைக்கலககிநின்றதேயனறிநினனளவில்
நோககியநோககம்பிறவிடயததேநோககியதிறையுமிங்குணடோ
தூககியபாதமறியநானறியேன்றுயரினில்பொறுககலேனசிறிதும்
தேக்கியகளிப்பாற்சிறப்பவந்தென்னைதெளிவித்தனின்கடன்சிவனே. (ந)

ஈன்றநற்றாயுந்தந்தையுங்குருவுமென்னுயிர்க்கின்பமும்பொதுவி
லான்றமெய்ப்பொருளேயென்றிருககினறேனன்றிவேறெணணியதுண்டோ
வூன்றியபாதமறியநானறியேனுறுகணிஙகாற்றலேன்சிறிதுந
தோன்றியென்னுளததேமயககெலாநதவிாததுததுலக்குதனின்கடன்றுணையே. (ச)

மாயையாற்கலஙகிவருந்தியபோதும்வள்ளலுன்றன்னையேமதித்துன்
சாயையாப்பிறரைப்பாரததேயல்லாறறலைவவேறெண்ணியதுணடோ
தூயபொற்பாதமறியநானறியேன்றுயரினிச்சிறிதுமிஙகாற்றேன்
நாயகாவெனதுமயக்கெலாநதவிாததேநன்றருள்புரிவதுனகடனே. (ரு)

* எட்டை - துனபம்.

வண்ணம்வேறெனினும்வடிவுவேறெனினுமன்னியவுண்மையொன்றெனறே
யெண்ணியதல்லாற்சச்சிதானந்தத்திறையும்வேறெண்ணியதுண்டோ
அண்ணனின்பாதமறியநானறியேனருளினிச்சிறிதுமிங்காற்றேன்
திண்ணமேநின்மேலாணையென்றன்னைத்தெளிவித்துக்காப்பதுன்கடனே. (௬)

ஊடல்செய்மதமுஞ்சமயமுமிவற்றிலுற்றகற்பனைகளுந்தவிர்ந்தேன்
வாடல்செய்மனத்தாற்கலங்கினேனெனினுமன்றினைமறந்ததிங்குண்டோ
ஆடல்செய்பாதமறியநானறியேனையவோசிறிதுமிங்காற்றேன்
பாடல்செய்கின்றேன்படிக்கின்றேனெனக்குப்பரிந்தருள்புரிவதுன்கடனே. (௭)

உள்ளதேயுள்ளதிரண்டிலையெல்லாமொருசிவமயமெனவுணர்ந்தேன்
கள்ளநேர்மனத்தாற்கலங்கினேனெனினுங்கருத்தயல்கருதியதுண்டோ
வள்ளலுன்பாதமறியநானறியேன்மயக்கினிச்சிறிதுமிங்காற்றேன்
றெள்ளமுதருளிமயக்கெலாந்தவிர்த்தேதெளிவித்தனின்கடன்சிவனே. (௮)

எம்மதநிலையுநின்னருணிலையிலிலங்குதலறிந்தனனெல்லாஞ்
சம்மதமாக்கிக்கொள்கின்றேனல்லாற்றனித்துவேறெண்ணியதுண்டோ
செம்மலுன்பாதமறியநானறியேன்சிறிதுமிங்கினித்துயராற்றேன்
இம்மதிக்கடியேன்குறித்தவாறுள்ளியற்றுவதுன்கடனெந்தாய். (௯)

அகம்புறமற்றையகப்புறம்புறத்தேயமைந்திடும்புறப்புறநான்கில்
இகந்ததுமிலையோரேகதேசத்தாலிறையுமிங்கெண்ணியதுண்டோ
உகந்தநின்பாதமறியநானறியேனுறுகணிங்கினிச்சிறிதுந்தான்
இகம்பெறலாற்றேன்மயக்கெலாந்தவிர்த்திங்கென்னையாண்டருள்வதுன்கடனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ஆநந்தானுபவம்.

நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

கள்ளத்தையெல்லாங்கடக்கவிட்டேனின்னருளாம்
வெள்ளத்தையெல்லாமிகவுண்டேன் - உள்ளத்தே
காணாதகாட்சியெலாங்காண்கின்றேனெங்குமன்ற
வாணநினக்கடிமைவாய்த்து. (௧)

காலையிலேநின்றன்னைக்கண்டுகொண்டேன்சன்மார்க்கச்
சாலையிலேயின்பந்தழைக்கின்றேன் - ஞாலமிசைச்
சாகாவரம்பெற்றேன்றத்துவத்தின்மேனடிக்கும்
ஏகாநினக்கடிமையேற்று. (௨)

மூவர்களுஞ்செய்யமுடியாமுடிபெல்லாம்
யாவர்களுங்காணவெனக்களித்தாய் - மேவுகடை
நாய்க்குத்தவிசளித்துநன்முடியுஞ்சூட்டியதெந்
தாய்க்குத்தனியியற்கைதான். (௩)

கொள்ளையெனவின்பங்கொடுத்தாயினிதுசெல்வப்
பிள்ளையெனவெனக்குப்பேரிட்டாய் - தெள்ளமுதந்
தந்தாய்சமரசசன்மார்க்கச்சங்கத்தேவைத்தா
யெந்தாய்கருணையிது. (௪)

கண்டேன்களித்தேன்கருணைத்திருவமுத
முண்டேனுயர்நிலைமேலோங்குகின்றேன் - கொண்டேன்
அழியாத்திருவுருவஞ்சாவெனுஞ்சொல்லின்று
அழியாச்சிற்றம்பலத்தேயான். (௫)

பார்த்தேன்பணிந்தேன்பழிச்சினேன்மெய்ப்புளகம்
போர்த்தேனென்னுள்ளமெலாம்பூரித்தேன் - ஆர்த்தேனின்
றாடுகின்றேன்பாடுகின்றேனம்புருவானேனருளை
நாடுகின்றேன்சிற்சபையினான். (௬)

எண்ணுகின்றேனெண்ணமெலாமெய்தத்தருகின்றான்
உண்ணுகின்றேனுண்ணவுண்ணவூட்டுகின்றான் - நண்ணுதிருச்
சிற்றம்பலத்தேதிருநடஞ்செய்கின்றானென்
குற்றமெல்லாம்பொறுத்துக்கொண்டு. (௭)

கொண்டானடிமைகுறியானபிழையொன்றுங்
கண்டேகளித்தான்கலந்திருந்தான் - பண்டாய
நான்மறையுமாகமமுநாடுந்திருப்பொதுவில்
வானமலர்த்தாளென்னைமதித்து. (௮)

கண்டேன்களித்தேன்கருணைத்திருவமுதம்
உண்டேனழியாவுரம்பெற்றேன் - பண்டே
யெனையுவந்துகொண்டானெழில்ஞானமன்றந்
தனையுவந்துகொண்டான்றனை (௯)

தாதையாமென்னுடையதாயாமென்சற்குருவாம்
மேதையாமின்பவிளைவுமாம் - ஓது
குணவாளனில்லைப்பருட்கூத்தனுமையாண்
மணவாளன்பாதமலர். (௧௦)

திருவாமென்றெய்வமாந்தெள்ளமுதஞானக்
குருவாமெனக்காக்குஞ்சோவாம் - பருவத்தின்
றேப்பிள்ளையாமெனச்சிவகாமவல்லிமகிழ்
மாப்பிள்ளைபாதமலர். (௧௧)

என்னறிவாமென்னறிவினின்பமாமென்னறிவின்
றன்னறிவாமுண்மைத்தனிநிலையாம் - மன்னுகொடிச்
சேலையிட்டான்வாழ்ச்சிவகாமசுந்தரியை
மாலையிட்டான்பாதமலர். (௧௨)

திருச்சிற்றம்பலம்.

# சிவபுண்ணியப்பேறு.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாலிலேமயங்கிமண்ணிலேயநித்தவாழ்விலேவரவிலேமலஞ்சார்
தோலிலேயாசைவைத்துவீண்பொழுதுதொலைக்கின்றார்தொலைக்கநானுனது
காலிலேயாசைவைத்தனனீயுங்கனவினுநனவினுமெனைநின்
பாலிலேவைத்தாயெனக்கிதுபோதும்புண்ணியத்தவம்பலித்ததுவே. (௧)

மதத்திலேசமயவழக்கிலேமாயைமருட்டிலேயிருட்டிலேமறவாக்
கதத்திலேமனத்தைவைத்துவீண்பொழுதுகழிக்கின்றார்கழிக்கநானுன்பூம்
பதத்திலேமனத்தைவைத்தனனீயும்பரிந்தெனையழிவிலாநல்ல
பதத்திலேவைத்தாயெனக்கிதுபோதும்புண்ணியத்தவம்பலித்ததுவே. (௨)

குலத்திலேசமயக்குழியிலேநரகக்குழியிலேகுமைந்துவீண்பொழுது
நிலத்திலேபோக்கிமயங்கியேமாந்துநிற்கின்றார்நிற்கநானுவந்து
வலத்திலேநினதுவசத்திலேநின்றேன்மகிழ்ந்துநீயென்னுளமெனுமம்
பலத்திலேநின்றாயெனக்கிதுபோதும்புண்ணியத்தவம்பலித்ததுவே. (௩)

கூடவும்பின்னேபிரியவுஞ்சாராதகொழுநருமகளிருநாண
நீடவென்னுளத்தேகலந்துகொண்டென்றும்நீங்கிடாதிருந்துநீயென்னோ
டாடவுமெல்லாம்வல்லசித்தியைப்பெற்றறிவுருவாகிநானுனையே
பாடவும்பெற்றேனெனக்கிதுபோதும்புண்ணியத்தவம்பலித்ததுவே. (௪)

உய்த்திடமறியாதிறந்தவர்தமையிவ்வுலகிலேயுயிர்பெற்றுமீட்டும்
நயத்தொடுவருவித்திடுமொருஞானநாட்டமுங்கற்பகோடியினும்
வயத்தொடுசாகாவரமுமென்றனக்கேவழங்கிடப்பெற்றனன்மரண
பயத்தைவிட்டொழித்தேனெனக்கிதுபோதும்புண்ணியத்தவம்பலித்ததுவே. (௫)

நாடல்செய்கின்றேனருட்பெருஞ்சோதிநாதனையென்னுளேகண்டு
கூடல்செய்கின்றேனெண்ணியவெல்லாங்கூடிடக்குலவியின்புருவாய்
ஆடல்செய்கின்றேன்சித்தெலாம்வல்லானம்பலந்தன்னையேகுறித்துப்
பாடல்செய்கின்றேனெனக்கிதுபோதும்புண்ணியத்தவம்பலித்ததுவே. (௬)

துதிபெறுமயனோடரியரன்முதலோர்சூழ்ந்துசூழ்ந்திளைத்தொருதங்கள்
விதியைநொந்தின்னும்விழித்திருக்கின்றார்விழித்திருந்திடவுநோவாமே
மதியிலேனருளாற்சுத்தசன்மார்க்கமன்றிலேவயங்கியதலைமைப்
பதிபதம்பெற்றேனெனக்கிதுபோதும்புண்ணியத்தவம்பலித்ததுவே. (௭)

புரிசைவானுலகிற்பூவுலகெல்லாம்புண்ணியவுலகமாய்ப்பொலிந்தே
கரிசெலாந்தவிர்ந்துகளிப்பெலாமடைந்துகருத்தொடுவாழவுங்கருத்தின்
றுரிசெலாந்தவிர்க்குஞ்சுத்தசன்மார்க்கந்துலங்கவுந்திருவருட்சோதிப்
பரிசெலாம்பெற்றேனெனக்கிதுபோதும்புண்ணியத்தவம்பலித்ததுவே. (௮)

வேதமேவிளங்கமெய்ம்மையேவயங்கவெம்மையேநீங்கிடவிமல
வாதமேவழங்கவானமேமுழங்கவையமேயுய்யவோர்பரம
நாதமேதொனிக்கஞானமேவடிவாய்நனமணிமன்றிலேநடிக்கும்
பாதமேபிடித்தேனெனக்கிதுபோதும்பண்ணியதவம்பலித்ததுவே. (௯)

கட்டமுங்கழன்றேன்கவலைவிட்டொழிந்தேன்கலக்கமுந்தீர்ந்தனன்பிறவிச்
சட்டமுங்கிழித்தேன்றூக்கமுந்துறந்தேன்சாவையுநோவையுந்தவிர்ந்தேன்
சிட்டமுமடைந்தேன்சிற்சபையுடையான்செல்வமெய்ப்பிள்ளையென்றொருபேர்ப்
பட்டமுந்தரித்தேனெனக்கிதுபோதும்பண்ணியதவம்பலித்ததுவே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# அந்தோப்பத்து.

## கலித்தாழிசை.

திருச்சிற்றம்பலம்.

நானந்தமடையாதெந்நாளினுமுள்ளவனாகிநடிக்கும்வண்ணம்
ஆனந்தநடம்புரிவானானந்தவமுதளித்தானந்தோவந்தோ. (௧)

சாதிமதஞ்சமயமுதல்சங்கற்பவிகற்பமெலாந்தவிர்ந்துபோக
ஆதிநடம்புரிகின்றானருட்சோதியெனக்களித்தானந்தோவந்தோ. (௨)

துரியபதமடைந்தபெருஞ்சுத்தர்களுமுத்தர்களுந்துணிந்துசொல்லற்
கரியபதமெனக்களித்தானம்பலத்திலாடுகின்றானந்தோவந்தோ. (௩)

மருட்பெருஞ்சோதனையெனதுமட்டிலாவணங்கருணைவைத்தேமன்றில்
அருட்பெருஞ்சோதிப்பெருமானருளமுதமெனக்களித்தானந்தோவந்தோ. (௪)

துன்பமெலாமொருகணத்திற்றொலைத்தருளியென்னாளுஞ்சுகத்திலோங்க
அன்புடையானம்பலத்தானருட்சோதியெனக்களித்தானந்தோவந்தோ. (௫)

பந்தமெலாந்தவிர்த்தருளிப்பதந்தருயோகாந்தமுதல்பகராநின்ற
அந்தமெலாங்கடந்திடச்செய்தருளமுதமெனக்களித்தானந்தோவந்தோ. (௬)

பேராலுமறிவாலும்பெரியரெனச்சிறப்பாகப்பேசநின்றோர்
ஆராலும்பெறலரியதியாததனைப்பெறுவித்தானந்தோவந்தோ (௭)

தினைத்தனையுமறிவறியாச்சிறியனென்னநினையாமற்சித்தியான
வனைத்துமென்றன்வசமாகவியருளமுதமெனக்களித்தானந்தோவந்தோ. (௮)

பொதுவாகிப்பொதுவினடம்புரிகின்றபேரின்பப்பொருள்தானயாதோ
அதுநானாயநானதுவாயத்துவிதமாகின்றேனந்தோவந்தோ. (௯)

மருள்வடிவேயென்ஞான்றுமெவ்விடத்துமெதனாலுமாய்விலாத
அருள்வடிவாயிம்மையிலேயடைந்திடப்பெற்றாடுகின்றேனந்தோவந்தோ. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# சமரசநிலை.

## நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

சித்திபுரத்தேதினந்தோறுஞ்சீரகொளருட்
சத்திவிழாநீடிததழைததோங்க - எததிசையி
லுள்ளவரும்வந்தேயுவகையுறுகமதத
துள்ளலொழிகதொலைந்து. (௧)

ஒன்றேசிவமென்றுணாந்திவ்வுலகமெலாம்
நன்றேபொருமையுற்றுநண்ணியே - மனறே
நடம்புரியும்பாதநளினமலாகுளளம்
இடம்புரிகவாழ்கவிசைந்து. (௨)

சிற்சபையும்பொற்சபையுஞ்சிததிவிளக்கத்தால்
நறசகமேனீடூழிநணணிடுக - சறசபையோா
போற்றிவரமபெற்றுவசைசபூரிககவாழ்நதிடுக
நாற்றிசையும்வாழ்கநயநது. (௩)

அச்சந்தவிர்த்தேயருளிற்செலுத்துகின்ற
விச்சையரசேவிளஙகிடுக - நசசரவ
மாதிகொடியவுயிரததனையும்போயொழிக
நீதிகொடிவிளஙகநீணடு. (௪)

கருணையிலாவாட்சிகடுகியொழிக
அருணயநதநனமாாககரரளக - தெருணயந்த
நல்லோாநினைததநலம்பெறுகநனறுநினைத
தெல்லோரும்வாழ்கவிசைந்து. (௫)

புல்லொழுககமெல்லாம்புணரியிடைபபோயொழிக
நலலொழுககமொன்றேநலம்பெறுக - இலலொழுககிற
செததாரகளெல்லாநதிருமபவெழுநதுமனம்
ஒத்தாராய்வாழ்கவுவந்து. (௬)

செத்தாரெழுசசிவமேபொருளென்றே
யிததாரணியிலிருநதொளிரக - சுததசிவ
சன்மாாககமொனறேதழைககதயலறியாத்
துன்மாாககம்போகதொலைந்து. (௭)

செத்தவர்களெல்லாநதிரும்பவெழுந்துவரச்
சித்தம்வைததுச்செய்கின்றசிததியனே - சுத்தசிவ
சன்மாாக்கசஙகததலைவனேநிற்போற்றும்
எனமாாக்கநினமார்ககமே. (௮)

நல்லாருமென்னைநயந்தாருநனைசொல
வல்லாருமென்னைவளர்த்தாரும் - எல்லாரும்
நீயெனநிருக்கின்றேனின்மலனேநீபெற்ற
சேயென்றிருக்கின்றேனசோர்ந்து. (கூ)

ஆடவெடுத்தானென்றறைகின் றீரென்றலைமேற்
சூடவெடுத்தானெனறுசொல்கின்றேன - நாடிய
இவ்வழக்கையார்பாலிசைத்தறுத்துக்கொள்கிறபாம்
கவலையற்றவம்பலத்தான்கால். (க0)

நோவாதுநோன்பெனைப்போல்நோற்றவருமெஞ்ஞானறுஞ்
சாவாவரமெனைப்போறசாராதவருந - தேவாநின
பேரருளையென்போலப்பெற்றவருமெவ்வுலகில்
யாருளாரீசறறேயறை. (கக)

திருச்சிற்றம்பலம்.

## வேண்டுகோள்.

கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

வேதமும்வேதத்தினந்தமும்போற்றவிளங்கியநின்
பாதமுமாமுடியுங்கண்டுகொள்ளுமபடியெனக்கே
போதமுமபோதத்தருளமுந்தநதபுண்ணியனே
நாதமுநாதமுடியுங்கடந்தநடத்தவனே. (க)

வண்ணப்பொன்னமபலவாழவேயென்கண்ணினுண்மாமணியே
சுண்ணப்பொன்னீறணிவோங்கியசோதிச்சுகப்பொருளே
யெணணப்பயின்றவென்னெணணமெலாமுனனரீகவிதென
விணணப்பமேற்றுவருவாயென்பால்விரைநதேவிரைநதே. (உ)

சிற்சபையபபனைக்கண்டுகொண்டேனருட்டெள்ளமுதஞ்
சற்சபையுள்ளாநதழைக்கவுணடேனுண்மைதானறிநத
நறசபைசித்திகளெல்லாமென்கைவசநண்ணப்பெறறேன்
பொற்சபையோஙகபபுரிநதாடுதற்குப்புகுநதனனே. (௩)

வரையற்றசீர்ப்பெருவாழ்வுதநதென்மனமன்னியென்றும்
புரையற்றமெயநிலையேற்றிமெய்ஞ்ஞானப்பொதுவினிடைத்
திரையற்றகாட்சியளித்தின்னமுதத்தெளிவருளி
நரையற்றுமூபபற்றிறப்பற்றிருக்கவுநல்கியதே. (௪)

தாயாகியென்னுயிர்த்தநதையுமாகியென்சற்குருவாய்த்
தேயாப்பெரும்பதமாகியெனசத்தியதெய்வமுமாய்
வாயாரப்பாடுநல்வாககளித்தெனனுளமன்னுகின்ற
தூயாதிருநடராயாசிற்றம்பலச்சோதியனே. (௫)

ஆதியுமந்தமுமில்லாத்தனிச்சுடராகியின்ப
நீதியுநீர்மையுமோங்கப்பொதுவினிருத்தமிடுஞ்
சோதியும் * வேதியுநானறிந்தேனிச்செகதலத்தில்
சாதியும்பேதச்சமயமுநீங்கித்தனித்தனனே. (௬)

தன்னேரிலாத்தலைவாசிற்றம்பலந்தன்னிலென்னை
இன்னேயடைகுவித்தின்பருள்வாயிதுவேதருணம்
அன்னேயெனைப்பெற்றவப்பாவென்றுன்னையடிக்கடிக்கே
சொன்னேன்முனைசொல்லுகின்றேன்பிறவேதுந்துணிந்திலனே. (௭)

தேகாதிமூன்றுமுன்பாற்கொடுத்தேனின்றிருவடிக்கே
மோகாதிபனென்றுலகலாதுற்றமுயலுகின்றேன்
நாகாதிபரும்வியநிடவென்னைநிராநண்ணியென்றுஞ்
சர்காவரந்தந்துசன்மார்க்கநீதியுஞ்சாற்றுகவே. (௮)

கற்றேன்சிற்றம்பலக்கல்வியைக்கற்றுக்கருணைநெறி
உற்றேனெக்காலமுஞ்சாகாமலோங்குமொளிவடிவம்
பெற்றேனுயர்நிலைபெற்றேனுலகிற்பிறநிலையைப்
பற்றேன்சிவானந்தப்பற்றேயென்பற்றெனப்பற்றினனே. (௯)

தீமைகள்யாவுந்தொலைத்துவிட்டேனித்தினந்தொடங்கிச்
சேமநல்வினைபச்செயலேவிளங்கமெய்ச்சித்தியெலாங்
காமமுற்றெனைக்கலந்துகொண்டாளக்கருணைநடத்
தாமனைனுள்ளகஞ்சாரவும்பெற்றனனசத்தியமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## தலைவிபாங்கிக்குரைத்தல்.

கலித்தாழிசை.

திருச்சிற்றம்பலம்.

வேதாந்தநிலையொடுசித்தாந்தநிலையுமேவும்பொதுநட்நான்காணல்வேண்டும்
நாதாந்தத்திருவீதிநடப்பாயோதோழிநடவாமலென்மொழிகடப்பாயோதோழி. (௧)

தொம்பதவுருவொடுதற்பதவெளியிற்றுேன்றசிபதநடநான்காணல்வேண்டும்
எம்பதமாகியிசைவாயோதோழியிசையாமல்வீணிலேயசைவாயோதோழி. (௨)

சின்மயவெளியிடைத்தன்மயமாகித்திகழும்பொதுநடநான்காணல்வேண்டும்
என்மயமாகியிருப்பாயோதோழியிச்சைமயமாயிருப்பாயோதோழி. (௩)

நவநிலைமேற்பரநாதத்தலத்தேஞானத்திருநடநான்காணல்வேண்டும்
மவுனத்திருவீதிவருவாயோதோழிவாராமல்வீண்பழிதருவாயோதோழி. (௪)

* வேதி - இரும்பைப் பொன்னுக்குங் குளிகைபோன்றவன்.

ஆறுறுககப்புறமாகும்பொதுவிலதுவதுவாநடம்நான்காணல்வேண்டும்
ஏறுமலிழியாமலிருப்பாயோதோழியேறியிழிந்திங்கிறப்பாயோதோழி. (௫)

வகாரவெளியிற்சிகாரவுருவாய்மகாரததிருநடநான்காணல்வேண்டும்
விகாரவுலகைவெறுப்பாயோதோழிவேறாகியென்சொல்மறப்பாயோதோழி. (௬)

நாதாந்தநிலையொடுபோதாந்தநிலைகளுநடுவாமபொதுநடநான்காணல்வேண்டும்
சூதாநதற்போதத்தைச்சுடுவாயோதோழிதுட்டநெறியிற்கெடுவாயோதோழி. (௭)

அறிவிலறிவையறியும்பொதுவிலானந்ததிருநடநானகாணல்வேண்டும்
செறிவிலறிவாகிசசெல்வாயோதோழிசெலலாமல்மெயநநெறிவெல்வாயோதோழி.

என்னைத்தன்னோடேயிருத்தும்பொதுவிலின்பதிருநடநானகாணல்வேணடும்
நின்னைவிட்டென்னோடேநிலைப்பாயோதோழிநிலையாமலென்னையுமலைப்பாயோதோழி

துரியதிற்கப்பாலுநதோன்றுமபொதுவிலசோதிதிருநடநானகாணலவேண்டும்
கரியைககணடாஙகதுகாண்பாயோதோழிகாணாதுபொய்ப்பணிபூணபாயோதோழி.

தததுவத்துட்புறந்தானும்பொதுவிற்சததாந்திருநடநான்காணல்வேண்டும்
கொததறுவிததைககுறிப்பாயோதோழிகுறியாதலகிலவெறிப்பாயோதோழி. (௧௧)

திருச்சிறறம்பலம.

---

## தாய்கூறல்.

---

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

காதல்கைம்மிகுநதென்செய்வேனென்னைநீகண்டுகொள்கணவனேயென்றாள்
ஓதலுணபுகழேயன்றிநானொன்றுமுவந்திலேனுண்மையீதென்றாள் ,
பேதைநான்பிறிதோர்புகலிலேன்செயதபிழையெலாம்பொறுததருளென்றாள்
மாதயவுடையவள்ளலேயென்றாள்வரததினால்நானபெற்றமகளே. (௧)

மயங்கினேனெனினும்வள்ளலேயுன்னைநான்மறப்பனோகனவினுமென்றா
ளுயஙகினேனுன்னைமறந்திடிலேயோவுயிர்தரியாதெனககென்றாள்
* கயஙகினேன்கயஙகாவண்ணநின்கருணைககடலமுதளிததருளென்றாள்
வயஙகுசிறசபையில்வரதனேயென்றாளவரததினால்நான்பெற்றமகளே. (௨)

அஞ்சலென்றென்னையிததருணநீவந்தேயன்பினாலணைத்தருளென்றாள்
பஞ்சுபோற்பறந்தேனையவோதுன்பம்படமுடியாதெனககென்றாள்
செஞ்செவேயெனதுகருத்தெலாமுனது திருவுளமறியுமேயென்றாள்
வஞ்சகமறியாவளளலேயென்றாள்வரத்தினால்நானபெற்றமகளே. (௩)

பூமியோபொருளோவிரும்பிலேனுன்னைப்புணர்ந்திடவிரும்பினேனென்றாள்
காமியென்றென்னைநீகைவிடேலகாமக்கருதெனககிலலைகாணென்றாள்
சாமிநீவரவுதாழ்த்திடிலேயோசற்றுநான்தரித்திடேனென்றாள்
மாமிகுகருணைவள்ளலேயென்றாள்வரததினால்நான்பெற்றமகளே. (௪)

---

* கயஙகல - கசங்கல்.

அடுத்துநானுனைக்கலந்தனுபவிக்கவாசைமேற்பொங்கியதென்றாள்
தடுத்திடமுடியாதினிச்சிறுபொழுதுந்தலைவனேதாழ்த்திடேலென்றாள்
தொடுத்துலகுள்ளார்தூற்றுதல்வாயாற்சொலமுடியாதெனக்கென்றாள்
மடுத்தவெந்துயர்தீர்த்தெடுத்தருளென்றாள்வரத்தினால்நான்பெற்றமகளே. (௫)

தடுத்திடல்வல்லாரில்லைநின்னருளைத்தருகநற்றருணமீதென்றாள்
கொடுத்திடிலையோநின்னருட்பெருமைகுறையுமோகுறைந்திடாதென்றாள்
நடுத்தயாவிலார்போனிருத்தலுன்றனக்குஞாயமோநண்பனேயென்றாள்
வடுத்தினும்வாயேனலனானென்றாள்வரத்தினால்நான்பெற்றமகளே (௬)

பொன்செய்நின்வடிவைப்புணர்ந்திடநினைத்தேன்பொங்கியதாசைமேலென்று
ளென்செய்வேனெனையும்விழுங்கியதையோவென்னளவன்றுகாணென்றாள்
கொன்செயுமுலகரெனையுமுனதுகுறிப்பையுங்குறித்திலரென்றாள்
வன்செயுமவர்வாயோய்வதென்றென்றாள்வரத்தினால்நான்பெற்றமகளே. (௭)

மெலிந்தவென்னுளத்தையறிந்தனைதயவுமேவிலையென்னையோவென்றாள்
நலிந்தபோதின்னும்பார்த்துமென்றிருத்தனல்லவாக்கடுப்பதோவென்றாள்
மலிந்தவிவ்வுலகர்வாய்ப்பதர்தூற்றவைத்தலுன்மரபலவென்றாள்
வலிந்தெனைக்கலந்தவள்ளலேயென்றாள்வரத்தினால்நான்பெற்றமகளே. (௮)

ஒன்றிலேனபிரிதொன்றுன்னருட்சோதியொன்றுறவொன்றினேனென்றாள்
நன்றிலேனெனினுநின்றிருவடியைநம்பினேனயந்தருளென்றாள்
குன்றிலேயிருத்தற்குரியநான்றுயர்க்குழியிலேயிருந்திடேனென்றாள்
மன்றிலேநடஞ்செய்வள்ளலேயென்றாள்வரத்தினால்நான்பெற்றமகளே. (௯)

ஆடியபாதத்தழகனென்றனைத்தானன்பினாற்கூடினனென்றாள்
கோடிமாதவங்கள்புரியினும்பிறர்க்குக்கூடுதல்கூடுமோவென்றாள்
பாடியபடியென்கருத்தெலாநிரப்பிப்பரிசெலாம்புரிந்தனனென்றாள்
வாடியவுளமுமதளிர்த்தனனென்றாள்வரத்தினால்நான்பெற்றமகளே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## பாங்கிதலைவிபெற்றியுரைத்தல்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அம்மதவேள்கணையொன்றோவைங்கணையும்விடுத்தா னருளடையுமாசையினாலா
ருயிர்தானபொறுத்தாள், இம்மதமோசிறிதுமிலாள்கலவியிலேயெழுந்தவேகசிவபோ
கவெள்ளத்திரண்டுபடாளெனினும், எம்மதமோவெக்குலமோவென்றுநினைப்புளதே
லிவள்மதமுமிவள்குலமுமெல்லாமுஞ்சிவமே, சம்மதமோதேவா திருவாய்மலரவேண்
டுஞ்சபையில்நடம்புரிகின்றதனிப்பெரியதுரையே. (௧)

* அங்கலிட்டகளத்தழகரம்பலவர் திருத்தோளணைகவெனும்பேயசற்றலவிலை
யெனவே, பொங்கவிட்டதாயமுகநெரிங்கவிட்டுப்போனாபூவைமுகமபூமுகமபோ
ற்பூரித்துமகிழ்ந்தாள, எங்களிட்டத்திருவருளமங்கலஞசூட்டலன்றியிரண்டுபட்டதொ
னறுகிறியனபடைவிததிடவே, தங்களிட்டமயாத்திருவாயமலரவேணடுஞசபையில
நடம்புரிகினறதனிப்பெரியதுணையே (௨)

பனம்பழமேயெனினுமிகச்சப்பசித்தவிர்ததாறபோதும்பாருமெனப்பகாகினறபாவை
யாபோறபகாள், இனம்பழமோகஙகலந்தாள்சிவாநுபவத்தலலாலெலந்தவாபவஙகளி
லுமிசசையிலலாளகாதம, மனமபழமோகாபோவெனறறிந்துவரவிடுததாளமறறவர்
போறகாசுபணத்தாசைவைத்துவருந்தாள், தனம்பழமோதேவா திருவாயமலரவேண
டுஞ்சபையில்நடம்புரிகின்றதனிப்பெரியதுணையே. (௩)

புல்லவரேபொயயுலகபோசமுறவிழைவாா புண்ணியரேசிவபோகம்பொருந்துத
றகுவிழைவார், கலலவரேமணியிவரேயெனறறிந்தாளசுறுறகணவிடையுமபொயயுறவு
கருதுகிலாள்சிறிதும், நலலவரேயெனினுமுமைநாடாரேலவரைநனகுமதியாளிவளை
நணணவெண்ணுமதோ, வல்லவரேநமதுதிருவாயமலரவேணடுமெவயஙகுதிருமணி
மனறிலவாழ்பெரியதுணையே. (௪)

சததுவருநசததுவருசெயதலைவாகளுமபிறருந்தனிததனியேவலிந்துவநதுதன்
னெதிாநிறகின்று, ரெததுணையுமறறவரையேறடுததுப்பாராளிருவிழிகணீாசொரி
வாளெனனுயிரநாயகனே, யொததுயிரிறகலநதுகொண்டவுடையாயென்றுமையே
யோதுகினறுளிவளவிலுத்தமரேயுமது, சித்தமெதுதேவர்திருவாய்மலரவேண்டுஞ்சி
றசபையிறபொறசபையிற்றிகழ்பெரியதுணையே. (௫)

அனனையைக்கண்டம்மாநீயமபலத்தென்கணவரடியவளேல்மிகவருகவல்லளெனி
லிஙகே,யென்னையுனகிருக்கின்றதேருகவென்றுரைபபாளிசசையெலாமுமமிடத்தே
யிசைந்தனளிஙகிவளை, முன்னையளென்றெண்ணுதிர்தாழ்த்திருப்பீராலமுடுகியுயிர்
விடுத்திடுவாள்கடுகிவாலுளதேல, மன்னவரேயுமதுதிருவாயமலரவேணடுமெவயங்குதி
ருமணிமன்றில்வாழ்பெரியதுணையே. (௬)

கரவறியாவம்பலத்தென்கணவரைக்கண்டலது கண்டுயிலேனுண்டிகொளேன்க
ளித்தமரேனெனபா, ளிரவறியாள்பகலறியாளெதிாவருகின்றவரையினனவரெனறறி
யாளிஙகினனலுழக்கின்றாள், வரவெதிர்பார்த்துழலகின்றாளிவளவிலுமதுமனககரு
த்தினவணணமெதுவாயமலரவேண்டும், விரவுமொருகணமுமினித்தாழ்க்கிலுயிர்தரி
யாளமெயப்பொதுவில்நடம்புரியுமிகப்பெரியதுணையே. (௭)

ஊராசையுடலாசையுயிாபொருளினாசையுறறவாபெறறவராசையொன்றுமிலாதொ
மது, பேராசைபபேயபிடித்தாளகளஞணடுபிதற்றும்பிசசியெனப்பிதற்றுகின்றுளபிற
ாபெயர்கேட்டிடிலோ, நாராசஞ்செவிபுகுந்தாலெனநலிகினறுள்நாடறிந்ததிதுவெல்
லாம்நஙகையிவளளவில,நீராசைப்பட்டதுண்டேல்வாயமலரவேணடும்நித்தியமாமணி
மனறிலநிகழ்பெரியதுணையே. (௮)

---

* அஙகு அல எனப்பிரித்து - அவவிடத்து இருள் எனப்பொருள்கொள்க.

என்னுயிரிற்கலந்துகொண்டாரவரில்லாதாமிருக்கவிடம்புனைகவென்கின்றாளிச்
சைசமயமாகித், தன்னுயிர்தன்னுடல்மறந்தாளிருந்தறியாள்படுத்துந்தரித்தறியாளெழு
ந்தெழுந்துதனித்தொருசார்திரிவாள், அன்னமுணவழைத்தாலுங்கேட்பதிலாளுலகி
லணங்கனையாரிசயிசக்குங்குணங்கள்பலபெற்றாள், மின்னிவளைவிழைவதுண்டேல்
வாய்மலர்வேண்டும்மெய்ப்பொதுவில்நடம்புரியுமிகப்பெரியதுரையே (௯)

அம்பலத்தேநடம்புரியுமெனதுதனித்தலைவரன்புடனென்னுளங்கலந்தேயருட்
பெருஞ்சோதியினால், தம்பலத்தேபெரும்போகந்தந்திடுவாரிதுதான்சத்தியஞ்சத்திய
மதனாற்சார்ந்தவாதாமிருக்க, எம்பலத்தேமலரணையைப்புனைகவெனப்பலகாலியம்புகி
ன்றாளிவளவிலிசைந்துநமதருளாரு, செம்பலத்தேவுறுதருணம்வாய்மலர்வேண்டு
ஞ்சிற்சபைபொற்சபையோங்கித்திகழ்பெரியதுரையே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

# தலைவி தலைவன் செயலைத் தாய்க்குரைத்தல்

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அன்னப்பார்ப்பாலழகார்தில்லையூடேயம்பலஞ்செய்துநின்றுமெழகர்
துன்னப்பார்த்தென்னுயிர்த்தோழியுநானுஞ்சூதாடுகின்றவச்சூழலில்வந்தே
யுன்னைப்பார்த்துன்னுள்ளேயென்னைப்பாராதேயூரைப்பார்த்தோடியுழல்கின்றபெண்ணே
யென்னைப்பாரென்கின்றாரென்னடியம்மாவென்கைபிடிக்கின்றாரென்னடியம்மா. (௧)

அதுபாவகமுகத்தானந்தநாட்டிலம்பலஞ்செய்துநின்றுமெழகர்
விதுபாவகமுகத்தோழியுநானும்மெய்ப்பாவனைசெய்யும்வேளையில்வந்து
பொதுபாவனைசெய்யப்போகாதேபெண்ணேபொய்ப்பாவனைசெய்துகைப்பானேயோ
இதுபாவமென்கின்றாரென்னடியம்மாவென்கைபிடிக்கின்றாரென்னடியம்மா. (௨)

அறங்காதல்செய்தென்னையாண்டுகொண்டிங்கேயருட்பெருஞ்சோதியாயாடுமழக
ருறங்காதவண்ணஞ்சிற்றம்பலம்பாடியுதிக்கின்றவொண்மையிற்றுதிக்கின்றபோது
புறங்காதல்செய்வார்போற்செய்யாதேபெண்ணேபொற்கம்பமேறினைசொக்கமங்கைபால
இறங்காதேயென்கின்றாரென்னடியம்மாவென்கைபிடிக்கின்றாரென்னடியம்மா. (௩)

அந்நாள்வந்தென்றனையாண்டருள்செய்தவையரமுதரென்னப்பரழகர்
நன்னாள்கழிக்கின்றநங்கையரோடுநானம்பலம்பாடிநண்ணுறும்போது
பின்னாளென்றெண்ணிப்பிதற்றாதேபெண்ணேபேரருட்சோதிப்பெருமணஞ்செய்நாள
இந்நாளேயென்கின்றாரென்னடியம்மாவென்கைபிடிக்கின்றாரென்னடியம்மா. (௪)

தப்போதுவாருளஞ்சார்ந்திடவுணராசத்தியருத்தமர்நித்தமணாளர்
ஒப்போதவொண்ணாதமெய்ப்போதமன்றினுண்மையைப்பாடிநானண்மையினின்றேன்
அப்போதென்றன்னையயர்ந்திடேல்பெண்ணேயன்புடைநின்னையாமின்புறக்கூடல்
இப்போதேயென்கின்றாரென்னடியம்மாவென்கைபிடிக்கின்றாரென்னடியம்மா. (௫)

மெய்க்குலமபோற்றவிளங்குமணாவித்தகரம்பலயேவுமழகா
இக்குலமாதரும்யானுமெனனுதரினனருளாடல்கள்பன்னூறும்போது
பொய்க்குலம்பேசிப்புலம்பாதேபெண்ணேபூரணநோக்கம்பொருந்தினைநீதான்
எக்குலமெனகின்றாரெனனடியம்மாவெனகைபிடிக்கின்றாரென்னடியம்மா. (௬)

வெம்மதநெஞ்சிடைமேவுறவுனனா வெமபலமாற்றுபொன்னம்பலவாணா
சம்மதமாமடவாரகளுநானுநதத்துவம்பேசிககொணடொத்துறும்போது
இம்மதம்பேசியிறங்காதேபெண்ணேயேகசிவோகததைமெய்யதினைநீதான்
எம்மதமெனகின்றாரெனனடியம்மாவென்கைபிடிககின்றாரென்னடியம்மா. (௭)

பாரொடுவிண்ணும்படைத்தபண்பாளர்பற்றமபலத்தாரசொல்சிற்றம்பலத்தார்
வாரிடுகொங்கையாமஙகையரோடேமன்றகம்பாடிமகிழ்கினறபோது
ஏருடம்பொன்றனவெண்ணேல்நீபெண்ணேயெமமூடம்புணையிணைந்திங்கெமக்கே
யீருடமபெனகின்றாரெனனடியமமாவென்கைபிடிககின்றாரெனனடியமமா. (௮)

மறப்பற்றநெஞ்சிடைவாழ்கின்றவள்ளல்மலப்பற்றறுத்தவாவாழ்த்துமனனா
சிறப்புறமஙகையர்தம்மொடுநானுஞசிற்றம்பலமபாடிச்செலகினறபோது
புறப்பறகற்றதொடங்காதபெணணேபுலையகப்பற்றையறுத்தாயநினககே
இறபபறறெதனகினறாரெனனடியம்மாவெனகைபிடிககினறாரெனனடியம்மா. (௯)

ஆறெனுமநதஙகளாகியனறுகும்பலத்தாடல்செயயானந்தசித்தர்
தேறறிவாகிச்சிவானுபவததேசினமயமாயநானறிவொககினறபோது
மாறகலவாழ்வினில்வாழ்கின்றபெண்ணேவலலவளநீயேயிமமாநிலமேலே
யேறினையெனகினறாரென்னடியம்மாவெனகைபிடிகின்றாரென்னடியம்மா. (௧௦)

திருச்சிறறமபலம.

---

# தலைவிவருந்தல்.

---

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

பருவமிலாககுறையாலோபகுதிவகையாலோ பழககமிலாமையினாலோபடிற்றுவினையாலோ, இருவகைமாயையினாலோவாணவத்தினாலோ வெனனாலோபிறராலோ வெதனாலோவறியேன், சருவலொழிந்தென்மனமாம்பாங்கிபகையானாள் தனித்தபனாயெனுமவளாததாயுமுகம்பாராள், நிருபமடப்பெண்களெலாமவலதுகொழிக்கின்றார் நிபுணரெங்கணடராஜாநினைவையறிந்திலனே. (௧)

அம்பலத்தேதிருநடஞ்செய்யடிமலரெனமுடிமே லணிந்திடமுன்சிலசொன்னேனதனாலோவனறி, எமபலத்தேயெமமிறைவனெனனைமணமபுரிவா னென்றுசொனனேனிதனாலோவெதனாலோவறியேன, வமபிசைத்தேனெனவெனதுபாங்கிபகையானாளவளாதடுத்ததனித்தாயுமலாந்துமுகமபாராள், நிமபமரககனியானாமறையாகளெல்லாம்நிபுணரெஙகணடராஜாநினைவையறிந்திலனே. (௨)

கண்ணுறங்கேனுறங்கினுமென் கணவரொடுகலக்குங்கனவன்றியிலையென்றேன் றனாலோவன்றி, எண்ணுறங்காலிலவிருக்குமிடம்புகுவேனென்றுரைத்தேனிதனாலோவெதனாலோவறியேன், பெண்ணுடன்காளெனத்தோழிபேசிமுகங்கடுத்தாள் பெருந்தயவால்வளர்த்தவளும்வருந்தயலானாள், மண்ணுடன்காப்பழிகூறிமற்றவர்களிருந்தார்வள்ளல்நடராஜர்திருவுள்ளமறிந்திலனே. (௩)

எல்லாஞ்செய்வல்லதுணையென்கணவரென்றுமெனக்குமொன்றுநினக்குமொன்றென்றவதனாலோ, இல்லாமையெனக்கிலையெல்லார்க்குந்தருவேனென்றுசொன்னேனிதனாலோவெதனாலோவறியேன், கல்லாரைப்போலெனைமுகங்கடுத்துநின்றாள்பாங்கி களித்தெடுத்துவளர்த்தவளுங்கலந்தனளங்குடனே, செல்லாமைசிலபுகன்றுசிரிக்கின்றார்மடவார்சித்தர்நடராஜர் திருச்சித்தமறிந்திலனே. (௪)

இச்சையெலாம்வல்லதுணையென்னைமணம்புரிந்தாரேடியெனக்கிணையெவர்களென்றவதனாலோ, வெச்சமயத்தேவரையுமினிமதிக்கமாட்டேனென்றுசொன்னேனிதனாலோவெதனாலோவறியேன், நச்சுமரக்கனிபோலேபாங்கிமனங்கசந்தாள்நயந்தெடுத்துவளர்த்தவளுநகையங்கெடுப்புப்புகன்றாள், அச்சமிலாளிவளென்றேயலருரைத்தார்மடவாரண்ணல்நடராஜர் திருவெண்ணமறிந்திலனே. (௫)

வஞ்சமிலாத்தலைவருகமேமாலையிட்டேனெல்லாவாழ்வுமென்றனவாழ்வென்றேன்றனாலோவன்றி, எஞ்சலுறேன்மற்றவர்போலிறந்துபிறந்துழலேனென்றுசொன்னேனிதனாலோவெதனாலோவறியேன், அஞ்சுமுகங்காட்டிநின்றாள்பாங்கியெனைவளர்த்தவளுமப்படியாகியெனைமுகம்பாரான், நெஞ்சுரத்தபெண்களெலாநீட்டிநகைக்கின்றார்நிருத்தநடராஜர் திருக்கருத்தையறிந்திலனே. (௬)

அன்னமுணவழைத்தனனானுமேலாடித்தேனருந்துகின்றேனெனவுரைத்தேன்றனாலோவன்றி,' என்னுயிர்நாயகனொடுநானென்னையுமிடமெங்கேயென்றுரைத்தேனிதனாலோவெதனாலோவறியேன், முன்னுநெறிக்கொருதுணையாந்தோழிமனங்கசந்தாள் துணிந்தெடுத்துவளர்த்தவளுஞ்சோர்ந்தமுகமானாள், நென்னலொத்தபெண்களெலாங்கூடிநகைக்கின்றார்நிபுணரங்கநடராஜர் நினைவையறிந்திலனே. (௭)

பொதுநடஞ்செய்துரைமுகத்தேகளித்தளவென்றெளிரும்புன்னகையென்பொருளென்றேன்றனாலோவன்றி, இதுவரையுமவரக்காணேனெனறடைசெய்தாரெவரோவென்புகன்றேனிதனாலோவெதனாலோவறியேன், புதுமுகங்கொண்டெனதுசனித்தோழிமனந்திரிந்தாள் புரிந்தெடுத்துவளர்த்தவளும்புதுமைசிலபுகன்றாள், மதுவுகந்துகளித்தவர்போற்பெண்களொடிக்கின்றார்வள்ளல்நடராஜர் திருவுள்ளமறிந்திலனே

கண்கலந்தகணவரெனைக்கைகலந்ததருணம் சரணமறிந்திலனென்றேன்றனாலோவன்றி, எண்கலந்தபோகமெலாஞ்சிவபோகந்தனிலே யிருந்ததெனறேனிதனாலோவெதனாலோவறியேன், விண்கலந்தமதிமுகந்தான்வேறுபட்டாள்பாங்கி வியந்தெடுத்துவளர்த்தவளும்வேறுசிலபுகன்றாள், பண்கலந்தமொழிமடவார்பழிகூறலானார்பத்தர்புகழ்நடராஜர்சித்தமறிந்திலனே. (௯)

மாடமிசையோங்குநிலாமண்டபத்தேமகிழ்ந்தேன் வள்ளலொடுநானென்றேன்றனாலோவன்றி, ஈடறியாச்சுகம்புகலவென்னாலேமுடியாதென்றுரைத்தேனிதனாலோ

# தோழிக்குரிமைகிளத்தல்.

## எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

நயந்தநடநாயகருன்னுயகரேயெனினும்நாடியமந்திரங்கள்சிலகூடியுளாயிடவே, வியந்தமற்றைத்தேவரெலாம்வரவுமவாநேயம் விரும்பாதேயிருப்பதெனனீயெனவின்றுயதோழி, வயந்தருமிந்திராபிரமாநாரணாகாரணாகள்மற்றையாகண்மற்றையாகண்மற்றையாகளெவாககும், பயந்தகுடியல்லடிநானறிருச்சிற்றம்பலத்தேபதிநடஞ்செயயடிப்பணிக்கேபதித்தகுடியறியே. (௧)

நயந்தநடநாயகருன்னுயகரேயெனினும் நஙகைநினைக்கண்டிடவேநாடிமற்றைத்தலைவா, வியந்துவருகினறதுகண்டுபெசரியாதிஙகே மேனேகியிருப்பதெனனீயென்கினறுயதோழி, வயந்தருபாமுதல்நாதவரையுளநாட்டவாககுமமற்றவரைநடத்துகின்றமாநாட்டார்தமககும,பயந்தகுடியல்லடிநானறிருச்சிற்றம்பலத்தே பதிநடஞ்செயயடிப்பணிககேபதித்தகுடியறியே. (௨)

நயந்தநடநாயகருன்னுயகரேயெனினும்நாடுமெற்றைத்தலைவாதமைககண்டபொழுதெனினும, வியந்தவாககோநல்லுரையுஞ்சொலலாதேதருககி வீதியிலேநடப்பதெனனீயென்கினறுயதோழி, வயந்தருமிவ்வண்டபகிரண்டமட்டோநாத வரையோவப்பாலுமுளமாநாட்டார்தமக்கும், பயந்தகுடியல்லடிநானறிருசசிறறமபலத்தே பதிநடஞ்செயயடிப்பணிககேபதித்தகுடியறியே. (௩)

கடுஙகுணத்தோாபெறறகரியநடத்தரசேநினககுக்கணவரெனினும்பிறரைககண்டபொழுதெனினும், நடுஙகுணத்தால்நின்றுசிலநல்வார்த்தைபகராய நஙகாயிதெனனெனநீவிலகின்றுய்தோழி, ஒடுஙகுபலதத்துவாககுந்தத்துவரைநடத்துமுபயநிலைத்தலைவருககுமவாதலைவாகளுககும, நடுஙகுகுடியல்லடிநான்றிருசசிற்றமபலத்தே நடஞ்செய்யடிப்பணிகசென்றேநாட்டியநற்குடியே. (௪)

மடஙகலந்தாாபெறற்கரியநடத்தரசேநினக்கு மணவாளரெனினுமுன்பால்வார்த்தைமகிழ்ந்துரைகக, இடஙகலந்தமூாத்திகடாம்வந்தாலஙகவர்பா லெண்ணமிலாதிருக்கின்றுயென்கொலென்றுயதோழி, மடஙகுசமயத்தலைவாமதத்தலைவரவாககும் வயஙகுமிவாககுபகரிககுமாததலைவாகளுககும், அடஙகுகுடியல்லடிநானறிருச்சிறறம்பலத்தே யாடலடிபபணிக்கெனறேயமைத்தகுடியறியே. (௫)

அறங்குலவுதோழியிங்கேநீயுரைத்தவாாத்தை யறிவறியார்வார்த்தையெனறுலெனிவிமமொழிகேள், உறங்குவதும்விழிப்பதும்பின்னுண்ணுவதுமிறத்தலுறுவதுடனபிறத்தல்பலபெறுவதுமாயுழலும, மறங்குலவுமணுககள்பலாசெயதவிரத்தால்மதத்தலைமைபத்ததலைமைவாயததனாஙகவாபால, இறஙகலிலென்பேசுதலாலென்பயனேநடஞ்செய யிறைவரடிப்புகழ்பேசியிருககின்றேனயானே. (௬)

சிவமயமேவேறிலையெல்லாமெனநீதானே தேமொழியாய்பற்பலகால்செப்பியிடக்கேட்டேன், தவமயத்தாாபலசமயத்தலைவாமதத்தலைவா தத்துவர்தத்துவத்தலைவரவ

ர்தலைவர் தலைவா, இவரவரென்றயல்வேறுபிரித்தவர்பால்வார்த்தையியம்புவதெனனென்றாயீதென்கொலென்றாய்தோழி, நவமயநீயுணர்ந்தறியாயாதலிலிவ்வண்ணநவின்றனைநின்னையமறநானபுகல்வேன்கேளே. (எ)

ஒளியொன்றேயண்டபகிரண்டமெலாம்விளங்கி யோங்குகின்றதன்றியண்டபகிரண்டங்களிலும், வெளிநின்றசராசரத்துமகத்திஞெடுபுறத்தும விளம்புமகப்புறத்திஞெடுபுறப்புறத்துமநிறைந்தே, உளிநின்றவிருணீக்கியிலங்குகின்றதன்மை யுலகறியுமநீயறியாதனறுகணடாயதோழி, தளிநின்றவொளிமயமேவேறிலையெல்லாமுந்தானெனவேதாகமங்களசாற்றுதலசத்தியமே. (அ)

ஏற்றிடுவேதாகமங்களொளிமயமேயெல்லா மெனறமொழிதனைநினைத்தேயிரவிவிருட்டறையில, சாற்றிடுமணபாத்திரத்தைமரவட்டிலகளைகற் சட்டிகளைவேறுபலசாந்தகருவிகளைத, தேற்றமிகுதணணீராச்சீவாகளபற்பலரைச செப்பியவவ்விருட்டறையிற்றனித்தனிசோதத்தாலும், ஊற்றமுறுமிருணீங்கியொளிகாணபதுளதோவுளதேலநீயுரைத்தமொழியுளதாகுந்தோழி (கூ)

பரமத்தேஞெலகுயிரகளகற்பனையேயெல்லாமபகாசிவமேயெனவுணாநதோமாதலிஞெமே, பிரமமெனப்பிறாககுரைத்துபபொஙகிவழிநதாஙகே பேசுகினறபெரியவாதமபெரியமதமபிடியேல, உரமிகுபேருலகுயிாகளபரமிவைகாரியத்தா லுள்ளனவேகாரணத்தாலுளளனவிலலனவே, தரமிகுபேரருளொளியாற்சிவமயமேயெலலாநதாமெனவேயுணாவதுசனமாககநெறிபிடியே (க0)

பிரமமெனறுஞ்சிவமெனறும்பேசுகின்றநிலைதான பெருநிலையேயிந்நிலையிற்பேதமுணடோவெனவே, தரமறியவினவுகினறாயதோழியிதுகேணீசமரசசனமாககநிலைசாதியெனிலறிவாய, திறமுறவாயினுமெலலாமாகியலலாதாகுந் திருவருளாம்வெளிவிளஙகவிளஙகுதனிபபொருளாஞ், சிரமுறுமோாபொதுவுணமைசசிவமபிரமமுடியேதிகழ்மறையாகமமபுகலுநதிறனிதுகணடறியே. (கக)

இலங்குகினறபொதுவுணமையிருநதநிலைபுகலெனறியம்புகின்றாயமடவாயகேள்யானறியுநதரமோ, துலஙகுமதையுரைததிடவுஙகேட்டிடவுமபடுமோ சொலலளவோபொருளளவோதுனனுமறிவளவோ, விலஙகுகினறசததுவஙகளததனையுஙகடந்தமேனிலையெனறநதமெலாமவிளமபுகினறதனறி, வலஙகொளுமமமேனிலையினுணமையெதுவென்றால யவுனஞ்சாதிப்பதனறிவாயதிறப்பதிலலையே (கஉ)

வாய்திறவாமவுனமதேயாகுமெனிறறோழி மவுனசததிவெளியேழுமபாததபாததொழியும, தூயபராபரமதுவேயெனறாலஙகதுதானறாலஙகுநடுவெளிதனிலேகலந்து கரைவதுகாண, மேயநடுவெளியெனறாற்றற்பரமாமவெளியிலவிரவியிடுநதறபரமாம் வெளியெனறாலதுவும், ஆயபெருவெளிதனிலேயடங்குமிதுமட்டேயளப்பதொருவாறதனமேலளப்பகரிதரிதே. (கங)

கிளக்கினறமறையளவையாகமப்பேரளவைகிளநதிடுமெயச்சாதனமாமளவையறிவளவை விளக்குமிநதவளவைகளைககொணடுநெடுங்காலமேலவர்களளந்தளந்துமெலிகினறாரஙகே, அளக்கினறகருவியெலாநதேயநதிடககண்டாரேயனறியொருவாறேனுமளவுகண்டாரிலையே, துளககமுறுசிற்றறிவாலொருவாறெனறுரைத்தேன் சொன்னவெளிவரையேனுநதுணிநதளககப்படுமோ. (கச)

திருச்சிற்றம்பலம்.

# அருட்பெருஞ்சோதி.

கலித்துறை.

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்சோதியெனனாருயிரிறகலநதாடுகின்ற
வருடபெருஞசோதியெனனபிறகலநதறிவாயவிளஙகு
மருட்பெருஞ்சோதிதெளளாரமுதாகியுளளணணிநிறகும
அருடபெருஞசோதிநின்னாணையொனறேயெனனுளளாஙகினறதே. (க)

ஆர்கினறதெள்ளமுதினசுவையெனனெனறறைவனந்தோ
சாரகினறசிறறமபலப்பெருஞசீரிசைசாறறுதொறும
சேர்கினறநாவுடனுள்ளமுமாவியுநதிததிததலே
நோகினறதாலெனனருட்பெருஞசோதிநிறைநதுளததே. (உ)

உளததேபெருஙகளிபபுற்றடியேனமிகவுணணுகினறேன்
வளததேயருடபெருஞசோதியினாலொளிவாயநதெனது
குளததேநிறைநதணையுஙகடநதோஙகிககுலவுபரி
மளததேமிகுநதுவயஙகுமமுதமனமகிழநதே. (ந)

மனமகிழ்நதேனமனமாயையைநீககினன்மாநிலததே
சினமொடுஙகாமமுநதீரநதேனெலாமவலலசிததுமபெறறேன
இனமிகுஞசுததசனமாககபபெருநெறியெயதினேன
கனமிகுமனறிலருடபெருஞ்சோதியைககண்டுகொணடே. (ச)

கண்டேனருட்பெருஞ்சோதியைககணகளிறகணடுகளி
கொண்டேன்சிவானநதககூததாடிககொண்டிககுவலயததே
தொணடேதிருவமபலந்தனககாற்றிசசுகவமுதம
உண்டேனுயிர்தழைததோஙகுகின்றேனுளளுவப்புறவே (ரு)

உறவேயெனதினனுயிரேயெனனுள்ளததிலுற்றினிககும
நறவேயருட்பெருஞ்சோதிமன்றோஙகுநடததரசே
யிறவேனெனத்துணிவெயதிடசசெயதனையெனனையினி
மறவேலடிச்சிறியேனொருபோதுமறககினுமே. (சா)

மறப்பேனலேனுனனையோாகணமேனுமறககிலனறே
யிறப்பேனினிசசததியஞசததியஞ்சததியமிசைததேன
பிறப்பேதவிாததெனையாட்கொணடமுதம்பெரிதளித்த
சிறபபேயருடபெருஞசோதிமனறோஙகுஞசெழுஞ்சுடரே. (எ)

சுடரேயருட்பெருஞ்சோதியனேபெணசுகததைமிகக
விடரேயெனினுமவிடுவெனநதாயநினைவிட்டயலொன
றடரேனரைககணமுமபிரிநதாற்றலனேகணடா
யிடரேதவிாததெனககெலலாநலமுமிஙகீநதவனே. (அ)

தவநேயமுஞ்சுத்தசன்மார்க்கநேயமுஞ்சத்தியமாஞ்
சிவநேயமுந்தந்தென்னுள்ளந்தெளியத்தெளித்தனையே
நவநேயமன்றிலருட்பெருஞ்சோதியைநாடிநின்ற
இவனேயவனெனக்கொளவாருன்னன்பரிருநிலத்தே. (௯)

நிலத்தேபுழுத்தபுழுவுமலேன்புன்னிலத்திழிந்த
மலத்தேபுழுத்தபுழுவனையேனையவ்வான்றுதிக்குங்
குலத்தேதலைமைகொடுத்தெனதுளத்திற்குலவுகின்றாய்
தலத்தேயருட்பெருஞ்சோதியப்பாவென்றயாநிதியே. (௧௦)

நிதியேயெனுள்ளநிறைவேபொதுவினிறைந்தசிவ
பதியேயருட்பெருஞ்சோதியனேயம்பலம்விளங்குங்
கதியேயெனகண்ணுங்கருத்துங்களிக்கக்கலந்துகொண்ட
மதியேயமுதமழையேநின்பேரருள்வாழியவே. (௧௧)

வாழியென்றேயெனைமாலயனாதியர்வந்தருட்பே
றாழியென்றேதுதித்தேத்தப்புரிந்தனையற்புதநீ
டூழியன்றேயென்றுஞ்சாகாவரமுமுவந்தளித்தாய்
வாழிமன்றோங்குமருட்பெருஞ்சோதிநின்மன்னருளே. (௧௨)

மன்னியநின்னருளாரமுதந்தந்துவாழ்வித்துநா
னுன்னியவுன்னியவெல்லாமுதவியென்னுள்ளத்திலே
தன்னியலாகிக்கலந்தித்தருணந்தயவுசெய்தாய்
துன்னியநின்னருள்வாழ்கவருட்பெருஞ்சோதியனே. (௧௩)

திருச்சிற்றம்பலம்.

---

# அடிமைப்பேறு.

## நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

அருளளித்தானன்பளித்தானம்பலத்தானுண்மைப்
பொருளளித்தானென்னுட்புணர்ந்தான் - தெருளளித்தா
னெச்சோதனையுமியற்றாமலாண்டுகொண்டான்
அச்சோவெனக்கவனைப்போலார். (௧)

ஆரணமுமாகமமுமாங்காங்குணர்த்துகின்ற
காரணமுங்காரியமுங்காட்டுவித்தான் - பூரணன்சிற்
றம்பலத்தனென்னுடையப்பனெலாம்வல்ல
செம்பலத்தையென்னுளத்தேசேர்த்து. (௨)

சோதஞானபதமெனசிததேதிருவருடகண
பாாததாலெனனெணணமெலாமபாலிததான - தீாததானென்
துனபமெலாநதூககமெலாஞசூழாதுநீககிவிட்டான
இன்பமெலாநதநதானிசைநது. (௩)

இசைநதானெனனுளளததிருநதானெனனையு
நசைநதானெனபாட்டைநயநதா - னசைநதாடு
மாயைமனமடககிவைததானருளெனுமென
றாயைமகிழமபலவனறான. (௪)

தானேயருளானான்றானேபொருளானான்
தானேயெலாமவலலதானான - றானேஞான
நானானெனனுடையநாயகனானான ஞான
வானானம்பலததெம்மான (௫)

மானமுதலாயுள்ளவழககெலலாநதீாததருளித
தானமுதலாயெனனுளமேசாநதமாநதான - றேன்முதலாத
திததிககுமபணடமெலாஞசோததாஙகெனசிநதைதனிற
றிததிககுமமபலததானறோநது. (௬)

தோநதேனதெளிநதேனசிவமேபொருளெனவுள்
ளோாநதேனருளமுதமுணகினறேன - சாாநதேனசிற
றம்பலததிலெலலாமவலலானையவனருளால்
எமபலததெலலாமவலலானேன். (௭)

ஆனேனவனாவனருளாலாஙகாஙகு
நானேகளிததுநடிககினறேன் - தானேயென்
றநதையெனபாலவைததயவைநினைககுநதோறுஞ
சிநதைவியககினறேன்றெரிநது. (௮)

தெரிநதேனருளாறசிவமொன்றேயெனறு
புரிநதேனசிவபலிககுபபூசை - விரிநதமனச
சேட்டையெலாந்தீாததுவிட்டேனசிததெலலாமவலலவரு
ளாட்டையெலாஙகைககொணடேனான. (௯)

நானசெயதநறறவநதான்யாதோநவிறறரிது
வானசெயததேவரெலாம்வநதேவல - தானசெயது
தமபலமென்றேமதிககததானவநதெனனுடகலநதான்
அமபலவன்றன்னருளினால. (௰)

திருச்சிற்றம்பலம்.

# உத்தரஞானசிதம்பரமான்மியம்.

### கலித்துறை.

### திருச்சிற்றம்பலம்

அருளோங்குகின்றதருட்பெருஞ்சோதியடைந்தென்றன்
மருளோங்குறுமற்றவிர்த்ததுநல்லவரமளித்தே
பொருளோங்கநானருட்பூமியில்வாழப்புரிந்ததென்றுந்
தெருளோங்கவோங்குவதுத்தரஞானசிதம்பரமே. (க)

இணையென்றுதான்றனக்கேற்றதுபோற்றுமெனக்குநல்ல
துணையென்றுவந்ததுசுத்தசன்மார்க்கத்திற்றோய்ந்தென்னை
யணையென்றணைத்துக்கொண்டைந்தொழிலீந்ததருளுலகிற்
றிணையந்துமாகியதுத்தரஞானசிதம்பரமே. (உ)

உலகமெலாந்தொழவுற்றதெனக்குண்மையொண்மைதந்தே
யிலகவெலாம்படைத்தாருயிர்காத்தருளென்றதென்றுங்
கலகமிலாச்சுத்தசன்மார்க்கச்சங்கங்கலந்துபார்த்
திலகமென்றுநின்றதுத்தரஞானசிதம்பரமே. (ங)

பவமேதவிர்ப்பதுசாகாவரமும்பயப்பதுநற்
றவமேபுரிந்தவர்க்கின்பந்தருவதுதானெனக்கே
யுவமேயமானதொளியோங்குகின்றதொளிருஞ்சுத்த
சிவமேநிறைகின்றதுத்தரஞானசிதம்பரமே. (ச)

ஒத்தாரையுமிழிந்தாரையுநோக்கண்டுவக்கவொரு
மித்தாரைவாழ்விப்பதேற்றூக்கமுதம்விளம்பியிடு
வித்தாரைக்காப்பதுசித்தாடுகின்றதுமேதினிமேற்
செத்தாரைமீட்கின்றதுத்தரஞானசிதம்பரமே. (ரு)

எத்தாலுமிக்கதெனக்கருளீந்ததெல்லாமுமவல்ல
சித்தாடல்செய்கின்றதெல்லாவுலகுஞ்செழிக்கவைத்த
தித்தாரணிக்கணியாயதுவானெழுற்கேற்றதெங்குஞ்
செத்தாலெழுப்புவதுத்தரஞானசிதம்பரமே. (சு)

குருநெறிக்கேயெனைக்கூட்டிக்கொடுத்ததுகூறரிதாம்
பெருநெறிக்கேசென்றபோக்குக்கிடைப்பதுபேயுலகக்
கருநெறிக்கேற்றவர்காணற்கரியதுகாட்டுகின்ற
திருநெறிக்கேற்கின்றதுத்தரஞானசிதம்பரமே. (எ)

கொல்லாநெறியதுகோடாநிலையதுகோபமிலா
சொல்லாலுவந்ததுசுத்தசன்மார்க்கந்துணிந்ததுல
கெல்லாமளிப்பதிறந்தாலெழுப்புவதேதமொன்றுஞ்
செல்லாவளத்தினதுத்தரஞானசிதம்பரமே. (அ)

காணாக்காட்சிகள் காட்டுவிக்கின்றதுகாலமெல்லாம்
வீணாள்கழிப்பவர்க்கெய்தரிதானதுவெஞ்சினத்தார்
கோணாநெஞ்சிற்குலாவிநிற்கின்றதுகூடிநின்று
சேணாடர்வாழ்த்துவதுத்தரஞானசிதம்பரமே. (௯)

சொல்வந்தவேதமுடிமுடிமீதிற்றுலங்குவது
கல்வந்தநெஞ்சினர்காணற்கரியதுகாமமிலார்
நல்வந்தனைசெயநண்ணியபேறதுநன்றெனக்கே
செல்வந்தந்தாட்கொண்டதுத்தரஞானசிதம்பரமே. (௧௦)

ஏகாந்தமாகிவெளியாயிருந்ததிங்கென்னைமுன்னே
மோகாந்தகாரத்தின்மீட்டதென்னெஞ்சமுயங்கிரும்பின்
மாகாந்தமானதுவல்வினைதீர்த்தெனைவாழ்வித்தென்றன்
தேகாந்தநீக்கியதுத்தரஞானசிதம்பரமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# திருவருட்பேறு.

## நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

சீர்விளங்குசுத்தத்திருமேனிதானறிந்தப்
பாவிளங்கநான்படுத்தபாயலிலே - தாவிளங்க
வந்தாயெனைத்தூக்கிமற்றொருசாலைவைத்தனையே
எந்தாய்நின்னுள்ளமறியேன். (௧)

பயந்தோடொருபாற்படுத்திருந்தேனென்பால்
நயந்தோடணைந்தேநகைத்து - வயத்தாலே
தூக்கியெடுத்தெனைமேற்சூழலிலேவைத்தனைநான்
பாக்கியவானானேனப்பதிந்து. (௨)

என்னேநின்றண்ணருளையென்னென்பேனிவ்வுலகின்
முன்னேதவந்தானமுயன்றேனோ - கொன்னே
படுத்தயர்ந்தேனைப்படுத்தபாயலருகுற்றென்னை
யெடுத்தொருமேலேற்றிவைத்தாயே. (௩)

சிந்தாகுலத்தொடுநான்றெய்வமேயென்றுநினைந்
தந்தோபடுத்துள்ளயாவுற்றே - னெந்தா
யெடுத்தாளெனநினையாதேகிடந்தேனென்னை
யெடுத்தாயத்தயவைவியவேன். (௪)

உன்னுகின்றதோறுமெனதுள்ளமுருகுகின்ற
தென்னுரைப்பேனென்னுரைப்பேனெந்தாயே - துன்னிநின்று
தூக்கந்தவிர்த்தென்னைத்தூக்கியெடுத்தன்பொடுமே
லாக்கமுறவைத்தாயது. (௫)

நானபடுத்தபாயருகினண்ணியெனைத்தூக்கி
ஊன்படுத்ததேகமொளிவிளங்கத் - தான்பதித்த
மேவிடத்தேவைத்தனைநானவெம்மையெலாந்தீர்ந்தேனின்
காலிடத்தேவாழ்கின்றேனகாண (௬)

புண்ணியந்தான்யாதுபுரிந்தேனோநானறியேன்
பண்ணியதுன்போட்டபடுத்திருந்தேன் - நண்ணியெனைத்
தூக்கியெடுத்தெனதுதுன்பமெலாந்தீர்த்தருளி
யாக்கியிட்டென்றேயருட்டந்தாய். (௭)

அஞ்சியஞ்சியூணுமருந்தாமலாங்கொருசார்
பஞ்சினுழந்தேபடுத்தயர்ந்தேன் - விஞ்சியங்கு
வந்தாயெனைத்தூக்கிமற்றொருசாரவைத்தமுது
தந்தாயென்னான்செய்தவம். (௮)

நானேதவம்புரிந்தேன்நானேகளிப்படைந்தேன்
தேனேயெனுமமுதந்தேக்கவுண்டேன - ஊனே
ஒளிவிளங்கப்பெற்றேனுடையானெனைத்தான
அளிவிளங்கத்தூக்கியணைத்தான. (௯)

வாழியெனைத்தூக்கிவைத்தகரதலங்கள்
வாழியெலாம்வல்லமணிமன்றம் - வாழிநடம்
வாழியருட்சோதிவாழிநடராஜா
வாழிசிவஞானவழி. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சொடுகூறல்.

நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

அன்னையப்பனமாவினத்தாராய்க்குழலாராசையினால்
தென்னையொப்பநீண்டசிறுநெஞ்சே - யென்னையென்னை
யாவகைசோவாயிலெயிற்றில்லையென்கிலையே
யாவகையைந்தாயபபதமாறாநது. (௧)

நீர்க்கிசைந்தநாமநிலைமூன்றுகொண்டபெயா
போக்கிசைந்தெனறறியாப்புனனெஞ்சே - நீக்கிசைந்தே
ஒன்றொன்றொன்றொன்றொன்றொன்றொன்றுதில்லைமணி
மன்றொன்றுவானைமகிழ்ந்து. (௨)

கைதலைமேலிட்டலையிற்கண்ணுடையான்கான்மலர்க்குக்
கைதலைமேலிட்டலையிற்கண்ணீர்கொண் - டெய்தலைமேல்
காணாயேலுண்மைகதிநிலையைக்கைக்கனியாக
காணாயேநெஞ்சேகளித்து. (௩)

ஈற்றிலொன்றாயமறைமுடியல்வருக்கமாகியபே
ரேற்பறவையிருமைக்கும் - சாற்றுவமை
யன்றேதில்லைமகட்காவம்பலவர்தம்பாலே
சென்றேயெனக்குநின்கரும்.  (சு)

கல்லோமணலோகனியோகரும்போவென
றெல்லோருமிங்கேயிருக்கின்றோம் - சொல்லோம
அதுவாயதன்பொருளாயப்பாலாயாரக்கும
பொதுவாய்நடிக்கின்றபோது.  (ரு)

அதுபாரதிலேயடைந்துவதிமற்றுங
கதிலேழையைப்புரமெய்யன்பா - லதிலே
நலமேவதிலேநின்னூடாதிருவம்
பலமேவக்காட்டுமெபரிசு  (சு)

நம்பாரவதிபாகனம்புரத்தினின்றுவந்தோன்
அம்பாரதமெனகிழக்கேயம்பலத்தான - வெம்பாது
பாரத்தாலளிப்பானறெரியுஞ்சிதம்பரநீ
பாரத்தாயிப்பாட்டினபரிசு.  (எ)

நடிப்பாரவதிதில்லைநற்கோபுரத்தின
அடிப்பாரவையும்வடக்கேயார்ந்து - கொடிப்பாய
நின்றுவளாமலைபோனெஞ்சேபார்த்தாறமெறியும
இன்றெவிடதென்னிலிப்பாட்டில்.  (அ)

பூமிபொருந்துபுரத்தேநமதுசிவ
காமிதனைவேட்டுக்கலந்தமாந்தான் - நேமி
அளித்தானமால்கணமலருக்காணந்தக்கூத்திற
களித்தானவன்றாளகளித்து.  (கூ)

திருச்சிற்றம்பலம்.

## கைம்மாறின்மை.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கடையேன்புரிந்தகுற்றமெலாங்கருதாதெனனுட்கலந்துகொண்டு
தடையேமுழுதுந்தவிர்த்தருளித்தனித்தஞானவமுதளித்துப்
புடையேயிருத்தியருட்சித்திப்பூவைதனையும்புணர்த்தியருட்
கொடையேகொடுத்தாயநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே.  (க)

கடுத்தமனத்தையடக்கியொருகணமுமிருக்கமாட்டாதே
படுத்தசிறியேன்குற்றமெலாம்பொறுத்தெனனறிவைப்பலநாளுந்
தடுத்ததடையைத்தவிர்த்தென்றுஞ்சாகாநலஞ்செய்தனியமுதங
கொடுத்தகுருவேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே.  (உ)

மருவுமுலகமதித்திடவேமரணபயந்தீர்த்தெழிலுறுநல்
லுருவும்பொருளொன்றெனத்தெளிந்தவுணர்வுமென்றுமுலவாத
திருவும்பரமசித்தியெனுஞ்சிறப்புமியற்கைச்சிவமெனுமோர்
குருவுங்கொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௩)

சேட்டித்துலகச்சிறுநடையிற்பல்காற்புகுந்துதிரிந்துமயல
நீட்டித்தலைந்தமனத்தையொருநிமிடத்தடக்கிச்சன்மார்க்க
கோட்டிக்கியன்றகுணங்களெல்லாங்கூட்டப்புரிந்துமெய்ந்நிலையைக்
காட்டிக்கொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௪)

தோலைக்கருதித்தினந்தோறுஞ்சுழன்றுசுழன்றுமயங்குமந்த
வேலைக்கிசைந்தமனத்தைமுற்றுமடக்கிஞானமெய்ந்நெறியிற்
கோலத்தொலைத்துக்கண்விளக்கங்கொடுத்துமேலும்வேகாத
காலைக்கொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௫)

பட்டிப்பகட்டினாற்றிரிந்துபணமேநிலமேபாவையரே
தெட்டிற் * கடுத்தபொய்யொழுக்கஞ்செயலேயென்றுதிரிந்துலகி
லொட்டிக்குதித்துச்சிறுவிளையாட்டுஞற்றியோடுமனக்குரங்கைக்
கட்டிக்கொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௬)

மதியைக்கெடுத்துமரணமெனுமழக்கைப்பெருக்கியிடாப்படுமோர்
விதியைக்குறித்தசமயநெறிமேவாதெனைத்தடுத்தருளாம்
பதியைக்கருதிச்சன்மார்க்கப்பயன்பெற்றிடவென்னுட்கலந்தோர்
கதியைக்கொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௭)

தருணநிதியேயென்னொருமைத்தாயேயென்னைத்தடுத்தாண்டு
வருணநிறைவிற்சன்மார்க்கமருவப்புரிந்தவாழ்வேநல்
லருணவொளியேயெனச்சிறியேனழைத்தேனழைக்குமுனம்வந்தே
கருணைகொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௮)

பொற்பங்கயத்தின்புதுநறவுஞ்சுத்தசலமும்புகல்கின்ற
வெற்பந்தராமாமதிமதுவும்விளங்கும்பசுவின்றீம்பாலும்
நற்பஞ்சகமுமொன்றாக்கக்கலந்துமரணந்தனைத்தீர்க்குங்
கற்பங்கொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௯)

புலையைத்தவிர்த்தென்குற்றமெலாம்பொறுத்துஞானபூரணமா
நிலையைத்தெரித்துச்சன்மார்க்கநீதிப்பொதுவினிருத்தமிடு
மலையைக்காட்டியதனடியில்வயங்கவிருத்திச்சாகாத
கலையைக்கொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௧௦)

அருணாடறியாமனக்குரங்கையடக்கத்தெரியாதனுடுசோர்ந்
திருணாடனைத்துஞ்சுழன்றுசுழன்றிளைத்துக்களைத்தேனெனக்கந்தோ
தெருணாடுலகின்மரணமுறாத்திறந்தந்தழியாத்திருவளித்த
கருணாநிதியேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௧௧)

* தெட்டு - வஞ்சகம்.

மண்ணுண்மயங்கிச்சுழன்றேன்மனத்தையடக்கத்தெரியாதே
பெண்ணுண்மயலைப்பெருங்கடல்போற்பெருக்கித்திரிந்தேன்பேயேனை
விண்ணுண்மணிபோன்றருட்சோதிவிளைவித்தாண்டாயென்னுடைய
கண்ணுண்மணியேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௧௨)

புலந்தமனத்தையடக்கியொருபோதுநினைக்கமாட்டாதே
யலந்தசிறியேன்பிழைபொறுத்தேயருளாரமுதமளித்தியங்கே
யுலந்தவுடம்பையழியாதவுடம்பாப்புரிந்தென்னுயிரினுள்ளே
கலந்தபதியேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௧௩)

தனியேகிடந்துமனங்கலங்கித்தளர்ந்துதளர்ந்துசகத்தினிடை
யினியேதுறுமோவென்செய்வேனெந்தாயெனதுபிழைகுறித்து
முனியேலெனநான்மொழிவதற்குமுன்னேகருணையமுதளித்த
கனியேகரும்பேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௧௪)

பெண்ணேபொருளேயெனச்சுழன்றபேதைமனத்தாற்பெரிதுழன்று
புண்ணேயெனுமிப்புலையுடம்பிற்புகுந்துதிரிந்தபுலையேற்குத்
தண்ணாமதியினமுதளித்துச்சாகாவரந்தந்தாட்கொண்ட
கண்ணேமணியேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே (௧௫)

பொருத்திக்கொடுத்தபுலையுடம்பிற்புகுந்தேன்புணைத்தற்கிணங்காது
வெருத்திறற்றிரிந்தேன்செய்பிழையையெண்ணாதந்தோவென்முற்றும்
திருத்திப்புனிதவமுதளித்துச்சித்திநிலைமேற்சேர்வித்தென்
கருத்திற்கலந்தோய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௧௬)

பெண்ணுக்கிசைந்தேபலமுகத்திற்பேய்போற்சுழன்றபேதைமனத்
தெண்ணுக்கிசைந்துதுயர்க்கடலாழ்ந்திருந்தேன்றன்னையெடுத்தருளி
விண்ணுக்கிசைந்தகதிர்போலெனவிவேகத்திசைந்துமேலுமென்றன்
கண்ணுக்கிசைந்தோய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௧௭)

மாட்சியளிக்குஞ்சன்மார்க்கமரபின்மனத்தைச்செலுத்துதற்கோர்
சூழ்ச்சியறியாதுழன்றேனைச்சூழ்ச்சியறிவித்தருளரசி
னாட்சியடைவித்தருட்சோதி[illegible]ளித்தேயானந்தக்
காட்சிகொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௧௮)

பொய்யிற்கிடைத்தமனம்போனபோக்கிற்சுழன்றேபொய்யுலகில்
வெய்யிற்கிடைத்தபுழுப்போலவெதும்பிக்கிடந்தவெறியேற்கு
மெய்யிற்கிடைத்தேசித்தியெலாம்விளைவித்திடுமாமணியாயென்
கையிற்கிடைத்தோய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௧௯)

போதலொழியாமனக்குரங்கின்போக்கையடக்கத்தெரியாது
நோதல்புரிந்தசிறியேனுக்கிரங்கிக்கருணைநோக்களித்துச்
சாதலெனுமோர்சங்கடத்தைத்தவிர்த்தென்னுயிரிற்றான்கலந்த
காதலரசேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (௨௦)

திருச்சிற்றம்பலம்.

# பாமாலையேற்றல்.

## நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

நான்புனைந்தசொன்மாலைநன்மாலையென்றருளித்
தான்புனைந்தான்ஞானசபைத்தலைவன் - றேன்புனைந்த
சொல்லாள்சிவகாமசுந்தரியைத்தோள்புணர்ந்த
நல்லான்றனருட்கேநயந்து. (க)

சொல்லுகின்றவென்சிறுவாய்ச்சொன்மாலையத்தனையும்
வெல்லுகின்றதும்பையென்றேமேலணிந்தான் - வல்லிசிவ
காமசவுந்தரிக்குக்கண்ணனையான்ஞானசபைச்
சேமநடராஜன்றெரிந்து. (உ)

ஏதாகுமோவெனநானெண்ணியிசைத்தவெலாம்
வேதாகமமென்றேமேலணிந்தான் - பாதார
விந்தமெனதுசிரமேலமர்த்திமெய்யளித்த
வெந்தைநடராஜனிசைந்து. (ங)

இன்னுரையன்றென்றுலகமெல்லாமறிந்திருக்க
வென்னுரையும்பொன்னுரையென்றேயணிந்தான் - றன்னுரைக்கு
நேரொன்றுநீடுலகினின்போலுரைக்கவல்லா
ராரென்றம்பலவனுய்ந்து. (ச)

என்பாட்டுக்கெண்ணுதெண்ணியிசைத்தேனென்
றன்பாட்டைச்சத்தியமாத்தான்புனைந்தான் - முன்பாட்டுக்
காலையிலேவந்துகருணையளித்தேதருமச்
சாலையிலேவாவென்றான்றான். (ரு)

என்னேயதிசயமீதிவ்வுலகீரென்னுரையைப்
பொன்னேயெனமேற்புனைந்துகொண்டான் - றன்னேரில்
நல்லாரணங்களெலாம்நாணியவேயெல்லாஞ்செய
வல்லான்றிருக்கருணைவாய்ப்பு. (சா)

முன்பினறியாதுமொழிந்தமொழிமாலையெலா
மன்பினிசைந்தந்தோவணிந்துகொண்டா - னென்பருவம்
பாராதுவந்தென்பருவரலெல்லாந்தவிர்த்துத்
தாராவரங்களெலாந்தந்து. (எ)

பொன்னொப்பதாமொருநீபோற்றியசொன்மாலையென்றே
யென்னப்பனென்சொல்லிசைந்தணிந்தான் - றன்னொப்பில்
வல்லானிசைந்ததுவேமாமாலையற்புதமீ
தெல்லாந்திருவருட்சீரே. (அ)

பின்முன் னறியேனைப் பெற்றறியச் சொன்மாலை யெல்லாந்
தன்முன்னாக் கேற்றென்னைத் தாளுறுத்தான் - என்முன்
னிருந்தா னென்னுள்ளே யிருக்கின்றா னைஞான
மருந்தான் சிற்றம்பலத்தான் வாய்ந்து. (௯)

நீயே யென்பிள்ளை யிங்குநின் பாட்டிற் குற்றமொன்று
மாயே மென்றந்தோ வணிந்துகொண்டான் - நாயேன்செய்
புண்ணியமிவ் வானின் புவியின் மிகப்பெரிதா
லெண்ணியவெல் லாம்புரிகின் றேன். (௧௦)

எண்ணுகின்றே னெண்ணுந்தொ றென்னெண்ண மெல்லாந் தித்திக்க
நண்ணுகின்ற தென்புகலேன் ஞாலத்தீர் - உண்ணுகின்ற
வுள்ளமுந் தோநானுற் றுறுதவத்தாற் கிடைத்த
தெள்ளமுதோ வம்பலவன் சீர். (௧௧)

ஆக்கியளித் தன்முதலாந் தொழிலோ ரைந்தினையுந்
தேக்கிமகிழ் வொடுநீ செயென்றான் - தூக்கி
யெடுத்தா னணைத்தா னிறவாத தேகங்
கொடுத்தான் சிற்றம்பலத்தெங் கோ. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்கொடை.

கொச்சகக் கலிப்பா.

திருச்சிற்றம்பலம்

சிருட்டி முதலைந் தொழிலுஞ் செயவெனக் கருள்புரிந்தாய்
பொருட்டிகழ்நின் பெருங்கருணைப் புனிதவமுது வந்தளித்தாய்
தெருட்டிகழ்நின் னடியவர்தந் திருச்சபையின் வீற்றிருத்தி
தெருட்டியென்னை வளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய் (௧)

படைத்தன் முதலைந் தொழில்செய் பணியெனக்கே பணித்திட்டா
யுடைத்தனிப்பே ரருட்சோதி யோங்கியதெள் ளமுதளித்தாய்
கொடைத்தனிப்போ கங்கொடுத்தாய் நின்னடியார் குழுநடுவே
யிடத்தமர்த்தி வளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய் (௨)

அயன்முதலோ ரைவர்செயுந் தொழிலெனக்கே யளித்திட்டா
யியாவுறுபே ரருட்சோதித் திருவமுத முவந்தளித்தா
யமையாவறுபின் னடியவர்தஞ் சபைநடுவே வைத்தருளிச்
செயமுறவே வளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய். (௩)

ஐவர்செயுந் தொழிலெனக்கே யளித்தாய்நின் னருளமுதந்
தைவரச்செய் துண்ணுவித்தாய் சங்கணமென் கரத்தணிந்தாய்
சைவருறு நின்னடியார் சபைநடுவே வைத்தருளித்
தெய்வமென வளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய். (௪)

முத்தொழிலோ ரைந்தொழிலு முன்னிமகிழ்ந் தெனக்களித்தாய்
புத்தமுத முண்ணுவித்தோர் பொன்னணியென் கரத்தணிந்தாய்
சித்தரொடு நின்னடியார் திருச்சபையி னடுவிருத்திச்
சித்துருவி னவளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய். (௫)

ஐந்தொழிலுஞ் செயப்பணித்தா யருளமுத முணவளித்தாய்
வெந்தொழில்தீர்ந் தோங்கியநின் மெய்யடியார் சபைநடுவே
யெந்தையுனைப் பாடிமகிழ்ந் திடப்புறவே வைத்தருளிச்
செந்தமிழின் வளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய் (௬)

நான்முகனா ரணன்முதலா மைவர்தொழி னயந்தளித்தாய்
மேன்மைபெறு மருட்சோதித் திருவமுது மவியந்தளித்தாய்
பான்மையுறு நின்னடியார் சபைநடுவே பதித்தருளித்
தேனமெய்யொடு வளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய் (௭)

நாயெனவே திரிந்தேனை வலிந்தழைத்து நான்முகன்மால்
தூயபெருந் தேவர்செயுந் தொழில்புரியென் றமுதளித்தாய்
நாயகநின் னடியார்சபை நடுவிருக்க வைத்தருளிச்
சேயெனவே வளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய். (௮)

புல்வழங்கு புழுவதனிற் சிறியேனைப் புணர்ந்தருளிச்
சொல்வழங்கு தொழிலைந்துந் துணிந்துகொடுத் தமுதளித்தாய்
கல்விபெறு நின்னடியார் கழகநடு வைத்தென்னைச்
செல்வமொடு வளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய். (௯)

தெருமனைதோ றலைந்தேனை யலையாமே சேர்த்தருளி
யருளொளியா லைந்தொழிலுஞ் செயப்பணித்தே யமுதளித்து
மருவியநின் மெய்யடியார் சபைநடுவே வைத்தழியாத்
திருவளித்து வளர்க்கின்றாய் சிற்சபையி னடிக்கின்றாய். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## விண்ணப்பம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஐவகைத் தொழிலுமென் பாலளித்தனை யதுகொண் டிந்நாள்
செய்வகை தெரிவித் தெனைச் சேர்ந்தொன்றா யிருத்தல்வேண்டும்
பொய்வகை யறியேன் வேறு புகலிலேன் பொறுவே நின்று
மெய்வகை யுரைத்தே னிந்த விண்ணப்பங் காண்க நீயே. (௧)

திருச்சிற்றம்பலம்.

# வேண்டுகோள்.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

துனிநாளனைத்துந்தொலைத்துவிட்டேன்றூக்கந்தவிர்த்தேன்சுகம்பலிக்குங்
கனிநாளிதுவேயென்றறிந்தேன்கருத்துமலர்ந்தேன்களிப்புற்றேன்
தனிநாயகனேகனகசபைத்தலைவாஞானசபாபதியே
இனிநானிறையுங்கலக்கமுறேனிளைக்கமாட்டேனெனக்கருளே (௧)

அருளும்பொருளும்யான்பெறவேயடுத்ததருணமிதுவென்றே
தெருளும்படிநின்னருளுணர்த்தத்தெரிந்தேன்றுன்பத்திகைப்பொழிந்தேன்
மருளுமனந்தானென்னுடையவசத்தேநின்றுவயங்கியதா
லிருளுந்தொலைந்ததினிச்சிறிதுமிளைக்கமாட்டேனெனக்கருளே. (௨)

அருளேயுணர்த்தவறிந்துகொண்டேனடுத்ததருணமிதுவென்றே
இருளேதொலைந்ததிடரனைத்துமென்னைவிட்டகன்றேயொழிந்தனவால்
தெருளேசிற்றம்பலத்தாடுஞ்சிவமேயெல்லாஞ்செயவல்ல
பொருளேயினிநான்வீணேபோதுபோக்கமாட்டேன்கண்டாயே. (௩)

கண்டேகளிக்கும்பின்பாட்டுக்காலையிதுவென்றருளுணர்த்தக்
கொண்டேயறிந்துகொண்டேனற்குறிகள்பலவுங்கூடுகின்ற
தொண்டேபுரிவார்க்கருளுமருட்சோதிக்கருணைப்பெருமானே
உண்டேனமுதமுண்கின்றேனுண்பேன்றுன்பையொழிந்தேனே. (௪)

ஒழித்தேனவலமச்சமெலாமோட்டத்துரந்தேனுறுகணெலாங்
கழித்தேன்மரணக்களைப்பற்றேன்களித்தேன்பிறவிக்கடல்கடந்தேன்
பழித்தேன்சிற்றம்பலமென்னாப்பாட்டைமறந்தேன்பரம்பரத்தே
விழித்தேன்கருத்தின்படியெல்லாம்விளையாடுதற்குவிரைந்தேனே. (௫)

விரைந்துவிரைந்துபடிகடந்தேன்மேற்பாலமுதமயிந்துண்டேன்
கரைந்துகரைந்துமனமுருகக்கண்ணீர்பெருக்கக்கருத்தலர்ந்தே
வரைந்துஞானமணம்பொங்கமணிமன்றரசைக்கண்டுகொண்டேன்
திரைந்துநெகிழ்ந்ததோலுடம்புஞ்செம்பொன்னுடம்பாய்த்திகழ்ந்தேனே. (௬)

தேனேகன்னற்செழும்பாகேயென்னமிகவுந்தித்தித்தென்
றானேபுகுந்தென்னுளத்திலமர்ந்துயிரிற்கலந்தவொருபொருளை
வானேநிறைந்தபெருங்கருணைவாழ்வையணிமன்றுடையானை
நானேபாடிக்களிக்கின்றேன்நாட்டார்வாழ்த்தநானிலத்தே. (௭)

நிலத்தேயடைந்தவிடரனைத்துநிமிடத்தொழித்தேநிலைபெற்றேன்
வலத்தேயழியாவரம்பெற்றேன்மணிமன்றேத்துமவாழ்வடைந்தேன்
குலத்தேசமயக்குழியிடத்தேவிழுந்திவ்வுலகங்குமையாதே
நலத்தேசுத்தசன்மார்க்கநாட்டாநின்றேனாட்டகத்தே. (௮)

அகத்தேகறுத்துப்புறத்துவெளுத்திருந்தவுலகரனைவரையுஞ்
சகத்தேதிருத்திச்சன்மார்க்கச்சங்கத்தடைவித்திடவவரும்
இகத்தேபரத்தைப்பெற்றுமகிழ்ந்திடுதற்கென்றேயெனையிந்த
யுகத்தேயிறைவன்வருவிக்கவுற்றேனருளைப்பெற்றேனே. (௯)

பெற்றேனென்றுமிறவாமைபேதந்தவிர்த்தேயிறைவனெனை
யுற்றேகலந்தானவனேயுற்றேகலந்தேனொன்றானேம்
எற்றேயடியேன்செய்ததவம்யாரேபுரிந்தாரின்னமுதந்
துற்றேயுலகீர்நீவிரெலாம்வாழ்கவாழ்கதுணிவுற்றே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

# அநுபவசித்தி.

கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

அப்பாவெனக்கெய்ப்பில்வைப்பாவிருக்கின்றவாரமுதே
யிப்பாரிலென்றனைநீயேவருவித்திசைவுடனே
தப்பாததந்திரமந்திரமியாவையுந்தந்துலகில்
வெப்பானதுதவிர்த்தேதொழில்செய்யவிதித்தனையே. (௧)

விதித்தனையென்னைநின்றன்மகனாகவிதித்துளத்தே
பதித்தனையென்னுடம்பிற்றனிச்சிற்றம்பலநடமு
முதித்தொளிர்பொன்னம்பலநடமுமொருங்கேயெனக்கே
சதித்தழியாமையுமின்பமுநன்கைவரக்காட்டினையே. (௨)

காட்டினைஞானவமுதளித்தாய்நற்கனகசபை
யாட்டினையென்பக்கமாக்கினைமெய்ப்பொருளன்றுவந்து
நீட்டினையென்றுமழியாவரந்தந்துநின்சபையிற்
கூட்டினைநான்முன்செய்தவமியாததுகூறுகவே. (௩)

கூறுகந்தாய்சிவகாமக்கொடியைக்கொடியில்வெள்ளை
யேறுகந்தாயென்னையீன்றுகந்தாயமெய்யிலங்குதிரு
நீறுகந்தாயுலகெல்லாந்தழைக்கநிமிர்சடைமே
லாறுகந்தாயமன்றிலாட்டுகந்தாயென்னையாண்டவனே. (௪)

ஆண்டவனேதிருவம்பலத்தேயருளாலியற்றுந்
தாண்டவனேயென்னைத்தந்தவனேமுற்றுந்தந்தவனே
நீண்டவனேயுயிர்க்கெல்லாம்பொதுவினினின்றவனே
வேண்டவனேவரங்கொடுத்தாட்கொண்டமேலவனே. (௫)

மேலவனேதிருவம்பலத்தாடல்விளக்குமலாக்
காலவனேசனகையவனேநுதற்கண்ணவனே
மாலவனேத்துஞ்சிவகாமசுந்தரவல்லியையோர்
பாலவனேயெனைப்பாலனாக்கியபண்பினனே. (௬)

வாட்டமெல்லாந்தவிர்ந்தேனருட்பேரொளிவாய்க்கப்பெற்றேன்
கூட்டமெல்லாம்புகழம்பலவாணரைக்கூடப்பெற்றேன்
தேட்டமெல்லாம்வல்லசித்திபெற்றேனிச்செகத்தலத்தே
யாட்டமெல்லாம்விளையாடுகின்றேனெனக்கார்சரியே. (எ)

நான்செய்தபுண்ணியம்யார்செய்தனரிந்தநானிலத்தே
வான்செய்ததேவருங்காணாதகாட்சிமகிழ்ந்துகண்டே
னூன்செய்தமெய்யுமுயிருமுணர்வுமொளிமயமாகக்
கோன்செயவேபெற்றுக்கொண்டேனுண்டேனருட்கோனமுதே. (அ)

எனையான்மதித்துப்புகல்கின்றதன்றிஃதெந்தைபிரான்
றனையான்மதித்திங்குபெற்றநல்வாழ்வதுசாற்றுகின்றேன்
வினையானமெலிந்தமெலிவையெல்லாம்விரைந்தேதவிர்த்துத்
தனையானபுணர்ந்திடச்சாகாவரத்தையுந்தந்தனனே (கூ)

சிற்றம்பலத்தைத்தெரிந்துகொண்டேனெஞ்சிவனருளாற்
குற்றம்பலவுந்தவிர்ந்துநின்றேனெண்குணக்குன்றிலே
வெற்றம்பலஞ்செய்தவரெல்லாம்விரைந்துவிரைந்துவந்தே
நற்றம்பலந்தருவாயெனக்கின்றுரிந்தநானிலத்தே. (௧௦)

ஒன்றுகண்டேன்றிருவம்பலத்தேயொளியோங்குகின்ற
நன்றுகண்டேனுலகெல்லாந்தழைக்கநடம்புரிந்த
வின்றுகண்டேனென்றுஞ்சாகாவரத்தையெனக்கருள
மன்றுகண்டாங்கிந்தவாழ்வுளதென்றுமகிழ்ந்தனனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

# இன்பத்திறன்.

## எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உலகுபுகழ்திருவமுதந்திருச்சிற்றம்பலத்தே யுடையவரின்றுதவினர்நானுண்டுகுறைதீர்ந்தே, னிலகுசிவபோகவடிவாகிமகிழ்கின்றே னிளைப்பறியேன் றவிப்பறியேனிடர்செயப்பசியறியேன், விலகலிலாத்திருவனையீர்நீவிரெலாம்பொசித்தே விரைந்துவம்மினம்பலத்தேவிளங்குதிருக்கூத்தி, னலகறியாத்திறம்பாடியாடுதுநாமிதுவே யருள் டையுநெறியெனவேதாகமமார்ப்பனவே. (௧)

மாதவத்தானன்பெற்றவானமுதேயெனதுவாழ்வேயென்கண்ணமர்ந்தமணியே யெனமகிழ்வே, போதவத்தாற்கழித்தேனைவலிந்துகலந்தாண்டபொன்னேபொன்னம்பலத்தேபுனிதநடத்தரசே, தீதவத்தைப்பிறப்பிதுவேசிவமாகும்பிறப்பாய்ச்செயவித்தென்னவத்தையெலாந்தீர்த்தபெரும்பொருளே, பூதலத்தேயடிச்சிறியேனின்றுதிருவடிக்கேபுகழ்மாலைசூட்டுகின்றேனப்புனைந்துகலந்தருளே. (௨)

அளந்திடுவேதாகமத்தினடியுநடுமுடியுமப்புறமுமப்பாலுமதன்மேலும்விளங்கி, வளர்ந்திடுசிற்றம்பலத்தேவயங்கியபேரொளியே மாற்றறியாப்பொன்னேயென்மன்னே கண்மணியே, தளர்ந்தவெனையக்கணத்தேதளர்வொழித்தானந்தந் தந்தபெருந்தகையேயென்றனித்ததனித்துணைவா, உளந்தருசம்மதமானபணியிட்டாயெனக்கேயுன்பணியேபணியல்லாலென்பணிவேறிலையே. (௩)

நாடுகலந்தாள்கின்றோரெல்லாரும்வியப்பநண்ணியெனைமாலையிட்டநாயகனேநாட்டில், ஈடுகரைந்திடற்கரிதாந்திருச்சிற்றம்பலத்தே யினநடம்புரிகின்றவிறையவனேயெனைநீ, பாடுகவென்றேடுகலந்தாடுகவென்றெனக்கேபணியிட்டாய்நானசெய் பெரும்பாக்கியமென்றுவந்தேன, கோடுதவருதுணைநானபாடுதற்கிங்கேற்ற குணப் பொருளுமிலக்கியமுங்கொடுத்துமகிழ்ந்தருளே. (௪)

நண்புடையாயென்னுடையநாயகனேயெனது நல்லுறவேசிற்சபையினடம்புரியுந்தலைவா, எண்புடையாமறைமுடிகளுமெட்டாநின் புகழையாதறிவேனபாடுகவென றெனக்கேவலிட்டாய, பண்புடைநின்மெய்யனபாபாடியபேரன்பிற பழுத்தபழம்பாட்டிலொருபாட்டுமறியேனே, தண்புடைநன்மொழித்திரளுஞ்சுவைப்பொருளுமவைகசேர்க்கவியலிலக்கியமுந்தந்தருள்வாயெனக்கே. (௫)

பணிந்தடங்குமனத்தவர்பாற்பரிந்தமரும்பதியேபாடுகின்றோருள்ளகத்தேகூடுகின்றகுருவே, கணிந்தமறைபலகோடியாகமம்பல்கோடி கடவுணின்சருட்புகழைக்கணிப்பதறநதப்பலகால, துணிந்துதுணிந்தெழுந்தெழுந்துதொடாந்துதொடர்ந்தடிகள் சுமந்துசுமந்திளைத்திளைத்துச்சொலலியலலவென, றணிந்தமொழிமாறறிவலிதணிந்தவென்றலந்தோவடியேனின்புகழுரைக்கலாவதுவோவறிந்தே. (௬)

விதிப்பவர்கள்பலகோடிதுதிப்பவர்பலகோடி மேலவர்களொருகோடிவிரைந்துவிரைந்துனையே, மதிப்பவர்களாகியவாமதியாலேபலகால்மதித்துமதித்தவாமதிப் பண்மதியாகியலந்தே, துதிப்பதுவேநலமெனக்கொண்டிறைவரையேறச்சொற்பொருள்கள்காணாதேசுழல்கின்றாரென்றால், குதிப்பொழியாமனச்சிறியகுரங்குகொடுழல்கின்றேன்குறித்துரைப்பேனென்னவுளங்கூசுகின்றதரசே. (௭)

ஒளியாகியுள்ளொளியாயுள்ளொளிக்குள்ளொளியா யொளியொளியினொளியாயவ்வொளிகளுக்குமோரொளியாய, வெளியாகிவெளிவெளியாய வெளியிடைமேலவெளியாய்மேல்வெளிமேற்பெருவெளியாய்ப்பெருவெளிக்கோர்வெளியாய, அளியாகியதுவாகியதுவுமல்லாதாகியப்பாலாயப் பாலுமல்லதுவாயநிறைவாந, தளியாகியெலலாமாய்விளங்குகின்றஞானசபைத்தலைவாநின்னியலைச்சாற்றுவதெவ்வணமே. (௮)

வாக்கொழிந்துமனமொழிந்துமதியொழிந்துமதியினவாதனையுமொழிந்தறிவாயவயங்கிநின்றவிடத்தும், போக்கொழிந்தும்வரவொழிந்தும்பூரணமாயதுவும் போனபொழுதுள்ளபடிபுகலுவதெப்படியோ, நீக்கொழிந்தநிறைவேமெய்யநிலையேயெனனுடையநேயமேயானந்தநிருத்தமிடும்பதியே, ஏக்கொழிந்தாருளத்திருக்குமிறையேயென்குருவேயெல்லாமாயல்லதுமாயிலங்கியமெய்ப்பொருளே. (௯)

என்னியலேயானறியேனிவ்வுலகினியலோரெள்ளளவுந்தானறியேனெல்லாமுமுடையோய, நினனியலையறிவேனோவறிந்தவனேபோலநிகழ்த்துகின்றேன் பிள்ளையெனநிலைப்பெயரபெறறிருநதேன, தனனியலாநதனிஞானசபைததலைமைப்பதியேசததியனேநிததியனேதயாநிதியேயுலகம, பினனியனமானிடப்பிள்ளைபேச்சினுமோபறவைப்பிறப்பினுறுஙகிளிப்பிளளைப்பேசசுவககினறநுவே. (௧௦)

திருசசிறறமபலம்.

# சிவயோகநிலை.

## நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

மதிமண்டலத்தமுதம்வாயாரவுணடே
பதிமண்டலததரசுபண்ண - நிதிய
நவநேயமாககுநடராஜனேயெஞ்
சிவனேகதவைததிற. (௧)

இநதாரருளமுதமயானருநதல்வேண்டுமிஙகே
நந்தாமணிவிளககேஞானசபை - எநதாயே
கோவேயெனதுகுருவேயெனையாணட
தேவேகதவைததிற. (௨)

சாகாவருளமுதந்தானருநதிநானகளிகக
நாகாதிபாசூழ்நடராஜா - ஏகா
பவனேபரனேபராபரனேயெஙகள்
சிவனேகதவைததிற. (௩)

அருளோஙகுதண்ணமுதமன்பாலருநதி
மருணீஙகிநானகளிததுவாழப் - பொருளாந்
தவநேயாபோற்றுநதயாநிதியேயெஙகள
சிவனேகதவைததிற. (௪)

வானோககரிதெனவேமாமறைகள்சாற்றுகின்ற
ஞானோதயவமுதநானருநத - ஆனாத
திறப்பாவலாபோறறுஞ்சிறறம்பலவா
சிறபபாகதவைத்திற. (௫)

எல்லாமுமவல்லசிததெனறெல்லாமறைகளுஞ்சொல்
நல்லாரமுதமதுநானருநத - நல்லார்க்கு
நல்வாழ்வளிககுநடராஜாமனறேஙகு
செல்வாகதவைததிற. (௬)

ஏழ்நிலைக்குமேற்பாலிருக்கின்றதண்ணமுதம்
வாழ்நிலைக்குநானுண்டுமாண்புறவே - சேழ்நிலைக்க
ஆவாவெனவென்னையுவந்தாண்ட திருவம்பலமா
தேவாகதவைத்திற. (எ)

ஈனவுலகத்திடர்நீங்கியின்புறவே
ஞானவமுதமதுநானருந்த - ஞான
உருவேயுணர்வேயொளியேவெளியே
திருவேகதவைத்திற. (அ)

திரயோதசத்தேதிகழ்கின்றவென்றே
வரையோதுதண்ணமுதமவாய்ப்ப - உரையோது
வானேயெம்மானேயெம்மானேமணிமன்றிற
றேனேகதவைத்திற. (கூ)

சோதிமலைமேல்வீட்டிற்றூயதிருவமுதம்
மேதினிமேனுணவேண்டினேன் - ஞேதரிய
ஏகாவனேகாவெழிற்பொதுவிலவாழ்ஞான
தேகாகதவைத்திற. (க0)

திருச்சிற்றம்பலம்.

# திருவடிக்கண்ணி.

திருச்சிற்றம்பலம்.

மின்னிடையாள்காணவிளங்குமன்றாடுகின்ற
யெனனுடையாயுன்றனிணையடிதாரோவாதா. (க)

வன்னமுதேயின்பமலியமன்றிலாடுகின்ற
யென்னமுதேயுன்றனிணையடிதாரோவாதா. (உ)

நண்ணியமெய்யன்பர்க்கமன்றிலாடுகின்றாய
புண்ணியனேயுன்றன்பொன்னடிதாரோவாதா. (௩)

அன்பரின்பங்கொள்ளநடமம்பலத்தேயாடுகின்ற
யின்புறவாமுன்றனிணையடிதாரோவாதா. (௪)

நூலுணர்வாநுண்ணுணர்விலோக்கநடமாடுகின்றாய
மாலறியாவுன்றன்மலர்ப்பாதரோவாதா. (௫)

எள்ளலறவம்பலத்தேயின்பநடமாடுகின்றாய்
வள்ளலேயுன்றன்மலரடிதாரோவாதா. (௬)

சைவநிலைத்துத்தழைத்தோங்கவாடுகின்றாய்
தெய்வமணியேதிருவடிதாரோவாதா. (எ)

எல்லாருமின்புற்றிருக்கநடமாடுகின்றாய
வல்லாரினைவல்லாயமலர்ப்பாதநோவாதா. (௮)

அவமேகழிந்தின்பமன்பர்கொள்ளவாடுகின்றாய
சிவமேநின்றதுதிருவடிதாணோவாதா. (௯)

தற்பரமாமன்றிற்றனிநடமாடுகின்றாய்
சிற்பரமேயுன்றன்றிருமேனிநோவாதா (௰)

வில்லவோமாலைமிளிர்ந்தசையவாடுகின்றாய
செல்வமேயுன்றன்றிருமேனிநோவாதா. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# திருவருட்பேறு.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சிவங்கனிந்தசிற்றம்பலத்தருணடஞ்செய்கின்றபெருவாழ்வே
நவங்கனிந்தமேனிலைநடுவிளங்கியநண்பனேயடியேன்றன்
றவங்கனிந்ததோர்விண்ணப்பந்திருச்செவிதரித்தருள்புரிந்தாயே
பவங்கனிந்தவிவ்வடிவமேயழிவுறாப்பதிவடிவாமாறே. (௧)

விளங்குகின்றசிற்றம்பலத்தருணடம்விளக்கின்றபெருவாழ்வே
களங்கமில்லதோருளநடுவிளங்கியகருத்தனேயடியேனே
விளம்பிநின்றதோர்விண்ணப்பந்திருச்செவிவியந்தருள்புரிந்தாயே
யுளங்கொளிவ்வடிவிம்மையேமந்திரவொளிவடிவாமாறே. (௨)

விஞ்சுகின்றசிற்றம்பலத்தருணடம்விளைக்கின்றபெருவாழ்வே
எஞ்சலற்றமாமறைமுடிவிளங்கியவென்னுயிர்த்துணையோனே
அஞ்சலின்றியேசெய்தவிண்ணப்பமேற்றகங்களித்தளித்தாயே
துஞ்சுமிவ்வுடலழிவுறாதோங்குமெய்ச்சுகவடிவாமாறே. (௩)

ஓங்குகின்றசிற்றம்பலத்தருணடமொளிர்கின்றபெருவாழ்வே
தேங்குலாவியசெள்ளமுதேபெருஞ்செல்வமேசிவமேநின்
பாங்கனேன்மொழிவிண்ணப்பந்திருச்செவிபதித்தருள்புரிந்தாயே
ஈங்குவீழுடலென்றும்வீழாதொளிரியல்வடிவாமாறே. (௪)

இலங்குகின்றசிற்றம்பலத்தருணடமிடுகின்றபெருவாழ்வே
துலங்குபேரருட்சோதியேசோதியுட்டுலங்கியபொருளேயென்
புலங்கொள்விண்ணப்பந்திருச்செவிக்கேற்றருள்புரிந்தனையிஞ்ஞான்றே
அலங்குமிவ்வுடலெற்றையுமழிவுறாவருள்வடிவாமாறே (௫)

சிறந்தபேரொளிதருசிற்றம்பலத்திலேதிகழ்கின்றபெருவாழ்வே
துறந்தபேருளத்தருட்பெருஞ்சோதியோசுசப்பெருநிலையோனே
மறந்திடாதுசெய்விண்ணப்பந்திருச்செவிமடுத்தருள்புரிந்தாயே
பிறந்தவிவ்வுடலென்றுமிங்கழிவுறாப்பெருமைபெற்றிடுமாறே. (௬)

வயங்குகின்றசிற்றம்பலந்தன்னிலேவளர்கின்றபெருவாழ்வே
மயங்குறாதமெய்யறிவிலேவிளங்கியமாமணிவிளக்கேயிங்
கியங்குசிற்றடியேன்மொழிவிண்ணப்பமேற்றருள்புரிந்தாயே
தயங்குமிவ்வுடலெற்றையுமழிவுறாததனிவடிவாமாறே. (௭)

நீட்டுகின்றசிற்றம்பலந்தன்னிலேதிகழ்கின்றபெருவாழ்வே
காட்டுகின்றதோர்சதிநடுவிளங்கியகடவுளேயடியேனை
நீட்டிநின்றசோவிண்ணப்பந்திருச்செவிநிறைந்தருள்புரிந்தாயே
பூட்டுமிவ்வுடலெற்றையுமழிவுறாப்பொன்வடிவாமாறே. (௮)

தடையிலாதசிற்றம்பலந்தன்னிலேதழைக்கின்றபெருவாழ்வே
சடையிலாப்பெருங்கதிர்நடுவிளங்குமோர்கடவுளேயடியே
னிடையறாதுசெய்விண்ணப்பந்திருச்செவிக்கேற்றருள்புரிந்தாயே
புடையினிவ்வுடலெற்றையுமழிவுறாப்பொன்வடிவாமாறே. (௯)

மையினெல்லிபோல்விளங்குசிற்றம்பலங்கலந்தருள்பெருவாழ்வே
மெய்யிலேவிளைந்தோங்கியபோகமேமெய்ப்பெரும்பொருளேநா
னையமற்றுரைத்திட்டவிண்ணப்பமேற்றளித்தனையிஞ்ஞான்று
செய்யுமிவ்வுடலென்றுமிங்கழிவுறாச்சிவவடிவாமாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

# கைம்மாறின்மை.



கலித்துறை.

திருச்சிற்றம்பலம்

நன்றேதருந்திருநாடகநாடொறுஞானமணி
மன்றேவிளங்கப்புரிகின்றவானந்தவார்கழலே
யின்றேயருட்பெருஞ்சோதிதந்தாண்டருளெய்துகண
மொன்றேயெனினும்பொறேனருளாணையுரைத்தனனே. (௧)

தற்சோதியென்னுயிர்ச்சத்தியசோதிதனித்தலைமைச்
சிற்சோதிமன்றொளிர்தீபகசோதியென்சித்தத்துள்ளே
நற்சோதிஞானநடகசோதிநலம்புரிந்த
பொற்சோதியானந்தபூரணசோதியெம்புண்ணியனே. (௨)

திரைகண்டமாயைக்கடல்கடந்தேனருட்சீர்விளங்கு
கரைகண்டடைந்தனன்கண்டேன்சர்க்கரைகலந்த
உரைகண்டதெள்ளமுதுண்டேனருளொளியோங்குகின்ற
வரைகண்டதன்மிசையுற்றேனுலகமதித்திடவே. (ங)

மனக்கேதமாற்றியெம்மாயையைநீக்கிமலிந்தவினை
தனக்கேவிடைகொடுத்தாணவந்தீர்த்தருட்டண்ணமுத
மெனக்கேமிகவுமளித்தருட்சோதியுமீந்தழியா
இனக்கேண்மையுந்தந்தென்னுட்கலந்தானமன்றிலென்னப்பனே. (ச)

வாதித்தமாயைவினையாணவமெனுமவன்மலத்தைச்
சேதித்தென்னுள்ளந்திருக்கோயிலாக்கொண்டுசித்தியெலாம்
போதித்துடம்பையும்பொன்னுடம்பாக்கிநற்புத்தமுதரு
சாதித்தருளியநின்னருட்கியான்செய்தக்கதென்னே. (ரு)

செத்தாரெழுகெனச்சிந்தைசெய்முன்னஞ்சிரித்தெழவே
இத்தாரணியிலருட்பெருஞ்சோதியெனக்களித்தாய்
எத்தாலுமென்றுமழியாவடிவுந்தந்தென்னுணின்னை
வைத்தாயமணிமன்றவாணநின்பேரருள்வாய்மையென்னே. (சா)

ஆக்கலொன்றேதொழிலந்தையுந்தந்திந்தவண்டபிண்ட
வீக்கமெல்லாஞ்சென்றுநின்சபையின்வண்ணம்விளங்குகநீ
ஏக்கமுறேலென்றுரைத்தருட்சோதியுமீந்தெனக்கே
ஊக்கமெலாமுறவுட்கலந்தானென்னுடையவனே. (எ)

என்னேயென்மீதெம்பெருமான்கருணையிருந்தவண்ணந்
தன்னேரிலாதவருட்பெருஞ்சோதியைத்தந்துலகுக்
கன்னேயெனவிளையாடுகவென்றழியாதசெழும்
பொன்னேர்வடிவுமளித்தென்னுயிரிற்புணர்ந்தனனே. (அ)

அச்சோவென்னென்றுபுகல்வேனென்னாண்டவனம்பலத்தா
னச்சோதனையுமியற்றென்னுட்கலந்தின்னருளாம்
மெய்ச்சோதியீந்தெனைமேனிலைக்கேற்றிவிரைந்துடம்பை
யிச்சோதியாக்கியழியாநலந்தந்தவிச்சையையே. (கூ)

வாழியென்னாண்டவன்வாழியெங்கோனருள்வாய்மையென்றும்
வாழியெம்மான்புகழ்வாழியென்னுதன்மலர்ப்பதங்கள்
வாழியெய்சுத்தசன்மார்க்கப்பெருநெறிமாண்புகொண்டு
வாழியிவ்வையமும்வானமுமற்றவும்வாழியவே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# குறையிரத்தல்.

## நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்சோதியபயமபயம்
பொருட்பெருஞ்சோதிப்புணைதந் - திருட்பெருங்கார்
அள்ளற்கடல்கடத்தியக்கரைமேலானந்த
கொள்ளற்கபயங்கொடு. (௧)

ஆரமுதந்தந்தென்னுள்ளச்சமெலாந்தீர்த்தருளிச்
சீரமுதவண்ணத்திருவடிகண் - டார்வமிகப்
பாடியுடம்புயிரும்பதிவடிவாகிக்கூத்
தாடிக்களிக்கவருள். (௨)

இடர்தொலைந்தஞான்றேயிளைவுந்தொலைந்த
சுடர்கலந்தஞான்றேசுகமும் - முடுகியுற்ற
தின்னேகளித்திடுதுமென்னெஞ்சேயம்பலவன்
பொன்னோபதத்தைப்புகழ். (௩)

ஈனமெலாந்தீர்ந்தனவேயின்பமெலாமெய்தினவே
யூனமெலாங்கைவிட்டொழிந்தனவே - ஞானமுளோர்
போற்றுஞ்சிற்றம்பலத்தும்பொன்னம்பலத்துநடம்
போற்றும்படிபெற்றபோது. (௪)

உள்ளக்கவலையெலாமோடியொழிந்தனவே
வள்ளற்பெருஞ்சோதிவாய்த்தனவே - கள்ளக்
கருத்தொழியஞானக்கருத்தியைந்துநாதன்
பொருத்தமுற்றென்னுள்ளமார்ந்தபோது. (௫)

ஊனவுடம்பேயொளியுடம்பாயோங்கிநிற்க
ஞானவமுதெனக்குநல்கியதே - வானப்
பொருட்பெருஞ்சோதிப்பொதுவில்விளங்கும்
அருட்பெருஞ்சோதியது. (௬)

எல்லாஞ்செயவல்லானெந்தையருளம்பலவ
னல்லானெனக்குமிகநன்களித்தா - னெல்லாருங்
கண்டுவியக்கின்றாரக்கருணைத்திருவமுத
முண்டுவியக்கின்றேனுவந்து. (௭)

ஏசாவுலகவர்களெல்லாருங்கண்டுநிற்கத்
தேசாரொளியாற்சிறியேனை - வாசாம
கோசரத்தினேற்றிக்கொடுத்தானருளமுதம்
ஈசனத்தனம்பலவனே. (௮)

ஐயனெனக்கீந்தவதிசயந்தையென்புகலவேன
பொய்யடியேன்குற்றம்பொறுத்தருளி - வையத
தழியாமலோங்குமருள்வடிவநானே
மொழியாதெற்குமுனம். (கூ)

ஒப்புயாவொன்றில்லாவொருவனருட்சோதி
யப்பனெலாமவல்லதிருவம்பலத்தா - னிப்புவியில்
வந்தானிரவிவருதற்குமுன்கருணை
தந்தானென்னுட்கலந்தான்றான. (கo)

ஓதவுலவாவொருதோழன்றாணடருளன்
சாதலொழிந்தெனனைத்தானுக்கிப் - பூதலத்தி
லைந்தொழிலசெய்யென்றேயருட்சோதிக்கோலளித்தான்
வெந்தொழிலபோயநீங்கவிரைந்து. (கக)

ஔவியந்தீருளளத்தறிஞரெலாங்கண்டுவக்கச்
செவ்வியசனமார்க்கஞ்சிறந்தோங்க - ஔவி
விரைந்துவந்தெனனுட்கலந்துமெய்யேமெய்யாக
நிரைந்தொன்றாயநினறானிலத்து. (கஉ)

சோதிப்பிழம்பேசுகவடிவேமெய்ஞ்ஞான
நீதிப்பொதுவேநிறைநிதியே - சோதிக்
கடவுளேமாயையிருகனமவிருளெல்லாம்
விடவுளேநினறுவிளங்கு. (கங)

துனபமெலாந்தீர்ந்தசுகமெல்லாங்கைதந்த
அன்பரெலாமபோற்றவருணடஞ்செ - யின்பன்
அருட்பெருஞ்சிற்சோதிதிருவம்பலத்தானவேதப்
பொருட்பெருஞ்சித்தெனனுட்புகுந்து. (கச)

தூக்கங்கெடுத்துச்சுகங்கொடுத்தானென்றனக்கே
யாக்கமெனவோங்கும்பொன்னம்பலத்தா - னேக்கமெலாம்
நீங்கினேனெண்ணநிரம்பினேன்பொன்வடிவந
தாங்கினேன்சத்தியமாத்தான். (கரு)

துன்பங்கெடுத்துச்சுகங்கொடுத்தானென்றனக்கே
யன்பகத்தில்வாழுஞ்சிற்றம்பலத்தா - னினபுருவந
தாங்கினேன்சாகாதனிவடிவம்பெறறொளியா
லோங்கினேனுண்மையுணா. (கசு)

திருச்சிற்றம்பலம.

# அபயம்.

## நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்சோதியபயமபயம்
அருட்பெருஞ்சோதியபயம் - அருட்பெருஞ
சோதியபயஞசிற்சோதியபயம்பொற
சோதியபயந் துணை. (௧)

துணையாவபயநதுயரகலவென்பா
லணைவாயபயமபயம் - பணைவாய்
வடலாயபயம்வரதாவபயம்
நடநாயகாவபயநான். (௨)

நாஞகிததாஞய்நடித்தருளகின்ருயபயம்
தேஞயினிககுஞசிவவபயம் - வாஞடு
மெய பாவபயம விமலாவபயமெனற
னையாவபயமபயம். (௩)

அபயம்பதியேயபயமபரமே
அபயஞசிவமேயபயம - உபய
பததிறகூபயமபரிநதெனுளதநேதநல
விததிறகருணைவிளை. (௪)

கருணாநிதியேயபயஙகனிநத
அருணடகனேயபயம் - மருணடும
உளளககவலையொழிப்பாயெனவனமனததுப்
பொள்ளறபிழைகளபொறுதது. (௫)

திருசசிறறமபலம.

அருட்பெருஞ்ஜோதியபயம்பயம்
அருட்பெருஞஜோதியபயம.

# நடராஜபதிமாலை.

பதினொன்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அருணிலைவிளங்குசிற்றம்பலமெனுஞ்சிவசுகாதீதவெளிநடுவிலே
யண்டபகிரண்டகோடிகளுஞ்சராசரமனைத்துமவையாக்கன்முதலாம்
பொருணிலைச்சத்தரொடுசத்திகளனந்தமும்பொற்பொடுவிளங்கியோங்கப்
புறப்புறமகப்புறம்புறமகமிவற்றின்மேற்பூரணாகாரமாகித்
தெருணிலைச்சச்சிதானந்தகிரணாதிகள்சிறப்பமுதலந்தமின்றித்
திகழ்கின்றமெய்ஞ்ஞானசித்தியநுபவநிலைதெளிந்திடவயங்குசுடரே
சுருணிலைக்குழலம்மையானந்தவல்லிசிவசுந்தரிக்கினியதுணையே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௧)

என்னியலுடம்பிலேயென்பிலேயன்பிலேயிதயத்திலேதயவிலே
யென்னுயிரிலேயென்றனுயிரினுக்குயிரிலேயென்னியற்குணமதனிலே
யின்னியலென்வாக்கிலேயென்னுடையநாக்கிலேயென்செவிப்புலனிசையிலே
யென்னிருகண்மணியிலேயென்கண்மணியொளியிலேயென்னநுபவந்தன்னிலே
தன்னியலென்னறிவிலேயறிவினுக்கறிவிலேதானேகலந்துமுழுதுந்
தன்மயமதாக்கியேதித்தித்துமேன்மேற்றதும்பிநிறைகின்றவமுதே
துன்னியபெருங்கருணைவெள்ளமேயழியாதசுகமேசுகாதீதமே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௨)

உடலெலாமுயிரெலாமுளமெலாமுணர்வெலாமுள்ளனவெலாங்கலந்தே
யொளிமயமதாக்கியிருணீக்கியெக்காலத்துமசையாதசமானமின்றி
யிடலெலாம்வல்லசிவசத்திகிரணங்கியாயேகமாயேகபோக
வின்பநிலையெனுமொருசிற்சபையினடுவேயிலங்கிநிறைகின்றசுடரே
கடலெலாம்புவியெலாங்கனலெலாம்வளியெலாங்ககனெலாங்கண்டபரமே
காணாதபொருளெனக்கலையெலாம்புகலவெனக்கணேகாணவந்தபொருளே
தொடலெலாம்பெறவெனக்குளுறவுறத்தூமெய்த்துணையாயவிளங்குமறிவே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௩)

மெய்த்தழையவுள்ளங்குளிர்ந்துவகைமாறாதுமேன்மேற்கலந்துபொங்க
விச்சையறிவோங்கவென்னிச்சையறிவநுபவம்விளங்கவறிவறிவதாகி
உய்த்தழைவளித்தெலாம்வல்லசித்ததுதந்துவட்டாதளூறியூறி
யூற்றெழுந்தென்னையுந்தானாக்கியென்னுளேயுள்ளபடியுள்ளவமுதே
கைத்தழையவந்தவானக்கனியேயெலாங்கண்டகண்ணேகலாந்தநடுவே
கற்பனையிலாதோங்குசிற்சபாமணியேகணிப்பருங்கருணைநிறைவே
துய்த்தழைப்பித்தழைந்தவுருவேயருட்சுகபோகயோகவுருவே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௪)

எண்ணிலாவண்டபகிரண்டத்தின் முதலிலேயிடையிலேகடையிலேமே
  லேற்றத்திலேயவையுளூற்றத்திலேதிரண்டெய்துவடிவந்தன்னிலே
கண்ணுறுவருவிலேயுருவிலேகுருவிலேகருவிலேதன்மைதனிலே
  கலையாதிநிலையிலேசத்திசத்தாகிக்கலந்தோங்குகின்றபொருளே
தெண்ணிலாக்காந்தமணிமேடைவாய்க்கோடைவாய்ச்சேர்ந்தனுபவித்தசுகமே
  சித்தெலாஞ்செயவல்லதெய்வமேயென்மனத்திருமாளிகைத்தீபமே
துண்ணுறுசசாந்தசிவஞானிகளுளத்தேசுதந்தரித்தொளிசெயொளியே
  சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௫)

அம்புவியிலேபுவியினடியிலேமுடியிலேயம்மண்டலந்தன்னிலே
  யகலத்திலேபுவியினகலத்திலேயவைக்கானவடிவாதிதனிலே
விம்பமுறவேநிறைந்தாங்கவைநிகழ்ந்திடவிளக்குமவையவையாகியே
  மேலுமவையவையாகியவையவையலாததொருமெய்ந்நிலையுமானபொருளே
தம்பமிசையெனையேற்றியமுதூற்றியழியாத்தலத்திலுறவைத்தவரசே
  சாகாதவித்தைக்கிலக்கணவிலக்கியந்தானாயிருந்தபரமே
தொம்பதமுமுடனுறுதற்பதமுமசிபதச்சுகமுமொன்றானசிவமே
  சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௬)

நீரிலேநீரூற்றநிறையிலேநிறையுற்றநிலையிலேநுண்மைதனிலே
  நிகழ்விலேநிகழ்வுற்றநிகழ்விலேநிழலிலேநெகிழ்விலேதண்மைதனிலே
ஊரிலேயந்நீரினுபயிலேயுப்பிலுறுமொண்சுவையிலேதிரையிலே
  யுற்றநீர்க்கீழிலேமேலிலேநடுவிலேயுற்றியலுறுத்துமொளியே
காரிலேயொருகோடிபொழியினுந்துணைபெறுக்கருணைமழைபொழிமேகமே
  கனகசபைநடுநின்றகடவுளேசிற்சபைக்கண்ணோங்குமொருதெய்வமே
தூரிலேபலமளித்தூரிலேவளர்கின்றசுகசொருபமானதருவே
  சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௭)

ஒள்ளியநெருப்பிலேயுப்பிலேயொப்பிலாவொளியிலேசுடரிலேமே
  லோட்டிலேசூட்டிலேயுள்ளாடுமோட்டிலேயுறுமாதியந்தத்திலே
தெள்ளியநிறத்திலேயருவத்திலேயெலாஞ்செயவல்லசெய்கைதனிலே
  சித்தாயவிளங்கியுபசித்தாயசத்திகள்சிறக்கவளர்கின்றவொளியே
வள்ளியசிவானந்தமலையேசுகாதீதவானமேஞானமயமே
  மணியேயென்னிருகண்ணுண்மணியேயென்னுயிரேயென்வாழ்வேயென்வாழ்க்கைவைப்பே
துள்ளியமனப்பேயையுள்ளூறவடக்கிமெய்ச்சுகமெனக்கீந்ததுணையே
  சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௮)

அறைகின்றகாற்றிலேகாற்றுப்பிலேகாற்றினாதிநடுவந்தத்திலே
  யானபலபலகோடிசத்திகளினுருவாகியாடுமேதனுட்டத்திலே
யுறைகின்றநிறைவிலேயூக்கத்திலேகாற்றினுற்றபலபெற்றிதனிலே
  யோங்கியவைதாங்கிமிகுபாங்கினுறுசத்தர்கட்குபகரித்தருளுமொளியே

குறைகின்றமதிநின்றுகூசவோராயிரங்கோடிகிரணங்கள்வீசிக
குலவமுதமயமாகியெவ்வுயிரிடத்துங்குலாவுமொருதண்மதியமே
துறைநின்றுபொறையொன்றுதூயரறிவாற்கண்டசொருபமேதுரியபதமே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௯)

வானிலேவானுறவாயப்பிலேவானினருவத்திலேவானியலிலே
வானடியிலேவானினடுவிலேமுடியிலேவண்ணத்திலேநிலையிலே
மானிலேநித்தியவலத்திலேபூரணவரத்திலேமற்றையதிலே
வளரனந்தானந்தசத்தாசத்திகடமைவைத்தவருளுற்றவொளியே
தேனிலேபாலிலேசர்க்கரையிலேகனித்திரளிலேதித்திக்குமோரா
தித்திப்பெலாங்கூட்டியுண்டாலுமொப்பெனச்செப்பிடாத்தெள்ளமுதமே
தூவிலாவண்ணத்திலுள்ளோங்குமானந்தசொருபமேசொருபசுகமே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௧௦)

என்றிரவிதனிலேயிரவிசொருபத்திலேயியலுருவிலேயருவிலே
யேறிட்டசுடரிலேசுடரினுட்சுடரிலேயெறியாதபதத்திரளிலே
யொன்றிரவியொளியிலேயோங்கொளியினொளியிலேயொளியொளியினொளிநடுவிலே
யொன்றாகிநன்றாகிநின்றோங்கினறவருளொளியேயெனுற்றதுணையே
யன்றிரவில்வந்தெனக்கருளொளியளித்தவெனையனேயரசனேயென்
னறிவனேயமுதனேயன்பனேயின்பனேயப்பனேயருளாளனே
துன்றியவென்னுயிரினுக்கினியனேதனியனேதூயனேயென்னையனே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௧௧)

அணிமதியிலேமதியினருவிலேயுருவிலேயவ்வுருவினுருவத்திலே
யமுதகிரணத்திலேயக்கிரணவொளியிலேயவ்வொளியினொளிதனிலே
பணிமதியினமுதிலேயவ்வமுதினிப்பிலேபக்கநடுவடிமுடியிலே
பாங்குபெறவோங்குமொருசித்தேயெனுள்ளேபலித்தபரமானந்தமே
மணியொளியிலாமெருளொளியேநிலைத்தபெருவாழ்வேநிறைந்தமகிழ்வே
மன்னேயென்னன்பானபொன்னேயென்னனேயெனவரமேவுமவ்வகுபரமே
துணிமதியினனுபவமாயிருந்தகுருதுரியமேபெரியபொருளே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௧௨)

அண்டவொருமைப்பகுதியிருமையாம்பகுதிமேலாங்காரியப்பகுதியே
யாதிபலபகுதிகளனந்தகோடிகளினடியினொடுமுடியுமவையிற்
கண்டபலவண்ணமுதலானவகநிலையுங்கணித்தபுறநிலையுமேன்மேற்
கண்டதிகரிக்கின்றகூட்டமும்விளங்கக்கலந்துநிறைகின்றவொளியே
கொண்டபலகோலமேகுணமேகுணங்கொண்டகுறியேகுறிக்கவொண்ணாக்
குருதுரியமேசுத்தசிவதுரியமேயெலாங்கொண்டதனிஞானவெளியே
தொண்டரிதயத்திலேகண்டெனவினிக்கின்றசுகயோகவநுபோகமே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (௧௩)

கரையிலாக்கடலிலேகடலுப்பிலேகடற்கடையிலேகடலிடையிலே
கடன்முதலிலேகடற்றிரையிலேநுரையிலேகடலோசையதனிடையிலே

வரையிலாவெள்ளப்பெருக்கத்திலேவட்டவடிவிலேவண்ணமதிலே
மறைந்தனவளத்திலேயுற்றபலசத்தியுள்வயங்கியவைகாக்குமொளியே
புரையிலாவொருதெய்வமணியேயென்னுள்ளேபுகுந்தறிவளித்தபொருளே
பொய்யாதசெல்வமேநையாதகல்வியேபுடம்வைத்திடாதபொன்னே
மரையிலாவாழ்வேமறைப்பிலாவைப்பேமறப்பிலாதருள்வள்ளலே
மணிமன்றினடுநின்றவொருதெய்வமேயெலாம்வல்லநடராஜபதியே. (க௪)

உற்றியலுமணுவாதிமலையந்தமானவுடலுற்றகருவாகிமுதலா
யுயிராயுயிர்க்குளுறுமுயிராகியுணர்வாகியுணர்வுளுணர்வாகியுணர்வுட்
பற்றியலுமொளியாகியொளியினொளியாகியபரமாய்ச்சிதம்பரமுமாய்ப்
பண்புறுசிதம்பரப்பொற்சபையுமாயதனபாங்கோங்குசிற்சபையுமாய்த்
தெற்றியலுமச்சபையினடுவினடமிடுகின்றசிவமாய்விளங்குபொருளே
சித்தெலாஞ்செய்யெனத்திருவாக்களித்தென்னைத்தேற்றியருள்செய்தகுருவே
மற்றியலுமாகியெனைவாழ்வித்தமெய்ஞ்ஞானவாழ்வேயென்வாழ்வினவரமே
மணிமன்றினடுநின்றவொருதெய்வமேயெலாம்வல்லநடராஜபதியே. (க௫)

எவ்வுலகுமெவ்வுயிருமெப்பொருளுமுடையதாயெல்லாஞ்செய்வல்லதாகி
யியற்கையேயுண்மையாயியற்கையேயறிவாயியற்கையேயின்பமாகி
அவ்வயினனாதியேபாசமிலதாய்ச்சுத்தவருளாகியருள்வெளியிலே
யருணெறிவிளங்கவேயருணடஞ்செய்தருளருட்பெருஞ்சோதியாகிக்
கவ்வையறுதனிமுதற்கடவுளாயோங்குமெய்க்காட்சியேகருணைநிறைவே
கண்ணேயென்னன்பிற்கலந்தெனைவளர்க்கின்றகதியேகனிந்தகனியே
வெவ்வினைதவிர்த்தொருவிளக்கேற்றியென்னுளேவீற்றிருந்தருளுமரசே
மெய்ஞ்ஞானநிலைநின்றவிஞ்ஞானகலருளேமேவுநடராஜபதியே. (க௬)

நாதாந்தபோதாந்தயோகாந்தவேதாந்தநண்ணுறுகலாந்தமுடனே
நவில்கின்றசித்தாந்தமென்னுமாறந்தத்தினஞானமெய்க்கொடிநாட்டியே
மூதாண்டகோடிகளொடெஞ்சராசரமெலாமுன்னிப்படைத்தன்முதலா
முத்தொழிலுமிருதொழிலுமுன்னின்றியற்றியைம்மூர்த்திகளுமேவல்கேட்ப
வாதாந்தமுற்றபலசத்திகளொடுஞ்சத்தர்வாய்ந்துபணிசெய்யவின்ப
மாராச்சியத்திலேதிருவருட்செங்கோல்வளத்தொடுசெலுத்துமரசே
சூதாண்டநெஞ்சினிற்றோயாதநேயமேதுரியநடுநின்றசிவமே
சுத்தசிவசன்மார்க்கநிதியேயருட்பெருஞ்சோதிநடராஜபதியே. (க௭)

ஒருபிரமனண்டங்களடிமுடிப்பெருமையேயுன்னமுடியாவவற்றி
னோராயிரங்கோடிமாலண்டமரனண்டமுற்றகோடாகோடியே
திரசலறுபலகோடியீசனண்டஞ்சதாசிவவண்டமெண்ணிறந்த
திகழ்கின்றமற்றைப்பெருஞ்சத்திசத்தர்தஞ்சீரண்டமென்புகலுவேன்
உருவுறுமிவ்வண்டங்களத்தனையுமருள்வெளியிலுறுசிறுவணுக்களாக
வூடசையவவ்வெளியினடுநின்றுநடனமிடுமொருபெருங்கருணையரசே
மருவியெனையாட்கொண்டுமகனாக்கியழியாவரந்தந்தமெய்த்தந்தையே
மணிமன்றினடுநின்றவொருதெய்வமேயெலாம்வல்லநடராஜபதியே. (க௮)

வரவுசெலவற்றபரிபூரணாகாரசுகவாழ்க்கைமுதலாயெனக்கு
வாய்த்தபொருளேயென்கண்மணியேயென்னுள்ளேவயங்கியொளிர்கின்றவொளியே
யிரவுபகலற்றவொருதருணத்திலுற்றபேரின்பமயமானவிளைவே
யென்றந்தையேயெனதுகுருவேயென்னையமேயென்னாசையேயென்னறிவே
கரவுநெறிசெல்லாதகருத்தினிலினிக்கின்றகருணையமுதேகரும்பே
கனியேயருட்பெருங்கடலேயெலாம்வல்லகடவுளேகலைகளெல்லாம்
விரவியுணர்வரியசிவதுரியவநுபவமானமெய்ம்மையேசன்மார்க்கமா
மெய்ஞ்ஞானநிலைநின்றவிஞ்ஞானகலருளேமேவுநடராஜபதியே. (க௯)

பாராதிபூதமொடுபொறிபுலன்கரணமும்பகுதியுங்காலமுதலாய்ப்
பகர்கின்றகருவியுமவைக்குமேலுற்றசுத்தபரமாதிநாதவரையுஞ்
சீராயபரவிந்துபரநாதமுந்தனதுதிகழங்கமென்றுரைப்பத்
திருவருட்பெருவெளியிலானந்தநடமிடுந்தெய்வமேயென்றுமழியா
வூராதிதந்தெனைவளர்க்கின்றவன்னையேயுபாதந்தையேயென்னுள்ளே
யுற்றதுணையேயென்றனுறவேயென்னன்பேயுவப்பேயென்னுடையவுயிரே
யாராலுமறியாதவுயர்நிலையிலெனைவைத்தவரசேயருட்சோதியே
யகரநிலைமுழுதுமாய்ப்பாலுமாகிநிறையமுதநடராஜபதியே. (உ0)

உரைவிசுவமுண்டவெளியுபசாந்தவெளிமேலையுறுமவுனவெளிவெளியின்மே
லோங்குமாமவுனவெளியாதியுறுமநுபவமொருங்கநிறையுண்மைவெளியே
திரையறுபெருங்கருணைவாரியேயெல்லாஞ்செய்சித்தேயெனக்குவாய்த்த
செல்வமேயொன்றானதெய்வமேயுய்வகைதெரிந்தெனைவளர்த்தசிவமே
பரைநடுவிளங்குமொருசோதியேயெல்லாம்படைத்திடுகவென்றெனக்கே
பண்புறவுரைத்தருட்பேரமுதளித்தமெய்ப்பரமமேபரமஞான
வரைநடுவிளங்குசிற்சபைநடுவிலானந்தவண்ணநடமிடுவள்ளலே
மாரூத்தசன்மார்க்கநிலைநீதியேயெலாம்வல்லநடராஜபதியே. (உக)

ஊழிதோறூழிபலவண்டபகிரண்டத்தியாகக்கெலாந்தரினுமந்தோ
வொருசிறிதுமுலவாதநிறைவாகியடியேற்குவப்பொடுகிடைத்தநிதியே
வாழிநீடூழியெனவாய்மலர்ந்தழியாவரந்தந்தவள்ளலேயென்
மதியினிறைமதியேவயங்குமதியமுதமேமதியமுதினுற்றசுகமே
யேழினோடேழுலகிலுள்ளவர்களெல்லாமிதெனையென்றதிசயிப்ப
விரவுபகலில்லாதபெருநிலையிலேற்றியெனையின்புறச்செய்தகுருவே
யாழியோடணியளித்தனுயிரெலாங்காத்துவிளையாடென்றுரைத்தவரசே
யகரநிலைமுழுதுமாய்ப்பாலுமாகியொளிர்பயநடராஜபதியே. (உஉ)

பூதமுதலாயபலகருவிகளனைத்துமென்புகல்வழிப்பணிகள்கேட்பப்
பொய்படாச்சத்திகளனந்தகோடிகளுமெய்ப்பொருள்கண்டசத்தர்பலரும்
ஏதமறவென்னுளநினைத்தவைநினைத்தாங்கிசைந்தெடுத்துதவவென்று
மிறவாதபெருநிலையிலிணைசொலாவின்புறவிருக்கவெனைவைத்தகுருவே
நாதமுதலிருமூன்றுவனாயந்தநிலைகளுநலம்பெறச்சன்மார்க்கமாம
ஞானநெறியோங்கவோர்திருவருட்செங்கோனடத்திவருநல்லவரசே

வாதமிடுசமயமதவாதிகள்பெறற்கரியமாமதியினமுதநிறைவே
  மணிமன்றினிடைநின்றவொருதெய்வமேயெல்லாம்வல்லநடராஜபதியே. (௨௩)

வாட்டமொடுசிறியனேன்செய்வகையையறியாதுமனமிகமயங்கியொருநாள்
  மண்ணிற்கிடந்தருளையுன்னியுலகியலினைமறந்துதுயில்கின்றபோது
நாட்டமுறுவைகறையிலென்னருகணைந்தென்னைநன்றுறவெழுப்பிமகனே
  நலியேலசஞானமெனினும்புரிதலின்றிநலிதலழகோவெழுந்தே
யீட்டுகநின்னெண்ணம்பலிக்கவருளமுதமுண்டின்புறுகவென்றகுருவே
  யென்னுரைசையேயென்றனன்பேநிறைந்தபேரின்பமேயென்செல்வமே
வேட்டவையளிக்கின்றநிதியமேசாகாதவித்தையில்விளைந்தசுகமே
  மெய்ஞ்ஞானநிலைநின்றவிஞ்ஞானகலருளேமேவுநடராஜபதியே. (௨௪)

எனசெயவெனசிறியனேனெனசெய்வேனென்னெண்ணமேதாகமுடியுமோவென
  றெண்ணியிருக்கண்ணீர்காட்டிக்கலங்கிநின்றேங்கியவிராவிலொருநாள்
மின்செயமெய்ஞ்ஞானவுருவாகிநான்காணவேவெளிநின்றணைந்தென்னுளே
  மேவியென்றுன்பந்விர்த்தருளியங்ஙனேவீற்றிருக்கின்றகுருவே
நனசெயவாய்விட்டவிளைவதுவிளைந்ததுகண்டநலகுரவிசேனடைந்த
  நனமகிழ்விலொருகோடிபங்கதிகமாகவேநான்கண்டுகொண்டமகிழ்வே
வனசெயவாய்வாதருக்கரியபொருளேயென்னைவலியவந்தாண்டபரமே
  மணிமன்றினிடைநின்றவொருதெய்வமேயெல்லாம்வல்லநடராஜபதியே. (௨௫)

துன்பெலாந்தீர்ந்தனசுகம்பலித்ததுநினைச்சூழ்ந்ததருளொளிநிறைந்தே
  சுத்தசன்மார்க்கநிலையநுபவநினக்கேசுதந்தரமதானதுலகில்
வன்பெலாநீக்கிநலவழியெலாமாக்கிமெய்வாழ்வெலாம்பெற்றுமிகவும்
  யன்னுயிர்பொன்றளித்திடநினைத்தனையுன்றனமனநினைப்பின்படிக்கே
யன்பநீபெறுகவுலவாதுநீடூழிவிளையாடுகவருட்சோதியா
  மாட்சிதந்தோமுனைகலக்கவிடேலுனைவிடோமுணைநமாணையென்றே
யின்புறத்திருவாக்களித்தெனுளேகலந்திசைவுடனிருந்தகுருவே
  யெல்லாஞ்செயவல்லசித்தாகியமணிமன்றினிலிலங்குநடராஜபதியே (௨௬)

பேருறவுலகிலுறுசமயமதநெறியெலாம்பேய்ப்பிடிப்புற்றபிச்சுப்
  பிள்ளைவிளையாட்டெனவுணர்ந்திடாதுயிர்கள்பலபேதமுற்றங்குமிங்கும்
போருற்றிறந்துவீணேபோயினாரினனும்வீணபோகாதபடிவிரைந்தே
  புனிதமுறுசுத்தசன்மார்க்கநெறிகாட்டிமெய்ப்பொருளினைபுணாத்தியெல்லாம்
ஏருற்றசுகநிலையடைந்திடப்புரிதிநீயென்பிள்ளையாதலாலே
  யிவ்வேலைபுரிகவென்றிட்டனமமனத்திலவேறெண்ணற்கவென்றகுருவே
நீருற்றவொண்ணிறநெருப்பேநெருப்பினுணிறைந்திருள்கற்றவொளியே
  நிர்க்குணாநந்தபரநாதாந்தவரையோங்குநீதிநடராஜபதியே. (௨௭)

சாகாதகல்வியேகல்வியொன்றேசிவந்தானெனவறிந்தவறிவே
  தகுமறிவுமலமைந்தும்வென்றவல்லபமேதனித்தபூரணவல்லபம்
வேகாதகாலாதிகண்டுகொண்டபொருளும்விளையவிளைவித்ததொழிலே
  மெய்த்தொழிலதாகுமிந்நான்கையுமொருங்கேவியந்தடைந்துலகமெல்லாம்

யாகாதலுறவெலாம்வல்லசித்தாகிநிறைவானவரமேயின்பமாம்
மனனுமிதுநீபெற்றசுத்தசன்மார்க்கத்தின்மரபென்றுரைத்தகுருவே
தேகாதிமூன்றுநான்றருமுன்னருள்செய்தெனைத்தேற்றியருள்செய்தசிவமே
சிற்சபையினடுநின்றவொன்றானகடவுளேதெய்வநடராஜபதியே. (உஅ)

நீடுலகிலுற்றவாக்கணங்குறவுனைக்கின்றநினைவாரதனையாவுமமது
நீர்வார்த்தழையாகுமிதுவுண்மைமகனேசற்றுமனஞ்சஞ்சேலுனக்கே
யாடுறுமருட்பெருஞ்சோதியீந்தனமென்றுமழியாதநிலையினின்றே
யன்பினுலகெங்கெங்குமெண்ணியபடிக்குநீயாடிவாழ்கென்றகுருவே
நாடுநோட்டத்திலுற்றவநுபவஞானநானிளங்காலையுடைய
நல்கியபெருங்கருணையப்பனேயம்மையேநண்பனேதுணைவனேயென
றாடுபெரியார்துற்றவின்பனேயன்பனேயொருவனேயருவனேயுள்
ளூறுமமுதாகியோராறின்முடிமீதிலேயோங்குநடராஜபதியே. (உகூ)

அந்நாளிலம்பலத்திருவாயலிடையுனக்கன்புடனுரைத்தபடியே
யற்புதமெலாம்வல்லநம்மருட்பேரொளியளித்தனமகிழ்ந்துனுள்ளே
யிந்நாள்தொடுத்துநீயெண்ணியபடிக்கேயியற்றிவிளையாடிமகிழ்க
வென்றுமிறவாநிலையிலின்பவநுபவனாகியியல்சுத்தமாதிமூன்று
மென்னாளுமுன்னிச்சைவழிபெற்றுவாழ்கயாமெய்யதிநின்னுட்கலந்தேம்
இனியெந்தவாற்றினும்பிரிவுறேமுண்மையீதெம்மாணையென்றகுருவே
மன்னாகியென்பெரியவாழ்வாகியழியாதவரமாகிநின்றசிவமே
மணிமன்றினடுநின்றவொருதெய்வமேயெலாம்வல்லநடராஜபதியே. (௩0)

காயெலாங்கனியெனக்கனிவிக்குமொருபெருங்கருணையமுதேயெனக்குக்
கண்கண்டதெய்வமேகலிகண்டவற்புதக்காட்சியேகனகமலையே
தாயெலாமனையவென்றந்தையேயொருதனித்தலைவனேநின்பெருமையைச்
சாற்றிடநினைத்திடமதித்திடவறிந்திடச்சார்கின்றதோறுமந்தோ
வாயெலாந்தித்திக்குமனமெலாந்தித்திக்குமதியெலாந்தித்திக்குமென்
மன்னியமெய்யறிவெலாந்தித்திக்குமென்னிலதில்வருமின்பமென்புகலுவேன்
தூயெலாம்பெற்றநிலைமேலருட்சுகமெலாந்தோன்றிடவிளங்குசுடரே
துரியவெளிநடுநின்றபெரியபொருளேயருட்சோதிநடராஜகுருவே. (௩௧)

எய்ப்பறவெனக்குக்கிடைத்தபெருநிதியமேயெல்லாஞ்செய்வல்லசித்தா
யென்கையிலகப்பட்டஞானமணியேயென்னையேழுமையும்விடாதநட்பே
கைப்பறவெனுள்ளேயினிக்கின்றசர்க்கரைக்கட்டியேகருணையமுதே
கற்பகவனத்தேகனிந்தகனியேயெனதுகண்காணவந்தகதியே
மெய்ப்பயனளிக்கின்றதந்தையேதாயேயென்வினையெலாந்தீர்த்தபதியே
மெய்யானதெய்வமேமெய்யானசிவபோகவிளைவேயென்மெய்ம்மையுறவே
துய்ப்புறுமென்னன்பானநேயமேயென்னின்பமேசுத்தசன்மார்க்கநிலையே
துரியவெளிநடுநின்றபெரியபொருளேயருட்சோதிநடராஜகுருவே. (௩௨)

துன்புறுமனத்தனாயெண்ணாதவெண்ணிநான்சோர்ந்தொருபுறம்படுத்துத்
தூங்குதருணத்தென்றன்னருகிலுற்றன்பினாற்றூயதிருவாய்மலர்ந்தே

யின்புறுமுகத்திலேபுன்னகைததும்பவேயிருகைமலர்கொண்டுதூக்கி
யென்றனையெடுத்தணைத்தாங்குமற்றோரிடத்தியலுறவிருத்திமகிழ்வாய்
வன்புறுபெருங்கருணையமுதளித்திடாநீக்கிலைத்தநின்றயவையந்தோ
வள்ளலேயுள்ளுதொறுமுள்ளகமெலாமின்பவாரியமுதூறியூறித்
துன்பமறமேறகொண்டுபொங்கித்ததும்புமிச்சுகவண்ணமென்புகலுவேன்
துரியவெளிநடுநின்றபெரியபொருளேயருடசோதிநடராஜகுருவே. (௩௩)

ஓங்கியபெருங்கருணைபொழிகின்றவானமேயொருமைநிலையுறுஞானமே
யுபயபதசததளமுமெனதிதயசததளத்தோங்கநடுவோங்குசிவமே
பாங்கியலளித்தெனையறியாதவொருசிறியபருவத்திலாண்டபதியே
பாசநெறிசெல்லாதநேசாதமையீசராம்படிவைக்கவல்லபரமே
ஆங்கியல்வதென்றுமற்றீங்கியல்வதென்றுமவாயாடுவோர்க்கரியசுகமே
யானந்தமயமாகியதுவுங்கடந்தவெளியாகிநிறைகின்றநிறைவே
தூங்கிவிழுசிறியனைத்தாங்கியெழுகென்றெனதுதூக்கந்தொலைத்ததுணையே
துரியவெளிநடுநின்றபெரியபொருளேயருட்சோதிநடராஜகுருவே. (௩௪)

திருச்சிற்றம்பலம்.

# சற்குருமணிமாலை.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாற்றறியாதசெழும்பசும்பொன்னேமாணிக்கமேசுடர்வண்ணக்கொழுந்தே
கூற்றறியாதபெருந்தவருள்ளக்கோயிலிருந்தகுணப்பெருங்குன்றே
வேற்றறியாதசிற்றம்பலக்கனியேவிச்சையில்வல்லவாமெச்சுவிருந்தே
சாற்றறியாதவெனசாற்றுங்களித்தாய்தனிநடராஜவெனசற்குருமணியே. (௧)

கற்கரையும்படிகரைவிக்குங்கருத்தேகண்மணியேமணிகலந்தகண்ணொளியே
சொற்கரையினறியவொளியினுள்ளொளியேதுரியமுங்கடந்திட்டபெரியசெம்பொருளே
சிற்கரைதிரையறுதிருவருட்கடலேதெள்ளமுதேகனியேசெழும்பாகே
சாக்கரையேயதுசார்ந்தசெந்தேனேதனிநடராஜவெனசற்குருமணியே. (௨)

என்னுயிரேயென்னின்னுயிர்க்குயிரேயென்னறிவேயெனதறிவினுக்கறிவே
யன்னையிலினியவெனம்பலத்தமுதேயற்புதமேபரமேயெனதன்பே
பொன்னணியடிமலர்முடிமிசைப்பொருந்தப்பொருத்தியதயவுடைப்புண்ணியப்பொருளே
தன்னியலறிவருஞ்சத்தியநிலையேதனிநடராஜவென்சற்குருமணியே. (௩)

காய்மனக்கடையனைக்காத்தமெய்ப்பொருளேகலைகளுங்கருதருமொருபெரும்பதியே
தேய்மதிசமயருக்கரியவொண்சுடரேசித்தெலாம்வல்லதோர்சத்தியமுதலே
ஆய்மதிப்பெரியருள்ளமர்ந்தசிற்பரமேயம்பலத்தாடல்செய்செம்பதத்தரசே
தாய்மதிப்பரியதோர்தயவுடைச்சிவமேதனிநடராஜவென்சற்குருமணியே. (௪)

உருவமுமருவமுமுபயமுமுளதாயுளதிலதாயொளிரொருதனிமுதலே
கருவினிலெனக்கருள்கனிந்தளித்தகனேகண்ணுடையாய்பெருங்கடவுளாபதியே
திருநிலைபெறவெனைவளர்க்கின்றபரமேசிவகுருதுரியத்திற்றெளியநுபவமே
தருவளர்பொழில்வடற்சபைநிறையொளியேதனிநடராஜவெனசற்குருமணியே (௫)

ஆறந்தநிலைகளினநுபவநிறைவேயத்துவத்துவாவொளிர்பொதுவுறுநிதியே
கூறெந்தநிலைகளுமொருநிலையெனவேகூறியென்னுளத்திறகுலவியகளிப்பே [ளே
பேறிந்தநெறியெனக்காட்டியென்றனையே பெருநெறிக்கேற்றியவொருபெரும்பொரு
சாறெந்தநாள்களும்விளங்குமோவடல்வாய்த்ததனிநடராஜவென்சற்குருமணியே. (௬)

சாகாததலையிதுவேகாதகாலாந்தரமிதுகாணெனத்தயவுசெய்துரைத்தே
போகாதபுனலையுந்தெரிவித்தெனதுளத்தேபொற்புறவமர்ந்தோரற்புதச்சுடரே
ஆகாதபோகளுக்காகாதநினைவேயாகியவெனக்கென்றுமாகியசுகமே
தூகாதவெனத்தருந்தருமசத்திரமேதனிநடராஜவெனசற்குருமணியே. (௭)

தத்துவமசிநிலையிதுவிதுதானேசத்தியங்காணெனத்தனித்துரைத்தெனக்கே
யெத்துவந்தனைகளுநீக்கிமெய்ந்நிலைக்கேயேற்றிநாணிறவாத்தவியலளித்தருளாற்
சித்துவந்துலகங்களெவற்றினுமாடச்செய்வித்தபேரருட்சிவபரஞ்சுடரே
சத்துவநெறிதருவடலருட்கடலேதனிநடராஜவெனசற்குருமணியே. (௮)

இதுபதியிதுபொருளிதுசுகமடைவாயிதுவழியெனவெனக்கியல்புறவுரைத்தே
விதுவமுதொடுசிவவமுதமுமளித்தேமேனிலைக்கேற்றியமெய்ந்நிலைச்சுடரே
பொதுநடமிடுகின்றபுண்ணியப்பொருளேபுரையறுமுளத்திடைப்பொருந்தியமருந்தே
சதுமறைமுடிகளின்முடியுறுசிவமேதனிநடராஜவென்சற்குருமணியே. (௯)

எந்நிலையிதுவுறுநின்னிலையிதுவாமிருநிலைகளுமொருநிலையெனவறிவாய்
முன்னிலைசிறிதுறவிதுமயலுறலாம்முன்னிலைபின்னிலைமுழுநிலையுளவாம்
இந்நிலையறிந்தவணெழுநிலைகடந்தேயணிநிலையடைகவென்றியம்பியபரமே
தன்னிலையாகியநன்னிலையரசேதனிநடராஜவென்சற்குருமணியே. (௧௦)

காரணமிதுபுரிகாரியமிதுமேற்காரணகாரியக்கருவிதுபலவா
யாரணமாகமமிவைவிரித்துரைத்தேயளந்திடுநீயவையளந்திடன்மகனே
பூரணநிலையநுபவமுறிற்கணமாம்பொழுதினிலறிதியெப்பொருணிலைகளுமே
தாரணிதனிலென்றதயவுடையரசேதனிநடராஜவெனசற்குருமணியே. (௧௧)

பன்னெறிச்சமயங்கண்மதங்களென்றிடுமோர்பவநெறியிதுவரைபரவியதிதனால்
சென்னெறியறிந்திலரிறந்திறந்துலகோர்செறியிருளடைந்தனராதலினினிநீ [த்
புன்னெறிதவிர்த்தொருபொதுநெறியெனும்வான் புத்தமுதருள்கின்றசுத்தசன்மார்க்க
தன்னெறிசெலுத்துகவென்றவென்னரசேதனிநடராஜவென்சற்குருமணியே. (௧௨)

அடியிதுமுடியிதுநடுநிலையிதுமேலடிநடுமுடியிலாததுவதுமகனே
படிமிசையடிநடுமுடியறிந்தனையேபதியடிமுடியிலாப்பரிசையுமறிவாய்
செடியறவுலகினிலருணெறியதுவேசெயலுறமுயலுகவென்றசிற்பரமே
தடிமுகிலெனவருள்பொழிவடலரசேதனிநடராஜவெனசற்குருமணியே. (௧௩)

நண்ணியமதநெறிபலபலவவையேநன்றெனநின்றனசிலவே
யண்ணியவுலகினரறிகிலர்நெடுநாளலைதருகின்றனரலைவறமகனே
புண்ணியமுறுதிருவருணெறியதுவேபொதுநெறியெனவறிவுறமுயலுதிநீ
தண்ணியவமுதுணத்தந்தனமென்றருள்தனிநடராஜவென்சற்குருமணியே. (௧௪)

அஞ்சலைநீயொருசிறிதுமென்மகனேயருட்பெருஞ்சோதியையளித்தனமுனக்கே
துஞ்சியமாந்தரையெழுப்புகநலமேசூழ்ந்தசன்மார்க்கத்திற்செலுத்துகசுகமே
விஞ்சுறமெய்ப்பொருண்மேனிலைதனிலேவிஞ்சைகள்பலவுளவிளக்குகவென்றாய்
தஞ்சமென்றவாக்கருள்சத்தியமுதலேதனிநடராஜவென்சற்குருமணியே. (௧௫)

வேதத்தின்முடிமிசைவிளங்குமோர்விளக்கேமெய்ப்பொருளாகமவியன்முடிச்சுடரே
நாதத்தின்முடிநடுநடமிடுமொளியேநவையறுமுளத்திடைநண்ணியநலமே
பேதத்தினின்றெனையெடுத்தருணிலைக்கேயேற்றியகருணையெனின்னுயிர்த்துணையே
தாதுற்றவுடம்பழியாவகைபுரிந்தாயதனிநடராஜவென்சற்குருமணியே. (௧௬)

சந்திரசூரியரொளிபெறவிளங்குந்தனியருட்பெருவெளித்தலத்தெழுஞ்சுடரே
வந்திரவிடையெனக்கருளமுதளித்தேவாழ்கவென்றருளியவாழ்முதற்பொருளே
மந்திரமேயெனைவளர்க்கின்றமருந்தேமாநிலத்திடையெனைவருவித்தபதியே
தந்திரம்யாவையுமுடையமெய்ப்பொருளேதனிநடராஜவென்சற்குருமணியே. (௧௭)

அமரருமுனிவருமதிசயித்திடவேயருட்பெருஞ்சோதியையன்புடனளித்தே
கமமுறுசிவநெறிக்கேற்றியென்றனையேகாதலெனதுளத்தினிற்கலந்தமெய்ப்பதியே
யமனெனுமவனினியிலையிலைமகனேயெய்ப்பறவாழ்கவென்றியம்பியவரசே
சமரசசன்மார்க்கசங்கத்தின்முதலேதனிநடராஜவென்சற்குருமணியே. (௧௮)

நன்மார்க்கத்தவருளத்தண்ணியவரமேநடுவெளிநடுநின்றுநடஞ்செயும்பரமே
துன்மார்க்கவாதிகள்பெறற்கருநிலையேசுத்தசிவானந்தப்புத்தமுதுவப்பே
யென்மார்க்கமெனக்களித்தெனையுமேலேற்றியிறவாதபெருநலமீந்தமெய்ப்பொருளே
சன்மார்க்கசங்கத்தார்தழுவியபதியேதனிநடராஜவென்சற்குருமணியே. (௧௯)

ஆதியுமந்தமுமின்றியொன்றாகியகம்புறமகப்புறம்புறப்புறநிறைந்தே [யே
போதியுமுணர்ந்துமிங்கறிவருமபொருளேயுளங்கொள்சிற்சபைநடுவிளங்குமெய்ப்பதி
சோதியுஞ்சோதியின்முதலுந்தானாகிச்சூழ்ந்தெனைவளர்க்கின்றசுதந்தரவமுதே
சாதியுஞ்சமயமுந்தவிர்த்தவருறவேதனிநடராஜவென்சற்குருமணியே. (௨௦)

கற்பனைமுழுவதுங்கடந்தவருளத்தேகலந்துகொண்டினிக்கின்றகற்பகக்கனியே
யற்பனையாண்டுகொண்டறிவளித்தழியாவருணிலைதனிலுறவருளியவமுதே
பற்பலவுலகமும்வியப்பவென்றனக்கேபதமலர்முடிமிசைப்பதித்தமெய்ப்பதியே
தற்பரபரமபரசிதம்பரநிதியேதனிநடராஜவென்சற்குருமணியே. (௨௧)

பவநெறிசெலுமவர்கனவினுமறியாப்பரம்பொருளாகியென்னுளம்பெறுமொளியே
நவநெறிகடந்ததோர்ஞானமெய்ச்சுகமேநானருணிலைபெறநல்கியநலமே
சிவநெறியேசிவநெறிதருநிலையேசிவநிலைதனிலுறுமநுபவநிறைவே
தவநெறிசெலுமவர்க்கினியநற்றுணையேதனிநடராஜவென்சற்குருமணியே. (௨௨)

அறியாமலறிகின்றவறிவினுள்ளறிவேயடையாமலடைகின்றவடைவினுள்ளடைவே, செறியாமற்செறிகின்றசெறிவினுட்செறிவேதெளியாமற்றெளிகின்றதெளிப்புறுதெளிப்பே, பிரியாமலென்னுளங்கலந்தமெய்க்கலப்பேபிறவாமலிறவாமலெனைவைத்தபெருக்கே, தறியாகியுணர்வாருமுணர்வரும்பொருளேதனிநடராஜவென்சற்குருமணியே. (உ௩)

கருதாமற்கருதுமோர்கருத்தினுட்கருத்தேகாணாமற்காணுமோர்காட்சியின்விளைவே
யெருதாகத்திரிந்தேனுக்கிகபரமளித்தேயிறவாதவரமுந்தந்தருளியவொளியே
வருதாகந்தவிர்த்திடவந்தெள்ளமுதேமாணிக்கமலைநடுமருவியபரமே
தருதானமுணவெனச்சாற்றியபதியேதனிநடராஜவென்சற்குருமணியே. (உ௪)

ஏகாவனேகாவென்றோதிடுமறைக்கேயெட்டாதநிலையேநானெட்டியமலையே
யோகாளமதங்களைமுழுவதுமாற்றியொருநிலையாக்கவென்றுணர்த்தமெய்ப்பரமே
யீகாதலுடையவாக்கிருநிதியளித்தேயினைபுறப்புரிகின்றவியல்புடையிறையே
சாகாதவரந்தந்திங்கெனைக்காத்தவரசேதனிநடராஜவென்சற்குருமணியே. (உ௫)

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சொடுகிளத்தல்.

கலித்தாழிசை.

திருச்சிற்றம்பலம்.

அடங்குநாளில்லாதமர்ந்தானைக்காணவே
தொடங்குநாணல்லதன்றே - நெஞ்சே
தொடங்குநாணல்லதன்றே. (க)

வல்லவெல்லாமுமவல்லானைக்காணற்கே
நல்லநாளெண்ணியநாள் - நெஞ்சே
நல்லநாளெண்ணியநாள். (உ)

காலங்கடந்தகடவுளைக்காணற்குக்
காலங்கருதுவதேன் - நெஞ்சே
காலங்கருதுவதேன். (௩)

ஆலமுதாக்குமண்ணலைக்காணற்குக்
காலங்கருதுவதேன் - நெஞ்சே
காலங்கருதுவதேன் (௪)

தடையாதுமில்லாததலைவனைக்காணற்கே
தடையாதுமில்லைகண்டாய் - நெஞ்சே
தடையாதுமில்லைகண்டாய். (௫)

கையுளமுதத்தைவாயுளமுதாககப
* பையுளுனககெனனையோ - நெஞ்சே
பையுளுனக்கென்னையோ. (சா)

என்னுயிாநாதனையான்கண்டணைதற்கே
உன்னுவதெனனைகண்டாய் - நெஞ்சே
யுன்னுவதெனனைகண்டாய். (எ)

நான்பெற்றசெல்வததைநான்பற்றிககொள்ளற்கே
என்பற்றுவாயென்பதாா - நெஞ்சே
யேன்பறறுவாயென்பதாா. (அ)

தத்துவாதீதத்தலைவனைககாணற்குத
ததது வமுனனுவதேன் - நெஞ்சே
தததுவமுன்னுவதேன. (கூ)

ஒக்கவமுததததையுண்டோமினிச்சற்றும்
விககல்வராதுகணடாய் - நெஞ்சே
விககலவராதுகண்டாய. (க0)

திருச்சிற்றம்பலம்.

## தான்பெற்றபேறு.

எண்சீரடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

திருவளர்பேரருளுடையானசிறசபையானெல்லாஞ் செயயவல்லதனித்தலைமைச்சித்தனெல்லாமுடையான, உருவமுமாயருவமுமாயுபயமுமாயலவா யோங்குமருட்பெருஞ்சோதியொருவனுணடேயவனறன, பெருமையினுலெனையீன்றுனொருவன்றனே பிள்ளையவனபிள்ளையெனபபெரியரெலாமறிவாா, இருமையுறுததுவாகாளென்னையறியீரோவீஙகுமதுதன்ளலெலாமேதுநடவாதே. (க)

மனமெனுமோாபேய்க்குரங்குமடைப்பயலேநீதானமற்றவாபோலெனைநினைததுமருட்டாதேகண்டாய, இனமுறவென்சொல்வழியேயிருததியெனிறசுகமாயிருநதிடு நீயென்சொல்வழியேற்றிலையானுலோ, இனையளவுனனதிகாரஞ் செலலவொட்டேனுலகஞ் சிரிககவுனையடககிடுவேனறிருவருளாறகணததே, நனவிலெனையறியாயோயாரெனவிங்கிருநதாயஞானசபைததலைவனுககுநல்லபிள்ளைநானே. (உ)

பன்முகஞ்சோமனமெனுமோாபரியாசப்பயலேபதையாதேசிதையாதேபாாககுமிடமெல்லாந, கொன்முகங்கொண்டடிககடிபோயகுதியாதேயெனது குறிப்பின்வழிநினறிடுநினகுதிப்புநடவாது, என்முனமோாபுன்முனைமேலிருந்தபனிதுளிநீயிம்மெனுமுன் னடககிடுவேனென்னையறியாயோ,பினமுனெனநினையேல்காணசிறசபையினடிககும்பெரியதனிததலைவனுக்குபபெரியபிள்ளைநானே. (ங)

* பையுள் - வருத்தம்.

விரிந்தமனமெனுஞ்சிறியவிளையாட்டுப்பயலே விரிந்துவிரிந்தலையாதேமெலியா
தேவிடயம், புரிந்தநெறிபுரிந்தவமேபோகாதேபொறிவாய்ப்புரையாதேவிரையாதேபு
குந்துமயங்காதே, தெரிந்துதெளிந்தொருநிலையிற்சித்திரம்போலிருநீசிறிதசைந்தால
க்கணமேசிதைத்திடுவேன்கண்டாய், பரிந்தெனைநீயாரென்றுபார்த்தாய்சிற்சபைவாழ்
பதிதன்கையேயருட்பட்டம்பலித்தபிள்ளைநானே. (ச)

பாயமனமென்றுரைத்திடுமோர் * பராய்முருட்டுப்பயலேபலபொறியாம்படுக்கா
ளிப்பயல்களொடுங்கூடிச், சேய்மையினுமண்மையினுந்திரிந்தோடியாடித்தியங்காதே
யொருவார்த்தைதிருவார்த்தையெனவே, ஆய்வுறக்கொண்டடங்குகநீயடங்கிலையே
லுன்னைத்தானடியொடுவேரறுத்திடுவேனுண்மையருளாணை, பேய்மதியாநீயென்னைத்தானறி
யாயோவெல்லாம்பெற்றவன்றன்செல்வாக்குப்பெற்றபிள்ளைநானே. (ரு)

மயங்குபுத்தியெனுமுலக்கவழக்காளிப்பயலே வழித்துறையீதென்றறியாய்வகைசி
றிதுமறியாய், உயங்கிவிசாரித்திடவேயோடுகின்றாயுணருமுளவறியாயவீணுழைப்பி
ங்குழைப்பதிலென்பயனே, வயங்குமனமடங்கியவாறடங்குகநீயிலையேல்மடித்திடு
வேன்கணத்திலுன்னைவாய்மையிதுகண்டாய், இயங்கவென்னையறியாயோயாரெனவெ
ண்ணினையோவெல்லாஞ்செயவல்லவனுக்கினியபிள்ளைநானே. (சா)

கலையறியாச்சித்தமெனுங்கனமோசப்பயலேகாலறியாய்தலையறியாய்காண்பனக
ண்டறியாய், நிலையறியாயொன்றையொன்றாநிச்சயித்திவ்வுலகைநெறிமயங்கமயக்கு
கின்றாய்நீயோவிங்குறுவாய், அலையறியாக்கடல்போலேயசைவறநின்றிடுநீ யசைவா
யேலக்கணத்தேயடக்கிடுவேனுன்னைத்தான், அலைவறிவாயென்றனைநீயறியாயோநா
ன்றுணுடவன்றனருணடவங்கண்டமாந்தபிள்ளைகாணே. (எ)

அகங்காரமெனும்பொல்லாவடவாதிப்பயலேயடுக்கடுக்காயெடுக்கின்றாயடுத்துமு
டுக்கின்றாய், செகங்காணத்தலைகாலுந்தெரியாமலலைந்து திரிகின்றாயுன்செபந்தான்
சிறிதுநடவாது, இகங்காணவடங்குகநீயடங்காயேலக்கணத்தே யிருந்தவிடந்தெரியா
தேயெரித்திடச்செய்திடுவேன், சுகங்காணவென்றனைநீயறியாயோநான்றான்சுத்தசிவ
சன்மார்க்கம்பெற்றபிள்ளைகாணே. (அ)

மானெனுமோர்சகசாலச்சிறுக்கியிதுகேளுன்வஞ்சகக்கூத்தெல்லாமோர்மூட்டை
யெனக்கட்டி, ஈனமுறநின்றலைமேலேற்றெடுத்துக்கொண்டுன் னேவல்புரிபெண்க
ளொடேயிவ்விடம்விட்டேகிக், கானடைந்துகருத்தடங்கிப்பிழைத்திடுநீயிலையேல்க
ணத்திலுன்னைமாய்ப்பேனுன்கணத்தினொடுங்கண்டாய், ஏனெனைநீயறியாயோ சிற்சபை
யினடஞ்செயிறைவனருட்பெருஞ்சோதிக்கினியபிள்ளைநானே (கூ)

மாயையெனும்படுதிருட்டுச்சிறுக்கியிதுகேளுன்மாயையெலாஞ்சுமைசுமையாவரி
ந்துகட்டிக்கொண்டுன், சாயையெனும்பெண்ணினைத்தாதலைமேலுமுனது தலையிலு
ஞ்சுமந்துகொண்டோசர்ந்துவழிபார்த்தே, பேயெனக்காட்டிடையோடிப்பிழைத்திடு
நீயிலையேல் பேசுமுன்னேமாய்த்திடுவேன்பின்னுமுன்னும்பாரேன், ஆயெனைநீ
யாயோவெல்லாஞ்செயவல்லாரருளமுதுண்டருணிலைமேலமர்ந்தபிள்ளைநானே (ய)

* பராய் - ஒருவகை மரம்.

மாமாயையெனும்பெரியவஞ்சகிநீயிதுகேள் வளைந்தவுன்றன்பரிசனப்பெண்வகைதொகைகளுடனே, போமாறுனைசெயலனைத்தும்பூரணமாகக்கொண்டு போனவழிதெரியாதேபோய்ப்பிழைநீயிலையேல், சாமாறுன்றனையின்றேசாய்த்திடுவேனிதுதான்சத்தியமென்றெண்ணுதியென்றன்னையறியாயோ, ஆமாறுசிற்சபையிலருணடனம்புரிவாரருளமுதுண்டருணிலைமேலமர்ந்தபிள்ளைநானே. (கக)

கன்மமெனும்பெருஞ்சிலுக்கடுகலகப்பயலே கங்குகரைகாணாதகடல்போலே வினைகள், நன்மையொடுதீமையெனப்பலவிகற்பங்காட்டிநடத்தினைநின்னடத்தையெல்லாஞ்சிறிதுநடவாது, எனமுனிருந்தனையெனினீயழிந்திடுவாயதனுலிக்கணத்தேநின்னினத்தோடேகுகநீயிலையேல், இன்மையுறமாய்த்திடுவேனென்னையறியாயோவெல்லாஞ்செய்வல்லவனுக்கினியபிள்ளைநானே. (கஉ)

எத்துணையுங்காட்டாதவாணவமெனறிடுமோ ரிருட்டறைக்கோரதிகாரக்குருட்டுமுட்டப்பயலே, இத்தனைநாள்பிடித்ததனைக்கண்டுதூரத்திடவேயின்றுமையாகக்கணந்தரியேனிக்கணத்தேநினது, பொத்தியசுற்றத்துடனேபோயவிடுதியிலையேல்பூரணமெய்யருளொளியாற்பொன்றுவிப்பேனினையே, சத்தியஞ்சொன்னேனெனைநீயறியாயோஞானசபைத்தலைவன்றருதலைமைத்தனிப்பிள்ளைநானே. (கந)

பெருமாயையென்னுமொருபெண்பிள்ளைநீதான்பெற்றவுடம்பிதுசாகாச்சுத்தவுடம்பாக்கி, யொருஞானத்திருவமுதுண்டோங்குகின்றேனினிநின்னுபகரிப்போரணுத்துணையுமுளத்திடைநானவிரும்பேன், அருளாயசோதியெனக்குபகரிக்கின்றதுநீயறியாயோவென்னளவிலமைகவயலமாக, தெருளாயவுலகிடையென்சரிதமுணர்ந்திலையோசிற்சபையென்னப்பனுக்குச்சிறந்தபிள்ளைநானே. (கச)

பேசுதிரோதாயியெனும்பெண்மடவாயிதுகேள்பின்முனறியாதெனைநீயென முன்மறைக்காதே. வேசறமாமலவிரவுமுழுதுமவிடிந்ததுகாணவீசுமருட்பெருஞ்சோதிவிளங்குகின்றதறிநீ, ஏசறுநின்செயலனைத்துமென்னளவினடவாதிதையறிந்துவிரைந்தெனைவிட்டேகுகவிக்கணத்தே, மாசறுமென்சரிதமொன்றுந்தெரிந்திலையோவெல்லாம்வல்லவொருசித்தருக்கேநல்லபிள்ளைநானே. (கரு)

ஆககமெனுங்கடைப்பயலேசோமபேறியிதுகேள் துணிந்துனதுசுற்றமொடுசொல்லுமளக்கணத்தே, தாகுபெருங்காட்டகத்தேயேகுகநீயிருந்தால்தப்பாதுன்றலைபோகுஞ்சத்தியமீதறிவாய், ஏககமெலாந்தவிர்ந்துவிட்டேனாககமெலாம்பெற்றேனின்பமுறுகின்றேனீயென்னையடையாதே, போகவில்விரைந்தோடுகநீபொற்சபைசிற்சபைவாழ்பூரணாகிவகன்பானபொருளெனவறிந்தே. (கசு)

பயமெனுமோர்கொடும்பாவிப்பயலேநீயிதுகேள்பற்றறவென்றனைவிடுத்துப்பனிக்கடல்வீழ்ந்தொளிப்பாய், சயவினுரைத்தேனின்னுமிருத்தியெனிலுன்றனதலைதனக்குத்தீம்புவருந்தலைமட்டோநினது, செயலுறுமுள்ளுடம்பழியுஞ்சுற்றமெலாமிறக்குந்தீர்ந்ததினியிலையென்றேதிருவார்த்தைபிறக்கும், அயலிடைநோக்கேதோடுகநீயென்னையறியாயோவம்பலத்தெனைப்பனருண்மைப்பிள்ளைநானே. (கஎ)

சோகமெனுமபுலைப்பயலேகாமவலைப்பயலே கொடுமோகக்கடைப்பயலேகுரும்புமதப்பயலே, தாபவுலோபப்பயலேமாறசரியப்பயலேதயவுடனிங்கிசைக்கின்றேன்

றுழ்த்திருக்காதீர்காண், தீபமெலாங்கடந்திருள்சேர்நிலஞ்சாரப்போவீர்சிறிதுபொழுதி
ருந்தாலுந்திண்ணமிங்கேயழிவீர், சாபமுறுமுன்னமறிந்தோமென்றேயென்னைத்தா
னறியீர்தனித்தலைவன்றலைப்பிள்ளைநானே. (௧௮)

பசியெனுமோர்பெரும்பாவிப்பயலேதுன்பெனுமோர்படுபாவிப்பயலேயாபத்தெ
னும்பொய்ப்பயலே, வசியவத்தைக்கடைப்பயலேதடைப்பயலேயிடரம்வன்பயலேநீ
விரெலாமென்புடைநில்லாதீர், நசியவுமக்குளமுளதோவிக்கணத்தேநீவிர்கடந்துவி
ணாந்தோமின்றுநாடறியாவணத்தே, கசியுமனத்தெனையறியீர்சிற்சபையில்விளங்குங்
கடவுள்மகிழ்ந்தளித்ததனிக்கதிர்ப்பிள்ளைநானே. (௧௯)

மரணமெனும்பெருந்திருட்டுமோர்பாவிப்பயலே வையகமும்வானகமுமற்றகமுங்க
டந்தே, பரணமுறுபேரிருட்டுப்பெருநிலமுந்தாணடிப்பசையறநீயொழிந்திடுகவிங்கி
ருந்தாயெனிலோ, இரணமுறவுனைமுழுதுமடித்திடுவேனிதுதானென்னையுடையானரு
ளாணையென்குருமேலாணை, அரணுறுமென்றனைவிடுத்தேயோடுகநீநானருட்பெ
ருஞ்சோதிப்பதியையடைந்தபிள்ளைகாணே. (௨௦)

திருச்சிற்றம்பலம்.

---

# பேறடைவு.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மணம்புரிகடிகையிரண்டரையெனுமோர்வரையுளதாதலான்மகனே
யெணம்புரிந்துழலேல்சவுளமாதியசெய்தெழிலுறுமங்கலம்புனைந்தே
குணம்புரிந்தெமதுமகனெனுங்குறிப்பைக்கோலத்தாற்காட்டுகவெனவே
வணம்புரிமணிமாமன்றிலென்றந்தைவாய்மலர்ந்தருளினார்மகிழ்ந்தே. (௧)

எம்பொருளெனுமென்னன்புடைமகனேயிரண்டரைக்கடிகையிலுனக்கே
யம்புவிவானமறியமெய்யருளாமங்கைதனைமணம்புரிவித்
தும்பரும்வியப்பவுயர்நிலைதருதுமுண்மையீதாதலாலுலகில்
வெம்புறுதுயர்தீர்ந்தணிந்துகொளென்றார்மெய்ப்பொதுநடத்திறையவரே. (௨)

அன்புடைமகனேமெய்யருட்டிருவையண்டர்கள்வியப்புறநினக்கே
யின்புடையுரிமைமணம்புரிவிப்பாமிரண்டரைக்கடிகையில்விரைந்தே
துன்புடையவைகண்முழுவதுந்தவிர்ந்தேதூய்மைசேர்நன்மணக்கோலம்
பொன்புடைவிளங்கப்புனைந்துகொளென்றார்பொதுநடம்புரிகி[illegible]தாமே. (௩)

ஏதுசேர்மகனேமெய்யருட்டிருவையிரண்டரைக்கடிகையினினக்கே
யூதியம்பெறவேமணம்புரிவிப்பாமுண்மையீதாதலாலினிவீண்
போதுபோக்காமல்மங்கலக்கோலம்புனைந்துளமகிழ்கநீயென்றார்
தீதுதீர்த்தென்னையிளந்தையிற்றானேதெருட்டியசிற்சபையவரே. (௪)

விரைந்துசேண்மகனேயுலகெலாங்களிக்கமெய்யருட்டிருவினைநினக்கே
வரைந்துநன்மணஞ்செய்தொருபெருநிலையில்வைத்துவாழ்விக்கின்றேமதனு
விரைந்துளங்கவலேலிரண்டரைக்கடிகையெல்லையுள்ளெழின்மணக்கோலம்
நிறைந்துறப்புனைதியென்றுவாய்மலர்ந்தார்நிருத்தஞ்செய்யொருத்தருள்ளுவந்தே.

களிப்பொடுமகனேயருளொளித்திருவைக்கடிகையோரிரண்டரையதனி
லொளிப்பிலாதுலகமுழுவதுமறியவுனக்குநன்மணம்புரிவிப்பா
மளிப்புறுமகிழ்வால்மங்கலக்கோலமணிபெறப்புனைகநீவிரைந்தே
வெளிப்படவுரைத்தாமென்றனர்மன்றில்விளங்குமெய்ப்பொருளிறையவரே. (௬)

கலங்கிடேல்மகனேயருளொளித்திருவைக்களிப்பொடுமணம்புரிவிப்பாம்
விலங்கிடேல்வீணிற்போதுபோக்காமல்விரைந்துநன்மங்கலக்கோலம்
நலங்கொளப்புனைந்துமகிழ்கவிவ்வுலகாநவிலுமவ்வுலகவாயிறரு
மிலங்கநின்மணமேயேத்துவரென்றாரியலுறுசிற்சபையவரே. (௭)

ஐயுறேலிதுநம்மாணைநம்மகனேயருளொளித்திருவைநின்றனக்கே
மெய்யுறமகிழ்வால்மணம்புரிவிப்பாம்விரைந்திரண்டரைக்கடிகையிலே
கையுறவனைத்துந்தவிர்ந்துநீமிகவுங்களிப்பொடுமங்கலக்கோலம்
வையமும்வானும்புகழ்ந்திடப்புனைகவென்றனர்மன்றிறையவரே. (௮)

தூங்கலைமகனேயெழுகநீவிரைந்தேதூயநீராடுகதுணிந்தே
பாங்குறவோங்குமங்கலக்கோலம்பண்பொடுபுனைந்துகொள்கடிகை
ஈங்கிரண்டரையிலருளொளித்திருவையெழிலுறமணம்புரிவிப்பா
மேங்கலையிதுநம்மாணைகாணென்றாரியன்மணிமன்றிறையவரே. (௯)

மயங்கிடேல்மகனேயருளொளித்திருவைமணம்புரிவிக்கின்றோமிதுவே
வயங்குநற்றருணக்காலைகாணீநன்மங்கலக்கோலமேவிளங்க
வியங்கொளப்புனைதியிரண்டரைக்கடிகையெல்லையுளென்றுவாய்மலர்ந்தார்
சயங்கொளவெனக்கேதண்ணமுதளித்ததந்தையார்சிற்சபையவரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## உய்வகைகூறல்.

கலிநிலைத்துறை.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருந்தனிச்சோதியம்பலத்திலேநடிக்கும்
பொருட்பெருந்திருநடமதுபோற்றுவீர்புவியீர்
மருட்பெரும்பகைநீக்கிமெய்வாழ்வுபெற்றிடலாம்
தெருட்பெரும்பதத்தாணையீதறிமினோதெளிந்தே. (௧)

வாரஞ்செய்தபொன்மன்றிலேநடிக்கும்பொன்னடிக்கே
ஆரஞ்செய்தணிந்தவர்க்குமுன்னரியன்முதலோர்
வீரஞ்செல்கிலாதறிமினோவேதமேலாணை
ஓரஞ்சொல்கிலேனடுநின்றுசொல்கின்றேனுலகீர். (௨)

ஆதியந்தமுமில்லதோரம்பலத்தாடும்
சோதிதன்னையேநினைமின்கள்சுகம்பெறவிழைவீர்
நீதிகொண்டுரைத்தேனிதுநீவிர்மேலேறும்
வீதிமற்றையவீதிகள்கீழ்ச்செலும்வீதி. (௩)

நாதஞ்சொல்கின்றதிருச்சிற்றம்பலத்திலேநடிக்கும்
பாதஞ்சொல்கின்றபத்தரேசித்தரென்றறிமின்
வேதஞ்சொல்கின்றபரிசிதுமெய்ம்மையாம்பக்க
வாதஞ்சொல்கிலேனடுநின்றுசொல்கின்றேன்மதித்தே. (௪)

துரியமேற்பரவெளியிலேசுகநடம்புரியும்
பெரியதோரருட்சோதியைப்பெறுதலேயெவைக்கும்
அரியபேறுமற்றவையெலாமெளியவேயறிமின்
உரியவிம்மொழிமறைமொழிசத்தியமுலகீர். (௫)

ஆகமாந்தமும்வேதத்தினந்தமுமறையும்
பாகமாம்பரவெளிநடம்பரவுவீருலகீர்
மோகமாந்தருக்குரைத்திலேனிதுசுகமுன்னும்
யோகமாந்தர்க்குக்காலமுண்டாகவேயுரைத்தேன். (௬)

வானநாடரும்நாடருமன்றிலேவயங்கும்
ஞானநாடகக்காட்சியேநாம்பெறல்வேண்டும்
ஊனநாடகக்காட்சியாற்காலத்தையொழிக்கும்
ஈனநாடகப்பெரியர்காள்வம்மினோவிண்டே. (௭)

சமயமோர்பலகோடியுஞ்சமயங்கடோறும்
அமையுந்தெய்வங்களனந்தமுமஞானசன்மார்க்கத்
தெமையுமும்மையுமுடையதோரம்பலத்திறையும்
அமையவம்பலத்தாடுமெம்பொற்பதமுமென்றறிமின். (௮)

ஆறுகோடியாஞ்சமயங்களகத்தினுமவைமேல்
வீறுசோந்தசித்தாந்தவேதாந்தநாதாந்த
தேறுமற்றையவந்தத்துஞ்சிவமொன்றேயன்றி
வேறுகண்டிலேன்கண்டிரேற்பெரியர்காள்விளம்பீர். (௯)

கலையிருந்ததோர்திருச்சிற்றம்பலத்திலேகருணை
நிலையிருந்ததுநினைத்தவையாவையும்பெறலாம்
மலையிருந்தெனவிருப்பிரேல்வம்மினோவன்றிக்
கொலைவிரும்புவீரெனிற்புறத்தேகுமின்குலைந்தே. (௧0)

கதியிருக்கின்றதிருச்சிற்றம்பலத்திலேகருணை
நிதியிருக்கின்றதாதலானீவிர்களெல்லாம்
பதியவிங்ஙனேவம்மினோகொலைபயில்வீரேல்
விதியைகோமினோபோமினோசமயவெம்பகத்தே. (௧௧)

அருள்விளங்கியதிருச்சிற்றம்பலத்திலேயழியாப்
பொருள்விளங்குதல்காண்மினோகாண்மினோபுவியீர்
மருளுளங்கொளும்வாதனைதவிர்ந்தருள்வலத்தால்
தெருள்விளங்குவீர்ஞானசன்மார்க்கமேதெளிமின். (௧௨)

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சொடுகிளத்தல்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அப்பன்வருதருணமிதேயையமில்லைகண்டா யஞ்சாதேயஞ்சாதேயகிலமிசையுள்
ளார்க், கெய்ப்பறவேசத்தியமென்றுரைத்திடுநின்னுரைக்கோரெள்ளளவும்பழுதுவரா
தெனனிறைவனாணை, இப்புவியோவானகமும்வானகத்தினபுறத்துமெவ்வுயிருமெவ்
வெவருமேத்திமகிழ்ந்திடவே, செப்பமுறுதிருவருட்பேரொளிவடிவாய்க்களித்தேசெ
த்தாரையெழுப்புதலுந்திண்ணமுணர்மனனே. (௧)

இறைவன்வருதருணமிதேயிரண்டிலையஞ்சலைநீயெள்ளளவுமையமுறேலெவ்வுல
குங்களிப்ப, நிறைமொழிகொண்டறைகவிதுபழுதுவராதிறையுநீவேறுநினைத்தயரே
னெஞ்சேநான்புகன்ற, முறைமொழியென்னுடையவனருணமொழிந்தமொழியென
க்கோர்மொழியில்லையெனனுடலாவிமுதலனைத்துந்தானே, பொறையுறக்கொண்டருட்
சோதிதன்வடிவுமுயிரும்பொருளுமளித்தெனைத்தானுட்புணர்த்தியதுகாணே. (௨)

என்னிறைவன்வருதருணமிதுகண்டாயிதற்கோரெட்டுணையுமையமில்லையென்னு
ளிருந்தெனக்கே, தனனருட்டெள்ளமுதளிக்குந்தலைவன்மொழியிதுதானசத்தியஞ்ச
த்தியநெஞ்சேசற்றுமயக்கடையேல், மன்னுலகத்துயிர்களெலாங்களித்துவியந்திடவே
வகுத்துரைத்துத்தெரித்திடுகவருநாளுன்வசத்தால், உன்னியுரைத்திடமுடியாதாதலி
னின்றேயுரைத்திடுதலுபகாரமுணர்ந்திடுகவிரைந்தே. (௩)

எல்லாஞ்செயவல்லதனிப்பெருந்தலைமைச்சித்தனெனமறையாகமம்புகலுமென்
னிறைவன்மகிழ்ந்தே, நல்லார்கள்வியக்கவெனக்கிசைத்தபடியிங்கோனுனக்குமொ
ழிகின்றேனன்றறிவாயமனனே, பல்லாருங்களிப்படையப்பகலிரவுந்தோற்றுப்பண்பி
னருட்பெருஞ்சோதிநண்பினொடுநமக்கே, யெல்லாநன்மைகளுமுறவருதருணமிது
வேயிவ்வுலகமுணர்ந்திடநீயிசைத்திடுகவிரைந்தே. (௪)

கருநாள்களத்தனையுங்கழிந்தனநீசிறிதுங்கலக்கமுறேலிதுதொடங்கிக்கருணைநட
ப்பெருமான், தருநாளிவ்வுலகமெலாங்களிப்படையநமதுசாமியினருட்பெருஞ்சோதித
ழைத்துமிகவிளங்கும், திருநாள்களாமிதற்கோரையமில்லையிதுதான்றிண்ணமிதையுல
கறியத்தெரித்திடுகமனனே, வருநாளிலுரைத்திடலாமெனநினைத்துமயங்கேல்வருநா
ளிலினபமயமாகிநிறைவாயே. (௫)

உள்ளபடியுரைக்கின்றேன் சத்தியமா முறையீ துணர்ந்திடுகமனனேநீயுலகமெலா
மறிய், வள்ளல்வருதருணமிது தருணமிதேயென்றுவகுத்துரைத்துத்தெரித்திடுகமயக்
கமனுத்துணையுங், கொள்ளலையென் குருநாதனருட்சோதிப்பெருமான் குறிப்பிதுவெ
ன்குறிப்பெனவுங்குறியாதேகண்டாய், நள்ளுலகிலினிநாளைக்குரைத்துமெனத்தாழ்க்
கேலநாளைதொட்டுநமக்கொழியாஞானநடக்களிப்பே. (சு)

மாயைவினையாணவமாமலங்களெலாந்தவிர்த்து வாழ்வளிக்கும்பெருங்கருணைவ
ள்ளல்வருதருணம், மேயதிதுவாமிதற்கோரையமிலையிங்கே விரைந்துலகமறிந்திட
வேவிளம்புகநீமனனே, நாயகன்றனகுறிப்பிதுவென்குறிப்பெனநீநினையேல் நாளைக்
கேவிரித்துரைப்பேமெனமதித்துத்தாழ்க்கேல், தூயதிருவருட்சோதித்திருநடங்காண்
கின்றதூயதிருநாள்வருநாளதொடங்கியொழியாவே. (எ)

மாற்றுரைக்கமுடியாததிருமேனிப்பெருமான் வருதருணமிதுகண்டாய்மனனே
நீமயங்கேல, நேற்றுரைத்தேனிலையுனக்கிங்கிவ்வாறென்னிறைவன் நிகழ்த்துகவின்
றெனறபடிநிகழ்த்துகின்றேனிதுதான, கூற்றுதைத்ததிருவடிமேலாணையிதுகடவுள்
குறிப்பெனக்கொண்டுலகமெலாங்குதுகலிக்கவிரைந்தே, சாற்றிடுதிவருநாளிலுரைத்
துமெனத்தாழ்க்கேலதனித்தலைவனருணடஞ்செயசாற்றொழியாவினியே. (அ)

ஏதுமறியாச்சிறியபயல்களினுஞ்சிறியேனிப்பெரியவார்த்தைதனக்கியானோவென்
னிறைவ, னோதுகநீயெனறபடியோதுகின்றேனமனனேயுள்ளபடிசத்தியமீதுணர்ந்
திடுகநமது, தீதுமுழுதுந்தவிர்த்தேசித்தியெலாமளிக்கத்திருவருளாமபெருஞ்சோதிய
ப்பன்வருதருண, மீதிதுவேயெனறுலகமறியவிரைந்துரைப்பாயெல்லாருங்களிப்ப
டைந்துள்ளிசைந்தேத்தியிடவே. (கூ)

தனித்தலைவனெலாஞ்செய்வல்லசித்தன்ஞானசபைத்தலைவனென்னுளத்தேத
னித்திருந்துள்ளுணர்த்தக, கனித்தவுளத்தொடுமுணர்ந்தேயுணர்த்துகின்றேனிதை
யோரசத்தெனநீநினையேல்மெய்க்கருத்துரையெனறறிக, இனித்தவருட்பெருஞ்
சோதியாணையெல்லாமுடையவிறைவனவருதருணமிதுசத்தியமாமிதனைப், பனித்த
வுலகவரறிந்தேயுய்யுமவகையினனேபகர்ந்திடுகநாளையருட்பரமசுகச்சாறே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

# தலைவிகூறல்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தந்தேகமெனக்களித்தார் தம்மருளும்பொருளுந்தம்மையுமிங்கெனக்களித்தாரெ
ம்மையினுமபிரியா, ரெந்தேகமதிற்புகுந்தாரெனனுளத்தேயிருந்தாரென்னுயிரிற்கலந்
தநடத்திறையவர்காலையிலே, வந்தேயிங்கமர்ந்தருளவராதலினால்விரைந்தேமாளிகை
யையலங்கரித்துவைத்திடுதியிதற்குச், சந்தேகமில்லையென்றன்றனித்தலைவர்வார்த்
தைசத்தியஞ்சத்தியமாதேசத்தியஞ்சத்தியமே. (க)

நன்பாட்டுமறைகளுக்குமாலயர்க்குங்கிடையார் நம்மளவிற்கிடைப்பாரோவென் றுநினைத்தேங்கி, யென்பாட்டுக்கிருந்தேனைவலிந்துகலந்தணைந்தேயின்பமுறத்தனி மாலையிட்டநடத்திறைவர், முன்பாட்டுக்காலையிலேவருகுவர்மாளிகையைமுழுதுமல ங்கரித்திடுகவையுறவோடொருநீ, தன்பாட்டுக்கிருந்திடேலையாதிருவாணைசத்திய ஞ்சத்தியமாதேசத்தியஞ்சத்தியமே. (௨)

முன்பாட்டுக்காலையிலேவருகுவரென்கணவா மோசமிலைமோசமெனமொழிகின் றார்மொழிக, பின்பாட்டுக்காலையிலேநினைத்தவெலாமுடியும்பிசகிலையிம்மொழிசிறிது ம்பிசகிலையிவ்வுலகில், துன்பாட்டுச்சிற்றினத்தார்சிறுமொழிகேட்டுள்ளந்துளங்கேல் நம்மாளிகையைச்சூழவலங்கரிப்பாய், தன்பாட்டுத்திருப்பொதுவில்நடத்திறைவரா ணைசத்தியஞ்சத்தியமாதேசத்தியஞ்சத்தியமே. (௩)

உள்ளுண்டவுண்மையெலாம்நானறிவேனென்னையுடையபெருந்தகையறிவாருல கிடத்தேமாலயக், கள்ளுண்டசிற்றினத்தாராயாதறிவாரெனத்துகணவர்திருவரவிந்தக்கா லையிலாங்கண்டாய், நள்ளுண்டமாளிகையைமங்கலங்கணிரம்பநன்குபுனைந்தலங்கரிப் பாய்நான்மொழிந்தமொழியைத், தள்ளுண்டிங்கையுறேல்நடத்திறைவராணைசத்தி யஞ்சத்தியமாதேசத்தியஞ்சத்தியமே. (௪)

என்னுடையதனிக்கணவரருட்சோதியுண்மையானறிவேனுலகவர்களெங்ஙனங் கண்டறிவா, ருன்னலறவுண்ணுதற்குமுறங்குதற்குமறிவாருலம்புதல்கேட்டையமு றேலோங்கியமாளிகையைத், துன்னுறுமங்கலம்விளங்கவலங்கரிப்பாயிங்கேதூங்குத லாலென்னபலன்சோர்வடையேல்பொதுவிற், றன்னுடையநடம்புரியுந்தலைவர்திரு வாணைசத்தியஞ்சத்தியமாதேசத்தியஞ்சத்தியமே. (௫)

என்னைமணமாலையிட்டாரென்னுயிரிற்கலந்தாரெல்லாஞ்செய்வல்லசித்தரெனக் கறிவித்தனை, யின்னவுலகினரறியாராதலினாற்பலவேயியம்புகின்றாரியம்புகநந்தலைவ ர்வருதருணம், மன்னியகாலையிலாகுமாளிகையைவிரைந்துமங்கலங்கள்புனைந்திடுகமய ங்கியையமடையேல், தன்னிகர்தானும்பொதுவில்நடம்புரிவாராணைசத்தியஞ்சத்திய மாதேசத்தியஞ்சத்தியமே. (௬)

இளையனந்தமறையாலும்நிச்சயிக்கக்கூடாக் கிளரொளியாரென்னளவிற்கிடைத் ததனித்தலைவ, ரளையவெனக்குணர்த்தியதையானறிவேனுலகரறிவாரோவருளை கொண்டையமுறேலிங்கே, விளைவடையேன்மாளிகையைமங்கலங்கணிரம்பவினிது புனைந்தலங்கரிப்பாய்காலையிதுகண்டாய், தளாவறச்சிற்றம்பலத்தேநடம்புரிவாராணை சத்தியஞ்சத்தியமாதேசத்தியஞ்சத்தியமே. (௭)

ஆரறிவாரெல்லாஞ்செய்வல்லவரென்னுள்ளே யறிவித்தவுண்மையைமாலயன்மு தலோரறியார், பாரறியாதயல்வேறுபகாவதுகேட்டொருநீபையுளொடுமையமுறேல் காலையிதுகண்டாய், நேருறநீவிரைந்துவிரைந்தணிபெறமாளிகையைநீடவலங்கரிப்பா யுண்ணேயமொடுகளித்தே, தாரகமிங்கெனக்கானநடத்திறைவராணைசத்தியஞ்சத்தி யமாதேசத்தியஞ்சத்தியமே. (௮)

ஐயரெனக்குள்ளிருந்திங்கறிவித்தவரத்தை யாரறிவார்நானறிவேனவரறிவாரல் லாற், பொய்யுலகரறிவாரோபுல்லறிவாற்பலவே புகல்கின்றாரதுகேட்டுப்புந்திமயக்

கடையேல், மெய்யரெனையாளுடையாரவருகின்றதருண மேவியதுமாளிகையையல
ங்கரிப்பாய்விரைந்தே, தையலொருபாலுடையநடத்திறைவராணை சத்தியஞ்சத்திய
மாதேசத்தியஞ்சத்தியமே. (௯)

உடையவரென்னுளத்திருந்தேயுணர்வித்தவரத்தையுலகவர்களறியார்களாதலினு
ற்பலவே, யிடைபுகலகின்றாரதுகேட்டையமுறேலிங்கேயிரவுவிடிந்ததுகாலையெய்தி
யதாலினியே,யடைவுறநந்தனித்தலைவாதடையறவந்தருள்வாரணிபெறமாளிகையை
விரைந்தலங்கரித்துமகிழ்க, சடையசையப்பொதுநடஞ்செய்யிறைவர்திருவார்த்தை
சத்தியஞ்சத்தியமாதேசத்தியஞ்சத்தியமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# உறுதிகூறல்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கட்டோடேகனத்தோடேவாழ்கின்றோமென்பீர் கண்ணோடேகருத்தோடேகரு
த்தனைக்கருதீர், பட்டோடேபணியோடேதிரிகின்றீர்தெருவில்பசியோடேவந்தாரை
ப்பார்க்கவுநேரீர், கொட்டோடேமுழக்கோடேகோலங்காண்கின்றீர்குணத்தோடே
குறிப்போடேகுறிப்பதைக்குறியீர், எட்டோடேயிரண்டுசேர்த்தெண்ணவுமறியீரெத்
துணைகொள்கின்றீர்பித்துலகீரே. (௧)

ஆறுமலவியாமலடைந்தகோபத்தீயடர்வுறவுலகிடையஞ்சாதுதிரிவீர்
மாறுமலமனஞ்சென்றவழிசென்றுதிகைப்பீர்வழிதுறைகாண்கிலீர்பழிபடும்படிக்கே
நாறுதமலர்போலும்வாழ்கின்றீர்மூப்புநரைதிரைமரணத்துக்கென்செயக்கடவீர்
ஏறுமலவீணிலேயிறங்குகின்றீரேயெத்துணைகொள்கின்றீர்பித்துலகீரே (௨)

ஆயாமையாலேநீராதியனாதியாகியசோதியையறிந்துகொள்கில்லீர்
மாயாமைபிறவாமைவழியொன்றுமுணரீர்மறவாமைநினையாமைவகைசிறிதறியீர்
காயாமைபழுக்கின்றகருத்தையுங்கருதீர்கண்மூடித்திரிகின்றீர்கனிவோடுமிரப்போர்க்
கீயாமையொன்றையேயினறுணையெனப்பீரெத்துணைகொள்கின்றீர்பித்துலகீரே. (௩)

சாமாந்தராகாததரஞ்சிறிதுணரீர்தத்துவஞானத்தையிற்றெனத்தெரியீர்
மாமாந்தநோயுற்றகுழவியிற்குழைந்தீர்வாழ்க்கையிலற்பமகிழ்ச்சியும்பெற்றீர்
காமாந்தகாரத்திறகண்மூடித்திரிவீர்கற்பனைகற்கிலீர்கருத்தனைக்கருதா
தேமாந்துதூங்குகின்றீர்விழிக்கின்றீரெத்துணைகொள்கின்றீர்பித்துலகீரே

அச்சையுமுடம்பையுமறிவகையறியீரம்மையுமப்பனுமாரெனத்தெரியீர்
பச்சையுஞ்செம்மையுங்கருமையுங்கூடிப்பலித்தநும்வாழ்க்கையிற்பணயொன்றுமில்லீர்
பிச்சையிட்டுண்ணவும்பின்படுகின்றீர்பின்படுநிமையின்முன்படுகின்றீர்
இச்சையிற்கண்மூடியெச்சுகங்கண்டீரெத்துணைகொள்கின்றீர்பித்துலகீரே. (௫)

வட்டிமேல்வட்டிகொள்மாாக்கத்தில்நின்றீாவட்டியைவளர்க்கின்றமாாக்கத்தை யறியீர், பெட்டிமேல்பெட்டிவைத்தாள்கின்றீாவயிற்றுப்பெட்டியைநிரப்பிக்கொண் டொட்டியுள்ளிருந்தீர், பட்டினிகிடப்பாரைப்பார்க்கவுநேரீாபழங்கஞ்சியாயினும்வழ ங்கவுநினையீர், எட்டிபோல்வாழ்கின்றீாகொட்டிபோற்கிளைதீரெத்துணைகொள்கின் றீாபித்துலகீரே. (சு)

வன்சொல்லினல்லதுவாய்திறப்பறியீர்வாய்மையுந்தூய்மையுங்காய்மையில்வளர் ந்தீர், முன்சொல்லுமாறென்றுபின்சொல்வதொன்று மூட்டுகின்றீாவினைமூட்டை யைக்கட்டி, மன்சொல்லுமாாக்கத்தைமறந்துதுன்மார்க்க வழிநடக்கின்றீரம்மரணத் தீர்ப்புக்கே, என்சொல்லவிருக்கின்றீர்பின்சொல்வதறியீரெத்துணைகொள்கின்றீாபி த்துலகீரே. (எ)

துன்மார்க்கநடையிடைத்தூங்குகின்றீரேதூக்கத்தைவிடுகின்றதுணையொன்றுகருதீர்
சன்மார்க்கசங்கத்தைச்சார்ந்திடவிழையீர்சாவையும்பிறப்பையுந்தவிர்ந்திடவிரும்பீர்
பன்மார்க்கஞ்செல்கின்றபடிற்றுளமடக்கீர்பசித்தவாதம்முகம்பாாத்துணவளியீா
என்மார்க்கமெச்சுகம்யாதுநுமவாழ்க்கையெதுணைகொள்கின்றீாபித்துலகீரே. (அ)

பொய்கட்டிக்கொண்டுநீர்வாழ்கின்றீரிங்கேபுலைகட்டிக்கொண்டவீப்பொய்யுடல் வீழ்ந்தால், செயகட்டிவாழ்கின்றசெருக்கற்றுநரகிற் சிறுபுழுவாகித்திகைத்திடலறி யீா,கைகட்டிவாயபொதிநிற்பாரைக்கணடேகைகொட்டிச்சிரிக்கின்றீாகருணையொ ன்றில்லீர், எய்கட்டியிடைமொய்க்குமீயினுஞ்சிறியீ ரெதுணைகொள்கின்றீாபித்து லகீரே. (கூ)

பண்ணுததீமைகள்பண்ணுகின்றீரேபகராதவனமொழிபகருகின்றீரே
நண்ணுததீயினநண்ணுகின்றீரேநடவாதநடத்தைகள்நடக்கவநதீரே
கண்ணுகக்காகவின்றகருத்தனைநினைந்தேகண்ணுரநீாவிட்டுக்கருதறியீரே
எண்ணுததெண்ணவுநேருமோாகாலமெதுணைகொள்கினறீாபிததுலகீரே. (கO)

திருசசிற்றம்பலம்.

---

## இ து வு ம து.

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சாதியிலேமதங்களிலேசமயநெறிகளிலேசாத்திரச்சந்தடிகளிலேகோத்திரச்சண் டையிலே, ஆதியிலேயபிமானித்தலைகின்றவுலகீ ரலைந்தலைந்துவீணேநீரழிதலழகல வே, நீதியிலேசன்மாாக்கநிலைதனிலேஞானநிருததமிடுநதனித்தலைவரொருததரவா தாமே, வீதியிலேயருட்சோதிவிளையாடல்புரியமேவுகின்றதருணமிதுகூவுகின்றேனு மையே. (க)

காடுவெட்டிநிலந்திருத்திக்காட்டெருவும்போட்டுக்கரும்பைவிட்டுக்கடுவிளைத்து க்களிக்கின்றவுலகீர், கூடுவிட்டுப்போயினபின்னெதுபுரிவீரெங்கே குடியிருப்பீரை யோநீாகுறிததறியீரிங்கே, பாடுபட்டீர்பயனறியீர்பாழ்க்கிறைத்துக்கழித்தீாபட்டதெ லாம்போதுமிதுபரமர்வருதருணம், ஈடுகட்டிவருவீரேலின்பமிகப்பெறுவீரெண்மையு ரைததேனலநானுண்மையுரைத்தேனே. (உ)

ஆற்றுவெள்ளம்வருவதன்முன்னணைபோடவறியீரகங்காரப்பேய்பிடித்தீராடுதற்கேயறிவீர், கூற்றுவருங்காலதனுக்கெதுபுரிவீரையோகூற்றுதைத்ததசேவடியைப்போற்றவிரும்பீரே, வேற்றுரைத்துவினைபெருக்கிமெலிகின்றவுலகீர் வீணுலகக்கொடுவழக்கைவிட்டுவிட்டுவம்மின், சாற்றுவக்கவெனதுதனித்தந்தைவருகின்றதருணமிதுசுத்தியஞ்சிற்சத்தியைச்சார்வதற்கே. (௩)

பொய்விளக்கப்புகுகின்றீர்போதுகழிக்கின்றீர்புலைகொலைகள்புரிகின்றீர்கலகல வென்கின்றீர், கைவிளக்குப்பிடித்தொருபாழ்ங்கிணற்றில்விழுகின்ற களியரெனக்களிக்கின்றீர்கருத்திருந்துங்கருதீர், ஐவிளக்குமூப்புமரணாதிகளைநினைத்தாலடிவயிற்றைமுறுக்காதோகொடியமுயற்றுலகீர், மெய்விளக்கவெனதுதந்தைவருகின்றதருணமேவியதீண்டடைவீரேலாவிபெறுவீரே. (௪)

எய்வகைசாமதங்களிலேபொய்வகைச்சாத்திரங்களெடுத்துரைத்தேயெமதுதெய்வமெமதுதெய்வமென்று கைவகையேகதறுகின்றீர்தெய்வமொன்றென்றறியீர், கரிபிடித்துக்கலகமிட்டபெரியரினும்பெரியீர், ஐவகையபூதவுடம்பழிந்திடிலென்புரிவீரழியுடம்பையழியாமையாக்கும்வகையறியீர், உய்வகையென்றனித்தந்தைவருகின்றதருணமுற்றறிவனுற்றிடுவீர்பெற்றிடுவீருவப்பே. (௫)

உடம்புவருவகையறியீருயிர்வகையையறியீ ருடல்பருக்கவுண்டுநிதமுறங்குதற்கேயறிவீர், மடம்புகுபேய்மனத்தாலேமயங்குகின்றீர்மனத்தைவசப்படுத்தீர்வசப்படுத்தும்வழிதுறைகற்றறியீர், இடம்பெறுபொய்வாழ்க்கையிலேயின்பதுன்பமடுத்தேயெண்ணியெண்ணியிளைக்கின்றீரேழையுலகீரே, நடம்புரியென்றனித்தந்தைவருகின்றதருணம்நண்ணியதுநண்ணுமினோபுண்ணியஞ்சார்வீரே. (௬)

நரைமரணமூப்பறியாநல்லவுடம்பினரேநற்குலத்தாரெனவறியீர்நானிலத்தீர்நீவிர், வரையிலுயர்குலமென்றுந்தாழ்ந்தகுலமென்றும் வருகின்றீரிருகுலமுமாண்டிடக்காண்கின்றீர், புரையுறுநுங்குலங்களெலாம்புழுக்குலமென்றறிந்தே புத்தமுதமுண்டோங்குமபுனிதகுலம்பெறவே, உரைபெறுமென்றனித்தந்தைவருகின்றதருணமுற்றறிவனுற்றிடுவீருண்மையுரைத்தேனே. (௭)

கனமுடையேங்கட்டுடையேமென்றுநினைத்திங்கே களித்திறுமாந்திருக்கின்றீரொளிப்பிடமுமறியீர், சினமுடையகூற்றுவருஞ்செய்தியறியீரோசெத்தநுமதினத்தாரைச்சிறிதுநினையீரோ, இனகரன்போற்சாகாத்தேகமுடையவரேதிருவுடையாரெனவறிந்தேசேர்ந்திடுமினீண்டே, மனமகிழ்ந்துகேட்கின்றவரமெல்லாமெனக்கேவழங்குதற்கென்றனித்தந்தைவருதருணமிதுவே. (௮)

வையகத்தீர்வானகத்தீர்மற்றகத்தீர்நுமது வாழ்க்கையெலாம்வாழ்க்கையெனமதித்துமயங்காதீர், மையகத்தேயுறுமரணவாதனையைத்தவிர்த்தவாழ்க்கையதேவாழ்க்கையெனமதித்ததனைப்பெறவே, மெய்யகத்தேவிரும்பியிங்கேவந்திடுமினென்துமெய்ப்பொருளாந்தனித்தந்தையித்தருணந்தனிலே, செய்யகத்தேவளர்ஞானசித்திபுரந்தனிலேசித்தாடல்புரிகின்றார்திண்ணமிதுதானே. (௯)

கரணமிகக்களிப்புறவேகடலுலகும்வானுங் கதிபதியென்றாளுகின்றீரதிபதியீர் நீவிர், மரணபயந்தவிராதேவாழ்வதிலென்பயனோமயங்காதீருயங்காதீர்வந்திடுமினீண்

டே, திரணமுமோனைங்தொழிலைச்செய்யவொளிவழங்குஞ் சிததிபுரமெனவோங்குமு த்தரசிற்சபையில், சரணமெனககளித்தெனையுந்தானுக்கவெனதுதனித்தந்தைவருகின் றதருணமிதுதானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## சுத்தசிவநிலை.

### நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

கண்ணிற்கலந்தான்கருததிற்கலந்தானென்
எண்ணிறகலந்தேயிருககின்ருன் - பண்ணிற்
கலந்தானெனபாட்டிற்கலந்தானுயிரிற்
கலநதான்கருணைகலநது. (௧)

எல்லாநலமுமெனககேகொடுக்கின்ருன்
எல்லாஞ்செயவல்லானெமபெருமான - எல்லாமாய்
நின்ருன்பொதுவில்நிருததமபுரிகின்ருன
ஒன்ருகினன்ருனுவநது. (௨)

எண்ணுகின்றேனெண்ணங்களெல்லாநதருகினருன்
பண்ணுகினறேன்பண்ணுவிததுபபாடுகினருன் - உண்ணுகின்றேன்
தெள்ளமுதமுள்ளநதெளியததருகினருன்
வள்ளனடராஜனமகிழநது. (௩)

சித்தியெலாந்தந்தே திருவம்பலததாடு
நித்தியனென்னுள்ளேநிறைகினருன் - சததியமீ
தந்தோவுலகீரறியீரோநீவிரெலாஞ்
சந்தோடமாயிருமினசாாநது. (௪)

அய்யாவென்ருேர்காலழைககின்றேனப்பொழுதே
எய்யேன்மகனேயெனறெயதுகின்ருன் - ஐயோவென்
னப்பன்பெருங்கருணையாாகுணலெகததீா
செப்பமுடனபோறறுமிஞேசோநது. (௫)

அப்பாவென்ருேகாலழைககினறேனப்பொழுதே
அப்பாமகனேயெனருாகின்ருன - துப்பா
சடையான்சிற்றம்பலத்தான தானேதானுனென்
உடையானுளத்தேயுவநது. (௬)

தானேவந்தென்னுளத்தேசாாந்துகலநதுகொண்டான்
தானேயெனக்குததருகின்ருன் - தானேநான்
ஆகப்புரிந்தானென்னப்பன்பெருங்கருணை
மேகத்திற்குண்டோவிளம்பு. (௭)

பாலுங்கொடுத்தான்பதிதிறக்குமோதிறவு
கோலுங்கொடுத்தான்குணங்கொடுத்தான் - காலுந
தலையுமறியுநதரமுங்கொடுத்தான
நிலையுங்கொடுத்தானிறைந்து. (அ)

வெவ்வினையுமாயைவினைவுந்தவிர்ந்தனவே
செவ்வையறிவினபஞ்சிறந்தனவே - எவ்வயினும்
ஆனசிற்றம்பலத்தேயாடுகின்றான் றண்ணருளாந
தேனுண்டோங்கியதுதோந்து. (கூ)

வஞ்சவினையெல்லாமடிந்தனவன்மாயையிருள்
அஞ்சியெனைவிட்டேயகன்றனவால் - எஞ்சலிலா
இன்பமெலாமெனறனையேயெய்திநிறைந்தனவால்
துன்பமெலாம்போனதொலைந்து. (க0)

அம்மைதிரோதையகன்றாளெனைவிரும்பி
அம்மையருட்சத்தியடைந்தனளே - இம்மையிலே
மாமாயைநீங்கினள்பொன்வண்ணவடிவுற்றதென் றுன்
சாமாறிலையெனக்குத்தான். (கக)

நானேதவம்புரிந்தேனுனிலத்தீரம்பலவன்
றானேவந்தென்னைத்தடுத்தாண்டான - ஊனே
புகுந்தானென்னுள்ளம்புகுந்தானுயிரிற
புகுந்தான்கருணைபுரிந்து. (கஉ)

ஒன்றேசிவமென்றுணர்ந்தேனுணர்ந்தாங்கு
நின்றேமெய்ஞ்ஞானநிலைபெற்றேன் - நன்றேமெய்ச்
சித்தியெலாம்பெற்றேன்றிருவம்பலத்தாடி
பத்தியெலாம்பெற்றபலன. (கங)

தூக்கங்கெடுத்தானசுகங்கொடுத்தானென்னுளத்தே
யேக்கந்தவிர்த்தானிருளறுத்தான் - ஆக்கமிகத்
தந்தானெனையீன்றதந்தையேயென்றழைக்க
வந்தானென்னப்பன்மகிழ்ந்து. (கச)

வாட்டமெலாந்தீர்த்தான்மகிழ்வளித்தான்மெய்ஞ்ஞான
நாட்டமெலாந்தந்தானலங்கொடுத்தான - ஆட்டமெலாம்
ஆடுகநீயென்றான்றனனைந்தவாகழலைப்
பாடுகநீயென்றான்பரன. (கரு)

தானெனும்பேதந்தன்னைத்தவிர்த்தானை
ஞானசிற்றம்பலவனந்தோநான் - வானோர்
செயற்கரியதவஞ்செய்தேன்மகிழ்கின்றேன்
எய்தற்கரியசுகமெய்ந்து. (கசு)

சுத்தவடிவுஞ்சுகவடிவாமோங்கார
நித்தவடிவுநிறைந்தோங்கு - சித்தெனுமோர்
ஞானவடிவுமிங்கேநான்பெற்றேனெங்கெங்கும்
தானவிளையாட்டியற்றத்தான். (கஎ)

நானுரைக்கும்வார்த்தையெலாம்நாயகன்சொல்வார்த்தையன்றி
நானுரைக்கும்வார்த்தையன்றுநாட்டீர்நா - னேனுரைப்பேன்
நானொருநான்கெனவோர்ஞானவுணர்வேதுசிவம்
ஊனொடிருந்தோதுவழி. (கஅ)

ஆரணமுமாகமமுமாங்காங்குரைக்கின்ற
காரணமுங்காரியமுங்காட்டுவித்தான் - தாரணியிற்
கண்டேன்களிக்கின்றேன்கங்குல்பகலற்றவிடத்
துண்டேனமுதமுவந்து. (ககூ)

துன்மார்க்கமெல்லாந்தொலைத்துவிட்டேன்சுத்தசிவ
சன்மார்க்கசங்கந்தலைப்பட்டே - னென்மார்க்கம்
நன்மார்க்கமென்றேவானாட்டார்புகழ்கின்றார்
முன்மார்க்கத்தாலேமகிழ்ந்து. (உ0)

புன்மார்க்கமெல்லாம்பசையற்றொழிந்தனவே
சன்மார்க்கமொன்றேதழைத்ததுவே - சொன்மார்க்கத்
தெல்லாவுலகுமிசைந்தனவேயெம்பெருமான்
கொல்லாநெறியருளைக்கொண்டு. (உக)

சாதிகுலமென்றுஞ்சமயமதமென்றும்ப
நீதியிலாசிரமநீட்டென்று - மோதுகின்ற
பேயாட்டமெல்லாம்பிதிர்ந்தொழிந்தவேபிறர்தம்
வாயாட்டந்தீர்ந்தனவேமற்று. (உஉ)

சிந்தாகுலந்தவிர்த்துச்சிற்றம்பலப்பெருமான்
வந்தானென்னைத்தானவலிந்தழைத்தே - ஐந்தொழிலும்
நீயேசெய்யென்றெனக்கேநோக்களித்தானென்னுடைய
தாயேயனையானறிந்து. (உங)

கூகாவெனவடுத்தோர்கூடியழாதவண்ணம்
சாகாவரமெனக்கேதந்திட்டான் - ஏகா
வனேகாவெனமறைகளேத்துஞ்சிற்றம்பலத்தான்
மாகாதலனுமகிழ்ந்து. (உச)

நாடுகின்றதெம்பெருமானாட்டமதேநானுலகில்
ஆடுகின்றதெந்தையருளாட்டமதே - பாடுகின்ற
பாட்டெல்லாமம்பலவன்பாதமலர்ப்பாட்டே
வீட்டெல்லாமாங்கவன்றன்வீட்டு. (உரு)

சத்தியஞ்செய்கின்றேன்சகத்தீரறிமின்கள்
சித்தியெலாம்வல்லசிவமொன்றே - நித்தியமென்
றெண்ணுமெண்ணத்தாலேநம்மெண்ணமெலாங்கைகூடும்
நண்ணுமின்பத்தேயென்றுநான்.” (உசு)

நானேதவம்புரிந்தேனம்பெருமானல்லருளால்
நானேயருட்சத்திநாட்டடைந்தேன் - நானே
அழியாவடிவமவைமூன்றும்பெற்றேன்
இழியாமலாடுகின்றேனிங்கு. (உஎ)

எல்லுலகுமண்டங்களெத்தனையுநான்காண
இவ்வுலகிலெந்தையெனக்களித்தான் - எவ்வுயிரும்
சன்மார்க்கசங்கந்தனையடையச்செய்வித்தே
யென்மார்க்கங்காண்பேனினி. (உஅ)

சாத்திரங்களெல்லாந்தடுமாற்றஞ்சொல்வதன்றி
நேத்திரங்கள்போற்காட்டநேராவே - நேத்திரங்கள்
சிற்றம்பலவன்றிருவருட்சீர்வண்ணமென்றே
உற்றிங்கறிந்தேனுவந்து. (உகூ)

வேதாகமங்களென்றுவீண்வாதமாடுகின்றீர்
வேதாகமத்தின்விளைவறியீர் - சூதாகச்
சொன்னவலாலுண்மைவெளிதோன்றவுரைத்தவிலை
என்னபயனோவிவை. (௩0)

சாகாதகல்விதரமறிதல்வேண்டுமென்றும்
வேகாதகாலுணர்தல்வேண்டுமுடன் - சாகாத்
தலையறிதல்வேண்டுந்தனியருளாலுண்மை
நிலையடைதல்வேண்டுநிலத்து. (௩௧)

பொய்யுரையென்றெண்ணுதிரேற்போமின்புறக்கடையில்
மெய்யுரையென்றெண்ணுதிரேன்மேவுமினோ - ஐயனருள்
சித்தியெலாம்வல்லதிருக்கூத்துலவாமல்
இத்தினந்தொட்டாடுகிற்பானிங்கு. (௩௨)

வான்வந்ததேவர்களுமாலயனுமற்றவரும்
தான்வந்துசூழ்ந்தார்தலைக்கடையில் - தேன்வந்த
மங்கைசிவகாமவல்லியொடுமெம்பெருமா
னிங்குநடஞ்செய்வானினி. (௩௩)

சத்தியெலாங்கொண்டதனித்தந்தைநடராஜன்
சித்தியெலாம்வல்லான்றிருவாளன் - நித்தியன்றான்
ஊழிபலசென்றாலுமோவாமலிவ்விடத்தே
வாழிநடஞ்செய்வான்மகிழ்ந்து. (௩௪)

இன்றுதொடங்கியிங்கேயெம்பெருமானெநநாளு
நனறுதுலங்கநடம்புரிவான - என்றுமெனசொல்
சத்தியமென்றெண்ணிச்சகத்திரடைமின்கள்
நித்தியம்பெற்றுய்யலாநீர். (நடு)

என்னுடலுமென்பொருளுமென்னுயிருந்தான்கொண்டான்
தன்னுடலுநதன்பொருளுந்தன்னுயிரு - மென்னிடததே
தநதானருட்சிற்சபையப்பாவென்றழைததேன
வந்தான்வந்தானுண்மகிழ்ந்து. (நசா)

செத்தாரையெல்லாந்திரும்பவெழுப்புதலிங்
கெத்தால்முடியுமெனிலெம்மவரே - சித்தாம்
அருட்பெருஞ்சோதியதனுனமுடியுந்
தெருட்பெருஞ்சத்தியமீதே. (நஎ)

இவ்வுலகிற்செத்தாரையெல்லாமெழுகவெனி
லெவ்வுலகும்போற்றவெழுந்திருப்பார் - செவ்வுலகிற்
சிற்றம்பலத்தான்றிருவருள்பெற்றோரோக்க
முற்றவரையுற்றவர்களுற்று. (நஅ)

யான்புரிதல்வேண்டுங்கொலிவ்வுலகிற்செத்தாரை
ஊன்புரிந்துமீளவுயிர்ப்பித்தல் - வான்புரிந்த
அம்பலத்தானல்லருளாலந்தோநான்மேற்போர்த்த
கம்பலத்தாலாகுங்களித்து. (நகூ)

என்னேயுலகிலிறந்தாரெழுதல்மிக
அன்னேயதிசயமென்றோதுகின்றார் - இன்னே
திருவம்பலததான்றிருநோக்கம்பெற்றார்க்
குருவம்பலத்தேயென்றுன. (சo)

ஆடாதீர்சற்றுமசையாதீர்வேறொன்றை
நாடாதீர்பொய்யுலகைநம்பாதீர - வாடாதீர்
சன்மார்க்கசங்கத்தைச்சாராவீரவிரைந்தினியிங்
கென்மார்க்கமுமொன்றாமே. (சக)

மார்க்கமெலாமொன்றாகுமாநிலத்தீராவாய்மையிது
தூக்கமெலாநீக்கித்துணிந்துளததே - யேககம்விட்டுச்
சன்மார்க்கசங்கத்தைச்சாரந்திடுமினசததியநீர்
நன்மார்ககஞ்சேர்வீரிந்நாள். (சஉ)

இந்நாளேகண்டீரிறந்தாரெழுகின்ற
நன்றுளென்வார்த்தைதனைநம்புமினோ - இந்நாள்
அருட்பெருஞ்சோதியடைகின்றநாண்மெய்
யருட்பெருஞ்சத்தியமீதாம். (சந)

ஏமாந்திருக்குமெம்மரங்காளிவ்வுலகில்
சாமாந்தராகாத்தரம்பெறவே - காமாந்த
காரத்தைவிட்டுக்கருதுமினோவித்தருணம்
நீரத்தைச்சோர்வீர்நிசம் (சச)

வீணேபராக்கில்விடாதீருமதுளத்தை
நாணேயுடையநமரங்காள் - ஊணுகத
தெள்ளமுதமின்றெனக்குச்சோந்தளித்தான்சித்தாட
உள்ளியநாளீதறிமினுற்று. (சரு)

போற்றியுரைக்கின்றேன்பொய்யென்றிகழாதீர்
நாற்றிசைக்கணவர்ழுநமரங்காள் - ஆற்றலருள்
அப்பனவருகின்றானருள்விளையாட்டாடுதற்கென
றிப்புவியிலித்தருணமிங்கு. (சசு)

ஆளுடையானம்முடையவப்பனவருகின்ற
நாளெதுவோவென்றுநலியாதீர் - நீள
நினையாதீர்சத்தியநானோதுரைதந்தேனிந்நா
ளினையான்வருகின்றானுய்ந்து. (சஎ)

திருச்சிற்றம்பலம்.

---

# வாய்ப்பறையார்த்தல்.

## எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

நினைந்துநினைந்துணர்ந்துணர்ந்துநெகிழ்ந்துநெகிழ்ந்தன்பே நிறைந்துநிறைந்து
றற்றெழுங்கண்ணீரதனுலுடம்பு, நனைந்துநனைந்தருளமுதேநன்னிதியேஞானநடத்தர
சேயெனனுரிமைநாயகனேயென்று, வனைந்துவனைந்தேத்துதுநாம்வம்மினுலகியலீர்
மரணமிலாப்பெருவாழ்விலவாழ்ந்திடலாங்கண்டீர், புனைந்துரையேனபொய்புகலேன
சத்தியஞ்சொல்கின்றேனபொற்சபையிற்சிற்சபையிற்புகுந்தருணமிதுவே. (க)

புகுந்தருணமிதுகண்டீர்நம்மவரேநானமுன் புகல்கின்றேனென்மொழியோர்
பொய்மொழியென்னுதீர், உகுந்தருணமுற்றவரும்பெற்றவரும்பிறருமுடைமைகளு
முலகியலுமுற்றதுணையன்றே, மிகுந்தசுவைக்கரும்பேசெங்கனியேகோற்றேனேமெ
ய்ப்பயனேகைப்பொருளேவிலையறியாமணியே, தகுந்ததனிப்பெரும்பதியேதயாநிதி
யேகதியேசத்தியமேயென்றுரைமின்பதியொடுபணிகதே. (உ)

பணிந்துபணிந்தணிந்தணிந்துபாடுமினோவுலகீர் பரம்பரமேசிதம்பரமேபராபர
மேவரமே, துணிந்துவந்தவேதாந்தசுத்தவனுபவமேதுரியமுடியனுபவமேசுத்தசித்தா
ந்தமதாய்த், தணிந்தநிலைப்பெருஞ்சுகமேசமரசசன்மார்க்கசத்தியமேயியற்கையுண்மை
த்தனிப்பதியேயென்று, கணிந்துளத்தேகனிந்துநினைந்துரைத்திடிலப்பொழுதே கா
ணுதகாட்சியெலாங்கண்டுகொள்ளலாமே. (ங)

கண்டதெலாமநித்தியமேகேட்டதெலாம்பழுதே கற்றதெலாமபொய்யேநீர்களி
த்ததெலாம்வீணே, உண்டதெலாமலமேயுட்கொண்டதெலாங்குறையே யுலகியலீரி
துவரையுமுண்மையறிந்திலீரே, விண்டதனாலென்னினிநீர்சமரசசன்மார்க்க மெய்ந்
நெறியைககடைப்பிடிததுமெய்ப்பொருணன்குணர்ந்தே,எண்டகுசிற்றம்பலததேயெ
ந்தையருளடைமினிறவாதவரம்பெறலாமின்பமுறலாமே. (௪)

இன்புறலாமெவ்வுலகுமேத்திடவாழ்ந்திடலா மெல்லாஞ்செய்வல்லசித்தியிறை
மையும்பெற்றிடலாம், அன்புடையீரவமினிஙகேசமரசனமார்க்கமடைநதிடுமின
கவடிவிங்கனகவடிவாகிப், பொனபுடைநனகொளிரொளியேபுததமுதேஞானபூரண
மேயாரணததினபொருண்முடிமேறபொருளே, வனபுடையாபெறறகரிதாமணியே
சிற்சபையின்மாமருநதேயென றுனைமின்றீமையெலாநதவிர்ந்தே. (௫)

தீமையெலாநன்மையென்றேதிருவுளங்கொண்டருளிச சிறியேனுக்கருளமுதத்
தெளிவளிததிறதனை, ஆமயந்தீர்ததியற்கையினபவனுபவமேமயமாயமபலததேவி
ளஙகுகினறவருட்பெருஞ்சோதியையோர, ஓமயமானவடிவுடையாருளஙகததேநிறை
ந்தவொருபொருளைப்பெருஙகருணையுடையபெரும்பதியை,நாமருவியிறவாதநலமபெ
றலாமுலகீர்நல்லவொருதருணமிதுவல்லவமமினீரே. (௬)

நீரபிறரோயானுமககுநேயவுறவலனேநெடுமொழியேயுனைப்பனன்றிக்கொடுமொ
ழிசொல்வேனே, சார்புறவேயருளமுதநதநதெனைமேலேற்றிய தனிததபெருஞ்சுகம
ளிததனிததபெரும்பதிதான், சீர்பெறவேதிருப்பொதுவிறறிருமேனிதரிததுச்சித்
தாடல்புரிகின்றதிருநாள்களடுதத, ஓர்புறவேயிதுநல்லதருணமிங்கேவம்மினுலகியலீ
ருன்னியவாறுற்றிடுவீர்விரைந்தே (௭)

விரைந்துவிரைந்தடைநதிடுமின்மேதினியீரிங்கேமெய்மையுரைக்கின்றேனீர்வே
றுநினையாதீர், திரைநதுதிரைந்துளுத்தவருமிளமையடைந்திடவுஞ்செததவாகளெழு
ந்திடவுஞ்சித்தாடல்புரிய, வரைந்துவரைநதெலலாஞ்செயவலலசிததன்றானே வருகி
ன்றதருணமிதுவரம்பெறலாமநீவிர், கரைநதுகரைநதுளமுருகிக்கண்களினீர்பெருகி
க்கருணைநடக்கடவுளையுட்கருதுமினேகளிததே. (௮)

களித்துலகிலலவிகழ்ந்தகாலமுலகெல்லாங் களிப்படையவருட்சோதிக்கடவுள்வ
ருதருணங், தெளித்திடுமெததருணமதோவென்றுதிரிதுவேசெததாரையெழுப்புகின
றதிகழ்தருணமுலகீர், ஒளித்துரைககின்றேனலஞன்வாயபபறையாககின்றேனொரு
சிறிதுமச்சமுறேறனுள்ளபடியுணர்ந்தேன், அளிததிடுசிற்றம்பலததென்னப்பனருள்
பெறவேயாசையுண்டேல்வம்மினிஙகேநேசமுடையீரே. (௯)

ஆசையுண்டேல்வம்மினிங்கேயருட்சோதிப்பெருமானம்மையுமாயப்பனுமாயரு
ளுமருளாளன், ஏசறநீத்தெனையாட்கொண்டெண்ணியவாறளிததா னெல்லாஞ்செய்
வல்லசிததனென்னுயிரிற்கலந்தான், தேசுடையபொதுவிலருட்சிததிநடம்புரியததி
ருவுளஙகொண்டெழுந்தருளுந்திருநாளிஙகிதுவே, மோசவுரையெனநினைததுமயங்கா
தீருலகீர்முக்காலததினுமழியாவூர்ததமடைந்திடவே. (௧௦)

அடைந்திடுமினுலகீரிங்கிதுதருணங்கண்டீரருட்சோதிப்பெரும்பதியென்னப்ப
ன்வருதருணங், கடைநததனிததிருவமுதங்களிததருத்தியெனக்கேகாணுததகாட்சியெ

லாங்காட்டுகின்றதருண, மிடைந்தொருசாரலையாதீர்சுகமெனைப்போற்பெறுவீரியான்
வேறுநீரவேறென்றெண்ணுகிலேனுரைத்தே, னுடைந்தசமயக்குழிநின்றெழுந்துண
ர்மினழியாவொருநெறியாஞ்சனமார்க்கத்திருநெறிபெற்றுவந்தே. (௧௧)

திருநெறியொன்றேயதுதான்சமரசசனமார்க்கச் சிவநெறியென் றுணர்ந்துலகீர்
சேர்ந்திடுமினீண்டு, வருநெறியிலெனையாட்கொண்டருளமுதமளித்துவல்லபசத்திக
ளெல்லாமவழங்கியவோர்வள்ளல, பெருநெறியிற்சித்தாடத்திருவுளங்கொண்டருளிப்
பெருங்கருணைவடிவினொடுவருதருணமிதுவே, கருநெறிவீழ்ந்துழலாதீர்கலக்கமடை
யாதீர்கண்மையினறகருத்தொருமித்துண்மையுரைத்தேனே (௧௨)

உண்மையுரைக்கின்றேனிங்குவந்தடைமினுலகீருரையீதனிற்சந்தேகித்துளறிவ
ழியாதீர், எண்மையினென்னைநினையீரெல்லாஞ்செயவல்லானென்னுளமாந்திசைக்கி
ன்றானிதுகேண்மினீவிர், தண்மையொடுசுத்தசிவசன்மார்க்கநெறியிற்சார்ந்துவிரை
ந்தேறுமினோசத்தியவாழ்வளிக்கக,கண்மைதருமொருபெருஞ்சீர்க்கடவுளெனப்புகலு
ங்கருணைநிதிவருகின்றதருணமிதுதானே. (௧௩)

தானேதானாகியெலாந்தானாகியலனாய்த் தனிப்பதியாய்விளங்கிடுமென்றந்தை
யையென்றாயை, வானேயவ்வான்கருவேவான்கருவின்முதலேவள்ளாலென்றன்பரெ
லாமுள்ளாநின்றவனை, தேனேசெம்பாகேயென்றினித்திடுந்தெள்ளமுதைச்சிற்சபை
யிற்பெருவாழ்வைச்சிந்தைசெய்மினுலகீ, ரூனேயுமுடலழியாதூழிதொறுமோங்குமு
த்தசித்தியைப்பெறுவீர்சத்தியஞ்சொன்னேனே. (௧௪)

சத்தியவேதாந்தமெலாஞ்சித்தாந்தமெல்லாந்தனித்தனிமேலுணர்ந்துணர்ந்து
ணையுணர்தற்கரிதாய், நித்தியசிற்சபைநடுவேநிறைந்துநடம்புரியும்நித்தபரிபூரணனை
ச்சித்தசிகாமணியை, அத்தகையோர்பெரும்பதியையருமருந்தையடியேனுயிரையெ
ன்னுயிரிலேயமர்ந்ததயாநிதியைச், சித்தியெலாமெனக்களித்தசிவகதியையுலகீர்சிந்
தைசெய்துவாழ்த்துமினோநிந்தையெலாந்தவிர்ந்தே. (௧௫)

நிந்தையிலாநெஞ்சகத்தேநிறைந்தபெருந்தகையை நிலையனைத்துங்காட்டியரு
ணிலையளித்தகுருவை, எந்தையையென்றனித்தாயையென்னிருகண்மணியையென்
னுயிரையென்னுணர்வையென்னறிவுள்ளறிவை, சிந்தையிலேதனித்தினிக்குந்தெள்ள
முதையனைத்துஞ்செயவல்லதனித்தலைமைச்சிவபதியையுலகீர், முந்தையமலவிருட்
டொழியமுன்னுமினோகரணமுடுகவொழித்துக்கடைமரணநடுக்கொழித்துமுயன்றே.

முயன்றுலகிற்பயனடையாமூடமதமனைத்தும் முடுகியழிந்திடவுமொருமோசமு
மில்லாதே, இயன்றவொருசன்மார்க்கமெங்குநிலைபெறவுமெம்மிறைவனெழுந்தருள
விதுதருணங்கண்டீர், துயின்றுணர்ந்தேயெழுந்தவர்போலிறந்தவர்களெல்லாந்தோன்
றவெழுகின்றதிதுதொடங்கிநிகழ்ந்திடுமீ, பயின்றறியவிரைந்துவம்மின்படியாதப
டிப்பைப்படித்திடலாமுணர்ந்திடலாம்பற்றிடலாஞ்சுகமே. (௧௭)

சுகமறியீர்துன்பமொன்றேதுணிந்தறிந்தீருலகீர் சூதறிந்தீர்வாதறிந்தீர்தூய்மை
யறிந்திலிரே, இகமறியீர்பரமறியீரென்னேநுங்கருத்தீதென்புரிவீர்மரணம்வரிலெங்
குறுவீரந்தோ, அகமறிந்தீரனகமறிந்தழியாதஞானவமுதவடிவம்பெறலாமடைந்திடு

மினீண்டே, முகமறியார்போலிருந்தீரெனையறியீரோமுத்தரெலாம்பேறறுமருட்சித்தாமகனானே. (கஅ)

நானுரைக்கும்வார்த்தையெலாம்நாயகன்றன்வார்த்தை நம்புமினோநமரங்காணற்றருணமிதுவே, வானுரைத்தமணிமன்றில்நடம்புரியெம்பெருமான் வரவெதிர்கொண்டவனருளாலவரங்களெலாம்பெறவே, தேனுரைக்குமுளமினிக்கவெழுகின்றேனீவிர்தெரிந்தடைந் தென்னுடனெழுமின்சித்திபெறலாகும், ஏனுரைத்தேனிரக்கத்தாலெடுத்துரைத்தேன்கண்டீர்யானடையுஞ்சுகத்தினைநீர்தானடைதல்குறித்தே. (க௯)

குறித்துரைக்கின்றேனிதனைக்கேண்மினிங்கேவம்மின்கோணுமனக்குரங்காலே நாணுகின்றவுலகீர், வெறித்தவுமாலொருபயனும்வேண்டுகிலேனெனது மெய்யுரையைப்பொய்யுரையாய்வேறுநினையாதீர், பொறித்தமதஞ்சமயமெலாம்பொய்பொய்யேயவற்றில்புகுதாதீர்சிவமொன்றேபொருளெனக்கண்டறிமின், செறித்திடுசிற்சபைநடத்தைத்தெரிந்துதுதித்திடுமின்சித்தியெலாமித்தினமேசத்தியஞ்சேர்ந்திடுமே. (உ0)

சேர்ந்திடவேயொருப்படுமின்சமரசசன்மார்க்கத்திருநெறியேபெருநெறியாஞ்சித்தியெலாம்பெறலாம், ஓர்ந்திடுமினுண்ணுதற்குமுறங்குதற்குமுணர்ந்தீருலகமெலாங்கண்டிடுமோருளவையறிந்திலிரே, வார்ந்தகடலுலகறியமரணமுண்டேயந்தோ மரணமென்றாற்சடமெனுமோர்திரணமுஞ்சம்மதியா, சார்ந்திடுமம்மரணமதைத்தடுத்திடலாங்கண்டீர்தனித்திடுசிற்சபைநடத்தைத்தரிசனஞ்செய்வீரே. (உக)

செய்தாலுந்தீமையெலாம்பொறுத்தருள்வானபொதுவிற்றிருநடஞ்செய்பெருங்கருணைத்திறத்தானங்கவனை, மெய்த்தாவினைத்திடுகசமரசசன்மார்க்கமமேவுகவென்றுரைக்கின்றேன்மேதினியீரெனைத்தான், வைதாலுமவைதிடுமின் வாழ்த்தெனக்கொண்டிடுவேன்மனங்கோணேன்மானமெலாம்போனவழிவிடுத்தேன், பொய்தானோர்சிறிதெனினும்புகலேன்சத்தியமே புகல்கின்றேனீவிரெலாம்புனிதமுறும்பொருட்டே.

பொருட்டலநும்போகமெலாம்பொய்யாமிங்கிதுநான்புகலுவதென்னுடைநும்புந்தியிற்கண்டதுவே, மருட்டுலகீரிருட்டுலகிலமடிவதழகலவே மரணமிலாப்பெருவாழ்வில்வாழ்வமினிங்கே, பொருட்டிறஞ்சேர்சுத்தசிவசன்மார்க்கநிலையில் பொருந்துமின்சிற்சபையமுதமருந்துமினன்புடனே, அருட்டிறஞ்சேர்ந்தெண்ணியவாறாடுமினோநும்மையடுப்பவரேயன்றித்தடுப்பவராமறிலையே. (உங)

மற்றறிவோமெனச்சிறிதுதாழ்த்திருப்பீராலமரணமெனும்பெரும்பாவிவந்திடுமேயந்தோ, சற்றுமதைநும்மாலேதடுக்கமுடியாதேசமரசசன்மார்க்கசங்கத்தவர்களல்லாலதனை, எற்றிநின்றுதடுக்கவல்லாரெவ்வுலகிலெவருமில்லைகண்டீர்சத்தியமீதெனமொழிகொண்டுலகீர், பற்றியபற்றனைத்தினையும்பற்றறவிட்டருளம்பலப்பற்றேபற்றுமினோவென்றுமிறவீரே. (உச)

இறந்தவரையெடுத்திடும்போதரற்றுகின்றீருலகீரிறவாதபெருவரநீரடையமாட்டீர், மறந்திருந்தீர்பிணிமூப்பிற்சம்மதமோநுமக்குமறந்துமிதைநினைக்கினல்லோமனநடுங்குங்கண்டீர், சிறந்திடுசன்மார்க்கமொன்றேபிணிமூப்புமரணஞ்சேராமற்றவிர்த்திடுங்காண்தெரிந்துவம்மினிங்கே, பிறந்தபிறப்பிதிற்றானேநித்தியமெய்வாழ்வுபெற்றிடலாம்பேரின்பமுற்றிடலாம்விரைந்தே. (உரு)

உற்றமொழியுரைக்கின்றேனொருமையினாலுமக்கே யுறவனன்றிப்பகைவனென வுணர்ந்திருலகீர், கற்றவருங்கல்லாருமழிந்திடக்காண்கின்றீர்காரணமெலாங்கலங்கவருமரணமுஞ்சம்மதமோ, சற்றுமிதைச்சம்மதியீர்தென்மனந்தானுமதுதன்மனந்தான் கன்மனமோவன்மனமோவறியேன், இறந்தனைத்தடுத்திடலாமென்னொடுசேர்ந்திடுமினென்மார்க்கமிறப்பொழிக்குஞ்சன்மார்க்கந்தானே. (உசு)

சன்மார்க்கப்பெருங்குணத்தார் தம்பதியையென்னைத்தாங்குகின்றபெரும்பதியைத்தனித்தசபாபதியை, நன்மார்க்கத்தெனைநடத்திச்சன்மார்க்கசங்கநடுவிருக்கவருள்முதனல்கியநாயகனைப், புன்மார்க்கர்க்கறிவரிதாம்புண்ணியனைஞானபூரணமெய்ப்பொருளாகிப்பொருந்தியமாமருந்தை, அன்மார்க்கந்தவிர்த்தருளியம்பலத்தேநடஞ்செய்யருட்பெருஞ்சோதியையுலகீர்தெருட்கொளச்சார்வீரே. (உஎ)

சாருலகவாதனையைத்தவிர்த்தவருள்ளகத்தே சத்தியமாயமர்ந்தருளுமுத்தமசற்குருவை, நேருறவேயெவராலுங்கண்டுகொள்ளற்கரிதாமந்தியவானபொருளையெலாநிலைகளுந்தானாகி, ஏருறவேவிளங்குகின்றவியற்கையுண்மைதன்னையெல்லாஞ்செயவல்லபத்தையெனக்களித்தபதியை, ஒருறவென்றடைந்துலகீர்போற்றிமகிழ்ந்திடுமினுள்ளமெலாங்கனிந்துருகியுள்ளபடிநினைந்தே. (உஅ)

திருச்சிற்றம்பலம்.

# இரங்கல்.



## அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆயுரைத்தவருட்சோதிவருகின்றதருணமிதேயறிமினென்றே
வாயுரைத்தவார்த்தையென்றன்வார்த்தைகளெனவிகழ்ந்தீரிம்மனிதரந்தோ
தாயுரைத்ததிருப்பொதுவினடம்புரிந்தென்னுளங்கலந்ததலைவரிங்கே
நீயுரைத்ததிருவார்த்தையெனவறியாரிவரறிவினிகழ்ச்சியென்னே. (க)

இறந்தவர்கள்பலருமிங்கேயெழுகின்றதருணமிதேயெனறுவாய்மை
அறந்தழையவுரைக்கின்றவார்த்தைகளென்வார்த்தைகளென்றறைகின்றால்
மறந்தசிறியேனுரைக்கவல்லேனோவெல்லாஞ்செயவல்லோயுன்றன்
சிறந்ததிருவார்த்தையெனத்தெரிந்திலரிம்மனிதர்மதித்திறமையென்னே. (உ)

சோற்றாசையொடுகாமச்சேற்றாசைப்படுவோரைத்துணிந்துகொல்லக்
கூற்றாசைப்படுமெனநான்கூறுகின்றதுண்மையினிற்கொண்டுநீவிர்
நேற்றாசைப்பட்டவருக்கின்றருள்வார்போலுமன்றிநினைத்தவாங்கே
பேற்றாசைக்கருள்புரியுமஞானசபாபதிபுகழைப்பேசுவீரே. (௩)

தொண்டாளப்பணந்தேடுந்துறையாளவுலகாளச்சூழ்ந்தகாமப்
பெண்டாளத்திரிகின்றபேயமனத்தீருமுயிரைப்பிடிக்கநாளைச்
சண்டாளக்கூற்றுவரிலென்புகல்வீர்ஞானசபைத்தலைவனும்மைக்
கொண்டாளக்கருதுமினோவாண்டபினரிவ்வுலகிற்குலாவுவீரே. (ச)

பிறந்தவரைநீராட்டிப்பெருகவளர்த்திடுகின்றீர்பேயரேநீர்
இறந்தவரைச்சுடுகின்றீரெவ்வணஞ்சம்மதித்தீரோவிரவிற்றூங்கி
மறந்தவரைத்தீமூட்டவல்லீரானும்மனத்தைவயிரமான
சிறந்தவரையெனப்புகழச்செய்துகொண்டீரேன்பிறந்துதிரிகின்றீரே. (௫)

அணங்கழுபேரோசையொடும்பறையோசைபொங்கக்கோரணிகொண்டந்தோ
பிணங்கழுவியெடுத்துப்போய்ச்சுடுகின்றீரினிச்சாகும்பிணங்களேநீர்
கணங்கழுகுண்டாலுமொருபயனுண்டேயெனைப்பயன்கண்டீர்சுட்ட
எணங்கெழுசாம்பலைக்கண்டீரதுபுன்செயெருவுக்குமியலாதன்றே. (௬)

குணம்புதைக்கவுயிரடக்கங்கொண்டதுசுட்டாலதுதான்கொலையாமென்றே
வணம்புதைக்கவேண்டுமெனவாய்தடிக்கச்சொல்கின்றேன்வாராததைக்கேட்டும்
பிணம்புதைக்கச்சம்மதியீர்பணம்புதைக்கச்சம்மதிக்கும்பேயரேநீர்
எணம்புதைக்கத்துயிலவாநும்பாற்றுயிலற்கஞ்சுவரேயிழுதையீரே. (௭)

கட்டாலுங்கனத்தாலுங்களிக்கின்றபேயுலகீர்கலைசோர்ந்தாரைப்
பொட்டாலுந்துகிலாலும்புனைவித்துச்சுடுகின்றீர்புதைக்கநேரீர்
சுட்டாலுஞ்சுடுமெதுகண்டுமெதுடம்புதுடியாதென்சொல்லீர்நும்மைத்
தொட்டாலுந்தோடமுறும்விட்டாலுங்கதியிலைமேற்சூழ்வீரன்றே. (௮)

பரனளிக்குந்தேகமிதுசுடுவதபராதமெனப்பகர்கின்றேனீர்
சிரனெளிகச்சுடுகின்றீர்செத்தவர்கள்பற்பலருஞ்சித்தசாமி
உரனளிக்கவெழுகின்றதிருநாள்வந்தடுத்ததனவீதுணர்ந்துநல்லோர்
வரனளிக்கப்புதைத்தநிலைகாணீரோகணங்கெட்டமாட்டினீரே. (௯)

புலைத்தொழிலேபுரிகின்றீர்புண்ணியத்தைக்கருங்கடலிற்போகவிட்டீர்
கொலைத்தொழிலிற்கொடியீர்நீர்செத்தாரைச்சுடுகின்றகொடுமைநோக்கிக்
கலைத்தொழிலிற்பெரியருளங்கலங்கினர்கலக்கமெலாங்கடவுணீக்கித்
தலைத்தொழில்செய்சன்மார்க்கந்தலையெடுக்கப்புரிகுவதித்தருணந்தானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# தனிப்பாடல்கள்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

காட்டைக்கடந்தேனாட்டையடைந்தேன்கவலைதவிர்ந்தேனுவகைமிகுந்தேன்
வீட்டைப்புகுந்தேனதேட்டமுதுண்டேன்வேதாகமத்தின்விளைவெலாம்பெற்றேன்
ஆட்டைப்புரிந்தேயம்பலத்தோங்குமையாதிருவடிக்கானந்தமாகப்
பாட்டைப்படித்தேனபடிக்கின்றேனமேலும்படிப்பேனெனக்குப்படிப்பித்தவாறே.

அம்பலஞ்சேர்ந்தேனம்பலமானேனப்பனைக்கண்டேனசெப்பமுட்கொண்டேன்
உம்பர்வியப்பவிம்பரிருந்தேயோதாதுணர்ந்தேமீதானமுற்றேன்
நம்பிலணைக்குமெம்பெருமானைநாயகன்றன்னைத்தாயவன்றனைப
பமபுறப்பாடிப்படிக்கின்றேன்மேலும்படிப்பேனெனக்குபபடிப்பிததவாறே. (௨)

கள்ளத்தையற்றவுள்ளத்தைப்பெறறேன்கன்றிக்கனிந்தேமன்றிற்புகுந்தேன்
தெள்ளததெளிநதவெள்ளததைதயுண்டேன்செயவகைகற்றேனுய்வகையுற்றேன்
அள்ளககுறையாவள்ளற்பொருளையம்பலச்சோதியெம்பெருவாழ்வை
பள்ளிகுட்பாடிப்படிககினறேன்மேலும்படிப்பேனெனக்குப்படிப்பித்தவாறே. (௩)

வேறு.

கொச்சகக்கலிப்பா.

மன்னப்பாமன்றிடத்தேமாநடஞ்செயப்பாவென்
றனனப்பாசணமுகனகொனசாமியப்பாவெவ்வுயிர்க்கும்
முன்னப்பாபின்னப்பாமூர்த்தியப்பாமூவாத
பொன்னப்பாஞானப்பொருளப்பாதந்தருளே. (௧)

ஆதியேதிருவம்பலத்தாடல்செய்யரசே
நீதியேயெலாம்வல்லவாநல்லவாநினைந்தே
ஓதியேயுணர்தற்கரிதாகியவொருவான்
சோதியேயெனைச்சோதியேல்சோதியேலினியே. (௨)

வேறு.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

கலக்கநீங்கினேன்களிப்புறுகின்றேன்கனகவம்பலங்கனிந்தசெங்கனியே
துலக்கமுற்றசிற்றம்பலத்தமுதேதூயசோதியேசுகப்பெருவாழ்வே
விலக்கவில்லதோர்தனிமுதலரசேவேதமாகமம்விளம்புமெய்ப்பொருளே
அலக்கணற்றமெய்யன்பாதமுளத்தேயமர்ந்ததோர்சச்சிதானந்தச்சிவமே. (௧)

தரவுகொச்சகக்கலிப்பா.

அழியாநிலையாததுமேவிநின்னன்பினோடும்
ஒழியாதுனைப்பாடிநின்றாடியுலகினூடே
வழியாமுயிர்க்கின்பம்புரிந்துவயங்கலவேண்டு
மிழியாதருள்வாயபொதுமேவியவெந்தைநீயே. (க)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

வள்ளலாங்கருணைமன்றிலேயமுதவாரியைக்கண்டனமனமே
அள்ளலாமெடுத்துக்கொள்ளலாம்பாடியாடலாமடிக்கடிவியந்தே
வுள்ளெலாநிரம்பவுண்ணலாமுலகிலோங்கலாமுதவலாமுறலாம
கள்ளெலாமுண்டவண்டெனவின்பங்காணலாங்களிக்கலாமினியே. (க)

விண்ணெலாங்கலந்தவெளியிலானந்தம்விளைந்ததுவிளைந்ததுமனனே
கண்ணெலாங்களிக்கக்காணலாம்பொதுவிற்கடவுளேயென்றுநங்கருத்தில
எண்ணெலாமெண்ணியெழுதலாமெழுதியேத்தலாமெடுத்தெடுத்துவந்தே
யுண்ணலாமவிழ்ந்தார்க்குதவலாமுலகிலோங்கலாமோங்கலாமினியே. (உ)

படித்தவென்படிப்புங்கேள்வியுமிவற்றின்பயன்றாமுணர்ச்சியுமடியேன
பிடித்தநன்னிலையுமுயிருமெய்யின்பமும்பெருமையுஞ்சிறப்புநானுநானும
வடித்ததெள்ளமுதும்வயங்குமெய்வாழ்வும்வாழ்க்கைநன்முதலுமன்றகத்தே
நடித்தபொன்னடியுந்திருச்சிற்றம்பலத்தேநண்ணியபொருளுமொன்றறிந்தேன். (௩)

திருச்சிற்றம்பலம்.

# வேண்டுகோள்.

கலித்துறை

திருச்சிற்றம்பலம்.

ஆதியப்பாநம்மனாதியப்பாஎங்களம்மையொரு
பாதியப்பாநிருபாதியப்பாசிவபத்தரனு
பூதியப்பாநலவிபூதியப்பாபொற்பொதுநடஞ்செய
சோதியப்பாசுயஞ்சோதியப்பாவெனைச்சூழ்ந்தருளே. (க)

அண்டவப்பாபகிரண்டவப்பாநஞ்சணிந்தமணி
கண்டவப்பாமுற்றுங்கண்டவப்பாசிவகாமியெனு
மொண்டவப்பாவையைக்கொண்டவப்பாசடையோங்குபிறைத
துண்டவப்பாமறைவிண்டவப்பாவெனைச்சூழ்ந்தருளே. (உ)

வேலையப்பாபடைவேலையப்பாவவெய்யலுக்கோர
சோலையப்பாபரஞ்சோதியப்பாசடைத்துன்றுகொன்றை
மாலையப்பாநீசமரசவேதசன்மார்க்கசங்கச்
சாலையப்பாவெனைத்தர்தவப்பாவந்துதாங்கிக்கொள்ளே. (௩)

மெச்சியப்பாவலர்போற்றப்பொதுவில்விளங்கியவென
னுச்சியப்பாவென்னுடையவப்பாவெனையுற்றுப்பெற்ற
அச்சியப்பாமுக்கண்ணப்பாவென்னுருயிர்க்கானவப்பா
கச்சியப்பாதங்கக்கட்டியப்பாவெனைக்கண்டுகொள்ளே. (௪)

எக்கணையும்மின்றியோங்குமருட்கடலென்றுணைக்கோ
செக்கணைவென்றபொன்னெனக்கோபடிகத்திரளெனக்கோ
திக்கணையம்பரனென்கோவெனுள்ளத்திற்றித்திக்கின்ற
சாக்கணைக்கட்டியெனக்கோநினைத்தாணமனற்றுணடவனே. (௫)

ஒட்டியெனக்கோதறத்தாட்கொண்டனைநினையோங்கறிவாந்
திட்டியெனக்கோவுயர்சிற்றம்பலத்தனிற்சேர்க்குநல்ல
வெட்டியெனக்கோவருட்பெட்டியிலோங்கிவிளங்குந்தங்கக்
கட்டியெனக்கோபொற்பொதுநடஞ்செயுமுக்கண்ணவனே. (௬)

திருச்சிற்றம்பலம்

கொச்சகக்கலிப்பா.

எல்லார்க்குங்கடையாகியிருந்தேனுக்கருள்புரிந்தே
எல்லார்க்குந்துணையாகியிருக்கவைத்தாயெம்பெருமா
னெல்லார்க்கும்பொதுவில்நடமிடுகின்றாயிவண்ண
மெல்லார்க்குஞ்செயயாமையாதுகுறித்திசையெனக்கே. (௧)

என்னுடையவிண்ணப்பமிதுகேட்கவெம்பெருமான
நின்னுடையபெருங்கருணைநிதியுடையேனுதலினால
பொன்னுடையானயன்முதலாமபுங்கவரைவியவேனென்
றன்னுடையசெயலெல்லாந்தம்பிரான்செயலன்றே. (௨)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

தாம்பிறரறியாததலைவவோர்முக்கட்டனிமுதற்பேரருட்சோதி
பரம்பரஞானசிதம்பரநடஞ்செய்பராபரநிராமயநிமல
உரம்பெறுமயன்மாலமுதற்பெருந்தேவருள்ளத்தறிசயித்திடவெனக்கே
வரந்தருகின்றாயவள்ளலின்கருணைமாகடற்கெல்லைகண்டிலனே. (௧)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நான்சொன்னவார்த்தையெலாந்தான்சொன்னவார்த்தையென்றுநயந்தானென்னை
ஏன்சொன்னதென்றிறையுமவினவியதுமிலலையுள்மிசைந்தானந்தோ
தேன்சொன்னமொழியம்மைசிவகாமவல்லிகண்டுசிறக்கநாளும
வான்சொன்னமணிமன்றிலநடம்புரிவான்பெருங்கருணைவாய்மையென்னே. (௧)

ஆடியகான்மலர்களுக்கேயன்புடையாரவரிங்கேயவர்க்கேயின்பங்
கூடியதென்றுரணமுமாகமமுமாணையிட்டுக்கூறும்வார்த்தை
ஓடியதோநெஞ்சேநீயுன்னுவதென்பற்பலவாயுனேலின்னே
பாடியவன்றிருப்பாட்டைப்படிகண்டாயின்புலகப்புடிகண்டாயே. (௨)

கட்டளைக்கலிப்பா.

நாய்க்குமோர்தவிசிட்டுப்பொன்மாமுடிநன்றுசூட்டினையென்றுநின்னன்பர்கள்
வாய்க்குவந்தபடிபலபேசவேமதியிலேனையுமன்னருட்சத்தியாந்
தாய்க்குக்காட்டிநற்றணமுதூட்டியோர்தவளமாடப்பொன்மண்டபத்தேற்றியே
சேய்க்குநேரெனக்கையிற்பொற்கங்கணந்திகழக்கட்டினையென்னைநின்செய்கையே

திருச்சிற்றம்பலம்.

## அபயங்கூறல்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொருட்பெருந்தனிமெய்ப்போகமேயென்னைப்புறத்தினுமகத்தினும்புணர்ந்த
தெருட்பெருஞ்சிவமேசுத்தசன்மார்க்கச்செல்வமேநான்பெற்றசிறப்பே
மருட்பெருங்கடலைக்கடத்தியென்றன்னைவாழ்வித்தவென்பெருவாழ்வே
யருட்பெருஞ்சோதியம்பலத்தரசேயம்மையேயப்பனேயபயம். (௧)

பொருட்பெருமறைகளனந்தமாகமங்கள்புகலுமோரனந்தமேற்போந்தே
தெருட்பெருவெளிமட்டளவிலாக்காலந்தேடியுங்காண்கிலாச்சிவமே
மருட்பெரும்பகைதீர்த்தென்னையாட்கொண்டவள்ளலேதெள்ளியவமுதே
யருட்பெருஞ்சோதியம்பலத்தரசேயம்மையேயப்பனேயபயம். (௨)

பொருட்பெருஞ்சுடர்செய்கலாந்தயோகாந்தம்புகன்றபோதாந்தநாதாந்தந்
தெருட்பெருவேதாந்தந்திகழ்சித்தாந்தத்தினுநிதநிக்குநதேனே
மருட்பெருவிருளைத்தீர்த்தெனைவளாகருமாபெருங்கருணையாரமுதே
யருட்பெருஞ்சோதியம்பலத்தரசேயம்மையேயப்பனேயபயம். (௩)

திருச்சிற்றம்பலம்.

கொச்சகக்கலிப்பா.

ஓங்குமன்பரெல்லாருமுள்ளேவிழித்துநிற்கத்
தூங்கியவென்றனையெழுப்பியருட்டேபொருள்
வாங்குகவென்றென்பால்வலியக்கொடுத்தமுதும்
பாங்குறநின்றூட்டினையேநின்னைப்பழியாரோ. (௧)

நாட்பாரிலன்பரெலாம்நல்குகவென்றேத்திநிற்க
வாட்பாரிலன்போரணுத்துணையுமில்லேற்கு
நீட்பாரருளமுதநீகொடுத்தாய்நின்னையிங்கே
கேட்பாரிலையென்றுகிழ்மேலதாக்கினையே. (௨)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கன்றுடையபசுப்போலேசிந்துருகுமன்பரெலாங்காணக்காட்டு
மென்றுடையநாயகனேயெல்லாஞ்செய்வல்லவனேயிலங்குஞ்சோதி
மன்றுடையமணவாளாமன்னவனேயென்னிருகண்மணியேநின்னை
யன்றுடையேனின்றுவிடேனாணையுன்மேலாணையுன்மேலாணையையா. (௧)

கொச்சகக்கலிப்பா.

என்றாத்துக்கேலாதவெண்ணங்களெண்ணுகின்றேன்
முன்றாததினெல்லாமுடித்துக்கொடுக்கின்றாய்
நின்றாத்தையென்புகல்வேனின்னிடப்பாலமேவுபசும்
பொன்றாத்தையென்னுரைக்கேன்பொதுவினடிக்கின்றோய். (௨)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இன்பிலேவயங்குசிவபரம்பொருளேயென்னுயிர்க்கமுதமேயென்ற
னன்பிலேபழுத்ததனிப்பெரும்பழமேயருணடம்புரியுமென்னரசே
வன்பிலேவிளைந்தமாயையும்வினையுமடிந்தனவிடிந்ததாலிரவுந
துன்பிலேனினிநானருட்பெருஞ்சோதிச்சூழலிற்றுலங்குகின்றேனே. (௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தேன்பாடலன்புடையார்செயப்பொதுவில்நடிக்கின்றசிவனேஞானக்
கான்பாடிச்சிவகாமவல்லிமகிழ்கின்றதிருக்கணவாநல்ல
வான்பாடமறைபாடவென்னுளத்தேயாடுகின்றமன்னுநின்னை
யான்பாடநீதிருத்தவென்னதவஞ்செய்தேனோவெந்தாயெந்தாய். (௪)

ஆன்பாலுநறுந்தேனுஞ்சர்க்கரையுங்கூட்டியதெள்ளமுதேயென்ற
னூன்பாலுமுளப்பாலுமுயிர்ப்பாலுமொளிர்கின்றவொளியேவேதம்
பூம்பாடல்புனைந்தேத்தவென்னுளத்தேயாடுகின்றபொன்னேநின்னை
யான்பாடநீதிருத்தவென்னதவஞ்செய்தேனோவெந்தாயெந்தாய். (௫)

கலித்துறை.

அப்பூறுசெஞ்சடையப்பாசிற்றம்பலத்தாடுகின்றோய்
துப்பூறுவண்ணச்செழுஞ்சுடரேதனிச்சோதியனே
வெப்பூறுநீக்கியவெண்ணீறுபூத்தபொன்மேனியனே
உப்பூறுவாய்க்குத்தித்திப்பூறுகாட்டியவுத்தமனே. (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கலக்கமற்றுநானின்றனைப்பாடியேகளிக்கின்றநாளெந்நாள்
இலக்கமுற்றறிந்திடவருள்புரிகுவாயெந்தையிவ்விரவினகண்
துலக்கமுற்றசிற்றம்பலத்தாடுமெய்ச்சோதியேசுகவாழ்வே
அலக்கணற்றிடத்திருவருள்புரியுமென்னப்பனேயடியேற்கே. (௭)

கலித்துறை.

நஞ்சுண்டுயிர்களைக்காத்தவனேநடநாயகனே
பஞ்சுண்டசிற்றடிப்பாவைபங்காநம்பராபரனே
மஞ்சுண்டசெஞ்சடைமன்னுபொன்னம்பலவாவல்லவா
பிஞ்சுண்டவாய்க்குப்பழமளித்தாண்டபெரியவனே. (௮)

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

கலைவளா முடியதெனையாட்கொண்ட கருணையங்கண்ணது ஞான
நிலைவளா பொருளதுலகெலாம்போற்றநின்றதுநிறைபெருஞ்சோதி
மலைவளாகின்றதருள்வெளிநடுவேவயங்குவதின்பமேமயமாய்த்
தலைவளா திருச்சிற்றம்பலந்தனிலேதனிநடத்தெனக்கினித்ததோர்கனியே (௧)

சிறுநெறிக்கெனைத்தாணிழுத்ததோர்கொடியதீமனமாயையைக்கணத்தே
வெறுவியதாக்கித்தடுத்தெனையாண்டமெய்யநின்கருணையென்புகல்வே
னுறுநறுந்தேனுமமுதுமென்கரும்பிலுற்றசாறட்டசர்க்கரையும்
நறுநெய்யுங்கலந்தசுவைப்பெரும்பழமேஞானமன்றோங்குமென்னட்பே. (௨)

புல்லியநெறிக்கேயிழுத்தெனையலைத்தபொய்ம்மனமாயையைக்கணத்தே
மெலலியதாக்கித்தடுத்தெனையாண்டமெய்யநின்கருணையென்புகல்வேன்
வல்லியென்னம்மைமகிழமன்றோங்கும்வள்ளலேமறைகளாகமங்கள்
சொல்லியபதியேமிகுதயாநிதியேதொண்டனேனுயிர்க்குமெய்த்துணையே. (௩)

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

அரங்காயமனமாயையளக்கராழமறியாமற்காலிட்டிங்கழுந்துகின்றே
னிரங்காயோசிறிதுமுயிரிரக்கமில்லாவெனமனமோநினமனமுமிறைவியுன்ற
னுரங்காணுமரசியறகோலகொடுங்கோலானுலோடியெங்கேபுகுந்தெவருக்குரைப்பதம்மா
திரங்காணும்பிள்ளையெனத்தாயவிடாளேசிவகாமவல்லியெனுந்தெய்வத்தாயே. (௧)

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

நல்வினைசிறிதுநயந்திலேனெனைப்பாள்நானசெயத்தக்கதேதென்பாள்
செல்வினையொன்றுந்தெரிந்திலனையோதெய்வமேதெய்வமேயெனபாள்
வெல்வினைமன்றினடம்புரிகின்றாரவிருப்பிலரெனமிசையெனபாள்
வல்வினையுடையேனென்றுளம்பதைப்பாள்வருந்துவாள்நான்பெற்றமகளே. (௧)

### கலிநிலைத்துறை.

பூவார்கொன்றைச்செஞ்சடையாளாபுகழாள
ரீவாராபோல்வந்தெனமனைபுக்காரெழில்சாட்டி
தேவாதில்லைச்சிற்சபைமேவுந்திருவாள
ராவாவென்றுரென்னடியம்மாவவாகூதே. (௧)

### கட்டளைக்கலிப்பா.

வெட்டைமாட்டிவிடாப்பெருந்துன்பநோயவிளைவதெண்ணிலாவேண்டிச்சென்றேதொழுக், கட்டைமாட்டிக்கொள்வாரெனவேண்டிப்பெண்கட்டைமாட்டிக்கொளவார்தங்கழுத்திலே, துட்டைமாட்டின்கழுத்தடிக்கட்டையோ துணிக்குங்கட்டையதாமிந்தக்கட்டைதா, னெட்டைமாட்டியுயிர்விடக்கட்டைமேலேறும்போதுமிழக்கின்றகட்டையே. (௧)

புணணைக்கட்டிகெகொணடேயதன்மேலொரு புடவைகடடிபபுதுமைகளகாட்டிடுமெ, பெணணைககட்டிககொளவாரிவாகொள்ளிவாயப பேயைககட்டிககொணடாலும பிழைப்பாகாண், மணணைககட்டிககொண்டேயழுகினறவிமமடையப்பிள்ளைகளவாழ் வினைநோககுஙகால, கணணைககட்டிககொணடோவழிபோஙகிழகசமுதைதவாழ்விறக டையெனலாகுமே (உ)

அறுசீரடியாசிரியவிருததம.

மந்திரமறியேன்மறைறமணிமருநதறியேனவேறு
தநதிரமறியேனெநததகவுகொணடடைவேனெநதா
யிநதிரனமுதலாநதேவரிறைஞசபபொனமனறிலவேணிச
சநதிரனுடவினபததனிநடம்புரியுநதேவே (க)

வேறு.

தனததாலியன்றதனிசசபையினடிககுமபெருமானறனககனறே
இனத்தாலுயாநதமணமாலையிடடுககளிததுணைப்பெண்ணே
மனததானவிளஙகுஞசிவகாமவலலிககனியேமாலொடுமோ
ரனததான்புகழுமமேயிவவடியேனுனககேயடைககலமே (உ)

கலிநிலைததுறை.

அஙகேயுன்றனனபாகளெல்லாமமாகினறு
ரிஙகேநீதானென்னளவின்னுமிரஙகாயே
லெஙகேபோகேனயாரொடுநோகேனெதுசெயகேன
செங்கேழ்வேணிததிஙகளணிந்தருளசிவனேயோ. (க)

ஈயோடுறழுஞ்சிறியேனைளவிலெநதாய்நின்
சேயோடுறழும்பேரருள்வண்ணததிருவுளளங
காயோபழமோயாதோவறியேனகவல்கினறேன்
தீயோடுறழுநதிருவருளவடிவசசிவனேயோ (உ)

எழுசீரடியாசிரியவிருததம.

அருளாரமுதேயெனனுடையன்பேயெனறனறிவேயென
பொருளாயகததும்புறததுமெனனைப்புணாநதகருணைபபொருப்பேமெயத
தெருளாமொளியேவெளியாகச்சிறறமபலததேநடிககினறே
யிருளாயினவெலலாநதவிாததெனனெணணமுடிபபாயிப்போதே. (க)

அறுசீரடியாசிரியவிருததம.

மதிககளவாமணிமனறிறறிருநடஞ்செயதிருததாளைவழுததலின்று
பதிககளவாநலநதருவலெனறுநினையேததுதற்குபபணிககினறேனீ
விதிககளவாச்சிததிகண்முனகாட்டுகவிஙகென்கினறுயவிரைநதநெஞ்சே
பொதிககளவாமுனனரிஙகேசத்ததநுககளவென்பாாபோனறுயனறே. (க)

கலிநிலைத்துறை.

கருணையாம்பெருஙகடலமுதளித்தனையெனககே
தருணவாரிசமலாப்பதநதந்தனைநின்னை
அருணவண்ணவொணசுடர்மணிமணடபததடியென
பொருணயப்புறக்கண்டுகெண்டுளமகிழ்போதே. (க)

### கொச்சகக்கலிப்பா.

வானாகிவானடுவேமன்னுமொளியாகியதிற்
றானாகிவானாகிச்சன்மார்க்கருள்ளிருக்குந்
தேனாகித்தெள்ளமுதாய்த்தித்திக்குந்தேவேநீ
யானாகியெனனுளிருக்கின்றாயென்னேயோ. (க)

ஞானாகரச்சுடரேஞானமணிவிளக்கே
ஆனாவருட்பெருஞ்சிற்றம்பலத்தேயானந்தத்
தேனாரமுதாஞ்சிவமேசிவமேநீ
நானாகியென்னுள்நடிக்கின்றாயென்னேயோ. (உ)

### நிலமண்டலவாசிரியப்பா.

சிறசபைககண்ணும்பொற்சபைக்கண்ணுந்
திருநடம்புரியுந்திருநடராஜ
வெனககருள்புரிநதனைக்கடியேன்கைம்
மாறறையறிநதிலனபோற்றிநினனருளே
நாயினுஞ்சிறியேனாயினும்பெரியேனை
யாதிற்பெரியேன்றீதிற்பெரியேன்
என்னையாண்டருளினையெனையாண்டவனே
அம்பலத்தாடல்செயயெம்பெரும்பொருளே. (க)

### அறுசீரடியாசிரியவிருத்தம.

அருட்பெருங்கடலேயெனையாண்டசற்குருவேஞானப்
பொருட்பெருஞ்சபையிலாடும்பூரணவாழ்வேநாயேன்
மருட்பெருமாயைமுற்றுமடிநதனவினைகளோடே
யிருட்பெருந்தடையுநீககியிரவியுமெழுநததன்றே. (க)

மாணவநிலைகருமேலேவயங்கியவொளியேமன்றிற்
றாணவநடஞ்செயகினறதனிப்பெருந்தலைவனேயென்
கோணவமாயையெல்லாங்குலைநதனவினைகளோடே
ஆணவவிருளோநீககியலரியுமெழுநததன்றே. (உ)

தறபரம்பொருளேவேததலைநின்றவொளியேமோனச்
சிற்பரசுகமேமனறிற்றிருநடம்புரியுந்தேவே
வற்புறுமாயையெல்லாமடிநதனவினைகளோடே
இற்படுமிருணீககியிரவியுமெழுநததன்றே. (ங)

### எண்சீரடியாசிரியவிருததம்.

வண்டணிபூங்குழலம்மையெங்கள்சிவகாம வல்லியொடுமணிமன்றில்வயங்கியநின்வடிவங், கண்டவரைக்கண்டவர்தங்கான்மலர்முதலேவர்களுமுடிக்கேமுடிக்கின்ற கடிமலராமெனறால், பண்டகுநின்றிருத்தொண்டடிப்பெருமையவரேபகாநிடுவாமறைகளெலாம்பகாநிடுவோன்புகுந்தே, விண்டெலாந்துவெளுத்தவைவெளுத்தமட் டோவவற்றைவியந்தோதும்வேதியரும்வெளுததனருளுடம்பே. (க)

குறட்டாழிசை.

அணியேயெனதுமெய்யறிவேபொதுவளரரசேதிருவருளமுதே
யினிதருள்வாயிதுதருணமமுதருளாயிதுதருணம
மணியேயெனதுகணமணியேபொதுவளாமதியேதிருவருண்மதியே
யருளபுரிவாயிதுதருணமருள்புரிவாயிதுதருணம். (௧)

கட்டளைக்கலிப்பா.

உடுக்கவோவொருகந்தைக்குமேவிலையுண்ணவோவுணவுக்குமவழியிலை
படுக்கவோபழம்பாய்க்குங்கதியிலைபாரினல்லவர்பாற்சென்றுபிச்சைதா
னெடுக்கவோவிடமில்லையெனபாலுனக்கிரக்கமென்பதுமில்லையுயிரைத்தான்
விடுக்கவோமனமில்லையென்செய்குவேன்வெண்பிறைச்சடைவித்தகவள்ளலே. (௧)

பண்டுநின்றிருப்பாதமலரையேபாடியாடியப்பத்திமையோரைப்போற்
றொண்டுகொண்டெனையாண்டனையின்றுதான்றட்டனென்றுதுரத்திடல்நன்றுகொல்
குண்டுநீர்க்கடல்சூழுலகத்துளோர்குற்றமாயிரங்கோடிசெய்தாலுமுன்
கொண்டுபின்குலம்பேசுவரோவெனைக்குறிக்கொளவாயெண்குணத்திகழ்வள்ளலே.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மழவுக்குமொருபிடிசோறளிப்பதன்றியிருபிடியூண்வழங்கிலிங்கே
யுழவுக்குமுதலகுறையுமெனவளர்த்தங்கவற்றையெலாமோகோபேயின்
விழவுக்கும்புலாலுண்ணுமவிருந்துக்குமருந்துக்குமெலிந்துமாண்டா
ரிழவுக்குமிடர்க்கொடுங்கோலிறைவரிக்குங்கொடுத்திழப்பரென்னேயென்னே. (௧)

தரவுகொச்சகக்கலிப்பா

கரும்பசைக்குமொழிச்சிறியார்கணமனத்துப்பயின்றுபயின்
றிரும்பசைக்குமனமபெற்றேன்யானோவிவ்வேழைகடம்
அரும்பசிக்குமருந்தளிப்பேனந்தோவிங்கென்னாலே
துரும்பசைக்கமுடியாதேசோதிநடப்பெருமானே. (௧)

கலித்தாழிசை.

அருளாலேயருளிறையருள்கின்றபொழுதங்கேயனுபவமாகின்றதென்னடிதாயே
தெருளாலேமருளாலேதெரியாதுதெரியுந்திருநடவின்பமென்றறியாயோமகளே. (௧)

அறிவாலேயறிவினையறிகின்றபொழுதங்கேயனுபவமாகின்றதென்னடிதாயே
செறிவாலேபிறிவாலேதெரியாதுதெரியுந்திருவருளுருவமென்றறியாயோமகளே. (௨)

கலித்துறை.

மாதோர்புடைவைத்தமாமருந்தேமணியேயென்மட்டில்
யாதோதிருவுளமயானறியேனிதற்கென்னசெய்வேன்
போதோகழிகின்றதந்தோநின்றனைப்பொருந்துகின்ற
சூதோரணுவுந்தெரியேனின்பாதத்துணைதுணையே. (௧)

### அறுசீரடியாசிரியவிருத்தம.

திருவே திகழுங்கலைமகளே திருவேமலையான் றிருமகளே
உருவேயிச்சைமயமேமெய்யுணர்வின்வணமேயுயரின்பக
குருவேயாதிததனித்தாயேகுலவும்பனையாம்பெருந்தாயே
மருவேமலரேசிவகாமவல்லிமணியேவநதருளே. (௧)

அருளேயறிவேயன்பேதெள்ளமுதேமாதரசேமெய்ப்
பொருளேதெருளேமாறறறியாப்பொனனேமினனேபூஙகிளியே
இருளேய்மனததிலெய்தாதவின்பபெருகேயிவ்வடியேன்
மருளேதவிர்ததசிவகாமவல்லிநினகேவந்தனமே. (௨)

### கலிததுறை.

எல்லாககுறையுந்தவிர்நதேனுனனின்னருளெய்தினனான்
வல்லாரின்வல்லவனானேனகருணைமருநதருநதி
நல்லாரெவர்க்குமுபகரிப்பானிஙகுநணணுகினறேன்
கொல்லாவிரததிலென்னைககுறிககொணடகோலததனே. (௩)

### தரவுகொசசககலிபபா.

ஆர்நதவருட்பெருஞ்சோதியப்பாநானடுத்தவாதஞ்
சோர்நதமுகமபார்ககவினிததுணியேனின்னருளாணை
நேர்நதவர்கணேர்நதபடிநெகிழ்நதுரைககும்வார்த்தைகளு
மோர்ந்துசெவிபுகததுணியேனுனனாணையுனனாணை. (௪)

திருச்சிறறம்பலம்.

---

# திருவருட்பேறு.

### எண்சீரடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

கொழுந்தேனுஞ்செழும்பாகுஙகுலவுபசும்பாலுங கூட்டியுண்டாற்போலினிக்குங்குணங்கொள்சடைககனியே, தொழுநதேவமடந்தையர்க்குமஙகலநாணகழுததிற்றேன்றவிடஙகழுததினுளேதோன்றநின்றசுடரே, எழுந்தேறுமனபருளததேறறுதிருவிளககேயெனனுயிர்ககுத்துணையேயெனனிருகணணுணமணியே, அழுநதேறவறியாதென்னவலநெஞ்சமந்தோவபயமுனககபயமெனையாணடருள்கவிரைநதே. (௧)

அம்பலததேயாடுகின்றவாரமுதேயரசே யானந்தமாகடலேயறிவேயென்னன்பே, உம்பர்கட்கேயன்றியிந்தவுலகர்கட்குமருள்வா னொளிர்கின்றவொளியேமெய்யுணர்ந்தோர்தமமுறவே, எமபலததேவாகியெனக்கெழுமையுநற்றுணையாயென்னுளததே விளஙகுகின்றவென்னிறையேநினது,செம்பதத்தேமலர்விளங்ககண்டுகொண்டேனெனதுசிறுமையெலாநதீர்ந்தேமெய்ச்செல்வமடைந்தேனே. (௨)

அடிவிளங்கக்கனகசபைத்தனிநடனம்புரியுமருட்சுடரேயென்னுயிருக்கானபெருந்துணையே, முடிவிளங்கக்கரத்தேந்துஞ்சோதிமலைமருந்தேசொற்பதமெல்லாங்கடந்தசிற்சொருபப்பொருளே, பொடிவிளங்குதிருமேனிப்புண்ணியனேஞானபோனகனார்ச்சிவிகையின்மேற்பொருந்தவைத்தபுனிதா, படிவிளங்கச்சிறியேனின்பதமலர்கண்டுவந்தேன்பரிவொழிந்தேனருட்செல்வம்பரிசெனப்பெற்றேனே. (௯)

அயலறியேனினதுமலரடியன்றிச்சிறிதுமம்பலத்தேநிதம்புரியுமானந்தநடங்கண்டுயலறியேனெனினுமதுகண்டுகொள்ளுமாசையொருகடலோவெழுகடலோவுரைக்கவொண்ணாதுடையேன், மயலறியாமனத்தமர்ந்தமாமணியேமருந்தே மதிச்சடையெம்பெருமானின்வாழ்த்தன்றிமறந்தேன், செயலறியேனெனக்கருளத்திருவுளஞ்செய்திடவாய்த்திருவெழுத்தைந்தாணையொருதுணைசிறிதிங்கிலனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

கலித்துறை.

சேய்போலுலகத்துயிரையெல்லாமெண்ணிச்சோர்ந்துபெற்ற
தாய்போலுரைப்பாசன்மார்க்கசங்கத்தவர்சாற்றுமெட்டிக்
காய்போற்பிறர்தமைக்கண்டார்க்கசந்துட்கடுகடுத்தே
நாய்போற்குரைப்பாதுன்மார்க்கசங்கத்தவர்நானிலத்தே. (௧)

கலிவிருத்தம்.

பொத்தியமலப்பிணிப்புழுக்குரம்பைதான
சித்தியற்சுத்தசன்மார்க்கச்சோப்பினால்
நித்தியமாகியேநிகழுமென்பது
சத்தியஞ்சத்தியஞ்சகத்துளீர்களே. (௧)

ஓவுறாத்துயர்செயுமுடம்புதானென்றுஞ்
சாவுறாதின்பமேசார்ந்துவாழலாம்
மாவுறுச்சுத்தசன்மார்க்கநன்னிலை
மேவுறாதங்களைவிடுகநெஞ்சமே. (௨)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஆடுகின்றசேவடிக்கேயாளானேனூனாதவாக்கைபெற்றேன்
கூடுகின்றசன்மார்க்கசங்கத்தேநடுவிருந்துகுலாவுகின்றேன்
பாடுகின்றேனெந்தைபிரான்பதப்புகழையன்பினொடும்பாடிப்பாடி
நீடுகின்றேனின்பக்கூத்தாடுகின்றேனெண்ணமெலாநிரம்பினேனே. (௧)

என்னுரைக்கேயென்னுரைக்கேனிந்தவதிசயந்தன்னையெம்மனோர்காள்
பொன்னுரைக்குமணிமன்றிற்றிருநடனம்புரிகின்றபுனிதனென்னுள்
மின்னுரைக்கும்படிகலந்தானபிரியாமல்விளங்குகின்றான்மெய்ம்மையான
தன்னுரைக்குமென்னுரைக்குஞ்சமரசஞ்செய்தருள்கின்றான்சகத்தின்மீதே. (௨)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

சன்மார்க்கசங்கத்தீரசிற்றடியேனுமது தாள்வணிங்கிச்சாற்றுகின்றேன் றயவி ஞெடுங்கேட்பீ, ரென்மார்க்கதெனை நுமக்குளொருவனெனக்கொள்வீ ரெல்லாஞ் செய்வலலநமதிறைவனையேதொழுவீ, புன்மார்க்கத்தவர்போலேவேறுசிலபுகன் றேபுந்திமயக்கடையாதீர்பூரணமெய்சுகமாய்த, தன்மார்க்கமாய்விளங்குஞ்சுத்தசிவ மொன்றேதனஞணை இயனஞணைசார்ந்தறிமினீணடே. (அ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மதுவிலக்கு.

மதிப்பாலையருட்பாலையானந்தப்பாலையுண்ணமறந்தாரசில்லோர்
விதிப்பாலையறியோதாய்ப்பாலையுண்டுகிடந்தழுதுவிளைவிற்கேறபக்
கொதிப்பாலையுணாவழிகருங்குடிப்பாலைமடிப்பாலைக்குடிப்பாரநதோ
துதிப்பாலையருடருநந்தேவசிகாமணிதேவைததுதியாரனறே. (க)

திருச்சிற்றம்பலம்.

---

# வயித்தியநாதர்பதிகம்.



பதினொன்குசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

ஓகைமடவாரல்குலேல்பிரமபதமவர்களுநதியேவைகுநதமே
லோங்குமுலையேகைலையவாகுமுதவாயினிதழுறலேயமுதமவர்தம்
பாகனையமொழியேநல்வேதவாக்கியமவாகள்பாரவையேகருணைநோக்கம்
பாங்கினவரோடுவிளையாடவருசுகமதேபரமசுகமாகுமிநத
ஊகமறியாமலேதேகமிகவாடினீருறுசுவைப்பழமெறிநதே
யுற்றவெறுவாய்மெல்லும்வீணாநீரெனறுநல்லோரைநிநதிப்பரவர்தம்
வாகைவாயமதமறமருந்தருள்கதவசிகாமணியுலகநாதவளளல்
மகிழவருவேளூரிலன்பாபவரோகமறவளாவயித்தியநாதனே. (க)

உண்டதேயுணவுதான்கண்டதேகாட்சியிதையுற்றறியமாட்டார்களா
யுயிருண்டுபாவபுண்ணியமுண்டுவினைகளுண்டுறுபிறவியுண்டுதுன்பத்
தொண்டதேசெயுநரகவாதையுண்டினபமுறுசொாககமுண்டிவையுமன்றித
தொழுகடவுளுணடுகதியுணடென்றுசிலர்சொலுநதுாப்புதியாலுலகிலே
கொண்டதேசாதகமவெறுதநுமடமாதரதஙகொஙகையும்வெறுததீாகையில்
கொணடதிஙகனியைவிட்டந்தரததொருபழஙகொள்ளுவீரென்பரநத
வண்டாவாயறவொருமருந்தருள்கதவசிகாமணியுலகநாதவள்ளல்
மகிழவருவேளூரிலன்பர்பவரோகமறவளாவயித்தியநாதனே. (உ)

உம்பாவானமுதனையசொற்களாற்பெரியோருரைத்தவாய்மைகளைநாடி
யோதுகின்றார்தமைககண்டவமதிதுமேதிரிலொகிபோலநிற்பதுமலால்
சம்பாவாயிவாவாய்க்கதைப்பென்பர்சிறுகருங்காகைவாயக்கத்தலிவர்வாய்க்
கத்தலிற்சிறிதென்பாருடூேறுநெய்யொருகலங்கொள்ளவேண்டுமென்பா

இம்பரநாங்கேட்டகதையிதுவெனபரனறியுமிவர்க்கேதுதெரியுமென்ப
ரிவையெலாமெவனோவோரவம்பனும்வீணன்முன்னிட்டசட்டென்பரந்த
வம்பாவாயறவொருமருந்தருளகதவசிகாமணியுலகநாதவள்ளல்
மகிழவருவேளூரிலனபாபவரோகமறவளாவயிததியநாதனே. (௩)

கல்லையுமுருககலாம்நாருரித்திடலாம்கனிந்தகனியாச்செய்யலாம்
கடுவிடமுமுண்ணலாமமுதாககலாஙகொடுங்காடிபுலிசிஙகமுதலா
வெல்லுமிருகஙகளையும்வசமாக்கலாமன்றிவித்தையுஙகற்பிக்கலாம்
மிககவாழைததண்டைவிறகாககலாமணலைமேவுதோவடமாககலா
மில்லையொருதெய்வமவேறில்லையெம்பாலின்பமீகின்றபெண்கள்குறியே
யெஙகள்குலதெய்வமெனுமூடரைததேற்றவெனிலெததுணையுமரிதரிதுகாண்
வல்லையவருணாவுறமருந்தருள்கதவசிகாமணியுலகநாதவள்ளல்
மகிழவருவேளூரிலன்பாபவரோகமறவளாவயிததியநாதனே. (௪)

படியளவுசாம்பலைப்பூசியேசைவம்பழுத்தபழமோபூசுணைப்
பழமோவெனக்கருஙகல்போலுமசையாதுபாழாகுகின்றாகளோா
பிடியளவுசாதமுங்கொள்ளாகளல்லதொருபெண்ணையெனினுங்கொள்கிலார்
பேய்கொண்டதோவன்றிநோய்கொணடதோபெருமபிததேற்றதோவறிகிலேன்
செடியளவுமூததைவாய்ப்பல்லழுக்கெல்லாஙதெரிநதிடக்காட்டிநகைதான
செய்துவளையாப்பெருஞ்செம்மரத்துண்டுபோற்செம்மாப்பரவாவாயமதம்
மடியளவதாவொருமருந்தருள்கதவசிகாமணியுலகநாதவளளல்
மகிழவருவேளூரிலன்பாபவரோகமறவளாவயிததியநாதனே. (௫)

பெண்கொண்டசுகமதேகண்கண்டபலனிதுபிடிக்கவறியாதுசிலாதாம்
பேரூரிலாதவொருவெறுவெளியிலேசுகம்பெறவேவிரும்பிவீணிற .
பண்கொணடவுடல்வெளுததுள்ளேநரம்பெலாம்பசையற்றுமேலெழும்பப்
பட்டினியிடர்ந்துசாகின்றாகளீதென்னபாவமிவருண்மையறியார்
கண்கொண்டகுருடரேயெனறுவாய்ப்பல்லெலாங்காட்டிச்சிரித்துநீண்ட
கழுமரககட்டைபோல்நிற்பாாகளையவிக்கயவர்வாய்மதமுழுதுமே
மண்கொண்டுபோகவொார்மருந்தருள்கதவசிகாமணியுலகநாதவள்ளல்
மகிழவருவேளூரிலன்பார்பவரோகமறவளர்வயிததியநாதனே. (௬)

திருத்தமுடையோர்கருணையாலிந்தவுலகிற்றியங்குவீரழியாச்சுகம்
சேருலகமாமபரமபதமதனையடையுநெறிசேரவாருஙகளெனறால்
இருததினியசுவையுணவுவேண்டுமணியாடைதருமிடம்வேண்டுமிவைகளெல்லா
மிலலைபாயினுமிரவுபகலென்பதறியாமலிறுகப்பிடித்தணைக்கப்
பெருததமுலையோடிளம்பருவமுடனழகுடையபெண்ணகப்படுமாகிலோ
பேசிடீரப்பரமபதநாட்டினுக்குநும்பிறகிதோவருவமென்பாா
வருததுமவருறவறமருந்தருள்கதவசிகாமணியுலகநாதவள்ளல்
மகிழவருவேளூரிலன்பாபவரோகமறவளர்வயித்தியநாதனே. (௭)

பேதையுலகீர்விரதமேதுதவமேதுவீண்பேச்சிவையெலாம்வேதனும்
பித்தன்வாய்ப்பிததேறுகத்துநூல்கத்தியபெரும்புரட்டாகுமல்லால்

ஓதையுறுமுலகாயதத்திலுளவுண்மைபோலொருசிறிதுமில்லையில்லை
யுள்ளதறியாதிலவுகாத்தகிளிபோலுடலுலாந்தீர்களினியாயினு
மேதையுணவாதிவேண்டுவவெலாமுண்டுநீர்விரைமலாதொடையாதியா
வேண்டுவவெலாங்கொண்டுமேடைமேற்பெண்களொடுவிளையாடுவீர்களென்பார்
வாதையவர்சாரபறமருந்தருள்கதவசிகாமணியுலகநாதவள்ளல்
மகிழவருவேளூரிலனபாபவரோகமறவளாவயிததியநாதனே. (௮)

ஈனம்பழுததமனவாதையறநின்னருளையெண்ணிநல்லோர்களொருபா
லிறைவநின்றோததிரமியம்பியிருகண்ணீரிறைப்பவதுகண்டுநின்று
ஞானம்பழுததுவிழியாலொழுகுகின்றநீாநம்முலகிலொருவரலவே
ஞானியிவாயோனிவழிதோன்றியவரோவெனநகைப்பாசும்மாவழுகிலோ
வூனங்குழுததகண்ணுமெனபருலகததிலுயாபெண்டுசாககொடுத்த
வொருவன்முகமென்னவிவாமுகம்வாடுகின்றதெனவுளறுவாாவாயடங்க
மானம்பழுததிடுமருந்தருள்கதவசிகாமணியுலகநாதவள்ளல்
மகிழவருவேளூரிலனபாபவரோகமறவளாவயிததியநாதனே. (௯)

கற்பவையெலாங்கற்றுணர்நதபெரியோாதமைககாண்பதேயருமையருமை
கறபதருமிடியனிவணிடையடைந்தாலெனககருணையாலவாவலியவந்
திற்புறனிருப்பவதுகண்டுமேந்தோகடிதெழுந்துபோய்ததொழுதுதங்கட்
கியலுறுதிவேண்டாதுகண்கெட்டகுருடாபோலேமாந்திருப்பரிவாதாம்
பொற்பினறுசுவையறியுமறிவுடையரனறுமேற்புல்லாதியுணுமுயிர்களும்
போன்றிடாரிவாகளைககூடைபோய்ப்பாழாம்புறசசுவரெனபுகலலாம்
வறபுறும்படிசருமவழியோங்குதவசிகாமணியுலகநாதவள்ளல்
மகிழவருவேளூரிலன்பாபவரோகமறவளாவயிததியநாதனே. (௧௦)

மெய்யோதினைததனையுமறிகிலாபொய்ககதைவிளம்பவெனிலிவ்வுலகிலோ
மேலுலகிலேறுகினுமஞ்சாதுமொழிவாதெருமேவுமணவெனினுமுதவக
கையோமனததையும்விடுககவிசையாகள்கொலைகளவுகட்காமமுதலாக
கண்டதீமைகளன்றிநன்மையென்பதனையொருகனவிலுங்கண்டறிகிலா
ஐயோமுனிவாதமைவிதிப்படிபடைததவிதியஙகைதாஙகங்கையெனனு
மாறறிற்குளிககினுநதீமூழ்கியெழினுமவவசுததநீஙகாதுகணடாய்
மையோரணுததுணையுமேவுறாததவசிகாமணியுலகநாதவள்ளல்
மகிழவருவேளூரிலனபர்பவரோகமறவளாவயிததியநாதனே. (௧௧)

இளவேனினமாலைபாயககுளிாசோலையாய்மலரிலஞ்சிபூம்பொய்கையருகா
யேற்றசந்திரகாந்தமேடையாயதன்மேலிலங்குமரமியவணையுமாய்
தளவேயுமல்லிகைப்பநதராயப்பாலயோற்றழைததிடுநிலாக்காலமாயத
தனியிளநதென்றலாயநிறைநரம்புளவீணைதனணிசைப்பாடலிடமாய்
களவேகலந்தகற்புடையமடவரலபுடைகலநதயவாாதையுடனுய்க்
களிகொளவிருந்தவாகள்கண்டசுகநின்னடிக்கழனிழற்சுகநிகருமே
வளவேலைசூழுலகுபுகழ்கினறதவசிகாமணியுலகநாதவள்ளல
மகிழவருவேளூரிலனபாபவரோகமறவளர்வயித்தியநாதனே. (௧௨)

திருச்சிறறம்பலம்.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஒன்றுமுன்னெண்பாலெண்ணிடக்கிடைத்தவுவகைக்குமேற்றனையருளொளியால்
நன்றுகண்டாங்கேயருட்பெருஞ்சோதிநாதனைக்கண்டவனடிக்கும்
மன்றுகண்டதனிற்சித்தெலாம்வல்லமருந்துகண்டுற்றதுவடிவாய்
நின்றுகொண்டாடுந்தருணமிங்கிதுவேநெஞ்சமேயஞ்சலைநீயே. (௧)

### கலித்துறை.

கண்டேன்சிற்றம்பலத்தானந்தநாடகங்கண்டுகளி
கொண்டேனெல்லாம்வல்லசித்தனைக்கூடிக்குலவியமு
துண்டேன்மெய்ஞ்ஞானவுருவடைந்தேன்பொய்யுலகொழுக்கம்
விண்டேன்சமரசசன்மார்க்கம்பெற்றவியப்பிதுவே. (௧)

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

எவ்வுயிரும்பொதுவெனக்கண்டிரங்கியுபகரிக்கின்றார்யாவரந்தச்
செவ்வியார்தஞ்செயலனைத்துந்திருவருளின்செயலெனவேதெரிந்தேனிங்கே
கவ்வையிலாத்திருநெறியத்திருவாளர்தமக்கேவல்களிப்பாற்செய்ய
ஒவ்வியதென்கருத்தவர்சீரோதிடவென்வாய்மிகவுமூர்வதாலோ. (௧)

எத்துணையும்பேதமுறாதெவ்வுயிருந்தம்முயிர்போலெண்ணியுள்ளே
யொத்துரிமையுடையவராயுவக்கின்றார்யாவரவருளந்தான்சுத்த
சித்துருவாயெம்பெருமானடம்புரியுமிடமெனநான்தெரிந்தேனந்த
வித்தகர்தமடிக்கேவல்புரிந்திடவென்சிந்தைமிகவிழைந்ததாலோ. (௨)

கருணையொன்றேவடிவாகியெவ்வுயிருந்தம்முயிர்போற்கண்டுஞானத்
தெருணெறியிற்சுத்தசிவசன்மார்க்கப்பெருநீதிசெலுத்தாநின்ற
பொருணெறிசற்குணசாந்தப்புண்ணியர்தந்திருவாயாற்புகன்றவார்த்தை
அருணெறிவேதாகமத்தினடிமுடிசொல்வார்த்தைகளென்றறைவராலோ. (௩)

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

காற்றாலேபுவியாலேககனமதனாலேகனலாலேபுனலாலேகதிராதியாலே, கூற்றாலேபிணியாலேகொலைக்கருவியாலே கோளாலேபிறவியற்றுங்கொடுஞ்செயல்களாலே, வேற்றாலேயெஞ்ஞான்றுமழியாதேவிளங்கும்மெய்யளிக்கவேண்டுமென்றேன்விரைந்தளித்தானெனக்கே, யேற்றாலேயிழிவெனநீர்நினையாதீருலகீ ரெந்தையருட்பெருஞ்சோதியிறைவனைச்சார்வீரே. (௧)

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

தந்தைதன்மையேதனையன்றன்றன்மையென்றுசாற்றுதல்சத்தியங்கண்டா
யெந்தையெம்பிரானைந்தொழில்புரியுமிறைவன்மன்றுளேயியனடம்புரிவான்
மைந்தனென்றனையாண்டவனெல்லாம்வல்லநாயகனல்லசீருடையான்
அந்தணாளமெய்யறிவுடையவனென்னப்பன்றன்மையென்றன்மையென்றறிமின்.

திருச்சிற்றம்பலம்.

# நடராஜஅலங்காரம்.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இரண்டேகாற்கைமுகந்தந்தீரின்பநடஞ்செய்பெருமானீர்
இரண்டேகாற்கைமுகங்கொண்டீரென்னையடிகளென்றணைத்தேன்
இரண்டேகாற்கைமுகம்புடைக்கவிருந்தாயெனைக்கண்டிங்கேநீ
இரண்டேகாற்கைமுகங்கொண்டாயென்றார்மன்றினின்றாரே. (௧)

இரண்டேகாற்கைமுகங்கொண்டீரெனையுடையீரம்பலத்தீர்
இரண்டேகாற்கைமுகந்தந்தீரென்னையிதுதானென்றணைத்தேன்
இரண்டேகாற்கைமுகங்கொண்டிங்கிருந்தீயுமெனைக்கண்டே
இரண்டேகாற்கைமுகங்கொண்டாயென்றார்தோழியிவர்வாழி. (௨)

ஆடுங்கருணைத்திருநடத்தீராடுமிடந்தான்யாதென்றேன்
பாடுந்திருவஞ்சவுந்தரமும்பழமுங்காட்டுமிடமென்றார்
நாடும்படிநன்கருளுமென்றேனங்காயமுன்பினென்றேயாய
ஏடுந்தியபன்னடுவுளதாலென்றார்தோழியிவர்வாழி. (௩)

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

உயிரெலாமொருநீதிருநடம்புரியுமொருதிருப்பொதுவெனவறிந்தேன்
செயிரெலாந்தவிர்ந்தேன்றிருவெலாமடைந்தேன்சித்தெலாம்வல்லதொன்றறிந்தேன்
மயிரெலாம்புளகித்துளமெலாங்கனிந்துமலர்ந்தனன்சுத்தசன்மார்க்கப்
பயிரெலாந்தழைக்கப்பதியெலாங்களிக்கப்பாடுகின்றேன்பொதுப்பாட்டே. (௧)

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

அருந்தவர்காண்டற்கரும்பெருங்கருணையருட்பெருஞ்சோதியென்னுளத்தே
இருந்தனனம்மாநான்செய்ததவந்தானென்னையோவென்னையோவென்றாள்
திருந்துதெள்ளமுதுண்டழிவெலாந்தவிர்ந்ததிருவுருவடைந்தனன்ஞான
மருந்துமாமணியுமந்திரநிறைவுமவாய்த்தனவாய்ப்பியென்றாளே. (௧)

# பிரார்த்தனைவிளக்கம்.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

கருணைக்கடலேயதிலெழுந்தகருணையமுதேகனியமுதிற்
றருணச்சுவையேசுவையனைத்துஞ்சார்ந்தபதமேதற்பதமே
பொருண்மெய்ப்பரமேசிதம்பரமாம்பொதுவினடிக்கும்பரம்பரமே
தெருண்மெய்க்கருத்திற்கலந்தெனையுஞ்சித்திநிலைகடெரித்தருளே. (௧)

### நேரிசைவெண்பா.

உன்னைவிடமாட்டேனுன்றுணையெம்பெருமான்
என்னைவிடமாட்டாயிருவருமாய் - மன்னியென்றும்
வண்மையெலாம்வல்லவாய்மையருளாலுலகுக்
குண்மையின்பஞ்செய்துமுவந்து. (௧)

இதுவேதருணமெனையணைதற்கிங்கே
பொதுவேநடிக்கும்புனிதா - விதுவேய்ந்த
சென்னியனேசுத்தசிவனேயுனக்கடியேன்
அன்னியனேயல்லேனறிந்து. (௨)

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருநிலைத்துநல்லருளொடுமன்பொடுஞ்சிறப்பொடுஞ்செழித்தோங்க
வுருநிலைத்திவண்மகிழ்வொடுவாழ்வுறவுவந்துநினனருள்செய்வா
யிருநிலத்தவரினபுறத்திருவருளியல்வடிவொடுமெனறிற்
குருநிலைத்தசற்குருவெனுமிறைவநின்குரைகழற்பதம்போற்றி. (௧)

### கலித்துறை.

தருவாயிதுநற்றருணங்கண்டாயென்னைத்தாங்கிக்கொண்ட
குருவாய்விளங்குமணிமன்றவாணனைக்கூடியின்ப
வுருவாயென்னுள்ளத்திலுள்ளேயமர்ந்துள்ளவுண்மையெலாந்
திருவாய்மலர்ந்தசிவகாமவல்லிநின்சீரருளே. (௧)

திருச்சிற்றம்பலம்.

## மாயை நீக்கம்.

### கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

முன்னான்செய்புண்ணியம்யாதோவுலகமுழுதுமென்பா
லிந்நாளடைந்தின்பமெய்திடவோங்கினனெண்ணியவா
றெந்நாளுமிவ்வுடம்பேயிறவாதவியற்கைபெற்றேன்
என்னாசையப்பனைக்கண்டுகொண்டேனென்னிதயத்திலே. (௧)

தாழைப்பழம்பிழிபாலொடுசக்கரைச்சாறளிந்த
வாழைப்பழம்பசுநெய்நறுந்தேனுமருவச்செய்து
மாழைப்பலாச்சுளைமாம்பழமாதிவடித்தளவி
யேழைக்களித்தனையேயருளாரமுதென்றனிறையே. (௨)

தென்பான்முகங்கொண்டதேவேசெந்தேனிற்சிறந்தபசு
வின்பால்கலந்தளிமுக்கனிச்சாறுமெடுத்தளவி
யன்பான்மகிழ்ந்துமகனேவருகென்றழைத்தருளி
யென்பாலளித்தனையேயருளாரமுதென்றனிறையே. (௩)

அருட்பெருஞ்சோதியென்னம்மையினோடறிவானந்தமாம்
அருட்பெருஞ்சோதியென்னப்பனென்னுள்ளத்தமர்ந்தன்பிறு
லருட்பெருஞ்சோதிதந்தெள்ளாரமுதந்தந்தழிவற்றதோர்
அருட்பெருஞ்சோதிச்செங்கோலுங்கொடுத்தனனற்புதமே. (௪)

போதோவிடிந்ததருளரசேயென்பொருட்டுவந்தென்
றூதோரெழுமையுநன்மையுற்றோங்கத்தருவதுதான்
மாதோடநீகருங்கனிரசமோவந்தவான்கனியின்
கோதோவறிந்திலனயாதோதிருவுளங்கூறுகவே. (௫)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

யான்முனமபுரிந்தபெருந்தவம்யாதோவென்சொல்வேனென்சொல்வேனந்தோ
வூனமனமுருகவென்றனைத்தேற்றியொளியுருககாட்டியதலைவா
வேன்மனமிரங்காயின்றுநீயென்றேனென்றசொல்லொலியடங்குதன்முன
ஆன்மகிழ்கன்றினணைத்தெனையெடுத்தாயருட்பெருஞ்சோதியென்னரசே. (௧)

பனிப்பறுத்தெல்லாம்வல்லசித்தாக்கிப்பரம்பரந்தருகின்றதென்றோர்
தனிப்பழமெனக்கேதந்தைதான்றந்தான்றமியனேனுண்டனன்றன்
இனிப்பைநானென்னென்றியம்புவேனந்தோவென்னுயிரினித்ததெனகரணஞ்
சனிப்பறவினித்தத்துவமெல்லாந்தனித்தனியினித்தனதழைத்தே. (௨)

கலிவிருத்தம்.

சிற்றறிவுடையநான்செய்ததீமைகள்
முற்றவும்பொறுத்தருண்முனிந்திடேலின்றே
தெற்றெனவருட்பெருஞ்சோதிச்செல்வமு
மற்றவும்வழங்குகவரதனேயென்றேன். (௧)

என்றசொல்செவிமடுத்திறையுமஞ்சிடே
லின்றுனக்கருட்பெருஞ்சோதியீந்தனம்
நன்றுறமகிழ்கவெந்நாளுஞ்சாவுறு
வென்றியுமளித்தனமெனறுமேவினன். (௨)

மேவியென்னுள்ளகத்திருந்துமேலுமெண
ணுவியிற்சலந்தவிர்வனவென்றேதுமோர
பூவியற்பேதமும்போக்கியொன்றதாய்த்
தேவியற்புரிந்தனன்சிதம்பரேசனே. (௩)

திருச்சிற்றம்பலம்.

# முறையீடு.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மன்றுணின்றாடும்வள்ளலேயெனதுவள்ளலென்றெனக்குளேதெரிந்த
வன்றுதானனொடுங்கியம்மையேயப்பாவையனேயனபனேயரசே
யென்றுநின்றனையேநினைத்திருக்கின்றேனெட்டுணையெனினும்வேறிடத்திற
சென்றுநின்றறியேன்றெய்வமேயிதுநின்றிருவுளந்தெரிந்ததுதானே. (௧)

கண்ணெலாநிரம்பப்பேரொளிகாட்டிக்கருணைமாமழைபொழிமுகிலே
விண்ணெலாம்நிறைந்தவிளக்கமேயென்னுண்மேவியமெய்ம்மையேமன்று
ளெண்ணெலாங்கடந்தேயிலங்கியபதியேயின்றுநீயேழையேன்மனத்துப்
புண்ணெலாந்தவிர்த்துப்பொருளெலாங்கொடுத்துப்புகுந்தெனதுளங்கலந்தருளே.

உள்ளலேனுடையாருண்ணவும்வறியாருறுபசியுழந்துவெந்துயரால்
வள்ளலேநெஞ்சம்வருந்தவும்படுமோமற்றிதைநினைத்திடுந்தோறும்
எள்ளலேனுள்ளமெரிகின்றதுடம்புமெரிகின்றதென்செய்வேனந்தோ
கொள்ளலேனுணவுந்தரிக்கிலேனிந்தக்குறையெலாந்தவிர்த்தருளெந்தாய். (௩)

அனபிலேனெனினுமறிவிலேனெனினுமன்றுவந்தாண்டனையதனா
றுனபிலேனெனவிவ்வுலகெலாமறியச்சொலவினேன்சொல்லியநானே
யினபிலேனெனவின்றுரைத்திடலழகோவெனையுலகவமதித்திடிலென்
னெனபிலேகலந்தாயநினகும்வந்திடுமேயெய்துகவிணாந்தெனதிடத்தே. (௪)

சிரிப்பிலேபொழுதுகழிக்குமிவ்வாழ்க்கைச்சிறியவர்சிந்தைமாதிரமோ
பொருபபிலேதவஞ்செயபெரியாதம்மனமுமபுளிபபிலேதுவாப்பிலேயுவாப்புக
கரிபபிலேகொடியகயப்பிலேகடியகாப்பிலேகாப்பொடுகலநத
வெரிப்பிலேபுகுவதனறியெள்ளளவுமினிப்பிலேபுகுகின்றதிலையே. (௫)

திருச்சிற்றம்பலம்.

# வேண்டுகோள்.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அன்பாடுதிருப்பொதுவிலாடுகின்றவரசேநின்னடிமேலாணை
என்பாடொன்றிலையென்னாற்றுரும்புமசைத்திடமுடியாதிதுகாற்றொட்டுப்
பொன்பாடெவ்விதத்தானும்புரிந்துகொண்டுநீதானேபுரிதல்வேண்டும்
உன்பாடுநானுரைத்தேனீயினிச்சும்மாவிருக்கவொண்ணாதண்ணா. (௧)

முன்பாடுபின்பயன்றந்திடுமெனவேயுரைக்கின்றோமொழிகளெல்லா
மின்பாடுமிவ்வுலகிலென்னறிவிலையதனாலெல்லாம்வல்லோய்.
அன்பாடுதிருப்பொதுவிலாடுகின்றோயருட்சோதியளித்துக்காத்த
லுன்பாடுநானுரைத்தேனெனக்கொருபாடுண்டோநீயுரைப்பாயப்பா. (௨)

உன்றுணையுன்னைவிடவுற்றதுணைவேறிலையென்னுடையாயந்தோ
வென்றுணைக்காத்தருளியதின்மேயருட்சோதியீதல்வேண்டும்
அந்நாணையாதபடியருள்புரிந்தபெருங்கருணையரசேயென்னை
முன்னாணின்னடியவனென்றுலகறிந்தவிந்நாளென்மொழிந்திடாதே. (௩)

தூங்காதேவிழித்திருக்குஞ்சூதறிவித்தெனையாண்டதுரையேயென்னை
நீங்காதேயென்னுயிரிற்கலந்துகொண்டபதியேகால்நீட்டிப்பின்னே
வாங்காதேவிரைந்திவணீவரல்வேண்டுந்தாழ்த்திடிலென்மனந்தான்சற்றுந்
தாங்காதேயிதுநினதுதனித்ததிருவுளமறிந்தசரிதந்தானே. (௪)

இயங்காளிபுலிகரடியெனப்பெயர்கேட்டளநடுங்கியிருந்தேனூரில்
சயங்காளிகோயிலைக்கண்டஞ்சிமனந்தடதடத்துத்தளர்ந்தேனிந்தப்
பயங்காளிப்பயல்போலப்பயந்தவர்களெங்குளர்காண்பதியேயென்னை
வயங்காளிலொருவனெனநினையேல்கைப்பிள்ளையென்றுமதித்திடாயே. (௫)

சிறுசெயலைச்செயுமுலகச்சிறுநடையோர்பலபுகலத்தினந்தோறுந்தான்
உறுசெயலையறியாவிச்சிறுபயலைப்பிடித்தலைத்தலுவப்போகண்டாய்
தெறுசெயலைத்தவிர்த்தெல்லாச்சித்தியும்பெற்றிடவழியாத்தேகனாகப்
பெறுசெயலையெனக்களித்தேமறுசெயலைப்புரிகவெனைப்பெற்றதேவே. (௬)

திருச்சிற்றம்பலம்.

## பதிநிச்சயம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

உருவராகியுமருவினராகியுமுருவருவினராயு
மொருவரேயுளார்கடவுள்கண்டறிமினோவுலகுளீருணர்வின்றி
யிருவராமென்றுமூவரேயாமென்றுமியலுமைவர்களென்றும
எருவராயுரைத்துழல்வதென்னுடற்குயிரிரண்டுமூன்றெனலாமே. (௧)

### கலிவிருத்தம்.

அருட்பெருஞ்சோதியென்னகத்திலோங்கின
மருட்பெருந்திரையெலாமடிந்துநீங்கின
விருட்பெருமலமுதல்யாவுந்தீர்ந்தன
தெருட்பெருஞ்சித்திகள்சேர்ந்தவென்னையே. (௧)

### நேரிசைவெண்பா.

தாதையாமென்னுடையதாயாமென்சற்குருவாம்
மேதையாமின்பவிளைவுமாம் - ஓது
குணவாளன்றில்லையருட்கூத்தனுமையாண்
மணவாளன்பாதமலர். (௧)

திருவாமென்றெய்வமாந்தெள்ளமுதஞானக்
குருவாமெனேககாக்குங்கோவாம் - பருவனையின்
றேய்ப்பிள்ளையாமெஞ்சிவகாமவல்லிமகிழ்
மாப்பிள்ளைபாதமலர். (உ)

என்னறிவாமென்னறிவினின்பமாமென்னறிவின்
றன்னறிவாமுண்மைத்தனிநிலையாம் - மன்னுகொடிச்
சேலையிட்டான்வாழச்சிவகாமசுநதரியை
மாலையிட்டான்பாதமலா. (ங)

எண்சீரடியாசிரியவிருத்தம.

கிழக்குவெளுத்ததுசருணையருட்சோதியுதயங்கிடைததெனதுளககமலங்களிர்ந்தனதகத்தே, சழக்குவெளுத்ததுசாதியாசிரமாசாரஞ்சமயமதாசாரமெனச்சணடையிட்டகலக, வழக்குவெளுதததுபலவாம்பொய்நூல்கறறவாதம்மனமவெளுததுவாய்வெளுத்துவாயுறவாதித்த, முழக்குவெளுத்ததுசிவமேபொருளெனுஞ்சனமாாககமுழுநெறியிற்பரநாதமுரசுமுழங்கியதே. (க)

நாதரருட்பெருஞ்சோதிநாயகரென்றனையேநயந்துகொண்டதனித்தலைவாஞானசபாபதியார, வாதநடம்புரிகருணைமாநிதியாாவரதா உள்ளலெலாம்வல்லவாமாநலலவரெனனிடததே, காதலுடனவருகின்றாரென்றுபரநாதங்களிப்புறவேதொனிககினறதந்தராதுநதுபிதா, னேதமறமுழங்குகின்றதெனறுசொலலிக்கொண்டே யெழுகினருள்தொழுகின்றாளென்னுடையமகளே. (உ)

உழக்கறியீரளப்பதற்கோருளவறியீருலகீருரறியீாபேரறியீருண்மையொன்றுமறியீா, கிழககறியீாமேற்கறியீரம்பலத்தேமாயைக கேதமறநடிககினறபாதமறிவீரோ, வழககறிவீாசணடையிட்டேவமபளக்கவறிவீர் வடிக்குமுனனேசோறெடுததுவயிற்றடைககவறிவீா, குழைக்சறியேபழக்கறியேகூட்டுவாககக்கறியேகுழம்பேசாறேயெனவுஙகூறவறிவீரே. (ங)

இணக்கறியீரிதமறியீரிருந்தநிலையறியீ ரிடமறியீர்தடமறியீரிவ்வுடம்பையெடுத்த, கணககறியீாவழககறியீரம்பலததேமாயைக கலக்கமறநடிககின்றதுலககமறிவீரோ, பிணககறிவீாபிரட்டறிவீாபிழைசெயவேயறிவீாபேருணவைபபெருவயிற்றுப்பிலததிலிடவறிவீா, மணககறியேபிணககறியேவறுப்பேயோாபொரிப்பே வடைக்குழமபேசாறேயென்றடைககவறிவீரே. (ச)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கடுகொட்டுக்கறிக்கிடுகெதாளிககவெனககழறிககளிககாநினைற
சுடுகொட்டுப்பிணங்காளிச்சுகமனைத்துங்கணச்சுகமேசொல்லககேண்மின்
முடுகொட்டுக்கூற்றுவருஞ்சாவீராற்சாவதற்குமுன்னேநீவிா
இடுகொட்டுப்பிணஙகணடாலேததுமினிஞெவமையுமிவ்வாறிடுகவென்றே. (க)

ஷ வேறு.

குற்றம்புரிதலெனககியல்பேகுணமாககொள்ளலுனக்கியல்பே
சிறறம்பலவாவினிச்சிறியேன்செப்புமுகமன்யாதுளது
தெற்றென்றடியேன்சிந்தைதனைததெளிவித்தச்சந்துயர்தீாத்தே
யிற்றைப்பொழுதேயருட்சோதியீகதருணமிதுவாமே. (உ)

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

அன்புடையவரேயெல்லா முடையவரே யருட்பெருஞ்சோதியென் ஞண்டவரேயென், வன்புடைமனததைநன் மனமாக்கியெனதுவசஞ்செய்விததருளியமணிமன்றத்தவரே, யின்புடையவரேயென் னிறையவரேயென் னிருகணுண்மணிகளிலிசைந்திருந்தவரே, யென்புடையெனைத்தூக்கியெடுத்தீரிங்கிதனையெண் ணுகின்றேனமுதுண்ணுகின்றேனே. (௧)

### ௸ வேறு.

கடல்கடந்தேன் கரையடைந்தேன் கண்டுகொண்டேன்கோயில்கதவுதிறந்திடப்பெற்றேன்காட்சியெலாங்கண்டேன், அடர்கடந்ததிருவமுதுண்டருளொளியாலனைத்துமறிந்துதெளிந்தறிவுருவாயழியாமையடைந்தேன், உடல்குளிர்ந்தேனுயிர்கிளர்ந்தேனுள்ளமெலாந்தழைத்தேனுள்ளபடியுள்ளபொருளுள்ளவனுய்நிறைந்தேன், இடர்தவிர்க்குஞ்சித்தியெலாமென் வசமோங்கினவே யித்தனையும்பொதுநடஞ்செய்யிறைவனருட்செயலே. (௨)

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

அருளாரமுதேயென் னுடையவன்பேயென் றனறிவேயென்
பொருளாயகத்தும்புறததுமென்னைப்புணர்ந்தகருணைப்பொருப்பேமெய்த்
தெருளாமொளியேவெளியாகச்சிற்றம்பலத்தேநடிக்கின்றோய்
இருளாயினவெல்லாந்தவிர்த்தென்னெண்ணமுடிப்பாயிப்போதே. (௧)

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

வாதுபேசியமன்ரீர்காளொருவார்த்தைகேண்மின்கள்வந்துநம்
போதுபோவதன்முன்னரேயருட்பொதுவிலேநடம்போற்றுவீர்
தீதுபேசினீரென்றிடாதுமைத்திருவுளங்கொளுங்காண்மினோ
சூதுபேசிலனன்மைசொல்கினறேனசுற்றமென்பதுபற்றியே. (௧)

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

தன்னைவிடத்தலைமையொருதகவினுமிங்கிலாத்தனித்தலைமைப்பெரும்பதியேதருணதயாநிதியே, பொன்னடியென்சிரததிருக்கப்புரிநதபரம்பொருளேபுததமுதமெனக்களித்தபுண்ணியனேநீதான், என்னைவிடமாட்டாய்நானுன்னைவிடமாட்டேனிருவருமொன்றாகியிங்கேயிருக்கின்றோமிதுதான், நின்னருளேயறிந்ததெனிற்செயுஞ்செய்கையுனைத்துநின்செயலோவென்செயலோநிகழ்த்திடுகநீயே. (௧)

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

உணிக்குமூட்டுக்கும்கொதுகுக்கும்பேனுக்குமுவப்புறப்புசிக்கின்றீர்
துணிக்குங்காசக்குஞ்சோற்றுக்குமூர்தொறுஞ்சுற்றிப்போயலைகின்றீர்
பிணிக்கும்பீடைகருமுடலுளங்கொடுக்கின்றீர்பேதையீர்நல்லோர்கள்
பணிக்கும்வேலைசெய்துண்டுடுத்தம்பலம்பரவுதற்கிசையீரே. (௧)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

செவ்வணத்தவருமறையுமாகமமுந்தேவருமுனிவரும்பிறரு
மிவ்வணத்ததுவென் றறிந்திடற்கரிதாமெங்கைநின திருவருட்டிறத்தை
யெவ்வணத்தறிவேனெங்ஙனம்புகல்வேனென் றரத்தியலுவதேயோ
வொவ்வணத்தரசேயெனக்கெனவிங்கோருணர்ச்சியுமுண்டுகொலுணர்த்தே. (க)

ஷை வேறு.

உணர்ந்துணர்ந்தாங்கேயுணர்ந்துணரதுணரா துணர்ந்தவருணர்ச்சியாலுழந்தே
திணர்ந்தனராகிவியந்திடவிளங்குஞ்சிவபதத தலைவநின் னியலைப்
புணர்ந்தநின்னருளேயறியுகானறிநதுபுகலறிபெந்தரஞ்சிறிதுளனோ
கொணர்ந்தொருபொருளென்கரங்கொளகொடுத்தகுருவெனககூறலென்குறிப்பே.

கலித்துறை.

பண்ணியபூசைநிறைந்ததுசிற்றம்பலநடங்கண்
டெண்ணியவெண்ணம்பலித்தனமெய்யின்பமெய்தியதோர்
தண்ணியலாரமுதுண்டனன்கண்டனன்சாமியைநா
னண்ணியபுண்ணியமென்னுளைக்கேனிந்தநானிலத்தே. (க)

கலித்தாழிசை.

எக்கணாயுங்காணுதேயிருட்கடலிற்கிடந்தேனையெடுத்தாட்கொண்டு
அக்கணாசோத்தருளேனுமோர்சர்க்கணாயுமெனககளித்தானந்தோவந்தோ. (க)

இஃது, வேதாந்த சித்தாந்த சமரசாநுபவானுக்ரக வநுட்நுநுவாகிய

## ஞானசம்பந்தர்ஸ்தோத்திரம்.

முப்பத்திரணடடியாசிரியவிருத்தம்.

உலகியலினுறுமயலினடைவுபெறுமெனதிதயமொளிபெறவிளங்குசுடரே
உதயநிறைமதியமுதமுணவுபெறநிலவுசிவயோகநிலையருளுமலையே
உனதுசெயலெனதுசெயலுனதுடைமையெனதுடைமையுணரெனவுணர்த்துநிறைவே
உளவெனவுமிலவெனவுமுளாயுபயவசாமறவொருமொழியையுதவுநிதியே
ஒன்றுடனிரண்டெனவிதணடையிடுமிண்டரொடுமொன் றலறநின் றநிலையே
உன்னலறவுன் னுநிலையின்னதெனவென்னுடையவுளருணரவுள்ளுமதியே
உன்னிலையுமென் னிலையுமன்னியமிலைச்சிறிதுமுறறறிதியென் றபொருளே
உண்மைநெறியண்மைதனிலுண்மேனமொருங்கிலெனவோதுமெய்ப்போதநெறியே.

அலகின்மறைமொழியுமொருபொருளினமுடிபெனவெனதகந்தெளியவருள்செய்தெருளே
ஐம்பூதமாதிநியலலையததத்துவவதீதவறிவென்றவொன்றே
அததுவாவாறையுமகன் றநிலையாதஃததீதநிலையென் றநன்றே
ஆணேயெமதாணையெமையன்றியொன் றில்லைநீயறிதியெனவருளுமுதலே
அன்பென்பதேசிவமுணர்கதிகெவெனவெனக்கறிவித்தசுத்தவறிவே
அத்துவிதநிலைதுவிதநிலைநின் றபின்னலதடைந்திடாதென் றவிறையே
ஆனந்தமதுசச்சிதானந்தமேயிஃததிந்தடைதியென் றநலமே
அட்டசித்திகளுநினதேவல்செயுநீயவையவாவியிடலென் றமணியே. (உ)

இலகுபரிபூரணவிலாசமலநிலையண்டமெங்கணுமெனச்சொல்பதியே
இரவுபகலற்றவிடமதுசகலகேவலமிரண்டினடுவென்றபரமே
இச்சைமனமாயையேகண்டனவெலாமவையிருந்துகாணென்றதவமே
யான்பிறரெனும்பேதநடைவிடுத்தென்னொடிருத்தியெனவுணர்செயுணர்வே
என்களைகணேயெனதுகண்ணேயெனிருகண்ணிலங்குமணியேயெனுயிரே
எனதுயிர்க்குயிரேயெனறிவேயெனறிவூடிருந்தசிவமேயெனன்பே
என்றெய்வமேயெனதுதந்தையேயெனையீன்றெடுத்ததாயேயெனுறவே
என்செல்வமேயெனதுவாழ்வேயெனின்பமேயெனனருட்குருவடிவமே. (௩)

கலகமனமுடையவென்பிழைபொறுத்தாட்கொண்டகருணையங்கடலமுதமே
காழிதனிலன்றுசுரர்முனிவர்சித்தர்களயோகர்கருதுசமயாதிபர்களுங்
கைகுவித்தருகினின்றேத்தஅழுவாண்டிற்களித்ததுமெய்ப்போதமுண்டு
கனிமதுரமொழுகுசெம்பதிகச்செழுஞ்சொன்மழைகண்ணுதற்பவளமலையே
கண்டுபொழியருண்முகிற்சம்பந்தவள்ளலாங்கடவுளேயோதுமரினிற
கவினுறவிளங்குநற்பணிகள்சிவபுண்ணியககதியுலகறிந்துய்யவே
களையற்றமகிழ்வினொடுசெய்தருள்புரிநதிங்காட்சியேசிவஞானியாங்
கருதவருமொருதிருப்பெயர்கொண்மணியேயெமைக்காப்பதுன்கடனென்றுமே.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

ஓங்காரவணைமீதுநானிருந்ததருணமுவந்தெனதுமணவாளர்சிவந்தவடிவகன்றே, ஈங்காரப்பளிக்குவடிவெடுத்தெதிரேநின்றா ரிருந்தருள்கவெனவெழுந்தேனெழுந்திருப்பதென்னீ, ஆங்காரமொழியென்றாரொழிந்திருந்தேனப்போதவாநானேநானவரோவறிநதிலன்முன்குறிப்பை, ஊங்காரவிரண்டுருவுமொன்றானோமாங்கேவுறைநதவநுபவந்தோழிநிறைந்தபெருவெளியே. (௧)

கலித்துறை.

நான்செய்தபுண்ணியமென்னுரைக்கேன்பொதுநண்ணியதோர்
வான்செய்தமாமணியென்கையிற்பெற்றுநல்வாழ்வடைந்தேன
ஊனசெய்ததேகமொளிவடிவாகநின்றோங்குகின்றேன்
கோன்செய்தவிச்சைகுணிக்கவல்லாரெவர்கூறுமினே. (௧)

திருச்சிற்றம்பலம்.

# உலகப்பேறு.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இன்பாலுலகங்கள்யாவும்விளங்கின
துன்பாலிறந்தவர் துன்பற்றுத்தோன்றினா
அன்பாலடியவராடினர்பாடினா
எனபாலருட்பெருஞ்சோதியார்செய்தவே. (௧)

பாம்பெலாமோடினபறவையுட்சார்ந்தன
தீம்பலாவாழைமாத்தென்னைசிறந்தன
ஆம்பலன்மென்மேலுமாயினவென்னுளத்
தோம்பலெனருட்பெருஞ்சோதியாரோங்கவே. (உ)

மலங்கழிந்துலகவாவர்னவராயினா
வலம்பெறுசுத்தசன்மாாகஞ்சிறந்தது
பலம்பெறுமனிதாகள்பண்புளராயினா
நலம்பெறுமருட்பெருஞ்சோதியார்நண்ணவே. (ந)

முன்னுள்மார்க்கங்கள்யாவுமுடிந்தன
மன்னுளசுத்தசன்மார்க்கஞ்சிறந்தது
பன்னுள்ங்தெளிந்தனபதிநடமோங்கின
என்னுளத்தருட்பெருஞ்சோதியாரெய்தவே. (ச)

விடம்பெற்றவுயிரெலாம்விடமற்றுவாழ்ந்தன
மடம்பெற்றமனிதர்கள்மதிபெற்றுவாழ்கின்றார்
திடம்பெற்றேயெழுகின்றார்செத்தவாதினந்தினம்
நடம்பெற்றவருட்பெருஞ்சோதியார்நண்ணவே. (ரு)

அண்டமுமகிலமுமருளரசாட்சியைக்
கொண்டனவோங்கினகுறையெலாந்தீர்ந்தன
பண்டஙகள்பலித்தனபரிநதெனதுள்ளத்தில்
எண்டகுமருட்பெருஞ்சோதியாரெய்தவே. (சு)

குணஙகள்சிறந்தனகுற்றஙகளற்றன
மணங்கள்விளஙகினவாழ்வுகளோங்கின
பிணஙகளெலாமுயிர்பெற்றெழுநதோஙகின
இணஙகவருட்பெருஞ்சோதியாரெய்தவே. (எ)

பத்தர்கள்பாடினாபணிந்துநின்றாடினர்
முத்தர்கள்மெய்ப்பொருள்முன்னிமகிழ்ந்தனா
சித்தாகளானந்தத்தெள்ளமுதுண்டனா
சுத்தவருட்பெருஞ்சோதியார்தோன்றவே. (அ)

ஏழுலகவத்தைவிட்டேறினன்மேனிலை
ஊழிதோறூழியுமுயிர்தழைத்தோஙகினன்
ஆழியானயனமுதலதிசயித்திடவென்னுள்
வாழியருட்பெருஞ்சோதியாாமன்னவே. (கூ)

இருட்பெருமலமுழுதுந்தவிர்ந்திற்றது
மருட்பெருங்கனமமுமாயையுநீங்கின
தெருட்பெருஞ்சித்திகள்சேர்ந்தனவென்னுளத்
தருட்பெருஞ்சோதியென்னன்பிற்கலந்ததே. (கo)

நேரிசைவெண்பா.

உண்மையுரைத்தருளென் றேத்தினேனெந்தைபிரான்
வண்மையுடனென்னறிவில்வாய்ந்துரைத்தான் - றிண்மையுறு
சித்திநிலையெல்லாந்தெரிவித்தருள்கின்றேம்
இத்தருணஞ்சத்தியமேயென்று. (௧)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

இச்சையெலாம்புகன்றேனென் னிலச்சையெலாம்விடுத்தேனினிச்சிறிதுந்தரியே னிங்கிதுதருணத்தடைந்தே, அச்சையெலாம்வெளிப்படுத்தியச்சமெலாமகற்றியருட் சோதிதனியரசேயாங்காங்குமோங்க, விச்சையெல்லாமெனக்களித்தேயவிசனையெலா ந்தவிர்த்துமெய்யுறவென்னொடுகலந்துவிளங்கிடுதல்வேண்டும், பச்சையெலாஞ்செம் மையெலாம்பொன்மையெலாம்படர்ந்தபடிகமணிவிளக்கேயம்பலம்விளங்கும்பதியே.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உடையநாயகன்பிள்ளைநானிவ்வுலகமுமொருங்கின்பம்
அடையநானருட்சோதிபெற்றழிவிலாயாக்கைகொண்டுலகெல்லா
மிடையவற்புதப்பெருஞ்செயனாடோறும்விளைத்தெங்கும்விளையாடத்
தடையதற்றநற்றருணமித்தருணமாத்தழைகவித்தனியேற்கே. (௧)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

சொல்லுகின்றேன்பற்பலநான்சொல்லுகின்றவெல்லாந்துரிசலவேசூதலவேதூ ய்மையுடையனவே, வெல்லுகின்றவார்த்தையன்றிவெறும்வார்த்தையெனவாயவிள ம்பாதென்னையர்நின்றுவிளம்புகின்றபடியால், செல்லுகின்றபடியேநீகாணபாயிதநி னதேதேமொழியப்போதேனைநீதெளிந்துகொள்வாயகண்டாய், ஒல்லுகின்றவகை யெலலாஞ்சொல்லுகினறேனடிநானுண்மையிதுவுண்மையிதுவுண்மையிதுதானே.

என்னாலோர்துரும்புமசைத்தெடுக்கமுடியாதேயெல்லாஞ்செய்வல்லவனென்றெ ல்லாரும்புகலும், நின்னாலிவ்வுலகிடைநான்வாழ்கின்றேனரசேநின்னருள்பெறறழியா தநிலையையடைந்திடவென், றன்னாலோர்சுதந்தரமுமில்லைகண்டாயநினதுசகலசுதந் தரந்தையென்பாற்றயவுசெயல்வேண்டும், பின்னாளென்றிடிற்சிறிதுந்தரித்திருக்கமா ட்டேன்பேராணையுரைத்தேனென்பேராசையிதுவே. (௨)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கலையனேயெல்லாம்வல்லவோதலைமைக்கடவுளேயென்னிருகண்ணே
நிலையனேஞானநீதிமன்றிடத்தேநிருத்தஞ்செய்கருணைமாநிதியே
புலையனேன்பொருட்டென்றிருவடியவனிபொருந்தியபுதுமையென்புகல்வேன்
சிலையைநோமனத்தேன்செய்தவம்பெரிதோதிருவருட்பெருந்திறல்பெரிதே. (௩)

நேரிசைவெண்பா.

உலகமெலாம்போற்றவொளிவடிவனாகி
யிலகவருள்செய்தானிசைந்தே - இலகனென
நானேசனமாக்கநடத்துகின்றேனம்பெருமான்
றானேயெனக்குத்தனித்து. (௧)

தனித்துணையாயென்றன்னைத்தாங்கிக்கொண்டென்றன்
மனித்தவுடம்பழியாவாறே - கனித்துணையாம்
இன்னமுதந்தந்தெனக்கேயெல்லாமும்வல்லசித்தி
தன்னையுந்தந்துட்கலந்தான்றான். (உ)

## சத்தியவார்த்தை.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

சிவமெனும்பெயர்க்கிலக்கியமாகியெச்செயலுந்தன்சமுகத்தே
நவநிறைந்தபேரிறைவர்களியற்றிடஞானமாமணிமன்றிற்
றவநிறைந்தவாபோற்றிடவானந்தத்தனிநடம்புரிகின்றா
னெவனவனிருவாணையீதிசைத்தனனினித்துயரடையேனே. (க)

### கலித்துறை.

கண்கொண்டபூதலமெல்லாஞ்சன்மார்க்கங்கலந்துகொண்டே
பண்கொண்டபாடலிற்பாடிப்படித்துப்பரவுகின்றார்
விண்கொண்டசிற்சபையொன்றேநிறைந்துவிளங்குகின்ற
தெண்கொண்டமற்றைமதமாகங்கள்யாவுமிறந்தனவே. (க)

செத்தாரெழுந்தனர்சுத்தசன்மார்க்கஞ்சிறந்ததுநான்
ஒத்தாருயர்ந்தவரில்லாவொருவனையுற்றடைந்தே
சித்தாடுகின்றனன்சாகாவரமுஞ்சிறக்கப்பெற்றேன்
இத்தாரணியிலெனக்கிணையாரென்றியம்புவனே. (உ)

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

தூக்கமுந்துயருமச்சமுமிடருந்தொலைந்தனதொலைந்தனவெனைவிட்
டேக்கமும்வினையுமாயையுமிருளுமிரிந்தனவொழிந்தனமுழுதும்
ஆக்கமுமருளுமறிவுமெய்யன்புமழிவுறாவுடம்புமெய்யின்ப
வூக்கமுமெனையேயுற்றனவுலகீருண்மையிவ்வாசகமுணர்மின. (க)

ஆதியுநடுவுமந்தமுமலலாவருட்பெருஞ்சோதியென்னுளத்தே
நீதியிற்கலந்துநிறைந்ததுநானுநித்தியனாயினேனுலகீர்
சாதியுமதமுஞ்சமயமுந்தவிர்த்தேசத்தியசுத்தசன்மார்க்க
வீதியிலுமைத்தானிறுவுவலுண்மைவிளம்பினேன்வம்மினோவிரைந்தே. (உ)

### நேரிசைவெண்பா.

சாகக்கலையொத்தானெனக்கேதந்தானருளென்மனக்
கற்கலையச்செய்தேகளிப்பித்தான் - கற்க
இனியானருட்சோதியெந்தையென்னுளுற்றான்
இனியான்மயங்கேனிருந்து. (க)

### கலித்துறை.

அப்பனையிப்பனையாக்கிச்சிவிகையமாந்தவன்சொல்
அப்பனையென்னுயிர்க்கானசெந்தேனையமுதையங்கான்
அப்பனையாழிகடத்திக்கரைவிட்டளித்தசடை
அப்பனைச்சிற்றம்பலவனைநான்றுதித்தாடுவனே. (க)

கட்டளைக்கலிப்பா.

தொடுக்கவோநல்லசொன்மலரில்லைநான்றுதிக்கவோபத்திசுத்தமுமில்லையுள்
ளொடுக்கவோமனமென்வசமில்லையூழுற்றவாணவமாதிமலங்களைத்
தடுக்கவோதிடமில்லையென்மட்டிலேதயவுதானினக்கில்லையுயிரையும்
விடுக்கவோமனமில்லையென்செய்குவேன்விளங்குமன்றில்விளங்கியவள்ளலே. (௧)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

சனிதொலைந்ததுதடைதவிர்ந்ததுதயைமிகுந்ததுசலமொடே
துனிதொலைந்ததுசுமைதவிர்ந்ததுசுபமிகுந்ததுசுகமொடே
கனியெதிர்ந்ததுகளைதவிர்ந்ததுகளிமிகுந்ததுகனிவொடே
புனிதமன்றிறைநடமலர்ந்ததுபுகழுயர்ந்ததுபுவியிலே. (௧)

உரையுமுற்றதுவொளியுமுற்றதுவுணர்வுமுற்றதுவுண்மையே
பரையுமுற்றதுபதியுமுற்றதுபதமுமுற்றதுபற்றியே
புரையுமற்றதுகுறையுமற்றதுபுலையுமற்றதுபுன்மைசேர்
திரையுமற்றதுநரையுமற்றதுதிரையுமற்றுவிழுந்ததே. (௨)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பண்பனேகமுந்திரண்டுருவாகியெம்பாக்கியம்போல்வந்த
நண்பனேநினைப்பிரிந்தநாண்முதலிந்நாள்வரையுமெல்லாம்
புண்பனேர்ந்தபோதுண்டவாங்கண்டுநிற்புல்லிநின்னுடனிங்கே
யுண்பனேலஃதுணவெனமதிப்பனீதுண்மையென்றுணர்வாயே. (௧)

## விருத்தகிரி.

### நேரிசைவெண்பா.

ஆறுவிளங்கவணிகிளர்தேருர்ந்தவுலாப்
பேறுவிளங்கவுளம்பெற்றதுமன் - கூறுகின்ற
வொன்றிரண்டுதாறுபுடையோங்கும்பழமலையா
மின்றிரண்டுநின்றசடைமேல். (௧)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

ஆதிமலையனாதிமலையன்புமலையெங்குமானமலைஞானமலையானந்தமலைவான்,சோதிமலைதுரியமலைதுரியமுடிக்கப்பாற்றோன்றுமலைதோன்றாதசூதானமலைவெண், பூதிமலைசுதவநுபூதிமலையெல்லாம்பூத்தமலைவல்லியெனப்புகழுமலைதனையோர், பாதிமலைமுத்தரெலாம்பற்றுமலையென்னும்பழமலையைகிழமலையாய்ப்பகருவதென்னுலகே

சாகியனுறெறிந்தநிலைசகித்தமலைசித்த சாந்தருளஞ்சார்ந்தோங்கித்தனித்தமலைசபையிற், றாகியகாலொடுவிளங்குந்தூயமலைவேதஞ் சொன்னமலைசொல்லிறந்ததுரியநடுமலைவான, ஆகியளித்தழிக்குமலையழியாதமலைநல்லன்பருக்கின்பந்தருமோராற்புதபொனமலைநற், பாக்கியங்களெல்லாமும்பழுத்தமலையென்னும் பழமலையைக்கிழமலையாய்ப்பகருவதென்னுலகே. (௨)

## திருப்புலம்பல்.

திருச்சிற்றம்பலம்.

பற்றுநினைத்தெழுமிப்பாவிமனத்தீமையெலா
முற்றுநினைக்கிலெனக்கூடுருவிப்போகுதடா. (௧)

எளேதநின்னிடத்தேயெண்ணுகின்றதோறுமதை
யுள்ளேநினைக்கிலெனக்கூடுருவிப்போகுதடா. (௨)

துன்னுகின்றதீமைநின்பாற்சூழ்ந்துணாக்குந்தோறுமதை
யுன்னுகின்றபோதிலெனக்கூடுருவிப்போகுதடா. (௩)

எள்ளுகின்றதீமைநின்பாலெண்ணுகின்றதோறுமதை
யுள்ளுகின்றபோதிலெனக்கூடுருவிப்போகுதடா. (௪)

மிக்கநிலைநிற்கவிரும்பேன்பிழைகளெலாம்
ஒக்கநினைக்கிலெனக்கூடுருவிப்போகுதடா. (௫)

கோகோவெனுங்கொடியேன்கூறியகுற்றங்களெலாம்
ஓகோநினைக்கிலெனக்கூடுருவிப்போகுதடா. (௬)

பித்துமனக்கொடியேன்பேசியவன்சொல்லையெலா
மொத்துநினைக்கிலெனக்கூடுருவிப்போகுதடா. (௭)

தேர்ந்துதெளியாச்சிறியவனேன்தீமையெலா
மோர்ந்துநினைக்கிலெனக்கூடுருவிப்போகுதடா. (௮)

நிறுத்தியறியேனிகழ்த்தியவென்சொல்லை
யுறுத்திநினைக்கிலெனக்கூடுருவிப்போகுதடா. (௯)

தோன்றிவிரியுமனத்துட்டனேன்வன்பிழையை
யூன்றிநினைக்கிலெனக்கூடுருவிப்போகுதடா. (௧௦)

எண்ணினைப்பதின்றிநினையெள்ளியுரைத்ததனை
யுண்ணினைக்குந்தோறுமெனக்குள்ளமுருகுதடா. (௧௧)

கடையவனேன்வைதகடுஞ்சொல்நினைக்குந்தோறு
முடையவனேயென்னுடையவுள்ளமுருகுதடா. (௧௨)

பித்தனெனத்தீமைபிதற்றியதெண்ணுந்தோறு
முத்தமனேயென்னுடையவுள்ளமுருகுதடா. (௧௩)

மன்றுடையாய்நின்னருளைவைதகொடுஞ்சொற்பொருளி
லொன்றைநினைக்கிலெனக்குள்ளமுருகுதடா. (௧௪)

வெருவாமலையோவிளம்பியசொல்லெல்லா
மொருவாநினைக்கிலெனக்குள்ளமுருகுதடா. (கரு)

புலைக்கொடியேன்புன்சொற்புகன்றதெண்ணுந்தோறு
முலைககண்மெழுகாகவென்றனுள்ளமுருகுதடா. (கசா)

ஈடில்பெருந்தாயிலினியாய்நின்றண்ணருட்பா
லூடியசொல்லுன்னிலெனக்குள்ளமுருகுதடா. (கஎ)

புரைத்தமனவஞ்சப்புலையேன்றிருவருளை
யுரைத்தபிழையெண்ணிலெனக்குள்ளமுருகுதடா. (கஅ)

நாடிநினையாநவையுடையேன்புன்சொலெலா
மோடிநினைக்கிலெனக்குள்ளமுருகுதடா. (ககூ)

வெப்பிலகருணைவிளக்கனையாயென்பிழையை
யொப்பிநினைக்கிலெனக்குள்ளமுருகுதடா. (உ0)

அஞ்சலென்றாய்நின்பாலடாதமொழிபேசியதை
யஞ்சிநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (உக)

மெய்யோர்சிறிதுமிலேன்வீண்மொழியாலூடியதை
யையோநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (உஉ)

இத்தாரணிக்குளெங்குமிலாத்தீமைசெய்தே
னத்தாநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (உங)

பொய்யால்விரிந்தபுலைமனத்தேன்செய்பிழையை
யையாநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (உச)

இப்பாவிநெஞ்சாலிழுக்குரைத்தேனுனக்கதனை
யப்பாநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (உரு)

எண்ணுகொடுமையெலாமெண்ணியுரைத்தேனதனை
யண்ணாநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (உசா)

வெம்மான்மனத்துவினையேன்புகன்றதெலா
மம்மாநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (உஎ)

எச்சோடுமில்லாதிழிந்தேன்பிழைகளெலா
மச்சோநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (உஅ)

வந்தோடினைமனத்துவஞ்சகனேன்வஞ்சமெலா
முந்தோநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (உகூ)

ஓவாக்கொடியேனுரைத்தபிழைகளெலா
மாவாநினைக்கிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (ஙo)

கறைசேர்வென்னுக்கடையேன் பிழையை
யறைசேரினைகிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (௩௧)

மருளுடையேன்வஞ்சமனத்தீமையெல்லா
மருளுடையாயெண்ணிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (௩௨)

ஈண்டவனேன்வன்சொலியம்பியதையென்னுடைய
ஆண்டவனேயெண்ணிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (௩௩)

வற்புதனேன்வஞ்சமனப்பிழையைமன்றுநிம்
அற்புதனேயெண்ணிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (௩௪)

துன்புடையேன்புன்மொழிகள்தூற்றியதையெவ்வுயிர்க்கும்
அன்புடையாயெண்ணிலெனக்கஞ்சுங்கலங்குதடா. (௩௫)

கொதிக்கின்றவன்மொழியாற்கூறியதையையோ
மதிக்கினறதோறுமுள்ளேவாளிட்டறுககுதடா. (௩௬)

சினங்கொண்டபோதெல்லாஞ்செப்பியவன்சொல்லை
மனங்கொள்ளுந்தோறுமுள்ளேவாளிட்டறுக்குதடா. (௩௭)

செய்தநன்றியெண்ணுச்சிறியவனேனின்னருளை
வைததெண்ணுந்தோறுமுள்ளேவாளிட்டறுக்குதடா. (௩௮)

பொய்த்தமனத்தேன்புகன்றகொடுஞ்சொற்களெலாம்
வைத்துநினைக்குந்தோறும்வாளிட்டறுக்குதடா. (௩௯)

பொங்குகின்றதீமைபுகன்றதெலாமெண்ணியெண்ணி
மஙகுகினறதோறுமுளளேவாளிட்டறுக்குதடா. (௪௦)

ஊடுகின்றசொல்லாலுரைத்ததனையெண்ணியெண்ணி
வாடுகினறதோறுமுள்ளேவாளிட்டறுககுதடா. (௪௧)

உயங்குகின்றேனவன்சொல்லுரைத்ததனையெண்ணி
மயஙகுகின்றதோறுமுள்ளேவாளிட்டறுக்குதடா. (௪௨)

சொல்வினைவுநோக்காதேசொன்னதெலாமெண்ணுதொறும்
வல்வினையேனுள்ளகத்தேவாளிட்டறுக்குதடா. (௪௩)

மேல்வினைவுநோக்காதேவேறுசொன்னதெண்ணுதொறும்
மால்வினையேனுள்ளகத்தேவாளிட்டறுக்குதடா. (௪௪)

விஞ்சுகத்தாலநதோவிளம்பியதையெண்ணுதொறும்
வஞ்சகத்தேனுள்ளகத்தேவாளிட்டறுக்குதடா. (௪௫)

விலங்குகின்றநெஞ்சவினைவையெண்ணுந்தோறுமந்தோ
மலங்குகின்றேனுள்ளிடத்தேவாளிட்டறுக்குதடா. (௪௬)

தூயமையிலாவன்மொழியாற்சொனனதெலாமெண்ணுதொறும்
வாய்மையிலேனுள்ளகததேவாளிட்டறுக்குதடா. (சுஎ)

தலிககின்றவஞ்சக்கருததாற்கருதியதை
வலிக்கின்றதோறுமுள்ளேவாளிட்டறுக்குதடா. (சுஅ)

நீட்டுகின்றவஞ்சநெடுஞ்சொலெலாநெஞ்சகததே
மாட்டுகின்றதோறுமுள்ளேவாளிட்டறுக்குதடா. (சுகூ)

பொருந்துகின்றவஞ்சப்புதுமையெண்ணியெண்ணியையோ
வருந்துகினறதோறுமுள்ளேவாளிட்டறுக்குதடா. (ருo)

வெருவிக்கும்வஞ்சவெறுஞ்சொலெலாம்நெஞ்சில்
வருவிக்குந்தோறுமுளளேவாளிட்டறுக்குதடா. (ருக)

ஊடும்போதுன்னையுரைத்ததெலாநாயடியேன்
நாடும்போதெல்லாமெனனுடிநடுங்குதடா. (ருஉ)

வாய்க்கடையாவன்சொல்வழங்கியவென்வன்மனத்தை
நாய்க்கடையேனெண்ணுதொறுநாடிநடுங்குதடா. (ருங)

கனறியுரைத்தகடுஞ்சொற்கவைவெயலாம்
நன்றியிலேனெணணுதொறுநாடிநடுங்குதடா. (ருச)

புன்மையினல்வன்சொற்புகன்றபுலைத்தன்மையெலாம்
நன்மையிலேனெண்ணுதொறுநாடிநடுங்குதடா. (ருரு)

ஊனெண்ணும்வஞ்சவுளத்தாலுரைத்தவெலாம்
நானெண்ணுந்தோறுமென்றனுடிநடுங்குதடா. (ருசு)

வஞ்சனையாலஞ்சாதுவன்சொல்புகன்றதெலாம்
நஞ்சனையேனெண்ணுதொறும்நாடிநடுங்குதடா. (ருஎ)

கோணநெடுநெஞ்சககுரங்காற்குதித்தவெலாம்
நாணமிலேனெண்ணுதொறுநாடிநடுங்குதடா. (ருஅ)

ஊனமிலாநின்னையுரைதகொடுஞ்சொல்லையெலாம்
ஞானமிலேனெண்ணுதொறுநாடிநடுங்குதடா. (ருகூ)

ஏற்றமதியிலேனெண்ணுதுரைத்ததனைச்
சற்றெநினைத்திடினுந்தாதுகலங்குதடா. (சுo)

இனியேதுசெய்வேனிகழ்ந்துரைத்தசொல்லை
தனியேநினைத்திடினுந்தாதுகலங்குதடா. (சுக)

நாயனையேனெண்ணுநலங்கியவன்சொல்லையெலாந்
தாயனையாயெண்ணுதொறுந்தாதுகலங்குதடா. (சுஉ)

நிற்குருகாவஞ்சநினைவால்நினைத்தவெலாஞ்
சற்குருவேயெண்ணுந்தோறுந்தாதுகலங்குதடா. (சுங)

வெந்நரகில்வீழும்வினைவாலவிளம்பியதை
யெண்ணரசேயெண்ணுந்தோறுமெனைவிழுங்குதடா. (சுச)

நன்கறியேனவாளாநவின்றநகையனைத்து
மென்குருவேயெண்ணுந்தோறுமெனைவிழுங்குதடா. (சுரு)

ஆவதறியாதடியேனிகழ்ந்தகொடும்
பாவநினைக்கிற்பகீரென்றலைக்குதடா. (சுசு)

வந்திப்பறியேன்வழங்கியவன்சொல்லையெலாஞ்
சிந்திக்கிலுள்ளேதிடுக்கிட்டழுங்குதடா. (சுஎ)

குற்றநினைத்தகொடுஞ்சொல்லெலாமென்னுள்ளத்தே
பற்றநினைக்கிற்பயமாயிருக்குதடா. (சுஅ)

எள்ளுநின்றீமையெடுத்துரைத்தேனுங்கதனை
விள்ளுகின்றதோறுமுள்ளம்வெந்துவெதும்புதடா. (சுகூ)

திருச்சிற்றம்பலம்.

---

## பேரன்புக்கண்ணிகள்.

கற்றதென்றஞ்சாகாக்கல்வியென்றுகண்டுகொண்டேன்
அற்புதச்சிற்றம்பலத்திலன்புவைத்தேனையாவே. (க)

ஈடணைகணீக்கிநமக்கின்பளிக்குமென்றுமன்றில்
ஆடுந்திருவடிக்கேயாசைவைத்தேனையாவே. (உ)

நானந்தமெய்தாநலம்பெறவேயெண்ணிமன்றில்
ஆனந்தநாடகத்துக்கன்புவைத்தேனையாவே. (ங)

வாடலறச்சாகாவரங்கொடுக்குமென்றுமன்றில்
ஆடலடிப்பொன்மலர்க்கேயன்புவைத்தேனையாவே. (ச)

பொற்புறவேபொன்றாப்பொருளளிக்குமென்றுமன்றில்
அற்புதப்பொற்சேவடிக்கேயன்புவைத்தேனையாவே. (ரு)

ஈனமுறுத்தென்றுமிறவாமைநல்குமென்றே
ஞானமணிமன்றிடத்தேநண்புவைத்தேனையாவே. (சு)

ஓர்துணைநின்பொன்னடியென்றுன்னுகின்றேனுன்னையன்றி
யார்துணையும்வேண்டேனென்னன்புடையையாவே. (எ)

பூசைசெய்துபெற்றவுன்றன்பொன்னடிமேலன்றியயல்
ஆசையொன்றுமில்லையெனக்கன்புடையையாவே. (அ)

இச்சைநின்மேலன்றியெனக்கெள்ளளவும்வேறுமொன்றில்
இச்சையிலைநின்றுணையென்னருமையையாவே. (கூ)

எப்படிநின்னுள்ளமிருக்கின்றதென்னளவில்
அப்படிநீசெய்கவெனக்கன்புடையவையாவே. (உ0)

எவ்வண்ணநின்கருத்திங்கெனனளவிலெண்ணியதோ
அவ்வண்ணஞ்செயகவெனககன்புடையவையாவே. (கக)

தேசுறுநின்றண்ணருளாந்தெள்ளமுதங்கொள்ளவுள்ளே
ஆசைபொங்குகின்றதெனக்கன்புடையவையாவே. (கஉ)

மாசறுநின்பொன்னருளாமாமணிபெற்றுடவுள்ளே
ஆசைபொங்குகினறதெனக்கன்புடையவையாவே. (கங)

நாசமிலாநின்னருளாமஞானமருந்துண்ணவுள்ளே
ஆசைபொங்குகின்றதெனககன புடையவையாவே. (கச)

நேரிசைவெண்பா.

ஆவியீரைந்தையபரத்தேவைததோதில்
ஆவியீரைந்தையகற்றலாம் – ஆவியீர்
ஐந்தறலாமாவியீரைந்துறலாமாவியீ
ரைந்திடலாமோரிரண்டோடாயந்து. (க)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மாதங்கமுகத்தோனங்கணபதிதன்செங்கமலமலர்ததாள்போற்றி
யேதங்களறததருளுங்குமரகுருபரனபாதவிணைகள்போற்றி
தாதவிகமலாக்கொன்றைச்சடையுடையசிவபெருமான்சரணம்போற்றி
சீதங்கொள்மலர்க்குழலாள்சிவகாமசவுந்தரியின்றிருததாள்போற்றி. (க)

திருவதிகைத்திருவீரட்டானம்.

## பெரியநாயகியம்மை தோத்திரம்.

கலிவிருத்தம்.

உரியநாயகியோங்கதிகைப்பதித்
துரியநாயகிதூயவீரட்டற்கே
பிரியநாயகிபேரருணயகி
பெரியநாயகிபெற்றியைப்பேசுவாம். (க)

எண்சீரடியாசிரியவிருத்தம.

உலகந்தழைக்கவுயிர்தழைக்கவுணர்வுதழைககவொளிதழைக்கவுருவந்தழைத்தப
சுங்கொடியேயுள்ளததினிகருநதெள்ளமுதே, தலகந்தழைத்தறுதற்கரும்பேசெல்வத்

திருவேகலைக்குருவேசிறக்குமலைப்பெண்மணியேமாதேவியிச்சைஞானமொடு, வலக ந்தழைக்குங்கிரியையின்பம்வழங்குமாதிபரையென்ன வயங்குமொருபேரருளேயெம் மதியைவிளக்குமணிவிளக்கே, யலகநதழைக்குந்திருவதிகையையாவிரும்புமெய்யு றவேயரியபெரியநாயகிப்பெண்ணரசேயென்னையாண்டருளே. (௨)

தன்னேரறியாப்பரவெளியிற்சத்தாஞ்சுததவநுபவத்தைச்சார்ந்துநின்றபெரியவர் க்குந்தாயேயெமகருநதனிததாயே, மின்னேமின்னேரிடைப்பிடியேவிளங்குமிதயம லரனமே வேதம்புகலும்பசுங்கிளியேவிமலக்குயிலேயிளமயிலே, பொன்னேயெல் லாம்வல்லதிரிபுரையேபரையேபூரணமே புனிதமானபுண்ணியமேபொற்பேகற்பகப் பூவே, அணணேமுன்னேயெனனேயததமாந்தவதிகையருட்சிவையே யரியபெரிய நாயகிப்பெண்ணரசேயென்னையாண்டருளே. (௩)

## வெறிவிலக்கு.

### வெண்பா.

இம்மையறையனையவேசூரமாதருமா
இம்மையுமையிம்மையையோவெனசெய்த - தம்மைமதன்
மாமாமாமாமாமாமாமாமாமாமாமா
மாமாமாமாமாமாமா. (௧)

### கலித்துறை.

சோடிலலைமேல்வெள்ளைச்சொர்க்காவிலைநல்லசோமனில்லை
பாடிலலைகையிற்பணமில்லைதேகப்பருமனில்லை
வீடில்லையாதொருவீறுப்புமில்லைவிவாகமது
நாடில்லைநீநெஞ்சமேயெந்தவாறினிநண்ணுவையே. (௧)

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

றகெடுத்தவமணர்குலம்வேரறுத்தசொக்கேயீதென்னஞாயம்
றகெடுததசடைமுடிமேன்மண்ணெடுக்கமாட்டாமலடிபட்டையோ
றகெடுததீரவளையல்விற்றீரசொற்கேளாப்பிள்ளைகளைப்பெற்றதோஷம்
பிறகெடுததீரெனசெய்வீர்விதிவசந்தான்யாவரையுமவிடாதுதானே. (௧)

## கலைமகடுதி.

### வெண்பா.

அன்பர்பானீங்காவெனம்மையேதாமரைமேற்
பொன்பொருவுமேனியயன்பூவின் - மன்பெரிய
வாக்கிறைவிநின்றுண்மலர்ச்சரணம்போந்தேனைக்
காக்கக்கடனுனக்கேகாண். (௧)

## இங்கிதமாலையின் தொடர்ச்சி.

மையலழகிரூறொறறிவைத்திருளவோமனேயென்றேன்
கையினிறைந்ததனத்தினுநதங்கணனினிறைந்தகணவனேயே
மெய்யினவிழைவாரொருமனேயோவிளமபினமனேயுமிகப்பலவாம்
எய்யிலிடையாயென்கின்றுரிதுதானசேடியென்னேடி. (௧)

பந்து

பூவாமலேகிதங்காய்த்தவிடத்துப்
பூவார்மலாகொண்டுபெந்தாடாநின்றேன்
சாவாவரந்தந்தவாழ்வாயோபந்தே
சாவாமலென்னெடுவீழ்வாயோபந்தே. (௧)

கலித்துறை

வான்வேண்டுசிற்றமபலத்தேவயங்கிவளரமுதத்
தேன்வேண்டினேனித்தருணத்தருளசெயகசெயதிலேயேல்
ஊன்வேண்டுமென்னுயிர்நீத்துநின்மேற்பழியோவிளேப்பேன்
நானவேணடுமோபழிதான்வேண்டுமோசொலகநாயகனே. (௧)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

தருவகையித்தருணநல்லதருணமிதிலெனகசே
தனித்தவருட்பெருஞ்சோதிதந்தருள்கலிதுதான்
ஒருவகையீதிலேயெனிலவேறொருவகையெனனுடைய
வுடலுயிரையொழித்திடுகவுவப்பினொடேயிந்த
இருவகையுஞ்சம்மதமேதிருவடிசாட்சியதா
யியம்பினனென்னிதயமுனறனிதயமறிந்ததுவே
அருவகையோவுருவகையுமாகியெனனுளமாநதா
யம்மேயென்னப்பாவென்னேயாவென்னரசே. (௧)

வினேத்தடைதீர்த்தெனேயாண்டமெயயன்மணிப்பொதுவில்
மெயஞ்ஞானநடம்புரிந்துவிளங்குகின்றவிமலன
எனேத்தனிவைத்தருளொளியீந்தெனனுளிருக்கின்றுன
எல்லாஞ்செய்வல்லசித்தனிச்சையருட்சோதி
தினேத்தனேபெற்றவரேனுஞ்சாலுமுன்னேயுலகிற்
செத்தவர்களெல்லாருந்திரும்பவருகெனறு
நினேத்தவுடனெதிரவந்துநிற்பர்கண்டாயெனது
நெஞ்சேசியஞ்சேலுள்ளஞ்சேலஞ்சேலே. (௨)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்னுடலுமென்னுயிருமென்பொருளுநின்னவெனவிசைந்தஞ்ஞான்றே
உன்னிடைநானகொடுத்தனனமற்றென்னிடைவேறொன்றமிலேயுடையாயிங்கே
புன்னிகரேன்குற்றமெலாமபொறுத்ததுவும்போதாமற்புணாந்துகொணடே
தன்னிகரிலறெனவைத்தாயிஞ்ஞான்றெனகொடுப்பேனிதன்மைக்கநதோ. (௧)

௯௨ வேறு.

கோதுகொடுத்தமனச்சிறியேன்குற்றங்குணமாகக்கொண்டேயிப்ப
போதுகொடுத்தநின்னருளாம்பொருளைநினைக்குப்போதெல்லாம்
தாதுகொடுத்தபெருங்களிப்புஞ்சாலாதென்றால்சாமிநினக்
கேதுகொடுப்பேன்கேட்பதனைமுன்னெல்லாங்கொடுக்கவல்லாயே. (௧)

திருச்சிற்றம்பலம்.

---

## உண்மை விளக்கம்.

(இலக்கணப்பொருள்.)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

வருமுன்வந்தாட்கொள்ளுதலெனக்குவழக்கம்வள்ளனீமகிழ்ந்தருட்சோதி
தருமுன்றந்தனையென்றிருக்கின்றேனதனைநீசாற்றல்சத்தியமென்றே
குருமுன்பொய்யுரைக்கக்கூறலேனினியிக்குவலயத்திடைக்கவலையைத்தரியேன்
திருமுன்விண்ணப்பஞ்செய்தனன்கருணைசெய்கவாழ்கநின்றிருவருட்புகழே. (௧)

விருத்தம்.

உருத்திரன்றிருமாலயனெனப்பமுக்குணமா
யிருத்தலின்றியக்குணங்களையென்றுமாண்டருளுங்
கருத்தனாகையிற்குணேசனக்குணவிகாரத்திற்
பொருத்தமின்மையனாகையாற்புகலகுணரகிதன். (௧)

களங்கவக்குணங்கடந்திருத்தலிற்குணாதீதன்
வளங்கொளத்தகுமுலகெலாமருவிநிற்றலினால்
விளங்குவிச்சுவவியாபியிவ்விசுவத்தையாண்டு
துளங்குறாநலந்தோற்றலின்விச்சுவகருத்தன். (௨)

வெய்யனாயுலகழித்தலின்விசுவசங்காரி
பையமேலெனப்படுவனபலவற்றினுமேலாம்
ஐயனாதலிற்பராபரனுமெனப்பட்ட
செய்யனாகியசிவபிரானொருவனுண்டமரீர் (௩)

சமரசசித்தாந்தபரநெறிவிளக்கம்.

உய்வதாமிதுநங்குருவாணையொன்றுரைப்பேன்
சைவமாதிசித்தாந்தத்துமறைமுடித்தலத்தும்
நைவதின்றியாங்கதுவதுவாயதுநமது
தெய்வமாகியசிவபரம்பொருளெனத்தெளிவீர். (௪)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

முந்தைநாளயர்ந்தேனயர்ந்திடேலெனவென்முன்னர்நீதோன்றினையந்தோ
அந்தநாள்தொடங்கிமகிழ்ந்திருக்கின்றேனப்பனேயையனேயரசே
யிந்தநாள்கவலையிடாப்பயமெல்லாமென்னைவிட்டொழிந்திடப்புரிந்தாய்
எந்தநாள்புரிந்தேனிப்பெரும்பேறிங்கெய்துதற்குரியமெய்த்தவமே. (௧)

வாய்க்குறும்புரைத்துத்திரிந்துவீண்கழித்துமலத்திலேகிடந்துழைத்திட்ட
நாய்க்குயாதவிசிட்டொருமணிமுடியுநன்றுறச்சூட்டினையந்தோ
தூய்க்குணத்தவர்கள்புகழ்மணிமன்றிற்சோதியேநின்பெருந்தயவைத்
தாய்க்குறுதயவென்றெண்ணுகோதாயின்றயவுமுன்றனிப்பெருந்தயவே. (௨)

பேரிடர்தவிர்த்துப்பேரருள்புரிந்தபெருமநின்றன்னையென்றனக்கே
சாருறுதாயேயென்றுரைப்பேனோதந்தையேயென்றுரைப்பேனோ
சீருறுகுருவேயென்றுரைப்பேனோதெய்வமேயென்றுரைப்பேனோ
யாரெனவுரைப்பேனென்னெனப்புகழ்வேன்யாதுமொன்றறிந்திலேனந்தோ. (௩)

## திருவோத்தூர் ஞானசிகாமணி தோத்திரம்.

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அணிவாயுலகத்தம்புயனுமளிக்குந்தொழிற்பொன்னம்புயனு
மறியாவருமைத்திருவடியையடியேந்தரிசித்தகங்குளிர
மணிவாய்மலர்ந்தெம்போல்வார்க்குமறையுண்முடிபைவகுத்தருள
வயங்குங்கருணைவடிவெடுத்துவந்துவிளங்குமணிச்சுடரே
பிணிவாய்பிறவிக்கொருமருந்தேபேரானந்தப்பெருவிருந்தே
பிறங்குகதியினருளாறேபெரியோர்மகிழ்விற்பெறும்பேறே
திணிவாயெயிற்சூழ்திருவோத்தூர்திகழவமர்ந்தசிவநெறியே
தேவர்புகழுஞ்சிவஞானத்தேவேஞானசிகாமணியே. (௧)

நின்பாலறிவுநின்செயலுநீயும்பிறிதன்றெமதருளே
நெடியவிகற்பவுணர்ச்சிகொடுநின்றுயதனுனோர்ந்திலைகாண்
அன்பாலுன்பாலொருமொழிதந்தனமிம்மொழியாலறிந்தொருங்கி
யளவாவறிவேயுருவாகவமரென்றுணர்த்துமரும்பொருளே
இன்பாலெனப்பாற்றருதாயிலினியகருணையிருங்கடலே
இகத்தும்பரத்துந்துணையாகியென்னுளிருந்தவியனிறைவே
தென்பால்விளங்குந்திருவோத்தூர்திகழுமதுரச்செழுங்கனியே
தேவர்புகழுஞ்சிவஞானத்தேவேஞானசிகாமணியே. (௨)

அசையும்பரிசர்ந்தத்துவமன்றவத்தையகன்றவறிவேநீ
யாகுமதனையெமதருளாலல்லாமென்றேயுலவாமல்
இசையும்விகற்பநிலையையொழித்திருந்தபடியேயிருந்தறிகாண்
என்றென்னுணர்வைத்தெளித்தநினக்கென்னேகைம்மாறறியேனே
நசையும்வெறுப்புந்தவிர்ந்தவர்பாணண்ணுந்துணையேநன்னெறியே
நான்றானெனலறத்திகழ்ந்துநாளுமோங்குநடுநிலையே
திசையும்புவியும்புகழோத்தூர்சேர்கொண்மதுரச்செழும்பாகே
தேவர்புகழுஞ்சிவஞானத்தேவேஞானசிகாமணியே. (௩)

### வெண்பா.

சத்தியஞ்செயகின்றேன்சகததீரறிமினகள்
சிததியெலாம்வலலசிவமொனறே - நிததியமென்
றெணணுமெணணததாலேகமமெண்ணமெலாஙகைகூடும்
நணணுமினபததேநினறுநான். (௧)

### போற்றிச்சந்தவிருத்தம்.

போற்றிநின்னருள் போற்றிநின்பொது
போறறிநின்புகழ் போறறிநின்னுரு
போறறிநினனியல் போறறிநினனிலை
போறறிநின்னெறி போறறிநின்சுகம்
போற்றிநின்னுளம் போறறிநின்மொழி
போற்றிநின்செயல போற்றிநினகுணம்
போற்றிநினமுடி போறறிநினனடு
போற்றிநின்னடி போற்றிபோறறியே. (௧)

போற்றிநினனிடம் போற்றிநின்வலம்
போறறிநின்னடம் போற்றிநின்னலம்
போறறிநினறிறம் போற்றிநினறரம்
போற்றிநினவரம் போற்றிநின்கதி
போற்றிநின்கலை போற்றிநின்பொருள்
போறறிநின்னொளி போற்றிநினவெளி
போறறிநின்றயை போற்றிநின்கொடை
போற்றிநின்பதம் போறறிபோற்றியே. (௨)

### ௸ வேறு.

போற்றுகின்றவென்புன்மையாவையும்
பொறுததநின்பெரும் பொறுமைபோற்றியென்
ஆற்றுவேனுனக கறிகிலேனெனக
கறிவுதநதபே ரறிவபோற்றிவான்
காற்றுநீடழ லாதியாநதுநான்
காணககாட்டிய கருததபோற்றிவன்
கூற்றுதைததுநீத் தழிவிலாவுருக
கொள்ளவைததநின் கொள்கைபோற்றியே. (௧)

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீராமநாமத்திருப்பதிகம்.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

காராயவண்ணமணிவண்ணகண்ணகனசங்குசக்ரதரநீள்
சீராயதூயமலர்வாயநேயசீராமராமனெனவே
தாராயவாழ்வுதருநெஞ்சுசூழ்கதாமோதராயநமவோம்
நாராயணாயநமவாமனாயநமகேசவாயநமவே.

## எண்சீரடியாசிரியவிருத்தம்.

திருமகளெம்பெருமாட்டிமகிழும்வண்ணச்
செழுங்கனியேகொழும்பாகேதேனேதெய்வத்
தருமகனைக்காத்தருளக்கரத்தேவென்றித்
தனுவெடுத்தவொருமுதலேதருமப்பேறே
இருமையுமென்னுளத்தமர்ந்தராமநாமத்
தென்னரசேயென்னமுதேயென்றாயேநின்
மருமலர்ப்பொன்னடிவழுத்துஞ்சிறியேனந்தோ
மனந்தளர்ந்தேனறிந்துமருள்வழங்கிலாயே. (௧)

கலைக்கடலேகருணைநெடுங்கடலேகானங்
கடந்ததடங்கடலேயென்கருத்தேஞான
மலைக்கணெழுஞ்சுடரேவானசுடரேயன்பர்
மனத்தொளிருஞ்சுயஞ்சுடரேமணியேவானோர்
தலைக்கணுறுமகுடசிகாமணியேவாய்மைத்
தசரதன்றன்குலமணியேதமியேனுள்ள
நிலைக்கணுறுஞ்சீராமவள்ளலேயென்
னிலையறிந்தும்அருளவினுநினைந்திலாயே. (௨)

மண்ணுளாநின்றவாதம்வாழ்வுவேண்டேன்
மற்றவர்போற்பற்றடைந்துமாளவேண்டேன்
விண்ணுளாநின்றவொருமேன்மைவேண்டேன்
வித்தகநின்றிருவருளேவேண்டிநின்றேன்
புண்ணுளாநின்றமனமுடையேன்செய்த
பொய்யனைத்துந்திருவுளத்தேபொறுப்பாயன்றிக்
கண்ணுளார்சுடர்க்கமலக்கண்ணவென்னைக்
கைவிடிலென்செய்வேனேகடையனேனே. (௩)

தெவ்வினையாரரக்கர்குலஞ்செற்றவெற்றிச்
சிங்கமேயெங்கள்குலதெய்வமேயோ
வெவ்வினைதீர்த்தருள்கின்றராமநாம
வியன்சுடரேயிவ்வுலகவிடயக்காட்டில்

இவ்வினையேனகப்பட்டேன்புலனுஙகள்வாக்
கிலககானேன்றுணையொன்றுமில்லேனந்தோ
செய்வினையொன்றறியேனிங்கென்னையெந்தாய்
திருவுளததிற்சோததிலையேற்செய்வதென்னே. (௪)

வான்வண்ணககருமுகிலேமழையேநீல
மணிவண்ணககொழுஞ்சுடரேமருநதேவானத்
தேனவண்ணச்செழுஞ்சுவையேராமநாமத்
தெயவமேநினபுகழைநதெளிந்தேயோதா
ஊன்வண்ணப்புலைவாயாரிடத்தேசென்றுங்
குழைக்கின்றேன்செய்வகையொன்றுணரேனந்தோ
கானவணணககுடும்பத்திற்கிலக்காவென்னைக்
காட்டினையேயெனனேநின்கருணையீதோ. (௫)

பொன்னுடையார்வாயிலிற்போய்வீணேகாலம்
போககுகின்றேனிவ்வுலகப்புணர்ப்பைவேண்டி
என்னுடையாயநின்னடியைமறநதேனநதோ
வெனசெய்கேனென்செய்கேனேழையேனுன்
பின்னுடையேனபிழையுடையேனல்லாலுனறன்
பேரருளுமுடையேனோபிறந்தேன்வாளா
உன்னுடையதிருவுளததெனனினைதியோவென்
னொருமுதல்வாசீராமாவுணாகிலேனே. (௬)

அறம்பழுக்குந்தருவேயென்குருவேயென்ற
னுருயிருககொருதுணையேயரசேபூவை
நிறமபழுக்கவழகொழுகும்வடிவக்குன்றே
நெடுங்கடலுககணையளிததநிலையேவெய்ய
மறம்பழுககுமிலங்கையிராவணனைப்பண்டோர்
வாளியினறபணிகொண்டமணியேவாய்மைத்
திறம்பழுக்குஞ்சீராமவள்ளலேநின்
றிருவருளேயன்றிமற்றோர்செயலிலேனே. (௭)

கல்லாயவன்மனத்தார்தம்பாற்சென்றே
கண்கலக்கங்கொள்கின்றேன்கவலைவாழ்வை
எல்லாமுள்ளிருந்தறிந்தாயன்றேசற்று
மிரங்கிலையெம்பெருமானேயெனனேயென்னே
பொல்லாதவெவ்வினையேனெனினுமென்னைப்
புண்ணியனேபுரப்பதருட்புகழ்ச்சியன்றோ
அல்லாந்ததுயாக்கடனினறெடுததிடாயே
லாற்றேனுன்பழிநின்பாலாக்குவேனே. (௮)

மையானநெஞ்சகத்தோர்வாயில்சார்ந்தே
மனந்தளர்ந்தேன்வருந்துகின்றவருத்தமெல்லாம்

ஐயாவென் னுளத்தமர்ந்தாய நீதான் சற்று
மறியாயோ வறியாயே லறிவாரியாரே
பொய்யான தன்மையினே னெனினுமெனைப்
புறம்விடுத்த லழகேயோ பொருளாவெண்ணி
மெய்யாவென் றனையந்நாளாண்டாயிந்நாள்
வெறுத்தனையே லெங்கேயான் மேவுவேனே. (௯)

கூறுவதோர் குணமில்லாக் கொடிதாஞ்செல்வக்
குருட்டறிவோ ரிடைப்படுமென் குறைகளெல்லாம்
ஆறுவதோர் வழிகாணே னந்தோவந்தோ
வல்லலெனுங் கருங்கடலி லழுந்துகின்றேன்
ஏறுவதோர் வகையறியே னெந்தாயெந்தா
யேற்றுகின்றோர் நின்னையன்றி யில்லேனென்னைச்
சீறுவதோ விரங்குவதோ யாதோவுன்றன்
றிருவுளத்தைத் தெரியேனே சிறியனேனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவெவ்வுளூர் வீரராகவப்பெருமாள்

# போற்றித்திருப்பஞ்சகம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தண்ணமா மதியே சாந்தந் தழைத்தசத் துவனே போற்றி
வண்ணமா மணியே போற்றி மணிவண்ணத் தேவா போற்றி
அண்ணலே யெவ்வுளூரி லமர்ந்தரு ளாதி போற்றி
விண்ணவர் முதல்வா போற்றி வீரரா கவனே போற்றி. (௧)

பாண்டவர் தூதனாகப் பலித்தருள் பரனே போற்றி
நீண்டவ னென்னவேத நிகழ்த்துமா நிதியே போற்றி
தூண்டவில் லாமலோங்குஞ் சோதிநல் விளக்கே போற்றி
வேண்டவவ் வுளூர்வாழ் வீரரா கவனே போற்றி (௨)

மேதினி புரக்கும் வேந்தா வீறெலா நிறைந்தே போற்றி
கோதிலா மனத்தே நின்றுலாவிய கோவே போற்றி
ஓதிய வெவ்வுளூரி லுறைந்தருள் புரிவாய் போற்றி
வேதியன் றனையீன்ற வீரரா கவனே போற்றி. (௩)

இளங்கொடிதனைக்கொண்டேகுமிராவணன்றனையழித்தே
களங்கமில்விபீடணாக்குக்கனவரசளித்தாயபோற்றி
துளங்குமாதவத்தோருற்றதுயரெலாந்தவிர்த்தாயபோற்றி
விளங்குநலமெல்வவுளூர்வாழ்வீரராகவனேபோற்றி. (ச)

அற்புதத்திருவைமார்பிலணைத்தபேரழகாபோற்றி
பொற்புறுகிரிசங்குபொருந்துகைப்புனிதாபோற்றி
வற்புறுபிணிதீர்த்தெனையுமகிழ்வித்தவரதாபோற்றி
வெற்புயரெவ்வுளூர்வாழ்வீரராகவனேபோற்றி. (ரு)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கண்ணமங்கை இலக்குமிதோத்திரம்.

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உலகம்புரக்கும்பெருமான்றனுளத்தும்புயத்துமமர்ந்தருளி
யுவகையளிக்குமபேரின்பவுருவேயெல்லாமுடையாளே
திலகஞ்செறிவாணுதற்கரும்பேதேனேகனிந்தசெழுங்கனியே
தெவிட்டாதனபருளத்துள்ளேதித்திததெழுமோரெள்ளமுதே
மலகஞ்சுகத்தேறகருளளித்தவாழ்வேயெனகணமணியேயென
வருத்தந்தவிர்க்கவருங்குருவாமவடிவேஞானமணிவிளக்கே
சலகந்தரம்போற்கருணைபொழிதடங்கட்டிருவேகணமங்கைத்
தாயேசரணஞ்சரணமிது தருணங்கருணைதருவாயே. (க)

### கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பிச்சுலகாமெச்சப்பிதற்றுகின்றபேதையனேன்
இச்சையெலாமெய்தவிழைசந்தருளிச்செய்தனையே
அச்சமெலாந்தீர்ந்தேனருளமுதமுண்கின்றேன
நிச்சலுமபேரானந்தநிததிணைசெய்கின்றேனே. (க)

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பா.



# மெய்யருள் வியப்புமாலை.



இராகம் - அடாணா - ரூபகதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

எனக்குமுனக்குமிசைந்தபொருத்தமென்னபொருத்தமோ
இந்தப்பொருத்தமுலகில்பிறருக்கெய்தும்பொருத்தமோ.

சரணம்.

தனக்குநிகரிங்கில்லாதுயர்ந்ததம்பமொன்றதே
தாவிப்போகப்போகநூலினறாததினின்றதே
கனக்கத்திகைப்புற்றங்கேநானுங்கலங்கிவருந்தவே
கலக்கநீக்கித்தூக்கிவைத்தாயந்நிலைபொருந்தவே. எனக்கு. (௧)

இங்கோர்மலையினடுவிலுயர்ந்ததம்பநணுகவே
யேறிப்போகப்போகநூலினிழைபோனுணுகவே
அங்கேதிகைத்துநடுங்கும்போதென்னடுக்கநீக்கியே
யதன்மேலுயர்ந்தநிலையில்வைத்தாயடிமையாக்கியே. எனக்கு. (௨)

இரவிற்பெரியவெள்ளம்பரவியெவருந்தயங்கவே
யானுஞ்சிலரும்படகிலேறியேமயங்கவே
விரவித்தனித்தங்கென்னையொருகன்மேட்டிலேற்றியே
விண்ணிலுயர்ந்தமாடத்திருக்கவிதித்தாய்போற்றியே. எனக்கு. (௩)

மேலைப்பாற்சிவகங்கையென்னுமோர்தீர்த்தந்தன்னையே
மேவிப்படியிற்றவறிநீரில்விழுந்தவென்னையே
யேலத்துகிலுமுடம்புநனையாதெடுத்ததேயொன்றோ
வெடுத்தென்கரத்திற்பொற்பூணணிந்தவிறைவனீயன்றோ. எனக்கு. (௪)

என்னுடலுமுயிரும்பொருளுநின்னதல்லவோ
வெந்தாயிதனைப்பெறுகவெனநானின்றுசொல்லவோ
சின்னவயதிலென்னையாண்டதிறத்தைநினைக்குதே
சிந்தைநினைக்கக்கண்ணீர்பெருகியுடம்பைநனைக்குதே. எனக்கு. (௫)

அப்பாநின்னையன்றியெங்குமணைப்பாரில்லையே
யந்தோநின்னையன்றியெங்குமருள்வாரில்லையே
எப்பாலவர்க்குநின்னையன்றியிறைமையில்லையே
யெனக்குநினைமேலன்றியுலகிலிச்சையில்லையே. எனக்கு. (௬)

அரசேயுன்னையணைக்கவெனக்குள்ளாசைபொங்குதே
யணைப்போமென்னுமுண்மையாலென்னாவிதங்குதே
விரைசேர்பாதம்பிடிக்கவென்கைவிரைந்துநீளுதே
மேவிப்பிடித்துக்கொள்ளுந்தோறுமுவகையாளுதே. எனக்கு. (௭)

தனியன்மேல்நீவைத்ததயவுதாய்க்குமில்லையே
தருமைந்தொழிலும்வேண்டுந்தோறுந்தருதல்வல்லையே
வினவுமெனக்கெனுயிரைப்பார்க்கமிகவுநல்லையே
மிகவுநான்செயகுற்றங்குறித்துவிடுவாயல்லையே. எனக்கு. (௮)

என்னையாண்டவண்ணமெண்ணிலுள்ளமுருகுதே
யென்னைவிழுங்கியெங்குமின்பவெள்ளம்பெருகுதே
உன்னவுன்னமனமுமுயிருமுடம்புமினிக்குதே
யுன்னோடென்னைவேறென்றெண்ணின்மிகவும்பனிக்குதே. எனக்கு. (௯)

உன்பேரருளைநினைக்குந்தோறுமுடம்புபொடிக்குதே
உண்டுபசிதீர்ந்தாற்போற்காதல்மிகவுந்தடிக்குதே
அன்பேயமையுமெனறபெரியார்வார்த்தைபோயிற்றே
யன்போரணுவுமில்லாவெனக்கிங்கருளலாயிற்றே. எனக்கு. (௧௦)

நினைக்கநினைக்கத்தித்திப்பெனதுநினைவிற்கொடுக்குதே
நின்பாலன்றிப்பிறர்பாற்செல்லநெஞ்சநடுக்குதே
எனைத்துன்பொழித்தாட்கொண்டநின்னையனையென்பனோ
வெந்தாயன்பிலேனின்னடிக்குமுனையன்பனோ. எனக்கு. (௧௧)

உன்னைமறக்கிலெந்தாயுயிரென்னுடம்பில்வாழுமோ
வுன்பாலன்றிப்பிறர்பாலென்றனுள்ளஞ்சூழுமோ
என்னைக்கொடுக்கவாங்கிக்கொண்டதென்னகருதியோ
வெந்தாய்நின்னைக்கொடுக்கவென்பாலின்றுவருதியோ. எனக்கு. (௧௨)

நெடுநாண்முயன்றுங்காண்டற்கரியநிலையைக்காட்டியே
நிறைந்தென்னகத்தும்புறத்துஞ்சூழ்ந்தவொளியைக்காட்டியே
நடுநாடியநின்னருளுக்கென்மேலென்னநாட்டமோ
நாய்க்குத்தவிசிட்டனைநின்றனக்கிங்கிதுவோராட்டமோ. எனக்கு. (௧௩)

நாகாதிபனுமயனுமாலுநாடுமுறென்னவே
ஞானவமுதமளிததாய்நானுமுணடுதுன்னவே
சாகாககலையையெனக்குப்பயிற்றிததந்ததயவையே
சாற்றறகரியநினககெனகொடுப்பதேதும்வியவையே. எனக்கு. (௧௪)

யாதுகருதியென்னையாணடதையவையவோ
யானுன்னடிப்பொற்றுணைகட்குவநதுதொழும்புசெய்யவோ
வோதுகடவுட்கூட்டமனைததுமடிமையலலவோ
வுடையாயவாககுளளெனையுமொருவனெனறுசொல்லவோ. எனக். (௧௫)

தலையுஙகாலுந்திரிததுநோககிததருககினேனையே
தாங்கிதெரிததயவைநினைககிலுருககுதூனையே
புலையுங்கொலையுந்தவிரநதநெறியிற்புனிதாமதிககவே
புகுவிததாயையெனவாயதுடிபபதேததிததுதிககவே. எனக்கு. (௧௬)

தாயேயெனக்குந்தயவுபுரிந்ததருணத்தந்தையே
தனியேனின்னைநினைக்ககிளாவதெனதுசிந்தையே
நாயேனெண்ணமனைத்துமுடிததுககொடுததபணபனே
நான்செய்தவத்தாலெனககுக்கிடைததநலலநணபனே. எனக்கு. (௧௭)

ஏறுநிலையில்விரைநதுவிரைநதிங்கென்னையேற்றியே
யிறஙகாதிறஙகும்படிகண்முழுதுமெடுததாய்போற்றியே
மாறுக்கருணையெனமேல்வைககவநதென்னையோ
மதியிலேனின்னருட்குச்செய்ததவந்தானமுன்னையோ. எனக்கு. (௧௮)

இடமும்வலமுமிதுவென்றறியாதிருந்தவென்னையே
யெல்லாமறிவிததருள்செய்கருணையென்னையென்னையே
நடமுநடஞ்செய்யிடமுமெனககுநன்றுகாட்டியே
நாயினேனைவளாக்கின்றாய்நலலமுதமூட்டியே. எனக்கு. (௧௯)

விதுவுங்கதிருமிதுவென்றறியும்விளக்கமின்றியே
விழிததுமயஙகினேன்பாறபெரியகருணையொன்றியே
அதுவுமதுவுமிதுவெனவெறனககுள்ளறியககாட்டியே
யடியனேனைவளாககின்றாயநலலமுதமூட்டியே. எனக்கு. (௨௰)

இருளுமொளியும்வந்தவகையையெண்ணியெண்ணியே
யிரவும்பகலுமயஙகினேனையினிதுநண்ணியே
அருளும்பொருளுங்கொடுததுமயக்கநீக்கிககாட்டியே
யனபாலென்னைவளாககினறாய்நல்லமுதமூட்டியே. எனக்கு. (௨௧)

அண்டத்தககததும்புறத்துமுன்றனுணைசெல்லுதே
யவனேயெலலாம்வல்லானென்றுமறைகள்சொல்லுதே
பிண்டததகததுமபுறததுநிறைந்தபெரியசோதியே
பேயேனளவில்விளஙகுகினறதென்னநீதியே. எனக்கு. (௨௨)

கருணாநிதிநினறனைககாணககணகள்துடிககுதே
காணபோமென்றுநினைககுநதோறுமுடமபுபொடிக்குதே
அருணாடகஞ்செயபதஙகளபாடியாடவிழைவதே
யாமெபொதுமைநினைககநினைககநெஞ்சஙகனாவதே. எனக்கு. (உ௩)

அருளாரசோதியென்னுள்விளஙகவளிததகாலததே
யடியேன்குறைகளயாவுநதவிரநததிநதஞாலததே
பொருளாயெனையுநினைககவநதபுதுமையெனனையோ
பொன்னெனறையமதிபயநதவாததருமபுதனனையோ. எனக்கு. (உ௪)

எனககுணீயுமுனக்குநானுமிருக்குநதன்மையே
யினறுகாட்டிககலககநதவிரததுகொடுததாய்நன்மையே
தனககுள்ளதுநதலைவாககுளதெனறறிஞர்சொல்வதே
சரியென்றெணணியெனதுமனதுகளிததுவெல்வதே. எனககு. (உ௫)

கருணைப்பொதுவிற்பெரியசோதிததருவிற்கனிததநதே
கனிததபெரியதனிததகனியென்கருததுளினிததநதே
தருணததுணமெகிழ்வுற்றேனமமகிழ்சசிசொல்லவே
தனிததுககனாநதவெனதுகருததினறாததசல்லவே. எனககு. (உ௬)

என்னுருயிர்ககுததுணைவநினைநான்றுதிககவே
யெனனதவஞ்செயதேன்முன்னுலகுளோர்மதிக்கவே
பொனனாபுயனுமயனுமபிறருமபொருநதலரியதே
புலையனேனுககளிததகருணைமிகவுமபெரியதே. எனககு. (உ௭)

என்கணமணியுளிருககுநதலைவநினைககாணவே
யென்னதவஞசெயதேன்முன்னயனுமரியுநாணவே
புன்கணொழிததுததெள்ளாரமுதமபுகட்டியென்னையே
பொருளாயெண்ணிவளாககினறாயநீயெனககொரன்னையே. எனக்கு. (உ௮)

அறிவிலேன்செயகுற்றமனைத்தும்பொறுத்ததனறியே
யமுதுமளிததாயார்செய்வார்களிநதனறியே
செறிவிலாதபொறியுமனமுஞசெறிந்துநிறகவே
செய்தாய்மேலுநதெரிததாயசாகாக்கலவிகறகவே. எனக்கு. (உ௯)

ஒருநாழிகையில்யோகநிலையையுணர்ததிமாலையே
யோகப்பயனைமுழுதுமளிததாய்மறுநாட்காலையே
திருநாணிலையுநதீர்ததநிலையுநதெய்வநிலையுமே
சிறியேனறியககாட்டிததெரிததாயவேதககலையுமே. எனக்கு. (௩0)

அண்டப்பரப்பின்றிறங்களனைததுமறியவேண்டியே
யாசைப்பட்டதறிநதுதெரிததாயறிவைததூணடியே
பிண்டததுயிர்களபொருததும்வகையுமபிண்டந்தனனையே
பிரியும்வகையும்பிரியாவகையுந்தெரிததாய்பினனையே. எனக்கு. (௩௧)

வேதாகமங்கள்புகன்றவிரிவையொன்றொன்றாகவே
விளங்கவிளாந்துதெரித்தாய்பயிலுமாசைபோகவே
பூதாதிகளைப்பொருத்தும்பகுதிப்பொருத்தமுற்றுமே
பொய்மைநீக்கிக்காணக்காட்டித்தெரித்தாய்மற்றுமே. எனக்கு. (௩௨)

வள்ளாலுன்னைப்பாடப்பாடவாய்மணக்குதே
வஞ்சவினைகளெனைவிட்டோடித்தலைவணக்குதே
எள்ளாதுனதுபுகழைக்கேட்கச்செவிநயக்குதே
யெந்தாய்தயவையெண்ணுந்தோறுமுளம்வியக்குதே. எனக்கு. (௩௩)

இறைவாநின்னைக்கனவிலேனும்யான்மறப்பனோ
வெந்தாயுலகத்தவர்கள்போலினியிறப்பனோ
மறைவாசகமும்பொருளும்பயனுமதிக்குமதியிலே
வாய்க்கக்கருணைபுரிந்துவைத்தாயுயர்ந்தபதியிலே எனக்கு. (௩௪)

தலைவாவெனக்குக்கருணையமுதந்தாவித்தலத்திலே
தவஞ்செய்தேனத்தவமுமுன்றனருள்வலத்திலே
அலைவாரிதியிற்றுரும்புபோலவயனுமாலுமே
யலையவெனக்கேயளிக்கின்றாய்நீமேலுமேலுமே. எனக்கு. (௩௫)

உடையாயெனக்குப்புரிந்ததயவையுன்னவுன்னவே
யுடம்புபூரிக்கின்றதொளிர்பொன்மலையதென்னவே
தடையாதினியுண்மூலமலத்தின்றடையும்போயிற்றே
சமயவிகற்பமெல்லாநீங்கிச்சமமதாயிற்றே. எனக்கு. (௩௬)

மயங்குந்தோறுமுள்ளும்புறத்துமயக்கநீக்கியே
மகிழ்விக்கின்றாயொருகாலூன்றியொருகாற்றூக்கியே
உயங்குமலங்களைந்தும்பசையற்றொழிந்துவெந்ததே
யுன்பேரருட்பொற்சோதிவாய்க்குந்தருணம்வந்ததே. எனக்கு. (௩௭)

எனக்குநின்னைப்போலநுதற்கண்ணீந்துமதனையே
யெரிப்பித்தாய்பின்னெழுப்பிக்கொடுத்தாயருவமதனையே
சினக்குங்கூற்றையுதைப்பித்தொழித்துச்சிதையமாற்றியே
தேவர்கற்பம்பலவுங்காணச்செய்தாய்போற்றியே. எனக்கு. (௩௮)

கள்ளமறியேனின்னாற்கண்டகாட்சியொன்றுமே
கருத்திலுளதுவேறோர்விடயங்காணேனென்றுமே
உள்ளந்துளைக்கின்றேனின்னடிமேலாணைமுன்னையே
யுள்ளேவிளங்கிக்காண்கின்றாய்க்கிங்கொளிப்பதென்னையே. எனக்கு. (௩௯)

என்னையடிமைகொண்டாய்நானுநினக்குநல்லனோ
வெல்லாம்வல்லதலைவநினக்குநல்லனல்லனோ
முன்னைவினைகளனைத்துநீக்கியமுதமூட்டியே
மூவர்க்கரியநிலையில்வைத்தாயென்னைநாட்டியே. எனக்கு. (௪௰)

சோதிமலையிற்கண்டேனின்னைக்கண்களிக்கவே
நயந்தேனமுதமகத்தும்புறத்தும்பரிமளிக்கவே
ஓதியுணர்தற்கரியபெரியவுணர்வைநண்ணியே
யோதாதனைத்துமுணர்கின்றேனின்னருளையெண்ணியே. எனக்கு. (௬௧)

எழுநிலைகளோங்குந்தெய்வமாடமொன்றிலே
யேற்றிக்களிக்கவைத்தாயதன்மேலிலங்குகுன்றிலே
வாழும்பரிசுகவிக்குங்குடையுமதிக்குந்தூசுமே
மகிழ்ந்துகொடுத்தப்பினனுங்கொடுத்தாயமணிப்பொற்காசுமே. எனக். (௬௨)

இந்தவுலகிலுள்ளார்பலருமிகவுநன்மையே
யென்பாற்செய்யவைத்தாயிதுநின்னருளின்றன்மையே
அந்தவுலகிலுள்ளார்பலருமென்னைநோக்கியே
யப்பாவாழியெனவும்புரிந்தாயடிமையாக்கியே. எனக்கு. (௬௩)

அழியாக்கருணையமுதவடிவிலோங்குஞ்சோதியே
யரசேயெனக்குள்விளங்குமாதியாமனாதியே
ஒழியாத்துயரையொழித்தபெரியகருணையாளனே
யொன்றாயொன்றிலுபயமாகியொளிருந்தாளனே. எனக்கு. (௬௪)

பாலுந்தேனுங்கலந்ததென்னவென்னுளினிக்கவே
பரமஞானவமுதமளிக்கின்றாய்தனிக்கவே
எலுமுயிர்களெல்லாநினக்குப்பொதுவதென்பரே
யின்றுநோக்கியோரவாரனென்பரன்பரே. எனக்கு. (௬௫)

ஐயாநான்செய்பிழைகளேழுகடலிற்பெரியதே
யனைத்தும்பொறுத்ததயவுபிறருக்கரியதரியதே
மெய்யாநீசெய்யுதவிக்கொருகைம்மாறுவேண்டுமே
வேண்டாதெனவறிந்துமெனக்குள்ளாசைதூண்டுமே. எனக்கு. (௬௬)

பூதவெளியினடம்பகுதிவெளியினாட்டமும்
போகவெளியிற்கூத்தும்யோகவெளியுளாட்டமும்
நாதவெளியிற்குனிப்பும்பரமநாதநடமுமே
நன்றுகாட்டிக்கொடுத்தாயென்றுநலியாததிடமுமே. எனக்கு. (௬௭)

எட்டுமிரண்டுமிதுவென்றெனக்குச்சுட்டிக்காட்டியே
யெட்டாநிலையிலிருக்கப்புரிந்தாயிட்டெக்கூட்டியே
துட்டவினையைத்தீர்த்துஞானச்சுடருள்ளேற்றியே
தூண்டாதென்றும்விளங்கவைத்தாயுண்மைசாற்றியே. எனக்கு. (௬௮)

அருளாம்பெரியவெளிக்குட்சோதிவடிவனாகியே
யரசுசெலுத்துந்தனித்ததலைமைப்பரமயோகியே
பொருளாயென்னையுமுளங்கொண்டளித்தபுனிதநாதனே
போற்றுநாதமுடிவில்நடஞ்செய்கமலபாதனே. எனக்கு. (௬௯)

உருவுமருவுமுபயநிலையுமுடையநித்தனே
யுயிருணிறைந்ததலைவவெல்லாம்வல்லசித்தனே
மருவுந்துரியவணையுணிறைந்துவயங்கும்பரமமே
மன்றிற்பரமானந்தநடஞ்செய்கின்றபிரமமே. எனக்கு. (ருo)

அன்னேயென்னையாண்டதலைவவடியனுள்ளமே
யமர்ந்ததுணைவவெனக்குக்கிடைத்தவமுதவெள்ளமே
பொன்னேபொன்னிற்பொலிந்துநிறைந்தபுனிதவானமே
புனிதவானத்துள்ளேவிளங்கும்புரணஞானமே. எனக்கு. (ருக)

சமயத்தெய்வம்பலவுஞ்சிறியதுரும்பதென்னவே
சாற்றப்புகினுஞ்சாலாரருளின்பெருமையுன்னவே
அமையுமண்டப்பகுதிபலவுமணுவின்பொடியிலே
யனந்தத்தொன்றென்றுரைத்துஞ்சாலாநின்பொன்னடியிலே, எனக். (ருஉ)

அப்பாநின்னையடைந்தவென்னையொப்பாரியாவரே
யாருநகன்றநிலையையடைந்தாரெனன்பர்தேவரே
இப்பாராதிபூதமடங்குங்காலுநினையே
யேத்திக்களித்துவாழ்வேனிதற்குமையமென்னையே. எனக்கு. (ருங)

என்னைமறைத்தமறைப்பைநீக்கியென்னைக்காட்டியே
யிறைவநினையுங்காட்டிவளாததாயமுதமூட்டியே
முன்னைமறைகளுமெட்டாநினதுபெருமைதன்னையே
முன்னிமகிழ்ந்துபாடப்புரிந்தாயடிமையென்னையே. எனக்கு. (ருச)

எண்ணுந்தோறுமெண்ணுந்தோறுமென்னுளினிக்குதே
யிறைவநினைப்பாடநாவிலமுதஞ்சனிக்குதே
கண்ணுங்கருத்துநின்பாலன்றிப்பிறாபாற்செல்லுமோ
கண்டேனுன்னையினிமேலெனைமாயைவெல்லுமோ. எனக்கு. (ருரு)

விந்தோநாதவெளியுங்கடந்துமேலுநீளுதே
மேலைவெளியுங்கடந்துனடியாராணையாளுதே
அந்தோவுனதுபெருமைசிறிதுமறிவாரிலலையே
யறிந்தாலுருகியின்பவடிவமாவரொல்லையே. எனக்கு. (ருசு)

இறுகப்பிடித்துக்கொண்டேன்பததைஇனிநான்விடுவனோ
வெந்தாய்பாதம்பிடித்தகையால்வேறுதொடுவனோ
குறுகப்பயந்துகூறறுமோடிக்குலைந்துபோயிற்றே
கோவேயுன்றனருட்சிற்சோதியென்னதாயிற்றே. எனக்கு. (ருஎ)

காய்க்கும்பருவந்தன்னைப்பழுத்தபருவமாக்கியே
கனகசபையினடிகன்றுயோாகாலைத்தூக்கியே
நாய்க்குததவிசிட்டொருபொன்முடியுந்ன்குசூட்டியே
நட்டநடுவேவைத்தாய்கருணையமுதமூட்டியே. எனக்கு. (ருஅ)

கல்லைநோக்கிக்கனிந்துபழுத்தகனியதாக்கியே
கனகசபையினடிக்கின்றுயோகாலைததாக்கியே
புல்லைமுடிக்குமணிகின்றுயென்புனசொன்மாலையே
புனைந்தென்னுளத்திலிருக்கப்புரிந்தாய்நின்பொற்காலையே. எனக்கு. (௫௯)

சாதல்பிறததலென்னுமவத்தைதவிர்த்துக்காலையே
தனிததுன்னருளினமுதம்புகட்டிக்கொடுத்தாயமேலையே
ஓதலுணாதலுவததலெனக்குநினபொற்பாதமே
யுலகவிடயக்காட்டிற்செல்லாதெனதுபோதமே. எனக்கு. (௬0)

அருளும்பொருளும்பெற்றேனடியனுகினானுமே
யஞ்சேன்மாயைவினைகட்கொருசிற்றளவதேனுமே
இருளுநிறத்துக்கூற்றைத்துரததியருட்சிற்சோதியே
யெனறனகத்துமபுறததும்விளங்குகின்றதாதியே. எனக்கு. (௬௧)

காமக்கடலைக்கடந்துவெகுளிக்கடலைநீந்தினேன்
கடியமயக்ககடலைததாண்டியடியையோந்தினேன்
சேமப்பொதுவினடஙகண்டெனதுசிறுமைநீஙகினேன்
சிற்றம்பலத்துநடங்கண்டுவநதுமிகவுமோங்கினேன். எனக்கு. (௬௨)

தாங்கல்விடுதலிரண்டுமெனக்குச்சமமதாயிற்றே
சகத்தில்வழங்குமாயைவழககுத்தவிர்ந்துபோயிற்றே
யேஙகல்சலிததலிரண்டுமின்றியிளைப்புநீஙகினே
னெந்தாய்கருணையமுதுண்டின்பப்பொருப்பிலோங்கினேன். எனக்கு. (௬௩)

உறவுபகையென்றிரணடுமெனககிங்கொன்றதாயிற்றே
யொன்றென்றிரண்டென்றுளறும்பேதமோடிப்போயிற்றே
மறைவுநினைவெனறெனைவலிததவலிப்புநீங்கினேன்
மன்றிற்பரமானநதநடஙகண்டினபமோஙகினேன. எனக்கு. (௬௪)

உன்னைக்கண்டுகொண்டேன்கண்டவுடனிங்கென்னையே
யுலகமெல்லாஙகணடுகொணடவுவப்பிதென்னையே
என்னைககண்டுகொண்டகாலத்திறைவநின்னையே
யாருங்கண்டுகொண்டாரிலலையாங்கதெனனையே. எனக்கு. (௬௫)

மலததிற்புழுத்தபுழுவுநிகரமாட்டாநாயினேன்
வள்ளல்கருணையமுதுண்டின்பநாட்டானுயினேன்
குலததிற்குறியிற்குணததிற்பெருமைகொள்ளாநாயினேன்
கோதிலமுதுணடெல்லாநலமுமுள்ளானுயினேன். எனக்கு. (௬௬)

கடையநாயிற்கடையனுய்க்குங்கடையனுயினேன்
கருணையமுதுண்டின்பநாட்டுக்குடையனுயினேன்
விடயக்காட்டிலோடித்திரிந்தவெள்ளைநாயினேன்
விடையாய்நினக்குமிகவுஞ்சொந்தப்பிள்ளையாயினேன். எனக்கு. (௬௭)

அயனுமாலுந்தேடித்தேடியலந்துபோயினா
ரந்தோவிவன்முனசெய்ததவம்யாதென்பாராயினா
மயனுங்கருதமாட்டாததவளமாடத்துச்சியே
வயங்குமணைமேல்வைத்தாயசிறியநாயைமெச்சியே. எனக்கு. (௬௮)

வல்லாயுனதுகருணையமுதென்வாய்க்குவந்ததே
மலமுமாயைக்குலமும்வினையுமுழுதும்வெந்ததே
எல்லாநலமுமானவதனையுண்டுவந்ததே
யிறவாதென்றுமோங்குவடிவமெனக்குவந்ததே. எனக்கு. (௬௯)

சிற்றம்பலத்தினடங்கண்டவாகாற்பொடிகள்புல்லதே
சிருட்டிமுதலோரைந்துதொழிலுஞ்செய்யவல்லதே
பற்றம்பலத்தில்வைத்தாதம்மைப்பணியும்பத்தரே
பரமபதத்தரென்றுபகர்வாபரமமுத்தரே. எனக்கு. (௭0)

சிருட்டிமுதலோரைந்துதொழிலுஞ்செய்யென்றென்னையே
செல்வப்பிள்ளையாக்கிவளர்க்கின்றாயிதென்னையே
தெருட்டித்திருப்பொற்பதத்தைக்காட்டியமுதமூட்டியே
திடமுறவைத்தாய்சன்மார்க்கசங்கங்கூட்டியே. எனக்கு. (௭௧)

அடியனாக்கிப்பிள்ளையாக்கிநேயனாக்கியே
யடிகளாக்கிக்கொண்டாயென்னையவலநீக்கியே
படியுளோருமவானுளோருமிதனைநோக்கியே
பதியுமோரவாரனென்பர்பரிவுதேக்கியே. எனக்கு. (௭௨)

அனைத்துவினையும்பொருளென்றெண்ணியிரவும்பகலுமே
யகத்துமபுறத்துந்திரிகின்றாயிவ்வுலகென்புகலுமே
தனைத்தாரமுதமிகவுமெனக்குத்தந்ததனறியே
தனியேயினறுந்தருகின்றாயெனனறிவினெறியே. எனக்கு (௭௩)

வேதாகமத்தினடியுநடுவுமுடியுமற்றுமே
வெட்டவெளியதாகிவிளங்கக்கண்டேனுற்றுமே
நாதாசிறியநாயகருங்கடையேன்முற்றுங்கண்டதே
நானேகண்டேனெந்தாய்கருணைநாட்டங்கண்டதே. எனக்கு. (௭௪)

புழுவிற்புழுத்தபுழுவுநிகரப்போதாநாயினேன்
பொதுவினடிக்குந்தலைவனினக்கேயடிமையாயினேன்
தழுவற்கரியபெரியதுரியத்தம்பத்தேறினேன்
தனித்தப்பாலோர்தவளமாடத்திருந்துதேறினேன். எனக்கு. (௭௫)

கடையனெனதுகொடியகடினநெஞ்சக்கல்லையே
கனியதாக்கித்தூக்கிக்கொண்டாய்துரியத்தெல்லையே
யுடையாய்துரியத்தலத்தினமேனின்றோங்குந்தலத்திலே
யுன்பாலிருக்கவைத்தாயென்னையுவந்துவலத்திலே. எனக்கு. (௭௬)

அறிந்தநாள்கள்தொடங்கியிற்றைப்பகலின்வரையுமே
யடியேன்பட்டபாட்டைநினைக்கிற்கல்லுங்கரையுமே
எறிந்தபாடுமுழுதும்பெரியவின்பமாயிற்றே
யெந்தாயகருணையெனக்குமிகவுஞ்சொந்தமாயிற்றே. எனக்கு. (௭௭)

பனிரண்டாண்டுதொடங்கியிற்றைப்பகலின்வரையுமே
படியிற்பட்டபாட்டைநினைக்கின்மலையுங்கரையுமே
துனியாதந்தப்பாடுமுழுதுஞ்சுகமதாயிற்றே
துரையேநின்மெய்யருளிங்கெனக்குச்சொந்தமாயிற்றே. எனக்கு. (௭௮)

ஈராறுண்டுதொடங்கியிற்றைப்பகலின்வரையுமே
யெளியேன்பட்டபாட்டைநினைக்கிலிரும்புங்கரையுமே
வேராயந்தப்பாடுமுழுதுமின்பமாயிற்றே
யிறைவாநின்மெய்யருளிங்கெனக்குச்சொந்தமாயிற்றே. எனக்கு. (௭௯)

பாட்டாலுனதுபதத்தைநாடிப்பாடும்வாயரோ
பதியேயிந்தவுலகிலெனக்குமிகவுநேயரோ
நாட்டாரெனினுநின்னையுளத்துநாட்டாராயினே
நயவேன்சிறிதுநயத்தல்கயக்குமெட்டிக்காயினே. எனக்கு. (௮0)

சின்னவயதுதொடங்கியென்னைக்காக்குந்தெய்வமே
சிறியேன்மயங்குந்தோறுமயக்கந்தீர்க்குந்தெய்வமே
என்னையவத்தைக்கடலினின்றிங்ஙனெடுத்ததெய்வமே
யெல்லாநலமுந்தருமின்னமுதங்கொடுத்ததெய்வமே. எனக்கு. (௮௧)

அச்சந்தீர்த்திங்கென்னையாட்கொண்டருளுமமுதனே
யடியேன்பிழைகளனைத்தும்பொறுத்துளமாந்தவமுதனே
இச்சையாவுமுடித்துக்கொடுத்துள்ளிலங்குங்குரவனே
யென்றுமிறவாக்கல்வியடியேற்கீந்தகுரவனே. எனக்கு. (௮௨)

உள்ளும்புறத்துங்கருணையமுதமூட்டுமன்னையே
யோதாதுணரவுணருமுணர்வையுதவுமன்னையே
தெள்ளுங்கருணைச்செங்கோல்செலுத்தச்செய்தவப்பனே
செல்வப்பிள்ளையாக்கியென்னுட்சேர்ந்தவப்பனே. எனக்கு. (௮௩)

இரவும்பகலுமென்னைக்காத்துள்ளிருக்குமிறைவனே
யெல்லாவுலகும்புகழவென்னைமேலேற்றுமிறைவனே
கரவுநினையாதெனக்குமெய்ம்மைகாட்டுந்துணைவனே
களித்தென்றனையுஞ்சனமாக்கத்தில்நாட்டுந்துணைவனே. எனக்கு. (௮௪)

சற்றும்வருந்தப்பாராதென்னைத்தாங்குநேயனே
தானுமென்னைப்பிரித்தற்கரியதாத்துநேயனே
முற்றுந்தனையெனக்குக்கொடுத்துமுயங்குநேயனே
முன்னேநான்செய்தவத்திலெனக்குள்முளைத்தநேயனே. எனக்கு. (௮௫)

நேயாகினனை நினைக்க நினைக்க நெஞ்சங்களிக்குதே
நெடியவிழிகளிரண்டு மின்பநீர்துளிக்குதே
ஓயாதுன துபெருமைநினைக்கவுவகைநீடுதே
யுரைப்பாரொவ்வொன்றுலகிற்பலரையோடித்தேடுதே. எனக்கு. (அ௬)

பொன்னே நின்னையுன்னவுடம்பு புளகமூடுதே
பொதுவைக்காணவுள்ளேயாசைபொங்கியாடுதே
என்னேபிறர்தம்வரவுநோக்கக்கண்கள்வெதும்புதே
யெந்தாயவரவைநினைக்கக்களிப்புப்பொங்கித்ததும்புதே. எனக்கு. (அ௭)

மணியேநின்னைப்பொதுவிற்கண்டமனிதர்தேவரே
மனிதர்கண்ணிறபட்டபுல்லுமரமுந்தேவரே
அணியேநினைப்பாடுமடியார்தாமோமூவரே
யவரைக்கண்டாரவரைக்கண்டாரவாகண்மூவரே. எனக்கு. (அஅ)

வாழ்வேநினதுநடங்கண்டவரைச்சுத்தரென்பனே
மலங்கண்மூன்றுந்தவிரததசுத்தமுததரென்பனே
எழ்வேதனையுநீக்கிவாழுநித்தரென்பனே
யெல்லாஞ்செய்யவல்லஞானசித்தரென்பனே. எனக்கு. (அ௯)

சிவமேநின்னைப்பொதுவிற்கண்டசெல்வர்தம்மையே
தேவாகண்டுகொண்டுவணங்குகின்றாரிம்மையே
தவமேபுரிந்துநின்னையுணாந்தசாந்தசித்தரே
தருமைந்தொழிலுந்தாமேயியற்றவாய்ந்தசிததரே. எனக்கு. (௯0)

ஐவராலுநின்னையறிதற்கருமையருமையே
யாரேயறிவாமறையுமறியாநினதுபெருமையே
பொய்வராதவாய்கொண்டுன்னைப்போற்றுமன்பரே
பொருளேநின்னையறிவாரவரேயழியாவின்பரே. எனக்கு. (௯௧)

என்னைக்காட்டியென்னுளிலங்கும்நின்னைக்காட்டியே
யிறங்காநிலையிலேற்றிஞானவமுதமூட்டியே
பொன்னைக்காட்டிப்பொன்னேநினதுபுகழைப்பாடியே
புந்திகளிக்கவைத்தாயழியாதென்னைநாடியே. எனக்கு. (௯௨)

அண்டகோடியனைத்துங்காணுங்கண்களெய்தியே
யறிந்தேனங்கைக்கனிபோலவற்றிலுள்ளசெய்தியே
பிண்டகோடிமுழுதுங்காணப்பெற்றுநின்னையே
பேசிப்பேசிவியக்கின்றேனிப்பிறவிதன்னையே. எனக்கு. (௯௩)

சிற்றம்பலததினடனங்காட்டிச்சிவத்தைக்காட்டியே
சிறப்பாயெல்லாம்வல்லசித்திதிறத்தைக்காட்டியே
குற்றம்பலவுந்தீர்த்தென்றனைகோர்முடியுஞ்சூட்டியே
கோவேநீயுமென்னுட்கலந்துகொண்டாய்நாட்டியே. எனக்கு. (௯௪)

சுத்தநிலையில்நடுநின்றெறங்குந்தோன்றுஞ்சோதியே
துரியவெளியைக்கடந்தப்பாலுநதுலங்குஞ்சோதியே
சித்தருளத்திற்சுடர்செய்தோங்குந்தெய்வச்சோதியே
சிற்றம்பலத்தினடஞ்செய்தெனக்குட்சிறநதசோதியே. எனக்கு. (கரு)

அன்றேயென்னையடியனுக்கியாண்டசோதியே
யதன்பின்பிள்ளையாககியருளிங்களித்தசோதியே
நன்றேமீட்டுநேயனுக்கிநயந்தசோதியே
நானும்நீயுமொன்றென்றுரைத்துநல்குசோதியே. எனக்கு. (கசு)

நீயேவலிந்திங்கென்னையாண்டநீதிச்சோதியே
நின்னைப்பாடவென்னைவளாககுநிமலச்சோதியே
தாயேயெனவந்தென்னைக்காத்ததருமச்சோதியே
தன்மைபிறராலரிதற்கரியதலைமைச்சோதியே. எனக்கு. (கஎ)

சாகாக்கல்வியெனக்குப்பயிற்றித்தந்தசோதியே
தன்னோமுடியொன்றெனதுமுடியிற்றரித்தசோதியே
ஏகாக்கரப்பொற்பீடத்தென்னையேற்றுசோதியே
யெல்லாம்வல்லசித்தியாட்சியீந்தசோதியே. எனக்கு. (கஅ)

சோதியெவையும்விளங்கவிளக்குசோதிவாழியே
துரியவெளியினடுநின்றோங்குஞ்சோதிவாழியே
சூதிலாமெய்ச்சிற்றம்பலத்துச்சோதிவெல்கவே
துலங்கப்பொன்னம்பலத்திலாடுஞ்சோதிவெல்கவே. எனக்கு. (கக)

சுத்தசிவசன்மார்க்கநீதிசசோதிபோற்றியே
சுகவாழ்வளித்தசிற்றம்பலததுச்சோதிபோற்றியே
சுத்தசுடரப்பொற்சபையிலாடுஞ்சோதிபோற்றியே
சோதிமுழுதும்விளஙகவிளஙகுஞ்சோதிபோற்றியே. (௧00)

எனக்குமுனக்குமிசைந்தபொருத்தமென்னபொருததமோ
இந்தப்பொருததமுலகில்பிறருகசெய்தும்பொருததமோ.

திருச்சிறறம்பலம்.

# வர்க்கமாலையென்னுங்காலைப்பாட்டு.

இராகம். காம்போதி - அடதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

வாரீர்சிதம்பரவல்லிசிவகாம
வல்லிமணாளரேவாரீர
மணிமன்றவாணரேவாரீர. வாரீர.

சரணங்கள்.

அருட்பெருஞ்சோதியெனையாண்டவரேதிரு
வம்பலவாணரேவாரீர
அன்புடையாளரேவாரீர. வாரீர. (க)

அச்சந்தவிர்த்தெனையாட்கொண்டருளிய
வந்தணரேயிங்குவாரீர
அம்பலத்தையரேவாரீர. வாரீர். (உ)

அனபுருவானவரின்புறவுள்ளே
யறிவுருவாயினீரவாரீர
அருட்பெருஞ்சோதியீரவாரீர். வாரீர். (௩)

அண்டங்களெல்லாமணுவிலடக்கு
மருமபெருஞ்சித்தரேவாரீர
அற்புதரேயிங்குவாரீர. வாரீர. (௪)

அம்மையுமாயெனக்கப்பனுமாகியென்
அனபனுமாயினீரவாரீர
அங்கணரேயிங்குவாரீர. வாரீர. (௫)

அலலலறுத்தென்னறிவைவிளக்கிய
அமபலவாணரேவாரீர
செமபொருளாயினீரவாரீர. வாரீர். (௬)

அப்பணிபொன்முடியப்பனென்றேத்துமெய
யன்பருக்கன்பரேவாரீர்
இன்பந்தரவிங்குவாரீர. வாரீர். (௭)

அச்சுதர்நான்முகருச்சியில்மெச்சு
மடிக்கமலத்தீரேவாரீர
நடிக்கவல்லீரிங்குவாரீர. வாரீர. (௮)

அண்டர்க்கரும்பதந்தொண்டர்கெளிதி
லளித்திடவல்லீரேவாரீர்
களித்தென்னையாண்டீரேவாரீர். வாரீர். (௯)

அம்பரமானசிதம்பரநாடகம்
ஆடவல்லீரிங்குவாரீர்
பாடலுவந்தீரேவாரீர். வாரீர். (௧௦)

ஆதியநாதியெனநான்மறைபோற்று
மரும்பெருஞ்சோதியீர்வாரீர்
ஆனந்தநாடரேவாரீர். வாரீர். (௧௧)

ஆகமமவேதமனேகமுகங்கொண்
டருச்சிகரும்பாதரேவாரீர்
ஆருயிர்நாதரேவாரீர். வாரீர். (௧௨)

ஆசறுமந்தங்களாறும்புகன்றநல்
லாரியரேயிங்குவாரீர்
ஆனந்தக்கூத்தரேவாரீர். வாரீர். (௧௩)

ஆலநிழற்கண்ணமர்ந்தறஞ்சொன்னநல்
லாரியரேயிங்குவாரீர்
ஆனந்தக்கூத்தரேவாரீர். வாரீர். (௧௪)

ஆரமுதாகியெனனுயிரைக்காக்கின்ற
ஆனந்தரேயிங்குவாரீர்
ஆடவல்லீரிங்குவாரீர். வாரீர். (௧௫)

ஆதரவாயெனனறிவைத்தெளிவித்த
தமுதமளித்தீரேவாரீர்
ஆடியபாதரேவாரீர். வாரீர். (௧௬)

ஆதாரமீதானத்தப்பாலுங்கண்டற்
கரும்பெருஞ்சோதியீர்வாரீர்
கரும்பிலினிக்கின்றீர்வாரீர். வாரீர். (௧௭)

ஆதியுமந்தமுமில்லாவரும்பெருஞ்
சோதியரேயிங்குவாரீர்
வேதியரேயிங்குவாரீர். வாரீர். (௧௮)

ஆடல்கொண்டீர்திருவம்பலத்தேயென்றன்
பாடல்கொண்டீரிங்குவாரீர்
கூடவல்லீரிங்குவாரீர். வாரீர். (௧௯)

ஆக்கமகொடுத்தென் றன்றாக்கந்தடுத்தவென்
றண்டவரேயிஙகுவாரீர்
தாண்டவரேயிஙகுவாரீர். வாரீர். (உ0)

ஆபத்தைநீக்கியோர்தீபத்தையேற்றியென்
றணவம்போககினீரவாரீர
காணவந்தேனிங்குவாரீர. வாரீர. (உக)

இதுதருணந்தருணந்தருணம்மென்
னிறையவரேயிங்குவாரீர்
இடாதவிர்த்தாட்கொண்டீர்வாரீர. வாரீர. (உஉ)

இச்சையின்வண்ணமெனக்கருள்செய்ய
விதுதருணமிங்குவாரீர்
இன்னமுதாயினீரவாரீர. வாரீர. (உங)

இன்பங்கொடுத்தேயென் றுன்பமகெடுத்துள்
ளிருககின்றநாதரேவாரீர
இருக்கினபொருளானீரவாரீர. வாரீர. (உச)

இரவும்பகலுமிதயத்திலூறி
யினிக்குமமுதரேவாரீர
இனித்தரியேனிங்குவாரீர. வாரீர. (உரு)

இன்னுந்தாழ்த்தஙகேயிருப்பதழகன்
றிதுதருணமிங்குவாரீர
இருமையுமாயினீரவாரீர். வாரீர. (உசா)

இடாதவிர்த்தின்பமெனக்களித்தாளற்
கிதுதருணமிங்குவாரீர
இனியவரேயிங்குவாரீர. வாரீர. (உஎ)

இறையும்பொறுப்பரிதென்னுயிரநாதரே
யித்தருணமிங்குவாரீர்
இதநடஞ்செய்கின்றீரவாரீர். வாரீர. (உஅ)

இம்மையிலேயெனக்கம்மையினின்பம
இதுவென்றளித்தீரேவாரீர
இதயத்திருந்தீரேவாரீர. வாரீர. (உகூ)

இங்கங்கென்னுமலேயெள்ளுககுள்ளெண்ணெயபோ
லெங்கும்நிறைந்தீரேவாரீர
இநதெழில்வண்ணரேவாரீர். வாரீர. (ங0)

இணையொன்றுமில்லாவிணையடியென்றலை
யேறவைத்தீரிங்குவாரீர்
இறுதியிலீரிங்குவாரீர். வாரீர். (௩௧)

ஈன்றாளுமெந்தையுமென்குருவுமெனக்
கின்பமுமாயினீர்வாரீர்
அன்பருக்கன்பரேவாரீர். வாரீர். (௩௨)

ஈனமறுத்துமெய்ஞ்ஞானவிளக்கென்
னிதயத்திலேற்றினீர்வாரீர்
உதயசுடரினீர்வாரீர். வாரீர். (௩௩)

ஏடறியாதமெய்வீடுதந்தன்பலா
யின்புறச்செய்கின்றீர்வாரீர்
வன்பரக்கரியீரேவாரீர். வாரீர். (௩௪)

ஏதியவென்றுநின்றோதியவேதத்திற்
கெட்டாதிருந்தீரேவாரீர்
எட்டாக்கெளியீரேவாரீர். வாரீர். (௩௫)

ஏசறும்பலதேசாசவபோற்றும்ந
டேசரேயிங்குவாரீர்
நேசரேயிங்குவாரீர். வாரீர். (௩௬)

ஐசரெளியாகுநேசரென்றன்பர்க
ளேசநின்றீரிங்குவாரீர்
நாசமிலவீரிங்குவாரீர். வாரீர். (௩௭)

ஒற்றியாமலுறையோனென்றறிரு
ரியமபநின்றீரிங்குவாரீர்
வயநதருவீரிங்குவாரீர். வாரீர். (௩௮)

ஈதல்கண்டேமிகக்காதல்கொண்டேனெனக்
கீதல்செயவீரிங்குவாரீர்
ஓதரியீரிங்குவாரீர் வாரீர். (௩௯)

ஈடணையறநெஞ்சூடணையுற்றுமற
றீடணையீரிங்குவாரீர்
ஆடவல்லீரிங்குவாரீர். வாரீர். (௪௰)

ஈண்டறிவோங்கிடத்தூண்டறிவாகியுள்
ளீண்டுகின்றீரிங்குவாரீர்
ஆண்டவரேயிங்குவாரீர். வாரீர். (௪௧)

உள்ளதேயுள்ளதுவிள்ளதுவென்றெனக
குள்ளதுரைசெய்தீர்வாரீர்
வள்ளல்விரைந்திங்குவாரீர். வாரீர். (சஉ)

உருவாயருவாயுருவருவாயிவை
யொன்றுமல்லீரிங்குவாரீர்
என்றும்நல்லீரிங்குவாரீர். வாரீர். (சங)

உறவும்பகையுமுடையநடையி
லுறவுமெண்ணேனிங்குவாரீர்
பிறவுநண்ணேனிங்குவாரீர். வாரீர். (சச)

உள்ளக்கருத்தைநான்வள்ளற்குரைப்பதென்
னுள்ளத்திருந்தீரேவாரீர்
விள்ளற்கரியீரேவாரீர். வாரீர். (சரு)

உய்யவல்லார்க்கருள்செய்யவல்லீர்நானு
முய்யவல்லேனிங்குவாரீர்
செய்யவல்லீரிங்குவாரீர். வாரீர். (சசு)

உடையவராரிக்கடையவனேனுக
குடையவரேயிஙகுவாரீர்
தடைதவிர்ப்பீரிங்குவாரீர். வாரீர். (சஎ)

உறங்கியிறங்குமுலகவாபோலநா
னுறங்கமாட்டேனிங்குவாரீர்
இறங்கமாட்டேனிஙகுவாரீர். வாரீர். (சஅ)

உண்டுடுத்தின்னுமுழலமாட்டேனமு
துண்டிவிரும்பினேன்வாரீர்
உண்டிதரவிங்குவாரீர். வாரீர். (சகூ)

உன்னுதோறுன்னுதோறுள்ளேயினிக்கின்ற
உத்தமரேயிங்குவாரீர்
உற்றதுணையானீர்வாரீர். வாரீர். (ருo)

உம்மாணையும்மாணையும்மையல்லாலெனக்
குற்றவர்மற்றிலைவாரீர்
உற்றறிந்தீரிங்குவாரீர். வாரீர். (ருக)

ஊனநடந்தவிர்த்தானநடங்காட்டு
மோனநடேசரேவாரீர்
ஞானநடேசரேவாரீர். வாரீர். (ருஉ)

ஊருமில்லீரொருபேருமில்லீரறி
வோருமில்லீரிஙகுவாரீர
யாருமில்லீரிஙகுவாரீர. வாரீர். (௫௩)

ஊறுசிவானநதப்பேறுதருகின்ற
வீறுடையீரிஙகுவாரீர
நீறுடையீரிஙகுவாரீர. வாரீர. (௫௪)

ஊன்றுநுஞ்சேவடிசான்றதரிக்கிலேன்
ஏன்றுகொள்வீரிஙகுவாரீர
ஆனறவரேயிஙகுவாரீர. வாரீர. (௫௫)

ஊற்றையுடம்பிதுமாற்றுயர்பொன்னெ
வேற்றமருள்செய்வீரவாரீர
தேற்றமருள்செய்வீரவாரீர. வாரீர. (௫௬)

ஊடலில்லீரெனைக்கூடல்வல்லீரெனனுள்
பாடல்சொல்வீரிஙகுவாரீர
ஆடல்நல்லீரிஙகுவாரீர. வாரீர். (௫௭)

ஊக்கங்கொடுத்தென்றனேக்கங்கெடுத்தரு
ளாக்கமடுததீரேவாரீர
தூக்கந்தவிர்ததீரேவாரீர. வாரீர. (௫௮)

ஊமையெழுத்தினுள்ளாமையெழுத்துண்டென்
ஞேமையறிவிததீரவாரீர
சேமஞ்செறிவிததீர்வாரீர. வாரீர. (௫௯)

ஊகமிலலேன்பெறறதேகமழியாத
யோகங்கொடுத்தீரேவாரீர
போகஙகொடுததீரேவாரீர். வாரீர. (௬௦)

ஊதியந்தந்தநல்வேதியரேயுண்மை
யோதியநாதரேவாரீர்
ஆதியனாதியீர்வாரீர. வாரீர். (௬௧)

என்குறைதீர்த்தென்னுள்நன்குறைவீரினி
யென்குறையென்முன்னீரவாரீர்
தன்குறையில்லீரேவாரீர. வாரீர். (௬௨)

என்னுயிராகியென்றன்னுயிர்க்குள்ளேயோ
ரின்னுயிராயினீரவாரீர்
என்னுயிர்நாதரேவாரீர். வாரீர். (௬௩)

என்கண்ணருள்செய்தென்புன்கண்விலக்கிய
என்கண்ணனையீரேவாரீர்
மின்கண்ணுதலீரேவாரீர். வாரீர். (சுச)

எல்லாவுயிர்களுநல்லாரெனத்தொழு
எல்லாம்வல்லீரிங்குவாரீர்
சொல்லாநிலையினீர்வாரீர். வாரீர். (சுரு)

எட்டுமிரண்டுமென்றிட்டுவழங்குத
லெட்டும்படிசெய்தீர்வாரீர்
கட்டுருவாயினீர்வாரீர். வாரீர். (சுசு)

என்றுகண்டாமிந்நன்றுகொண்டாளுக
வென்றுநாநீரிங்குவாரீர்
அன்றுவந்தீரின்றுவாரீர். வாரீர். (சுஎ)

எச்சமயங்களும்பொய்ச்சமயமெனநீ
ரிச்சமயமிங்குவாரீர்
மெய்ச்சமயநாதநீர்வாரீர். வாரீர். (சுஅ)

என்பாற்களிப்பொடுமென்பாலென்றீநிதை
யின்பாறபெறுகென்றீர்வாரீர்
தென்பான்முகங்கொண்டீர்வாரீர். வாரீர். (சுகூ)

எச்சைவுமையன்றென்னிச்சையெல்லாமும
திச்சைசண்டீரிங்குவாரீர்
அச்சந்தவிர்த்தீரேவாரீர். வாரீர். (எ0)

எண்ணமெல்லாமுமதெண்ணமல்லால்வேறே
ரெண்ணமெனக்கில்லைவாரீர்
வண்ணமளிக்கின்றீர்வாரீர். வாரீர். (எக)

ஏராயநான்முகநாராயணர்மற்றும்
பாராயணஞ்செயவீர்வாரீர்
ஊராயமாயினீர்வாரீர். வாரீர். (எஉ)

ஏமிருந்திருவாமசுகந்தரும
ஏமசபேசரேவாரீர்
சோமசிகாமணிவாரீர். வாரீர். (எங)

ஏதமிலாப்பரநாதமுடிப்பொரு
ளேதுதுசொல்லுவீர்வாரீர்
ஈதலுடையீரேவாரீர். வாரீர். (எச)

ஏகபராபரயோகவெளிக்கப்பா
ஏகவெளிநின்றீர்வாரீர்
ஏகானேகரேவாரீர். வாரீர். (எரு)

ஏறியிறங்கியிருந்தேனிறங்காம
லேறவைத்தீரிங்குவாரீர்
தேறவைத்தீரிங்குவாரீர். வாரீர். (எசு)

ஏகாந்தன்னிலையோகாந்தத்துள்ளதென
றேகாந்தஞ்சொல்லினீர்வாரீர்
தேகாந்தமில்லீரேவாரீர். வாரீர். (எஎ)

ஏகாதகல்விதான்சாகாதகல்வியென்
றேகாதலாற்சொன்னீர்வாரீர்
வேகாதகாலினீர்வாரீர். வாரீர். (எஅ)

ஏடாயிரமென்னைக்கோடாமொழியென்றே
ஏடாவென்றீரிங்குவாரீர்
ஈடாவாரில்லீரேவாரீர். வாரீர். (எகூ)

ஏசாத்தந்திரம்பேசாதமந்திரம
ஈசானமேலென்றீர்வாரீர்
ஆசாதியில்லீரேவாரீர். வாரீர். (அ0)

ஏனென்பாரவேறிலைநானென்பாற்கூடவுநின்
றேனென்பாலேனென்பீர்வாரீர்
ஆனின்பாலாடுவீர்வாரீர். வாரீர். (அக)

ஐந்துமலங்களும்வெந்துவிழவெழுந்
தைந்துஞ்செய்யுமென்றீர்வாரீர்
இந்துசிகாமணிவாரீர். வாரீர். (அஉ)

ஐயமுற்றேனையிவ்வையங்கரியாக
ஐயந்தவிர்த்தீரேவாரீர்
மெய்யம்பலத்தீரேவாரீர். வாரீர். (அங)

ஐயாநடம்புரிமெய்யரென்றேயுணர்ந்
தையர்தொழநின்றீர்வாரீர்
துய்யருளநின்றீர்வாரீர். வாரீர். (அச)

ஐவணங்காட்டுநம்மெய்வணம்வேட்டுநின்
றைவணரேத்துவீர்வாரீர்
பொய்வணம்போக்குவீர்வாரீர். வாரீர். (அரு)

ஒன்றேசிவமதையொன்றுசன்மார்க்கமு
மொன்றேயென்றீரிங்குவாரீர
னன்றேநின்றீரிங்குவாரீர். வாரீர். (அகூ)

ஒப்பாரில்லீருமக்கிப்பாரிற்பிள்ளைநான்
ஒப்பாரியல்லகாண்வாரீர
முப்பாழ்கடந்தீரோவாரீர. வாரீர. (அஎ)

ஒத்தவிடந்தனில்நித்திரைசெய்யென்றீர
ஒத்தவிடங்காட்டவாரீர்
சித்தசிகாமணிவாரீர. வாரீர். (அஅ)

ஒட்டுமறநில்லைநான்விட்டுப்பிரிகலே
னொட்டுவைத்தேனும்மேல்வாரீர
எட்டுக்குணத்தீரேவாரீர. வாரீர. (அகூ)

ஒருமைநிலையிலிருமையுந்தந்த
வொருமையினீரிங்குவாரீர
பெருமையினீரிங்குவாரீர. வாரீர். (கூ0)

ஒண்மைவிரும்பினேனுண்மையிலீருவீ
ருண்மைசொன்னேனிங்குவாரீர
வண்மையிடங்கொண்டோவாரீர. வாரீர. (கூக)

ஓங்காரநாடகம்பாங்காரச்செய்கின்ற
ஓங்காரநாடரேவாரீர
ஆங்காரநீக்கினீர்வாரீர. வாரீர். (கூஉ)

ஓங்கும்பிண்டாண்டங்கள்தாங்கும்பெருவெளி
யோங்கும்நடேசரேவாரீர
பாங்குசெய்வீரிங்குவாரீர. வாரீர. (கூங)

ஓசையினுள்ளேயோராசையுதிக்கமேல்
ஓசைசெய்வித்தீரேவாரீர்
பாசமறுத்தீரேவாரீர. வாரீர. (கூச)

ஓராதுலகினைப்பாராதிருநினக்
கோராவகையென்றீர்வாரீர
பேராநிலைதந்தீர்வாரீர். வாரீர. (கூரு)

ஓடாதுமாயையைநாடாதுசன்னெறி
யூடாதிருவென்றீர்வாரீர்
வாடாதிருவென்றீர்வாரீர். வாரீர். (கூசு)

ஓலக்கபாட்டதைச்சாலத்திறந்தரு
ளோலக்கங்காட்டினீர்வாரீர்
காலக்கணக்கிலலீர்வாரீர். வாரீர். (கூஎ)

ஓடத்தினின்றொருமாடத்திலேற்றிமெய்
யூட்டதைக்காட்டினீர்வாரீர்
வேட்டதைப்பூட்டினீர்வாரீர். வாரீர். (கூஅ)

ஓமத்திலேநடுச்சாமத்திலேயென்னை
யோமத்தனுக்கினீர்வாரீர்
சாமத்தநீக்கினீர்வாரீர். வாரீர். (கூகூ)

ஓமென்பதற்குமுன்னுமென்றுனாத்துட
னுமென்றுகாட்டினீர்வாரீர்
நாமென்றுநாட்டினீர்வாரீர். வாரீர். (க00)

ஔவியமாகத்தின்வெவ்வியனீக்கியே
செவ்வியனுக்கினீர்வாரீர்
ஒவ்வியொன்றுக்கினீர்வாரீர். வாரீர். (க0க)

கண்ணனையீருமைக்காணவென்னுசைக
கடலபொங்குகின்றதுவாரீர்
உடலதங்குகின்றதுவாரீர். வாரீர். (க0உ)

கண்டணைந்தாலன்றிக்காதலடங்காதென்
கண்மணியீரிங்குவாரீர்
உண்மணியீரிங்குவாரீர். வாரீர். (க0ங)

கட்டிக்கொண்டுமைக்கலந்துகொளல்வேண்டுங்
காரணரேயிங்குவாரீர்
பூரணரேயிங்குவாரீர். (க0ச)

வாரீர்சிதம்பரவல்லிசிவகாம வல்லிமணாளரேவாரீர்
மணிமன்றவாணரேவாரீர்.

திருச்சிற்றம்பலம்.

---

## இதுவுமது.

இராகம் - ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

அணையவாரீரென்னையணையவாரீர்
அணிவளர்சிற்றம்பலத்தீரணையவாரீர.

சரணங்கள்.

இயற்கையுண்மைவடிவினரேயணையவாரீரெல்லாஞ்செய்வல்லவரேயணையவாரீர
இயற்கைவிளக்கத்தவரேயணையவாரீரெல்லார்க்குநல்லவரேயணையவாரீர்
இயற்கையின்பமானவரேயணையவாரீரிறைமையெலாமுடையவரேயணையவாரீர
இயற்கைநிறைவானவரேயணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர.
அணையவாரீர. (க)

உலகமெல்லாமுடையவரேயணையவாரீருண்மையுரைக்கின்றவரேயணையவாரீர்
கலகமறுத்தாண்டவரேயணையவாரீர்கண்ணனையகாதலரேயணையவாரீர
அலகறியாப்பெருமையரேயணையவாரீரற்புதப்பொற்சோதியரேயணையவாரீர்
இலகுசபாபதியவரேயணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர.
அணையவாரீர. (உ)

பொதுவில்நடிக்கின்றவரேயணையவாரீர்பொற்புடையபுண்ணியரேயணையவாரீர
மதுவிலினிக்கின்றவரேயணையவாரீர்மன்னியவென்மணவரேயணையவாரீர
விதுவினமுதானவரேயணையவாரீர்மெய்யுரைத்தவித்தகரேயணையவாரீர
இதுதருணமிறையவரேயணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர.
அணையவாரீர. (ங)

வினைமாலைநீத்தவரேயணையவாரீர்வேதமுடிப்பொருளவரேயணையவாரீர்
அனைமாலைக்காத்தவரேயணையவாரீரருட்பெருஞ்சோதிப்பதியீரணையவாரீர்
புனைமாலைவேய்ந்தவரேயணையவாரீர்பொதுவினிறைபூரணரேயணையவாரீர்
எனைமாலையிட்டவரேயணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர்.
அணையவாரீர. (ச)

சிறுவயதிலெனைவிழைந்தீரணையவாரீர்சித்தசிகாமணியேநீரணையவாரீர்
உறுவயதிங்கிதுதருணமணையவாரீருண்மைசொன்னவுத்தமரேயணையவாரீர்
பொறுமைமிகவுடையவரேயணையவாரீர்பொய்யாதவாசகரேயணையவாரீர
இறுதிதவிர்த்தாண்டவரேயணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர்.
அணையவாரீர். (ரு)

சாதிமதந்தவிர்த்தவரேயணையவாரீர்தனித்தலைமைப்பெரும்பதியீரணையவாரீர்
ஆதியந்தமில்லவரேயணையவாரீராரணங்கள்போற்றநின்றீரணையவாரீர்
ஓதியுணர்வரியவரேயணையவாரீருள்ளபடியுளாததவரேயணையவாரீர்
ஈதிசைந்ததருணமிங்கேயணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர்.
அணையவாரீர். (௬)

அன்பாட்டைவிழைந்தவரேயணையவாரீரருட்சோதிவடிவினரேயணையவாரீர்
துன்பாட்டையொழித்தவரேயணையவாரீர்துரியநிறைபெரியவரேயணையவாரீர்
பின்பாட்டுக்காலையிதேயணையவாரீர்பிசசேற்றுகின்றவரேயணையவாரீர்
என்பாட்டையேற்றவரேயணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர்.
அணையவாரீர். (௭)

அணைக்கணமுந்தரியேனணையவாரீராணையும்மேலாணையென்னையணையவாரீர்
புணைக்கணங்கண்டறியேனணையவாரீர்பொன்மேனிப்புண்ணியரேயணையவாரீர்
வணைக்கணஞ்செய்வித்தவரேயணையவாரீர்மன்றில்நடிக்கின்றவரேயணையவாரீர்
இணைக்கணவுதருணமிதேயணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர்.
அணையவாரீர். (௮)

கருணைநடஞ்செய்பவரேயணையவாரீர்கண்மணியிற்கலந்தவரேயணையவாரீர்
அருணிறைசிற்சபையவரேயணையவாரீரன்பர்குறைதீர்த்தவரேயணையவாரீர்
தருணமிதுவிரைந்தென்னையணையவாரீர்சத்தியரேநித்தியரேயணையவாரீர்
இருணிறைந்தார்க்கறிவரியீரணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர்.
அணையவாரீர். (௯)

சேரவும்மேலாசைகொண்டேனணையவாரீர்திருவுளமேயறிந்ததெல்லாமணையவாரீர்
ஆரெனக்கிங்கும்மையல்லாலணையவாரீரயலறியேனணையும்மேலணையவாரீர்
ஈரகத்தேனல்லவிங்கேயணையவாரீரென்னாசைபொங்குகின்றதணையவாரீர்
ஏரகத்தேயமர்ந்தருள்வீரணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர்.
அணையவாரீர். (௰)

கலந்துகொளவேண்டுகின்றேனணையவாரீர்காதல்பொங்குகின்றதென்னையணையவாரீர்
புலந்தறியேன்விரைகின்றேனணையவாரீர்புணர்வதற்குத்தருணமிதேயணையவாரீர்
அலந்தவிடத்தருள்கின்றீரணையவாரீரணைக்கணமுமினித்தரியேனணையவாரீர்
இலந்தைநறுங்கனியனையீரணையவாரீரென்னுடையநாயகரேயணையவாரீர். (௧௧)

அணையவாரீரென்னையணையவாரீர்
அணிகிளர்சிற்றம்பலத்தீரணையவாரீர்.

திருச்சிற்றம்பலம்.

# இதுவுமது.

இராகம் - மோகனம், ஏகதாளசாப்பு.

திருச்சிற்றம்பலம்

பல்லவி.

ஆடவாரீரெனனோடாடவாரீர
அம்பலத்திலாடுகின்றீராடவாரீர

சரணங்கள்.

தன்மைபிறர்க்கறிவரியீராடவாரீர்தனித்தலைமைப்பெரும்பதியீராடவாரீர்
வன்மைமனத்தவாக்கரியீராடவாரீரவஞ்சமிலாநெஞ்சகத்தீராடவாரீர
தொன்மைமறைமுடியமர்ந்தீராடவாரீரதுரியபதங்கடந்தவரேயாடவாரீர்
இன்மைதவிர்த்தெனைமணந்தீராடவாரீரெனனுடையநாயகரேயாடவாரீர். ஆட. (க)

திருவாளர்போற்றவென்னோடாடவாரீர்திருவனையார்வாழ்த்தவிங்கேயாடவாரீர
பெருவாய்மைப்பெருந்தகையீராடவாரீரபேராசைபொங்குகின்றேனாடவாரீர
உருவாகியோங்குகின்றீராடவாரீருத்தமரேயித்தருணமாடவாரீர
இருவாணரேத்தநின்றீராடவாரீரெனனுடையநாயகரேயாடவாரீர. ஆட. (உ)

வேற்றுமுகம்பாரேனென்னோடாடவாரீர்வெட்கமெல்லாம்விட்டுவிட்டேனாடவாரீர
மாற்றுதற்கெண்ணுதீரென்னோடாடவாரீரமாற்றிலுயர்மாயப்பொன்கணவராடவாரீர
கூற்றுதைத்தசேவடியீராடவாரீரகொண்டுகுலங்குறியாதீராடவாரீர்
ஏற்றதனித்தருணமிதேயாடவாரீரெனனுடையநாயகரேயாடவாரீர. ஆட. (ங)

இல்லாமைநீக்கிநின்றீராடவாரீரென்னைமணமாலையிட்டீராடவாரீர
கொல்லாமைநெறியென்றீராடவாரீரகுற்றமெல்லாங்குணங்கொண்டீராடவாரீர
நல்லார்சொல்நல்லவரேயாடவாரீரநற்றாயிலினியவரேயாடவாரீர
எல்லாஞ்செய்வல்லவரேயாடவாரீரெனனுடையநாயகரேயாடவாரீர. ஆட. (ச)

ஆசைகொண்டேனென்னோடாடவாரீராசைவெட்கமறியாதாலாடவாரீர
ஓசைகொண்டவிதங்குமிங்கேயாடவாரீருமையுமையைவிடேனாடவாரீர்
காசுபணத்தாசையிலேனாடவாரீர்கைபிடித்தாற்போதுமென்னோடாடவாரீர
ஏசறநீத்தெனையாண்டீராடவாரீரென்னுடையநாயகரேயாடவாரீர. ஆட. (ரு)

சன்மார்க்கநெறிவைத்தீராடவாரீர்சாகாதவரந்தந்தீராடவாரீர
கன்மார்க்கமனங்கரைத்தீராடவாரீர்கண்ணிசைந்தகணவரேநீராடவாரீர்
சொன்மார்க்கப்பொருளானீராடவாரீர்சுத்தவருட்சோதியரேயாடவாரீர்
என்மார்க்கமுளத்துகந்தீராடவாரீரென்னுடையநாயகரேயாடவாரீர. ஆட. (சு)

அண்டமெலாங்கண்டவரேயாடவாரீரகண்டபரிபூரணரேயாடவாரீர்
பண்டமெலாம்படைத்தவரேயாடவாரீர்பற்றொருவீடில்லவரேயாடவாரீர்
கொண்டெனைவந்தாண்டவரேயாடவாரீர்கூத்தாடவல்லவரேயாடவாரீர்
எண்டகுபொற்சபையுடையீராடவாரீரென்னுடையநாயகரேயாடவாரீர். ஆட. (எ)

பேதமினையாதுவிளைந்தாடவாரீர்பின்பாட்டுக்காலையிதேயாடவாரீர்
ஓதவுலவாதவரேயாடவாரீருள்ளாசைபொங்குகின்றதாடவாரீர்
சாதலறுத்தெனையாண்டீராடவாரீர்தனித்தலைமைப்பெரும்பதியீராடவாரீர்
ஏதமறுத்தவாக்கினியீராடவாரீரென்னுடையநாயகரேயாடவாரீர். ஆட. (அ)

கள்ளமொன்றுமறியேனாடவாரீர்கைகலந்துகொண்டீரென்னோடாடவாரீர்
உள்ளபடியுரைக்கின்றேனாடவாரீரும்மாசைபொங்குகின்றதாடவாரீர்
தள்ளரியேனென்னோடிங்கேயாடவாரீர்தாழ்கிலிறையுந்தரியேனாடவாரீர்
எள்ளலறுத்தாண்டுகொண்டீராடவாரீரென்னுடையநாயகரேயாடவாரீர். ஆட. (கூ)

நச்சுகின்றேனிச்சலிங்கேயாடவாரீர்நாணமச்சம்விட்டேனென்னோடாடவாரீர்
விச்சையெலாந்தந்துகளித்தாடவாரீர்வியந்துரைத்தகருணையிதேயாடவாரீர்
எச்சுகமுமாகிநின்றீராடவாரீரெல்லாஞ்செயவல்லவரேயாடவாரீர்
இச்சைமயமாயிருந்தேனாடவாரீரென்னுடையநாயகரேயாடவாரீர். ஆட. (க0)

என்னுயிருக்குயிரானீராடவாரீரென்னறிவுக்கறிவானீராடவாரீர்
என்னுடையன்பிற்கலந்தீராடவாரீரென்னுடையுள்ளத்திருந்தீராடவாரீர்
என்னுரிமைத்தாயனையீராடவாரீரென்றனித்தந்தையரேயாடவாரீர்
என்னொருமைச்சற்குருவேயாடவாரீரென்னுடையநாயகரேயாடவாரீர். ஆட. (கக)

ஆடவாரீரென்னோடாடவாரீர்
அம்பலத்திலாடுகின்றீராடவாரீர்.

திருச்சிற்றம்பலம்.

---

## ஆனந்தமேலீடு

இராகம் - பியாகடை, அடதாளசாப்பு.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி

ஆடேடிபந்து ஆடேடிபந்து
ஆடேடிபந்து ஆடேடிபந்து.

சரணங்கள்.

வாழியென்றோழியென்வார்த்தைகேளென்றும்
மரணமில்லாவரம்பெற்றுக்கொண்டேன்
சூழியற்செஞ்சுடர்தோற்றுறகீழ்பாற
றாய்த்திசைநோக்கினேன்சோதிகழ்சித்தி

ஊழிதோறூழிநின்றுவென்நீயு
முன்னுதியேலிங்கேமன்னருளாணை
ஆழிகரத்தணிந்தாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. ஆடேடி. (க)

இசையாமற்போனவரெல்லாருநாண
விறவாப்பெருவரம்யான்பெற்றுக்கொண்டேன்
வசையாதுமில்லாதமேற்றிசைநோக்கி
வந்தேனென்றேழிநீவாழிகாண்வேறு
நசையாதேயென்னுடைநண்பதுவேண்டி
நன்மார்க்கமாஞ்சுத்தசன்மார்க்கந்தன்னில்
அசையாமல்நின்றிங்கேயாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. ஆடேடி. (உ)

இன்பாலேயுலகத்தாரெல்லாருங்காண
விறவாப்பெருவரம்யான்பெற்றுக்கொண்டேன்
தென்பாலேநோக்கினேன்சித்தாடுகின்ற
திருநாளிதுதொட்டுச்சேர்ந்ததுதோழி
துன்பாலேயசைந்ததுநீக்கியென்றேடே
சுத்தசனமார்க்கத்திலொதததவளாகி
அன்பாலேயறிவாலேயாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. ஆடேடி. (ங)

சதுமறையாகமசாத்திரமெல்லாஞ்
சந்தைப்படிப்புநஞ்சொந்தப்படிப்போ
விதுநெறிசுத்தசன்மார்க்கத்திற்சாகா
வித்தையைக்கற்றனனுத்தரமெனுமோர்
பொதுவளர்திசைநோக்கிவந்தனனென்றும்
பொன்றாமைவேண்டிடிலென்றேழிநீதான்
அதுவிதுவென்னுமலாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. ஆடேடி. (ச)

தப்பாலேசசத்தவர்சாவேதுணிந்தார்
தாமுளநாணநான்சாதலேத்தவிர்த்தே
யெப்பாலுமெககாலுமிருத்தலேபெற்றே
னென்றேழிவாழிநீயென்றேடுகூடி
துப்பாலேவிளங்கியசுத்தசன்மாக்கச்
சோதியென்றேதியவீதியைவிட்டே
யப்பாலேபோகாமலாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. ஆடேடி. (ரு)

வெங்கேதமரணத்தைவிடுவித்துவிட்டேன்
விசனமெலாங்கற்றென்னிச்சையின்வண்ணம்
எங்கேயுமாடுதற்கெய்தினேன்றோழி
யெனமொழிசத்தியமென்றுடுங்கூடி
இங்கேகளிப்பதுநன்றிந்தவுலகோ
ஏதக்குழியிலிழுக்குமதனால்
அங்கேபாராதேநீயாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. ஆடேடி. (௬)

சிவமேபொருளென்றறிவாலறிந்தேன்
செத்தாரைமீட்கின்றதிண்மையைப்பெற்றேன்
உவமேயமில்லாதவொருநிலைதன்னி
லொன்றிரண்டெனாதவுண்மையினின்றே
தவமேபுரிகின்றாரெல்லாருங்காணத்
தயவாலழைக்கின்றேனகயவாதேதோழி
அவமேபோகாதென்றோடாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. ஆடேடி. (௭)

துஞ்சாதநிலையொன்றுசுத்தசன்மார்க்கச்
சூழலிலுண்டதுசொல்லளவன்றே
எஞ்சாதவருளாலேயான்பெற்றுக்கொண்டே
னிறந்தாரையெல்லாமெழுப்புதல்வல்லேன்
விஞ்சாதவறிவாலேதோழிநீயிங்கே
வேதுசெய்மரணத்துக்கேதுசெயவோமென்றே
அஞ்சாமலென்றோடேயாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. ஆடேடி. (௮)

ஈரமுமன்புங்கொண்டினனருள்பெற்றே
னென்மார்க்கமிறவாதசன்மார்க்கந்தோழி
காரமுமிகுபுளிச்சாரமுந்துவர்ப்பும்
கைப்போடேயுப்போடேகசப்போடேகூடி
ஊரமுதுண்டுநீயொழியாதேயந்தோ
வூழிதோறூழியுமுலவாமைநல்கும்
ஆரமுதுண்டென்றோடாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. ஆடேடி. (௯)

துதிசெயுமுத்தருஞ்சித்தருங்காணச்
சுத்தசன்மார்க்கத்திலுத்தமஞானப்
பதிசெயுஞ்சித்திகள்பற்பலவாகப்
பாரிடைவானிடைப்பற்பலகாலம்

விதிசெயப்பெற்றனனின்றுதொட்டென்றும்
மெய்யருட்சோதியால்விளைவிப்பனீயவ்
வதிசயம்பார்க்கலாமாடேடிபந்து
வருட்பெருஞ்சோதிகண்டாடேடிபந்து. (௧௦)

ஆடேடிபந்து ஆடேடிபந்து
ஆடேடிபந்து ஆடேடிபந்து.

திருச்சிற்றம்பலம்.

## நெஞ்சொடுகிளத்தல்.

இராகம் இந்துஸ்தான்காபி, ஏகதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே
அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே.

சரணங்கள்.

வஞ்சமிலாநாம்வருந்திடலப்போதே
யஞ்சலென்பாரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (௧)

துய்யருட்பெருஞ்சோதியானம்முடை
அய்யரிதோதிருவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (௨)

மண்ணில்நமையாண்டவள்ளலார்நம்முடை
யண்ணலிதோதிருவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (௩)

இப்புவியிலநம்மையேன்றுகொண்டாண்டநம்
மப்பரிதோதிருவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (௪)

சித்தரெலாம்வல்லதேவாநம்மையாண்ட
வத்தரிதோதிருவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (௫)

சோதியருட்பெருஞ்சோதியானம்முடை
யாதியிதோதிருவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (௬)

தாண்டவனென்னைத்தான்றடுத்தாட்கொண்ட
வாண்டவனுரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (௭)

வன்பர்மனத்தைமதியாதவர்நம
தன்பரிதோதிருவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (௮)

தெருளுடையாரெலாஞ்செய்யவல்லார்திரு
வருளுடையாரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (௯)

நம்மையாட்கொள்ளநடம்புரிவார்நம
தம்மையினோடிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (க0)

தன்னையொப்பாரிற்சபைநடஞ்செய்கின்
ரன்னையொப்பாரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (கக)

பாடுகின்றார்கருப்பணைப்பினார்ஞானக்கூத்
தாடுகின்றாரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (கஉ)

காதரிப்பார்கட்கருட்காட்சிகொடுத்தார்நம்மை
யாதரிப்பாரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (கங)

நீளவல்லார்க்குமேல்நீளவல்லார்நம்மை
யாளவல்லாரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (கச)

இன்புடையார்நம்மிதயத்தமர்ந்தபே
ரன்புடையாரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (கரு)

உபயபதத்தைநம்முச்சிமேற்சூட்டிய
வபயரிதோதிருவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (கசு)

வேண்டுகொண்டாரென்னைமேனிலைக்கேற்றியே
யாண்டுகொண்டாரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (கஎ)

எச்சம்பெறேல்மகனேயென்றெனுள்ளுற்ற
வச்சந்தவிர்த்தவரம்பலத்திருக்கின்றார் அஞ்சாதே. (கஅ)

நமுதன்முதற்பலநன்மையுமாமஞ்ஞான
வமுதரிதோதிருவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (கக)

செடிகளைத்தவிர்த்தருட்செல்வமளிக்கின்ற
வடிகளிதோதிருவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (உ0)

விரசுலகெல்லாம்விரித்தைந்தொழில்தரு
மரசுடையாரிதோவம்பலத்திருக்கின்றார். அஞ்சாதே. (உக)

செறிவுடையாருளத்தேநடஞ்செய்கின்ற
வறிவுருவாரிதோவம்பலத்திருக்கின்றார். (உஉ)

அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே
அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே.

திருச்சிற்றம்பலம்.

## ஆநந்தக்களிப்பு.

இராகம், இந்துஸ்தானி - அனுஷிதகாளம்.

பல்லவி.

திருச்சிற்றம்பலம்.

ஞானமருந்திம்மருந்து - சுகம்
நல்கியசிற்சபாநாதமருந்து.

சரணங்கள்.

அருட்பெருஞ்சோதிமருந்து - என்னை - யைந்தொழில்செயதற்களித்தமருந்து
பொருட்பெரும்போகமருந்து-என்னைப்-புறத்துமகத்தும்புணர்ந்தமருந்து. ஞான. (க)

எல்லாஞ்செய்வல்லமருந்து - என்னு - ளென்றுமவிடாமலினிக்குமருந்து
சொல்லாலளவாமருந்து - சுயஞ் - சோதியருட்பெருஞ்சோதிமருந்து. ஞான. (உ)

காணாதுகாட்டுமருந்து - என்றன் - கையிற்பொற்கங்கணங்கட்டுமருந்து
ஆணிப்பெண்ணுமருந்து - அது - வாகிமணிமனறிலாடுமருந்து. ஞான. (ங)

சுத்தசன்மார்க்கமருந்து - அருட் - சோதிமலையிற்றுலங்குமருந்து
சித்துருவானமருந்து-என்னைச்-சித்தெலாஞ்செய்யச்செய்வித்தமருந்து. ஞான. (ச)

அன்பாலெளியமருந்து - மற்றை - ஐவர்க்குங்காணற்கரியமருந்து
என்பற்றிலோங்குமருந்து - என்னை - இன்பநிலையிலிருத்துமருந்து. ஞான. (ரு)

நாதாந்தநாட்டுமருந்து - பர - ஞானவெளியில்நடிக்குமருந்து
போதாந்தத்தெய்துமருந்து-என்னுள்-பொன்னடிகாட்டிப்புணர்ந்தமருந்து.ஞான. (சு)

ஆதியனாதிமருந்து - திரு - அம்பலத்தேநடமாடுமருந்து
சோதிமயமாமருந்து - என்னைச் - சோதியாதாண்டதுரியமருந்து. ஞான. (எ)

ஆறந்தத்தோங்குமருந்து - அதற் - கப்பாலுக்கப்பாலுமானமருந்து
ஊறந்தமில்லாமருந்து - எனக் - குள்ளேகலந்தவுறவாமருந்து. ஞான. (அ)

என்னுயிர்க்கன்பாமருந்து - கலந் - தென்னுயிர்க்குள்ளேயிருந்தமருந்து
என்னுயிர்காக்குமருந்து - என்றும் - என்னுயிராகியவின்பமருந்து. ஞான. (கூ)

என்னறிவுட்கொள்மருந்து - என்றும் - என்னறிவாகியிலங்குமருந்து
என்னறிவின்பமருந்து - என்னுள் - என்னறிவுக்கறிவென்னுமருந்து. ஞான. (க0)

என்குருவானமருந்து - என்றும் - என்றெய்வமாகியிருக்குமருந்து
என்னன்னையென்னுமருந்து-என்றும்-என்றந்தையாகியவின்பமருந்து. ஞான. (கக)

என்பெருவாழ்வாமருந்து - என்றும் - என்செல்வமாகியிருக்குமருந்து
என்னுயிர்நட்பாமருந்து - எனக் - கெட்டெட்டுசித்தியுமீந்தமருந்து. ஞான. (கஉ)

என்னிறையானமருந்து - மகிழ்ந் - தெனக்குத்தன்பொன்மேனியீந்தமருந்து
தன்னறிவாகுமருந்து - என்னைத் - தந்தமருந்தென்றன்சொந்தமருந்து. ஞான. (கங)

உள்ளகத்தினுள்ளாமருந்து - என்ற - னுயிருக்குறுதியுறவாமருந்து
தெள்ளத்தெளிக்குமருந்து - என்னைச் - சிவமாக்கிக்கொண்டசிவாயமருந்து. ஞான. (கச)

மெய்ப்பொருளென்னுமருந்து - எல்லா - வேதாகமத்தும்விளங்குமருந்து
கைப்பொருளானமருந்து - மூன்று - கண்கொண்டவென்னிருகண்ணுண்மருந்து. ஞான.

மதியில்விளைந்தமருந்து - யார்க்கு - மதிக்கப்படாதபொன்வண்ணமருந்து
கதிதருமின்பமருந்து - அருட் - கண்ணாலென்றனைக்கலந்தமருந்து. ஞான. (கசு)

கற்பூரச்சோதிமருந்து - பசுங் - கற்பூரநன்மணங்காட்டுமருந்து
பொற்பூவினோங்குமருந்து - என்ற - போதந்தவிர்த்தசிற்போதமருந்து. ஞான. (கஎ)

மேலைவெளியாமருந்து - நான - வேண்டுந்தோறெல்லாம்விளையுமருந்து
சாலைவிளக்குமருந்து - சுத்த - சமரசசன்மார்க்கசங்கமருந்து. ஞான. (கஅ)

என்னைத்தாங்குமருந்து - இங்கே - இறந்தாரையெல்லாமெழுப்புமருந்து
துன்னுமெய்ச்சோதிமருந்து - அருட் - சோதியாலென்னைத்துலக்குமருந்து. ஞான. (ககூ)

பொய்யார்க்கரிதாமருந்து - என்னைப் - புறத்துமகத்தும்புணர்ந்தமருந்து
கையிற்கிடைத்தமருந்து - சிவ - காமக்கொடியைக்கலந்தமருந்து. ஞான. (உ0)

ஆணவந்தீர்க்குமருந்து - பர - மானந்தத்தாண்டவமாடுமருந்து
மாணவவண்ணமருந்து - என்னை - வலியவழைத்தருளாக்குமருந்து. ஞான. (உக)

வானவானமருந்து - என்னை - மாமணிமேடைமேல்வைத்தமருந்து
ஊனந்தவிர்த்தமருந்து - கலந் - தூனாளேயினிக்கின்றவுண்மைமருந்து. ஞான. (உஉ)

மலையிலக்கானமருந்து - என்றன் - மறப்பைத்தவிர்த்தமெய்வாழ்க்கைமருந்து
தலைநலங்காட்டுமருந்து - எங்கும் - கணுகிக்காணுங்கனத்தமருந்து. ஞான. (உங)

அற்புதச்சோதிமருந்து - எல்லா - மாகியன்றாகியமர்ந்தமருந்து
தற்பதந்தந்தமருந்து - எங்கும் - தானேதானாகித்தனித்தமருந்து. ஞான. (உச)

தன்னையளித்தமருந்து - என்றுஞ் - சாகாதநல்வரந்தந்தமருந்து
பொன்னடியீந்தமருந்து - அருட் - போனகந்தந்தபுனிதமருந்து. ஞான. (உரு)

கண்ணுக்கினியமருந்து - என்றன் - கைப்பொருளாந்தங்கக்கட்டிமருந்து
எண்ணுக்கடங்காமருந்து - என்னை - ஏதக்குழிவிட்டெடுத்தமருந்து. ஞான. (உசு)

சுட்டப்படாதமருந்து - என்றன் - றூக்கமுஞ்சோர்வுந்தொலைத்தமருந்து
எட்டுதற்கொண்ணுமருந்து - நான் - எட்டிப்பிடிக்கவிசைந்தமருந்து. ஞான. (உஎ)

உன்னற்கரிதாமருந்து - எனக் - குள்ளும்புறத்துமுலாவுமருந்து
தன்னந்தனித்தமருந்து - சுத்த - சாக்கிராதீதச்சபேசமருந்து. ஞான. (உஅ)

ஒன்றிலொன்றானமருந்து - அந்த - ஒன்றிலிரண்டாகியோங்குமருந்து
அன்றிமூன்றானமருந்து - நான் - காகியைந்தாகியமர்ந்தமருந்து. ஞான. (உகூ)

வெளிக்குள்வெளியாமருந்து - எல்லா - வெளியுங்கடந்துவிளங்குமருந்து
ஒளிக்குளொளியாமருந்து - எல்லா - வொளியுந்தானாகியவுண்மைமருந்து. ஞான. (ங0)

ஆறுறுக்கப்பான் மருந்து - அதற் - கப்புறத்திரா றுக்கப்பான்மருந்து
ஏறுதியில்லாமருந்து - என்னை - எல்லாஞ்செயச்செய்த வின்பமருந்து. ஞான. (௰௧)

ஆரணத்தோங்குமருந்து - அரு - ளாகமமாகியண்ணிக்குமருந்து
காரணங்காட்டுமருந்து-எல்லாங்-கண்டமருந்தெனைக் கொண்டமருந்து.ஞான.(௰௨)

மலமைந்துநீக்குமருந்து - புவி - வானண்டமெல்லாமவ்வாகுமருந்து
நலமிக்கருளுமருந்து - தானே - நானாகித்தானாளுநாட்டுமருந்து. (௰௩)

ஞானமருந்திம்மருந்து - சுகம்
நல்கியசிற்சபாநாதமருந்து.

திருச்சிற்றம்பலம்.

## ஆநந்தக்களிப்பு.

இங்கிலீஷ்மெட்டு.

இராகம் - சங்கராபரணம் - ஏகதாளம்.

பல்லவி

திருச்சிற்றம்பலம்

சிவ சிவ சிவ சிவ சோதி - சிவ
சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சோதி
சிவ சிவ சிவ சிவ சோதி.

சரணங்கள்.

சிற்பரமாம்பரஞ்சோதி - அருட் - சித்தெலாமவல்லசிதம்பரச்சோதி
தற்பரதத்துவசோதி - என்னைத் - தாங்கிக்கொண்டருளியசிதசோதி. சிவ. (௧)

சித்துருவாஞ்சுயஞ்சோதி - எல்லாஞ் - செயதிடவல்லசித்பரசோதி
அத்துவிதானந்தச்சோதி-என்னை-யாட்கொண்டருளுஞ்சிற்றம்பலச்சோதி. சிவ. (௨)

சின்மயமாம்பெருஞ்சோதி - அருட் - செல்வமளிக்குஞ்சிதம்பரசோதி
தன்மயமாய்நிறைசோதி - என்னைத் - தந்தமெய்ச்சோதிசதானந்தச்சோதி சிவ. (௩)

ஆதியீறில்லாமுற்சோதி - அர - னாதியர்தம்மையளித்தபிறசோதி
ஓதியுணாவருஞ்சோதி - எல்லா - வுயிர்களிலுள்ளுமொளிர்கின்றசோதி. சிவ. (௪)

மன்னியபொன்வண்ணச்சோதி - சுக - வண்ணத்தாயபெருமாணிக்கச்சோதி
துன்னியவச்சிரச்சோதி - முத்துச் - சோதிமரகதச்சோதியுட்சோதி. சிவ. (௫)

பார்முதலைந்துமாஞ்சோதி - ஐந்திற் - பக்கமேல்கீழ்நடுப்பக்கமறியசோதி
ஓராம்பொறியுருச்சோதி - பொறிக் - குள்ளும்புறத்துமொளிர்கின்றசோதி. சிவ. (௬)

ஐம்புலமுந்தானஞ்சோதி - புலத் - தகத்தும்புறத்துமலர்ந்தொளிர்சோதி
பொய்ம்மயல்போக்குமுட்சோதி - மற்றைப் - பொறிபுலனுள்ளும்புறத்துமாஞ்சோதி.

மனமாதியெல்லாமாஞ்சோதி - அவை - வாழவகம்புறம்வாழ்கின்றசோதி
இனமானவுள்ளகச்சோதி - சூற்றம் - ஏறுதிறங்காதியக்குமோர்சோதி. சிவ. (௮)

முக்குணமும்மூன்றாஞ்சோதி - அவை - மூலபிணணியங்கமுடுக்கியசோதி
எக்குணத்துள்ளுமாஞ்சோதி - குணம் - எல்லாங்கடந்தேயிலங்கியசோதி. சிவ. (௯)

பகுதிமூன்றாகியசோதி - மூலப் - பகுதிகள்மூன்றும்படைத்தருள்சோதி
விகுதிபலவாக்குஞ்சோதி - சற்றும் - விகுதியொன்றின்றிவிளங்கியசோதி. சிவ. (௧௦)

காலமுதற்காட்டுஞ்சோதி - கால - காரணத்தப்பால்கடந்தொளிர்சோதி
கோலம்பலவாகுஞ்சோதி ஒன்றாய - குறிக்கப்படாச்சிற்குணப்பெருஞ்சோதி. சிவ. (௧௧)

தத்துவமெல்லாமாஞ்சோதி - அந்தத் - தத்துவமெல்லாந்தருவிக்குஞ்சோதி
அத்துவிதப்பெருஞ்சோதி - எல்லாம் - அருளில்விளங்கவமர்த்தியசோதி. சிவ. (௧௨)

சத்தாகவெல்லாமாஞ்சோதி - அவா - சத்திகளெல்லாந்தழைப்பிக்குஞ்சோதி
முத்தாநுபவச்சோதி - பர - முத்தியாஞ்சோதிமெய்ச்சித்தியாஞ்சோதி. சிவ. (௧௩)

ஆறந்தத்தேநிறைசோதி - அவை - அப்புறத்தப்பாலுமாகியசோதி
வீறும்பெருவெளிச்சோதி - மேலும் - வெட்டவெளியில்விளங்கியசோதி. சிவ. (௧௪)

பொருட்சோதியுட்சோதி - அண்ட - பிண்டங்களெல்லாம்பிறங்கியசோதி
வாரமுற்றோங்கியசோதி - மன - வாக்குக்கெட்டாததோர்மாமணிச்சோதி. சிவ. (௧௫)

ஒன்றானபூரணச்சோதி - அன்பில் - ஒன்றுதலுள்ளத்திலொன்றுதசோதி
என்றுமொளிர்கின்றசோதி - என்னுள் - என்றும்விளங்கியென்னுயிர்ச்சோதி. சிவ.

மெய்யேமெய்யாகியசோதி - சுத்த - வேதாந்தவீட்டில்விளங்கியசோதி
துய்யசிவானந்தச்சோதி - குரு - துரியத்தலத்தேதுலங்கியசோதி. சிவ. (௧௭)

சிவமயமாஞ்சுத்தசோதி - சுத்த - சித்தாந்தவீட்டிற்சிறந்தொளிர்சோதி
உவமையில்லாப்பெருஞ்சோதி என்னுள்ளேநிரம்பியொளிர்கின்றசோதி. சிவ. (௧௮)

என்னைத்தானாக்கியசோதி - இங்கே - இறந்தாரையெல்லாமெழுப்புமோர்சோதி
அன்னைக்குமிக்கருட்சோதி - என்னை - ஆண்டமுதந்தந்தவானந்தச்சோதி. சிவ. (௧௯)

சித்தஞ்சிவமாக்குஞ்சோதி - நான் - செய்தவத்தாற்றெரிந்தவுட்சோதி
புத்தமுதாகியசோதி - சுக - பூரணமாயொளிர்காரணச்சோதி. சிவ. (௨௦)

தம்பத்திலேற்றியசோதி - அப்பால் - சார்மணிமேடைமேறான்வைத்தசோதி
விம்பப்பெருவெளிச்சோதி - அங்கே - வீதியும்வீடும்விளக்கியசோதி. சிவ. (௨௧)

சுகமயமாகியசோதி - எல்லாச் - சோதியுமானசொரூபவுட்சோதி
அகமதந்தீர்த்தருள்சோதி - சச்சி - தானந்தசோதிசதானந்தசோதி. சிவ. (௨௨)

நித்தபரானந்தச்சோதி - சுத்த - நிரதிசயானந்தநித்தியச்சோதி
அத்துவிதானந்தச்சோதி - எல்லா - ஆனந்தவண்ணமுமாகியசோதி. சிவ. (௨௩)

பொய்யாதபுண்ணியசோதி - எல்லாப் - பொருளும்விளங்கப்புணர்த்தியசோதி
நையாதருள்செய்தசோதி - ஒரு - நாளுந்தானுமொன்றாய்நண்ணியசோதி. சிவ. (௨௪)

கண்ணிற்கலந்தருள்சோதி - உளக் - கண்ணுயிர்க்கண்ணருட்கண்ணுமாஞ்சோதி
எண்ணிறப்படாப்பெருஞ்சோதி - நான் - எண்ணியவண்ணமியற்றியசோதி. சிவ. ௨௫)

விந்துவொளிநடுச்சோதி - பர - விந்துவொளிக்குள்விளங்கியசோதி
நந்துயர்தீர்த்தருட்சோதி - பர - நாதாந்தநாட்டுக்குநாயகச்சோதி. சிவ. (௨௬)

தானன்றியொன்றிலாச் சோதி - என்னைத் - தன்மயமாக்கிய சத்தியச் சோதி
நானின்று கண்டதோர் சோதி - தானே-நானாகி வாழ்கின்ற நல்லியற் சோதி. சிவ. (உஎ)

தன்னிகரில்லதோர் சோதி - சுத்த - சன்மார்க்க சங்கந் தழுவிய சோதி, என்னுண்ணி
றைந்த மெய்ச்சோதி-என்னை-யைந்தொழில் செய்யென்றேவிய சோதி. சிவ. (உஅ)

அச்சந்தவிர்த்த மெய்ச்சோதி - என்னை - யாட்கொண்டருளிய வம்பலச் சோதி
இச்சையெலாந்தந்த சோதி-உயிர்க்-கிங்குமங்கென்றுமெல் லாகுமாஞ் சோதி. சிவ. (உகூ)

காலையில் நான்கண்ட சோதி - எல்லாங் - காட்சியும் நான்காணக் காட்டிய சோதி
ஞாலமும் வானுமாள் சோதி-என்னுள் - நானாகித் தானாகி நண்ணிய சோதி. சிவ (௩0)

ஏகாந்தமாகிய சோதி - என்னுள் - என்றும் பிரியா திருக்கின்ற சோதி
சாகாவரந்தந்த சோதி-என்னைத்-தானாக்கிக் கொண்டதோர் சத்தியச் சோதி. சிவ. (௩௧)

சுத்தசிவமயச் சோதி - என்றுஞ் - சோதிமணிமுடி சூட்டிய சோதி
சத்தியமாம் பெருஞ்சோதி - நானே - தானாகி யாளத் தயவுசெய் சோதி. (௩௨)

சிவசிவசிவசிவ சோதி - சிவ
சிவசிவசிவசிவசிவசிவ சோதி
சிவசிவசிவசிவ சோதி

திருச்சிற்றம்பலம்.

---

## ஆநந்தக்களிப்பு.

இராகம் - கமாஸ், ஆதிதாளம்.

பல்லவி

திருச்சிற்றம்பலம்

சோதியுட் சோதியுட் சோதி - சுத்த
சோதி சிவசோதி சோதியுட் சோதி
சோதியுட் சோதியுட் சோதி

சரணங்கள்.

சிவமே பொருளென்று தேற்றி - என்னைச் - சிவவெளி கோபுரஞ் சிகரத்திலேற்றிச்
சிவமாக்கிக் கொண்டது பாரீர் - திருச் - சிற்றம்பலத்தே திருநடச் சோதி. சோதி. (௧)

வித்தெலா மொன்றென்று காட்டி - அதில் - விளைவுபல வேறென்று காட்டிச்
சித்தெலாந் தந்தது பாரீர் - திருச் - சிற்றம்பலத்தே திருநடச் சோதி. சோதி. (௨)

சொல்வந்த வந்தங்களாறும் - ஒரு - சொல்லாலே யாமென்றச் சொல்லாலே வீறும்
செல்வங் கொடுத்தது பாரீர் - திருச் - சிற்றம்பலத்தே திருநடச் சோதி. சோதி. (௩)

தங்கோல வெனக்கோதிச் - சுத்த - சமரச சத்திய சன்மார்க்க நீதிச்
செங்கோ லளித்தது பாரீர் - திருச் - சிற்றம்பலத்தே திருநடச் சோதி. சோதி. (௪)

ஆபத்தை நீக்கிவிளா தத்தே - சற்று - மசையா மலவியா மலடியேனுளத்தே
தீபத்தை வைத்தது பாரீர் - திருச் - சிற்றம்பலத்தே திருநடச் சோதி. சோதி. (௫)

மெய்யொன்று சன்மார்க்கமே தான்-என்றும்-விளங்கப் படைப்பாதி மெய்த்தொழில் நீ
தான், செய்யென்று தந்தது பாரீர்-திருச்-சிற்றம்பலத்தே திருநடச் சோதி. சோதி. (௬)

என்பால் வருபவா கின்றே - அருளீகின்றே னீகின்றே னென்றே
தென்பா லிருந்தது பாரீர் - திருச் - சிற்றம்பலத்தே திருநடச் சோதி. சோதி. (௭)

துரியத்தலமூன்றின்மேலே - சுத்த - துரியப்பதியிலதுவத்தனாலே
தெரியத்தெரிவதுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௮)

பரைதூக்கிக்காட்டியகாலே - ஆதி - பரையிறக்கப்பாலப்பாலென்றுமேலே
இரைதூக்கிக்காட்டுதல்பாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௯)

தற்பரமேவடிவாகி - அது - தனைக்கடந்ததனியுருவாகிச்
சிற்பரத்துள்ளதுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௦)

நவவெளிநால்வகையாதி - ஒரு - நடுவெளிக்குள்ளேநடத்தியநீதி
சிவவெளியாமிதுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௧)

மேருவெற்புச்சியின்பாலே - நின்று - விளங்குமோர்தம்பத்தின்மேலுக்குமேலே
சேருமோர்மேடைமேற்பாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௨)

ஆரணவீதிக்கடையும் - சுத்த - ஆகமவீதிகளந்தக்கடையும்
சேரநடுக்கடைபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௩)

பாடன்மறைகளோர்கோடி - அருட் - பாதவுருவசொரூபங்கள்பாடித்
தேடவிருந்ததுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௪)

நீடுசிவாகமங்கோடி - அருள் - நேருறப்பாடியுமாடியுமோடித்
தேடவிருந்ததுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௫)

பதநெறியிற்செழித்தே - அன்பிற் - பாடுமெய்யன்பர்பதியிற்பழுத்தே
தித்தித்திருப்பதுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௬)

பித்தாமாயைக்குமேலே - சுத்த - பிரமவெளியினிற்பேரருளாலே
சித்தாடுகின்றதுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௭)

தருநெறியெல்லாமுளையாங்கும-சுத்த-சன்மார்க்கமென்றோர்தனிப்பேர்கொண்டோங்
குந்,திருநெறிக்கேசென்றுபாரீர்-திருச்-சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௮)

எம்பொருளெம்பொருளென்றே-சொல்லும்-எல்லாச்சமயத்துளெல்லார்க்குமொன்றே
செம்பொருளென்பதுபாரீர்-திருச்-சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௧௯)

சைவமுதலாகநாட்டும் - பல - சமயங்களெல்லாந்தனித்தனிகாட்டுந்
தெய்வமிதுவந்துபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௨௦)

எள்ளலில்வான்முதல்மண்ணும் - அமு - தெல்லாமிதிலோரிறையளவென்னும்
தெள்ளமுதாமிதுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௨௧)

எத்தாலுமாகாதேயம்மா - என்றே - எல்லாவுலகுமியம்புதல்சும்மா
செத்தாரைமீட்பதுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி (௨௨)

பிறந்துமிறந்துழன்றேனை - என்றும் - பிறவாதிறவாப்பெருமைதந்தூனைச்
சிறந்தொளிர்வித்ததுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௨௩)

வருவித்தவண்ணமுநானே - இந்த - மாநிலத்தேசெயும்வண்ணமுநானே
தெரிவித்தருளிற்றுப்பாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௨௪)

பாரிடம்வானிடமற்றும் - இடம் - பற்றியமுத்தர்கள்சித்தர்கள்முற்றும்
சேரிடமாமிதுபாரீர் - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (௨௫)

உய்பிள்ளைபற்பலராவல் - கொண்டே - யுலகத்திருப்பவிங்கென்னைதன்னேவல்
செய்பிள்ளையாக்கிற்றுப்பாரீர - திருச-சிற்றம்பலததேதிருநடச்சோதி. சோதி. (உசு)

உருவுமுணாவுஞ்செய்நன்றி - அறி - வுளமுமெனக்கேயுதவியதனறித்
திருவுங்கொடுத்ததுபாரீர - திருச் - சிற்றம்பலததேதிருநடசசோதி. சோதி. (உஎ)

எண்ணியவெண்ணங்களெல்லாம் - நான் - எண்ணியவாறேயினிதுதந்தென்னைத்
திண்ணியனாக்கிற்றுப்பாரீர - திருச் - சிற்றம்பலத்தேதிருநடச்சோதி. சோதி. (உஅ)

பேருலகெல்லாமதிக்கத் - தன் - பிள்ளையென்றென்னைப்பெயரிட்டழைததே
சீருறச்செய்ததுபாரீர் - திருச் - சிற்றம்பலததேதிருநடசசோதி. (உகூ)

சோதியுட்சோதியுட்சோதி-சுத்த
சோதிசிவச்சோதிசோதியுட்சோதி
சோதியுட்சோதியுட்சோதி.

திருசசிறறம்பலம்.

# கீர்த்தனைகள்.

இராகம், கல்யாணி - அடதாளம்.

பல்லவி.

திருச்சிற்றம்பலம்.

இதுநல்லதருணம - அருள்செய்ய
இதுநல்லதருணம்.

அநுபல்லவி.

பொதுநல்லநடம்வல்லபுண்ணியரேகேளும்
பொய்யேதுஞ்சொல்கிலேனமெய்யேபுகல்கின்றேன். (இது)

சரணங்கள்.

மதித்தசமயமதவழக்கெல்லா மாய்ந்தது
வருணச்சிரமமெனுமயக்கமுஞ் சாய்ந்தது
கொதித்தலோகாசாரககொதிப்பெலலா மொழிந்தது
கொலையுங்களவுமறறைப்புலையு மழிந்தது. இது. (க)

குறித்தவேதாகமக்கூச்சலு மடங்கிற்று
கொதிததமனமுருட்டுக்குரங்கு முடங்கிற்று
வெறித்த ... வெவ்வினைகளும்வெந்து குலைந்தது
விநதைசெ... கொடுமாயைச்சந்தையுங் கலைந்தது. இது. (உ)

கோபமுங்காமமுங்குடிகெட்டுப் போயிற்று
கொடியவோராங்காரம்பொடிபொடி யாயிற்று
தாபமுஞ்சோபமுந்தான்றானே சென்றது
தத்துவமெல்லாமென்றன்வச நின்றது. இது. (ந)

கரையாவெனதுமனக்கல்லுங் கரைந்தது
கலந்துகொளற்கென்கருத்ததும் விரைந்தது
புரையாநிலையிலென்புந்தியுந் தழைத்தது
பொய்ப்படாக்காதல்ததும்பிமேற் பொங்கிற்று. (௪)

இதுநல்லதருணம் - அருள்செய்ய
இதுநல்லதருணம்.

திருச்சிற்றம்பலம்.

இராகம். உசேனி - அடதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

என்னபுண்ணியஞ்செய்தேனோ - அம்மாநான்
என்னபுண்ணியஞ்செய்தேனோ.

அநுபல்லவி.

மன்னர்நாதரம்பலவாவந்தாவந்தாரென்றுதிருச்
சின்னநாதமெனவிரண்டுசெவிகளினுட்சொல்கின்றதே. (என்ன)

சரணங்கள்.

பொருளுன்முகனுமாலுந்தெருளுன்மறையுநாளும்
போற்றுஞ்சிற்றம்பலத்தேயேறறுமணிவிளக்காய்
அருளுடகம்புரியுங்கருணாநிதியருன்னை
யாளவந்தாவந்தாரெனநெககாளநாதஞ்சொல்கின்றதே. (என்ன) (௧)

பாடியநல்லோர்தமக்கேநாடியதெல்லாமளிப்பார்
பத்திவலையுட்படுவோர்சத்தியநித்தியமன்றில்
ஆடியபொறபாதாவேதந்தேடியசிற்போதருன்னை
அணையவந்தார்வந்தாரெனறேயிணையில்நாதஞ்சொல்கின்றதே. (என்ன) (௨)

எந்தரமுட்கொண்டஞானசுந்தரரென்மணவாள
ரெல்லாஞ்செயவல்லசித்தாநல்லோருளத்தமர்ந்தா
மந்திரமாமன்றிலின்பநந்தநடராசருன்னை
மருவவந்தார்வந்தாரென்றுதெருவில்நாதஞ்சொல்கின்றதே. (என்ன) (௩)

ஓதியெந்தவிதத்தாலும்வேதியனுந்தேர்வரியா
ரோங்காரபஞ்சகத்தேபாஙகாகநடிககின்றார்
ஆதியந்தங்காண்பரியசோதிசுயஞ்சோதியுன்னோ
டாடவந்தாவந்தாரென்றேநாடிநாதஞ்சொல்கின்றதே. (என்ன) (௪)

அற்புதப்பேரழகாளர்சொற்பதங்கடந்துநின்று
ரன்பரெலாநதொழமன்றிலின்பநடம்புரிகின்றோர் ஆடி. (௧)
சிற்பரரெல்லாமும்வல்லதற்பரர்விரைந்திங்குன்னைச் பாதம்
சேரவந்தார்வந்தாரென்றோங்காரநாதஞ்சொல்கின்றதே. ஆடி. (௨)

ஆரணர்காரணரெல்லாம்பூரணரென்றேதந்தின்ற
வையர்திருவம்பலவாமெய்யரெல்லாமவல்லசித்தா
காரணமுங்காரியமுந்தாங்ணிநீயாகவுனைக்
காணவந்தாரவந்தாரென்றேவேணுநாதஞ்சொல்கின்றதே. (என்ன) (சா)

பாகாரமொழியாள்சிவகாமவல்லிநாளும்
பார்த்தாடமணிமன்றில்கூத்தாடுகின்றநித்தர்
வாகாவுனக்கேயென்றுஞ்சாகாவரங்கொடுக்க
வலியவந்தார்வந்தாரென்றேவலியநாதஞ்சொல்கின்றதே. (எ)

என்னபுண்ணியஞ்செய்தேனோ - அம்மாநான்
என்னபுண்ணியஞ்செய்தேனோ.

திருச்சிற்றம்பலம்.

---

இராகம் - பியாகடை, அடதாளசாப்பு.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

வருவாரழைத்துவாடி-வடலூர்வடதிசைக்கே
வந்தாற்பெறலாம்நல்லவரமே.

அநுபல்லவி.

திருவார்பொன்னம்பலத்தேசெழிக்குங்குஞ்சிதபாதா
சிவசிதம்பரபோதாதெய்வச்சபாநாதா. வரு.

சரணங்கள்.

சிந்தைகளிக்கக்கண்டுசிவானந்த மதுவுண்டு
தெளிந்தோரெல்லாருந்தொண்டுசெய்யப்பவுரி கொண்டு
இந்தவெளியில்நடமிடத்துணிந்தீரே யங்கே
யிதைவிடப்பெருவெளியிருக்குதென்று விங்கே. வரு. (க)

இடக்கிலாமலிருக்கவிட்டுமுண்டுநடஞ் செய்ய
விங்கம்பலமொன்றங்கேயெட்டம்பலமுண் டைய
ஒடுக்கிலிருப்பதென்னவுளவுகண்டுகொள்வீ ரென்று
லுண்மையிதுவஞ்சமல்லவும்மேலாணையென்று சொன்னால். வரு. (உ)

மெல்லியல்சிவகாமவல்லியுடன் களித்து
விளையாடவுமெங்கள்வினையோடவு மொளித்து
எல்லையில்இன்பந்தரவும்நல்லசமயந்தா னீது
விங்குமங்குநடமாடியிருக்கலாமென்ற போது. (ங)

வருவாரழைத்துவாடிவடலூர்வடதிசைக்கே
வந்தாற்பெறலாம்நல்லவரமே.

திருச்சிற்றம்பலம்.

---

கோபமுங்காட
கொடியவோராங்காரமு
தாபமுஞ்சோபமுந்தான்றுனே
தக்கவமெல்லாமென்றன்வச

இராகம், பைரவி - ரூபகதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

இவர்க்குமெனக்கும் பெருவழக்கிருக்கின்றது
என்றுநீராவழக்குக்காணடி.

அநுபல்லவி.

எவர்க்கும்பெரியவர்பொன்னம்பலந்தேநடம்
இட்டாரெனக்குமாலையிட்டாரிதோவந்தார். இவர்.

சரணங்கள்.

அன்றிதோவருகின்றேனென்றுபோனவ ரங்கே
யாரசெய்ததடையாலோவிருந்தாரென்கையிற் சங்கே
இன்றுதங்கையிறகொண்டேவந்துநிற்கின்று ரிங்கே
யிந்தக்கதவைமூடுஇவர்போவதினி யெங்கே. இவர். (க)

அவரவருலகத்தேயறிந்தலர்தூற்றப் பட்டே
னன்றுபோனவரின்றுவந்துநிற்கின்றார் கெட்டேன்
இவர்சூதையறியாதேமுன்னமயேமாந்து விட்டே
னிந்தக்கதவைமூடுஇனியெங்கும்போக வொட்டேன். இவர். (உ)

சின்னவயதிலென்னைச்சேர்ந்தார்புன்னகை யோடு
சென்றார்தயவாலின்றுவந்தாரிவர்தகா நீடு
என்னைவிட்டினியிவரெப்படிபோவா ரோடு
இந்தக்கதவைமூடுஇரட்டைத்தாட்கோலைப் போடு. (ங)

இவர்க்குமெனக்கும் பெருவழக்கிருக்கின்றது
என்றுநீராவழக்குக்காணடி

திருச்சிற்றம்பலம்.

---

இராகம். தன்யாசி - ரூபகதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

ஆடியபாதமன்றாடியபாதம்
ஆடியபாதம்நின்றாடியபாதம்.

சரணங்கள்.

பாடியவேதங்கள்தேடியபாதம்பத்திசெய்பத்தர்க்குத்தித்திக்கும்பாதம்
நாடியமாதவர்நேடியபாதம்நாதாந்தநாட்டுக்குநாயகபாதம். ஆடி. (க)

தீராதவல்வினைதீர்க்கின்றபாதம்தெய்வங்களெல்லாந்தெரிசிக்கும்பாதம்
வாராவரமாகிவந்தபொற்பாதம்வஞ்சமனத்தில்வசியாதபாதம். ஆடி. (உ)

ஆராவமுதாகியெண்ணிக்கும்பாதமன்பருளத்தேயமர்ந்தருள்பாதம்
நாராயணன்விழிநண்ணியபாதம்நான்புனைபாடல்நயந்தபொற்பாதம். ஆடி. (௩)

நல்லவரெல்லாம்நயக்கின்றபாதம்நாதமுடிவில்நடிக்கின்றபாதம்
வல்லவர்சொல்லெல்லாம்வல்லபொற்பாதம்மந்திரயந்திரதந்திரபாதம். ஆடி. (௪)

எச்சமயத்துமிலங்கியபாதமெள்ளுக்குளெண்ணெய்போலெங்குமாம்பாதம்
அச்சந்தவிர்த்தென்னையாட்கொண்டபாதமானந்தநாட்டேகாதிபதிபாதம். ஆடி. (௫)

தேவர்களெல்லாருஞ்சிந்திக்கும்பாதந்தெள்ளமுதாயுளந்தித்திக்கும்பாதம்
மூவருங்காணாமுழுமுதற்பாதம்முப்பாழுக்கப்பால்முளைத்தபொற்பாதம். ஆடி. (௬)

துரியவெளிக்கேயுரியபொற்பாதம்சுகமயமாகியசுந்தரபாதம்
பெரியபொருளென்றுபேசும்பொற்பாதம்பேறெல்லாந்தந்தபெரும்புகழ்ப்பாதம். ஆடி.

சாகாவரந்தந்ததாரகபாதம்சச்சிதானந்தசதோதயபாதம்
தேகாதியெல்லாஞ்சிருட்டிக்கும்பாதந்திதிமுதலைந்தொழில்செய்கின்றபாதம். ஆடி.

ஓங்காரபீடத்தொளிர்கின்றபாதமொன்றாயிரண்டாகியோங்கியபாதம்
தூங்காததூக்கத்திற்றூக்கியபாதந்துரியதிலூன்றித்துலங்கியபாதம். ஆடி. (௯)

ஐவண்ணமுங்கொண்டவற்புதப்பாதமபயரெல்லார்க்குமமுதானபாதம்
கைவண்ணநெல்லிக்கனியாகும்பாதங்கண்ணுங்கருத்துங்கலந்தபொற்பாதம். ஆடி.

ஆருயிர்க்காதாரமாகியபாதமண்டபிண்டங்களளிக்கின்றபாதம்
சாருயிர்க்கின்பந்தருகின்றபாதஞ்சத்தியஞானதயாநிதிபாதம். ஆடி. (௧௧)

தாங்கியெனைப்பெற்றதாயாகும்பாதந்தந்தையுமாகித்தயவுசெய்பாதம்
ஓங்கியென்னுள்ளேயுறைகின்றபாதமுண்மைவிளங்கவுரைத்தபொற்பாதம். ஆடி.

எண்ணியவாறேயெனக்கருள்பாதமிறவாநிலையிலிருத்தியபாதம்
புண்ணியர்கையுட்பொருளாகும்பாதம்பொய்யருளத்திற்பொருந்தாதபாதம். ஆடி.

ஆறந்தத்துள்ளுமமர்ந்தபொற்பாதமாதியநாதியுமாகியபாதம்
மாறந்தமில்லாவென்வாழ்முதற்பாதம்மணமுதலைந்தாய்வழங்கியபாதம். ஆடி. (௧௪)

அருட்பெருஞ்சோதியதாகியபாதமம்மையுமப்பனுமாகியபாதம்
பொருட்பெரும்போகம்புணர்த்தியபாதம்பொன்வண்ணமாகியபுண்ணியபாதம். ஆடி.

காரணவேதியர்நாடரும்பாதமநான்றவத்தாற்பெற்றநற்றுணைப்பாதம்
ஆரணமாகமம்போற்றியபாதமாசைவிட்டார்க்கேயணிமையாம்பாதம். ஆடி. (௧௫)

ஆடியபாதமன்றாடியபாதம்
ஆடியபாதமின்றாடியபாதம்.

திருச்சிற்றம்பலம்.

—

இராகம்-தோடி-ஆதிதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

அபயம் அபயம் அபயம்.

சரணங்கள்.

உபயமதாயென்னுறவாய்ச்சிதம்பர
சபையில்நடஞ்செயுஞ்சாமிபாதத்திற்கே. அபயம். (க)

எம்பலத்தாலெம்மையேன்றுகொளத்தில்லை
யம்பலத்தாடுமெம்மையாபாதத்திற்கே. அபயம். (உ)

தவசிதம்பரமாகித்தன்மயமாச்செயுஞ்
சிவசிதம்பரமகாதேவாபாதத்திற்கே. அபயம். (ங)

ஒன்றும்பதத்திற்குரியபொருளாகியே
யென்றுமென்னுள்ளத்தினிக்கும்பாதத்திற்கே அபயம். (ச)

வானந்தமாநிலைமன்றிடையென்றுநின்
ருனந்தத்தாண்டவமாடும்பாதத்திற்கே. அபயம். (ரு)

நாராயணனொடுநான்முகனுதியா
பாராயணஞ்செயும்பதுமபாதத்திற்கே. அபயம். (சு)

அனபாசெயும்பிழையாயிரமும்பொறுத்த
தின்பமளிக்குநம்மீசபாதத்திற்கே. அபயம். (எ)

குற்றஞ்செயினுங்குணமாகக்கொண்டுநம்
மற்றந்தவிர்க்குமெம்மப்பாபாதத்திற்கே. அபயம். (அ)

செம்பொருளாகிச்சிதம்பரத்தேயென்றும்
நம்பொருளானநடேசாபாதத்திற்கே. அபயம். (கூ)

வெச்சென்றமாயைவினையாதியால்வந்த
அச்சந்தவிர்க்குநம்மையர்பாதத்திற்கே. அபயம். (க0)

எண்ணியவெண்ணங்களெல்லாமுடிக்குநம்
புண்ணியனாந்தெய்வப்பொன்னடிப்போதுக்கே. அபயம். (கக)

மன்னம்பரத்தேவடிவில்வடிவாகிப்
பொன்னம்பலத்தாடும்பொன்னடிப்போதுக்கே. அபயம். (கஉ)

நாதமுடியில்நடம்புரிதன்பாக்குப்
போதமளிக்கின்றபொன்னடிப்போதுக்கே. அபயம். (கங)

உச்சிதாழ்கின்றவுறவோருறவான
சச்சிதானந்தத்தனிநடப்போதுக்கே. அபயம். (கச)

சித்தமுமுள்ளமுந்தித்தித்தினிக்கின்ற
புத்தமுதாகியபொன்னடிப்போதுக்கே. (கரு)

அபயம் அபயம் அபயம்.

திருச்சிற்றம்பலம்.

இராகம், தாபார் - ரூபகதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.*

அற்புதம் அற்புதமே - அருள் - அற்புதம் அற்புதமே.

சரணங்கள்.

சிற்பதம்பொற்பதஞ்சேரசிறந்தது
    சித்தாடுகின்றதிருநாள்பிறந்தது
கற்பதநெஞ்சககரிசுதுறந்தது
    கற்றபொய்ந்நூல்கள்கணத்தேமறந்தது. அற்புதம். (க)

செத்தாரெழுகின்றதிருநாளடுத்தது
    சிவநெறியொன்றேயெங்குந்தலையெடுத்தது
இத்தாரணிமுதல்வானுமுடுத்தது
    விறவாவரந்தானெனக்குக்கொடுத்தது. அற்புதம். (உ)

ஆனந்தநாடகமாடுதல்சார்ந்தது
    அடுத்ததருணமிதுவாகநேர்ந்தது
ஈனந்தமாயையிருள்வினைசோர்ந்தது
    இன்னருட்சோதியென்னுள்ளத்திலார்ந்தது. அற்புதம். (ந)

சத்தியஞானசபையெனனுட்கண்டனன்
    சன்மார்க்கசித்தியைநான்பெற்றுக்கொண்டனன்
நித்தியஞானநிறையமுதுண்டனன்
    நிந்தையுலகியற்சந்தையைவிண்டனன். அற்புதம்- (ச)

வஞ்சகரஞ்சினார்வாய்மூடிச்சென்றனர்
    வந்துதிருமபவும்வாயிலினின்றனர்
தஞ்சமெமக்கருள்சாமிநீயென்றனர்
    சன்மார்க்கசங்கத்தவர்களேவென்றனர். அற்புதம். (ரு)

புறங்கூறினாரெலாம்புல்லெனப்போயினர்
    பொற்படிக்கீழ்ப்புறமீளவுமேயினர்
மறங்கூறினோமென்செய்வோமென்றுகூயினர்
    வாழியவென்றுசொல்வாயினராயினர். அற்புதம். (சா)

வெவ்வினைக்காடெலாம்வேரொடுவெந்தது
    வெய்யமாமாயைவிரிவற்றுநொந்தது
செவ்வியஞானஞ்சிறப்புறவந்தது
    சித்திகள்யாவையுஞ்செய்திடத்தந்தது. அற்புதம். (எ)

சாதிசமயசசழககெலாமறறது
சன்மார்ககஞானசபைநிலெபெற்றது
மேதினியிற்சாகாதவிததைதயைககற்றது
மெயயருட்சோதியெனனுளளத்திலுறறது. (அ)

அறபுதம் அற்புதமே - அருள் - அற்புதம் அறபுதமே.

திருசசிறறமபலம்.

---

இராகம், எதுகுலகாம்போதி - அடதாளம் உசி.

திருச்சிற்றம்பலம்.

பலலவி.

ஆணிப்பொன்னமபலத்தேகண்டகாட்சிகள்
அறபுதக்காடசியடி - அமமா - அறபுதககாட்சியடி.

சரணஙகள.

சோதிமலெயொன்றுதோனறிறறதிலொரு
வீதியுண்டாசசுதடி - அமமா
வீதியுண்டாசசுதடி. ஆணி. (க)

வீதியிற்செனறேன்யவீதிநடுவொரு
மேடையிருநததடி - அம்மா
மேடையிருநததடி. ஆணி. (உ)

மேடைமேலேறினேன்மேடைமேலஙகொரு
கூடமிருநததடி - அமமா
கூடமிருநததடி. ஆணி. (ங)

கூடததைநாடவககூடமேலேழநிலெ
மாடமிருநததடி - அம்மா
மாடமிருநததடி. ஆணி. (ச)

ஏழ்நிலெககுளளுமிருநதவதிசயம்
என்னெனறுசொல்வனடி - அம்மா
எனனென்றுசொல்வனடி. ஆணி. (ரு)

ஓரநிலெதனனிலொளிமுததுவெண்மணி
சீரநிலமாசசுதடி - அம்மா
சீர்நிலமாச்சுதடி. ஆணி. (சு)

பாரோர்நிலெயிற்கருநீலஞ்செய்ய
பவளமதாச்சுதடி - அம்மா
பவளமதாச்சுதடி. ஆணி. (எ)

மற்றோர்நிலையில்மரகதப்பச்சைசெம்
மாணிக்கமாச்சுதடி - அம்மா
மாணிக்கமாச்சுதடி. ஆணி. (அ)

பின்னோர்நிலையிற்பெருமுத்துவச்சிரப்
பேர்மணியாச்சுதடி - அம்மா
பேரமணியாச்சுதடி. ஆணி. (கூ)

வேறோர்நிலையில்மிகும்பவளத்திரள்
வெண்மணியாச்சுதடி - அம்மா
வெண்மணியாச்சுதடி. ஆணி. (க0)

புகலோர்நிலையிற்பொருந்தியபன்மணி
பொன்மணியாச்சுதடி - அம்மா
பொன்மணியாச்சுதடி. ஆணி. (கக)

பதியோர்நிலையிற்பகாமணியெல்லாம்
படிகமதாசசுதடி - அமமா
படிகமதாச்சுதடி. ஆணி. (கஉ)

ஏழ்நிலைமேலேயிருந்ததோர்தம்ப
மிசைந்தபொற்றம்படி - அம்மா
விசைநதபொற்றம்பமடி. ஆணி. (கந)

பொற்றம்பங்கண்டேறும்போதுநான்கண்ட
புதுமையென்சொல்வனடி - அம்மா
புதுமையெனசொல்வனடி. ஆணி. (கச)

ஏறும்போதங்கேயெதிர்ந்தவகைசொல
வென்னளவல்லவடி - அம்மா
வென்னளவல்லவடி. ஆணி. (கரு)

ஆங்காங்கேசத்திகளாயிரமாயிர
மாகவந்தார்களடி - அம்மா
ஆகவந்தார்களடி. ஆணி. (கசு)

வந்துமயககமயஙகாமல்நானருள்
வல்லபம்பெற்றேனடி - அம்மா
வல்லபம்பெற்றேனடி. ஆணி. (கஎ)

வல்லபத்தாலந்தமாதம்பத்தேறி
மணிமுடிகண்டேனடி - அம்மா
மணிமுடிகண்டேனடி. ஆணி. (கஅ)

மணிமுடிமேலோர்கொடுமுடிநின்றுநா
மற்றதுகண்டேனடி - அம்மா
மற்றதுகண்டேனடி. ஆணி. (௧௯)

கொடுமுடிமேலாயிரத்தெட்டுமாற்றுப்பொற்
கோயிலிருந்ததடி - அம்மா
கோயிலிருந்ததடி. ஆணி. (௨0)

கோயிலைக்கண்டங்கேகோபுரவாயிலிற்
கூசாதுசென்றேனடி - அம்மா
கூசாதுசென்றேனடி. ஆணி. (௨௧)

கோபுரவாயிலுட்சத்திகள்சத்தர்கள்
கோடிபலகோடியடி - அம்மா
கோடிபல்கோடியடி. ஆணி. (௨௨)

ஆங்கவர்வண்ணம்வெள்வண்ணஞ்செவ்வண்ணமுன்
ஐவண்ணமாகுமடி - அம்மா
ஐவண்ணமாகுமடி. ஆணி. (௨௩)

அங்கவரெல்லாமிங்காரிவரென்னவு
மப்பாலேசென்றேனடி - அம்மா
அப்பாலேசென்றேனடி. ஆணி. (௨௪)

அப்பாலேசென்றேனங்கோர்திருவாயிலில்
ஐவரிருந்தாரடி - அம்மா
ஐவரிருந்தாரடி. ஆணி. (௨௫)

மற்றவர்நின்றுவழிகாட்டமேலோர்
மணிவாயிலுற்றேனடி - அம்மா
மணிவாயிலுற்றேனடி. ஆணி. (௨௬)

மன்னுமவ்வாயிலிற்பெண்ணோடாணாக
இருவரிருந்தாரடி - அம்மா
இருவரிருந்தாரடி. ஆணி. (௨௭)

அங்கவர்காட்டவனுக்கத்திருவாயில்
அன்போடுகண்டேனடி - அம்மா
அன்போடுகண்டேனடி. ஆணி. (௨௮)

அத்திருவாயிலிலானந்தவல்லியென்
னம்மையிருந்தாளடி - அம்மா
அம்மையிருந்தாளடி. ஆணி. (௨௯)

அம்மையைக்கண்டேனவளருள்கொண்டேன
அமுதமுமுண்டேனடி - அம்மா
அமுதமுமுண்டேனடி. ஆணி. (௩0)

தாங்குமவளருளாலேநடராஜர்
சந்நிதிகண்டேனடி - அம்மா
சந்நிதிகண்டேனடி. ஆணி. (௩க)

சந்நிதியிற்சென்றுநான்பெறறபேறது
சாமியறிவாரடி - அம்மா
சாமியறிவாரடி. (௩உ)

ஆணிப்பொன்னம்பலத்தேகண்டகாட்சிகள
அற்புதக்காட்சியடி - அம்மா - அறபுதககாட்சியடி.

திருச்சிற்றம்பலம்.

இராகம், எதுகுலகாம்போதி அடதாளம் உசி.

திருச்சிற்றம்பலம்.

வானத்தின்மீதுமயிலாடககண்டேன்
மயில்குயிலாச்சுதடி - அக்கசகி
மயில்குயிலாச்சுதடி. (க)

துள்ளலவிட்டுதொடஙகினேன்மனறுமெ
வள்ளலைககணடேனடி - அககசகி
வள்ளலைக்கணடேனடி. (உ)

சாதிசமயச்சழக்கைவிட்டேனருட்
சோதியைககண்டேனடி - அக்கசகி
சோதியைக்கண்டேனடி. (௩)

பொய்யையொழிததுப்புறபபட்டேன்மனறுமெ
ஐயரைக்கணடேனடி - அக்கசகி
ஐயரைக்கண்டேனடி. (சு)

திருச்சிறறம்பலம

# நாமாவளி.

திருச்சிற்றம்பலம்

அம்பலத் தரசே யருமருந் தே
யானந்தத் தேனே யருள்விருந் தே (௧)

பொதுநடத் தரசே புண்ணிய னே
புலவரெல் லாம்புகழ் கண்ணிய னே. (௨)

சிவசிவ சிவசிவ சின்மய தேஜா
சிவசுந் தரகுஞ் சிதநட ராஜா (௩)

மலைதரு மகளே மடமயி லே
மதிமுக வமுதே யிளங்குயி லே (௪)

ஆனந்தக் கொடியே யிளம்பிடி யே
அற்புதத் தேனே மலைமா னே. (௫)

நடனவி லேகப ரம்பர தேசா
நடனசபேச சிதம்பர நாதா (௬)

ஹரிபிரமாதியர் தேடிய நாதா
அரகரசிவசிவ ஆடிய பாதா (௭)

அந்தண வந்தனை யம்பர பாதா
அம்பலநம்பா வம்பிகை பாகா (௮)

அம்பரவிம்ப சிதம்பர நாதா
அஞ்சிதரஞ்சித குஞ்சித பாதா (௯)

தந்திரமந்திர யந்திர பாதா
சங்கரசங்கர சங்கர நாதா (௧௰)

கருணாநிதியே சபாபதி யே
கதிமாநிதியே பசுபதி யே (௧௧)

சபாபதிபாதம் தபோபிரசாதம்
தயாநிதிபோதம் சதோதயவேதம். (௧௨)

கனகசிதம்பர கங்கரபுரஹர
அனகபரம்பர சங்கரஹரஹர (௧௩)

சகலகலாண்ட சராசரகாரண
சகுணசிவாண்ட பராபரபூரண (௧௪)

சிதம்ப்ரகாசா பரம்பிரகாசா
சிதம்பரேசா சுயம்பிரகாசா. (௧௫)

சோதிசோதிசோதி சுயஞ்சோதிசோதிசோதிபரம்
சோதிசோதிசோதி யருட்சோதிசோதிசோதிசிவம் (௧௬)

அருட்பிரகாசம்பரப்பிரகாசம்
அகப்பிரகாசம்சிவப்பிரகாசம். (கஎ)

நடப்பிரகாசம்தவப்பிரகாசம்
நவப்பிரகாசம்சிவப்பிரகாசம். (கஅ)

போகஞ்சுகபோகஞ்சிவபோகம்மதுநித்தியம்
ஏகஞ்சிவமேகஞ்சிவமேகமிதுசத்தியம். (கசு)

இக்கரைகடந்திடிலக்கரையே
இருப்பதுசிதம்பரசாககரையே. (உ0)

என்னுயிருடம்பொடுசேத்தமுதே
இனிப்பதுநடராசபுத்தமுதே. (உக)

நல்மங்கலமுறுமம்பலநடனம்மதுநடனம்
பலநன்கருள்சிவசங்கரபடனம்மதுபடனம். (உஉ)

ஐயாதிருச்சபையாடகமே
ஆடுதலானந்தநாடகமே. (உங)

கனகாகரபுரஹரசிரகரதர
கருணாகரபரசுரவரஹரஹர. (உச)

கனகசபாபதிபசுபதிநவபதி
அனகவுமாபதியதிபதிசிவபதி (உரு)

உத்தரஞானசிதம்பரமே
சித்தியெலாந்தருமம்பரமே. (உசு)

கருணம்பரவரகரசிவபவ
அருணம்பரதரஹரஹரசிவசிவ. (உஎ)

அம்பலவாசிவமாதேவா
வம்பலவாவிங்குவாவாவா. (உஅ)

நடராசனெல்லார்க்குநல்லவனே
நல்லவெலாஞ்செயவல்லவனே. (உகூ)

ஆனந்தநாடகங்கண்டோமேபர
மானந்தபோனகங்கொண்டேமே. (ஙo)

வேதாந்தபராம்பரசவுசய
நாதாந்தநடாம்பரஜயஜய. (ஙக)

ஏகாந்தசாவேசசமோதம
யோகாந்தநடேசநமோநம. (ஙஉ)

ஆதாமபரவாடகவிசய
பாதாம்புஜநாடகஜயஜய. (ஙங)

போதாந்தபுரேசசிவாகம
நாதாந்தநடேசநமோநம. (ஙச)

சகளவுபகளநிட்களநாதா
உகளசத்தனமங்களபாதா. (௩௫)

சந்ததமுஞ்சிவசங்கரபஜனம்
சங்கிதமென்பதுசற்சனவசனம். (௩௬)

சங்கரசிவசிவமாதேவா
எங்களையாட்கொளவாவாவா. (௩௭)

அரகரசிவசிவமாதேவா
அருளமுதந்தரவாவாவா. (௩௮)

சதபரிசதஉபசதமதவிதபவ
சிதபரிகதபதசிவசிவசிவசிவ. (௩௯)

அரகரவரசுரசுபகரபவபவ
சிரபுரசுரபரசிவசிவசிவசிவ. (௪0)

ஞாலகோலகனகாம்பரசாயக
காலகாலவனகாம்பரநாயக. (௪௧)

நடனசிகாமணிநவமணியே
திடனகமாமணிசிவமணியே. (௪௨)

நடமிடுமெம்பலநன்மணியே
புடமிடுசெம்பலபொனமணியே. (௪௩)

உவட்டாதுசித்திக்குமுள்ளமதே
தெவிட்டாதுதித்திக்குந்தெள்ளமுதே. (௪௪)

நடராசவள்ளலைநாடுதலே
நந்தொழிலாம்விளையாடுதலே. (௪௫)

அருட்பொதுநடமிடுதாண்டவனே
யருட்பெருஞ்சோதியென்னாண்டவனே. (௪௬)

நடுநாடிநடுநாடிநடமாடுபதியே
நடராஜநடராஜநடராஜநிதியே. (௪௭)

நடுநாடியொடுகூடிநடமாடுமுருவே
நடராஜநடராஜநடராஜகுருவே. (௪௮)

நடுநாடியிடைநாடிநடமாடுநலமே
நடராஜநடராஜநடராஜபலமே. (௪௯)

ஆயவாயநேயஞேயமாயஞாயவாதியே
தூயவாயகாயதேயதோயமேயஜோதியே. (௫0)

ஆதவாதவேதகீதவாதவாதவாதியே
சூதவாதபாதநாதசூதஜாதஜோதியே. (௫௧)

அங்கசங்கமங்கைபங்கஆதிஆதிஆதியே
துங்கபுங்கவங்கலிங்கஜோதிஜோதிஜோதியே. (௫௨)

அத்தமுத்தஅத்தமுத்தஆதிஆதிஆதியே
சுத்தசித்தசுத்தநித்தஜோதிஜோதிஜோதியே. (௫௩)

அஞ்சலஞ்சலென்றுவந்தெனெஞ்சமர்ந்தகுழகனே
வஞ்சநஞ்சமுண்டகண்டமன்றுள்நின்றவழகனே. (௫௪)

தொண்டர்கண்டுகண்டுமொண்டுகொண்டுணுண்டவின்பனே
அண்டரண்டமுண்டவிண்டுதொண்டுமெண்டுமன்பனே. (௫௫)

கந்ததொந்தபந்தசிந்துசிந்தவந்தகாலமே
எந்தஎந்தசந்தமுந்துமந்தவந்தகோலமே. (௫௬)

என்றுமென்றிஞென்றிமன்றுணன்றுநின்றவீசனே
ஒன்றுமொன்றுமொன்றுமொன்றுமொன்றிதென்றதேசனே. (௫௭)

எட்டவெட்டியொட்டவொட்டுமீட்டதிட்டகீர்த்தியே
அட்டவட்டநட்டமிட்டசிட்டவட்டமூர்த்தியே. (௫௮)

சேரிகாரசாரவாரசீரகாரஹாரனே
ஓருகாரதோரதீரவாரவாரதூரனே. (௫௯)

வெய்யநோயயனையனையமெய்புகன்றதுய்யனே
ஐயனாயனையனையவையமுய்யநின்றஐயனே. (௬0)

பாசநாசபாபநாசபாததேசவீசனே
வாசவாசதாசநேசவாசகாசபேசனே. (௬௧)

வரகேசாந்தமகோதயகாரிய
பரபாசாந்தசுகோதயசூரிய. (௬௨)

பளிததீபகசோபிதபாதா
லளிதரூபகஸ்தாபிதநாதா. (௬௩)

அனூர்தகோபகருணம்பகநாதா
அமிதரூபதருணமபுஜபாதா. (௬௪)

உபலசிரதலசுபகணவங்கண
சுபலகரதலகணபணகங்கண. (௬௫)

அம்போருகபதஅரகரகங்கர
சம்போசிவசிவசிவசிவசங்கர. (௬௬)

நடராசமாணிக்கமொன்றதுவே
கண்ணுதலாணிப்பொன்மன்றதுவே. (௬௭)

நடராசபலமதுநம்பலமே
நடமாடுவதுதிருவம்பலமே. (௬௮)

அபயவரதகரதலபுரிகாரண
உபயபரதபதபரபரிபூரண. (௬௯)

அகரவுகரசுபகரவரசினகர
தகரவகரநவபுரசிரதினகர. (௭௦)

வகரசிகரதினகரசசிகரபுர
மகரவகரவரபுரஹரஹரஹர. (௭௧)

உரியதுரியபெரியவெளியிலொளியிலொளிசெய்நடனனே
பிரியவரியபிரியமுடையபெரியரிதயபடனனே. (௭௨)

அகிலபுவனவுயிர்கள்தழைய அபயமுதவும்அமலனே
அயனுமரியுமரனுமகிழஅருளுநடனவிமலனே. (௭௩)

அகரவுகரமகரவகரவமுதசிகரசரணமே
அபரசபரவமனசமனவமலநிமலசரணமே
தகரககநடனகடனசகளவகளசரணமே
சகுணநிகுணசகமநிகமசகிதவிகிதசரணமே. (௭௪)

அனகவன்ஜவமிதவமிர்தவகுலவகில்சரணமே
அதுலவனதவகதவசலவநிலவனலசரணமே
தனககனகசபையவபயசரதவரதசரணமே
சதுரசதரசகசசரிததருணசரணசரணமே. (௭௫)

உளமுமுணர்வுமுயிருமொளிரவொளிருமொருவசரணமே
உருவினுருவுமுருவுளுருவுமுடையதலைவசரணமே
இளகுமிதயகமலமதனையிறைகொளிறைவசரணமே
இருமையொருமைநலமுமருளுமினியசமுகசரணமே. (௭௬)

அடியுநடுவுமுடியுமறியவரியபெரியசரணமே
அடியரிதயவெளியினடனமதுசெயதிபசரணமே
ஒடிவில்கருணையமுதமுதவுமுபலவடிவசரணமே
உலகமுழுதுமுறையநிறையுமுபயசரணசரணமே. (௭௭)

அறிவுளறியுமறிவையறியவருளுநிமலசரணமே
அவசமுறுமெயடியரிதயமமருமமலசரணமே
எறிவிலுலகிலுயிரையுடலிலிணைசெயிறைவசரணமே
எனையுமொருவனெனவுளுண்ணருமெனதுதலைவசரணமே. (௭௮)

நினையுநினைவுகனியவினியநிறைவுதருகசரணமே
நினையுமெனையுமொருமைபுரியுநெறியினிறைவுசரணமே
வனையுமதுரவமுதவுணவுமலியவுதவுசரணமே
மருவுசபையினடனவரதவருகவருகசரணமே. (௭௯)

சதாசிவாமஹாசிவாசகாசிவாசிகாசிவா
சதாசிவாசதாசிவாசதாசிவாசதாசிவா. (௮௦)

வாசிவாசதாசிவாமஹாசிவாதயாசிவா
வாசிவாசிவாசிவாசிவாசிவாசிவாசிவா. (௮௧)

நினைக்கில்நெஞ்சமினிக்குமென்றனிருத்தமன்றிலொருத்தனே
நினைக்குமன்பர்நிலைக்கநின்றுபொருத்துகின்றகருத்தனே. (அ௨)

மயங்கிநெஞ்சுகலங்கிநின்றுமலங்கினேனையாண்டவா
வயங்கிநின்றுதுலங்குமன்றிலிலங்குஞானதாண்டவா. (அ௩)

களங்கவாதகளங்கொள்சூதருளங்கொளாதபாதனே
களங்கிலாதவுளங்கொள்வாருள்விளங்குஞானநாதனே. (அ௪)

தடுத்தமலத்தைக்கெடுத்துநலத்தைக்கொடுத்தகருணைத்தந்தையே
தனித்தநிலத்திலினித்தகுலத்திற்குனித்தவடிகொளெந்தையே. (அ௫)

எச்சநீட்டிவிச்சைகாட்டியிச்சையூட்டுமின்பனே
அச்சமோட்டியச்சுநாட்டிவைச்சுளாட்டுமன்பனே. (அ௬)

பொதுநிலையருள்வதுபொதுவினில்நிறைவது
பொதுநலமுடையதுபொதுநடமிடுவது
அதுபரமதுபதியதுபொருளதுசிவம்
அரஅரஅரஅரஅரஅரஅரஅர. (அ௭)

நவநிலைதருவதுநவவடிவுறுவது
நவவெளிநடுவதுநவநவநவமது
சிவமெனுமதுபதமதுகதியதுபொருள்
சிவசிவசிவசிவசிவசிவசிவசிவ. (அ௮)

நான்சொன்னபாடலுங்கேட்டாரே
ஞானச்சிதம்பரநாட்டாரே. (அ௯)

பலத்திறனனம்பலத்திறபொன்னம்பலத்திற்றனனுநலத்தனே
பதத்திறபனனும்பரத்திறறனனும்பரத்தின்மன்னுங்குலத்தனே. (௯0)

நீயென்னப்பனல்லவாநினக்குமின்னுஞ்சொல்லவா
தாயினமிக்கநல்லவாசாவசித்திவல்லவா. (௯௧)

சூதுமன்னுமிந்தையேசூடலென்னவிந்தையே
கோதுவிண்டசிந்தையேகோயில்கொண்டதந்தையே. (௯௨)

அன்புமுந்துசிந்தையேயம்பலங்கொளவிந்தையே
இன்பமென்பனெந்தையேயெந்தைதந்தைதந்தையே. (௯௩)

ஞானசித்திபுரத்தனேநாதசத்திபரத்தனே
வானமோதத்தரத்தனேவாதவித்தைவரத்தனே. (௯௪)

ஆதிநீதிவேதனேயாடனீடுபோதனே
வாதிஞானபோதனேவாழ்கவாழ்கநாதனே. (௯௫)

இனித்துயர்படமாட்டேன்விட்டேனே
யென்குருமேலாணையிட்டேனே. (௯௬)

இனிப்பாடுபடமாட்டேன்விட்டேனே
யென்னப்பன்மேலாணையிட்டேனே. (௯௭)

சன்மார்க்கம்நன்மார்க்கம்நன்மார்க்கம்
சகமார்க்கநதுன்மார்க்கநதுன்மார்க்கம். (௯௮)

நடராசபாட்டேநறும்பாட்டு
ஞாலத்தார்பாட்டெல்லாம்வெறும்பாட்டு. (௯௯)

சிதம்பரப்பாட்டேதிருப்பாட்டு
ஜீவர்கள்பாட்டெல்லாம்தெருப்பாட்டு. (௧௦௦)

அம்பலப்பாட்டேயருட்பாட்டு
அல்லாதபாட்டெல்லாமருட்பாட்டு. (௧௦௧)

நாதபரம்பரனேபரநாதசிதம்பரனே
நாததிகம்பரனேதசநாதசுதந்தரனே. (௧௦௨)

ஞானநடத்தவனேபரஞானியிடத்தவனே
ஞானவரத்தவனேசிவஞானபுரத்தவனே. (௧௦௩)

ஞானசபாபதியேமறைநாடெசதாகதியே
ஞானதயாநிதியேபரதேவியுமாபதியே. (௧௦௪)

நகப்பெருஞ்ஜோதிசுகப்பெருஞ்ஜோதிநவப்பெருஞ்ஜோதிசிவப்பெருஞ்ஜோதி
அகப்பெருஞ்ஜோதிநடப்பெருஞ்ஜோதிஅருட்பெருஞ்ஜோதியருட்பெருஞ்ஜோதி.

உமைக்கொருபாதிகொடுத்தருணீதிஉவப்புறவேதிநவபெருவாதி
அமைத்திடுபூதியகத்திமொதிஅருட்சிவஜோதியருட்சிவஜோதி. (௧௦௬)

தங்குறும்புமங்கநிரம்புசங்கமியம்புநங்கொழுகொம்பு
சங்கரசம்புசங்கரசம்புசங்கரசம்புசங்கரசம்பு. (௧௦௭)

சந்தமியன்றுஅந்தணாநன்றுசந்தநின்றுவந்தனமென்று
சந்திசெயமன்றுமந்திரமொன்றுசங்கரசம்புசங்கரசம்பு. (௧௦௮)

பசியாதவமுதேபகையாதபதியே
பகராதநிலையேபறையாதசுகமே
நசியாதபொருளேநலியாதவுறவே
நடராஜமணியேநடராஜமணியே. (௧௦௯)

புனையாதமணியேபுகலாதநிலையே
புகையாதகனலேபுதையாதபொருளே
நனையாதவரமேநடியாதநடமே
நடராஜநிதியேநடராஜநிதியே. (௧௧௦)

சிவஞானநிலையேசிவயோகநிறைவே
சிவபோகவுருவேசிவமானவுணர்வே
நவநீதமதியேநவநாதகதியே
நடராஜபதியேநடராஜபதியே. (௧௧௧)

தவயோகபலமேசிவஞானநிலமே
தலையேறும்அணியேவிலையேறுமணியே
நவவாரநடமேசுவகாரபடமே
நடராஜபரமேநடராஜபரமே. (௧௧௨)

துதிவேதவுறவேசுகபோதநறவே
　　துனிதீருமிடமேதனிஞானநடமே
நதியாரநிதியேயதிகாரபதியே
　　நடராஜகுருவேநடராஜகுருவே. (ககங)

வியமானவரமேவியமானபரமே
　　மனமோனநிலையேகனஞானமலையே
நயமானவுரையேநலமானவரையே
　　நடராஜதுரையேநடராஜதுரையே. (ககச)

பரநடஞ்சிவசிதம்பரநடமேபதிநடஞ்சிவசபாபதிநடமே
திருநடம்பரகுருநடமேசிவநடமமபரநலநடமே. (ககரு)

அகரசபாபதிசிக்ரசபாபதிஅனகசபாபதிகனகசபாபதி
மகரசபாபதியுகரசபாபதிவரதசபாபதிசரதசபாபதி (ககசா)

அமலசபாபதிஅபயசபாபதிஅமுதசபாபதிஅகிலசபாபதி
நிமலசபாபதிநிபுணசபாபதிநிலயசபாபதிநிபிடசபாபதி. (ககஎ)

நீடியவேதந்தேடியபாதம்
நேடியகீதம்பாடியபாதம்
ஆடியபோதங்கூடியபாதம்
ஆடியபாதம்ஆடியபாதம். (ககஅ)

சாக்கியவேதந்தேக்கியபாதம்
தாக்கியவாதம்போக்கியபாதம்
சோக்கியவாதம்ஆக்கியபாதம்
தூக்கியபாதந்தூக்கியபாதம். (ககசு)

ஏன்றியசூதந்தோன்றியபாதம்
ஈன்றியநாதம்ஆன்றியபாதம்
ஒன்றியபூதம்ஞான்றியபாதம்
ஊன்றியபாதம்ஊன்றியபாதம் (கஉ0)

சஞ்சிதம்வீடும்செஞ்சிதபாதம்
தஞ்சிதமாகும்சஞ்சிதபாதம்
கொஞ்சிதமேவுமஞ்சிதபாதம்
குஞ்சிதபாதம்குஞ்சிதபாதம். (கஉக)

எண்ணியநானேதிண்ணியனானேன்
எண்ணியவாறேநண்ணியபேறே
புண்ணியனானேனண்ணியனானேன்
புண்ணியவானேபுண்ணியவானே. (கஉஉ)

இயல்கிளர்மறையேமறைகிளரிசையே
இசைகிளர்துதியேதுதிகிளரிறையே
செயல்கிளரடியேயடிகிளர்முடியே
திருநடமணியேதிருநடமணியே. (கஙஉ)

புரையறுபுகழேபுகழ்பெறுபொருளே
பொருளறுமுடியேமுடிவறுபுணர்வே
திரையறுகடலேகடலெழுசுதையே
திருநடமணியேதிருநடமணியே. (கஙங)

நிகழ்நவநிலையேநிலையுயர்நிலையே
நிறையருணிதியேநிதிதருபதியே
திகழ்சிவபதமேசிவபதசுகமே
திருநடமணியேதிருநடமணியே. (கஙச)

புத்தந்தரும்போதாவித்தந்தருந்தாதா
நித்தந்தரும்பாதாசித்தந்திரும்பாதா. (கஙரு)

அம்பலவாணனைநாடினனே
அவனடியாரொடுகூடினனே.
தம்பதமாபுகழ்பாடினனே
தந்தனவென்றுகூத்தாடினனே. (கஙசா)

நாதாந்தநாட்டுக்குநாயகரே
நடராஜரேசபாநாயகரே. (கஙஎ)

நான்சொல்லுமிதுகேளீசத்தியமே
நடராஜவெளில்வரும்நித்தியமே (கஙஅ)
நல்லோரெல்லார்களுஞ்சபாபதியே
நல்வரமீயுநதயாநிதியே. (கஙகூ

நடராஜாதன்னடநன்னடமே
நடம்புரிகின்றதுமென்னிடமே. (கச0)

சிவகாமவல்லிக்குமாப்பிள்ளையே
திருவாளனவன்சீர்ப்பிள்ளையே. (கசக)

சிவகாமவல்லியைச்சேர்ந்தவனே
சித்தெல்லாஞ்செய்திடத்தேர்ந்தவனே. (கசஉ)

இறவாவரந்தருநற்சபையே
யெனமறைபுகழ்வதுசிற்சபையே. (கசங)

என்னிருகண்ணுளிருந்தவனே
இறவாதருளுமருந்தவனே. (கசச)

நனந்தலைவீதிநடந்தசோதிநலங்கொளுநீதிநடம்புரிநீதி
இனங்கலையோதிசிவந்தருமாதிசிதம்பரஜோதிசிதம்பரஜோதி. (கசரு)

அஞ்சோடஞ்சலைவேலாதேயாகொடிக்கொலைவாகாதே
அந்தோவெந்துயராறாதேயஞ்சோகஞ்சுகமோகாதே
தஞ்சோபங்கொலைசாராதேசதோடஞ்சிவமாமீதே
சம்போசங்கரமாதேவாசம்போசங்கரமாதேவா. (கசசு)

அம்பலத்தொருநடமுருநடமே அருநடமொருநடந்திருநடமே
எம்பலத்தொருநடம்பெருநடமே இதன்பரதிருநடங்குருநடமே. (கசஎ)

ஓதவடக்காதுமடங்காதுதொடக்காது
ஓகையொடுங்காதுதடுங்காதுநடுங்காது
சூதமலங்காதுவிலங்காதுகலங்காது
ஜோதிபரஞ்ஜோதிசுயஞ்ஜோதிபெருஞ்ஜோதி. (கசஅ)

ஏதமுயங்காதுகயங்காதுமயங்காது
ஏறியிறங்காதுவுறங்காதுகறங்காது
சூதமிணங்காதுபிணங்காதுவணங்காது
ஜோதிபரஞ்ஜோதிசுயஞ்ஜோதிபெருஞ்ஜோதி. (கசகூ)

வாமஜோதிசோமஜோதிவானஜோதிஞானஜோதி
மாகஜோதியோகஜோதிவாதஜோதிநாதஜோதி
ஏமஜோதிவியோமஜோதியேறுஜோதிவீறுஜோதி
ஏகஜோதியேகஜோதியேகஜோதியேகஜோதி (கருo)

கலகத்தருமலம்பணகதிநயபலிதமுறுங்
கனகத்தருமணிமன்றுறுகதிதந்தருளுடலுரு
சலசத்திரனெனநின்றவர்தழுவும்பதசரணம்
சரணம்பதிசரணஞ்சிவசரணங்குருசரணம். (கருக)

எனதென்பதுநினதென்பதுமிதுவென்றுணர்கருணம்
இனமொன்றறுபிறிதன்றெனவிசைகின்றதுபரமம்
தனதென்பதுமனதென்பதுநிஜகமென்றணைசரணம்
சரணம்பதிசரணஞ்சிவசரணங்குருசரணம். (கருஉ)

பதம்புறுபவரிங்குறுபவசங்கடமறநின்றிடு
பரமம்பொதுநடமென்றனதுளமபுறவருளம்பர
சிதகுஞ்சிதபதஞ்சிதசிவசுந்தரசிவமந்திர
சிவசங்கரசிவசங்கரசிவசங்கரசிவசங்கர. (கருங)

அம்பலவாணர்தம்மடியவரே
யருளரசாள்மணிமுடியவரே. (கருச)

கையறவிலாதுநடுக்கண்புருவப்பூட்டு
  கண்டுகளிகொண்டுதிறந்துண்டுநாட்டு
ஐயாமிகவுய்யும்வகையப்பாவிளையாட்டு
  ஆடுவதென்றேமறைகள்பாடுவதுபாட்டு. (௧௫௫)

சிற்சபையும்பொற்சபையுஞ்சொந்தமெனதாச்சு
  தேவர்களுமூவர்களும்பேசுவதென்பேச்சு
இச்சமயவாழ்விலெனக்கென்னையினியேச்சு
  என்பிறப்புத்துன்பமெலாமின்றோடேபோச்சு. (௧௫௬)

ஐயாருட்சோதியரசாட்சியெனதாச்சு
  ஆரணமுமாகமமும்பேசுவதென்பேச்சு
எய்யுலகவாழ்விலெனக்கென்னையினியேச்சு
  என்பிறவித்துன்பமெலாமின்றோடேபோச்சு. (௧௫௭)

சிற்பொதுவும்பொற்பொதுவும்நானறியலாச்சு
  சித்தர்களுமுத்தர்களும்பேசுவதென்பேச்சு
இற்பகருமிவ்வுலகிலென்னையினியேச்சு
  என்பிறவித்துன்பமெலாமின்றோடேபோச்சு. (௧௫௮)

ஈசனருளாற்கடலிலேற்றதொருவோடம்
  ஏறிக்கரையேறினேனிருந்ததொருமாடம்
தேசுறுமம்மாடநடுத்தெய்வமணிப்பீடம்
  தீபவொளிகண்டவுடன்சேர்ந்ததுசந்தோடம். (௧௫௯)

மேருமலையுச்சியில்விளங்குக்கம்பரீட்சி
  மேவுமதன்மேலுலகில்வீறுமரசாட்சி
சேருமதிற்கண்டபலகாட்சிகள்கண்காட்சி
  செப்பலரிதாமிதற்கென்னப்பனருள்சாட்சி. (௧௬௦)

தூரியமலைமேலுளதோர்சோதிவளநாடு
  தோன்றுமதிலையாநடஞ்செய்யுமணிவீடு
தெரியுமதுகண்டவர்கள்காணிலுயிரோடு
  செத்தவரெழுவாரென்றுகைத்தாளம்போடு. (௧௬௧)

சொல்லாலளப்பரியசோதிவரைமீது
  தூயதுரியப்பதியில்நேயமறையோது
எல்லாஞ்செய்வல்லசித்தர்தம்மையுறும்போது
  இறந்தாரெழுவாரென்றுபுறந்தாரையூது. (௧௬௨)

வலதுசொன்னபேர்களுக்குவந்ததுவாய்த்தாழ்வு
  மற்றவரைச்சேர்ந்தவர்க்கும்வந்ததலைத்தாழ்வு
வலதிபுசமாடநம்பால்வந்ததருள்வாழ்வு
  மற்றுநமைச்சூழ்ந்தவர்க்கும்வந்ததுநல்வாழ்வு. (௧௬௩)

அம்பலத்திலெங்களையராடியநல்லாட்டம்
அன்பொடுதுதித்தவருக்கானதுசொல்லாட்டம்
வம்புசொன்னபோகளுக்குவந்ததுமல்லாட்டம்
வநததலையாட்டமனறிவநததுபலலாட்டம். (கசுச)

நாததிகஞ்சொல்கின்றவாதம்நாக்குமுடைநாக்கு
நாக்குருசிகொள்ளுவதும்காறியபிணஞசகு
சீாத்திபெறுமம்பலவாசாபுகன்றவாககு
செல்வாககுநல்வாககுதேவாதிருவாககு. (கசுரு)

அருட்பெருஞ்சோதியைககண்டேனே
ஆனந்ததெள்ளமுதுணடேனே
இருட்பெருமாயையைவிண்டேனே
எல்லாஞ்செய்சிததியைககொண்டேனே. (கசுசு)
திருசசிறறமபலம.

---

## ஆனந்தமேலீடு.

இராகம். சஹானு - அடதாளம.

திருச்சிற்றம்பலம்.
பல்லவி.

ஊதூதுசங்கே யூதூதுசஙகே யூதூதுசஙகே யூதூதுசங்கே.

கைவிடமாட்டானெனறூதூதுசஙகே
கனகசபையானென்றூதூதுசஙகே
பொய்விடச்செய்தானென்றூதூதுசஙகே
பூசைபலித்ததென்றூதூதுசஙகே. (கசுஎ)

பொன்னடிதந்தானென்றூதூதுசங்கே
பொன்னம்பலததானென்றூதூதுசஙகே
யின்னலறுத்தானென்றூதூதுசஙகே
யென்னுள்ளமர்ந்தானென்றூதூதுசங்கே. (கசுஅ)

தூககந்தொலைததானென்றூதூதுசஙகே
துன்பநதவிாததானெனறூதூதுசஙகே
யேககங்கெடுததானெனறூதூதுசஙகே
யேமசபையானென்றூதூதுசஙகே. (கசுகூ)

அச்சந்தவிாத்தானென்றூதூதுசஙகே
யம்பலவாணனென்றூதூதுசஙகே
யிச்சையளித்தானென்றூதூதுசஙகே
யின்பங்கொடுததானெனறூதூதுசங்கே. (கஎ0)

என்னுயிர்காத்தானென்றூதூதுசங்கே
யின்பம்பலித்ததென்றூதூதுசங்கே
பொன்னுருத்தந்தானென்றூதூதுசங்கே
பொற்சபையப்பனென்றூதூதுசங்கே. (கஎக)

சிவமாக்கிக்கொண்டானென்றூதூதுசங்கே
சிற்றம்பலத்தானென்றூதூதுசங்கே
நவபோகங்களித்தானென்றூதூதுசங்கே
நானவனானேனென்றூதூதுசங்கே. (கஎஉ)

தெள்ளமுதானானென்றூதூதுசங்கே
சிற்சபையப்பனென்றூதூதுசங்கே
யுள்ளமுவந்தானென்றூதூதுசங்கே
யுள்ளத்துறைந்தானென்றூதூதுசங்கே. (கஎங)

நாதமுடியானென்றூதூதுசங்கே
ஞானசபையானென்றூதூதுசங்கே
பாதமளித்தானென்றூதூதுசங்கே
பலித்ததுபூசையென்றூதூதுசங்கே. (கஎச)

என்னறிவானானென்றூதூதுசங்கே
யெல்லாஞ்செய்வல்லானென்றூதூதுசங்கே
செந்நிலைதந்தானென்றூதூதுசங்கே
சிற்சபையப்பனென்றூதூதுசங்கே. (கஎரு)

இறவாமையீந்தானென்றூதூதுசங்கே
யெண்ணம்பலித்ததென்றூதூதுசங்கே
திறமையளித்தானென்றூதூதுசங்கே
சிற்றம்பலத்தானென்றூதூதுசங்கே. (கஎசு)

கரவுதவிர்ந்ததென்றூதூதுசங்கே
கருணைகிடைத்ததென்றூதூதுசங்கே
யிரவுவிடிந்ததென்றூதூதுசங்கே
யெண்ணம்பலித்ததென்றூதூதுசங்கே. (கஎஎ)

எல்லாஞ்செயவல்லானென்றூதூதுசங்கே
யெல்லார்க்குநல்லானென்றூதூதுசங்கே
எல்லாமுடையானென்றூதூதுசங்கே
யெல்லாமுமானானென்றூதூதுசங்கே. (கஎஅ)

கருணாநிதியனென்றூதூதுசங்கே
கடவுளவனேயென்றூதூதுசங்கே
யருணாடகத்தானென்றூதூதுசங்கே
யம்பலசோதியென்றூதூதுசங்கே. (கஎகூ)

தன்னிகரில்லானென் றூதுசங்கே
தலைவனவனேயென் றூதுசங்கே
பொன்னியல்வண்ணனென் றூதுசங்கே
பொதுநடஞ்செய்வானென் றூதுசங்கே. (௧௮௰)

ஆனந்தநாதனென் றூதுசங்கே
யருளுடையப்பனென் றூதுசங்கே
தானந்தமில்லானென் றூதுசங்கே
தத்துவசோதியென் றூதுசங்கே. (௧௮௧)

பொய்விட்டகன்றேனென் றூதுசங்கே
புண்ணியனானேனென் றூதுசங்கே
மெய்தொடுகின்றேனென் றூதுசங்கே
மேல்வெளிகண்டேனென் றூதுசங்கே. (௧௮௨)

திருச்சிற்றம்பலம்.

---

எந்தாயென்றிடிலிந்தாநம்பதமென்றீயும்பரமன்றும்பத
என்றேடிந்தனநன்றுமங்கணவெங்கோமங்களவெஞ்சாநெஞ்சக
சந்தேகங்கெடநந்தாமந்திரசந்தோடம்பெறவந்தாளந்தண
சம்போசங்கரசம்போசங்கரசம்போசங்கரசம்போசங்கர. (௧௮௩)

நஞ்சோவென்றிடுநங்கோபங்கெடநன்றேகுந்தனைநந்தாமந்தண
நம்பாநெஞ்சினிரம்பாநமபரநமபாநமபதியமபாதம்பதி
தஞ்சோவெனறவாதஞ்சோபந்தெறுதந்தாவந்தனநந்தாடந்திடு
சம்போசங்கரசம்போசங்கரசம்போசங்கரசம்போசங்கர. (௧௮௪)

சந்திரதரசிரசுந்தரசுரவர
தந்திரவபதமந்திரபுரநட
சங்கரசிவசிவசங்கரசிவசிவ
சங்கரசிவசிவசங்கரசிவசிவ. (௧௮௫)

வேதசிகாமணியேபோதசுகோதயமே
மேதகுமாபொருளேயோதருமோநிலையே
நாதபராபரமேசூதபராவமுதே
ஞானசபாபதியேஞானசபாபதியே. (௧௮௬)

ஏகசதாசிவமேயோகசுகாகரமே
ஏமபராநலமேகாமவிமோசனமே
நாகவிகாசனமேநாதசுகோடணமே
ஞானசபாபதியேஞானசபாபதியே. (௧௮௭)

தூயசதாகதியேநேயசதாசிவமே
சோமசிகாமணியேவாமவுமாபதியே
ஞாயபராகரமேகாயபுராதரமே
ஞானசபாபதியேஞானசபாபதியே. (கஅஅ)

ஆரணஞாபகமேபூரணசோபனமே
ஆதியனாதியனேவேதியனாதியனே
நாரணனாதரமேகாரணமேபரமே
ஞானசபாபதியேஞானசபாபதியே. (கஅ௯)

ஆகமபோதகமேயாதரவேதகமே
ஆமயமோசனமேயாரமுதாகரமே
நாகநடோதயமேநாதபுரோதயமே
ஞானசபாபதியேஞானசபாபதியே. (க௯௦)

ஆடகநீடொளியேநேடகநாடளியே
ஆதிபுராதனனேவேதிபராபரனே
நாடகநாயகனேநானவனானவனே
ஞானசபாபதியேஞானசபாபதியே. (க௯க)

ஆரியனேசிவனேஆரணனேபவனே
யாலயனேயரனேயாதரனேசுரனே
நாரியனேவரனேநாடியனேபரனே
ஞானசபாபதியேஞானசபாபதியே. (க௯௨)

ஆதரவேதியனேஆடகசோதியனே
யாரணிபாதியனேயாதரவாதியனே
நாதவிபூதியனேநாமவனாதியனே
ஞானசபாபதியேஞானசபாபதியே. (க௯௩)

தேவகலாநிதியேசிவதயாநிதியே
தீனசகாநிதியேசேகரமாநிதியே
நாவலரோபதியேநாரியுமாபதியே
ஞானசபாபதியேஞானசபாபதியே. (க௯௪)

ஆடியநாடகனேஆலமராதியனே
ஆகமமேலவனேயாரணநாலவனே
நாடியகாரணனேநீடியபூரணனே
ஞானசபாபதியேஞானசபாபதியே (க௯௫)

விரைசேர்சடையாய்விடையாயுடையாய்
விராதாவிபவாவிமலாவமலா
வெஞ்சோபஞ்சாநஞ்சார்கண்டாவிம்பசிதம்பரனே
அரைசேகுருவேயஶ்ரீதேசிகமே

அணியேமணியேயருளேபொருளே
அநதோவநதாளெந்தாயெநதாயமபலநமபதியே. (க௯௬)

உருவேயுயிரேயுணர்வேயுறவே
யுடையேபொருளேயொளியேவெளியே
யொனறேயெனறேநனறேதந்தாயம்பரமபரனே
அருவேதிருவேயறிவேசெறிவே
யதுவேயிதுவேயடியேமுடியே
அந்தோவநதாளெநதாயெநதாயம்பலநம்பதியே. (க௯௭)

வானசிற்கனமநதிரதநதிரவாதசிற்குணமநதணவந்தண
வாரசறசனவநதிதசிநதிதவாமவறபுதமஙகலமஙகள
ஞானசிறசுகசஙகரசங்கரஞாயசறகுணவங்கணவஙகண
நாதசிறபரவம்பரநம்பரநாததறபரவிமபசிதம்பர. (க௯௮)

பாரதததுவபஞ்சகரஞசகபாதசததுவசங்கஜபஙகஜ
பாலநிததியவம்பகநம்பகபாசபுததகபண்டிதகண்டித
நாரவித்தகசஙகிதவிஙகிதநாடகததவநம்பதிஙகதி
நாதசிற்பரநம்பரவமபரநாததறபரவிம்பசிதமபர. (க௯௯)

நாதபாலசுலோசனவாத்தன
ஜாதஜாலவிமோசனநிாததன. (௨00)

சிறசபையப்பனேயுறறனனே
சிததியெலாஞசெயப்பெறறனனே. (௨0க)

பரமமநதிரசகளாகளகரண
படனதந்திரநிகமாகமசரண. (௨0௨)

அனநதகோடிகுணாகரஜொலிதா
அகண்டவேதசிகாதரபலிதா. (௨0௩)

பரிபூரணஞானசிதம்பர
பதிகாரணநாதபரமபர. (௨0௪)

சிவஞானபதாடகநாடக
சிவபோதபரோகளகூடக. (௨0௫)

சகலலோகபரகாரகவாரக
சபளயோகசரபூரகதாரக. (௨0௬)

சதவபோதகதாரணதனமய
சதயவேதகபூரணசினமய. (௨0௭)

கருணாநிதியேகுணநிதியே
கதிமாநிதியேகலாநிதியே
தருணாபதியேசிவபதியே
தனிமாபதியேசபாபதியே. (௨0௮)

திருச்சிற்றம்பலம்.

## இரவு மது.

திருச்சிற்றம்பலம்.

இராகம். தன்னியாசி - ஆதிதாளம்.

அம்பலவாவந்தாரென் றுசின்னம்பிடி
யற்புதஞ்செய்கின்றாரென றுசின்னம்பிடி
செம்பலனளித்தாரென் றுசின்னம்பிடி
சித்திநிலைபெற்றதென் றுசின்னம்பிடி. (க)

சிற்சபையைக்கண்டோமென் றுசின்னம்பிடி
சித்திகள்செய்கின்றோமென் றுசின்னம்பிடி
பொற்சபைபுகுந்தோமென் றுசின்னம்பிடி
புந்திமகிழ்கின்றோமென் றுசின்னம்பிடி. (உ)

ஞானசித்திபுரமென் றுசின்னம்பிடி
நாடகஞ்செய்யிடமென் றுசின்னம்பிடி
ஆனசித்திசெய்வோமென் றுசின்னம்பிடி
யருட்சோதிபெற்றோமென் றுசின்னம்பிடி. (ங)

கொடிகட்டிக்கொண்டோமென் றுசின்னம்பிடி
கூத்தாடுகின்றோமென றுசின்னம்பிடி
அடிமுடியைக்கண்டோமென் றுசின்னம்பிடி
யருளமுதமுண்டோமென் றுசின்னம்பிடி. (ச)

அப்பர்வருகின்றாரென் றுசின்னம்பிடி
யற்புதஞ்செயவதற்கென் றுசின்னம்பிடி
செப்பநிலைபெற்றதென் றுசின்னம்பிடி
சித்திபுரமிடமென் றுசின்னம்பிடி. (ரு)

தானேநானானேனென் றுசின்னம்பிடி
சத்தியஞ்சத்தியமென றுசின்னம்பிடி
ஊனேபுகுந்ததென் றுசின்னம்பிடி
யொளிவண்ணமானதென் றுசின்னம்பிடி. (சு)

வேகாதகாலுணர்ந் துசின்னம்பிடி
வேகாநடுத்தெரிந் துசின்னம்பிடி
சாகாத்தலையறிந் துசின்னம்பிடி
சாகாதகல்விகற் றுசசின்னம்பிடி. (எ)

மீதானநிலையேறிச்சின்னம்பிடி
வெட்டவெளிநடுநின் றுசின்னம்பிடி
வேதாகமங்கடந் துசின்னம்பிடி
வேதாந்தசித்தாந்திசின்னம்பிடி. (அ)

பன்மார்க்கமுங்கடந்தசின்னம்பிடி
பன்னிரண்டின்மீதுநின்றசின்னம்பிடி
சன்மார்க்கமார்க்கமென்றசின்னம்பிடி
சத்தியஞ்செய்கின்றோமென்றசின்னம்பிடி. (௯)

சித்தாடுகின்றாரென்றசின்னம்பிடி
செத்தாரெழுவாரென்றசின்னம்பிடி
இத்தாரணியிலென்றசின்னம்பிடி
யிதுவேதருணமென்றசின்னம்பிடி. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## பிரபஞ்சவெற்றி.

திருச்சிற்றம்பலம்.

அருட்சோதியானேனென்றறையப்பாமுரசு
அருளாட்சிபெற்றேனென்றறையப்பாமுரசு
மருட்சாதிதீர்ந்தேனென்றறையப்பாமுரசு
மரணந்தவிர்ந்தேனென்றறையப்பாமுரசு. (௧)

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி.

## சமரசசுத்தசன்மார்க்கசங்க

# சத்தியவிண்ணப்பம்.

உத்தரஞான சித்திபுரமென்றும், உத்தரஞான சிதம்பரமென்றும், திருவருளாலாக்கப்பட்ட வாச்சகச்சிறப்புப் பெயர்களும், பார்வதிபுரமென்றும், வடலூரென்றும், உலகியலாற் குறிக்கப்பட்ட குறிப்புப்பெயர்களும், பெற்று விளங்குகின்ற தெய்வப்பதியினிடத்தே இயற்கைவிளக்க நிறைவாகியுள்ள ஓர் சுத்தசிவானுபவ ஞானசபையில், எவ்வுயிரு மின்பமடைதற்பொருட்டு இயற்கையுண்மை நிறைவாகிய திருவுருவைத்தரித்து, இயற்கையின்ப நிறைவாகிய சிவானந்த ஒருமைத் திருநடச் செய்கையை, எவ்வுயிரு மின்பமடைதற்பொருட்டே செய்தருளுகின்ற எல்லாம் வல்ல தனித்தலைமைக் கடவுளாகிய அருட்பெருஞ்சோதி யாண்டவரே! தேவரீரது திருவருட்சமுகத்தில் யான் செய்துகொள்ளுகின்ற சமரசசுத்தசன்மார்க்கசங்கசத்திய விண்ணப்பம்:—

இவ்வுலகினிடத்து ஆறறிவுள்ள உயர்வுடைத்தாகிய தேகத்தைப்பெற்ற யான், இத்தேகத்திற்கு இடைக்கிடை நேருகின்ற மரணம் பிணி மூப்பு பயம் துன்பமுதலிய அவத்தைக ளெல்லாவற்றையும் நிவர்த்திசெய்து, இத்தேகத்தையே நித்திய தேகமாக்கிக்கொண்டு, எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எத்துணையும் தடைபடாத பேரின்பசித்திப் பெருவாழ்வைப்பெற்று வாழ்தல்வேண்டு மென்பதே எனது சத்தியமான அதிதீவிர விருப்பமுயற்சியாக விருக்கின்றது.

எனது விருப்பமுயற்சி இங்ஙனமாக, அவத்தைக ளெல்லாவற்றையும் நீக்கி இத்தேகத்தை நித்தியதேகமாக்கி எக்காலத்து மழியாத பேரின்பசித்திப் பெருவாழ்வைப்பெற்றுவாழ்தல் எதனால் பெறுதல் கூடுமென்று அறியத்தொடங்கிய தருணத்து, வேறு எந்தவழியாலும் பெறுதல்கூடாது, எல்லாமுடைய கடவுளது திருவருட் சுதந்தரமொன்றாலே பெறுதல்கூடும் என்று தேவரீர் திருவருளாலறிவிக்க உள்ளபடி யறிந்தேன். பின்னர்த் திருவருட் சுதந்தரம் நமக்கு எந்தவழியாற் கிடைக்குமென்று அறியத்தொடங்கிய தருணத்து, எனது யானென்னும் தேகசுதந்தரம் போகசுதந்தரம் ஜீவசுதந்தரம் என்னு மூவகைச் சுதந்தரங்களும் நீங்கியவிடத்தே கிடைக்குமென்று தேவரீர் திருவருளாலறிவிக்க உள்ளபடியறிந்தேன். ஆகலில் எனது சுதந்தரமாகக்கொண்டிருந்த தேகசுதந்தரத்தையும், போகசுதந்தரத்தையும், ஜீவசுதந்தரத்தையும், தேவரீர் திருவருட்கே சர்வசுதந்தரமாகக் கொடுத்துவிட்டேன். கொடுத்த தருணத்தே இத்தேகமும், ஜீவனும், போகப்பொருள்களும், சர்வசுதந்தர

ராகிய கடவுள் பெருங்கருணையாற் கொடுக்கப்பெற்றனமன்றி, நமது சுதந்தரத்தாற் பெற்றனவல்லவெனனும் உண்மையை அருளாலறிவிக்கவும் அறிந்துகொண்டேன். இனி இத்தேகத்தினிடத்தும் ஜீவனிடத்தும் போகப்பொருள்களிடத்தும் தேவரீர் திருவருள் சாட்சியாக எனக்கு எவ்விதத்தும் யாதோர் சுதந்தரத்தோற்றமும் தோற்ற மாட்டாது. தேவரீர் திருவருட்சுதந்தரத்தை என்னிடத்தே வைத்தருளி, மரணம் பிணி மூப்பு பயம் துன்பமுதலிய அவத்தைகளெல்லாவற்றையுந் தவிர்த்து, இத தேகத்தையே நித்தியதேகமாக்கி, எக்காலத்துமழியாத பேரின்பசித்திப் பெருவாழ் வில் என்னை வாழ்வித்தலவேண்டும். இத்தேகத்தைப்பெற்ற எல்லாச் சீவர்களுக் கும் எனக்கறிவித்தவண்ணமே அறிவித்து அவர்களையும் உரிமையுடையவர்க ளாக்கி வாழ்வித்தல்வேண்டும்.

தேவரீர் பெருங்கருணையாட்சிக்கு வந்தனம். வந்தனம்.

இங்ஙனம்,

☞ சிதம்பரம் - இராமலிங்கம்.

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை.

―――

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி.

சுத்தசன்மார்க்கசத்தியப்

# பெருவிண்ணப்பம்.

இயற்கையுண்மை நிறைவாகியுள்ள ஓர் சுத்த சிவாநுபவவெளியில் இயற்கைவிளக்க நிறைவாகி விளங்கிய அருட்பெருஞ்சோதி சொரூபராய், இயற்கையின்ப நிறைவாகி யோங்கிய சிவானந்த ஒருமைத் திருநடச்செய்கையை, எல்லாவுயிர்களு மின்பமடைதற்பொருட்டுத் திருவுளக்கருணையாற் செய்தருளுகின்ற சர்வவல்லபராகிய தனித்தலைமைக்கடவுளே!

அறிவென்பது ஓர் சிறிதுந் தோற்றாத அஞ்ஞானமென்னும் பெரிய பாசாந்தகாரத்தில், நெடுங்காலம் சிற்றணுப்பசுவாகி யழுந்திக்கிடந்த அடியேனுக்குள் உள்ளொளியாகியிருந்து, அப்பாசாந்தகாரத்தினின்றும் எடுத்து, எல்லாப் பிறப்புடம்புகளினும் உயர்வுடைத்தாகிய ஆறறிவுள்ள இம்மனிதப்பிறப்புடம்பில் என்னைவிடுத்து, சிறிது அறிவுவிளங்கச்செய்த தேவரீரது திருவருட்பெருங்கருணைத்திறத்தை எங்ஙனம் அறிவேன் எவ்வாறு கருதுவேன் என்னென்றுசொல்வேன் எல்லாம்வல்ல இயற்கையுண்மைக்கடவுளே!

உபசாரத்தாற் பெற்ற தந்தையென்பான் ஒருவனது சுக்கிலத்துளியின்கண், என்னை யோர் பகுதிப் பேரணுவுருவிற் பெருகி வெளிப்பட விருத்தியகாலத்திலும், எனக்குள் உள்ளொளியாகி யிருந்து அப்பகுதிப் பேரணுவுருவைச் சிருட்டித்தருளினீர், அன்றிப் புறத்தில் யாவராலுஞ் சகிக்கப்படாத அதன அருவருப்பையும் அசுத்தத்தையும் தீநாற்றத்தையும் சகித்து, அச்சுக்கிலத்துளியினிடத்து ஓர் ஆவியுருவாகி யிருந்து, அத்துளியின்கண்ணுள்ள பலவகை விரோதத்தத்துவங்களாற் சிறிதுந் தடைபடாமல் எனதுருவையுங் காத்தருளினீர், அன்றி அங்ஙனம் அரும்பிய ஆன்மசத்திக் கலைகள் வெளிப்பட விளக்கி வளர்த்துமருளினீர்.

உபசாரத்தாற் பெற்ற தாயென்பா ளொருத்தியின் சோணிதத்திரளில் என்னுருவைச் சேர்க்கும்வழியில், அப்போதப்போது என்னுருவைச் சிதைப்பதற்கு எதிரிட்ட துரிசுகளெல்லாவற்றையும் நிக்கிரகஞ்செய்தருளினீர். இங்ஙனம் புரிந்த தேவரீரது திருவருட் பெருங்கருணைத்திறத்தை எங்ஙனமறிவேன் எவ்வாறு கருதுவேன் என்னென்றுசொல்வேன் எல்லாமுடைய இயற்கை விளக்கக்கடவுளே!

தாய்க்கருப்பையிற் சோணிதத்திரளிற்சேர்த்து என்னை ஓர்பூதப் பேரணுவுருவிற் பெருகி வெளிப்பட விருத்தியகாலத்திலும், எனக்குள் உள்ளொளியாகியிருந்து

அப்பூதப் பேருருவை சிருட்டித்தருளினீர். அன்றிப் புறத்தில் எவராலுஞ் சிறிதுஞ் சகிக்கப்படாத அதனசுத்தம் அருவருப்பு துர்க்கந்த முதலியவற்றைப் பொறுத்து அச்சோணிதத் திரளில் ஓர் ஆவி யுருவாகியிருந்து அத்திரளினுள்ள பலவகை விரோதத்தத்துவங்களாற் சிறிதுந் தடைபடாமல் என்னுருவைக் காத்தருளினீர். அன்றியும் அவ்விடத்தெதிரிட்ட தூரிசுகளெல்லாவற்றையும் நிக்கிரகஞ் செய்தருளினீர். அன்றி யங்ஙனம் பூத்த ஆன்மசத்திகக்கலைகள் வாட்டமடையாது வெளிப்பட்டு விளங்க வளர்த்தருளினீர்.

அன்றியும், தாய்க்கருப்பையினிடத்துப் பூதப் பேருருவிற்கிடந்த என்னை அக்கருப்பையிற் பவுதிக பிண்டவடிவில் விருத்தும்வரையில் நச்சுக்கிருமி, நச்சுக்காற்று, நச்சுச்சுவாலை முதலிய வுற்பாதவகைகளா லெனது பூதப் பேருருச் சிதறி வேறுபடாமலும் காத்தருளினீர். அன்றியும் தாய் கருப்பையிற் பவுதிகபிண்டவடிவில் என்னை யிருத்தியகாலத்திலும் எனது இச்சை ஞானக்கிரியைகளை வெளிப்படுத்துதல் முதலிய உபகரிப பதிகரிப்புகளுக்குரிய உபயோக தத்துவவுறுப்புக ளெல்லாவற்றையுங் குறைவின்றி வகுத்தமைத்து வளர்த்துக் காத்தருளினீர். அன்றியும் அடியேன் தாய் கருப்பையிற் பிண்டவடிவிற் கிடந்தகாலத்து இரும்பிற் பெரிதுங் கடினமுடையதாய் இருட்குகையிற் பெரிதும் இருளுடையதாய் மிகவுஞ் சிற்றளவுடையதாய அசுத்த முதலியவற்றால் நிரம்பிய அக்கருப்பையினுள் நெருக்கத்தாலும் வெப்பத்தாலும் புழுங்கிய புழுக்கத்தினால் வருந்தி வருந்திக் களைத்தபோதெல்லாம் அங்ஙனம் அழுதக்காற்றை அடிக்கடி மெலமெல வீசுவித்து அவ்வருத்தமுங் களைப்புந் தவிர்த்துக் காத்தருளினீர்.

அன்றியும் தாய்கருப்பையிற் பிண்டவடிவிற் கிடந்து பசியினாற் பரதவித்து மூர்ச்சித்தபோதெல்லாம் பூதகாரியவமுதத்தை எனக்கு ஊட்டுவித்துப் பசியை நீக்கி மூர்ச்சைதெளிவித்தருளினீர். அன்றியும் தாய்கருப்பையிற் பிண்டவடிவிற்கிடந்து பேயவெருட்டாலும் பேரிருட்டாலும் பயந்தபோதெல்லாம் நாதவொலியாற் பேய்வெருட்டையும் விந்துவிளக்கத்தால் பேரிருட்டையுந் தவிர்த்து என்பயத்தை நீக்கியருளினீர். அன்றியும் தாய் கருப்பையினகணணேரிட்ட பெருநதி, பெருங்காற்று, பேரோசை, பெருவெள்ளம், பெரும்புழு முதலிய உற்பாதத்துரிசுக ளனைத்தையும் தவிர்த்துக் காத்து அப்பிண்டவடிவி லெனக்கு ஓரறிவையும் விளக்கியருளினீர்.

அன்றியும் உலகினிடத்தே பிறந்து அனுபவிப்பதற்குரிய சுகவனுபவப் பெருக்கம் ஆயுட்பெருக்கம் முதலிய நன்மைகளையும் எனக்கு அப்பிண்டவடிவின் கண்ணே யமைத்தருளினீர்.

அன்றியும் சோணிதக்காற்றி னடிபடல், யோனிநெருக்குண்ணல் முதலிய அவத்தைகளால் அபாயம் நேரிடவொட்டாமல் காத்து இவ்வுலகினிடத்தே தோற்றுவித்தருளினீர். இங்ஙனம் புரிந்த தேவரீரது திருவருட் பெருங்கருணைத்திறத்தை எங்ஙனமறிவேன் எவ்வாறு கருதுவேன் என்னென்று துதிப்பேன் எல்லாமாகிய இயற்கை யின்பக்கடவுளே.

தந்தையென்பவனது சுக்கிலப்பையின்கண் யான்வந்தமைந்த கணப்போது தொடங்கி தாயென்பவளது சோணிதப்பையின்கண் சென்றடைந்த கணப்போதிற்கு

முன் கணப்போது வரையுமாக என்றுலொருவாறு அளவிடப்பட்ட ஒருகோடி யொன்பதுலக்ஷத்தறுபதினாயிரங் கணப்போது பரியந்தம், எவ்வகைத்தடைகளும் வாராதபடி பகுதிப்பேரணுவுருவிற்கிடந்த வெனது அகத்தினும் புறத்தினும் அருவாகியும் உருவாகியுஞ் சலித்தன முதலியவின்றி அன்போடும் அருளோடும் பாதுகாத்திருந்த தேவரீரது திருவருட்பெருங்கருணைத் தன்மைக்கு இவ்வுலகில் ஒருவாறு ஒரு கணப்போது பாதுகாத்தலிற் சலிப்படைந்தும் தளர்ச்சியடைந்தும் அருவருப்புற்றும் சுதந்தர மற்றும் பராகிலிருந்தும் தடைபடுகின்ற தந்தைமுதலிய ஜீவர்கள் கருணைத்தன்மையை ஒப்பென்று சொல்வதற்கு எவ்விதத்தினுஞ் சிறிதாயினு மனந்துணியாமையால் அங்ஙன முபசரியாதவனாகி யிருக்கின்றேன். ஆகலில் தேவரீர் திருவருட் பெருங்கருணையை என்னென்று கருதுவேன என்னென்று துதிப்பேன் அருட்பெருஞ்சோதித் தனித்தலைமைக்கடவுளே.

தாயென்பவளது சோணிதப்பையின்கண் யான்வந்தமைந்த கணப்போது தொடங்கி இவ்வுலகிற்றோன்றிய கணப்போதிற்குமுன் கணப்போது வரையுமாக என்றுலொருவாறு அளவிடப்பட்ட ஆறுகோடி நாற்பத்தெட்டுலக்ஷங் கணப்போது பரியந்தம், எவ்வகைத் தடைகளும் எவ்வகை யாபத்துகளும் வாராதபடி பூதப்பேரணுவுருவிலும் பிண்டப்பெருவடிவிலும் கிடந்த எனதகத்தினும் புறத்தினும் அருவாகியும் உருவாகியும் சலித்தல் முதலியவின்றி பெருந்தயவினோடு பாதுகாத்திருந்த தேவரீர் திருவருட்பெருங்கருணைத் தன்மைக்கு இவ்வுலகில் ஒருவாறு ஒரு கணப்போது பாதுகாத்தலிற் சலித்தும் தளர்ந்தும் அருவருத்தும் பரதந்திரித்தும் பராக்கடைந்தும் தடைபடுகின்ற தாய்முதலிய ஜீவர்கருணைத் தன்மையை ஒப்பென்று சொல்வதற்கு எவ்வகையினும் எத்துணையும் மனந்துணியாமையால் அங்ஙனம் உபசரியாதவனாகி யிருக்கின்றேன். ஆகலில தேவரீரது திருவருட்பெருங்கருணையை என்னென்று கருதுவேன் எங்ஙனந் துதிப்பேன.

யாவராலும் பிரித்தற்கொருவாற்றானுங் கூடாத பாசமென்னு மகாந்தகாரத்தில் யானதுவென்னும் பேதந்தோன்றாது அருகிக்கலந்து அளவிறந்தகால முன் பின்னென்பதின்றி மூர்ச்சித்துக்கிடந்த என்னை, அம்மகாந்தகாரத்தினின்றும் ஓர் கணப்பொழுதினுள் அதிகாரணக் கிரியையால் அதிகாரணப்பகுதி யுருவிற்பிரித்தெடுத்தருளிய தேவரீரது திருவருட்பேராற்றலை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன் சத்தியஞானாநந்தத் தனித்தலைமைக்கடவுளே.

காரணக்கிரியையாற் காரணப்பகுதி யுருவினும் அதிசூக்குமக்கிரியையால் அதிசூக்குமப் பகுதியுருவினும் சூக்குமக்கிரியையாற் சூக்குமப்பகுதியுருவினும் பரத்துவசத்திசத்தரால் பூதவுருவினும் அபரத்துவ சத்திசத்தரால் பௌதிகவடிவினும் ஓர் கணப்போதினுள் என்னைச் செலுத்தாமற் செலுத்திய தேவரீர்து திருவருட்பேராற்றலை, என்னென்று கருதி என்னென்று துதிப்பேன அகண்ட பூரணாநந்தராகிய அருட்பெருஞ்சோதிக் கடவுளே.

ஜீவனை ஆதரிப்பிக்கும் பூதப்பிரிதிவித் தோற்றமும், ஜீவனை விர்த்திசெய்விக்கும் பூதநீர்த்தோற்றமும், ஜீவனை விளக்கஞ்செய்விக்கும் பூதாக்கினித் தோற்றமும், ஜீவனை யதிகரிப்பிக்கும் பூதவாயுத்தோற்றமும், ஜீவனை வியாபகஞ்செய்விக்கும் பூதவெளித்தோற்றமும், உபப்பிருதிவி, உபநீர், உபாக்கினி, உபவாயுமுதலியதோற்றங்

களும், அவைகளிருக்குமிடங்களும் தொழிலிடமுதலிய விடங்களும், ஒலியறிவு, உருவவறிவு, சுவையறிவு, நாற்றவறிவு, பரிசவறிவு என்னும் ஐவகைக்குண வறிவு களும், அவைகளிருத்தற்குரிய செவி,கண், நாக்கு, மூக்கு மெய் என்னு முள் ளிடப் பொறிகளும், அவைகள் உத்தியோகித்தற்குரிய வெளியிடப்பொறிகளும், வசனித்தறிதல், நடந்தறிதல், கொடுத்தெடுத்தறிதல், மலம்விடுத்தறிதல், ஜலம் விடுத்தறிதல் என்னும் ஐவகைத் தொழிலறிவுகளும், அவைகளிருத்தற்குரிய வாக்கு, பாதம், கை, நீர்வாயில, அபானவாயில என்னும் கரும உள்ளிடப்பொறிகளும், அவைகள் தொழிற்படற்குரிய கருமப் புறவிடப்பொறிகளும், நினைத்தல், விசாரித் தல், நிச்சயித்தல், அகங்கரித்தல் என்னும் சூக்குமக்கரணத் தொழில்களும், அவை களை இயற்றும் மனம், புத்தி, சித்தம், அகங்காரமென்னும் சூக்குமக்கரணங்களும், அவைகளை இயற்றுவிக்கும் அதிசூக்குமக்கரணங்களும், அக்கரணங்களின உபகர ணங்களாகிப் பலபல பேதப்பட்டு விரிந்த சத்துவம், ராஜசம், தாமசமுதலிய குணங் களும், அவைகளிருத்தற்கு முத்தியோகித்தற்கு மிடங்களும், பருவஞ்செய்தல், தகுதிசெய்தல், இச்சைசெய்தல், தெளிவுசெய்தல், அதிகாரஞ்செய்தல், காரணஞ் செய்தல், காரியஞ்செய்தல்முதலிய இடைப்பாட்டுத் தொழில்களும், அவைகளை இயற்றும்பொழுது இயைபு, இச்சை, அறிவுமுதலிய கருவிகளும், அக்கருவிகளுக் குரிய விடங்களும், அவைகளுத்தியோகித்தற்குரிய இடங்களும், தூரிசு நீக்குவித் தல், சுகம்விழைவித்தல், தூய்மைசெய்வித்தல், இன்பமடைதற்கு வழியாயிருத்தல், துணையாயிருத்தல் முதலிய பரத்துவத்தொழில்களும், அவைகளை இயற்றுதற்குரிய தத்துவங்களும், அவைகளிருத்தற்குரிய இடங்களும, பிரேரித்தற்குரிய இடங்களும், அறிதல், அறிவித்தல், அனுபவித்தல், அனுபவிப்பித்தல் முதலிய முக்கியத்தொழில் களும், அவைகளை இயற்றுகின்ற சத்திசத்தர்களும், அவர்களிருத்தற்குரிய இடங் களும, அவர்கள் அதிகரித்தற்குரிய இடங்களும், வாதவிருத்தி, பித்தவிருத்தி, சிலேட்டுமவிருத்திகளும்; அவைகளிருக்குமிடங்களும், உத்தியோகிக்கு மிடங்க ளும், சூரியசத்தி, சந்திரசத்தி, அக்கினிசத்தி, தாரகசத்தி, பிரமசத்தி, மாயாசத்தி, ருத்திரசத்திமுதலிய சத்திகளும், அவர்களிருத்தற்கும் அதிகரித்தற்குமுரிய விடங் களும், அச்சத்திகளை நடத்துஞ் சத்தர்களும, அவர்களிருத்தற்கு மதிகரித்தற்கு முரிய விடங்களும், நனவு, கனவு, சுழுத்திமுதலிய அவத்தைகளும், அவைகளிருத் தற்குரிய விடங்களும், இங்ஙன மின்னும பற்பல அகவுறுப்புகளும், அகப்புறவுறுப் புகளும், மீத்தோல், புடைத்தோல், வன்தோல், மென்தோல் முதலிய தோல்வகை களும், வெண்ணரம்பு, செந்நரம்பு, பசுநரம்பு, சிறுநரம்பு, பெருநரம்பு முதலிய நரம்பின் வகைகளும், பேரெனபு, சிறெறன்பு, நீட்டென்பு, முடக்கெனபு முதலிய என்பின வகைகளும், நல்லிரத்தம், புல்லிரத்தம், கலவையிரத்தம், கபிலையிரத்தம் முத லிய இரத்தவகைகளும், மெல்லிறைச்சி, கலவிறைச்சி, மண்ணிறைச்சி, நீரிறைச்சி முதலிய இறைச்சிவகைகளும், மேனிலைச்சுக்கிலம், கீழ்நிலைச்சுக்கிலம் முதலிய சுக் கிலவகைகளும், ஓங்காரமூளை, ஆங்காரமூளை முதலிய மூளைவகைகளும், தலையமு தம், இடையமுதம் முதலிய அமுதவகைகளும், வெண்மை, செம்மை, பசுமை, கரு மை, பொன்மை என்னும் வண்ணவகைகளும், வெண்மையிற் செம்மை, வெண் மையிற் பசுமை, வெண்மையிற் கருமை, வெண்மையிற் பொன்மை; செம்மையில் வெண்மை, செம்மையிற் பசுமை, செம்மையிற் கருமை, செம்மையிற் பொன்மை; பசுமையில் வெண்மை, பசுமையிற் செம்மை, பசுமையிற் பொன்மை, பசுமையிற்

கருமை ; கருமையில் வெண்மை, கருமையிற் செம்மை, கருமையிற் பசுமை, கருமையிற் பொன்மை ; பொன்மையில் வெண்மை, பொன்மையிற் செம்மை, பொன்மையிற் பசுமை, பொன்மையிற் கருமை என்னும் வண்ண பேதவகைகளும், இவைகள் இருத்தற்குரிய விடங்களும், செயல்வகைகளும் பயன்வகைகளும், இங்ஙனமின்னும் பற்பல் புறவுறுப்புகளும், புறப்புற வுறுப்புகளும், எனக்கு உபகரிக்கும் பொருட்டு இப்பவுதிகவடிவின்கண் ஒருங்கே உணர்ந்து தோன்ற உணர்ந்து தோற்றுத் தோற்றுவித்த தேவரீரது திருவருட்பேராற்றலை எங்ஙனமறிந்து எவ்வாறு கருதி என்னென்று துதிப்பேன். சுத்தசன்மார்க்கலக்ஷிய சத்தியஞானக் கடவுளே.

ஜீவர்களாற் கணித்தறியப்படாத பெரிய உலகின்கண்ணே பேராசை, பெருங்கோபம், பெருமோகம், பெருமதம், பெருலோபம், பேரழுக்காறு, பேரகங்காரம், பெருவயிரம், பெருமடம், பெருமயக்கமுதலிய பெருங்குற்றங்களே பெரும்பாலும் விளைவதற்குரிமையாகிய மற்றை யிடங்களிற் பிறப்பியாமல் குணங்களே பெரும்பாலும் விளைதற்கு இவ்விடத்தே [illegible]றப்பிற் குறைவுபடாத உயர்பிறப்பாகிய இம்மனிதப்பிறப்பில் என்னைப் பிறப்பித்தருளிய தேவரீரது பேரருட் பெருங்கருணைத்திறத்தை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன். அருட்பெருவெளியின்கண்ணே அருட்பெருஞ்சோதி வடிவராகி, விகற்பமில்லாது விளங்குகின்ற மெய்ப்பொருட் கடவுளே,

சிசுப்பருவந்தொடங்கிக் குமாரப்பருவம் வரையில் பேய்வெருட்டல், தோஷந்தாங்கல், பாலெதிரொடுத்தல், சவலைக்குருந்தாதல், நோய்ப்பிணிப்புண்டல், பசியாலரற்றல், பயத்தாலலம்புதல், உண்டியுவட்டல், உடம்பொடுநோதல் முதலிய எவ்வகைத்தடைகளாலும், தடைபடாமல் எனதகத்தும் புறத்தும் காத்திருந்து வளர்த்தருளிய தேவரீரது பேரருட்பெருங்கருணைத் திறத்தை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன்.

அறிவாரறியும் வண்ணங்களெல்லா முடைய பேரருட் பெருஞ்சோதிப்பெருந்தகைக் கடவுளே ; குமாரப்பருவத்திற்றானே உலகிற் சிறுவர்களுடன் கூடிச் சிறுவிளையாட்டியற்றல், சிற்றுண்டிவிழைதல், சித்திரம்பயிற்றல், அதிசயம்பார்த்தல், அசங்கியம்பேசல், அவலித்தழுதல், சிறுசண்டைசெய்தல், சிறுகுறும்பியற்றல், தனைவசத்துழலல், தாய்வயிற்சலித்தல் முதலிய குற்றங்களில் என்னைச் சிறிதுஞ் செலுத்தாமல், ஓர் சிறிது அறிவு விளங்கப் புரிந்து இடந்தனித்திருத்தல், இச்சையின்றிருத்தல், செபதபஞ்செய்தல், தெய்வம்பரவல், பிறவுயிர்க்கிரங்கல், பெருங்குணம்பற்றல், பாடிப்பணிதல், பத்திசெய்திருத்தல் முதலிய நற்செய்கைகளில் என்னைச் செலுத்திய தேவரீரது பேரருட் பெருங்கருணைத் திறத்தை என்னென்று கருதி, என்னென்று துதிப்பேன்.

எல்லாமானவராயும், ஒன்றுமல்லாதவராயும், எல்லா அண்டசராசரங்களின் அகத்தும் புறத்தும் நிறைந்து விள[illegible]கின்ற தனித்தலைமைக் கடவுளே ! குமாரப்பருவத்தில் என்னைக் கல்வியிற்பயிற்றும் ஆசிரியரையின்றியே, என்றாதத்திற் பயின்றறிதற் கருமையாகிய கல்விப்பயிற்சியை எனதுள்ளகத்தே யிருந்து பயிற்றுவித்தருளினீர். இடம்பத்தையும், ஆரவாரத்தையும், பிரயாசத்தையும், பெருமறைப்பையும், போது போக்கையும், உண்டுபண்ணுகின்ற ஆரியமுதலிய பாஷைகளில் எனக்கு ஆசைசெல்லவொட்டாது, பயிலுதற்கும், அறிதற்கும், மிகவு மிலேசுடையதாய், பாடுதற்கும் துதித்தற்கு மிகவு மினிமையுடையதாய், சாகாகல்வியை யிலே

சிலறிவிப்பதாய்த திருவருள் வலத்தாற் கிடைத்த தென்மொழியொன்றனிடத்தே மனம் பற்றச்செய்து அததெனமொழிகளாற் பலவகைத் தோத்திரப்பாட்டுகளைப் பாடுவித்தருளினீர். அச்சிறு பருவத்திற்றானே ஜாதியாசாரம், ஆசிரம ஆசாரம் என்னும் பொய்யுலகாசாரத்தைப் பொய்யென்றறிவித்து, அவைகளை யநுட்டியாமற் றடைசெய்வித்து, அப்பருவம் ஏறுந்தோறும ஏறுந்தோறும் எனதறிவை விளக்கஞ் செய்து செய்து என்னை மேனிலையில் ஏற்றி ஏற்றி நிலைக்கவைத்தருளினீர்.

வாலிபப்பருவ மடுக்குந்தருணத்திற்றானே, அப்பருவத்திற்கு மிகவு முரிய விடய விச்சைகளைச் சிறிதுந் தலையெடுக்க வொட்டாது அடக்குவித்தருளினீர். அவ்வாலிபப்பருவந தோனறுதறகு முன்னரே, எல்லாவுயிர்கட்கும் இனபந்தருவ தற்கு அகத்தும்புறத்தும் விளஙகுகினற அருட்பெருஞ்சோதி யுண்மைக்கடவுள் ஒருவரே யுள்ளார் எனறறிகின்ற மெய்யறிவை விளககுவித்தருளினீர். வாலிபப்பருவந தோன்றியபோதே, சைவம், வைணவம், சமணம், பவுத்தமுதலாகப் பலபெயர் கொண்டு பலபடவிரிந்த அளவிறநத சமயங்களும், அச்சமயங்களிற்குறித்த சாதனங்களும், தெய்வங்களும், கதிகளும், தததுவசித்தி விகற்பங்களென்றும், அவ்வச்சமயங்களிற் பலபட விரிநத வேதஙகள், ஆகமங்கள், புராணங்கள், சாத்திரங்கள் முதலிய கலைகளெல்லாம் தத்துவசித்திககற்பனைக் கலைகளென்றும், உள்ளபடியே எனக்கறிவித்து அச்சமயாசாரங்களைச் சிறிதும் அனுட்டியாமற் றடைசெய்வித்தருளினீர், அன்றியும் வேதாநதம்,சித்தாந்தம், போதாநதம், நாதாந்தம், யோகாந்தம், கலாந்தம் முதலாகப் பலபெயர்கொண்டு பலபடவிரிநதமதங்களும் மார்க்கங்களும், சுத்த சன்மார்க்கானுபவலேச சித்திபேதஙகளென றறிவித்து அவைகளையுமனுட்டியாதபடி தடைசெய்வித்தருளினீர். அங்ஙனஞ்செய்வித்ததுமன்றி உலகியற்கண் பொன்விஷயவிச்சை, பெண்விஷயவிச்சை, மண்விஷயவிச்சை முதலிய எவ்விஷயவிச்சைகளிலும் என்னறிவை ஓரணுத்துணையும் பற்றுவிக்காமல் எல்லாவுயிர்களையும் பொதுமையினோக்கி எல்லாவுயிர்களும் இனபமடைதல் வேண்டுமென்னுங் கருணை நன்முயற்சியைப் பெறுவித்துச் சுத்தசன்மார்க்கத் தனிநெறியொன்றையே பற்றுவித்து எக்காலத்தும் நாசமடையாத சுத்ததேகம், பிரணவதேகம், ஞானதேகம் என்னுஞ் சாகாக்கலாநுபவ தேகஙகளும, தன் சுதந்தரத்தால் தத்துவங்க ளெல்லாவற்றையும் நடத்துகின்ற தனிப்பெருவல்லபமும் கடவுளொருவரே என்றறிகின்ற உண்மைஞானமும், கருமசித்தி, யோகசித்தி, ஞானசித்தி முதலிய எல்லாச்சித்திகளும் பெறுகின்ற அருட்பேறும் பெற்று வாழ்கின்ற பேரின்பப்பெருவாழ்வில் எனனை அடைவிப்பதற்குத திருவுளங்கொண்டு அருட்பெருஞ் சோதியராகி நான் எவ்விதத்தும் அறிதற்கரிய உண்மைப்பேறறிவை யறிவித்தும், நான் எவ்விதத்தும் காண்பதற்கரிய உண்மைப் பெருங்காக்ஷிகளைக் காட்டுவித்தும், நான் எவ்விதத்தும் செய்தற்கரிய உண்மைப் பெருஞ்செயல்களைச் செய்வித்தும், நான் எவ்விதத்தும் அடைதற்கரிய உண்மைப்பெரு நன்மைகளை அடைவித்தும், நான் எவ்விதத்தும் அநுபவித்தற்கரிய உண்மைப் பேரநுபவங்களை அநுபவிப்பித்தும், எனது அகத்தினும் புறத்தினும் இடைவிடாது காத்தருளி எனது உள்ளத்திருந்து உயிரிற்கலந்து பெருந்தயவாற் றிருநடஞ்செய்தருள்கின்றீர்; இங்ஙனஞ் செய்தருள்கின்ற தேவரீரதுதிருவருட்பெருங்கருணைத்திறத்தை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன்.

அருட்பெருஞ்சோதிதனிப்பெருங்கருணை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி.

திருவருட்சமுக விசேஷவிண்ணப்பமென்னும்

சமரசசுத்தசன்மார்க்க

# சத்தியஞானவிண்ணப்பம்.

இயற்கை விளக்கமென்கின்ற சத்திய ஞானசபைக்கண்ணே இயற்கை
யுண்மை யென்கின்ற சத்தியத் திருவுருவினராய் இயற்கையின்பமென்கின்ற சத்தி
யத்திருநடஞ்செய்தருள்கின்ற இயற்கைத் தனிப்பெருங்கருணைத் தனிப்பெரும்பதி
யாகிய தனித்தலைமைக்கடவுளே! தேவரீர் திருவருட்சமுகத்தையடைந்த உண்மை
ஞானிகளின் சித்திவல்லபத்தை வகுத்தறிந்து வாழ்த்துதுமென்று அளவிகந்த
முகங்களைக்கொண்டு அளவுகடந்த நெடுங்காலம் தத்தம் அளவைகளால் தனித்தனி
யளந்தளந்தும் ஒருமித்தளந்தளந்தும் ஒருவாற்றானு முடிவுதோற்றாமையின் வேதாக
மங்களனைத்தும் ஆங்காங்கு *கோடித் ததிசயிக்கின்றனவென்றும், அண்டசராசரங்க
ளெல்லாவற்றையும் படைத்தல், காத்தல், துரிசுநீக்கல் முதலிய தொழில்களால்
நிகழ்த்துகின்ற அதிகாரத் தலைவர்களும் எவ்வகைத் தத்துவங்களையும் காரணகாரியத்
திறத்தா னடத்துகின்ற சத்திசத்தர்களும் உணர்ந்துணர்ந்தும் உணர்ச்சிசெல்லாமை
யின் முயற்சிபற்றாது மயங்குகின்றனரென்றும், பேரறிவாற்சிறந்த பெரியர்களெல்
லாம் வியந்து வியந்து விளம்புகின்றனர். அதனால் திருவருட்சமுகத்தை யடைந்த
உண்மைஞானிகளின் சித்தி வல்லபத்தை ஒருவராலும் ஒருவாற்றானும் உணர்ந்து
கொள்ளுதல் கூடாவென்று ஐயுறவின்றி யறிந்துகொண்டேன்; இங்ஙனமறிந்து
கொண்ட சிறியேன் அவ்வுண்மை ஞானிகளுக்குச் சித்தி வல்லபத்தைக் கொடுத்
தருளிய திருவருட்சமுகத்தி னியற்கையுண்மை விளக்கத்தரத்தை எங்ஙனமறியத்
தொடங்குவேன். மலத்திற் புழுத்த புழுவினுஞ் சிறியேன் பொய்யறிவாற் புனைந்
துரைத்த பொய்யுரைகளையும் மெய்யுரைகளாகக் கருணையினாற் கடைக்கணித்தருளிய
அருட்பெருஞ்சோதி ஆண்டவரே! தேவரீரது திருவருட்சமுகத்தின் இயற்கைப்
பெருங்கருணைப் பெருந்தன்மையைக் கருதுதற்கு விரும்பிய ஐந்தொழிற் கருத்தா
முதலியோர் தூய்மையுடைமை அன்புடைமை முதலிய சுபகுணங்களைக் கருதுதற்
குக் கருவியாய தமதுகரணங்கள்முற்றப் பெற்றிலவென்று கருதுதலின்றி எண்ணி
யெண்ணி இரங்குகின்றனரென்று, அறிவுடையோர் வியந்துரைத்தலைப் பலகாற்
பயின்று கேட்டறிந்தேன்; இங்ஙனங் கேட்டறிந்த சிறியரிற் சிறியேன் அத்திருவ
ருட்சமுகத்தின் இயற்கைப் பெருங்கருணைப் பெருந்தன்மையைக் காமம், வெகுளி
முதலிய அவகுணங்கட்கெல்லாம் வைப்பிடமாகிய பாராய்முருட்டன்ன கருங்கற்
கரணத்தால் எங்ஙனங் கருதத்தொடங்குவேன். நாயிற்கடையேன் செய்த குற்றங்க
ளையெல்லாம் குணங்களாகக்கொண்டு என்னுள்ளகத்தே யமர்ந்து உயிரிற்கலந்த
பெருங்கருணைப் பெருமானே! தேவரீரது திருவருட்சமுகத்தின் இயற்கைப் பெருங்
குணப் பெரும்புகழைத் துதித்தற்கு விரும்பிய மூர்த்திகண் முதலியோர் துதித்தற்

* கோடித்து - அலங்கரித்து.

கருவியாய தத்தஞ் செங்காவுறுப்புகள் வாய்மை கூறல் இன்சொற்புகறல் முதலிய
ஒழுக்கங்களிற் சான்றிலவென்று துதித்தலினறி அச்சுற்று நிற்கின்றனவெனறு
அறிஞருண்மை வாசகத்தாலறிநதேன் ; இங்ஙனமறிந்த கடையேன் பொய்யுரைத
தல் பயனிலகூறன் முதலிய தீமைக்கட்பயின்று தடித்த வெனது அசுத்த நாவினுல்
தேவரீர் திருவருட்சமுகத்தின் இயற்கைப் பெருங்குணப் பெரும்புகழை எங்ஙனந்
துதிக்கத தொடங்குவேன் ; அண்டபிண்டமுதலிய எல்லாவற்றிறகு மகததும புறத்
தும் நிறைந்துவிளங்குகின்ற அருட்பெருஞ்சோதித் தனிப்பெரும்பதியாய பூரணரே!
தேவரீர் திருவருட்சமுகத்தின் இயற்கையுண்மைததரததை யறிதல்வேணடுமெனறும், இயற்கைப் பெருங்கருணைப் பெருநதன்மையைக் கருதுதல்வேணடுமென்றும்,
இயற்கைப் பெருங்குணப் பெரும்புகழைத் துதிதல் வேணடுமென்றும், எனதுள்
ளகத்தே யோவாதுறைந் தூற்றெழுந்து விரைந்து விரைநது மேன்மேற் பெருகு
கின்ற பேராசைப்பெருவெள்ளம் அணைகடந்து செல்கின்றதாகலின், அறிவாரறி
கின்ற வண்ணங்களும, கருதுவார் கருதுகின்ற வண்ணஙகளும், துதிப்பாா துதிக்
கின்ற வண்ணங்களும், ஆகிய எல்லாவண்ணங்களையுமுடையவா அருட்பெருஞ்சோ
தித் தனிப்பெருங்கடவுள் என்ற சததியஞானிகளது உண்மை வாசகததைப் பற்றுக
கோடாகக் கொண்டு தன்மை சாலாத் தமியேன் அறிதற்குங் கருதுதற்குந் துதிததற்
குந தொடஙகினேன். இங்ஙனந் தொடங்குதற்குமுனனா எனதறிவிற்குங் கருததிற்
கும் நாவிற்கும் இயல்வனவாகத தோற்றிய வணணங்களுள் ஒன்றேனும் ஈண்டு
இயற்படத் தோற்ருமையின் அருட்பெருஞ்சோதித் தனிப்பெருங்கடவுளே ! தேவ
ரீர் திருவருட் சமுகத்தின் இயற்கை வண்ணஙகள் எத்தன்மையவோ எத்தன்மை
யவோ வென்று உணாந்துணாநது கருதிக்கருதி யுரைத்துரைத்து அதிசயிக்கின்றவ
னுனேன், இயற்கையுண்மைத் தனிப்பெரும்பொருளாயும், இயறகைவிளக்கத் தனிப்
பெரும்பதமாயும், இயற்கையின்பத் தனிப்பெருஞ்சுகமாயும், பிரிவின்றி நிறைந்த
பெருந்தனமையராய அருட்பெருஞ்சோதியாண்டவரே! தேவரீர் திருவருள் வலததால்
பொறி புலன் கரணமுதலிய தத்துவங்களனைத்தையும் வென்று நினமலராகித தத்து
வாந்தத்தில் நினறு தம்முண்மை யுணாந்து இயற்கையுணர்சசியைப்பெற்று இயற்கை
யுண்மைக்கண் இயற்கையின்பாநுபவஞ்செய்கின்ற சுதத யோகாந்தாகளும, சுத்த
கலாநதாகளும், சுதத போதாந்தாகளும், சுத்த நாதாந்தர்களும், சுதத வேதாந்தர்களும்,
சுதத சிததாந்தாகளுமாகிய சுததசன்மார்க்க ஞானிகளின திருககூட்டங்களை நன்
முயற்சியாற் றனித்தனியடைந்து பததியாற்பணிநது அற்புதப்பெருஞ்செயல் புரி
கின்ற ஐயர்களே ! அருட்பெருஞ்சோதித் தனிப்பெரும்பதியாய கடவுளின் இயற்
கைத் திருவருட்சமுகமிருநத வண்ண முள்ளமுவநதுரைததருளல்வேணடுமென்று
விண்ணப்பிக்குந்தோறும் எல்லாப்பொருள்கட்கும, எலலாககுணங்கட்கும், எல்லாச்
செயல்கட்கும், எல்லாப்பயன்கட்கும், எல்லா வநுபவஙகடகும், மற்றெல்லாவற்றிற
கும், உருவசொரூப சுபாவமுதலிய இலக்கணஙகள் அனைததும தாமேயாகியும, தா
மல்லராகியும், தாககியுந தாககறறும், அகததும அகப்புறததும, புறததும் புறப்புறத
தும, நீக்கமினறி நிறைந்துவிளங்குகின்ற இயற்கையுண்மைக்கடவுளது இயற்கைத்
திருவருட்சமுகமிருந்தவண்ணம் அந்தோ! அந்தோ!! எங்ஙனமறிவோம், எவ்வாறுகரு
துவோம் என்னென்று கூறுவோம் என்று அவ்வக்கூட்டங்களினுந் தனிததனி உரை
த்துரைத்து நெகிழ்ந்து நெகிழ்ந்து நெட்டுயிர்க்கின்ருாகளெனறும், எல்லாததத்துவங்
களையும், எல்லாத் தததுவிகளையும் தோற்றுவித்தலும், இயக்குவித்தலும் அடக்குவித்

தலும், மயக்குவித்தலும், தெளிவித்தலுமாகிய தொழில்களை எளிதிற்கொடுத்தற்குரிய பூரணசுதந்தரத்தவர்களாய் இயற்கைச் சத்தியஞான சுகாநுபவ பூரணசொரூப சாத்தியர்களாய் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் தடைபடாத நித்திய சுத்த சுத்த ஞானதேகிகளாய்ப் பூதசித்தி, கரணசித்தி, இந்திரியசித்தி, குணசித்தி, பிரகிருதிசித்தி, காலசித்தி, கலாசித்தி, புருடசித்தி, விந்துசித்தி, பரசித்தி, சுத்தசித்தி, விசுவசித்தி, வியோமசித்தி, பிரமசித்தி, சிவசித்தி முதலிய, பிண்டசித்தி, அண்டசித்தி பகிரண்டசித்தி, அண்டாண்டசித்தி, என்கின்ற அந்தரங்க பகிரங்க தத்துவதத்துவசித்திகளெல்லாவற்றையும் திருக்கடைக் கணிப்பாற் செய்யவல்லராய், சடாந்த சமரசசத்திபராய் விளங்குகின்ற சமரச சுத்தசன்மார்க்க ஞானிகளது, சிதவிலாசத் திருச்சபைக்கண்ணே புண்ணியவசத்தாற் புகுதப்பெற்று, மனங்கனிந்து வணங்கி நின்று சர்வசுதந்தரராய சத்தியர்களே, இயற்கை யுண்மைத்தனிப்பெரும்பதியாய கடவுளின் இயற்கைத் திருவருட்சமுகமிருந்த வண்ணம் திருவுளம்பற்றித் திருவாய் மலர்ந்து திருவார்த்தை யளித்தருளல்வேண்டுமென்று விண்ணப்பிக்கின்றதோறும், திருவார்த்தை யளித்தலின்றிப் பெருங்கருணைத் திருக்கண்களில் ஆனந்தநீர் பொழிந்து சும்மாவிருக்கின்றனரெனறும் உணர்ந்தோர் வியந்துரைப்பக்கேள்வியுற்று இயற்கைத் திருவருட் சமுகமிருந்தவண்ணம் என்னையோ என்னையோ வென்று குலாவிக் குலாவிக் கூவுகின்றவனானேன்.

அடிநிலைக்கரும ஞானசித்தி யநுபவங்களினும், முடிநிலைக்கருமஞானசித்தி யநுபவங்களினும், அடிநிலையோக ஞானசித்தியநுபவங்களினும். முடிநிலையோகஞானசித்தியநுபவங்களினும், அடிநிலைத்தத்துவஞான சித்தியநுபவங்களினும், முடிநிலைத்தத்துவஞானசித்தி யநுபவங்களினும், அடிநிலை யானமஞானசித்தி யநுபவங்களினும், முடிநிலை யானமஞானசித்தி யநுபவங்களினும், சுத்தஞானசித்தி யநுபவங்களினும், சமரசசுத்தஞானசித்தி யநுபவங்களினும், அதுவதுவாகி நிறைந்தும், அதுவதுவாகி விளங்கியும், அதுவதுவாகி யினித்தும் ஆங்காங்கு அதீதமாகிக் கலந்தும், இவையனைத்துமாகி யொருமித்தும், அதீதாதீதமாகித் தனித்தும், வயங்குகின்ற பெருங்கருணைப் பெரும்பதியாய கடவுளே! எல்லாச் சத்திகளுக்கும், எல்லாச் சத்தர்களுக்கும், எல்லா மூர்த்திகளுக்கும், எல்லா மூர்த்தர்களுக்கும். எல்லாத் தேவிகளுக்கும், எல்லாத் தேவர்களுக்கும், எல்லாச் சாதனர்களுக்கும், எல்லாச் சாத்தியர்களுக்கும், எல்லா வுயிர்களுக்கும், எல்லாத் தத்துவங்களுக்கும், எல்லாப் பொருள்களுக்கும் எல்லாக்குணங்களுக்கும், எல்லாச் செயல்களுக்கும், எல்லா அநுபவங்களுக்கும், மற்றெல்லாவற்றிற்கும் முதற்காரணமாயும், நிமித்த காரணமாயும் துணைக்காரணமாயும், இவையல்லவாயும் விளங்குகின்ற திருவருட்சமுக மிருந்த வண்ணம் அறிந்துகொள்ளுந் திறங்களமானல, திருவருட்சமுகப் பெருங்கருணைப் பெரும்பதியாய தேவரீர் இயற்கைத்திருவண்ணமறிதல் எங்ஙனமோ! எங்ஙனமோ!! ஓ ஒப்புயர்வின்றி விளங்குகின்ற ஒருவரே! தேவரீர் திருவண்ணமும், திருவருட்சமுகத்திருவண்ணமும், அறிதற்கும், கருதுதற்கும், துதித்தற்கும், எத்திறத்தாரும் கூடாவாயினும் அடிமையளவிற்கியன்றபடி யறியாதறிந்தும் கருதாதுகருதியும் துதியாது துதித்தும் எனது உரிமையை யூற்றஞ்செய்கின்றவனானேன் வந்தனம். வந்தனம்.

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி.

# சமரசசுத்தசன்மார்க்கசங்கசத்தியச்

# சிறுவிண்ணப்பம்.

இயற்கையுண்மையரென்றும், இயற்கையறிவினரென்றும், இயற்கையின்பினரென்றும், நிர்க்குணரென்றும், சிற்குணரென்றும், நித்தியரென்றும், சத்தியரென்றும், ஏகரென்றும், அநேகரென்றும், ஆதியரென்றும், அநாதியரென்றும், அமலரென்றும், அருட்பெருஞ்சோதியரென்றும், அற்புதரென்றும், நிரதிசயரென்றும், எல்லாமானவரென்றும், எல்லாமுடையவரென்றும், எல்லாம் வல்லவரென்றும், குறிக்கப்படுதல் முதலிய, அளவுகடந்த திருக்குறிப்புத் திருவார்த்தைகளால், சுத்தசன்மார்க்க ஞானிகள் துதித்தும், நினைத்தும், உணர்ந்தும், புணர்ந்தும், அனுபவிக்க விளங்குகின்ற தனித்தலைமைப்பெரும்பதியாகிய பெருங்கருணைக்கடவுளே! தேவரீர் திருவருட் சமுகத்தில் துரும்பினுஞ் சிறியேமாகிய யாங்கள், சிற்றறிவாற் செய்துகொள்ளுஞ் சிறுவிண்ணப்பங்களைத் திருச்செவிக்கு ஏற்பித்தருளி எங்களை இரக்ஷித்தருளல் வேண்டும்.

எல்லாச் சத்திகளும், எல்லாச் சத்தர்களும், எல்லாத் தலைவர்களும், அறிந்து கொள்ளுதற்கு மிகவும் அரியதாய், எல்லாத் தத்துவங்களுக்கும், எல்லாத் தத்துவிகளுக்கும், அப்பாலப்பாலாய் விளங்கும் ஓர் சுத்தஞானவெளியில் தமக்கு ஒருவிதத்தாலும் ஒப்புயர்வு சிறிதுங் குறிக்கப்படாத தனிப்பெருந்தலைமை அருட்பெருஞ்சோதியராகிவிளங்குகின்ற தேவரீரது தனிப்பெருந்தன்மைக்கு மெய்யறிவுடையோரால் விதிக்கப்பட்ட வேதாகமங்களும், பெருந்தகை வாசகத்தைப்பெறாது சிறுதகை வாசகங்களைப் பெற்றுத் திகைப்படைகின்றனவென்றால், மலத்திற்புழுத்த புழுவினுஞ் சிறியேமாகிய யாங்கள், திருச்சமுகத்தில் விண்ணப்பித்தற்குரிய பெருந்தகை வாசகத்தை எவ்வாறறிவோம், எங்ஙனஞ் செய்வோம். ஆகலிற் கருணைநிதியாகிய கடவுளே! யாங்கள் விண்ணப்பிக்கின்ற அற்பவாசகத்தில் உரிமை நோக்காது அங்கீகரித்தருளி எங்களைக் காத்தருளல் வேண்டும்.

தாயினுஞ்சிறந்த தயவுடைக்கடவுளே! இயற்கையே அஞ்ஞானவிருளில் அஞ்ஞானவுருவில் அஞ்ஞானிகளாய் அஞ்ஞானத்திற்பயின்று ஏதுந்தெரியாது கிடந்த எங்களைத் தேவரீர் பெருங்கருணையாற் பவுதிகவுடம்பிற் சிறிதறிவுதோற்றுவித்து விடுத்த வஞ்ஞான்றுதொட் டிஞ்ஞான்றுவரையும் அதுகொண்டு அறிவே வடிவாய், அறிவே உருவாய், அறிவே பொறியாய், அறிவே மனமாய், அறிவே அறிவாய், அறிவே அனுபவமாய், அனுபவிக்கத் தெரிந்துகொள்ளாது; குற்றமேவடிவாய்க், குற்றமே உருவாய்க், குற்றமே பொறியாய்க், குற்றமே மனமாய்க், குற்றமே அறிவாய்க், குற்றமே அனுபவமாய் அனுபவிக்கின்ற சிறியேங்கள் திருச்சமுகத்தில் விண்ணப்பிக்கின்ற விண்ணப்பமும், குற்றமேவடிவாய்க் குற்றமே குறிக்குமென்று அறிந்தோமாயினுங் குற்றங் குறியாதவகை விண்ணப்பஞ் செய்தற்கு ஒருவாற்றானும் உணர்ச்சியில்லோம். ஆகலிற் றுணிவுகொண்டு விண்ணப்பிக்கின்றோம். குற்றங்களையே குணங்களாகக்கொள்ளுதல் தேவரீர் திருவருட்பெருமைக்கு இயற்கையாத

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்ஜோதி.

# மெய்ம்மொழிப்பொருள்விளக்கம்.

இஃது,

"உலகெலாம்" என்னும் மெய்ம்மொழிப்பொருள் விளக்கமெனப தெங்ஙனமெனில்:—

திருவருளின்பத்தை அங்கைக்கனியிற்பெற்ற பெரியரையும், அத்திருவருளை யும் வாச்சிய லட்சியமாகக்கொண்ட பெரியபுராணத்தில், தெய்வத் தறசிறப்புச் செந்தமிழ்ச் செய்யுட்கண் எல்லாம்வல்ல விறைவன் றிருவருளா லெடுத்துககொடுக கப்பட்ட "உலகெலாமுணர்ந் தோதற்கரியவன்" என்னும் மெய்மமொழியினது பொருள்விளக்கமாகலின மெய்ம்மொழிப பொருளவிளககமென் றாயிற்றெனக.

இதனை மெய்ம்மொழியென்ற தென்னையெனின .—

உணர்ந்தோர் இழிகுண வாங்கார மொழியாய், மனிதமொழியினும் சம குண வாங்காரமொழியாய தேவர்மொழி மெயம்மொழியென்பா; அதனினும் உயா குண வாங்காரமொழியாய முனிவர்மொழி மெய்ம்மொழியென்பா; அதனினும் இயல புப் பிரகிருதிமொழியாய அரிபிரமாதியர்மொழி மெயம்மொழியெனபா, அதனினும் சுத்தாசுத்த மாயாமொழியாய உருத்திராதியாமொழி மெயமமொழியென்பா, இங் ஙனமன்றி மொழித்திறன்றெரிந்து முடிபு முற்றுணர்ந்தோா அபரவயிந்துவப் பிர ணவமொழியாய சதாசிவாதியர் மொழியே மெய்மமொழியென்பா; எனினும் இவ வபரவயிந்துவப் பிரணவமொழிக்கு உபாதான, உபகரண, அதிகரண, வியாபகசித்த மாய், சுத்த வியோமாகாரமாய் விளஙகுகின்ற திருவருட் பரவயிநதுவ துரியத்திரு வாக்கான்மொழிந்த "உலகெலாம்" என்னுமொழியை மெய்ம்மொழியெனறல்; இறும்பூதன்றெனக. வேற்றுமையியலடையொன்று வழங்கின்க ணின்மையிற் கூறிய தன்றி, இஃதோரியையியலடையுமன்றெனக. இதனைத் திருவருட் பரவயிந்துவ துரியமொழியெனற தெங்ஙனமெனின்; சுததமுதலிய மாயாகாரிய வாகாயங்களி னன்றி நாதாதீதமாய்ச் சிதாகாசமென்று வேதாகமங்களான் மீக்கூறப்பட்ட சிற் சபைகட்டோன்றிய மொழியாகலின் அங்ஙனங் கூறியதெனக. ஆயின் இவ்வ டைமொழிப்பொருட்டொகை என்னையெனின; வாச்சியப்பொருளாங்கால் மெய்ம் மையையுடைய மொழியென்று வேற்றுமைவழியான் விரித்து அபரவயிந்துவப் பிரணவமொழிக்கும், லட்சியப்பொருளாங்கால் மெய்ம்மையாகிய மொழியென்று அவ்வழியான்விரித்துத் திருவருட்பரவயிந்துவத் துரியமொழிக்கும் இயைபுகோடல் துணிபெனக.

இங்ஙனம் வாச்சியலக்ஷியமொழி வரலாறெனனையெனின்:—

மனிதர், தேவர், முனிவர், அரிபிரமர், உருத்திராதியர் மொழியாய; ஆங்கார மொழி, பிரகிருதிமொழி, மாயைமொழி எனபவை அசுத்தமும் சுத்தாசுத்தமுமாகிய சத்தாரத்தப் பிரபஞ்ச காரண வைகரியாதி நானகு வாககின காரியமொழி யாகலின் மெய்ம்மொழியன்றெனக. சதாசிவாதிமொழியாகிய பிரணவமொழி சுத்த சத்தாரத்தப் பிரபஞ்சகாரணமாகிய அபரவயிந்தவ காரியமொழியாகலின வாச்சியமெய்ம் மொழியாயிற்றென்க. பரசிவமொழியாய திருவருட்டுரியமொழி துரியசத்தார்த்தப் பிரபஞ்சகாரணமாய்ச் சிற்சத்தி பரவிந்துவிற பதிதலான நாதமாத்திரத்திலுண்டாய மொழியாகலின லட்சியமெய்ம்மொழியாயிற்றெனக.

இஃது மெய்ம்மொழி யென்பதைப் பெரியபுராணத்துள் "அருளினீர்மைத் திருந்தொண்டறிவருந், தெருளினீரிதுசெப்புதநீரமெனின், மருளின்மெய்ம்மொழி வானிழல்கூறிய, பொருளிறுதமெனப் புகல்வாமன்றே" என்ற செய்யுளா லுங்காண்க. வெனக இஃது அபரவாகிய வியவகாரமன்றாகலின் விசேட விலக்கண மியற்படவிரித்திலமெனக. இம் மெய்ம்மொழிப் பொருள் விளக்கத்தினெல்லை எங்ஙனமெனின; யோகாந்த கலாந்த நாதாந்த போதாந்த வேதாந்த சித்தாந்த மென்னும் ஷடாந்தாநுபவ சாத்தியாகளும், அவற்றை விரும்பி அவ்வழிக்கணின்ற சாதகர்களும், அந்தராநுபவதிட்டாந்தமாக உபாசிக்க விளங்குகின்ற சிதம்பரராசி யத்தைக் குறிக்குஞ் சிற்சபைக்கண்ணே சேக்கிழாரென்னும் தெய்வப்புலவர்பொ ருட்டிறைவர் பூமாகாயவாக்கான் மொழியப்பட்டுச் சமரசாநுபவ சாட்சாத்காரமாய் ஆறந்தத்தினு நடிக்கின்ற சிதம்பரநடந்த திருவருட்பதத்தை வாச்சியலட்சியமாகக் கொள்ளப்பட்டதாகலின், ஷடாந்த சமரச லட்சியப பொருளெல்லையையுடைய தென்க. இனி உலகெலாமென்பதன் மட்டன்றி உணர்ந்தோதற்கரியவனென்ற தொடர்களும் அத்திருவருட் பரவயிந்துவத துரியத் திருவாக்கினெழுந்த மெய்ம் மொழியென் றையமறக்கொள்கவென்க. எங்ஙனமெனின, திருவருட்புலமைசான்ற சேக்கிழாரென்னும் பெரியார் செயற்கரியவென றாயனபணித்தவா றடுத்தகருவி கண முறைப்பட ஒன்றேனுமின்றி முடித்தற கெங்ஙனம் கூடுமென்று ஐயுற் றழுங்கிய உள்ளத்தோடு, அருட்போதுவின்கட் போந்து பணிந்து பழிச்சித் திரு வருட்பெருமையைச் சிந்தித்துநிற்ப, ஆண்டிறைவர் அவர் கருதிய பெருஞ்செயன முடித்தற்பொருட் டுளங்கொண்டு சிற்சபைகட் புறத்து "உலகெலாமென்றும்" அவர் தத்தநிலைக்கண் உணர்ந்தோதற் கரியவனென்று மொழிந்தருளியவாறென்க. அங்ஙனமொழிதற கியைபெங்ஙனமெனின், உலகெலாமென்பது பலநோக்குடைப் பெருமொழியாகலின, எந்நோக்கங்கருதி மொழிந்தன ரிறைவர் அந்நோக்கம் அவ ரறிந்தே முடித்தல்வேண்டும். மற்றையர் முடித்தற் கணுத்துணையுங்கூடா, அன்றித் திருவருட்டுரிய திருவாக்கினெழுந்த பயனிலைமுற்றுக குறைமொழியை மற்றை வாக்கான் முடித்தற்கியைபெவ்வாற்றானு மிறைத்தனையுமின்று. அன்றி சிவசுதந் தரச் செயற குறையைச் சிவசுதந்தரத்தான் முடித்தலுங்கூடா! அன்றி யிதுகாறும் இறைவரருள்வடிவாற் பக்குவர்கட்குபதேசமுதலிய திருவாக்களித்தவற்றுள் இங்ங னங் குறைமொழியளித்ததின்று, அங்ஙனமளித்தல் அத்திருவருட்குரிய திருவாக்கி னியல்புமன்று ஆகலினென்க. ஆயின் ஓரிடத்தே மொழியாது அகத்தும் புறத்து மொழிந்த தென்னையெனின்; அக்காலை யருட்போதுவின்கணின்ற அந்தணர், அற

வோா முதலிய பலரும் அவர்வழி மற்றையோரும் சேக்கிழாரென்னும் பேரிற்சிறந்த பேரறிவுடைய பெரியார் திருவருட்டுணையா லிப்பெருங்காப்பிய முடித்தனா, இஃது மாயைத்துணையாற் றேவா, முனிவா, மனிதர் இயற்றிய மற்றைக் காப்பியங்கள் போல் எளிதனறென் றனுபவித்துய்தற்பொருட்டும், அம்மெய்ம்மொழியைக்கேட்டுச் சேக்கிழாரது புறக்கரணங்கள் சுத்தியாதற்பொருட்டும் புறத்தே உலகேலாமென்றெழுந்து தத்துவப்படலத்தான் மயங்கிய அவரதானம திருட்டியையப் படலநீக்கி யறிவுவிளக்கிச் சுத்தி செய்தற்பொருட்டு அகத்தே உணர்ந்தோ தற்கரியனென்று முடிந்ததென்க. ஆயின அகத்தும் புறத்தும் மொழிதற் களவை யெங்ஙனமெனின் ; திருவருட் பரவயிந்துவத் துரியமொழி புறத்தேயெழுந் தகத்தேநிறைந்தது. சுத்திசெய்தற கருணையான் வாயுப்போல வென்னுஞ் சுதன்மியமாகிய விக்கருதல் வியாத்தியானறிகவென்க. என்னையெனின ; பொருட்புலப்பாட்டின்கண் சிற்சத்தியானது பரவிந்துவிற பதிதலும், அதனாலதன்கணுதமுண்டாதலுமுண்மை யாதலிற் பக்கமும, பக்கதன்மையும் பெறப்பட்டன. வரலாற்றுப் புலப்பாட்டின்கணகத்தும புறத்துஞ் சுத்திசெயதற் கருணையானன்றி யம்மொழி தோன்றுதாகலிற் சிதைக்கப்படா வளவைத்திறன் பெறப்பட்டது. உறழ்ச்சிப் புறப்பாட்டின்கண் ணோச்சிப்பொருள் வானபுறத்தெழுந்து அகத்து நிரம்புத லெங்ஙனம், அங்ஙனந் திருவருட்பரவயிந்துவப் புறத்தெழுந்து வாக்கத்து நிரம்புதல் கூடுமாகலின் அளக்கப்படுசை மாறுபடாமை பெறப்பட்டது. ஆகலில் அசம்பவம அவ்வியாத்தி அதிவியாத்திகளுமின்று, இதனால் வியாத்திமுறைகாண்கவென்க. இனி இம் மெய்ம்மொழித்தப் பொருள்விளக்கஞ் செய்யுமிடத்துக் காட்சியும் கருதலுமின்றியும உரையளவையும வேண்டுங்கால் வேதாகம முதலிய குறித்தல்வேண்டுமோ லெனின, குறித்தல வேண்டா ! என்னையெனின ; இங்ஙனம் வருணாச்சிரமமானந்தார பந்தப்பட டேகதேசத்தான் வழங்குகின்ற வேதம், வருணாச்சிரமமானதாற் பந்தப்படாது. யாண்டுமே பூரணத்தான் வழங்கு மெய்ம்மொழித்தப் பிரமாணமாகா வென்க. அன்றியும், வேதங்க ளோாகாலத்தில் உருத்திரனாலும, வேறோர்காலத்தில் விண்டுவாலும, பிறிதோர் காலத்திற பிரமனாலும், மற்றோாகாலத்திற் பராசரன வியாசன் முதலிய முனிவராலும், தொகுத்தும் வகுத்தும் விரித்தும் பலவாறு விகாரப்படுகின்றன. வாயதாதுக்கள், பிரத்தியயங்கள், பிராதிபத்தியங்கண் முதலிய வியலுறுப்பும, வாக்ம, பதம, சடைமுதலிய வியல்விசேடவுறுப்பும் ; உதாத்தம, அநுதாத்தம், சுரிதகமுதலிய விசையுறுப்பும் ; சிட்சை, கற்பம், வியாகரணம, நிருத்தம், சோதிடம, சந்தம முதலிய வங்கவுறுப்பும் ; ஆயுணூல், தநுர்நூல், காந்தருவநூன் முதலிய உபவுறுப்பு முடையனவாய்ப் பஞ்சப்பிரம மந்திரம், தத்துவத்திரய மந்திரமுதலிய மந்திர சாமானிய விசேடங்களும், ஸ்நாநம், சந்தி, ஜெபம், ஓமம, தர்ப்பணம, வைசுவதேவம், இட்டி, அக்கினிட்டோமம், பசுபந்தம், கிரையாகினியம் முதலிய நித்தியகன்மங்களும ; வருடகன்மவிசேடம், அயநகன்ம விசேடம, மாதகன்மவிசேடம், பருவகன்மவிசேடம் முதலிய நைமித்தியகன்மங்களும் ; அசுவமேதம், ராஜசூயம், பவுண்டரீக முதலிய காமியகன்மங்களும் ; சுராபாநம், பரதாரகமநம், அசத்தியவாசகமுதலிய நிஷேதகன்மங்களும் ; அநசனம், சாந்திராயணம், கிரிச்சரமுதலிய பிராயச்சித்த கன்மங்களும் ; சூரியவுபாசனே, பிரமவுபாசனே, விண்டுவுபாசனே, ருத்திரவுபாசனே, பிரணவவுபாசனே முதலிய உபாசனா கன்மங்களுமாகிய கன்மசாமானிய விசேஷங்களும் ; சமயத்தார், சாதியார் பலாக்குமொத்த

வண்ணம் வரைதற்கும், ஓதற்கும், உணர்தற்கும் இடங்கொடாமையும்; பலவாறு விகற்பித்துக்கூறும் மயக்கமுடையனவாய், தாம் திருவருட்பரவயிந்துவ சத்தியான அபரவிந்துவின்கண் உற்பத்தியாய் அதனிடத்தே லயமாதலின், ஆதியுமந்தமுமுடைத்தாயிருந்தும் அங்ஙனங் கோடலின்றி உற்பத்தியின்மையும், லயமின்மையுமாகிய அநாதியென்றும், நித்தியமென்றும், தம்மைத்தாமே விபரீதத்தான் மிக்கூறுகின்ற மதமும், அகங்காரமும் பெற்றிருத்தலுமன்றியும், கருமை, கடினம், எளிதினுருகாமை, புலானாற்றமுடைமை முதலிய வன்மைக்குணங்களான வெளிப்பட்டு மண்வெட்டி, கோடரி, அரிவாள் முதலிய அற்பகருவியை விரும்பினோர் எளிதிற் பெறத்தான் பரிணமித்தலேயன்றி, மகுடகுண்டலமுதலிய விசேடக்கருவிகளை விரும்பினோர்க்குத் தன்னுண்மைக்குணமாய சுவர்ணத்தன்மையை நெடுஞ்சேய்மைக்கண் மறைத்தறிதற் பெறவிருந்த அயலோகநியாயம்போல, மாயாசத்தார்த்தப் பிரபஞ்சகாரிய சித்தவிருத்தியாகிய வன்மைக் குணங்களான வெளிப்பட்டு, பூலோகபோகம், சுவர்க்கலோகபோக முதலிய அநித்தியபோகங்களை விரும்பினோர் எளிதிற் பெறத் தாம் மந்திரதந்திரங்களாற் பரிணமித்தலேயன்றி, அருட்போகம், ஆநந்தபோகம், சிவபோகமுதலிய நித்தியபோகங்களை விரும்பினோர்க்குத் தமதுண்மைக்குணமாகிய வுபதேசலட்சியத்தன்மையை நெடுஞ்சேய்மைக்கண் மறைத்து அரிதிற்பெற விருத்தலானும், தன்பலத்தை விரும்பினோர்க்கு நின்று காட்டித்தலினானும் மேற்றுக்கருவி முதலியவற்றானுங் கைகூடுதலின்றி, மேலிவாந்தரிதிற் றலைக்கணின்று தன் காய்களைக்கவர்ந்தும் அநுநிலைக்கண் அநுபவித்தற்கும் வேறோர்கருவிவேண்டி நின்ற விலாங்கவிருட்சநியாயம்போல, உபதேசலட்சியத்தன்மையைப் பெறத்தொடங்கிய சாதகர்க்குத் தத்தம்பருவத்திற் கடுத்த உணர்வானும் பலவகைச்சாதகத்தானுங் கைகூடுதலின்றித் தெய்வகதியான் முடிபுநோக்கி யந்நிலைக்கண்மைந்த பொருளைக் கவர்ந்தும் அநுநிலைக்கண் அநுபவித்தற்கும் வேதாந்தவிசாரமுதலிய வேறோர் கருவி வேண்டியிருத்தலானும், மனிதர் மொழி, தேவர் மொழி, முனிவர் மொழி, அரிபிரமாதியர் மொழி, உருத்திராதியர்மொழி என்பவைகளுக்குப் பெரும்பாலும் பிரமாணமாகி நிற்பனவன்றி திருவருட்பரவயிந்துவத் துரியமொழிகளொருவாற்றானும் பிரமாணமாகாவென்க. ஆகமங்களுள் சில இருக்குவேதம்போன் மந்திரநிலையைக்குறித்தும், சில தைத்திரியவேதம்போற் றந்திரநிலையைக்குறித்தும், சில சாமவேதம்போற் உபயமுங்குறித்தும், சில அதர்வணவேதம்போற் உலகியனிலைக் குறித்தும் வருதலின் வேதசம்பந்தமாகியும், சில ஏகான்மவிரோதஞ் சாதித்தலின் வேதவிரோதமாகியும், உபயமாயாகாரியங்களைப் பெரும்பாலும் விரித்துவிளக்கலான் மயேச்சுர சதாசிவாதிமொழிகளுக்குப் பெரும்பாலும் பிரமாணமாமன்றி இத் துரியமொழிக்குப் பிரமாணமாகாவென்க. இதனால் வேதாகமங்கள் சகளத்திற் சகுணமாகத்தோன்றிய ஈசுவரவாக்கியங்களென்பதும், உலகெலாமென்பது பூரண நிட்களத்தில் நிர்க்குணமாகத்தோன்றிய பரசிவவாக்கியமென்பதும், உணர்ந்தோதற்கரியவனென்பது ஏகதேசநிட்களத்தில் நிர்க்குணமாகத் தோன்றிய பரசிவவாக்கியமென்பதும், அறிகவென்க. ஆயின் இம்மெய்ம்மொழிக் குரைப்பிரமாணம் வேறின்றாலோவெனின்; தத்சுதந்தரத்தானும், தற்புகழ்ச்சியானும், தன்மேம்பாடு வெளிப்படுத்து நிமித்தத்தானும், ஈசுராதிகளா லுபசரித் துரைக்கப்பட்ட வேதாகமாதிகள் இங்ஙன மெய்ம்மொழிப் பிரமாணமாகாவென்றதன்றி சிவசுதந்தரத்தானும், நிரகங்காரத்தானும், சிற்சத்தி, ஆநந்தசத்தி, துவாரமாக நாதாந்தத்திருந்து சிவஞானிகளு மோதுந்துமப மொழிக

தருளிய திருவருட்பெரிய மொழிகளைப் பிரமாணமாகா வென்கிலம். ஆகலின், உரை யளவை வேண்டுங்கால் அச்சிவஞானிகளது திருவருட்பெரியமொழிகளுட் குறிக்க வேண்டுவன குறிக்குதுமென்க.

இம்மெய்ம்மொழி நிர்க்குணலட்சிய முடையதாகலின், "அறிவுருவுடையா குறிகுணங்குறியா, ரெனபது கருதியன்பதனாலே, வெருவாதிதனபொருள்விளக்க மென்னப், பெருவாய்மையா போற்பிதறறினனறி, விளக்கும்வன்மையான்விளக்க கவந்தனன —றளக்குறுண்ணியவறிவிலேனே."

இனி இம்மெய்ம்மொழிக்குப் பொருள்விளக்கங் கூறுதும்.

"உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்
நிலவுலாவியநீர்மலிவேணியன்
அலகில்சோதியனம்பலத்தாடுவான்
மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்."

இதனுட் கலிவிருத்தவியலின் நாற்சீரோரடியான் முடிந்த "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" எனனும திருவருட்பாவயிநதுவத் தூரியமெய்ம்மொழித தொடர்ககண உலகெலாமென்னு முதன மெயமமொழிப்பொருள்விளக்கம்வருமாறு.

"உலகெலாமென்பது" சூக்கும ஸ்தூல அந்தரங்க பகிரங்க சாதாரண அசாதாரண பவுதிகப் பிரத்தியட்ச வியக்திரூப சமவாயகாரண மூலமாயாந்தராங்கார ஏகதேசோத்பவ தனமாத்திரை காரியபூத தத்துவவுலகு.

சூக்குமாந்தர சிநேகாணுத்வ சவிகற்ப சாத்திய விசித்திர பூதரூப சத்தியுலகு. ஸ்தூலபாகிய சிநேகாணுத்வ சவிகற்ப சாத்திய விசித்ர பூதசொரூப சத்தியுலகு. சூக்கும ஸ்தூல பாகியாந்தர கிரியா சிநேகாணுத்துவ சவிகற்ப கன்ம சாத்திய சாதக விசித்திர பூத சுபாவ சத்தியுலகு. காரணாணுகாரிய பரியந்த சாத்தியத்துவ பூதசாதி சாமானிய வியாத்தி சத்தியுலகு. காரியாணு காரணபரியந்த சாத்தியத்வ பூதோபாதி சாமானிய வியாபக சத்தியுலகு. விவிதரூப சாத்திய பூதவிசேட சத்தியுலகு. விவிதாணு வியாபாரத்துவ பூதகுண சத்தியுலகு. பாகியேந்திரிய சூக்கும விகற்ப விஷய சாத்தியத்துவ பூதவான சத்தியுலகு. விசேஷாணுத்துவ சாத்திய பூதபாதத்துவ சத்தியுலகு. சாமானியாணுத்துவ சாத்திய பூதாபாதத்துவ சத்தியுலகு. அநேகாணுத்துவ விசித்திர சாமானிய சமவாய சாத்தியபூத பாவ சத்தியுலகு. அதிட்டானமாத்திர பூதநிமித்த சத்தியுலகு. அதிட்டாந விசேடமாத்திர பூதநிமித்த விசேட சத்தியுலகு. அனாதிச சூக்கும ஸ்தூல சிநேகாணுத்துவ சம்பந்த ரூப வியத்தியாதி சாதக சாத்திய பூதோத்பவ சத்தியுலகு. பூதோத்பவாதிகரண சத்தியுலகு. பூதோத்பவகரண சத்தியுலகு. பூதோத்பவபருவ சத்தியுலகு. பூதோத்பவகன்ம சத்தியுலகு. பூதோத்பவ உபகார சத்தியுலகு. பூதோத்பவ உபகாரப்பிரேரக சத்தியுலகு. பூதாதிகார சத்தியுலகு. பூதாதிகாராதி கரணசத்தியுலகு. பூதாதிகார கரணசத்தியுலகு. பூதாதிகார பருவசத்தியுலகு. பூதாதிகார கன்மசத்தியுலகு. பூதாதிகாரோபகார சத்தியுலகு. பூதாதிகாரோபகார பிரேரகசத்தியுலகு. பூதலயசத்தியுலகு. பூதலயாதிகரண சத்தியுலகு. பூதலயகரண சத்தியுலகு. பூதலயபருவ சத்தியுலகு. பூதலயகன்மசத்தியுலகு. பூதலயோபகார சத்தியுலகு. பூதலயோபகாரப் பிரேரகசத்தியுலகு.

இங்ஙனம், கடினருசுத்துவாதி பிருதிவிரூப சத்தியுலகு. சீதத்திரவத்துவாதி யப்புரூப சத்தியுலகு. உஷ்ணலகுத்துவாதி தேயுரூப சத்தியுலகு. சலனத்துவ லகுத்துவ வாயுரூப சத்தியுலகு. நிரவகாசாதிகாரண பராமர்சிய இலகுத்த வாகாயரூப சத்தியுலகு. சதுஷ்கோண பிருதிவிசொரூப சத்தியுலகு. அர்த்தசந்திரகோண வப்புசொரூப சத்தியுலகு. திரிகோண தேயுசொரூப சத்தியுலகு. ஷட்கோண வாயுசொரூப சத்தியுலகு. குண்டலாகார வாகாய சொரூபசத்தியுலகு. குருத்துவ சிநேகானுகத்துவ சாதன்முசாதாரண சூக்குமதாபன் கனமத்துவ பிருதிவி சுபாவ சத்தியுலகு. நிலைத்துவ சிநேகானுகத்துவ சாதனுதபிர சாரண கனமத்துவ அப்பு சுபாவ சத்தியுலகு. உஷ்ண சிநேகானுகவாதி லகுத்துவ சாதனுரோதப் பிரசாரண கனமத்துவ தேயுசுபாவ சத்தியுலகு. ஆலம்ப சிநேகானுகவத்துய இலகுத்துவ சாதன வியாபகோபாதப்பிரசாரண கனமத்துவ வாயுசுபாவசத்தியுலகு. நிராகார சிநேகானுகத்துவ பரமார்த்த இலகுத்துவ சூக்கும சாதனுனு சூக்ஷ்மகாரண கனமத்து வாகாய சுபாவசத்தியுலகு. விவித விசித்திரரூப சாதிய பிருதிவி விசேடசத்தியுலகு. அப்புவிசேடசத்தியுலகு தேயுவிசேடசத்தியுலகு. வாயுவிசேடசத்தியுலகு. ஆகாயவிசேடசத்தியுலகு பிண்டாண்ட பரியந்தசாதியசாமானிய சாதகியப் பிருதிவி வியாப்திசத்தியுலகு. அப்பு வியாப்திசத்தியுலகு. தேயு வியாப்திசத்தியுலகு. வாயு வியாப்திசத்தியுலகு. ஆகாய வியாப்திசத்தியுலகு. மாயாபரியந்தோபாதி சாமானிய சாதகியபிருதிவி வியாபகசத்தியுலகு. அப்பு வியாபகசத்தியுலகு. தேயு வியாபகசத்தியுலகு. வாயு வியாபகசத்தியுலகு. ஆகாய வியாபகசத்தியுலகு. விவிதோதபவானுதவ விசித்திரப்பிருதிவி குணசத்தியுலகு. அப்பு குணசத்தியுலகு. தேயு குணசத்தியுலகு. வாயு குணசத்தியுலகு. ஆகாய குணசத்தியுலகு. பிருதிவி வானசத்தியுலகு அப்பு வானசத்தியுலகு. தேயு வானசத்தியுலகு. வாயு வானசத்தியுலகு. ஆகாய வானசத்தியுலகு. பிருதிவி பாவசத்தியுலகு. அப்பு பாவசத்தியுலகு. தேயு பாவசத்தியுலகு. வாயு பாவசத்தியுலகு. ஆகாய பாவசத்தியுலகு. பிருதிவி பரதத்துவசத்தியுலகு. அப்பு பரதத்துவசத்தியுலகு. தேயு பரதத்துவசத்தியுலகு. வாயு பரதத்துவசத்தியுலகு. ஆகாய பரதத்துவசத்தியுலகு பிருதிவி அபரதத்துவசத்தியுலகு. அப்பு அபரதத்துவசத்தியுலகு. தேயு அபரதத்துவசத்தியுலகு. வாயு அபரதத்துவசத்தியுலகு. ஆகாய அபரதத்துவசத்தியுலகு பிருதிவி யுற்பவசத்தியுலகு. பிருதிவி யுற்பவாதிகாரணசத்தியுலகு. பிருதிவி யுற்பவகாரணசத்தியுலகு. பிருதிவி யுற்பவபருவசத்தியுலகு பிருதிவி யுற்பவகனமசத்தியுலகு. பிருதிவி யுற்பவோபகார சத்தியுலகு. பிருதிவி யுற்பவோபகாரப பிரேரகசத்தியுலகு. பிருதிவி யதிகாரசத்தியுலகு. பிருதிவி யதிகாராதிகாரணசத்தியுலகு. பிருதிவி யதிகாரகாரணசத்தியுலகு. பிருதிவி யதிகாரபருவசத்தியுலகு. பிருதிவி யதிகாரகனமசத்தியுலகு. பிருதிவி யதிகாரநிமித்தசத்தியுலகு. பிருதிவி யதிகாரநிமித்த விசேடசத்தியுலகு. பிருதிவி லயசத்தியுலகு. பிருதிவி லயாதிகாரணசத்தியுலகு பிருதிவி லயகாரணசத்தியுலகு. பிருதிவி லயபருவசத்தியுலகு. பிருதிவி லயகனமசத்தியுலகு. பிருதிவி லயோபகார சத்தியுலகு. பிருதிவி லயோபகாரப பிரேரகசத்தியுலகு. அப்பு வுற்பவசத்தியுலகு. அப்பு வுற்பவாதிகாரணசத்தியுலகு. அப்பு வுற்பவகாரணசத்தியுலகு. அப்பு வுற்பவபருவசத்தியுலகு. அப்பு வுற்பவகனமசத்தியுலகு. அப்பு வுற்பவோபகாரசத்தியுலகு. அப்பு வுற்பவோபகாரப் பிரேரகசத்தியுலகு. அப்பு வதிகாராதி காரணசத்தியுலகு அப்பு வதிகாரகாரணசத்தியுலகு. அப்பு வதிகாரபருவசத்தியுலகு. அப்பு வதிகார கனமசத்தியுலகு. அப்பு வதிகாரோபகாரசத்தியுலகு. அப்பு வதிகாரோபகாரபிரே

ரகசத்தியுலகு. அப்பு லயசத்தியுலகு. அப்பு லயாதிகாரணசத்தியுலகு. அப்பு லயகாரணசத்தியுலகு. அப்பு லயபருவசத்தியுலகு அப்பு லயகன்மசத்தியுலகு. அப்பு லயோபகாரசத்தியுலகு. அப்பு லயோபகார பிரேரகசத்தியுலகு. தேயு உற்பவசத்தியுலகு. தேயு உற்பவாதிகாரணசத்தியுலகு.*

தேயு வுற்பவகாரணசத்தியுலகு. தேயு வுற்பவபருவசத்தியுலகு. தேயு வுற்பவகன்மசத்தியுலகு. தேயு வுற்பவோபகாரசத்தியுலகு தேயு வுற்பவோபகாரப் பிரேரகசத்தியுலகு. தேயு வதிகாரசத்தியுலகு. தேயு வதிகாராதிகாரணசத்தியுலகு. தேயு வதிகாரகாரணசத்தியுலகு. தேயு வதிகாரபருவசத்தியுலகு. தேயு வதிகாரகன்மசத்தியுலகு. தேயு வதிகாரோபகாரசத்தியுலகு. தேயு வதிகாரோபகார பிரேரகசத்தியுலகு. தேயு லயசத்தியுலகு. தேயு லயாதிகாரணசத்தியுலகு தேயு லயகாரணசத்தியுலகு. தேயு லயபருவசத்தியுலகு. தேயு லயகன்மசத்தியுலகு. தேயு லயோபகாரசத்தியுலகு. தேயு லயோபகாரப் பிரேரகசத்தியுலகு.

வாயு வுற்பவசத்தியுலகு. வாயுவுற்பவாதிகாரணசத்தியுலகு வாயுவுற்பவகாரணசத்தியுலகு. வாயு வுற்பவபருவசத்தியுலகு. வாயு வுற்பவகன்மசத்தியுலகு. வாயுவுற்பவோபகார சத்தியுலகு. வாயு வுற்பவோபகாரப பிரேரகசத்தியுலகு. வாயுவதிகார சத்தியுலகு. வாயு வதிகாராதிகாரண சத்தியுலகு. வாயு வதிகாரகாரணசத்தியுலகு. வாயு வதிகாரபருவசத்தியுலகு. வாயு வதிகாரகன்ம சத்தியுலகு. வாயு வதிகாரோபகார சத்தியுலகு. வாயு வதிகாரோபகார பிரேரக சத்தியுலகு. வாயு லயசத்தியுலகு. வாயு லயாதிகாரணசத்தியுலகு. வாயு லயகாரணசத்தியுலகு. வாயுலயபருவசத்தியுலகு. வாயு லயகன்மசத்தியுலகு. வாயு லயோபகாரசத்தியுலகு. வாயு லயோபகார பிரேரகசத்தியுலகு. ஆகாய வுற்பவசத்தியுலகு. ஆகாயவுற்பவாதிகாரணசத்தியுலகு. ஆகாயோற்பவகாரணசத்தியுலகு. ஆகாயோற்பவபருவசத்தியுலகு. ஆகாயோற்பவகன்மசத்தியுலகு. ஆகாயோற்பவோபகார சத்தியுலகு. ஆகாயோற்பவோபகாரப் பிரேரகசத்தியுலகு, ஆகாயவதிகார சத்தியுலகு. ஆகாயாதிகாராதிகாரணசத்தியுலகு. ஆகாயவதிகார காரணசத்தியுலகு. ஆகாயவதிகார பருவசத்தியுலகு. ஆகாயவதிகாரகன்மசத்தியுலகு. ஆகாயவதிகாரோபகார சத்தியுலகு. ஆகாயவதிகாரோபகார பிரேரகசத்தியுலகு. ஆகாயலயசத்தியுலகு. ஆகாயலயாதிகாரணசத்தியுலகு. ஆகாயலயகாரணசத்தியுலகு. ஆகாயலயபருவசத்தியுலகு. ஆகாயலயகன்மசத்தியுலகு. ஆகாயலயோபகார சத்தியுலகு. ஆகாயலயோபகார பிரேரகசத்தியுலகு. பிருதிவிப் பிருதிவிசத்தியுலகு. பிருதிவியப்புசத்தியுலகு. பிருதிவித் தேயுசத்தியுலகு. பிருதிவிவாயு சத்தியுலகு. பிருதிவியாகாய சத்தியுலகு. அப்புப் பிருதிவிசத்தியுலகு. அப்பு அப்புசத்தியுலகு. அப்பு தேயுசத்தியுலகு அப்புவாயுசத்தியுலகு. அப்பு ஆகாயசத்தியுலகு. தேயுப்பிருதிவி பூதசத்தியுலகு. தேயுவப்புபூதசத்தியுலகு. தேயுத் தேயுபூதசத்தியுலகு. தேயுவாயுபூதசத்தியுலகு. தேயு வாகாயபூதசத்தியுலகு. வாயுப்பிருதிவிபூத சத்தியுலகு. வாயு வப்புபூதசத்தியுலகு. வாயுத் தேயுபூதசத்தியுலகு. வாயு வாயுபூதசத்தியுலகு. வாயு வாகாயபூதசத்தியுலகு. ஆகாயப்பிருதிவி பூதசத்தியுலகு. ஆகாய வப்புபூதசத்தியுலகு. ஆகாயத் தேயுபூதசத்தியுலகு. ஆகாய வாயுபூதசத்தியுலகு. ஆகாய வாகாயபூதசத்தியுலகு. அன்றி, சாபேத பௌதிக சத்தியுலகு. அசாபேத பௌதிகசத்தியுலகு. முதலியவுங் கொள்க.

சாதாரணசாதாரண சூக்குமஸ்தூல பூதாணுப்பிரத்தியக்ஷப் பிரகிருதி வியக்தி சமவாயமூல மாயாந்தராந்தாரேக தேசகாரிய தன்மாத்திரைத்தத்துவவுலகு. பூதசமவாயமாத்திர தன்மாத்திரைரூப சத்தியுலகு. பூதசமவாயசாமானியமாத்திர தன்மாத்திரைசொரூபசத்தியுலகு. உற்பவோத்தியோகத்துவ தன்மாத்திரை சுபாவசத்தியுலகு. பூதபௌதிகபரியந்த தன்மாத்திரை வியாத்திசத்தியுலகு. மாயாபரியந்த தன்மாத்திரை வியாபகசத்தியுலகு. சூக்குமவியாபாரமாத்திர தன்மாத்திரை விசேடசத்தியுலகு. பூதானமியமாத்திர தன்மாத்திரைகுண சத்தியுலகு. அன்றித்தன்மாத்திரைவான சத்தியுலகு. தன்மாத்திரைபாவ சத்தியுலகு. தன்மாத்திரைபரத்துவ சத்தியுலகு. தன்மாத்திரையபரத்துவசத்தியுலகு.

இங்ஙனம்,சூக்குமவிசேஷாணுத்துவ சமபந்தரூப வியக்தியாதி சாதகசாத்திய தன்மாத்திரையுற்பவ சத்தியுலகு. தன்மாத்திரையுற்பவாதிகரண சத்தியுலகு. தன்மாத்திரையுற்பவகரண சத்தியுலகு. தன்மாத்திரையுற்பவபருவ சத்தியுலகு. தன்மாத்திரையுற்பவ கன்மசத்தியுலகு. தன்மாத்திரையுற்பவோபகாரசத்தியுலகு. தன்மாத்திரை யுற்பவோபகாரப் பிரேரகசத்தியுலகு. தன்மாத்திரை யதிகாரசத்தியுலகு. தன்மாத்திரை யதிகாராதிகரண சத்தியுலகு. தன்மாத்திரை யதிகாரகரணசத்தியுலகு. தன்மாத்திரை யதிகாரபருவசத்தியுலகு. தன்மாத்திரை யதிகாரகன்மசத்தியுலகு. தன்மாத்திரை யதிகாரோபகாரசத்தியுலகு. தன்மாத்திரை யதிகாரோபகாரப் பிரேரகசத்தியுலகு. தன்மாத்திரைலயசத்தியுலகு. தன்மாத்திரை லயாதிகரண சத்தியுலகு. தன்மாத்திரை லயகரணசத்தியுலகு. தன்மாத்திரை லயபருவசத்தியுலகு. தன்மாத்திரை லயகன்மசத்தியுலகு. தன்மாத்திரை லயோபகாரசத்தியுலகு. தன்மாத்திரை லயோபகாரப் பிரேரகசத்தியுலகு முதலியவுங்கொள்க. தன்மாத்திரைநிமித்த சத்தியுலகு. தன்மாத்திரைநிமித்த விசேடசத்தியுலகுங்கொள்க.

மூலமாயாந்தராங்காரபாகிய விகற்பஞானலேச வேகதேசகாரிய பௌதிகபாகியத்துவார ஞானவியக்திவிகற்பமாத்திர ஞானேந்திரியதத்துவவுலகு. பூதசம்பந்த பிரஞ்ஞாவிஷயாணுத்துவ சாத்தியஞானேந்திரிய ரூபசத்தியுலகு. பௌதிகத்துவார ஞானாணுத்துவ சாத்தியஞானேந்திரிய சொரூபசத்தியுலகு. பிரஞ்ஞா விகற்பகன்மவேகாணுத்துவ சாத்திய ஞானேந்திரிய சுபாவசத்தியுலகு. தன்மாத்திரைபரியந்த சாதிசாமானிய ஞானேந்திரிய வியாத்திசத்தியுலகு. விஷயப்பிரஞ்ஞாபரியந்தவுபாதிசாமானிய ஞானேந்திரிய வியாபகசத்தியுலகு. விஷயவிசித்திரப்பிரஞ்ஞா வியாபார ஞானேந்திரிய விசேடசத்தியுலகு. இச்சாரம்பத்துவ ஞானேந்திரிய குணசத்தியுலகு. அந்த ரேந்திரிய சூக்குமவிஷய சாத்திய ஞானேந்திரிய வானசத்தியுலகு. விசேஷப்பிரஞ்ஞாணுத்துவ ஞானேந்திரிய பரத்துவசத்தியுலகு. சாமானியப்பிரஞ்ஞாணுத்துவ ஞானேந்திரிய வபரத்துவசத்தியுலகு. பருவணுத்துவ சமவாயசாத்திய ஞானேந்திரிய பாவசத்தியுலகு.

இங்ஙனம், சூக்குமசிநேக ஞானாணுத்துவ சம்பந்தவிசித்திரரூப வியக்தியாதிசாதகசாத்திய ஞானேந்திரியோற்பவ சத்தியுலகு. ஞானேந்திரியோற்பவாதிகரண சத்தியுலகு. ஞானேந்திரிய வுற்பவகரண சத்தியுலகு. ஞானேந்திரியவுற்பவபருவசத்தியுலகு. ஞானேந்திரியோற்பவகன்ம சத்தியுலகு. ஞானேந்திரியோற்பவோபகார சத்தியுலகு. ஞானேந்திரியோற்பவோபகார பிரேரகசத்தியுலகு. ஞானேந்திரியாதி

காரசததியுலகு. ஞானேந்திரிய வதிகாராதிகரணசத்தியுலகு. ஞானேநதிரிய வதி காரகரணசத்தியுலகு. ஞானேநதிரிய வதிகாரபருவ சததியுலகு. ஞானேநதிரியவதி காரகன்மசத்தியுலகு. ஞானேந்திரியவதிகாரோபகாரசததியுலகு. ஞானேநதிரிய வதி காரோபகார பிரேரகசத்தியுலகு. ஞானேந்திரிய லயசததியுலகு. ஞானேந்திரியலயா திகரணசத்தியுலகு. ஞானேநதிரிய லயகரண சததியுலகு. ஞானேநதிரிய லயபரு வசத்தியுலகு. ஞானேநதிரிய லயகனமசததியுலகு. ஞானேந்திரிய லயோபகாரசத தியுலகு. ஞானேந்திரிய லயோபகார பிரேரகசததியுலகு. ஆகாய சம்பநத சதத விஷயாணுததுவ சாததிய சுரோததிரேநதிரிய ரூபசததியுலகு. வாயுசம்பநத பரிச விஷயாணுததுவசாத்திய தொகசேநதிரிய ரூபசததியுலகு தேயுசமபநதரூப விஷ யாணுத்துவ சாததிய நேததிரேநதிரிய ரூபசததியுலகு. தேயுசமபநதரூப விஷயா ணுததுவ சாததிய நேததிரேநதிரிய ரூபசததியுலகு. அப்புசம்பநத ரசவிஷயாணுதது வசாதய சிஙுவேந்திரிய ரூபசததியுலகு. பிரிதிவுசம்பநத கநத விஷயாணுததுவசாத திய கிராணேநதிரிய ரூபசததியுலகு. சததததுவாரஞாநாணுததுவ சாததிய சுரோததி ரேந்திரிய சொரூபசததியுலகு. பரிசததுவாரஞாநாணுததுவ சாததிய தொகசேநதி ரிய சொரூபசததியுலகு. ரூபத்துவார ஞாநாணுததுவசாததிய நேததிரேநதிரிய சொரூபசத்தியுலகு. ரசத்துவார ஞாநாணுததுவசாததிய சிகுவேநதிரிய சொரூப சததியுலகு. கந்ததது வார ஞாநாணுததுவ சாததியக கிராணேநதிரிய சொரூப சத்தியுலகு. சத்தகன்ம வேகாணுததுவசாததிய சுரோததிரேநதிரிய சுபாவசததி யுலகு. பரிசகன்ம வேகாணுததுவசாததிய தொகசேநதிரிய சுபாவசததியுலகு. ரூபகன்ம வேகாணுத்துவசாததிய நேததிரேந்திய சுபாவசததியுலகு. ரசகனம வேகாணுத்துவசாததிய சிகுவேநதிரிய சுபாவசததியுலகு. கநதகனம வேகாணுத துவசாததிய கிராணேநதிரிய சுபாவசததியுலகு. சததனமாததிரைபரியந்த சுரோத் திரேந்திரிய வியாததிசததியுலகு. பரிசதனமாததிரை பரியநத தொகசேநதிரிய வியாத்திசததியுலகு ரூபதனமாததிரைபரியநத நேததிரேநதிரிய வியாததிசததி யுலகு. ரசதன்மாததிரைபரியநத சிகுவேநதிரிய வியாததிசததியுலகு. கநததனமாத திரைபரியந்த கிராணேந்திரிய வியாததிசததியுலகு. சததப்பிரஞ்ஞைசாததிய சுரோ த்திரேந்திரிய வியாபகசததியுலகு. பரிசப்பிரஞ்ஞைசாததிய தொகசேநதிரிய வியா பகசத்தியுலகு. ரூபப்பிரஞ்ஞைசாததிய நேததிரேநதிரிய வியாபகசததியுலகு. ரசப் பிரஞ்ஞைசாததிய சிகுவேநதிரிய வியாபகசத்தியுலகு. கநதபிரஞ்ஞைசாததிய கிரா ணேந்திரிய வியாபகசததியுலகு. சததததுவ சாமாநிய பிரஞ்ஞை விசேட சுரோதநி ரேந்திரிய விசேடசததியுலகு. பரிசததுவ சாமாநிய பிரஞ்ஞை விசேட தொகசேந திரிய விசேடசததியுலகு. ரூபததுவசாமாநிய பிரஞ்ஞை விசேட நேததிரேநதிரிய விசேடசத்தியுலகு. ரசத்துவசாமாநிய பிரஞ்ஞை விசேட சிகுவேநதிரிய விசேட சத்தியுலகு. கந்தத்துவசாமாநிய பிரஞ்ஞைவிசேட கிராணேநதிரிய விசேடசததி யுலகு. சத்தேச்சாரம்ப சுரோததிரேநதிரிய குணசததியுலகு. பரிசேச்சாரமப தொக் கேந்திரிய குணசததியுலகு. ரூபேசசாரமப நேததிரேநதிரிய குணசததியுலகு. ரசேச் சாரம்ப சிகுவேநதிரிய குணசததியுலகு. கநதேசசாரமப கிராணேநதிரிய குணசததி யுலகு. அந்தரேந்திரிய சூக்குமவிகற்ப விஷயசாததிய சுரோத்திரேந்திரிய வான சத்தியுலகு. தொக்கேந்திரிய வானசததியுலகு. நேத்திரேந்திரிய வானசததியுலகு. சிகுவேந்திரிய வானசததியுலகு. கிராணேநதிரிய வானசததியுலகு. விசேட சத் தப்பிரஞ்ஞாணுததுவ சுரோத்திரேந்திரிய பாததுவசத்தியுலகு. விசேட பரிசப்

